SAW. GANESAN
KARAIKUDI - S. Ry.

# வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்

கி. சந்திரசேகரன்

230

திருவாங்கூர் திவான்
ஸசிவோத்தம ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் அவர்கள்
எழுதிய முகவுரையுடன் கூடியது



உரிமை பதிவு]
கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் : : சென்னை
[விலை ரூ. 8/-

SAW. GANESAN
KARAIKUDI - S. RY.

# பொருளடக்கம்

## படங்கள்

என் தந்தையாரின்

கண்கள் கண்டறியாத

பேரன் பேத்திமார்களுக்கு

இந்நூல்

எனது அன்பளிப்பு



தந்தாய்நின் றனைப்பிரிந்தே
நெடுந்தூரம் அகன்றேம்;
தயைபுரிந்து விளக்கொளியைக்
காட்டியருள்; அச்சம்

நந்தாத பாழ்மனையில்
கிடந்தோம்; கீழ் விழுந்தே
நயத்துக்கும் பயத்துக்கும்
பணிந்தாண்மை இழந்தே

அந்தோநின் றனைஇகழ்ந்தோம்;
அநாதையுல குக்கே
அணியில்லை ஒளியில்லை
எனத்தோன்று மாறு

நுந்தாத விளக்கவித்தோம்;
நின்மக்கள் யாமே
நுவலுநின்றன் புகழ்குலைத்தே
உழன்றனமிவ் வாறே!

—ரவீந்திரநாத் டாகுர்.

---

Light thy signal, Father, for us who
have strayed far away from thee.

Our dwelling is among ruins haunted by
lowering shadows of fear.

Our heart is bent under the load of
despair and we insult thee when
we grovel to dust at every favour
or threat that mocks our manhood.

For thus is desecrated the dignity of thee
in us thy children, for thus we put
out our light and in our abject fear
make it seem that our orphaned
world is blind and godless.

—Poems—Tagore

# முகவுரை

ஆங்கிலத்தில் 'லூஸ் பாஸ்வெல்லியானு' (Lues Boswelliana) என்ற தொடர் ஒன்று வழக்கில் உள்ளது. ஜீவிய சரித்திரம் எழுதுபவன் அந்தச் சரித்திர நாயகன் இயல்புகளை மிகைப் படுத்திக் கூறுவதைக் குறித்து நிற்பது அது. சரித்திர நாயகன் பல துறைகளில் பிரசித்தி பெற்றிருந்து சரித்திரம் எழுதுபவன் சரித்திரத் தலைவனுடைய பிள்ளையாகவும் வேறு இருந்துவிட்டால் இந்த உணர்ச்சியை அடக்குவதென்பது சுலபமான காரியமல்ல. ஆகையினுல் உபசாரத்திற்காக நான் சிறப்பித்துச் சொல்வதல்ல இது. உண்மையிலேயே வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய அறிவுத் திறமை வாய்ந்த குமாரர் ஸ்ரீ கி. சந்திரசேகரன் எழுதியுள்ள அவருடைய சரித்திரத்தைப்போல, அநுதாபத்துடன் கூர்ந்து ஆராய்ந்து பக்ஷபாதமில்லாமல் சீர்தூக்கிப் பார்த்து எழுதிய சரித்திரத்தைக் காண்பது அரிது என்பதை நான் துணிந்து கூறுகிறேன். இலக்கியத்தில் பல துறைகளில் ஆழ்ந்த பயிற்சி பெற்ற அவர், கருத்தைத் தெள்ளென விளக்கும் எளிய நடையில் எழுதும் வன்மை மிக்கவர். தம் அன்புள்ள தந்தையாரைப்பற்றி எழுதுவதாக எண்ணுமல் சரித்திரப் பிரசித்தி பெற்ற ஒரு பெரியாரைப் பற்றி எழுதும் முறையிலேயே இதனை எழுதியிருக்கிருர்.

ஒரு ஜீவிய சரித்திரத்துக்கு இதைக் காட்டிலும் உயர்ந்த சிறப்பு ஒன்று வேண்டியது இல்லை; இந்தச் சிறப்பை வாசகர் ஒவ்வொருவரும் இந்நூலுக்குத் தாராளமாக வழங்கலாம்.

சரித்திரமென்பது பல தனி மனிதர்களின் ஜீவிய சரித்திரங்களின் சாரம் என்று சொல்வார்கள். மேல்நாட்டு ஆசிரியராகிய டிஸ்ரேலி ஓரிடத்தில் தமக்கு இயல்பான முரண்பாட்டு நயம் அமையும்படி, "தேச சரித்திரத்தைப் பாராதே; ஜீவிய சரித்திரத்தைத் தவிர வேருென்றையும் படிக்காதே; அதுதான் வாழ்க்கை; கேவலம் வார்த்தை உருவத்திலமைந்த கொள்கை அதில் இல்லை" என்று எழுதியிருக்கிருர். வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய ஜீவிய சரித்திரம் இந்திய சரித்திரத்தில், முக்கியமாகத் தென்னிந்தியச் சரித்திரத்தில் ஒரு துண்டு என்று சொல்லலாம். மதராஸ் லா ஜர்னலின் தோற்றம் முதல் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய மரணம் வரையில் அமைந்த இருபது வருஷங்

களின் சரித்திரப் பகுதி அது. இந்தப் புஸ்தகத்தில் உள்ள அத்தியாயத் தலைப்புக்களைப் பார்த்தாலே இதில் மிகவும் சுவையுள்ளதும் மாறி வந்ததுமான ஒரு காலத்தில் அரசியலிலும் பொதுஜன வாழ்க்கையிலும் நிகழ்ந்தவற்றில் அநேகமாய் எல்லாவற்றையும் பற்றி இப் புஸ்தகத்தில் காணலாமென்பது தெரியவரும். அந்தக் காலத்துப் பெரிய மனிதர்களிற் பலர் மறைந்துவிட்டனர்; சிலரோ மறையும் தறுவாயில் இருக்கின்றனர். ஆதலால் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய வாழ்க்கையையும் மனப்பான்மையின் வளர்ச்சியையும் ஆராயும் இந்த நூல் சுவாரஸ்யமுடையதாக இருக்கிறது; சரியான காலத்தில் வெளியாகிறது. பரிணாமத்திற்குப் பரம்பரைக் குணமும் ஒரு காரணம் என்பார்கள். இந்தப் புஸ்தகத்தில் உள்ள உள்ளங்கவரும் பகுதிகளில் ஒன்று கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய முன்னோர்களைப் பற்றிய வரலாறு. மரபு வழிவந்த இயல்புகள் ஒருவனுக்கு எவ்வளவு தூரம் உதவுகின்றன என்பதற்கு இது ஒரு சிறந்த சாக்ஷியாகும்.

இந்தப் புஸ்தகம் மாயவரம் கோபு ஐயருடைய வரலாற்றிலிருந்து ஆரம்பமாகிறது. அவர் தஞ்சை மகாராஷ்டிர அரசர் ஒருவரிடம் மந்திரியாகவோ ஆலோசனையாளராகவோ இருந்தார். அவர் நிர்வாகத் திறமையோடு, தளராமல் காரியத்தைச் சாதிக்கும் ஆற்றலும் பக்தியும் உடையவராக விளங்கினார். அவருடைய நல்லியல்புகளையும், பழங்காலத்தில் பெரியார்களிடம் காணப்பட்ட தர்ம சிந்தையையும் அவர் சந்ததியார் குலதனமாக அடைந்தார்கள். வேங்கடராமையருடைய வரலாறு இதில் வருகிறது. அவர் சட்ட ஞானமும் பரந்த அறிவும் ஹிந்து தர்ம சாஸ்திரத்தின்படி ஒழுகும் இயல்பும் வாய்ந்தவர். அவற்றோடு கடுமையான முன் கோபமும், பெரியவர்களானாலும் சரி, பலவான்களானாலும் சரி அவர்கள் குற்றத்தை என்ன வந்தாலும் வரட்டுமென்று வெளியாக்கும் துணிவும் அவரிடம் இருந்தன. அவர் ஜில்லா முன்சிப் வேலை பார்த்து வந்ததும், தம்முடைய போக்கையே சாதிக்கும் வக்கீல்களோடு போரிட்டதும் முதல் அத்தியாயத்தில் விவரமாக எழுதப் பட்டிருக்கின்றன. வேங்கடராமையர் பயங்கர வியாதியாகிய நீர் ரோகத்தினால் துன்புற்றார் என்பது கவனிப்பதற்குரியது. சமீபகாலத்தில் அதற்குச் சிகித்ஸை கண்டுபிடித்திருக்கிறார்கள். அது இந்தியாவில் 18, 19-ஆம் நூற்றாண்டுகளில் பல தலைமுறைகளாக அறிஞர்களை வருத்தி வந்திருக்கிறது. கிருஷ்ணஸ்வாமி ஐயரையும், மேதாவியும் முன் கோபியுமாகிய அவருடைய தமையனாரையும் அது கடைசியில் விழுங்கியது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் 1863-ஆம் வருஷம் ஜூன் மாதம் பிறந்தார். இளம் பருவத்திலேயே பிற்காலத்தில் அவருக்கு மேன்மை அளித்த இயல்புகள் அவரிடம் அமைந்தன. எந்த

நிலையிலும் அவர்பால் இருந்த தைரியமும் நட்புரிமை பாராட்டும் திறனும் ஆதிமுதல் அந்தம்வரையில் அவரை உயர்த்திக்காட்டின. இந்தச் சரித்திர ஆசிரியர், பள்ளிக்கூடத்திலும் காலேஜிலும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அடைந்த வெற்றிகளைக் கூறிவிட்டு, அவர் பி. எல். பரீட்சையில் மூன்றுவது வகுப்பில்தான் தேர்ச்சிபெற்றுர் என்றும், அவர் மிதமிஞ்சிப் பல துறைகளில் கவனம் செலுத்தினதும், சட்ட நூல்களைப் படிப்பதில் ஊன்றிய நாட்டம் இல்லாமல் இருந்ததும், இரவு நெடு நேரம் வரைக்கும் சில்லறை விஷயங்களைப்பற்றிச் சம்பாஷிக்கும் இயல்புமே அதற்குக் காரணம் என்று விளக்குகிறுர். சென்னை ஹைகோர்ட்டில் பிரபல நியாயவாதிகளுள் ஒருவராக இருந்த ஆர். பாலாஜிராவிடம் அவர் தொழிற் பயிற்சிக்காகச் சேர்ந்த பிறகு அவருக்கும் பி. ஆர். சுந்தரமையருக்குமிடையே நெருங்கிய நட்பு உண்டாகி விருத்தியாயிற்று. அந்த நட்பு அவருடைய பிற்கால வாழ்க்கையில் ஓர் அம்சமாக விளங்கியது. ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் அவருடன் படித்தவரே. இருவருடைய இயல்புகளிலும் மனப் பான்மையிலும் அடிப்படையான வித்தியாசங்கள் இருந்தாலும், பரஸ்பரம் உள்ளூற அமைந்த பிரியமும் மதிப்பும் அவர்களிடம் காணப்பட்டன. இது பெரும்பாலும் வெளிப்படையாகத் தோன்று விட்டாலும் இருவருடைய வாழ்க்கையிலும் சந்தேகமில்லாமல் சொல்வதற்குரிய விஷயமாக விளங்கியது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஆரம்பகாலத்தில் பட்ட கஷ்டங்களெல்லாம் விவரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. தம்முடைய மனைவி கூந்தலில் மலர் சூடியிருப்பதைக் கண்டு, தம் ஜீவனத்துக்காகத் தமையன் கையை எதிர்பார்த்துக்கொண்டும் தமக்கென்று நிலையான வழி ஏற்படாமலும் வாழும் குடித் தனத்தில் அந்த ஆடம்பரம் ஒவ்வாதென்று கூறி, வலிய அப்பூவை வாங்கி எறிந்தார் என்ற நிகழ்ச்சி மனத்தை உருக்குவது. பெயர் பெற்றவரும் தர்ம சிந்தையுடையவரும் ஆனுல் ஜனங்களால் சரியானபடி தெரிந்துகொள்ளப் படாதவருமாகிய அட்டர்னி பென்னுத்தூர் சுப்பிரமணிய ஐயரும், மணி ஐயரும் அளித்த ஊக்கம் அவருக்குப் பேருதவியாயிற்று. பிரசித்தமான பல மனிதர்களுடைய வாழ்க்கையில் நேர்வதைப்போல, அநேகமாக எதிர்பாராத ஒரு சம்பவத்தால் அவருடைய தொழில் நிலையாக நடைபெற வழி உண்டாயிற்று. பிற்காலத்தில் புகழ் வாய்ந்த ஜட்ஜாக விளங்கிய எஸ். ராமஸ்வாமி ஐயங்கார் என்பவர் 1888-ஆம் வருஷம் முன்சீப் பதவியை ஏற்றபொழுது தம் கையில் இருந்த வழக்குகள் பலவற்றைத் தம் பழைய நண்பராகிய கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் ஒப்பித்தார். பின்னவர் அந்த நல்ல தருணத்தைச் சாமர்த்தியமாகப் பயன் படுத்தித் தம் தொழிலை

விருத்தி செய்யத் தொடங்கினர். விரைவில் சென்னையில் எந்த வக்கீலும் பெருத வருமானம் அவருக்குக் கிடைத்தது; செல்வம் மிக்க பல செட்டிமார்களும், ஜமீன்தார்களும் தங்கள் வியவகாரங்களில் உதவிபுரிய அவரையே நாடினர்.

இது வரையில் வெளிவராத பல புதிய நிகழ்ச்சிகள் இப்புஸ்தகத்தில் அடங்கி உள்ளன. கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு சமயம் ஒரு திருடனைக் கைப்பிடியாகப் பிடித்துப் போராடி அவன் மேலே ஏறி உட்கார்ந்துகொண்டாரென்ற ரஸமான செய்தி, அத்தகையவற்றில் ஒன்று. தொழில் நடத்த ஆரம்பித்த காலத்தில் முதலில் அதிக வேலை இல்லாதிருந்தபோது அவர் பல துறை நூல்களைப் படிப்பதில் ஈடுபட்டார். சென்னை ஸர்வகலாசாலையில் ஸம்ஸ்கிருத பாஷைப் பரீக்ஷகராக இருந்தார். பிறகு சட்டக் கல்லூரியில் புரொபஸராக வேலை பார்த்தார். வக்கீல்களின் சங்கத்தில்கூடக் காரியதரிசிப் பதவியை ஏற்று நன்ருக உழைத்தார். 1895-ஆம் வருஷவாக்கில் சீகாழியில் ஒரு பெரிய வழக்கில் ஸர் வி. பாஷ்யமையங்கார் எதிரே நின்று வாதித்து வெற்றி பெற்ருர். பெருமையும் அதிகார தோரணையும் பொருந்தி விளங்கிய ஐட்ஜ் ஸர் டி. முத்துசாமி ஐயர், அவரிடமும் பி. ஆர். சுந்தரையரிடமும், தங்கள் கொள்கையையே சாதிக்கும் துணிச்சலுடையவர்களென்ற எண்ணத்தால் போதிய அளவு சுமுகமாக இருக்கவில்லை. கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் தினசரிக் குறிப்பில் எழுதியுள்ள குறிப்புக்களை அவர் குமாரர் நன்கு ஆராய்ந்து இதில் உபயோகப்படுத்திக்கொண்டிருக்கிருர். அத்தகைய குறிப்புக்களிலிருந்து இளைஞராகிய கிருஷ்ணஸ்வாமி ஐயர் அந்த ஐட்ஜைப்பற்றிக் குறைப்பட்டு வருந்தியதும் அதனுல் நேர்ந்த விளைவுகளும் தெரிய வருகின்றன. 1891-ஆம் வருஷம் சேலம் ராமஸ்வாமி முதலியார், ஸி. சங்கரன் நாயர் என்பவர்களுடைய துணைபெற்றுக் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சுந்தர ஐயரும் மதராஸ் லா ஜர்னலை ஆரம்பித்தார்கள். அப்பத்திரிகை தீர்ப்புக்களைப்பற்றிய நுணுகிய ஆராய்ச்சிகளையும் சட்ட சம்பந்தமான விஷயங்களில் தேர்ந்த அபிப்பிராயங்களையும் வெளியிட்டதனுல் மிக விரைவில் பிரக்கியாதியை அடைந்தது.

1895 முதல் ஹைகோர்ட்டு ஐட்ஜ் ஆகும் வரையில் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய தொழிலில் வருமானம் பொங்கியது. அவர் வாதம் செய்யும்போது விஷயங்களை அணியாக வகுத்து நேராகவும் ஆற்றலுடனும் எதிராளியைத் தாக்குவதை அதற்குமுன் பார்த்திருக்க முடியாததாகவே நினைக்கவேண்டும். அதோடு சொல் வன்மையும் சட்டத்தில் நுண்ணிய தேர்ச்சியும் அவரிடம் ஒன்றுபட்டு விளங்கின; இது மிகவும் அரிய ஒற்றுமை. ஆனுல் எதிர்த் தரப்பிலிருந்தோ ஐட்ஜுகளினிட

மிருந்தோ எதிர்ப்பும் மறுப்பும் வரும்போது பொறுமையைச் சீக்கிரம் இழந்துவிடுவார் என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். பொறுமையின்மையை அவர் மறைத்ததே இல்லை. இளைய வக்கீல்களில் பலருக்கு அவரோடு பழகியபோது முதலில் உண்டாகும் சங்கடங்களைத் தாண்டிச் செல்வது கடின மாக இருந்தது; ஆனால், இந்தப் புஸ்தகத்தில் சொல்லியிருக் கிறபடி, ஓர் இளைஞரது திறமையைக் கண்டு விட்டால் அவரைப் பாராட்டி உத்ஸாகத்தோடு அவர் சிலாகிப்பார்; வேண்டிய உதவியும் செய்வார். எஸ். ஸ்ரீநிவாசையங்காரும், அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அப்படி அவருடைய வெகுமதியைப் பெற்றவர்களே.

அவர் காரியாலயத்தில் வேலை செய்தவர்களுள் நானும் ஒருவன். விரைவில் தொழிலளவில் எங்கள் வழி வேறு வேறாக மாறிய போதிலும் அவர் தம்முடைய வாழ்நாள் இறுதி வரையில் என்பால் மிக்க பிரியத்தைக் காட்டினார். நான் அநு பவத்தில் உணர்ந்த இதனை அவருடைய குமாரர் இந்தச் சரித்திரத்தில் சொல்லியிருப்பதைக் காணும்போது எனக்கு இணையற்ற ஆறுதல் உண்டாகிறது. சில சமயங்களில் வெளிப்படையாகவும், பெரும்பாலான சமயங்களில் அவ்வளவு வெளிப்படையாக இன்றியும் நாங்கள் இருவரும் அபிப் பிராய பேதங்களைக் கொண்டிருக்கிறோம். எங்கள் இயல் பிலும் நோக்கங்களிலும் வேற்றுமைகள் இருந்தாலும் என்னைப் பற்றியும், நியாயஸ்தலத்திலும் பொது விஷயங்களிலும் நான் செய்த வேலைகளைப் பற்றியும், அவருக்கு இயல் பாகவே நல்ல மதிப்பு இருந்தது. இதைத் தெரிவிக்க வேண்டுவது என் கடமை. அவரோடு தைரியமாகச் சண்டையிட்டவர்களையே அவர் அதிகமாக விரும்பினார் என்பது அவருடைய பெருந்தகை மைக்கு ஓர் அடையாளம். அவருடைய முன் கோபம் இத் தகையது என்று வரையறுத்துச் சொல்ல இயலாதது. இந்தப் புஸ்தகத்தில் பல இடங்களில் அந்த முன் கோபத்தால் விளைந்த நிகழ்ச்சிகள் வருகின்றன. ஜட்ஜுகளாகிய மிஸ்டர் மோபர்லி, மிஸ்டர் ஜோஸெப் என்பவர்களுடன் ஏற்பட்ட சச்சரவுகள் இச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடத்தக்கவை. உண்மையில் அவருடைய செயலை ஒரு பெரிய பீரங்கிக் கப்பல் சாதாரணமாயுள்ள சிறிய கப்பலைக் கடலில் நிர்மூலமாக்குவதற்குச் சமானமாகச் சொல்ல லாம். அவர் திடகாத்திரம் உடையவர்; பார்த்த மாத்திரத்திலே அவர் உடல் வலிமையும் மனவலிமையும் புலனாகும்.

நீதி சபைகளில் அவர் தம் திறமையைக் காட்டியதோடு மயிலாப்பூர் 'அதீனிய'த்திலும், காங்கிரஸிலும், அதனோடு சம்பந்த முள்ள இயக்கங்களிலும் ஈடுபட்டுத் தொண்டு புரிந்தார். பொது

ஜனவாழ்க்கைத் துறையில் அவர் செய்த தொண்டு சுலபமாகவோ எதிர்ப்பில்லாமலோ இருக்கவில்லை. அவர் பல பேருடைய விரோதத்தைச் சம்பாதிக்க நேர்ந்தது: பலரைக் கடுமையாகத் தாக்கவும், அவர்களுடைய தாக்குதல்களைத் தாம் தாங்கவும் நேர்ந்தது. ஆனால் இந்தப் புஸ்தகத்தில் உள்ள ஒரு நிகழ்ச்சி மனங்கொள்வதற்குரியது: மதோல்கர் என்பவர் அவருடைய முன் கோபத்தைச் சுட்டிக் குறை கூறியபோது, "என் புத்தி நிதானத்தை இழக்கவில்லை; தொந்தரவு என்னவென்றால் என் நாக்குத்தான் நிதானத்தை இழந்துவிடுகிறது. நான் என் செய்வேன் !" என்றாராம். காங்கிரஸின் சர்வாதிகாரியாக விளங்கிய ஸர் பிரோஸிஷா மேதாவுக்கும் அவருக்கும் இடையே நிகழ்ந்த இம்மாதிரியாயுள்ள சம்பவம் இந்தப் புஸ்தகத்தில் நன்றாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் வக்கீல் தொழிலில் பிரசித்தி அடைந்த போதே அவர் காங்கிரஸிலும் ஒரு முக்கியமான மனிதர் ஆனார்; கோகலேயுடன் அவருக்கு உண்டான ஆழ்ந்த நீண்ட நட்புக்கு ஆதாரமான காரியங்களெல்லாம் நிகழ்ந்தன. அந்த நட்பே இந்தியாவின் பொதுநலத் தொண்டில் அவர் ஈடுபடுவதற்கும், மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரிகள், வேங்கடரங்கராவ், ஜி. ஏ. நடேசன் என்பவர்களுடைய நெருங்கிய பழக்கம் உண்டாவதற்கும் காரணமாயிற்று. கோகலேயுடன் அவருக்கு ஏற்பட்ட நெருங்கிய தொடர்பே, மயிலாப்பூரில் ரானடே ஹால் அமையவும் மகாஜன சபை சம்பந்தமான பல காரியங்கள் அக்காலத்தில் நடைபெறவும் ஏதுவாயிற்று. சூரத்தில் பிளவு ஏற்பட்டதற்கு முன்பெல்லாம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் காங்கிரஸின் உடலாகவும் உயிராகவும் விளங்கினார். அதன் பின்னரே அவர் மிதவாதிகளோடு சேர்ந்தார். இந்தக் காலத்தில்தான் கோகலேக்குச் செல்வாக்கு அதிகமாயிற்று; இந்திய ஊழியச் சங்கம் நிறுவப் பெற்றது; கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஹிந்து பத்திரிகை ஆசிரியராகிய ஜி. சுப்பிரமணிய ஐயர் முதலிய பொதுநலத் தொண்டில் ஈடுபட்டவர்கள் பலருக்குக் கோபம் மூட்டினார்; பலர் அவரைக் கண்டு வெருவினர். இவர்களோடு அவருக்குப் பல போராட்டங்கள் நிகழ்ந்ததும் இந்தக் காலத்தில்தான்.

ஏறக்குறைய 1900-ஆம் வருஷத்திலிருந்து கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய ஒளி சென்னையில் ஒவ்வொரு முக்கியமான நிகழ்ச்சியிலும் வீசலாயிற்று. சர்வகலாசாலையிலும், லார்டு கர்ஸன் கல்கத்தா பட்டமளிப்பு விழாவில் பேசிய பேச்சை மறுத்தது போன்ற விவாதங்களிலும் அவர் திறமை வெளியாயிற்று. கர்ஸனுக்கு விடையாக ஹிந்துக்களின் பரம்பரைத்

தருமத்தின் சிறப்பை நிலைநாட்டும் பொருட்டு ஆர்ய சரித்திரம் என்னும் புஸ்தகம் அவரால் வெளிப்படுத்தப்பெற்றது. கணக்கற்ற பொதுக் கூட்டங்களில் பலபல வகையான விஷயங்களைப் பற்றி அவர் பேசினார். தவிர அந்தக் காலங்களில் இந்தச் சரித்திர நாயகர் தம்முடைய வாழ்க்கை நண்பரும் அருங்குணம் படைத்தவருமான ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய பக்குவமான ஆலோசனையின்மேல் அக்காலங்களில் இணைசொல்வதற்கு இல்லாதனவான தர்ம காரியங்களைச் செய்தார். ஸம்ஸ்கிருதக் கல்லூரியையும் ஆயுர்வேத கலாசாலையையும் அப்பொழுதுதான் ஏற்படுத்தினார். இந்த மாகாணத்தில் அவர் நல் உதவியைப் பெறாத ஸ்தாபனமே இல்லை என்றாலும் பொய்யல்ல. ஆந்திர ஜாதீய கலாசாலைக்கு அவர் உதவி செய்த வரலாறு இந்தப் புஸ்தகத்தில் இருக்கிறது. அவர் இயல்பை விளக்க அது ஒரு நல்ல உதாரணம். கோபல்லி ஹநுமந்த ராவ் என்பவர் தன்னலத் தியாகமும் சால்பும் தேசபக்தியும் உடைய அபூர்வமான மனிதர். அவர் அந்தக் கலாசாலைக்கு உதவிசெய்ய வேண்டுமென்று தம்மை அணுகியபோது கலாசாலை நன்றாக நடைபெறும் என்று திருப்தியாகத் தெரிந்துகொண்டு இரண்டாயிரம் ரூபாய் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கொடுத்தார். அதோடு, "இதைச் சீக்கிரத்தில் செலவழிக்க வேண்டும். பணம் முழுவதையும் செலவழித்த பிறகே என்னிடம் மறுபடியும் வரவேண்டும்" என்றாராம்.

*1908*-ஆம் வருஷத்தில் காங்கிரஸின் நிர்வாகம் முழுவதும் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஏற்கவேண்டியதாயிற்று. அவர் இந்த வேலையை வேகத்தோடும் உத்ஸாகத்தோடும் மேற்கொண்டார். அதன் விளைவாகப் பல தடவைகளில் அவர் தமக்கு வேண்டியவர்களுடன் மனஸ்தாபப்பட வேண்டிவந்தது. அத்தகைய ஒரு சம்பவத்தைக் குறித்து அவர் கோகலேக்கு, "என்னுடைய முன் கோபத்திற்கும், மற்றவர்களுடைய சமாதானங்களைக் கேட்டுப் பொறுமையோடு முடிவு காணும் திறமை இல்லாமற் போனதற்கும் காரணம், இந்த நான்கு வருஷகாலமாக என்னை வருத்தி வரும் நீர் ரோகம் போலும்!" என்று எழுதினார். அதே வருஷத்தில் அவர் இயல்புகளில் மற்றொன்று வெளியாயிற்று. அரசியல் குற்றத்திற்காக ஜி. சுப்பிரமணிய ஐயர் கைது செய்யப்பட்டார்; அப்பொழுது அவர் திறத்தில் ஏதேனும் செய்யவேண்டுமென்று நண்பர்கள் கேட்டுக்கொண்டபோது, அவர் தமக்குத் தீர்க்கவைரியாக இருந்தும், கிருஷ்ணஸ்வாமி ஐயர் தலையிட்டு அநுகூலம் செய்வித்தார். கிருஷ்ணஸ்வாமி ஐயர் இருந்த காலத்தில் இந்தச் செய்தி பலருக்குத் தெரியாது. இப்பொழுது இந்த அருமையான பெருந்தகைமையைப் புலப்படுத்தும் அத்தாட்சிகள் இப்புஸ்தகத்தில் வெளியாகியிருப்பது பொருத்தமானதே.

அதே வருஷத்தில் ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் அட்வகேட் ஜனரல் பதவியை ஏற்கவே, சட்டசபையில் அவர் ஸ்தானத்தைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பெற்றுர். பழமையில் ஊறி, சலனமற்ற நிலையில் இருந்த அவ்விடத்தில் தம் பிரசங்க வன்மை யினுலும் தயாதாக்ஷிண்யம் இல்லாத விமரிசனங்களாலும் அதுவரையில் காணப்படாத புதிய கிளர்ச்சியை உண்டாக்கினுர். குடிவார மசோதா சம்பந்தமாகவும் வரவு செலவுத் திட்ட சம்பந்தமாகவும் அவர் சட்டசபையில் பேசிய பேச்சுக்களும் 'டிஸெண்ட்ரலிஸேஷன்' கமிஷன் முன் கொடுத்த வாக்கு மூலங்களும் அவருக்கு அரசியலில் இருந்த பரிபூரண ஞானத்தையும் அநுபவ முதிர்வையும் காட்டுகின்றன. கிட்டத் தட்ட அதே காலங்களில் ஸ்வாமி விவேகானந்தர், பாபா பிரேமானந்த பாரதி என்னும் பெரியார்களுடைய தொடர்பு அவருக்குக் கிடைத்தது. அவ்விரு துறவிகளிடமும் அவருக்கு அதிகப் பற்று உண்டாயிற்று. டாக்டர் அன்னி பெஸண்டுடன் ஸெண்டிரல் ஹிந்து காலேஜ் நிறுவும் முயற்சியில் சேர்ந்து உழைத்தார்.

காங்கிரஸில் பிளவு தோன்றி மாறுபாடான அபிப்பிரா யங்கள் காரணமாக சுரேந்திரநாத்பானர்ஜி, பூபேந்திரநாதவஸு, கோகலே, வாச்சா, கிருஷ்ணஸ்வாமி ஐயர் முதலியவர்கள் மிதவாதக் கட்சியைத் தொடங்கிய செய்தியை இங்கே நான் விரிப்பது அவசியமன்று. ஆனுல், தீவிரவாதிகள் கூட்டத்தைச் சேர்ந்த மகாகவி பாரதியாரை, ஜி. ஏ. நடேசனது முயற்சியினுல் சந்திக்க நேர்ந்தபோது கிருஷ்ணஸ்வாமி ஐயர் அக் கவிஞரையும் அவர் கவித்துவத்தையும் மனம் விட்டுப் பாராட்டினுரென்ற விஷயம் அவசியம் சிலாகிப்பதற்குரியது.

*1908*-ஆம் வருஷத்துக் காங்கிரஸை நடத்தி வைத்த பிறகு கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஜட்ஜ் பதவியை ஏற்றுர்; பின் வெகு சீக்கிரத்தில் சென்னைத் துரைத்தன நிர்வாக சபை அங்கத்தினர் ஆனுர். ஜட்ஜாகவும் நிர்வாக அங்கத்தினராகவும் இருந்து அவர் ஆற்றிய செயல்கள் இந்தப் புஸ்தகத்தில் விரிவாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. அவை தென்னிந்தியச் சரித்திரத்தில் நீதி நிர் வாகம், அரசியல் என்னும் துறைகளில் சேரவேண்டியவை. பிஷப் வைட்ஹெட்டும் அவருடைய மனைவியும் அவருக்குப் பழக்கமான பிறகு அவர் ஐரோப்பிய சம்பிரதாயங்களைக் கற்றுக்கொள்ளத் தொடங்கியதும், தம்முடன் வேலை செய்தவர்களும் தமக்குக் கீழ் உத்தியோகம் பார்த்தவர்களுமாகிய ஐரோப்பியர்களுடன் அவ ருக்குத் தொடர்பு ஏற்பட்டதும், சிலருடன் அடிக்கடி சச்சரவு விளைந்ததும் ஹாஸ்யரஸத்துடன் இதில் வருணிக்கப்பட்டிருக் கின்றன. இந்த விவரங்கள் மிகையென்ருே சாமானியமான சமா

சாரங்களென்றே சிலருக்குப் படலாம். ஆனால் அந்தக் காலத்து வாழ்க்கை இயல்பையும், சுதந்தரமாகக் காரியம் செய்யும் வேட்கையும் மனவலியும் புதிய கொள்கைகளை ஏற்றுக்கொள்ளும் பான்மையும் உடைய ஒருவர் போக்கு எப்படி யெல்லாம் இருக்கும் என்பதையும் தெரிவிக்க அவை உதவுகின்றன. அக் காலத்தில் நிகழ்ந்தவற்றுள் ஒன்றை மட்டும் நாம் கவனிக்க வேண்டுவது இன்றியமையாதது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் நிர்வாக சபை அங்கத்தினராக இருக்கையில் பாலக்காட்டுக் கலாசாலை சம்பந்தமாக நிகழ்ந்த சம்பவமே அது. அது விஷயமாக அவர் நியாயமல்லாத பல கண்டனங்களுக்கு உள்ளானார். அதைப் பற்றிய உண்மைகள் இப் புஸ்தகத்தில் சொல்லப்பட்டிருக் கின்றன.

டெல்லி தர்பாரின்போது கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அசௌக் கியம் நேர்ந்தது. அதுவே அவர் மரணத்திற்குக் காரணமான செய்தியையும், இறுதிக் காலத்தில் பக்குவப்பட்ட ஆத்மாவுக்குரிய சாந்தியும் உண்மை ஞானமும் அவரிடம் நிலவியிருந்த செய்தியையும் இங்கு ஆசிரியர் விவரிக்கும் ரீதி, தம் சொந்த உணர்ச்சியை வெளிக்காட்டாமல் எழுதுவது எங்ஙனம் என்பதற்குச் சான்றாகும்.

தம் தந்தையார் வாழ்க்கை வரலாற்றின் சாரத்தைக் குறிப்பிடுகையில் ஸ்ரீ சந்திரசேகரன் அவருடைய நட்புரிமை பாராட்டும் இயல்பையும், கொடைத் திறமையையும், ஆழ்ந்த தெய்வ பக்தியையும் எடுத்துக் காட்டுகிறார். தம்முடைய சரித்திரத்தை யாரும் எழுதக் கூடாது என்பது கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய கடைசிக்கால விருப்பங்களில் ஒன்றென்று இவ்வாசிரியர் குறிப்பிடுகிறார். ஆனால் என்னைப் பொறுத்தமட்டில் இவர் தம் தந்தையார் கட்டளையை மீறியது கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். ஏனெனில், இவர் தம்முடைய தந்தையார் வாழ்க்கையில் பல புதிய விஷயங்களை உலகத்துக்கு விளக்கியதோடு அவர் வாழ்ந்த காலத்து நிலையைக் கூறி அந்த நிலையில் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய வாழ்க்கைப் போக்கின் சித்திரத்தை வைத்துக் காட்டியிருக்கிறார்.

சமத்காரமான கவி ஒருவர், "நமக்கு யாரைப் பிடிக்கிறதோ அவன்தான் நல்லவன் என்று நாம் நினைக்கிறோம்" என்று சொன்னார். இப்படி நினைக்கும் குறைபாடு பெரியோர்களிடம் இருப்பது உண்டு; ஓரளவில் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடமும் இருந்தது. அவரை விரும்பியவர்களோ விரும்பாதவர்களோ யாராயினும், அவருடைய மனோபலத்தையும் ஒழுக்கச் சிறப்பையும் அடிப்படையான நல்லியல்பையும் உணராதவர்கள் மிகச் சிலரே. அதிகாரம் யாரிடம் இருக்கிறதோ அவன் அநேகமாகக் கெட்ட பெயர் வாங்கிக் கொள்வது சகஜம். ஆனாலுங்கூட அதிகாரமும்

செல்வாக்கும் படைத்தவர்களில் அவ்விரண்டு பலத்தையும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் நற்செயல்களுக்குப் பயன்படுத்திக்கொண் டதைப் போலச் செய்தவர் சிலரே. அத்தகைய நிலையில் உள்ள பெரியோர் செய்த செயல்களைப்பற்றி ஆராயும்போது பிரௌனிங் என்ற ஆங்கிலக் கவி கூறிய பொருத்தமான பாடல் இங்கே நினைவுக்கு வருகிறது:

வேலை வேலை என்று விளம்பும்
சிலமில் பிண்டம் தேர்வதிற் பயனிலை
கண்ணைக் கவர்ந்து கருதிய பயன்பெறும்
அதுதான் மதிப்பிடற் காகா ததுகாண்.

இழிநிலை உலகம் இருந்தவா றிருந்தே
அதனைப் பற்றி அகத்தினிற் கொண்டொரு
கணத்தினில் மதிப்பைக் கணித்தலும் கூடும்.

*   *   *   *

சிறுசெய லினிலே செறிதரா எண்ணம்
உரையினுக் கெட்டா தொளிக்கும் கற்பனை
என்றும் யான்பெறு இயல்புகள் எல்லாம்
உலகினர் என்பால் உணரா தனஎலாம்
இச்சடம் அமைத்த இறைவற் குகந்தன.*

டாக்டர்ஜான்ஸனுடைய இயல்புக்கும் கிருஷ்ணஸ்வாமி ஐய ருடைய இயல்புக்கும் பலவகையில் ஒப்புமை உண்டு. மனநிலை, விரிந்த கல்வியறிவு, தெய்வ பக்தி, அடிக்கடி முன் கோபங் கொள்ளுதல், பொறுமை யிழந்து கண்டித்துப் பேசுதல் முதலிய இயல்புகள் இருவரிடமும் இருந்தன. டாக்டர் ஜான்ஸனைப் பற்றி ஒரு சிறந்த புலவர் கூறிய சரமகவியிலுள்ள கருத்துக்கள் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும் பொருந்தும்:

---

*"Not on the vulgar mass
Called 'work', must sentence pass,
Things done, that took the eye and had the price;
O'er which, from level stand,
The low world laid its hand,
Found straight way to its mind, could value in a trice:"
"Thoughts hardly to be pack'd
Into a narrow act,
Fancies that broke through language and escaped;
All I could never be,
All, men ignored in me,—
This I was worth to God, whose wheel the pitcher shaped."

எத்துணை அற்புதம்! எத்தகைப் பேச்சு!
கேட்டவர் தம்மெதிர் கிளர்ந்து சூழ்ந்தே
ஆழ்த்திடும் அருவியின் வீழ்ச்சிகாண் அவ்வொலி!
சயமெலாம் தனக்கே சமைப்பது வாகிய
சம்பா ஷணையோ ஞாபக சக்தி,
உண்மைகள், உதாரணம் ஒருங்கமை விருந்து!
*         *         *         *
ஆயினும் தோற்றத் தச்சம் விளைக்கும்
அவனுளம் செம்மையும் அன்பும் கொண்டது
நண்பரொ டெதிர்க்கையில் குண்டுபயன் நழுவின்
கைத்துப் பாக்கியின் கட்டையைக் காட்டுவான்.
*         *         *         *
அவன்நமைப்
புரட்டிக் கிழித்துப் புண்படுத் திடினும்
நம்மை மறந்திலன் நன்றி தொருவிதம்
என்னும் உணர்ச்சி இறுதியில் எழுமே!*

இதைக் காட்டிலும் சிறப்பாகக் கிருஷ்ணஸ்வாமி ஐயரை வருணித்துவிட முடியாது. கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் கண்ட இயல்புகளிற் பலவற்றை இது குறிக்கின்றது. ஒரே ஒரு விஷயத்தை மாத்திரம் சொல்லி நிறுத்துகிறேன்.

விசேஷமான சிரமத்துக்கு இடமாகிய இந்தச் சரித்திரத்தை எழுத மேற்கொண்டு குறுகிய மனப்பான்மையும் பக்ஷபாதமும் இன்றித் தகுந்த யோக்கியதையும், பண்படுத்திய இருதயம் தேடும் சீரும் பொருந்தி இதனை நிறைவேற்றியிருக்கிறார் இவ்வாசிரியர். கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய நண்பர்களும் அவருடைய அபிமானிகளும்—அவர்கள் நிறைய இருப்பார்கள்—வருங்காலத்து அறிஞர்களும் தம் கடமையை உணர்ந்து இதை எழுதிய அவருடைய பிரியமுள்ள குமாரரைப் பாராட்டும் கடப்பாடுடையர்.

பக்தி விலாஸம்
திருவனந்தபுரம்
*5—3—1945.*

**ஸி. பி. ராமஸ்வாமி ஐயர்.**

---

*"Ye Gods! how he talk'd! What a torrent of sound,
His hearers invaded, encompass'd and drown'd!
What a banquet of memory, fact, illustration
In that innings-for-one that he call'd conversation!
*         *         *         *
But the heart of the giant was gentle and kind:
What signifies now, if in bouts with a friend,
When his pistol miss'd fire, he would use the butt-end?
*         *         *         *
For you felt on the whole, tho' he'd toss'd you and gor'd you,
It was something, at least, that he had not ignor'd you."

# முன்னுரை

சாதாரணமாய்த் தந்தையைப்பற்றி மகன் எழுதப் புகுவது பலவித அசௌகரியங்களுக்கு உட்பட்டது; முக்கியமாய்த் தந்தையினிடம் காணக்கூடிய பிழைகளை ரத்த பாசம் மறைத்து விடும்.

என் தந்தையாரின் வாழ்க்கைச் சித்திரத்தை நான் வரைவது இன்னும் சற்றுச் சிரமமான காரியம். காரணம், அவர் இறந்து இன்று முப்பது ஆண்டுகளுக்கு மேலேயே ஆகின்றன. மேலும், அவர் உயிர் நீக்கையில் எட்டும் இரண்டும் அறியாத இளம்பிள்ளை நான். இவ்வளவு காலம் கழித்துச் சரியான ரீதியில் படம் பிடிப் பதைப்போல அவரை வாசகர்கள் முன் நிறுத்துவதும் எளிதல்ல. மற்ற எல்லாவற்றையும்விட என்னுடைய எழுத்து வன்மை முதிர்ச்சி அடையாததே பெருத்த குறையாகவும் இருக்கலாம்.

ஆயினும் என் தந்தையுடன் நெருங்கிப் பழகியவர்களிலும், அவருடைய மேதா விலாஸங்களை அநுபவித்தவர்களிலும் ஒருவ ராவது அவர் ஜீவிய வரலாற்றை எடுத்துரைக்கும் முயற்சியை மேற்கொள்ளவில்லையே! அவ்விதம் யாருக்காவது உண்மையில் தோன்றி இருந்தால் ஒருகாலும் மனத்தில் எழும் உணர்ச்சியை அடக்க முடிந்திருக்குமா? ஆனால் கணக்கற்றவர்கள் அடிக்கடி 'வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் சரித்திர நிகழ்ச்சிகளை யாராவது எழுதுவது அவசியம்' என்று சொல்லுவதை என் செவிகளே கேட்டு, என் உள்ளத்திலும் பெருமிதம் உண்டானது உண்டு.

தகுதி வாய்ந்தவர்கள் செய்தற்கரிய ஒரு காரியத்தை, ஒரு விதத்திலும் யோக்கியதை இல்லாத நான் ஏன் ஏற்றுக் கொண்டேன் என்பதையும் நேயர்கள் தெரிந்துகொள்ள விரும்பலாம். கேட்பதற்கு முன் நானே சொல்வதற்குத் தயார்.

பன்னிரண்டு வருஷங்களுக்குமுன் ஒரு நாள் நான் ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயரைக் காண நேர்ந்தது. அன்று எங்களுள் எழுதும் சக்தியைப் பற்றிப் பேச்சு வளர்ந்தது. அப்பெரியார் அன்று எதிர்பாராத விதம் என்னைச் சந்தோஷிக்க வைத்தார்; என் தகப்பனாருடைய வாழ்க்கைச் சம்பவங்களைப் புஸ்தகமாய் வெளியிடக்கூடிய சொல்திறனும், மற்றத் தகுதிகளும் என்னிடம் சிறிது இருப்பதாக அவர்

நினைத்ததைச் சொன்னார். அவருடைய மதிப்பில் உள்ள கௌரவமே இக்காரியத்தை மேற்கொள்ள முதலில் உத்ஸாக மூட்டியது.

ஆனால் சீக்கிரம் என் ஆர்வம் சற்றுக் குறைவதற்கு மற்றொரு சிறந்த அறிவாளியான காலஞ்சென்ற ஸர் ஸி. ஒய். சிந்தாமணி வழி செய்தார். ஒருவரை உயிருள்ளபொழுது அறிந்தாலும் அறியாவிட்டாலும், மகன் தந்தையின் குணகுண அம்சங்களைச் சீர்தூக்கிப் பார்ப்பது என்பது எளிதல்ல. ஏனெனில் அதற்கு உரிய நடுநிலை அவன் மனத்தில் பூர்ணமாய் ஏற்படாது என்பதே அவர் கருத்து. அவ்விதச் சமநிலையில் நிற்கக் கூடிய மற்ற எவரும் முன் வராததால், 'அந்நிலை தவறியதால் உண்டாகும் குற்றங்குறைகள் நிறைய இருப்பினும் பாதகம் இல்லை. புண்ணியாத்மா ஒருவரின் போற்றுதற்குரிய இயல்புகளையும் செயல்களையும் உலகோருக்கு நினைப்பு மூட்டுவது ஓர் சிறந்த ஊழியமாகும்' என்று எண்ணியே இந்தப் புஸ்தகத்தை எழுத ஆரம்பித்தேன்.

ஆங்கிலத்தில் எழுதுவது என்பது என் முதல் தீர்மானம். ஆனால் காலத்தை ஒட்டி என் லக்ஷ்யமும் மாறத் தொடங்கியது. தமிழ்ப் பாஷையில் சொல்லுவது மனத்தை விட்டுச் சொன்னது போன்ற இன்ப உணர்ச்சியையும் திருப்தியையும் அளிக்க வல்லது என்று பட்டது. போதாததற்கு ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியாரும் என் வாழ்க்கையினுள் புகுந்துவிட்டார். தாய் மொழியில் அவருக்குள்ள ஆர்வமெல்லாம் என்னையும் கண் திறக்க வைத்ததில் ஆச்சரியமில்லை அல்லவா ?

மேல்நாடுகளில் வாழ்க்கைச் சரித்திரங்களை அசாதாரணமான இலக்கியச் சுவை கொண்டவைகளாகச் செய்த எழுத்தாளர்கள் எத்தனையோ உண்டு. அவர்களுடைய புஸ்தகங்களை வாசித்து அநுபவித்த நமக்கு உயர்ந்த பல அம்சங்களை அவர்களிடமிருந்து எடுத்துக்கொள்ள அவா உண்டாவது இயற்கையே. ஆனால் எதற்கும் பலவிதத் தடைகள் இங்கு இருக்கின்றன. மேல்நாடுகளில் வாழ்கின்றவர்களின் சகஜமான பழக்க வழக்கங்களுக்கும், இங்குள்ளவர்களின் இயல்பான போக்குகளுக்கும் பேதங்கள் பல காணப்படும். அங்குள்ள பிரமுகர்களைப்பற்றிய குறிப்புக்களைப் பிறர் எழுதிவைப்பதும், அவர்களே சொந்தத்தில் தினசரி நிகழ்ச்சிகளை எழுதும் பழக்கமும், இன்னும் ஜீவிய சரித்திர எழுத்தாளர்கள் விரும்பும் தனி மரபும் இலக்கிய உலகில் வெகுவாக உள்ளன. இவைகளைத் தவிரவும், கடிதங்களின் நகல்கள், அந்தரங்கமான செய்திகளை அறிவிக்கும் மித்திரமணிகளின் ஞாபகங்கள் முதலியன சுலபமாய்க் கிடைக்கும்.

நம் நாட்டில் பற்பல பெரியார்களின் ஆரம்ப தசைகள் நெருங்கிய பந்துமித்திரர்களுக்குக்கூடத் தெளிவாகத் தெரிவ தில்லை. மேலும், வேறு சரியான ஆதாரங்களும் கிடைப்பதில்லை. கடிதங்களைக் கிழித்தெறியும் பழக்கம் நம்மில் சர்வ சாதாரணம்; தினசரிக் குறிப்புக்களை ஒருவரும் எழுதுவதில்லை. சிறந்த ஒரு வரின் சிநேகிதர்கள் தங்கள் அன்புக்கோ அல்லது பாராட் டிற்கோ பாத்திரமான குணங்களை அவரிடம் மிகவும் அநுபவித் துங்கூட, ஞாபகத்தில் அவைகளை வைத்திருக்க வசதிகளைத் தேடுவது இல்லை. சிறிது எங்காவது விஷயம் கிடைப்பதாயின், அவை தினசரிப் பத்திரிகைகளில் வெளிவந்த செய்திகளும், பிரசங்கங்கள் முதலியவைகளின் சாராம்சங்களுமேயாம். இவை களையே தொகுத்துக் கூடியவரையில் ஜீவிய சரித்திர வரலாறு களாக இங்கு வெளியிடவேண்டி நேர்கிறது.

என் தந்தையைப் பற்றிய வரையில், சில சிதைந்த தினசரிக் குறிப்புக்கள் அவருடைய ஆரம்ப காலங்களில் எழுதி வைத்தவை கிடைத்தன. பல சிநேகிதர்களிடமிருந்து வந்த கடிதங்கள் கெட்டுவிடாமல் பாதுகாக்கப்பட்டு என் கைக்கு வந்தன. அவர் எழுதிய பதில் கடிதங்களிற் சிலவற்றின் நகல்களும் இருக் கின்றன. இவைகளே முதலில் எனக்குத் தைரியத்தை ஊட்டின.

மற்ருெரு சௌகரியமும் எனக்கு ஏற்பட்டது. குறைந்தது இருபது வருஷங்களாவது பொதுஜன சேவையில் ஈடுபட்ட அவருடைய பிரசங்கங்களையும், மற்றக் காரியங்களையும் பிரபல தினசரிகளான சென்னை 'ஹிந்து', 'மெயில்' பத்திரிகைகள் அவ்வப்போது குறித்து வைத்திருந்தன. மேற்கூறிய இரண்டு உயர்தரப் பத்திரிகைகளின் ஆசிரியர்களும், வேண்டிய சௌகரி யங்களை எனக்கு இவ்விஷயத்தில் அளித்ததை என்ருல் ஒரு நாளும் மறக்கமுடியாது.

ஆங்கிலத்திலுள்ள பல பிரசங்கங்களையும் கடிதங்களையும் தமிழில் மொழிபெயர்க்கையில், ஆங்கிலச் சொற்களுக்குரிய இயல்பான நயங்கள் சில மறைவதை எதிர்பார்க்க வேண்டியதே. அதிலும் மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளின் கடிதங்களைத் தமிழாக்குவது மிகவும் கடினம் என்பதை எல்லோரும் அறி வார்கள். கூடியவரையில் அவைகளிலுள்ள விஷயத்தை மட்டும் பிழை இல்லாமல் தருவதுதான் இங்கே சாத்தியமாயிற்று; அதற்குமேல் அவசியமும் இல்லை.

என் குடும்பத்தைச் சார்ந்தவர்களுக்கு என் முயற்சியில் சந்தேகங்கள் தோன்ருதிருப்பதற்கும் நியாயமில்லை. என் தந்தை யாரின் உயர்ந்த வரலாற்றை ஒவ்வொருவரும் தனியே போற்றி வருகையில், மற்றவர்களைவிடச் சிறியவனும், பகுத்தறிவில்

குறைந்தவனையும் உள்ள என்னை எவ்விதம் நம்பி இக்காரியத்தைச் செய்ய அவர்களால் உள்ளங்குளிர அநுமதிக்க இயலும்? வாஸ்தவத்தில் அவர்களுக்குள்ள கவலை எனக்கும் உண்டு. இப்புஸ்தகம் என் தந்தையின் ஞாபகத்தை ஓரளவாயினும் அவர்கள் இருதயங்களில் எழுப்பினால், அதுவே நான் வேண்டுவது.

என் அம்மான் புதல்வரான சிரஞ்சீவி **பாலசுப்பிரமணியன்** ஒருவரே என்னை இக்காரியத்தினின்றும் வழுவாமல் பார்த்துக் கொண்டார். என் மேலுள்ள வாஞ்சையும், எதையும் காதால் கேட்டவுடன் கற்பனையில் பூரணமாக்கிக் கொள்ளும் தன்மையும் சேர்ந்தே அவரை என் தந்தையின்பால் அளவுகடந்த கௌரவத்தைக் காட்டும்படிச் செய்திருக்கின்றன. எப்படியாவது அரைகுறையாகவாவது ஒரு புஸ்தகம் அவரைப்பற்றி வெளி வருவதில் அவருக்குள்ள ஆசை சொல்லத்தரமல்ல.

'கலைமகள்' ஆசிரியர் **ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன்** அவர்கள் எத்தனையோவித உதவிகள் எனக்குச் செய்துள்ளார். வேண்டிய அளவு திருத்தங்களைப் புஸ்தகத்தில் அவர் செய்திருக்கிறார். அத்தியாயந்தோறும் உள்ளடங்கிய விஷயங்களுக்குத் தகுந்த மேற்கோள்களைத் தேடித் தலைப்பின்கீழ்த் தந்த பெருமையும் அவரைச் சேர்ந்ததே. முதலில் காணப்படும் ரவீந்திரரின் பாட்டைத் தமிழில் பண்ணுடன் உருவாக்கிய தொண்டும் அவருடையது. கடைசியில் பெயர்களின் அகராதியைத் தயாரித்தவரும் அவரே. இவைகளுக்கு ஒரு சொல் இரண்டு சொல்லில் கைம்மாறு காட்டுவது சாத்தியமன்று; எவ்வளவோ கூற வேண்டும்.

என் தந்தையின் இளம் வயசுச் செய்திகளை எனக்குத் தந்தவர்களில் முக்கியமாய்க் குறிக்க வேண்டியவர்கள், காலஞ்சென்ற **வலங்கைமான் ராமஸ்வாமி ஐயர்**, என் சிற்றப்பா **ராவ் பகதூர் வி, ராமசந்திர ஐயர்**, காலஞ்சென்ற என் மாமா **தியாகராஜ சாஸ்திரிகள்** இம்மூவரே. மாணுக்கராய் இருந்த காலத்து விவரங்களைக் கொடுத்தவர் **ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர்** அவர்கள். கோகலேக்கு என் தந்தை எழுதிய கடிதங்களையும், அநேக சந்தர்ப்பங்களில் அவ்விருவர்களுக்குத் தாம் எழுதிய கடிதங்களின் நகல்களையும் தந்து உதவிய பெரியார், **மஹாகனம் சாஸ்திரியார்** அவர்களே. தொழில் துறையில் சில பழைய ஞாபகங்களைக் குறிப்பாக எழுதித் தந்தவர் திருச்சிப் பிரமுகர், **ஸ்ரீ ஏ. வி. கோபாலாச்சாரியார்** அவர்கள். இன்னும் பல அரிய நண்பர்களும் எனக்கு உதவி அளித்திருக்கிறார்கள். இளைஞர்களில் **ஸ்ரீ கி. சுந்தரராகவன்** (சுதேசமித்திரன் உதவி ஆசிரியர்) என்னைத் தக்கவாறு உத்ஸாக மூட்டியும், உபயோகமான சில கடிதங்களைச் சமயத்தில்

கொடுத்தும் உதவினர். குடும்ப சம்பந்தமான கடிதங்களில் சில வற்றை என் பெரிய தகப்பனர் குமாரர் எஸ். நடேச ஐயர் கொடுத்தார். இவர்கள்பால் அன்பு குன்ருது இருப்பது என் கடமை.

ஸசிவோத்தமரான ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் எனக்கு அளித்த கௌரவம் விவரிக்க வொண்ணுதது. நான் அவரை முகவுரைக்காக அணுகியதும், அதை எழுதச் சட்டென ஒப்புக் கொண்டதும் அல்லாமல், "எவ்வளவு அலுவல்கள் இருப்பினும் உன் புஸ்தகத்திற்கு முகவுரையை எழுத நான் சித்தனுய் இருக் கிறேன்" என்று சொன்ன அவருடைய வார்த்தைகள் உண்மையில் என்னை மிக உயர்ந்த பெருமிதத்தை அடையச் செய்தன. எல்லாம் இச்சரித்திர நாயகரின் புதல்வனுக நான் இருப்பதன் பயனன்ரே!

அவர் எழுதியிருக்கும் முகவுரையைத்தான் பாருங்களேன்! மிகுந்த சிரத்தையுடனும், அநுதாபத்துடனும் ஒரு பக்கங்கூட விடாமல் இப்புஸ்தகத்தைப் படித்திருக்கிருர் என்பது முதலில் தெரியும். புஸ்தகத்தைப் பற்றிய நல்ல அபிப்பிராயங்களையும் எவ்வளவு தாராளமாய் வழங்கி இருக்கிருர்! திருப்திகரமாய் அவருக்கு நன்றி செலுத்துவது என்ருல் இயலாத காரியம்.

மற்ரெரு வார்த்தை. எதை மறந்தாலும் ஒன்றை மட்டும் என்ருல் இருதயத்தை விட்டு அகற்ற முடியாது. என் அருமைச் சகோதரி சுப்பலக்ஷ்மி உயிருடன் இருந்து இப் புஸ்தகத்தைப் பார்க்கவில்லையே என்பது என் தீராத குறை. ஏனெனில் அவள் உள்ள வரையில் மற்ற எவரும் உணராத விதம் என் தந்தையின் வாழ்க்கை வரலாறுகளைக் கருதியவள். அதோடு நிற்காமல், அவர் ஜீவிய சரிதத்தை எழுதாத சிநேகிதர் களையும் அவள் மன்னிக்க மறுத்தவள். எவ்வளவு சாதாரணமாய் நான் எழுதியிருப்பினும் என்னைப் பூர்ண மனத்துடன் அவள் ஆசீர்வதித்திருப்பாளே! நான்தான் கொடுத்து வைக்கவில்லை.

ஊன்றிப் பார்ப்பவர்களுக்கு இப்புஸ்தகத்தில் ஆயிரம் பிழைகள் தெரியலாம். ஆனல் அவ்வளவையும் கவனியாது எங்காவது தென்படும் ஒரு சிறு நல்ல அம்சத்தைப் பொறுக்கிப் போற்றினுலும் அதுவே அவர்களை என் நன்றிக்குப் பாத்திரமாகச் செய்யும்.

ஆச்ரமம்.
மயிலாப்பூர்,
20—3—1945.

கி. சந்திரசேகரன்.



வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்
(1910)

SAW. GANESAN
KARAIKUDI - S. Ry.

# அத்தியாயம் 1

## பூர்வோத்தரம்

"குலம் சுரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்"

—கம்பர்

"மாயவரம் கோபு ஐயர் கூட்டம்" என்றவுடன் ஒரு காலத்தில் தஞ்சை வாசிகளுக்குச் சில விஷயங்களே முதலில் ஞாபகத்துக்கு வருமாம். சாதாரணமாய்த் தோன்றக் கூடியவிதம் அன்றி மறக்கத் தகாதவாறு சிற்சில விசேஷங்கள் அவர்களிடம் காணப்பட்டன. பிடிவாதத்தை அந்தப் பரம்பரையைச் சார்ந்த எவரிடமாவது கண்டால் போதும், சிலருக்கு ஒரு தடவையாவது, "மாயவரம் கோபு ஐயருடைய வம்சஸ்தர் அல்லவா நீங்கள்?" என்று சொல்லாமல் இருக்க முடியாது. பழைய கதைகள் அவர்கள் நினைவிற்கு வருவதும் இயல்பாயிருந்தது.

இருநூறு ஆண்டுகளுக்கு முன் தஞ்சையை ஆண்ட மஹாராஷ்டிர மன்னர்களின் ஸம்ஸ்தானத்தில் மந்திரி வேலை பார்த்தவர் கோபு ஐயர். அவரிடம் அளவுகடந்து காணப்பட்ட எஜமான விசுவாஸம் பிற்பாடு பெரிய தீரச் செயலுக்கும் அஸ்திவாரம் ஆயிற்று. அக்காலத்தில் கர்நாடக நவாபு ஒருவன் தஞ்சை அரசரை யுத்தத்தில் தோல்வி அடையச்செய்து ஊரைவிட்டும் வெருட்டி அடித்தான். அப்படித் தோல்வியுற்று ஓடும்பொழுதும் பிடித்துக் கைதுசெய்ய அவரைப் பின் தொடர்ந்தான் அந்த நவாபு. அந்தச் சமயத்தில் கோபு ஐயர், ஒருவரும் அறியாதபடி அரசனை எங்கேயோ மறைத்து வைத்து விட்டார். இதன் உளவை அறிந்த நவாபு கோபு ஐயரைப் பலவிதச் சிக்ஷைகளுக்கு ஆளாக்கினான். அவர் கண்களைப் பழுக்கக் காய்ச்சிய இரும்பைக்கொண்டு குத்தும் சித்திர வதைக்கும் ஏற்பாடாகியது. ஒன்றிற்கும் பயந்து மனம் தளராதவராய், தம் எஜமானனை எப்படியாவது

காப்பாற்றுவது ஒன்றுதான் தம் முதற்கடமை என்பதையே நினைத்து அவர் பிடிவாதமாய் வாயைத் திறக்க மறுத்துவிட்டார். அந்த அரிய குணத்தைக் கண்டு முகம்மதியத் தலைவனே பிரமித்துவிட்டான். பிறகு தஞ்சை மராட்டிய அரசனைக் கைதுசெய்துங்கூட, மந்திரியின் சொல்லொணுத பக்தி விசுவாஸத்தை வியந்து அரசனுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்து, கொடுமையான தண்டனைகளை அவனுக்கு இடாமல் நவாபு காப்பாற்றினுன் என்பது பழைய வரலாறு.

தஞ்சை அரசர்கள் இம்மாதிரி நவாபினுல் கைது செய்யப்பட்ட விஷயத்தைச் சரித்திரமூலமாகக் கொஞ்சம் ஆராய்வோம். கர்நாடக நவாபினுல் தஞ்சை அரசன் சிறைப்பட்ட காலம் துளஜாஜி மஹாராஜாவின் ஆட்சியில் என்று தெரிகிறது.* (1763—1787). கி. பி. 1773-ல் கர்நாடக நவாபு, தஞ்சை அரசர் ஸதாராவிலுள்ள மராட்டியர்களுடன் ஏதோ ரகசியமாய் உடன்படிக்கைகள் செய்துகொண்டதாக நினைத்து, வெள்ளையர்களின் உதவியைக் கொண்டு அவரைப் பிடித்துச் சிறையில் அடைத்ததாகவும், பிறகு மூன்று வருஷங்களுக்கு அப்பால் மறுபடியும் துளஜாஜி மஹாராஜாவை யதாஸ்தானத்தில் இருத்தியதாகவும் சரித்திரம் வெளியிடுகிறது. ஒருகால், கோபு ஐயர் சேவை செய்த எஜமானன் துளஜாஜி மஹாராஜாவாகத்தான் இருக்கலாம். அல்லது தஞ்சை அரசரின் கீழ் மாயூரம் சுபேதாராக இருந்த ஒருவருக்கு அவர் முக்கிய மந்திரியாகவும் இருந்திருக்கலாம். முகம்மதிய அரசனுல் தோல்வி அடைந்து சிறைப்பட்ட செய்தி மற்றத் தஞ்சை அரசர்கள் வரலாறுகளில் அகப்படாததாலும், கோபு ஐயரின் அரிய செயலை அவருடைய வம்சஸ்தர்களும், மற்ற ஜனங்களின் ஸந்ததிகளும் எடுத்துரைப்பதாலும் இரண்டையும் பிணைத்து இவ்வாறு ஊகிக்க இடம் தருகிறது.

---

* *"தஞ்சை மராட்டிய அரசர்கள்"* (The Maratha Rajas of Tanjore) கே. ஆர். சுப்பிரமணியன், எம். ஏ. எழுதியது. பக்கம் 61.

இதைத் தவிரக் கோபு ஐயரைப்பற்றிக் கூறும் செய்திகளுள் வேறொன்று, அவருக்கு இருந்த அதிசயமான ஈசுவர பக்தியே. ஸந்தான கோபால கிருஷ்ணமூர்த்தி அவருடைய குலதெய்வம்; சதா பூஜையில், அந்த இள வடிவம்கொண்ட மூர்த்தியை வைத்துத் தியானம் செய் வாராம். ஒரு சமயம் கலகக்காரர்கள் சிலர் அவருடைய வீட்டினுள் புகுந்து அந்த விக்கிரகத்தை எடுத்துச் சென் றார்கள். ஆனால் நடந்த ஆச்சரியம் என்னவென்றால், கிருஷ்ண விக்கிரகத்தைக் கையில் ஏந்திச் சென்றவ னுடைய இருகண்களும் திடீரென்று ஒளி இழந்துவிட்டன. திகிலடைந்த அந்தக் கொள்ளைக்காரன் விக்கிரகத்தைக் கீழே எறிந்துவிட்டான். விக்கிரகம் விழுந்த இடம் தெரி யாமல் பல காலம் தேடித் திரிந்த கோபு ஐயருக்கும், அவருடைய வம்ச பரம்பரையைச் சார்ந்தவர்களுக்கும் அதன் விவரம் தெரியவில்லை. கீழே, விழுந்த இடத்தில் விக்கிரகத்தின் மேல் கோயிலொன்று எழும்பியதாகவும் வரலாறு கூறும். இதன் உண்மையை நாம் கண்டறிவது சாத்தியம் அன்று. கோபு ஐயர் குலத்தில் தெய்வபக்தி வேரூன்றியிருந்தது என்று கொள்வதுமட்டும் போதும்.

மாயவரம் கோபு ஐயருடைய காலம், மேலே குறித்த துளஜாஜியின் சம்பந்தத்தைக் கொண்டு பார்த்தால், பதினெட்டாவது நூற்றாண்டுதான் என்று தெளிவா கிறது. அவருடைய கோத்திரம் ஆத்திரேயம். அவருடைய குமாரர் சேதுராமையர் எல்பவரும் வம்சாசாரத்தை விடாமல் திருவிடைமருதூரிலிருந்த மராட்டியச் சிற்றரசன் ஒருவனிடம் மந்திரிப் பதவி வகித்ததாகவும் சொல்லு வார்கள். அவர் ஆசாரசீலர் என்றும், மதப்பற்றுள்ளவ ரென்றும் தந்தையை அறிந்தவர்கள் தனயனையும் புகழ் வார்கள். ஆனால் அவர் என்ன என்ன நற்காரியங்கள் செய்தார் என்பதை எடுத்துக்காட்ட ஒருவிதச் செய்தி யும் நமக்குக் கிடைக்கவில்லை. அவருக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் பிறந்தார்கள். அவர் பிள்ளைகளில் ஒருவரான மஹாலிங்கையர் என்பவர், ஆங்கில ஆட்சி தென்னிந்தியாவில் நிலைத்த பிறகு,

அரசாங்கம் ஏற்படுத்திய நீதி இலாகா உத்தியோகங்களில் ஒன்முன முன்சீப் பதவியில் இருந்து வெகுகாலம் வேலை பார்த்தார். அவரே பிறகு ஒருசமயம் திருவிடை மருதூரில் பன்னிரண்டு வீடுகளைப் பிராம்மணர் களுக்குத் தானம் செய்து அழியாத பெயரை அந்தப் பக்கங்களில் சம்பாதித்துக்கொண்டார். ஏராளமான திர வியமும் அவர் சேர்த்திருந்ததாகத் தெரிகிறது. அவருக்கு இருந்த செல்வாக்கும் பொருள் நிலையும் அந்தக் குடும் பத்தில் மற்றவர்களுக்கு இல்லை. அவர் முன்சீப் வேலை பார்த்த இடம் திருநெல்வேலி ; இதிலிருந்து, அவர் குடும்பம் அந்த நாட்களிலேயே தன சம்பாத்தியத்தின் பொருட்டு எவ்வளவு தூரம் சென்றிருந்தது என்பதும் விளங்குகிறது. மேலும் அவருடைய சகோதரர் ராமஸ்வாமி என்பவர் மதுரையில் 1880-ஆம் வருஷம் வரையில் வக்கீலாக இருந்தாரென்ற விவரம், இதே விஷயத்தை இன்னும் பலப்படுத்துகிறது.

சுப்பலக்ஷ்மி, ருக்மிணி என்று ஸேதுராமையருக்கு இரண்டு பெண்கள் பிறந்தார்கள். சுப்பலக்ஷ்மியை அரிவிழிமங்கலம் என்னும் கிராமத்தைச் சார்ந்த நற்குலத் தில் உண்டான மஹாலிங்க ஐயருக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்திருந்தார். இரண்டாம் பெண்ணுகிய ருக்மிணியைச் சாத்தனூரில் கொடுத்திருந்தார். அவள் வாழ்க்கைப்பட்ட இடம் சற்று வளமுள்ள மிராசுதார்களின் குடும்பம். ஆனுல் அரிவிழிமங்கலம் மஹாலிங்கையருக்கு இருந்த செல்வமெல்லாம் அவருடைய குணப் பெருக்கு ஒன்றுதான் என்று தெரியவருகிறது. அவர் படிப்பாளி அல்ல. ஆனுல் சுபாவத்தில் சிறந்த புத்திவேகம் படைத்தவர். அவருடைய மனைவியைக் கோபக்காரி என்று பலர் சொல் லுவார்கள். அவளும் அவளுடைய சகோதரியும் வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு பேசத் தொடங்கி விட்டால் தெருவழியே செல்லுபவர்கள் தயங்கித் தயங்கித் தான் அவர்களைத் தாண்டிச் செல்வார்களாம்.

1835-ஆம் வருஷம் அரிவிழிமங்கலம் தம்பதிகளுக்குப் பிள்ளையாகப் பிறந்தவர் வேங்கடராமையர். அவருக்கு

முந்திப் பிறந்தவர் நாராயணசாமி ஐயர். வேங்கட ராமையருடைய சுபாவத்தில் தென்பட்ட கோபமும், வாய்த்துடுக்கும், அவருடைய தாயிடம் பூர்ணமாய்த் தெரிந்தவைகள்தாம். ஆனல் ஆணுகப் பிறந்தவரிடம் கோபம் வெளிப்படுவதே ஒரு தனிவிதமானது அல்லவா! அதிலும் பொய் சொல்லுபவர்களைக் கண்டதும் வேங்கட ராமையருக்கு எங்கிருந்தோ ஆவேசத்துடன் வசை மொழிகள் கிளம்பிவிடும். கிளம்பிய வார்த்தைகளைக் கட்டுக்கு அடங்க வைக்கத் தெரிந்துகொள்ளாதவர். இல்லாவிட்டால் பிற்காலத்தில் முன்சீப் உத்தியோகம் செய்யும் பொழுது கொஞ்சங்கூடக் கூச்சமின்றி தவறு செய்தவர்களைக் கோர்ட்டில் வாய்விட்டுத் தூஷிக்க அவருக்கு மனம் வந்திருக்குமா?

அவர் படிப்பு, சில வகுப்புக்கள் வரையிலும் சென்றது. இக்காலத்து முறைப்படி ஒரு பி. ஏ. அல்லது எம். ஏ. என்று அவரைச் சொல்வதற்கு இல்லை. தாராளமாய் ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் அவருக்கு ஞானம் ஏற்பட்டிருந்தது என்பதை அவருடைய குமாரர்கள் அடிக்கடி மெச்சியதிலிருந்து அறியமுடிகிறது. ஸம்ஸ்கிருதத்தில் பாண்டித்தியமும், அதனுடன் மிகுந்த ஆசாரமும், நல்லொழுக்கமும் படைத்தவராக இருந்தமையால், உண்மை தெரிந்தவர்கள் அவரிடம் மரியாதையுடன் நடந்துகொண்டார்கள்.

“ஆங்கிலத்திலும் வடமொழியிலும் சிறந்த பயிற்சியுடையவர்; வடமொழியிலுள்ள சைவநூல்களில் மிக்க அன்பும், ஆராய்ச்சியும் உடையவராக இருந்தார்; வைதிக ஆசார அநுஷ்டானங்களிற் சிறிதும் பிறழாது ஒழுகி வந்தார்; ஒழுக்கநெறி தவறியவர்களைக் கண்டால் அவருக்கு வெறுப்பு உண்டாகும்”* என்று காலஞ்சென்ற மஹா மஹோபாத்தியாய டாக்டர் சாமிநாதையர் அவரைத் தாம் நேரில் பார்த்திருப்பதை வெளியிட்டிருக்கிறார். மேலும் அவருடைய தோற்றத்தைப் பற்றிக் குறிக்குங்

---

* நினைவு மஞ்சரி; பாகம் 1, பக்கம் 123.

கால், "அவரது முகத்திலே ஒரு பிரகாசம் இருக்கும். அவருடைய மேதையும் மனோதைரியமுமே அதற்குக் காரணங்கள்"* என்று எழுதுகிறார். அரிய மேதா விலாஸங்களெல்லாம் நன்கு சோபிப்பது தூய வாழ்க்கையின் உயர்வினாலல்லவா? அவருடைய நன்னடத்தையை விளக்க ஒரு சம்பவம் குறிப்பிடத்தக்கது. சிவந்த மேனியும் கட்டான தேகமும் படைத்தவரானமையால் ஒரு தரம் பார்த்துவிட்டால் அவர் உருவம் மனத்தை விட்டு அகலாது. இளமையின் முறுக்கும் காந்தியும் ஒருவரிடம் சேர்ந்தால் கேட்க வேண்டுமா? ஒரு நாள் தஞ்சை நகர வீதி ஒன்றில் இருட்டும் வேளையில் சென்றுகொண் டிருந்தவர், எதையோ கண்ணில் தென் பட்டதாக நினைத்துத் தலை நிமிர்ந்து கண்களை மேலே செலுத்தினார். இளநங்கை ஒருத்தி ஒரு வீட்டின் மெத்தைச் சாளரத்தின் வழியே தம்மைக் கூர்ந்து கவனித்த தோடு, புன்முறுவல் பூத்துக் கரம்குவித்துத் தம்மை வீடுதி யினுள் வரும்படி சமிக்ஞை செய்வதாகவும் அறிந்தார். சட்டென அவருடைய புத்தியில், விஷயம் புரிந்துவிட்டது. தாம் சென்ற வீதி தாஸிகள் இல்லங்கள் நிறைந்தவை என்றும், தம்மை வரவேற்பவள் ருத்திர கணிகை யாகவேதான் இருக்கவேண்டும் என்றும் அவருக்குப் பட்டது. மறுநிமிஷம் நிதானித்துக்கொண்டு, பிறகு வருவதாகக் குறிப்பாய்த் தெரிவித்துவிட்டு மேலே நடந்தா ராம். பிறகு வருவதாக அவர் சொன்னதற்கும் ஒரு மரபு உண்டெனத் தெரிகிறது. 'பெண்ணொருத்தியை நிராகரிப் பதாயினும் நேருக்கு நேர் அவ்விதமே சொல்வது முறை யல்ல' என்பதுதான் அவ்வாறு அவர் செய்ததற்குக் காரணம். எவ்வளவோ வெளிப்படையாகப் பிறரைத் தூக்கி எறிந்துபேசும் பேர்வழி, இவ்வளவு தூரம் பெண்மைக்கு மரியாதை காட்டியது பெருமைதான். மேலும் இந்தச் சம் பவத்தை அவர் வாய்கொண்டேதான் சிலர் அறிந்தார்கள். இச்செய்தியை அவராக வெளியிடாது இருந்திருந்தால் அவர் சான்றாண்மையை இன்று அறிய இயலுமா?

---

* நினைவு மஞ்சரி, பாகம் 1, பக்கம் 123.

வேங்கடராமையருக்கு வெளி வேஷங்களில் மதிப்புக் கொஞ்சமும் இல்லை. போதாததற்குப் பெரிய அந்தஸ்தில் உள்ளவர்களுடைய வாழ்க்கையில் ஏதாவது குற்றத்தைக் கண்டுவிட்டால் அவரால் அவைகளை மன்னிக்கவும் இயலாது. 'குற்றம் குற்றந்தான். பெரியவனாக இருந்தால் மன்னிப்பதும், சிறியவனாக இருந்தால் மன்னிக்காமல் இருப்பதும் நியாயமாகுமா?' என்பது அவருடைய தீவிரக் கொள்கை. பெரிய மிராசுதார் ஒருவர், கிராமாந்தரங்களில் உள்ள சாமான்யச் சண்டைகளுக்கு முக்கிய காரணமான வயலுக்குத் தண்ணீர் பாய்ச்சும் காரியத்தில், வேண்டுமென்று மற்றவர்களுக்கு ஜலம் விடாமல் வாய்க்காலைத் தம் நிலங்களுக்கு மட்டும் திருப்பி வந்தார். அம்மாதிரி அக்கிரமக் காரியங்களைக் காதால் கேட்டே அவரிடம் மிகுந்த அருவருப்புக் கொண்டுவிட்டார் வேங்கடராமையர். ஒரு சந்தர்ப்பத்தில் நேரில் அப்பெரிய தனிகரைக் காணவும், வந்தவர் மரியாதையாக அவரை அஞ்சலிசெய்து வணங்கினார். வணங்கியவரைக் கொஞ்சமும் கவனிக்காமல் வேங்கடராமையர் முகத்தில் கடுகடுப்புடன் இருந்தார். பிறகு அவருடைய நண்பர்கள், "எதனால் அசட்டை செய்யவேண்டும் நமஸ்கரித்தவரை?" என்று வினவவே அவர், "இவரை நன்றாக நான் அறிவேன்; இவர் பலருக்குத் தீமை புரிபவர். இவரிடம் எனக்கு மதிப்பில்லை. ஆகையால்தான் பதிலுக்கு நமஸ்காரம் செய்யவில்லை"* என்று நிஜமான கோபத்துடன் பதிலுரைத்தார்.

சிவபூஜையில் பற்றுடையவர் அவர் என்பது பலருக்குத் தெரிந்த விஷயம். அவர் பிராதஸ்நானம் செய்து பக்தியுடன் பூஜையில் உட்கார்ந்து காலை நேரத்தைக் கழிப்பதைக் கண்டு, "நல்ல தேஜஸ்வியாய் விளங்குகிறார்" என்று பலர் சொல்லுவது உண்டு. மதப்பற்று அவரிடம் அதிகம் என்றாலும் தவறில்லை. வேர் ஊன்றிய மதப்பற்றில், மற்ற மதஸ்தர்களைக் கண்டு தம் அமைதியை இழக்காதவர் என்பதற்கில்லை. அவருக்கு இருந்த மத அபிமானத்தை

* நினைவு மஞ்சரி, பாகம் 1, பக்கம் 124.

எடுத்துக் காட்டுவதற்கு ஏற்றதாகிய அவரைப்பற்றிய வேடிக்கையான வரலாறு ஒன்றைக் கேட்டாலே இது தெரியும். ஒரு சமயம், அவர் சீகாழியில் உத்தியோகமாக இருந்த காலத்தில், அவர் வீட்டு வாசலில் வேண்டுமென்று அவரைக் கோப மூட்டப் பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்த ஒரு விஷமக்காரன் பிச்சைக்கார வேஷம் போட்டுக் கொண்டு வந்து நின்ருன். துவாதச புண்ட்ரங்களுடனும் தோற்றம் அளித்தான். வாயினுல் சதா முகுந்தனைப் போற்றி யதும் அல்லாமல், பரமசிவனையும் இழிவாக இடை யிடையே தூற்றினுன். முன்சீப் வீடு என்ருல் வாசலில் டலாயத்து நிற்பது வழக்கம். வந்தவன் உள்ளே எஜ மானர் வேலையாய் இருப்பதையும், டலாயத்து சட்டை தலைப்பாகையுடன் இருப்பதையும் கண்டு கொஞ்சமும் யோசியாமல் நாராயண பஜனை செய்தான். முதலில், வந்தவனைக் கவனியாதவர் சட்டென்று சிவனைத் தூஷித்த அவன் வார்த்தைகளைக் கவனித்துவிட்டார். வந்து விட்டது கோபம் அவருக்கு. மூலையில் சார்த்தியிருந்த கைத்தடியை எடுத்துக்கொண்டு வாசலில் நின்றவனை அடிக்க ஓடி வந்தார். டலாயத்துக்குத் தோன்றிய எண்ணங்கூட அவருக்கு ஏற்படவில்லை. டலாயத்து, ஒருகால் வந்தவன் பகல் வேஷக்காரனே என்று சந்தே கித்தான். இல்லாவிட்டால் அவ்வளவு தைரியமாய் அப்படி யெல்லாம் ஒரு பிச்சைக்காரன் பேசுவானு? அவன் நினைத்தபடியே சிறிது நேரத்தில் விஷயம் வெளிப்பட்டு விட்டது. முன்சீப்பும் தம் பிழையை அறிந்து சிரித்து விட்டார். வேறு ஒன்றும் செய்ய இயலாத காரணத்தால் தம்முடைய முன்கோபத்தை நினைந்து தம்மைத் தாமே பரிகசித்துக் கொள்ள நேர்ந்தது போலும்.

அவருடைய ஆழ்ந்த அறிவு நல்ல காரியங்களைச் செய்யவே நாடியது. திருவிசைநல்லூர் மஹாமஹோ பாத்தியாய ராமசுப்பா சாஸ்திரிகளின் 'விஷ்ணு தத்துவ ரஹஸ்ய'த்திற்குக் கண்டனம் ஒன்றை எழுத, பிரம்மஸ்ரீ அப்பு சாஸ்திரிகளுக்கு அவர் பொருளுதவி செய்ததை

எல்லோரும் அறிந்திருப்பார்கள்.* விரும்பத்தகாத மதத் துவேஷம் என்று சிலர் இதை ஏளனம் செய்யலாம். உண்மையில் அப்படி இருக்குமானுல் சரியன்றுதான். ஆனுல் 'விஷ்ணு தத்துவ ரகஸ்ய'த்திலிருந்த விஷயங்களைக் கண்டபோது அப்புத்தகம் நல்ல எண்ணத்துடன் எழுதப் படவில்லையோ என்ற சந்தேகம் அவருக்கு மேலிட்ட தனுல்தான், அத்தகைய கண்டனம் ஒன்றை எழுதும்படி அவருடைய மனம் தூண்டியது. கவனித்துப் பார்த்தால், புத்திமான்கள்கூட மதச் சண்டைகளில் ஈடுபட்டிருந்த காலம் அது என்பது விளங்கும். இன்று நாம் பெற்றிருக்கும் பலவிதப் பொது வாழ்க்கையின் நல்ல அம்சங்களை அக் காலத்தில் எதிர்பார்ப்பதற்கு இடமில்லை. ஆனுல் கண்டனம் எழுதிவைப்பதற்கும் தைரியம் வேண்டும். வேங்கடராமையரை அவருக்கு வேண்டாதவருங்கூடத் தைரியசாலி என்று ஒப்புக்கொள்வார்கள்.

வேங்கடராமையர் சுய யோக்கியதையினுல் நீதி இலாகாவில் சேர்ந்து, சிறிய சம்பளத்தில் முதலில் வேலை பார்த்துவந்தார். எப்பொழுதும் அவர் வேலையில் ஊக்கமும், தப்புச் செய்தவர்களிடத்தில் மிகுந்த அருவருப்பும் உடையவர் என்பது சிறிய அந்தஸ்திலிருந்தே அவரிடம் தெரிந்தது. தஞ்சை ஜில்லா நீதி இலாகாவில் சிரஸ்தேதார் வேலை பார்க்க அவரை மேலதிகாரிகள் நியமித்தார்கள். அந்தக் காலத்து வெள்ளையர்கள் தங்கள் ஊழியர்களிடம் முக்கியமாக விரும்பியவை, வேலையில் நேர்மையும், காரியங் களில் சுறுசுறுப்புமேயாம். இவ்விரண்டு குணங்களும் அவரிடம் பரிபூர்ணமாக இருந்தமையால் ஜில்லா ஜட்ஜாக இருந்த மிஸ்டர் பர்னெல் என்பவர் அவரை மிகவும் பாராட்டி, மேல் உத்தியோகங்களுக்குச் சிபாரிசு செய்யத் தகுந்த நன்மதிப்பை அவருக்கு அளித்திருந்தார். அடுத்தாற்போல் வந்த பல ஜில்லா ஜட்ஜுகளும் அவரிடம் உயர்ந்த மதிப்பை வைத்துவந்தார்கள்.

தஞ்சையில் சிரஸ்தேதாராக இருந்த காலத்தில் அவர் வசித்த இடம் விண்ணுற்றங்கரை. அவர்

---

* நினைவு மஞ்சரி, பாகம் 1, பக். 125.

சிக்கனமாகக் குடித்தனம் செய்துவந்தார். மனைவியே சமையல் செய்வாள். மற்ற வீட்டுக் காரியங்களைக் கவனிக்க உதவியாக உறவினர்களில் மைத்துனனோ அல்லது மைத்துனியோ யாராவது ஒருவர் அவருடைய இல்லத்தில் இருப்பார். வீட்டில் சிறு குழந்தைகள் சாப்பிடும் பொழுது உள்ளங் கையைக் குழித்துக்கொண்டு நெய் அதிகம் வேண்டுமென்று கெஞ்சினால்கூட, நெய் தாராளமாய் விடமாட்டார்கள். அவருடைய மைத்துனி ஒருத்தி குழந்தைகளை ஏமாற்றி, தெளிந்த ரஸத்தை நெய்யென்று காட்டிக் கையில் வார்த்துவிடுவாளாம்! பாவம், குழந்தைகள்தாமே! முதலில் சிறிது சந்தேகம் கொண்டாலும், தங்களுக்கு நேர்ந்த நம்பிக்கைத் துரோகத்தை நினைத்து அதிக நாழிகை வருந்தமாட்டார்கள்.

சிரஸ்தேதார் நாளடைவில் முன்சீப்பாக நியமிக்கப்பட்டார். நியமிக்கப்பட்ட வருஷமும் தேதியும் தெரியவில்லை. ஆனால் இறப்பதற்குமுன் பத்து வருஷங்களாவது முன்சீப்பாக இருந்தார் என்று நிச்சயமாய்ச் சொல்லுகிறார்கள். முன்சீப் வேலையில் அவர் காட்டிய அசாதாரண வேகமும் தெளிவும் எங்கும் அவருக்கு நல்ல பெயரை உண்டாக்கின. பிற்காலத்தில் ஸர். டி. முத்துஸ்வாமி ஐயர் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாக ஆனகாலத்திலும் முன்சீப் வேலை பார்த்தவர்களில் முக்கியமாக வேங்கடராமையரை மிக்க கௌரவமாகவே மதித்துவந்தார்.

அவருடைய கச்சேரி என்றதும், வக்கீல்களுக்கு என்றும் இல்லாத பரபரப்பு உண்டாகிவிடும். ஏனென்றால், கால தாமதத்தை ஒருபொழுதும் அவர் பொறுக்கமாட்டார். போதாததற்குக் கச்சேரியில் உள்ள எல்லா ஜனங்கள் முன்னிலையிலும், கால தாமதம் செய்கிற வக்கீல்களை வெளிப்படையாகப் பரிகாஸம் செய்துவிடுவார். ஒரு சமயம் அவர் சீகாழியில் முன்சீப்பாக இருந்தபொழுது, அக்காலங்களில் பெயர்பெற்ற தஞ்சை வக்கீலாகிய எஸ். ஏ. சுவாமிநாதையர், அவர் கச்சேரியில் பிரஸன்னம் ஆகவேண்டியதாயிற்று; வக்கில் என்ற முறையில்தான். பிரபல வக்கீ

லானமையால் அவர், சாதாரணமாய்ச் சீகாழியில் நடக்கும் வழக்குகளுக்குக் காலே ரெயில் வண்டியில்தான் வந்து இறங்குவது வழக்கம். காலே ரெயில் $11\frac{1}{2}$-மணிக்குமேல் சீகாழியில் வந்து நிற்கும். கோர்ட்டோ சாதாரணமாய் 11-மணிக்கே துரிதமாகக் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கிவிடும். எஸ். ஏ. சுவாமிநாதையர் இரு காது களிலும் வைரக் கடுக்கன்களின் 'டால்' வீச, சட்டையில் தொங்கும் தங்கக் கடிகாரச் சங்கிலியுடன், படாடோபமான கோலத்தோடு வெகு நிதானமாகக் கோர்ட்டில் பிரஸன்னமானார். வந்துவிட்டது ஆத்திரம் முன்சீப்புக்கு. மேலும், வந்தவர் சட்டென்று வழக்கின் விஷயத்தை ஆரம்பிக்காமல் ஏதேதோ சுற்றிச் சுற்றிச் சொல்லத் தொடங்கவே, வெடுக்கென்று பின்வரும் மொழிகளைக் கோர்ட்டார் அவர்கள் கொட்டிவிட்டார்கள்: "ஐயா, இனிமேல் இந்தக் கச்சேரியில் சீக்கிரம் ஆஜர் ஆக வேண்டும். இவ்விடத்தில் உங்கள் வைரக் கடுக்கன்களின் டாலைக் கண்டாவது, தொந்தியில் ஊசலாடும் கடிகாரச் சங்கிலியைப் பார்த்தாவது மரியாதை காட்ட முடியாது. தெரிந்ததா?" என்றாராம். அன்று முதற்கொண்டு எஸ். ஏ. சுவாமிநாதையர் என்னும் அந்தப் பிரபல வக்கீல் தம் படாடோபங்களில் மோகத்தை விட்டு வேங்கடராமைய ருடைய கச்சேரிக்குச் சீக்கிரமாகவே வந்துவிடுவார் என்று பழைய காலத்து மனிதர்கள் சொல்லுவார்கள். வேங்கட ராமையருக்கு வாய்த் துடுக்கு என்பது உண்மை. ஆனால் வேலையில் அவருக்கு உள்ள ஊக்கமும், வேகமுமே கொடுஞ் சொற்களை அளவுக்குமேல் கூறும்படி அவரைத் தூண்டின. அக்காலத்தில் இவைகளைப் பொறுத்துக் கொண்டவர்களின் உயர்ந்த சுபாவமும் நமக்கு நன்றாக விளங்குகிறது.

கோர்ட்டிலும் அவருக்குமுன் சாட்சிக் கூண்டில் ஏறியவர்களுக்குச் சித்திரவதையாகவே இருக்கும். சாட்சிக் கூண்டில் பொய் சொல்லுவதற்குத்தான் சாதாரணமாகப் பலருக்குத் தைரியம் ஏற்படும். அதைக் கண்டவுடன் தாங்க முடியாத ஆவேசம் முன்சீப்புக்கு ஏற்பட்டுவிடும்.

'ஏது, இவர் வாயிலிருந்து தப்பினுல் போதும்' என்று தவறு செய்தவர்கள் நடுங்கி ஓடுவார்களாம்.

சோழசிங்கநல்லூரிலும், பிறகு சீகாழியிலும், கடைசிக் காலத்தில், மாயூரத்திலும் வேங்கடராமையர் அடுத்தடுத்து முன்சீப் வேலை பார்த்தார். நாற்பது வயசு ஆவதற்குள் நீர் ரோகம் அவருடைய தேக நிலையைச் சீர்குலையச் செய்தது. அவருடைய பொறுமையற்ற தன்மைக்கும் அந்நோயே காரணமென்பது கொஞ்சங்கூட மிகையாகாது. நீர் ரோகம் வைத்தியர்களால் தற்காலத்தில் சிறிதளவில் குணமாகிறது; இந்த நிலை அக்காலத்தில் இல்லை. ஆகையால், மேலும் மேலும் நோயாளியைச் சோர்வடையச் செய்து கொல்லும் வியாதியாக அது பரிணமித்தது.

## அத்தியாயம் 2

### பிறப்பும் வளர்ப்பும்

**'விளையும் பயிர் முளையிலே'**

வேங்கடராம ஐயருடைய புதல்வர் என் தந்தை கிருஷ்ணஸ்வாமி ஐயர். அவருடைய மூத்த சகோதரர் சுவாமிநாத ஐயர், அவரைவிடச் சுமார் இரண்டரை வயசு பெரியவர். அவர் பிறந்த 1861-ஆம் வருஷம் இந்திய சரித்திரத்தில் சிறந்தது. எத்தனையோ உயர்ந்த ஆன்மாக்கள் புவியில் தோன்றிய பெருமையை உடையது அவ்வருஷம். முக்கியமாக மஹாகவி ரவீந்திரநாத டாகுர் உதித்ததும் அவ்வாண்டிலேயே.

வேங்கடராமையரின் மூத்த மனைவியான சுந்தரி என்னும் பெண்மணிக்குப் பிறந்த குழந்தைகள் நால்வர். அந் நான்கு பேர்களும், லக்ஷணமாகவும் புத்திசாலிக ளாகவும் இருந்ததால், குழந்தைப் பருவத்திலேயே பல ருடைய மனத்தைக் கவர்ந்தனர். இரண்டாவது குமாரனுன கிருஷ்ணன், 1863-ஆம் வருஷம் ஜூன் 14-ஆம் தேதி இரவில் ரோஹிணி நக்ஷத்திரத்தில் மேஷ ராசியில் பிறந்தார். துறவறத்தின் ஆழ்ந்த நிலையில் நின்று, இந்திய சமயக் கொள்கைகளையும் வேதாந்த விளக்கங்களையும் தம் தெய்விக வாக்கின் வன்மையினுல் உலகமெங்கும் பரவச் செய்த சுவாமி விவேகானந்தர் அவதரித்த வருஷமும் அதுவேதான். மற்ருேர் ஒற்றுமையும் உண்டு. கண் களின் மேலிமை கனத்து, பார்வையில் பிறரை வசப் படுத்தும் தழற்பொறி ஒன்று வெளியாவதை இருமுகங் களிலும் பிற்காலங்களில் கண்டு சிலர் வெளிப்படையாகச் சொல்லியும் உள்ளார்கள்.

அவருடைய மாமன் சாமி ஐயருடைய இருப்பிட மான திருவிடைமருதூரில்தான் அவர் தாய் அவரை ஈன்ருள். ரோஹிணியில் பிறந்த பரமாத்மாவின் நினைவை

முன்னிட்டுக் கிருஷ்ணஸ்வாமி என்று அவருக்குப் பெயரிட்டார்கள். கம்ஸனைக் கொன்ற பரமாத்மாவின் அவதாரம் ரோஹிணியில் ஏற்பட்டதால், அந்த நக்ஷத்திரத்தில் பிறந்த ஆண் சிசு மாமனுக்குக் கேடு விளைவிக்கும் என்ற ஓர் ஐதிஹ்யம் நம்மவர்களிடம் உண்டு; அந்த நம்பிக்கையை உண்மையாக்கவே போலும், அவருடைய இரண்டாவது மாமன், அவர் பிறந்த பிறகு சிறிது காலத்தில் உயிர் நீத்தார்!

அவருக்கு அடுத்தபடி பிறந்த பிள்ளைக்கு மஹாலிங்கம் என்று பெயர். பார்க்கப் பார்க்கக் கண் கூசும் வண்ணம் அந்தக் குழந்தை தோன்றுவான். அவனுடைய தளதளப்பான மேனி, பொலிவுடன்கூடிய முகம், தேக அமைப்பு - இவை அனைத்தும் திருஷ்டி பட்டுப் போகும்படி பலர் கண்களைக் கவருமாம். கட்டுக் கட்டாய்த் திருநீறு அணிந்து வாசலில் அக்குழந்தை நிற்பதைப் பார்த்தவர்கள், 'ஜோதிர் மயம்!' என்று மத்தியார்ஜுனம் மஹாலிங்க மூர்த்தியின் திருநாமத்தையே வைத்து அவனைக் கூப்பிடுவார்கள். வெள்ளைக்காரத் துரை ஒருவன்-வேங்கடராமையருடைய பரம சிநேகிதன் - குதிரைச் சவாரி செய்துகொண்டு போகும் பொழுதெல்லாம் கண்ணுக்கு எட்டிய தூரத்திலிருந்தே அப்பிள்ளையின் உருவத்தைக் கவனித்துவிட்டு, துரிதமாய்ச் சமீபம் வந்து விளையாட்டுகள் காட்டிக் குழந்தைக்குத் தன்னிடம் பிரியம் உண்டாகும்படி செய்து வருவானும். மஹாலிங்கமும், அவனுக்கு இளையவனுகப் பிறந்த கோபாலனும் பரத சத்துருக்கினர்கள் போலத் தனியே சேர்ந்து விளையாடிக்கொண் டிருப்பதைப் பலர் பார்த்து, "ஏது, வேங்கடராமையருடைய நான்கு பிள்ளைகளும், ராமாயணக் கதையில் சொல்லியபடி ஜோடி ஜோடியாகவே குழந்தை முதற்கொண்டு காணப்படுகிருர்கள்" என்பார்கள். எந்தத் துர்ப்பாக்கியத்தின் பயனே அவ்விரண்டு அழகிய கடைப் பிள்ளைகளும் - அசுவினி 'தேவதைகள்' மாதிரி ஒளியிட்டுக்கொண் டிருந்தவர்கள் - திடீரென அடுத்து அடுத்து ஒன்பது வயசிற்குள் இறந்த மாயம் ஒருவருக்கும் புரியவில்லை. தந்தையின் மனம் வருத்தக் கடலில்

ஆழ்ந்தது ; நீர் ரோகமே அதன் அக்கரையாகவும் பிறகு தென்பட்டது.

மேலும் மஹாலிங்கத்தின் புத்தியைக் கண்டு அவனுடைய தகப்பனுருக்கு ஒரே பிரமை. குழந்தையின் வாய் வெறுமனே இருப்பது இல்லே. பளிச்சுப் பளிச் சென்று கேட்ட கேள்விகளுக்குப் பதில் அளித்தும், புதிய கேள்விகளேத் தாளுகக் கேட்டும் அவன் பிதாவின் மனத்தைக் கொள்ளே கொள்வான். ஒரு சமயம், வேங்கடராம ஐயரின் மாமனுன முன்சிப் மஹாலிங்கையர் தமக்குப் பிள்ளேக் குழந்தை இல்லாத குறையைத் தீர்த்துக்கொள்ள, தம் மருமகனிடம், "உன் மூன்ருவது பிள்ளேதான் மிகவும் புத்திசாலி. அவனே எனக்குத் தத்துப்பிள்ளேயாகக் கொடுப்பாயா?" என்று கேட்டார். பாவம், தசரதரிடம் விசுவாமித்திர மஹரிஷி, யாகத்திற்கு ராமனேக் கேட்ட விதம் இருந்ததாம் அவ்வார்த்தையைக் கேட்ட வேங்கடராமையருக்கு. 'இந்தப் பிள்ளேயையா என் மாமன் கேட்க வேண்டும்?' என்று அவரும் மனத்தினுள் கவலேயுற்ருர். ஆனுல், "சரி; பிள்ளேயாண்டானேயே சம்மதத்தைக் கேட்டு, அவன் இஷ்டப்பட்டால் ஸ்வீகாரம் செய்துகொள்ளுங்கள். எனக்கு ஆக்ஷேபம் இல்லே" என்ருர். இளேஞனே மெதுவாக நல்ல வார்த்தை சொல்லி மஹாலிங்கையர் தம் வீட்டுக்கு அழைத்துச்சென்று, தம் பெட்டியில் சேர்த்து வைத்திருந்த தங்க நாணயங்களேக் காண்பித்து, "பார், இவ்வெல்லாம் உனக்குத்தான் இனிச் சொந்தம்" என்று ஆசை காட்டினுர். உடனே அந்தச் சிறுவன் யோசிக்காமல், "எனக்கு என்னத்திற்கு உம்முடைய பணம்? எங்கப்பாதான் எனக்கு வேணும்; நான் போகிறேன்" என்று ஓட்டம் பிடித்தானும். ஓடிவந்த பிள்ளேயைப்பற்றிப் பெற்ற மனம் நினேத்ததைச் சொல்லவும் வேண்டுமா ?

வேங்கடராமையருடைய மனேவி, கோபாலனேப் பெற்ற பிறகு காலமானுள். பிள்ளேகளிடம் வேங்கடராமையருக்கு வாஞ்சை அதிகம். இருந்தாலும் இரண்டாவது கல்யாணம் செய்துகொண்டே தீரவேண்டுமென்று அவர் மனம் சொல்லியது. இரண்டாவது கல்யாணத்திற்கு உரிய

எல்லா ஏற்பாடுகளும் நடந்தன. திருவிசைநல்லூரிலிருந்து சுப்பலக்ஷ்மி என்ற பெண்ணை மறு விவாகம் செய்து கொண்டார். அவருக்கு வயசும் முப்பத்தைந்திற்கு அதிக மாக இராமையால் அவரிடம் அவ்விஷயத்தில் பலருக்கு அநுதாபம். ஆனால் மூத்தபிள்ளை சுவாமிநாதனுக்கு வயசு 12-க்கு மேல் ஆகியிருந்தது அப்பொழுது. படிப்பில் அவன் மிகவும் துடியாய் இருந்தான். புத்தியின் சக்தியோ கேட்க வேண்டியதில்லை. தான் பெரியவன் என்ற பாவனை வேறு அவனுக்கு அதிகம். தகப்பனாரும் அத்தன்மையை இளைஞ னிடம் உணர்ந்தார் என்றால், மற்றவர்களுக்குக் கேட்பா னேன்! எல்லோரும் மாட்டு வண்டிகளில் இரண்டாவது கல்யாணத்திற்காகப் புறப்பட்டவுடன், சாமாவை மட்டும் எங்கும் காணவில்லை. சிறுவனின் மனத்தில் ஏதோ ஒன்று மிகவும் வேதனை செய்தது. தன் அம்மா இருந்த ஸ்தானத் தில் இனி வேறு ஒருத்தியல்லவா இருப்பாள்? அவளையா தாயாக நினைப்பது? முடியவே முடியாது என்ற எண்ணம் தோன்றவே, தனிமையில் துக்கத்தை ஆற்றிக்கொள்ளக் கூட்டத்தின் சந்தடியில் மறைந்து வேறு இடத்திற்குச் சென்று விட்டான் சாமா. ஆனால் தகப்பனாருக்கு எப்படியோ சாமா மனத்தின் போராட்டம் தெரிந்தது. "சாமா வரட்டும். அவன் வண்டியில் ஏறிய பிறகே நான் காலை எடுத்து வைப்பேன்" என்று கூறி வாசலில் உட்கார்ந்து விட்டார். அவருடைய மாமா நல்ல வார்த்தைகளைச் சொல்லிச் சாமாவின் கோபத்தையும் துக்கத்தையும் போக்கி அழைத்து வந்தார். பெரியவரிடம் உள்ள மரியாதையும் பிதாவின் க்ஷேமமும் சேர்ந்தே, சாமாவின் மனம் மாறுவதற்குக் காரணமாயின.

'பொல்லாத பிராமணன்' என்றே வேங்கடராமை யரை, அவருடைய மூத்த தாரத்தின் உறவினர்கள் சொல்லு வார்கள். தொட்டிலில் தம் குழந்தை இல்லாமல் மைத்துனி யின் பெண்குழந்தை உறங்குவதைப் பார்த்தால்கூட அவரால் சகிக்க முடியாது. எதையோ சொல்லி அக் குழந்தையை உடனே அதைவிட்டு எடுக்கும்படி செய்து விடுவார். அதன் தாயின் மனம் இந்த வேற்றுமையை

எவ்விதம் பொறுத்துக் கொள்ளும்? பிறருக்கு நியாயம் வழங்கும் விற்பன்னர் தம் விஷயத்தில் தடுமாறுவது உலக இயல்பு அல்லவா?

இரண்டாவது மனைவியினிடம் முதலில் ஒரு பெண்ணும், அடுத்தாற்போல் இரண்டு பிள்ளைகளும் அவருக்குப் பிறந்தார்கள். மீனாக்ஷி சுந்தரம் என்ற நீண்ட பெயரைப் பெண்ணுக்கும், சந்திரசேகரன், ராமசந்திரன் என்ற பெயர்களைப் பிள்ளைகளுக்கும் சூட்டினர். தவறிப் போன இரண்டு பிள்ளைகளின் ஞாபகத்தை நினைந்து உருகாமல் இருப்பதற்கே அந்த இரண்டு பிள்ளைகளை மறுபடியும் கடவுள் அவரிடம் சேர்த்தார் போலும். பிறவி முதல் சந்திரசேகரனும் (சந்திரசூடனும்) மற்றவர்களைப் போல் இல்லாமல் மனத்தினுள் சதா எதையாவது நினைத்து உணர்ச்சிபெறும் மனப்பாங்கை உடையவராயிருந்தார். வயசாக ஆக அவரிடம் உயர்ந்த குணங்களும் விருத்தி அடைந்தன. மனவுறுதி பெற்றிருப்பது அக் குலத்தின் குணமாயினும், உணர்ச்சி வெள்ளமும் குலத்தின் ஒரு சின்னந்தான். கடைக்குட்டியான ராமசந்திரன் தந்தைக்கு ஏற்ற பிள்ளையாகவே வளர்ந்து சோபித்துவந்தார்.

சாமா பதின்மூன்று வயசு முடிவதற்குள்ளேயே 'மெட்றிக்' பரீக்ஷையில் மிகத் திறமையுடன் தேறிவிட்டார். அவரது கூரிய புத்தியையும், பொத்துக்கொள்ளும் ரோஷத்தையும் அறிந்தவர்கள் சிறுவனெனப் பாவித்துக்கூட அவரை நெருங்கப் பயப்படுவார்கள். அவரும் முதிர்ந்த வயசுடையவரைப் போலவே நடந்துகொள்வார். தமக்கும் அடுத்த தம்பிக்கும் வயசுக் கிரமத்தில் இரண்டே வருஷங்கள் வேற்றுமை இருப்பினும், அநேக ஆண்டுகள் பெரியவராகவே எவ்வகையிலும் தோன்றுவார்.

அவருக்கு இருந்த ரோஷத்தன்மை வீட்டிலுள்ள மாற்றாந்தாயையும் சிறிது துன்பத்திற்கு உள்ளாக்கியது. கணவருக்கு மூத்தமனைவியின் பிள்ளைகளிடம் மிகுந்த பிரேமை என்பதை அறிந்திருந்தும், சில சமயங்களில் சுருக்கென்று தைக்கும் சாமாவின் மொழிகளால் அவள் கஷ்டப்பட்டு மனம் சிதைந்துவிடுவாள்.

வீட்டில் ஓய்வு நேரங்களில் வேங்கடராம ஐயர் பல்லாங்குழி விளையாடுவது உண்டு. பிள்ளைகளுடனும், மனைவியுடனும், எல்லோருடனுமே சேர்ந்துகொண்டு விளையாடும் சந்தர்ப்பங்கள் பல நேரும். ஒரு நாள் சாமாவும் அவர் தம்பியும் ஒரு கட்சியிலும், கணவரும் மனைவியும் எதிர்க்கட்சியிலும் உட்கார்ந்துகொண்டு 'காசி' ஆட்டம் ஆடினார்கள். சாமா எதிர்க்குழிகளில் உள்ள சோழிகளின் எண்ணிக்கையைக் கவனிப்பதை அறிந்த அவர் இளைய தாய் சட்டென்று தம் கையால் குழிகளை மூடிக்கொண்டாள். அவ்விதம் செய்வது விளையாடும் முறையில் மிகவும் சகஜம். ஆனால் சாமாவின் வாய் வெடுக்கென்று, "ஆரம்பித்தாயா உன் தொழிலை!" என்று சொல்லிவிட்டது. இளைஞன் சொன்னது தவறு என்று வயசானவர் கண்டித்திருக்க வேண்டும்; அல்லது முழுவதையுமே கவனியாதவர்போலேனும் இருந்திருக்க வேண்டும். இரண்டும் செய்யாமல் பிள்ளை சொன்னதை ஆமோதித்தவர்போல், "சரியாய்ச் சொன்னாயடா!" என்று சபாஷ் வேறு போட்டார். அப்படியே சோழிகளை எறிந்துவிட்டு மிகுந்த மனத்தாங்கலுடன் இளைய தாய் தனிமையை நாடிவிட்டாள். அவளைச் சமாதானம் செய்யத் தந்தை ஒன்றும் செய்யவில்லை. பிள்ளைக்குத் தகப்பனாரிடம் இருந்த சலுகை அதிகம் என்பது இதிலிருந்து விளங்கவில்லையா? சுவாமிநாத ஐயரும் தம் தந்தையிடம் கொண்டிருந்த அன்பு கரைகடந்ததென்று சொல்லவேண்டும். தங்கள் பிதா ஒரு தனிப்பிரகிருதி என்றுகூடப் பிற்காலங்களில் அவர் பெருமையாகப் பேசிக்கொள்வார்.

ஏழு வயசு முடியும் வரையில் கிருஷ்ணஸ்வாமி திருவிடைமருதூரில் மாமனுடைய வீட்டிலேயே வளர்ந்து வந்தார். சிறுவன் பார்ப்பதற்கு மிகவும் தோற்றப் பொலிவோடு இருப்பான். தனிப்பிரகாசம் வேறு முகத்தில் துலங்கும். உடம்பும் வலிவுபெற்று, ஆரோக்கியத்தின் சின்னங்கள் அவருடைய வேடிக்கை விளையாட்டிலும் வெளியாயின. அவருடைய இடது காதின் மேல்தண்டி

லிருந்து பச்சைக்கல் ஒன்று ஆடிக்கொண்டு முகத்திற்கு அழகு செய்யும். மராட்டியக் குடும்பங்களில் ஆண் குழந்தைகளுக்கு இவ்விதம் ஆபரணங்கள் அணிவது பழக்கமானதால், அதையொட்டிப் பச்சை மணியை அவருக்கு அணியவைத்திருக்கலாம்.

சிறு வயசில் விஷமம் செய்வதே அவருக்குத் தொழில். மாமன்மார்களுடன் எப்போதும் குத்துச்சண்டை போடும் படி உடம்பில் துறு துறு என்ற ஒரு வேகம் இருக்கும். அவருடைய மாமாக்களில் இளையவரான கிருஷ்ண பாகவதர் நல்ல பலசாலி. அவருடன் வலுச் சண்டைக்குச் சென்று அவரைக் கீழே தள்ளிக் குத்தி விளையாடுவார். வயசாகியும் அவர் உடம்பு மஸ்தாகவும், சரியான அளவு சதைப்பற்று உடையதாகவும் அமைந்திருந்தது. வெகு நாட்கள் வரையில் அவருடைய கன்னங்களின் கதுப்பை யும், மினுமினுப்பான தேக காந்தியையும் கண்டவர்கள், அவரை ருமானி ஜாதி மாம்பழத்திற்கு ஒப்பிடுவார்கள். அவருடன் தஞ்சைப் பள்ளியில் படித்த சிவஸ்வாமி (ஸர். சிவஸ்வாமி ஐயர்) தம் சிநேகிதருக்கு அந்நாட்களில் இருந்த தேகக் கட்டையும் பலத்தையும் மிகவும் வியந்து, அவரது தசை பொருந்திய புயங்களில் பிறர் எங்காவது விரல்களை வைத்து அழுத்திப்பார்த்தாலும் சிறிதும் குழி விழாமல் கல்லைப்போல் இருக்கும் என்று பிற்காலத்தில் ஞாபகப்படுத்தியுள்ளார்.

மேலும் சிறுவனிடம் சுபாவத்தில் தைரியம் அதிகம். வேங்கடராமையர் சிரஸ்தேதாராக இருக்கும் காலத்தில் ஆபீசில் ஒரு நாள் ஆள் ஒருவன் ஓடிவந்து, குழந்தை கிருஷ்ணன் சமீபத்தில் இருந்த கோவில் மதிலின் மீது ஏறிவிட்டதாகவும், கீழே இறங்கமாட்டேன் என்று பிடி வாதம் செய்வதாகவும் பயத்துடன் முறையிட்டான். வேங்கடராமையருக்கு ஒன்றும் ஓடவில்லை. கால் நடையில் அவ்விடத்திற்குப் போகையிலேயே மனத்தினுள் யோசித் தார்: "நாம் போவதற்குள் கீழே விழுந்திருந்தால்! அல்லது இதுவரையில் ஜாக்கிரதையாக இருந்தவன், திடீரென்று நம்மைக் கண்டவுடன் கீழே இறங்க

முயன்றால் என்ன செய்வது? விழுந்துவிட்டால் கை கால்கள் ஒடிந்துவிடுமே! பகவானே, காப்பாற்று குழந்தையை!" என்று கடவுளை மனமாரப் பிரார்த்தித்துக் கொண்டே கோவில் மதிற் சமீபம் சென்றார்.

கோவில் மதில்கள் உயரமானவை. மேலிருந்து கீழே விழுந்தால் கை கால்கள் முறிந்து ஆயுட்காலம் வரையில் முடவனாக இருக்கவேண்டியதுதான். பிள்ளை மதில்மேல் நடந்துகொண்டு கீழேயுள்ள மற்றச் சிறுவர்களுக்கு விளையாட்டுக் காட்டிக்கொண் டிருந்ததைப் பார்த்தார் தகப்பனார். மெதுவாக அவர், "அப்பா கிருஷ்ணா, கீழே நீயாக இறங்காதே. யாரையாவது நான் கூப்பிடுகிறேன், உன்னைக் கீழே இறக்கிவிட" என்றார். குழந்தை வேடிக்கைச் சுபாவம் உள்ளவனாயினும், தன் தந்தையின் முன்னிலையில் அமைதியாகவே நடந்து கொள்வதில் மிகவும் கவனமாயிருப்பான். ஆகையால் பரபரப்பினால், புத்தியின் நிலையை இழக்காமல், மெல்ல மெல்லச் சரியான இடங்களில் காலை வைத்துப் பிடித்துக்கொண்டு இறங்கிவிட்டான். பூமியில் அவன் காலை ஊன்றின பின்பே தகப்பனாருக்கு உயிர் வந்தது. மதில்மேல் ஏறிய தைரியம் ஒரு புறம் இருக்க, இறங்குங்கால் நிதானத்தை இழக்காத மனநிலையும் கவனிக்க வேண்டிய அம்சம். அவை இரண்டும் சரியான அளவில் பெருகி, வாழ்க்கையிலும் ஒப்பற்ற குணங்களாக விளங்குவதுதான் விசேஷம்.

அவர் திருவிடைமருதூரில் இருந்த சிறு பள்ளிக்கூடம் ஒன்றில் ஆரம்பக் கல்வி கற்றுக்கொண்டார். சூடிகையான மாணவன் என்ற அபிப்பிராயம் உபாத்தியாயருக்கு ஏற்பட்டதோ என்னவோ தெரியாது. ஒன்றுமட்டும் பிற்காலத்தில் அவரே குறிப்பிட்டது உண்டு. அவரிடம் வாஞ்சையுள்ள ஆசிரியர், அடிக்கடி அவிழ்ந்த அவருடைய தலைக் கேசங்களைத் தட்டி முடிந்துவிடுவாராம். அம்மாதிரி முடிந்து விடும்பொழுது அவர் வாயும் சும்மா இராமல், 'நல்ல பிள்ளைகளுக்கு உபாத்தியாயர்களும் பணிவிடை செய்வார்கள்' என்று கூறுமாம். ஆனால் தம்

மிடம் அவ்வளவு பாசம் வைத்த ஆசிரியரிடம் அதிககாலம் இருக்கமுடியவில்லை. மேல் வகுப்புப் படிப்பிற்காகப் பெற்ருேர்கள் இருக்குமிடமான தஞ்சைக்கே வெகு சீக்கிரத்தில் அவர் செல்லும்படி நேர்ந்தது.

அக்காலத்தில் தஞ்சையில் டாக்டர் மார்ஷ் என்ற வெள்ளையர் எஸ். பி. ஜி. பள்ளிக்கூடத்தில் தலைமை வகித்தார். அவர் நல்லவர் ; மாணுக்கர்களிடம் மிகுந்த அன்பு அவருக்கு உண்டு. ஸர் சிவஸ்வாமி ஐயர் அங்கே தான் முதல்முதலில் எழுத்துப்பயிற்சி ஆரம்பித்தார். என் தந்தையும் அங்கே வர, அவ்விருவர்களும் பால்ய சிநேகிதர்கள் ஆனுர்கள். எல்லாவித நட்பையும்விட சிறு வயசில் பள்ளிக்கூடப் பழக்கமே வாழ்நாளில் மிகுந்த இன்ப உணர்ச்சிகளைக் கிளப்பும். அந்த முறையில் சிவஸ்வாமி ஐயரும் அக்காலத்தில் கிருஷ்ணஸ்வாமியிடம் தமக்குள்ள அன்பை மிகவும் அழகாக எடுத்துச் சொல்வார். “கிருஷ்ணஸ்வாமிக்காகவே, கும்பகோணத்திற்கும் பிறகு சென்னைக்கும் நான் படிக்கச் சென்றேன்” என்பார்.

1877-ஆம் வருஷம் மெட்றிகுலேஷன் வகுப்புக்காகக் கிருஷ்ணஸ்வாமி கும்பகோணம் சென்ருர். அவருடைய சகோதரர் ஏற்கனவே கும்பகோணம் காலேஜில் வாசித்து வந்தார். ஒரு குடித்தனமாக இருவரும் இருப்பதன் நிமித்தம் பெற்ருேர்கள் தம்பியைத் தமையனுடன் இருக்கச் செய்தார்கள். ஆனுல் தஞ்சையை விடுவதற்கு இளைஞன் சிவஸ்வாமிக்கு வேறு காரணம் ஒன்றும் இல்லை. சிநேகிதன் செல்வது ஒன்றுதான் முக்கியமான தூண்டுதலாக இருந்தது. நண்பரும் சும்மா இராமல் சிவஸ்வாமிக்குக் கும்பகோணம் வந்துவிடும்படி கடிதங்கள் எழுதிவிடுவார். சிவஸ்வாமி ஐயருடைய தந்தையும் அதற்குச் சம்மதித்ததுதான், இளைஞர்கள் இருவரும் பிரியாமல் கலாசாலையில் சேர்ந்து வாழ்ந்து மணம் பொருந்திய நட்பை வளர்த்ததற்கும் காரணம். மறுவருஷம் சுவாமிநாதன் சட்ட கலாசாலைக்காகச் சென்னைக்கு வரவே, எப். ஏ. வகுப்பில் இருந்த கிருஷ்ணஸ்வாமியும் அண்ணனுடன் சென்னைக்குப் புறப்பட்டார்.

கும்பகோணத்தை, அதிலும் அங்குள்ள அழகிய கலா சாலையை விட்டுப் பிரிவது என்பது அக்காலத்தில் உயர்ந்த கருத்தாக எண்ணப்படமாட்டாது. புகழ்பெற்ற போர்டரும், கோபாலராவும், சுந்தர ராவும், உயர் கணிதத்தில் மேதாவியான ஆர். வி. ஸ்ரீநிவாஸ ஐயரும், வேறு பல அரிய உபாத்தியாயர்களும் கும்பகோணம் கலாசாலையில் அந்த நாட்களில் வேலை பார்த்தார்கள். அவர்களையும், அவர்களுடைய நல்ல பழக்கத்தையும் அறவே விட்டுவிட்டுச் சென்னை ராஜதானிக் கலாசாலைக்குச் செல்வது, புத்திசாலிகளும், பகுத்தறிவு படைத்தவர்களும் செய்யும் காரியம் அல்ல. ஆனாலும் இரண்டு பேர்களும் தனித்தனியே இரண்டு ஊர்களில் தனிக்குடித்தனம் செய்வதானால் செலவு அதிகமாகும் என்ற காரணமே, கிருஷ்ணஸ்வாமி அவருடைய சகோதரருடனேயே இருக்க நேர்ந்தது. சிவஸ்வாமி ஐயருடைய தகப்பனுரோவெனில் தஞ்சையில் வக்கீல் உத்தியோகம் செய்து செல்வம் படைத்தவரானதால் பிள்ளையின் வேண்டுகோளை மறுத்துச் சொல்லாமல் தோழன் செல்லும் இடத்தை நாடுவதற்கு அநுமதி கொடுத்தார். சிவஸ்வாமி ஐயர் சிறுவயசில் காட்டிய இக்குணம் அவருடைய நட்பின் உயர்வை வெளியிடுகிறது. அதிகச் செலவையும் கவனியாமல், கும்பகோணம் கலாசாலையில் பி. ஏ. படிப்பை விடுவதையும் பொருட்படுத்தாமல், சென்னையில் மேற் படிப்பைத் தொடங்கினுர் சிவஸ்வாமி. இக்காலத்தில் இருப்பதுபோல் ஹோட்டல்களும், மாணுக்கர் இல்லங்களும் அக்காலத்தில் இல்லை என்பதை நினைத்துப் பார்த்தால் அசௌகரியங்கள் பலவற்றையும் பொறுத்து, சிநேகிதனுடன் சேர்ந்து இருப்பது ஒன்றையே பெரும் பயனுக எண்ணிச் சிவஸ்வாமி சென்ன பட்டணத்திற்கு வந்தார் என்பது விளங்கும். அரிய நட்பின் ஆற்றல் இவ்வாறுதான் சிறிய செயல்களிலும் வெளியாகும்.

'மெட்றிக்' பரீக்ஷையில், ராஜதானியில் முதல் வகுப்பில் பத்தாவதாகத் தேர்ச்சி பெற்றவர் கிருஷ்ணஸ்வாமி. சிவஸ்வாமி அதே வகுப்பில் 42-ஆவதாகத்

தேர்ச்சி பெற்ருர். சிவஸ்வாமி ஐயருடைய மதிப்பில் நண்பர் ஏறிவிட்டார். ஏற்கனவே நண்டாரிடம் அவருக்கு மோகம் உண்டு. கிருஷ்ணஸ்வாமியின் பேச்சின் வேகத்திலும், உறுதியான தன்னம்பிக்கையிலும் அவருக்கு இருந்த பிரமை சாமான்யமல்ல. தமக்கு வடமொழிப் பாடம் வீட்டில் சொல்லிவந்த திருவாலங்காட்டு ராமஸ்வாமி சாஸ்திரிகளிடம் அடிக்கடி தம் சிநேகிதருடைய உயர்வைப் பற்றிச் சொல்லி இருந்தார். அவர் ஒரு சமயம் தம் மூத்த பெண்ணைக் கிருஷ்ணஸ்வாமிக்கே கொடுப்பதாகப் பெரியோர்கள் யோசித்திருப்பதை வெளியிட்டு, "உன்னுடைய அபிப்பிராயம் என்ன?" என்ருர். சிஷ்யர் சந்தோஷம் தாங்காமல் தம் நண்பரின் குணங்களை மறுமுறையும் எடுத்துக்கூறி, "இவனைவிட உயர்ந்த வரன் கிடைப்பது துர்லபம்" என்று சொன்னுர்.

கலாசாலையினுள் புகுந்த வருஷமே கிருஷ்ணஸ்வாமிக்குக் கல்யாணம் ஆயிற்று. திருவாலங்காட்டு வைத்தண்ணுவின் தௌகித்திரியும், ராமஸ்வாமி சாஸ்திரிகளின் புத்திரியுமான ஸ்ரீமதி வாலாம்பாளைக் கல்யாணம் செய்வித்தார்கள். தங்கத்தை உருக்கி வார்த்திருந்தது போன்ற தோற்றம் அளிக்கும் மாப்பிள்ளையின் பக்கத்தில், கறுத்துத் தலைமயிர் கொட்டியிருந்த பெண்ணின் வடிவத்தைப் பார்த்தவர்களுக்கு மனத்தில் சற்று வேதனை உண்டாயிற்று. உறவினர்களில் வயசு நிறைந்த மாது ஒருத்தி வேங்கடராமையரிடம் வந்து, "எதற்காக இவ்வளவு சாமான்ய ரூபமுடைய நாட்டுப் பெண்களைப் பொறுக்கினீர்கள்? நீங்கள் செய்வது பிள்ளைகளுக்குத் துரோகந்தான்" என்று வாய்விட்டுச் சொன்னதுதான் தாமதம், ரேழி நடையில் உலாவிக்கொண் டிருந்தவர் சட்டென்று திரும்பி, "இந்தா அத்தை, என் நாட்டுப் பெண்கள் இடுப்பில் குடமெடுத்துக் காவேரிக்குச் செல்லுகையில், தெருத் திண்ணைகளில் உள்ள வேலையில்லாத ஊர்த்தடியன்கள் பார்க்கவேண்டுமென்ற விருப்பம் எனக்கு இல்லை" என்ருர். தம் பிள்ளைகள் ஊர்த்தடியன்கள் அல்லவே என்ற ஞாபகம் அப் பெரியாருக்கு இல்லைபோலும்.

ஆனால் வேறு சிலர், "எதற்காக உத்தியோகஸ்தர்களின் வீட்டுப் பெண்ணைக் கல்யாணம் செய்யாமல், இம்மாதிரி பண்டிதருடைய புதல்வியைத் தேடினீர்கள்?" என்று அவரைக் கேட்கவே, "உத்தியோகஸ்தர்களின் அருமையையும் பெருமையையும் நான் அறிவேன். எங்கே உண்மையான கௌரவம் இருக்கிறதோ, அவ்விடத்தில் தான் எனக்குச் சம்பந்தம் செய்துகொள்வதில் ஆசை"* என்று கடுமையாகப் பதிலுரைத்து விட்டார். அவருடைய மூத்தபிள்ளைக்குத் தம் சொந்த மாமனான முன்சீப் மஹாலிங்கையருடைய மூன்றாவது பெண்ணை விவாகம் செய்வித்திருந்தார். உத்தியோகஸ்தர் வீட்டுப் பெண் அல்லவா அவள்? அம்மாதிரி கல்யாணத்தையும் செய்து பார்த்தாகிவிட்டதே!

உண்மையில் தம் ஆசிரியரான ராமஸ்வாமி சாஸ்திரிகளைப்பற்றி இன்று நினைத்தாலும் சிவஸ்வாமி ஐயர் பெருமையுடன், "மிகுந்த அடக்கமும் கௌரவமும் படைத்தவர்" என்று குறிப்பாகச் சொல்லுவார். அவர் தம் பெண்ணுக்காக அதிகம் அலைந்து வரன் தேடவில்லை. எல்லாம் அவருடைய மாமனரான வைத்தண்ணாவின் முயற்சியேதான். வைத்தண்ணா எத்தனையோ ஜாதகங்களைச் சீராக ஆராய்ந்துவிட்டு, கிருஷ்ணஸ்வாமியின் ஜாதகமே பாக்கியமானது என்று பொறுக்கி இருந்தார். நேரிலும் அவர் வேங்கடராமையரிடம், "ஹரி ஹீ, என் பேத்தியின் ஜாதகம் பிரமாதமானது. கட்டினவன் பாடு யோகம். ஆனால் 42-வயசில் அவளுக்குக் கண்டம் ஒன்று ஏற்படும். யார் கண்டார்கள் அந்த வயசை இப்பொழுது? மற்றப்படி உயர்ந்த ஜாதகம். ஆகையால், கல்யாணம் பண்ணிக் கொள்ளுகிறீர்களா உங்கள் பிள்ளைக்கு?" என்றாராம். திருவிடைமருதூரில் மைத்துனன் வீட்டு வாசலில் உட்கார்ந்திருந்த வேங்கடராமையரிடமே வைத்தண்ணா முதலில் சந்தித்துப் பேசினார். அவரும் ஜாதகத்தில் நம்பிக்கையுடையவராய், குறை

---

*நினைவு மஞ்சரி, பாகம் 1, பக்கம் 126.

கூறக்கூடிய ரூபத்தையும் கவனியாமல் அப்பெண்ணைத் தம் பிள்ளைக்கு மணம் செய்வித்தார்.

திருவாலங்காட்டில் நடந்த கல்யாணத்திற்குச் சிவஸ்வாமியும் சென்றிருந்து நாலு நாட்கள் முழுவதும் அங்கேயே இருந்து நடத்திவைத்து ஊர் திரும்பினார்.

'அம்மங்கா'வுக்குக் கல்யாணம் என்று திருவாலங் காட்டு அக்கிரகார வீட்டுக்காரர்கள் மிகவும் சந்தோஷப் பட்டார்கள். வாலாம்பாளை 'அம்மங்கா' என்றால்தான் ஊர் முழுவதும் அறியும். பண்டிதருடைய பெண் நல்ல ஆசாரம் உடையவளா யிருந்ததில் மாமனாருக்கு மிகவும் திருப்தி. அவர் உயிருடன் இருந்த காலத்தில் பூஜைக்கு நைவேத்தியங்கூட அவளே எடுத்து வரவேண்டும் என்று வீட்டில் ஆக்ஞை இடுவாராம். நாட்டுப் பெண்ணும் மிகவும் பரிசுத்தமான மனத்துடன் வீட்டுக் காரியங்களைக் கவனிப்பதும், பெரியவர்களின் சுச்ருஷைகளில் ஈடுபடு வதுமாக இருந்தாள். ஆனால் அவளுக்குத் தன்னைப்பற்றிய குறை ஏதேனும் மனத்தில் இருந்துகொண்டே இருக்கும். வாழ்க்கை அநுபவங்கள் ஆரம்பித்த பின்பும், கணவர் பொருள் சம்பாதித்துப் பாக்கியங்களுக்கு அதிபதியாகிய நாட்களிலும், போகங்களில் பற்றில்லாமலே அவள் வாழ்ந்து வந்தாள்.

## அத்தியாயம் 3

### மேற்படிப்பும் தொழிற் பழக்கமும்

"முயற்சி திருவினை ஆக்கும்"

—குறள்.

**1877**-ஆம் வருஷத்தின் நடுவிலோ அல்லது 1878-ஆம் வருஷத் தொடக்கத்திலோ கல்யாணம் நடந்தது. அப்பொழுது, கிருஷ்ணஸ்வாமி மிகவும் சிறுவர்தாம். காலேஜ் படிப்பு ஆரம்பமாகும் சமயம் கல்யாணம் ஆவது இக்காலங்களில் அவ்வளவாக இல்லை. இருந்தாலும் அக் காலத்து வழக்கத்தைப் பார்க்கும்போது அதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. மேலும், அவருடைய மூத்த சகோதரருக்கு, பதினொரு வயசிலேயே விவாகம் நடந்துவிட்டது. தம்பிக்குக் கல்யாணம் ஆனது, அதைவிட விவரம் தெரிந்த வயசில் என்றே கூறவேண்டும். சீக்கிரம் கல்யாணமானாலும் மனைவியுடன் சேர்ந்து வாழ்க்கை நடத்தத் தொடங்கியது, பின்னும் நான்கு வருஷங்கள் கழித்தே தான். ஆதலால் அவருடைய இல்லற வாழ்க்கையின் வரலாறு 'குழந்தைக் கல்யாணம்' என்ற ஏளனத்திற்கு இடமாகாதபடியே இருந்தது.

கும்பகோணம் காலேஜில் கிருஷ்ணஸ்வாமியும் சிவஸ்வாமியும் மாணாக்கர்களாய் எப். ஏ. வகுப்பில் சேர்ந்து வாசித்தார்கள். போர்ட்டர் என்ற ஆங்கிலேயர் அக் கலாசாலைத் தலைவராக இருந்த சமயம் அது. ஆனால் இவர்கள் கலாசாலையில் சேர்ந்த மூன்று மாசங்களுக்குள் போர்ட்டர் சீமைக்குப் பிரயாணமானார். அவர் அம்மூன்று மாசங்களில் எப். ஏ. வகுப்புக்குக் கணக்குப் பாடம் சொல்லிக்கொடுத்தார். எப்பொழுதுமே சிறந்த முறையில் பாடம் சொல்லுவாராம். தென்னிந்தியாவில் அவருக்கு ஏற்பட்டிருந்த பெரும் கியாதி, வெள்ளைக்காரர்களில் டாக்டர் மில்லருக்குத்தான் பிறகு ஏற்பட்டது.

அங்கிருந்த, அநுபவம் வாய்ந்த மற்ற உபாத்தியாயர் களில் சுந்தரராவ் என்பவர் புகழ் பெற்றவர். அடிக்கடி 'அசட்டுக் கழுதை' என்று ஆங்கிலத்தில் பையன்களைத் திட்டுவது அவர் வழக்கமாம். பையன்களுக்கு இதிலெல் லாம் ஒரு வேடிக்கை. கிருஷ்ணஸ்வாமியும் சிவஸ்வாமியும் பையன்கள் கூடிச் செய்யும் வேண்டாத விளையாட் டொன்றிலும்சேருவதில்லை. இருவரும் கலாசாலைப் பாடம் முடிந்தவுடன், சாயங்காலங்களில் சேர்ந்தே கால் நடை யாக வீடு திரும்புவது வழக்கம். வரும் வழியிலே சிநேகிதன் வீட்டில் தங்கிச் சற்றுச் சம்பாஷணை செய்தபிறகுதான் சிவஸ்வாமி தம் வீட்டிற்குச் செல்வார்.

போர்ட்டர் சென்ற பிற்பாடு, அவர் இடத்தில், பிரசித்திபெற்ற பூண்டி அரங்கநாத முதலியார் என்னும் அறிஞர் கலாசாலைத் தலைமையை வகித்தார். அவர் ஆங்கிலத்தில் வெகு அழகாகப் பேசுவார். காதில் அவருடைய ஆங்கிலமொழிகள் விழும்பொழுது இழு மென்று சொற்களுக்கு இனிமை ஒன்று ஏற்படும். "கண்ணை மூடிக்கொண்டால் வெள்ளைக்காரன் ஒரு வன்தான் எதிரில் சுத்தமாய்ப் பேசுகிறுனே என்று தோன்றும்" என்பார் சிவஸ்வாமி ஐயர். இன்னும், சாது சேஷையரும், பி. ஹநுமந்தராயரும் அங்கே பிரபல ஆசிரியர்களாக விளங்கினுர்கள். ஒவ்வொருவருக்கும் ஆங்கிலம் பேசும்பொழுது சிற்சில சொற்கள் அடிக்கடி வார்த்தைகளில் கலந்து வருமாம். அந்தச் சொற்களை ஞாபகப்படுத்திக் கொண்டு அவர்களைப்பற்றிக் கலாசாலை மாணுக்கர்கள் பரிஹாஸம் செய்வது வழக்கம்.

எப். ஏ. யில் இரண்டாவது வருஷப் படிப்பிற்குக் கிருஷ்ணஸ்வாமி சென்னை வந்து சேர்ந்த விவரம் ஏற்கனவே அறிந்தது. சென்னை ராஜதானிக் கலாசாலை அக்காலத்தில் மிகவும் பிரசித்தமானது. அரச குமாரர் களும், ஜமீன்தார் வாரிசுகளும் படிக்கும் இடம் என்றுகூடப் பெருமையாகச் சிலர் அதைச் சொல் வார்கள். உண்மையில் இந்த மாகாணத்திலுள்ள பல பிரபல மனிதர்கள் அந்தக் கலாசாலையில் படித்து வெளி

வந்ததாகவே அறிகிறோம். அதனால் கலாசாலைக்குப் பெருமை இருப்பது ஓரளவு நியாயந்தான்.

எப். ஏ. பரீக்ஷையில் முதல் வகுப்பில் நான்காவதாக என் தந்தையும், இருபத்தெட்டாவதாகச் சிவஸ்வாமி ஐயரும் தேர்ச்சி பெற்றார்கள். எல்பின்ஸ்டன் உபகார தனத்தை (படிப்புச் செலவுத் தொகையை)க் கிருஷ்ண ஸ்வாமி சம்மானமாகப் பெற்றார். ஒரு வருஷம் நடுவில் பிரிந்திருந்த சிவஸ்வாமி ஐயரும் அவ்வருஷமே சென்னைக்கு வந்து நண்பருடன் பி. ஏ. வகுப்பில் சேர்ந்து ராஜதானிக் கலாசாலையில் படிக்க ஆரம் பித்தார். அக்காலத்தில் எட்வர்ட் தாம்ஸன் என்பவர் ராஜதானிக் கலாசாலைத் தலைவர். டாக்டர் டங்கன் என்னும் அறிஞர் தத்துவ சாஸ்திரப் பாட போதகர். கிருஷ்ணஸ்வாமி அவருடைய முக்கிய மாணவர்களில் ஒருவர். அவ்வருஷம் முதற்கொண்டு சேர்ந்தே இருந்த நண்பர்கள் பிறகு வாழ்க்கைத் துறையிலும் சிறிதுகாலம் வரையில் பிரியவே இல்லை. எத்தனையோ உயர்ந்த உபாத் தியாயர்கள் அவர்களுக்கு முறையே பாடங்களைக் கற்பித் தார்கள். பி. ஏ. பரீக்ஷையில் சிவஸ்வாமி முதல் வகுப்பில் இரண்டாவதாகவும், அவர் நண்பர் இரண்டாவது வகுப்பில் இரண்டாவதாகவும் தேர்ச்சி பெற்றார்கள். அவ்வருஷம் பி. ஏ. பரீக்ஷையில் முதல் வகுப்பில் இரண்டு பிள்ளைகளும், இரண்டாவது வகுப்பில் இரண்டு பிள்ளைகளும் ராஜ தானியில் தேர்ச்சி பெற்றதாகத் தெரிகிறது. ஆகையால் இரண்டாவது வகுப்பில் கிருஷ்ணஸ்வாமி தேர்ச்சி பெற்ற தாக இருப்பினும் ராஜதானியில் நான்காமவராக இருந் தார் என்றே தெரியவருகிறது. மேலும் வடமொழியிலும், தத்துவ சாஸ்திரத்திலும் கலாசாலையில் முதன்மையாக இருந்ததற்காகப் பரிசுகள் அவருக்குக் கொடுக்கப்பட்டன. இருந்தாலும் அவர் கால் சறுக்கிவிட்டது என்றே சொல்ல வேண்டும். ஏனென்றால் இதுவரையிலும் படிப்பில் அவர் அநேகமாகத் தம் சிநேகிதருக்கு மேலேயே இருந்தார்.

1882–ஆம் வருஷம் சுவாமிநாத ஐயர் வக்கீல் தொழில் செய்வதற்காகத் தஞ்சைக்குப் புறப்படவும், மயிலாப்பூர்க்

குடித்தனத்தைக் கலக்க வேண்டியதாயிற்று. தமையனார் சென்னையை விட்டபிறகு தம்பி 'பலாத்தோப்பி'ல் ஒரு சிறு வீட்டை எடுத்துக்கொண்டு, தம் ஒன்று விட்ட அத்தையான வாலாம்பாளையும், அவளுடைய குமாரரான வலங்கைமான் ராமஸ்வாமியையும் தம்முடன் குடித்தனத் திற்குத் துணையாக அழைத்து வந்திருந்தார். உலக அநுபவம் இல்லாத மனைவி வீட்டுக்கு வந்த சமயம். வயசில் பெரியவளான ஒருத்தி அவர்களுடன் வீட்டில் இருப்பது இளைஞர்களுக்கு உதவியாக இருந்தது.

சிறுவர் ராமஸ்வாமி மிகவும் பரபரப்பும் புத்திநுட்ப மும் உடையவர். சதா உறவினருடைய அன்பிற்குப் பாத் திரமாயும் இருந்தார். எவ்வளவோ வித நட்பின் அநுபவங் களையும் வாழ்க்கையின் சிறுமைகளையும் அக்காலத்தில் என் தந்தையின் அந்தரங்கமான சொற்களினால் அறிந்தவர் அவர். பிற்காலத்தில் அவருக்கு அத்தான் ராமஸ்வாமி என்ற பெயரை வைத்து அழைப்பது எங்கள் குடும்பத்தில் வழக்கமாகிவிட்டது. உறவினரின் அந்தரங்கத்தில் தாம் பங்கு கொண்டதோடல்லாமல், அவருடைய அரிய குணங் களில் பலவற்றையும் அவர் தம்முடையனவாக்கிக் கொண் டார். சிறு வயசுப் பழக்கம் வீண் போகவில்லை. பிற்காலத் தில் சாமான்ய ஸப் - ரிஜிஸ்தரார் உத்தியோகத்தில் வேலை பார்த்தாலும், பெரிய பதவியிலுள்ள ஒருவர் கடைப்பிடிக்க வேண்டிய தளராத ஒழுக்கமும், பயமற்ற சுபாவமும் அவரிடம் குடிகொண்டிருந்தன. பேராசைப்பட்டு ஒரு காசுகூட வாங்காமலும், எத்தனையோ விதச் சிக்கல் களினுள் அகப்பட்டுக் கொள்ளாமலும் வாழ்க்கைத் துறையில் மானியாக வாழ்ந்து மேன்மை அடைந்தவர் அவர். சிறு பிராயத்தில் காட்டிய அதே உத்ஸாகமும், நுண்ணிய அறிவும் கடைசி வரையிலும் அவரிடம் சோபித்தன.

எத்தனை விதங்களில் என் தந்தையின் மனத்தினுள் அடங்கிய கருத்துக்களின் சூக்ஷ்மங்களை ஆராய்ந்தும் மேன்மைப் படுத்தியும் அவர் எங்களுக்குப் பிற் காலத்தில் எடுத்துரைத் திருக்கிறார்! வாழ்க்கைச்

சரித்திரம் எழுதுபவன் ஒருவன் குறித்துக்கொள்வது போலவே சிறிய அம்சங்களையும் பெரிய செயல்களையும் கண்கொட்டாமல் கூர்ந்து கவனித்தவர் அவர். என் தந்தையின் தனி வாழ்க்கை ஆரம்பமாகும் காலத்தில் அவருடன் கூட இருந்த பெருமை இளமை மாறாத ராமஸ்வாமியினுடையதே. சிலரைப்போல் 'உண்ட இடத்திற்கு இரண்டு நினையாத' குணமுடையவராதலால், கடைசிவரையிலும் உறவினரின் ஞாபகத்தைத் தனிப் பொக்கிஷமாகக் கொண்டதுடன், எங்களையும் எங்கள் தந்தையின் பிரதிநிதிகளாகக் கருதி நேசிக்கும் இயல்பு அவருக்கு ஏற்பட்டது. நாங்கள் என்றும் நினைக்க வேண்டிய பரிசுத்த ஆன்மாக்களில் அவரும் ஒருவர்.

குடித்தனம் நடத்த ஆரம்பித்த காலங்களில் கிருஷ்ணஸ்வாமி அடிக்கடி வீடு மாற்றுவாராம். அதற்குக் காரணங்கள் பல உண்டு. அவருக்கு ஒண்டிக் குடித்தனம் செய்வதில் முதலில் இஷ்டம் இல்லை. ஏனெனில் தந்தைக்கு நேர்ந்ததுபோல் மகனுக்கும் இளமைப் பருவத்தில் ஓர் அநுபவம் ஏற்பட்டது. ஆனால் இரண்டிற்கும் வித்தியாசம் இல்லாமல் இல்லை. விலைமாதால் தந்தைக்குச் சோதனை ஏற்பட்டது. மைந்தருக்கு இன்னும் ஒரு படி உயர்ந்த, குடும்ப ஸ்திரீயால் மனவலிமையைப் பரீக்ஷித்துக்கொள்ள நேர்ந்தது. அம்மாதிரியான சந்தர்ப்பத்தில் ஓர் இடம் விட்டு மற்றோர் இடத்துக்குப் போவது மிகவும் நியாயமாயிற்று. பணத்தை மிகவும் சிக்கனமாய்ச் செலவு செய்ய வேண்டும் என்ற தீர்மானம் வேறு. ஆகையால் தனிமையாகவும் அதிக வாடகை இல்லாததாயும் ஒரு வீடு இருப்பதாகத் தெரிந்தால், உடனே அதிகமாக யோசிக்காமல் அதற்கு மாற்றிவிடுவார்.

பி. ஏ. பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றபிறகு சட்ட ஞானம் பெறுவதற்கே இரு சிநேகிதர்களும் முற்பட்டார்கள். அக்காலங்களில் சட்ட கலாசாலை வகுப்புக்கள் அநேகமாய்ச் சாயங்கால வேளைகளில்தான் நடைபெற்றன. ஆகையால் ஒழிவு நேரங்கள் மாணவர்களுக்கு அதிகம். மற்றப் பையன்களைப்போல் இல்லாமல், இவ்

விருவர்கள் மட்டும் விஞ்ஞான அறிவை வளர்ப்பதற்காகத் தாங்களாகவே ராஜதானிக் கலாசாலை ஆசிரியரும், ரஸாயன சாஸ்திர நிபுணருமான டாக்டர் வில்ஸனுடைய அரிய போதனையைக் கவனிக்க அநுமதி கேட்டு, தவருமல் அவருடைய வகுப்புக்குச் செல்வது உண்டு. இவ்விருவர்களின் ஆர்வத்தை அறிந்த ஆசிரியரும், ஸயன்ஸ் ஞானத்தைத் தாங்களாகவே நாடியவர்கள் என்ற திருப்தியினுல் அவர்களை மிகவும் பாராட்டி, வேண்டிய அறிவைப் புகட்டி, அவர்களிடம் பக்ஷபாதத்துடனே நடந்து கொள்வார்.

ஆனுல் வக்கீல் தொழிலுக்குத் தம்மைத் தயாரித்துக் கொள்ள வேண்டாம் என்ற ஓர் எண்ணம் கிருஷ்ணஸ்வாமியின் இதய ஆழத்தில் தங்கி நின்றது. இவ்வித எண்ணத்தை அறவே அவரை விட்டு அகலச் செய்தவர் அக்காலத்தில் பெரியாராய் விளங்கிய ஸ்ரீநிவாஸராகவையங்கார் என்பவர். பிற்காலத்தில் பிரபல பரோடா திவானுக இருந்து, சிறந்த புத்திமான் என்ற புகழைப் பெற்றவர் அவர். அக்காலத்தில் அரசாங்க வரி வசூல் இலாகாவில் வேலை பார்த்துக்கொண் டிருந்தார். மயிலாப்பூர் வாசிகளில் உயர்ந்தவர். ஏற்கனவே தஞ்சையில் சிறிதுகாலம் எஸ். பி. ஜி. கலாசாலையிலும் உபாத்தியாயர் வேலை பார்த்தவர். வேங்கடராம ஐயருக்கும் அவரது பரிசயம் உண்டு. சிறுவர்களான சிவஸ்வாமியிடமும், கிருஷ்ணஸ்வாமியிடமும் என்றுமே ஒரு தனிப் பிரேமை காட்டியவர் என்று அவரைச் சொல்லலாம்.

ஸ்ரீநிவாஸராகவையங்கார், வக்கீல் தொழிலுக்கு உரிய வன்மை வாய்ந்த புத்தியுடையவர் எனக் கண்டு சட்ட ஞானத்தையே பின்பற்றும்படி, கிருஷ்ணஸ்வாமிக்கு உபதேசித்தார். அன்று அப்பெரியார் அவரிடம் காட்டிய உண்மை விசுவாஸமே, வாழ்க்கைத் துறையிலும் லக்ஷ்யம் ஒன்றை மேற்கொண்டு தைரியத்துடன் புக அவருக்குக் காரணமாயிற்று.

அக்காலங்களில் சட்ட வகுப்புக்களும் ராஜதானிக் கலாசாலைக் கட்டிடத்திலேயே நடந்தன. அங்கே சென்று

வர ஜட்கா கிடைக்காவிட்டால் பக்கிங்ஹாம் வாய்க்கால் வழியாகச் சிறு படகுகளில் செல்வது வழக்கம். பக்கிங்ஹாம் வாய்க்கால் அக்காலத்தில் மயிலாப்பூர் வழியாக வெட்டப் படவில்லை. அவ்வாய்க்காலுக்குச் செல்லக் கொஞ்சம் தூரம் நடையும் அவசியம். இப்பொழுது, 'அம்பட்ட வாராவதி' இருக்குமிடத்தில் படகு நிலயம் ஒன்றை ஏற்படுத்தி, அதன் தலைவராக ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரை மாணுக்கர் கள் தேர்ந்தெடுத் திருந்தார்கள். அவரே பிற்பாடு என் தந்தையின் உயிர் நண்பராக ஆனுர். அவர் சுவாமிநாதைய ருடன் பி. ஏ. வகுப்பில் வாசித்தவர். கூர்மையான அறிவும் விடாமுயற்சியும் அவரிடம் உருவாகி நின்றன என்று சொல்லவேண்டும். பிற்காலங்களில் சிறந்த வெள்ளைக்காரர் களின் அபரிமிதமான மதிப்பைப் பெற்றவர். தாமாக ஒன்றையும் அவர் விரும்பியவர் அல்ல. அவருடைய வித்தியாப்பியாசத்தின் திறமையே அவருக்கு அரசாங்க உத்தியோகங்களை அளித்தது.

கிருஷ்ணஸ்வாமி சட்டப் பரீக்ஷையில் சிறப்பாகத் தேர்ச்சி பெறவில்லை. படிப்புக்குப் பல தடைகள் ஏற்பட்டதுதான் காரணம். சில, அவராகவே ஏற்படுத்திக் கொண்டவை. எப்பொழுதும் இரவில் பேச்சும், மற்றப் படிப்புக்களும் வரவர அதிகரித்ததனுல் சட்ட ஞானத்தைத் திடமாகக் கற்க அவகாசம் போதவில்லை. பரீக்ஷையில் மூன்ருவது வகுப்பில் தம்முடைய பெயரைக் கண்டவுடன் தம்முடன் இருந்த சிறுவர் ராமஸ்வாமியிடம் அவர், "பரீக்ஷகர்களுக்கு இருப்பதைவிட எனக்கு ஞானம் அதிகம். அவர்களுக்குக் கேள்வி கேட்கத் தெரியவில்லை. அவர்களைவிட நான் நாளைக்கு எவ்வளவோ மேலாகச் சட்டஞானம் படைத்தவனுக ஆவேன்; திரவியமும் தொழில் முறையில் சம்பாதிப்பேன். நீயே பார்க்கப் போகிருய்!" என்ருராம். பாவம்! ராமஸ்வாமி சிறுவர் தாமே? எதிரே விடுவிடு என்று நடையிட்டுக்கொண்டு உறவினர் சொல்லும் சொற்களைக் கவனித்துவிட்டு விஷம மாக, "உங்களை யார் படிக்கவேண்டாம் என்ருர்கள்? நீங்கள்தாம் பர்த்ருஹரி நீதி சதகம், மஹிஷ சதகம்



பரோபகார சிந்தாமணி, ராவ் பகதூர்
ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயர்



வலங்கைமான் ராமஸ்வாமி ஐயர்

இவைகளை வைத்துக்கொண்டு பொழுது போக்குகிறீர்கள்! பாருங்கள் சிவஸ்வாமி ஐயரை! அவர் உண்டு, சட்டப் படிப்பு உண்டு. அதனுல்தான் நன்ருக மேல் ஸ்தானத்தில் தேர்ச்சி பெற்றிருக்கிருர்" என்ருர். வந்துவிட்டது உடனே ஆவேசம் கிருஷ்ணஸ்வாமிக்கு: "இந்தா, ராமசாமி, உனக்கு ஒன்றும் தெரியாது; நீ சிறு பையன். என்னைப்பற்றி நாளைக்கு என்ன சொல்லப் போகிருர்கள் என்பதை நீ எப்படி இப்பொழுது அறிவாய்?" என்பார். வேறு சொல்ல வகையற்று ராமஸ்வாமியும் சிரித்து விடுவார். வருங்காலத்தின் உயர்வை அறிந்துதான் தைரியமாய்ப் பேசினுரோ, அல்லது சுபாவமாகப் பிறரிடம் உள்ள மதிப்புக் குறைவுதான் அவரை அகம்பாவம் பிடிக்கச் செய்ததோ, அதை நாம் இன்று தீர்மானிப்பது சாத்தியம் அல்ல. ஒருகால் அவருக்கு இருந்த சுயநம்பிக்கையே இதிலிருந்து புலப்படுவதாக இருக்கலாகாதா?

சகோதரர் சுவாமிநாதையர் தஞ்சாவூரில் ஜில்லா கோர்ட்டில் தொழில் ஆரம்பித்திருந்தார். பட்டணத்தில் தம்பி சட்டப் படிப்பை இரண்டு மூன்று வருஷங்கள் நடத்தி முடிக்க வேண்டியிருந்தது. அவர்களுடைய தந்தையின் தேகநிலை வரவர ஒருவிதமாக இருந்தது. ஆனுல் எங்கும் வேங்கடராம ஐயருடைய உழைப்பைப் பற்றிய பேச்சே பரவியிருந்தது. மேல் அதிகாரிகளுக்குச் 'சலாம்' போடும் குணம் கொஞ்சங்கூட அவரிடம் இல்லை. அவருடைய அஞ்சா நெஞ்சைப்பற்றிக் குறிப்பான ஒரு விவரம் தெரிகிறது. பெரிய உத்தியோகஸ்தர்களிடம் அவர் காட்டிய வணங்காமுடித்தனத்தைப் போற்றவும் தூண்டுகிறது.

சீகாழியில் வேங்கடராமையர் வேலை பார்த்த சமயம் அது. தஞ்சாவூரில் மிஸ்டர் கிராஹாம் ஐ. சி. எஸ். என்பவர் ஜில்லா ஜட்ஜாக இருந்தார். அவர் விஷமக்காரர்; இறுமாப்புக் கொண்டவர். கேட்கவேண்டுமா கீழ் அதிகாரிகளின் சிரமங்களுக்கு! திடீர் திடீரென்று கீழ்க் கோர்ட்டுகளைச் சோதனை செய்ய விஜயம்

செய்வாராம். அம்மாதிரி தகவல் இல்லாமல் ஒரு தடவை ஞாயிற்றுக்கிழமையன்று சீகாழியில் வந்து தோன்றினர். கோர்ட்டுத் தலைமைக் குமாஸ்தாவுக்கு ரகசியமாய் அரைமணி முன்னமேயே மேலதிகாரியின் விஜயம் தெரிந்து விட்டது. முன்சீப்பிடமும் தெரிவித்துவிட்டு மற்றவர்களுடன் தம் இடத்தில் உட்கார்ந்திருந்தார். முன்சீப் மட்டும் அவருடைய ஸ்தானத்தில் காணப்படவில்லை. வெள்ளையருக்கு அதைக் கண்டு எரிச்சல் ஏற்பட்டுவிட்டது. தலைமைக் குமாஸ்தாவைக் கேட்டார், "முன்சீப் ஊரில் இல்லையா ?" என்று.

"இருக்கிறார்" என்று தலைமைக் குமாஸ்தா பதில் உரைக்கவும் துரைக்குச் சினம் உண்டாயிற்று. உடனே சோதனைகள் செய்வதாகத் தொடங்கி, அங்கு இருந்த தஸ்தாவேஜுகளையெல்லாம் கலைத்துப் போட்டார். சீக்கிரம் தம் வேலையை முடித்துவிட்டு, முன்சீப்பு இன்னும் வராததைக் குறித்து மிகுந்த கோபத்துடன், கால் நடையாகவே மறுபடியும் ரெயில் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டுவிட்டார். பாவம்! குமாஸ்தா கொண்டுவந்திருந்த ஜட்காவையும் அவர் கண்ணெடுத்துப் பாரேன் என்று மறுத்துவிட்டார்.

முன்சீப் தம் அங்கிகளை அணிந்து கொண்டு வருவதற்கும், ரெயில் ஸ்டேஷனில் துரை வந்துநிற்பதற்கும் சரியாக இருந்தது. முன்சீப் நடுங்கிக்கொண்டு தம்மைப் பேட்டி காண்பார் என்று எண்ணியிருந்த துரைக்கு ஏமாற்றம் மிக அதிகமாயிற்று. ஏனெனில், வந்தவர் பயம் இல்லாமல் தம் எதிரில் நின்றுகொண்டும், தாம் கோர்ட்டில் இல்லாததற்குக் கொஞ்சமும் காரணம் சொல்லாமலும் இருப்பதைப் பார்த்துவிட்டார் துரை. என்ன செய்வது? எதனல் அவர் தம் வரவைக் கொஞ்சமும் சட்டை செய்யவில்லை என்று அவரைக் கேட்டார். பதில் நிதானமான குரலில் வந்தது: "துரை அவர்கள் ஞாயிற்றுக்கிழமைகளில் வருவது யாருக்குத் தெரியும்?" துரையின் கோபச் சுவாலையில் எண்ணெயைவிட இதைவிட வேறு வேண்டியதில்லை. அவர், "ஓய், உம்முடைய

மரியாதை கெட்ட தனத்திற்கு என்ன செய்கிறேன், பாரும்! அதிசீக்கிரம் உம்முடைய உத்தியோகம் பறக்கும். பழையபடி சிரஸ்தேதாராகவே கீழே இருக்கப் போகிறீர், தெரியுமா?" என்றார்.

முன்னமே தெரிவித்த வார்த்தைகளைவிட அலக்ஷ்ய மான மொழிகளில் முன்சீப்பும், "ஆகா, செய்யுங்கள். ஆனால், துரையவர்கள் எவ்வளவு வண்டி வண்டியாய் எழுதினாலும் என்மேலுள்ள ஒரு ரோமத்தையும் அசைக்க முடியாது" என்று சொல்லிவிட்டார். எவ்வளவுதான் பயமற்றவராயினும், நாவில் இவ்வளவு துடுக்கான சொற்கள் வருவதும் சரியல்ல.

பின்னர் தாமாகவே, பிள்ளைகள் இருவருக்கும் நடந்ததை அவர் எழுதினார். மூத்தவரான சுவாமிநாதையர், "நீங்கள் அப்படிச் சொன்னது நியாயமன்று; மரியாதைக் குறைவுதான். தஞ்சாவூர் வந்து நேரில் துரையிடம் மன் னிப்புக் கேளுங்கள்" என்றார். கிருஷ்ணஸ்வாமி பட்ட ணத்தில் சட்ட கலாசாலையில் இருந்த வருஷம் அது; அவ ரிடம் கேட்டதற்கு அவர், "எதற்கு மன்னிப்புக் கேட்க வேண்டும்? காரணம் இல்லாமல் துரை உங்களை வெருட் டினால் நீங்கள் ஏன் அவருக்கு மரியாதை காட்டவேண்டும்? அவன் செய்வதை எல்லாம் செய்யட்டும். உங்களுக்குத்தான் ஹைகோர்ட்டு ஜட்ஜ் முத்துஸ்வாமி ஐயரிடம் மதிப்பா யிற்றே! அவரிடம் தெரிவியுங்கள்; அது போதும்" என்று கொஞ்சமும் தயக்கமின்றிப் பதில் எழுதிவிட்டார். தந்தை யும் இரண்டாம் பிள்ளையின் யோசனையில் ஈடுபட்டுப் பட்டணம் அடைந்து, ஸர் முத்துஸ்வாமி ஐயரைக் கண்டார். ஸர் முத்துஸ்வாமி ஐயர், "உங்களை அவன் ஒன்றும் செய்யமுடியாது. போய் வாருங்கள்" என்று அழுத்திச் சொல்லவே அவர் திருப்தியாக ஊர்போய்ச் சேர்ந்தார். பாவம்! மிஸ்டர் கிராஹாமுக்கு ஹைகோர்ட்டு அதிகாரிகள் நல்ல சாட்டை அடி கொடுத்தார்கள். அவர் நடந்துகொண்டதற்கு அவமானமே அடைந் தார். அதன்பிறகு அவர் வேங்கடராம ஐயரைத்

தொந்தரவு செய்யவில்லை. அவரும் 1885-ஆம் வருஷம் காலமாகிவிட்டார்.

கிருஷ்ணஸ்வாமி, வக்கீல் ஸந்நதைப் பெறுவதற்கு முந்தியே தம்முடைய பிதாவை இழந்தார். நீர் ரோகம் மேலிட்டு வேங்கடராமையர் மாயூரத்திலேயே சிலகாலம் படுத்த படுக்கையாக இருந்து இறந்தார். அவ்வருஷமே, தம் அருமைக் குமாரி மீனாக்ஷிசுந்தரத்தைத் திருவையாற்றில் தனவந்தரான மிராசுதார் குடும்பத்தில் உதித்த ராஜ கோபால ஐயருக்குக் கல்யாணம் விமரிசையாய்ச் செய்து வைத்தார். பரம பந்துப் பிரியராக இருந்தமையால், அவர் சகோதரர் பௌத்திரியான ஜானகிக்கும் அதே பந்தலில் மணம் நடந்தது. கல்யாணத்தின் விமர்சையைப் புலப்படுத்த ஒரே ஒரு விஷயத்தைக் குறித்தாலும் போதும். கர்நாடக சங்கீதத்திற்கே அணிபோன்ற மஹா வைத்தியநாத ஐயர் தம் இசை அமுதை அந்த மணப் பந்தலில் உள்ளவர்களுக்குத் தாராளமாய் வழங்கினார். ஜானகியை மணந்தவர் திருநெல்வேலி ஜி. ராமசந்திர ஐயர் என்பவர். அவர் பிற்காலம் துறவறம் பூண்டு பலராலும் நன்கு மதிக்கப்பெற்று ராமானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகளென்னும் பெயருடன் விளங்கிச் சமீபத்தில் சாயுஜ்யம் அடைந்தவர்.

சட்டப் பரீக்ஷையில் சிவஸ்வாமி ஐயர் முதலாவதாகத் தேர்ச்சி பெற்றதற்கும் அவருடைய நண்பர் மூன்றாவது வகுப்பில் தேறியதற்கும் காரணங்கள் அறிவது சிரமம் அல்ல. சிவஸ்வாமி ஐயர் சிறந்த உழைப்பாளி. பாடங் களில்தான் எப்போதும் அவருக்குக் குறி. அவர் நண்ப ருக்கோ பலவித லக்ஷ்யங்கள் எல்லாம் சேர்ந்து, படிப்பு விஷயத்தில் ஓரளவு குறைவை ஏற்படுத்தின.

அக்காலத்தில் ஆர். பாலாஜி ராயர் என்பவர் சென்னையில் வக்கீலாக இருந்தார். தொழிலில் அவருக்கு நல்ல வருமானம்; கௌரவமானவர். அதிகம் பேராசைப் படுபவரும் அல்ல. வேங்கடராம ஐயருக்குத் தெரிந் தவர். தம்மிடம் தொழில் கற்பவர்களிடமிருந்து குரு தக்ஷிணைக்காகப் பொருளை விரும்பமாட்டார். எல்லா

வற்றையும் உத்தேசித்து அவரிடம் தொழில் பயில்வதற்கு என் தந்தை தீர்மானித்தார். பாலாஜிராயர் மயிலையில்தான் குடி இருந்தார். சிவஸ்வாமி ஐயரும் அந்தக் காரணங் களாலேயே அவரிடம் தொழில் முறையைக் கற்கத் தொடங்கினர். அவருடைய தகப்பனருக்கும் ராயர் தெரிந்தவர். நண்பர்கள் இருவரும் காலேஜில் சேர்ந்து இருந்தது போலவே, தொழில் துறையிலும் ஒரே ஆபீசில் சேர்ந்து பயிலத் தொடங்கினர்கள். ஆனல் சீக்கிரமே அவர்களுடைய வழக்கங்கள் மாறத்தொடங்கின. இரண்டு வருஷங்களில் பி.ஆர். சுந்தரமையர் வந்து சேர்ந்தார்; அவருடன் புது சிநேகிதம் ஏற்பட்டு, கிருஷ்ணஸ்வாமியும் சுந்தரமும் இணைபிரியாதவர்கள் ஆனர்கள். ஆனல் சிவஸ்வாமி ஐயருடைய நட்பு என்றும் குறையவில்லை. நண்பருடைய புதுச் சிநேகிதத்தையும், தம்மிடம் பழைய படி அவர் நெருங்கிப் பழகாததையும் நினைத்து அவர் வருத்தம் அடைந்ததும் உண்டு. தமக்கு முடிந்த அளவில் பழைய நட்பின் வாசனையை அவர் போற்றியே வந்தார்.

சிவஸ்வாமி ஐயருக்கு நண்பரிடம் அளவுக்குமேல் கௌரவம் என்றுகூடச் சொல்லலாம். தம்மால் முடியாத காரியங்களை யெல்லாம் தம் சிநேகிதர் நன்ருகச் செய்வதைப் பார்த்து, அவருக்குப் பிரமிப்புத்தான். "தாமே வடமொழியில் சுலோகங்களை இயற்றிவிடுவார். அவருக்குச் சந்தஸின் அமைப்பை உணரும் எஃகுச் செவி உண்டு. விளையாட்டிலும், சீட்டாட்டத்திலும் மும்முரமாய் அவர் புத்தி பாயும். அவர் விடாமல் சதுரங்கம் ஆடுவார். அவை ஒன்றும் எனக்குத் தெரியாது" என்றெல்லாம் சிவஸ்வாமி ஐயர் நண்பரைப்பற்றிச் சொல்வார். சிறு பிள்ளைகள் செய்யும் காரியந்தானே இவை என்று நமக்குத் தோன்றும். ஆனல் அக்காலங்களில் நன்கு படிக்கும் பிள்ளைகள் இவற்றை மிகவும் புறக்கணித்து வந்தார்கள். இவைகளைக்கூடத் தம் நண்பர் நன்கு கற்றிருந்தார் என்பதே சிவஸ்வாமி ஐயர் சொல்வதன் கருத்து.

கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சிவஸ்வாமி ஐயருடைய உண்மையான உழைப்பில் வியப்பு அடைந்தவர். கலா

சாலையில் படிக்கும் காலங்களில் இரவலாகப் புத்தகங்கள் அவரிடம் வாங்கினல், தாம் வாசிக்காவிட்டாலும், அல்லது முழுவதும் வாசித்து முடிக்காவிட்டாலும், குறித்த நாட்களில், திரும்பச் சேர்த்துவிடுவார். திட்டம் போட்டபடி நடந்துகொள்ளும் தம் சிநேகிதரின் தன்மையை அறிந்திருந்ததே அதற்குக் காரணம். சிவஸ்வாமி ஐயர் சிறுவயசிலேயே எதை எப்பொழுது வாசிப்பது என்பதைக்கூட வரையறை செய்துகொள்வாராம்.

வக்கீல் தொழில் ஆரம்பமாகியும் கொஞ்சகாலம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு வருமானம் சிறிதும் வரவில்லை. அவருடைய தந்தை இறந்ததும் பலவகைத் துன்பங்கள் உண்டாயின. குடும்பத்தில் கொஞ்சம் பூஸ்திதிமட்டும் இருந்தது. வாழ்க்கையை நடத்த அது போதுமா? அவருடைய தமையனர் சீக்கிரமே வக்கீல் தொழிலில் வருமானம் பெறத் தொடங்கிவிட்டார். மாசந்தோறும் அவரிடமிருந்து பணம் தம்பிக்கு வரும். அதில்தான் காலக்ஷேபம் ஆக வேண்டும். சுபாவத்திலும் சிக்கனமான இயல்புடையவர். தமக்கும் தம்மைச் சேர்ந்தவருக்கும் அளவுக்குமேல் செலவு செய்வதில் அவருக்கு நம்பிக்கை இல்லை.

என் தாய் ஒருநாள் வெள்ளிக்கிழமை என்று, தலையில் அலங்கரித்துக்கொள்ள அரை அணுவுக்கு மல்லிகைப் பூ வாங்கினள்; அவர் அதை அறிந்தவுடன் சினங்கொண்டு பூவை எடுத்து வாசலில் உள்ள குப்பைத் தொட்டியில் எறிந்தாராம். வீட்டில் இருந்த அவருடைய அத்தை வாலாம்பாள், "ஏண்டா, கிருஷ்ணு, உன் மனைவிக்குத் தலையில் பூ வைத்துக்கொள்ளக்கூட அந்தஸ்தில்லையா? நன்ருயிருக்கிறது நீ செய்வது!" என்று வியந்து கேட்டாள். அதற்கு என்ன பதில் வந்தது தெரியுமா? "ஆம், அத்தை! நான் எங்கள் அண்ணுவிடம் ஜீவனும்சம் வாங்குகிறது; அதில் இவள் அரை அணுவுக்குப் பூ வாங்குவதாக்கும்! நாளைக்கு நான் சம்பாதித்துக் கொட்டுவேன். பூவைக் கீழே இறைத்து அதன்மேல் வேண்டுமானலும் நடக்கட்டும். அப்போது யார் தடை செய்யப்போகிருர்கள்?" என்ருர் அந்த மானி. பிற்காலத்தில் அவர் சொன்னவை

எல்லாம் உண்மையாயின. அதே அத்தை தன் கண்களால், பெரிய மாளிகையில் அவர் வசித்ததையும், இரட்டைக் குதிரை பூட்டிய வண்டியில் அவர் சவாரி செய்துகொண்டிருந்ததையும் பார்த்திருக்கிறாள். அவளால் நம்புவதற்குக்கூட முடியாதபடி அவளுடைய காலத்திலேயே உறவினருக்கு உயர்வு ஏற்பட்டது.

மயிலாப்பூரில் கட்சிக்காரர்கள் வராத வீடு தம்முடையது மட்டுமே என்றுகூடக் கிருஷ்ணஸ்வாமி நினைப்பாராம். என்றைக்காவது வீட்டில் அசௌகரியம் ஏற்பட்டுத் தாமே சமைக்க நேர்ந்தால் "ராமஸ்வாமி!" என்று தம்முடன் இருந்த சிறுவரைக் கூப்பிட்டு, "வாசற்கதவைத் தாழிட்டுவிடு. யாராவது வரப்போகிறார்கள். நான் சமையல் செய்வதைப் பார்த்துவிட்டால், 'ஏது வக்கீல் தொழில் செய்வதைக் காணோம்; இதுதானா இவர் வேலை!' என்று பரிகசிப்பார்கள்!" என்று கூறுவாராம்; உண்மையாகவே பயப்பட்டு, வாசற்கதவைத் தாழிட்டே உள்ளே சமையல் நடக்கும். சமையல் செய்யவும் அவருக்கு நன்றாகத் தெரியும். சாப்பாடு முடிந்ததும் எச்சில் இலைகளை எறிவதற்குக் கதவிற்கு வெளியே வரும்போதுகூட, தெருவில் ஒருவரும் இல்லையா என்று குறிப்பாய்த் தெரிந்து கொண்டுதான் பிற்பாடு தம் கையிலுள்ளதை எறிவார்.

சிறுமைப்படும் நாட்களில் அவர் மனைவியின் மனம் மிகவும் சிரமப்பட்டது. அவளுக்குச் சீக்கிரம் குழந்தைகள் பிறக்காததனால் மனம் வேறு விஷயங்களில் செல்லாமல், கோவிலுக்கும் குளத்திற்கும் செல்வதே நியாயமென்று எண்ணியது. பிறந்தகத்துக்குச் சென்று வரும் பழக்கம் அதிகமாக அவளிடம் இல்லை. அப்பொழுது அவளுடைய தகப்பனார் ராமஸ்வாமி சாஸ்திரிகள் நாகபட்டணத்தில் பள்ளிக்கூடத்தில் ஸம்ஸ்கிருத பண்டிதராக இருந்தார். அவருக்கு உடம்பு அவ்வளவு திடமாகவும் இல்லை.

1888–ஆம் வருஷம் முதற்கொண்டுதான் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தொழில் துறையில் சிறிது சிறிதாகச் சௌகரியங்கள் ஏற்பட்டன. அவ்வருஷந்தான் அவருக்கு

மணி ஐயருடைய பழக்கம் உண்டாயிற்று. சுப்பிரமணிய ஐயர் மதுரையில் பல வருஷங்கள் புகழுடன் தொழில் செய்து பிறகு சென்னைக்கு வந்து ஹைகோர்ட்டிலும் தம் ஜயக்கொடியை நாட்டினார். அவருடைய அசாதாரணமான வருமானத்தைக் கண்டே அக்காலத்தில் மற்றும் பல புத்திமான்கள், தங்கள் தங்கள் சொந்த ஊர்களை விட்டுச் சென்னைக்கு வந்து தொழிலின் திறமையைக் காட்ட வேண்டும் என்ற அவாவை உடையவர்கள் ஆனார்கள். ஆனால் எல்லோரும் மணி ஐயர் ஆவார்களா! அவரிடம் பிரதிபலித்த உயர்ந்த புத்தி வேகமும், இதய பரிபாகமும் மற்றவர்களுக்கு வருமா? அதனால்தான் ஒருவராவது வெளியிலிருந்து இங்கு வந்தும் அதேமாதிரி வருமானத்தையும் புகழையும் மிகுதியாகப் பெறவில்லை.

தம்முடைய தினசரிக் குறிப்பில் சங்கராந்தி அன்று கிருஷ்ணஸ்வாமி எழுதியதாவது:

"*1888*—ஜனவரி 13-ஆம் தேதி சங்கராந்தி தினம். வழக்கமான காலை நடையில் கிளம்பினேன். என்னுடன் சுந்தரமையரும் வந்தார். இருவரும் கனம் எஸ். சுப்பிரமணிய ஐயரைத் தரிசித்தோம்."

அவர்கள் இருவரும் அப்பொழுது மயிலாப்பூர் தெற்கு மாடவீதியில் 'தட்டான் வீடு' என்று வழங்கப்பட்டு, இரண்டு வாசல்கள் கொண்டதும், இரண்டு குடித்தனங்கள் தனித்தனியே இருக்க வசதியானதுமான பாகங்களில் வசித்துவந்தார்கள். ஆகையால் இருவரும் சேர்ந்தே வெளியே செல்வதும், கோர்ட்டுக்குப் போவதுமாக இணை பிரியாமல் இருந்துவந்தார்கள். மணி ஐயரைக் காலையில் தினமும் காண்பது அவர்களுக்கு, மிகவும் நல்ல பழக்கங்களில் ஒன்றாக ஆயிற்று.

தெருவில் நடக்கையிலேயே உடன்வருகிறவர்களுடன் அவர்கள் பேச்சுப் பலமாய் இருக்கும். ஒரு நாள் காட்டுக் கோவில் தெருவில் நண்பர்கள் இருவரும் உலாவி வருகையில் ஒரு முக்கிய விஷயத்தைப்பற்றிச் சம்பாஷணை செய்துகொண்டே சென்றார்கள். அபிப்பிராயத்தில் வேற்றுமை ஏற்பட்டவுடன் திடீரென என் தந்தை



பென்னுத்தூர் சுப்பிரமணிய ஐயர்

வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் பி. ஆர். சுந்தர ஐயர்

பெருத்த சத்தம் போட்டு வாதிக்கத் தொடங்கிவிட்டார். அங்குள்ள பங்களா ஒன்றில் குடி இருந்த வெள்ளையரான உத்தியோகஸ்தர் ஒருவருக்குக் காலைத் தூக்கம் இதனால் கெட்டுவிட்டது. அவர் மதிற்சுவரண்டை வந்து தெருவில் நடந்த இருவர்களையும் கூப்பிட்டு, "இது பொது ஜனங்கள் செல்லும் ரஸ்தாவானாலும் இம்மாதிரி கூக்குரல் போடக்கூடாது. ஜாக்கிரதை" என்றார். ஆனால் அவ்வுபதேசத்தை அவர் மதித்ததாகத் தெரியவில்லை.

வேலையில்லாத நாட்களில் பற்பல ஸ்மிருதிகாரர்களின் கிரந்தங்களைத் தமக்குள்ள வடமொழிப் பயிற்சியின் துணைகொண்டு தாமாகவே வாசித்துவந்தார். தினசரியில் ஓரிடத்தில் குறிக்கப்பட்டிருப்பதிலிருந்து, எவ்வளவு உழைப்பு அவரிடம் இருந்ததென்பது வெளியாகிறது:

"1888-மார்ச்சு 11: தத்தக சந்திரிகையையும், சங்கஸ்மிருதியையும் வாசித்தேன்"

என்று அக்குறிப்பில் கண்டிருக்கிறது.

மற்றோர் இடத்தில், "அத்ரிஸ்மிருதியை முடித்தேன்" என்று எழுதியிருக்கிறார்.

ஹிந்துதர்ம சாஸ்திர அறிவிற்கு இன்றியமையாத மிதாக்ஷரா போன்ற புத்தகங்களின் மூலத்தையே வாசித்து அறிந்தார் என்று நன்றாய் நமக்குத் தெரிகிறது. இதற்கு இடையே இந்தியக் கோர்ட்டுகளின் 'ரிபோர்ட்டு'களையும், மாசந்தோறும் வெளிவரும் சீமைத் தீர்ப்புகளின் 'ரிபோர்ட்டு'களையும் மறக்காமல் பார்ப்பார். அவைகளே நீதியின் அன்றன்றைய மாறுதல் வளர்ச்சிகளை நன்றாக மனத்தில் பதியவைக்கும் என்பது சட்ட ஞான நிபுணர்களின் பிறழாத அநுபவம்.

தொழில் துறையில் பலருடைய அரிய நட்பு, கொஞ்சங் கொஞ்சமாய் ஏற்பட்டது. முக்கியமான நண்பர்களில் செல்வாக்குடன் அட்டார்னியாக இருந்த பென்னாத்தூர் சுப்பிரமணிய ஐயர் அக்காலங்களில் நல்ல வருமானம் உடையவராக இருந்தார். மேலும் அவர், மணி ஐயருடன் பழகிவந்தவர். மணி ஐயருடன் பழகியவர்கள் எல்லோருமே கிருஷ்ணஸ்வாமியின் நண்பர்களானார்கள்.

பென்னத்தூர் சுப்பிரமணிய ஐயரும் இளைஞர்களான கிருஷ்ணஸ்வாமியிடமும், சுந்தரத்தினிடமும் மிகவும் அன்புகாட்டினர். அக்காரணத்தினல் கிருஷ்ணஸ்வாமிக்கு வருமானத்திலும் நாளடைவில் ஏற்றம் உண்டாயிற்று. ஏனென்றல் பென்னத்தூர் சுப்பிரமணிய ஐயருக்குத் தனிகர்களான கக்ஷிக்காரர்கள் பலர் உண்டு. அவர்களை அவர் தம் நண்பருக்கு அறிமுகம் செய்வித்தார்.

மற்றொரு சிறு சம்பவம் கிருஷ்ணஸ்வாமியின் ஜீவனத்திற்கே அடிப்படையான உபகாரமாக ஆகியது. சென்னையில் வக்கிலாக இருந்த எஸ். ராமஸ்வாமி ஐயங்கார் என்பவருக்கு முன்சிப் உத்தியோகம் கிடைத்தது. அவருக்கு வெளியூர்களில் வழக்குகள் உண்டு. தாம் தொழிலை விடும்படி நேர்ந்த பொழுது அவர் சிலவற்றைக் கிருஷ்ணஸ்வாமியிடம் பங்கிட்டுக் கொடுத்தாரென்ற செய்தி தெரிகிறது. தினசரிக் குறிப்புச் சொல்லுவதைக் கவனிப்போம்:

1888–ஆம் வருஷம் ஏப்ரல் 12–ஆம் தேதியின் கீழ், பின்வருமாறு குறிப்பு இருக்கிறது:

"நான் கோர்ட்டுக்குப் போகையில் ஸ்ரீ ராமஸ்வாமி ஐயங்காரைக் கண்டேன். அவர் என் வீதம் மூன்றிலொரு பாகத்திற்கு மேல் தம்மிடம் உள்ள கேசுகளைக் கொடுத்திருந்தார். முதலில் முழுவதையுமே என்னிடம் ஒப்புவிப்பதாகச் சொல்லியிருந்தும், அவர் கடைசியில் கொடுத்தது இவ்வளவே. தமக்குப் பாக்கி வர வேண்டிய தொகையையும், அதாவது ரூபாய் 1000த்தையும் கட்டுக்களின் பேரில் குறித்திருந்தார்."

பிற்காலத்தில் தம் வாழ்க்கையில் அடைந்த உயர் நிலைக்கே முதல் உபகாரி ராமஸ்வாமி ஐயங்கார்தாம் என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் சொல்லியதாகப் பலர் கூறுவது உண்டு. வருமானம் வராததால் சென்னையில் வக்கில் வேலையை விட்டு, 1888–ஆம் ஆண்டில் கடலூர் போவதாக யோசிக்கும் சமயம், இவ்வுபகாரம் ஒரு சிநேகிதரிடமிருந்து தமக்கு வந்ததால் எந்நாளும் அவரை நன்றியுடனேயே வணங்க வேண்டுமென்று அவர் வெளியிட்டதாகப் பலர் பிற்காலத்தில் சொல்வது உண்டு. பிற்காலத்தில் புகழடைந்த வேறு எவனும் தன் மார்பை அல்லவா தட்டிக்கொள்வான்!

ராமஸ்வாமி ஐயங்கார் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் தந்த வியாஜ்யக் கட்டுக்களில் ஒன்று கடலூர் சப் கோர்ட்டில் வாதிக்க வேண்டிய நடவடிக்கை. அது கிரிமினல் சம்பந்தமாயுள்ளது. அதை உத்ஸாகம் கொண்டு சரிவர நடத்தியும் கோர்ட்டுத் தீர்ப்பு அவருக்கு விரோதம் ஆயிற்று. தம் கடமையைத் தாம் சரியாகச் செய்த திருப்தி ஒருபுறம் இருப்பினும், முடிவு தம் கக்ஷிக்காரருக்கு அநுகூலமான முறையில் ஏற்பட்டிருந்தால் அந்தத் திருப்தி மேலும் அதிகமாக இருந்திருக்கும். ஆனல் செயலில் ஈடுபடுவதுதான் நம் தர்மம் என்னும் கீதா வாக்கியத்தின் முழு உண்மையையும் கடைப்பிடிக்கவேண்டிய தொழில் வக்கீல் தொழிலன்றே! எவ்வளவுக்கு எவ்வளவு தோல்விகள் ஒருவருக்கு உண்டோ, அவ்வளவுக்கு அவ் வளவு உண்டாகும் அநுபவம் வீண்போகாமல் பிற்பாடு வெற்றிகளைத் தருவது இத்தொழிலில்தானே!

கோர்ட்டில் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பேச்சுத் திறமையைக் கவனித்து, கடலூரில் பலர் அவரிடம் அன்றுமுதல் மிகவும் மதிப்பு வைத்தார்கள். அந்த ஊர்க் கட்சிக்காரர்கள் முதலிலிருந்தே அவருக்கு வேண்டிய அளவில் ஆதரவைக் கொடுத்தார்கள். சிதம்பரம் கோயில் தேவஸ்தானத்தினர் தொடுத்த நடவடிக்கைகளிலெல்லாம் அன்றுமுதல்அவரை வக்கீலாக வைக்கத் தொடங்கினர்கள். கடலூரில் ஏற்பட்ட நெருங்கிய சிநேகிதர்களில் திருவேங் கடாசாரியார் என்று ஒருவர் உண்டு. அவருடைய பழக்கம் தொழில் சம்பாத்தியத்திற்கும் ஓரளவு உதவியாக இருந்தது. கடலூரிலிருந்து ஹைகோர்ட்டுக்கு வரும் அப்பீல்களெல்லாம் அவருடைய ஆபீசில் அன்றுமுதல் சிறிது சிறிதாகச் சேர ஆரம்பித்தன.

இளைஞர்களான கிருஷ்ணஸ்வாமி, சுந்தரம் இருவ ரிடமும் மணி ஐயர் பிரேமையைக் காண்பிக்கத் தொடங்கினர். லக்ஷ்மீ புத்திரரான அவருடைய கடாக்ஷம் விழுந்த அளவிலே, இவர்களின் வாழ்க்கை சீர்பெறத் தொடங்கியது ஆச்சரியமா! அன்றுமுதல் பண வருவாய் இடையீடில்லாமல் ஒரே தாரையாகப் பெட்டியில் சேர ஆரம்பித்தது.

## அத்தியாயம் 4

### சிக்கனமான வாழ்க்கை

"ஆகா றளவு இட்டி தாயினும் கேடில்லை
போகா றகலாக் கடை"

—குறள்

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தமையனார் சுவாமிநாத ஐயர் ஐந்து வருஷங்களே தஞ்சை ஜில்லா கோர்ட்டில் வக்கீல் தொழிலில் இருந்தார். அதற்குள் அவருடைய உயர்ந்த தகுதிகளை உணர்ந்த ஜில்லா ஜட்ஜ், மிஸ்டர் டேவிஸ் என்பவர், அவருக்கு முன்சீப் பதவியை அளிக்குமாறு மேல் அதிகாரிகளுக்குச் சிபாரிசு செய்தார். பிறகு டேவிஸ் என்பவரே சென்னை உயர்தர நீதிஸ்தலத்தில் நீதிபதியாகவும் விளங்கினார்.

சுவாமிநாத ஐயருடைய கோபம் ஜகப்பிரசித்தி பெற்றது. மேலும் உணர்ச்சி மேலீட்டினால் சீக்கிரத்தில் மனம் தவித்துவிடுவார். வக்கீல் தொழிலுக்கும் ரோஷ சுபாவத்திற்கும் அதிக ஒற்றுமை இல்லை. ரோஷப்படும் இயல்பு அவ்விடத்தில் சௌகரியங்களுக்குத் தடையாகவே நிற்கும். சுவாமிநாத ஐயர் ஒரு சமயம் ஜில்லா ஜட்ஜான கிராகாமின் கச்சேரியில் நடவடிக்கை யொன்றைக் கையில் எடுத்து, கூண்டிலுள்ள சாட்சியைச் சில கேள்விகள் கேட்டு வாக்குமூலம் பெற்றார். சாட்சி சொன்னவனைப்பற்றி ஜட்ஜுக்குத் திருப்தி இல்லாததால் அவர், "இவன் தயாரித்தபடி பேசுகிறான்" என்றார். பாவம்! சுவாமிநாத ஐயரை அப்பொழுது பார்க்க வேண்டும்! அழாத தோஷம், அவர் மனம் பதறி விட்டது.

கோபம் வந்துவிட்டால் எவரையும் தூக்கி எறிந்து விடுவார். அந்தக் காரணத்தினாலேதான் அவரிடம் டேவிஸுக்கு மிகுந்த கௌரவம் ஏற்பட்டதாக ஊகிக்கவேண்டும். ஏனென்றால் ஜட்ஜ் டேவிஸும்

கோபத்தை அடக்கத் தெரியாதவர்தாம். ஒரே சுபாவ முள்ள இருவருக்கும் ஒருவரை யொருவர் காண அநு தாபம் ஏற்பட்டதிலும் ஆச்சரியம் இல்லை அல்லவா! சுவாமிநாத ஐயர் 1887-ஆம் வருஷத்தில் முன்சீப் அதிகாரத்தை ஒப்புக்கொண்டு தஞ்சையை விட்டுக் கிளம்பி விட்டார்.

தம் தம்பியின் செலவுக்காக அக்காலங்களில் அவர் பணம் அனுப்பிவந்தார் என்று சொன்னோம் அல்லவா! அவருக்கு இரண்டு மூன்று குழந்தைகள் அப்பொழுதே பிறந்திருந்தார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தொழில், அபிவிருத்தியாகாத காலமானதால், தமையனாரின் உதவி அவருக்கு மிகவும் அவசியமாகவேதான் இருந்தது. ஆனால் எல்லாம் கூடிய சீக்கிரத்தில் மாற ஆரம்பித்ததையும் நாம் அறிகின்றோம். திருமகளின் கடைக்கண் பார்வை சிறிது சிறிதாகவேதான் அவர்மேல் விழத் தொடங்கியது. அவரும் கிடைத்த வருமானத்துக்குள் எவ்வளவு ஜாக்கிர தையாகக் குடும்பத்தை நடத்த முடியுமோ அவ்வளவு ஜாக்கிரதையாக நடத்திவந்தார். அண்ணாவின் ஆதரவைப் பெறுவதில் உரிமை தமக்கு உண்டென அறிந்தாலும், எவ்வளவு காலம் அவரையே மேல்செலவுக்கு நம்புவது? சதா பிறரிடம் பணம் எதிர்பார்ப்பது, வாழ்க்கைத் தர்மத்திற்கே முரணான கொள்கை அல்லவா? இவ் வெண்ணங்களெல்லாம் சேர்ந்துகொண்டு அதிகச் செலவு களைச் செய்ய அவருக்கு இடம் தரவில்லை. தம் மனைவியின் தலைக்குப் புஷ்பம் சூட்டிக்கொள்வது அநாவசியமென்று நினைத்த விவரந்தான் நாம் அறிந்ததாயிற்றே!

அடிக்கடி வீடுகள் மாறியவர், 1888-ஆம் வருஷம் பிறந்த பிற்பாடு மயிலாப்பூர் தெற்கு மாடவீதி வீட்டில் வசிக்கத் தொடங்கியதும், அவ்வீடு நிலைத்துவிட்டது. அவருடைய நண்பர் பி. ஆர். சுந்தரம் ஐயரும் வேறு இடங்களுக்கு மாறவில்லை. தொழில் துறையில்மேம்பட்ட சிநேகங்களுக்கும், தொழில் சம்பந்தமான பிற காரியங் களுக்கும் நண்பர்கள் இருவரும் பங்காளிகளாக ஆனார்கள். இருவரும் கோர்ட்டுக்குச் சமுத்திரக்கரை வழியாகவே

ஒரே குதிரைவண்டியில் ஏறிச் செல்வார்கள். ஒருவருக்கு ஒருவர் எதிர்க்கட்சியில் ஆஜராகத் தொடங்கியுங்கூட இப்பழக்கத்தைச் சிநேகிதர்கள் விடவில்லை. காரணம் சிக்கனக் குடித்தனத்தின் முக்கிய நோக்கந்தான். ஏனென்றால் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத பல சட்டப் பத்திரிகைகளைச் சொந்தத்தில் வரவழைக்க நேரிடவே, மற்றச் செலவுகளை எவ்விதத்திலும் குறைப்ப தென்று தீர்மானித்தார்கள். வேறு பல மாகாண ஹைகோர்ட்டுக்களின் தீர்ப்புக்களையும், சீமைத் தீர்ப்புக் களையும் அவசியம் வாசித்து அறிந்து மனத்தில் வைத்திருப்பது உபயோகத்தைத் தரும் என்று அவர் களுக்கு எப்பொழுது தெரிந்ததோ, அப்பொழுது முதல் அச்செலவைச் செய்வதற்குத் தயங்காமல் மற்றச் சௌ கரியங்களையும் விட்டார்கள். இன்னும் பல காரியங்களைத் தாங்களாகவே மேற்கொண்டதனால் குடும்பச் செலவுகளை வரையறைக்குள் வைப்பது உசிதம் என்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

சுந்தரமையரிடம் நண்பருக்கு ஏற்பட்ட மதிப்பிற்கு முதற்காரணம், அவர் தம் தலைவரான மணி ஐயருக்கு இவரை அறிமுகம் செய்வித்ததுதான். அதற்குமுன் கிருஷ்ணஸ்வாமிக்கு ஐயரவாளுடன் நேரில் பரிசயம் கொஞ்சமும் இல்லை. மேலும் சுந்தரமையர் செய்ததில் பெருந்தன்மை ஒன்று விளங்கியது. தாம் முன்னுக்கு வரவேண்டி இருந்த காலத்தில், தம்மைப் போலவே சுறுசுறுப்பும் புத்திவேகமும் படைத்த இளைஞரான மற்றொருவரைத் தயக்கமின்றித் தம் குருவினிடம் சேர்த்தது, எந்நாளும் நன்றியில் நண்பரை ஆழ்த்தியது.

இதைத் தவிரவும், சுந்தரமையர் கோர்ட்டில் காட்டிய அசாதாரணப் பேச்சு வன்மையும் நண்பரை அவர்பால் வசீகரித்தது. கச்சேரியில் வாதாடுகையில் வார்த்தைகளின் தொடர் தமக்கு ஒரே விதம் வராது இருந்ததையும், பாதிரிமார்கள் மேடை ஏறிப் பிரசங் கங்கள் செய்யும்பொழுது வெளிவருவது போன்ற ஒரே ரீதியான குரலோசையும், ஏற்றத் தாழ்வின்றிக் கோவை

யான வாதங்களும் சுந்தரமையரிடம் புலனுவதையும் பார்த்து அவைகளில் ஆசை இல்லாமல் இருக்குமா?

ஆனல் சிவஸ்வாமி ஐயருடைய பழக்கம் குறைவதற்கும், சுந்தரமையருடன் நட்பு அதிகரிப்பதற்கும் இவைமட்டும் காரணமாக இரா. ஓரளவு சுபாவத்தின் வேறுபாடுகளும் ஒற்றுமைகளுமே உலகிலுள்ள நட்பின் ஆர்வத்தைக் குறைக்கவும் பெருக்கவும் தூண்டுகின்றன. சிவஸ்வாமி ஐயர் எதிலும் மெதுவாகவே பிரவேசிப்பார். நிதானம் என்பதை நெறியாகக் கடைப்பிடிக்கும் ஆற்றல், தொழிலிலும் சிறப்படைந்தது. பிழை இன்றி இருந்தாலொழிய, ஒருவிதமான அபிப்பிராயத்தையும் வெளியிடமாட்டார். கச்சேரியில் காரியங்கள் வெகு துரிதமாக நடக்கையில், எடுத்ததற் கெல்லாம் சந்தேகப்படும் குணமும், திடீர் திடீரென்று உண்டாகும் சிக்கல்களை அகற்றுவதற்கு ஏற்ற புத்தி வேகமும் இல்லாதிருப்பது அவ்வளவு உயர்ந்த லக்ஷயம் ஆகாது. கிருஷ்ணஸ்வாமியும் சுந்தரமும் வேகமாய் விஷயங்களில் புகுந்தது மட்டும் அல்லாமல் வாயடி அடித்துக் குறுக்குக் கேள்விகளையும் கேட்டு, எதிரிகளையும் ஆயாசத்திற்கு உள்ளாக்கி விடுவார்கள். தாங்கள் பின்பற்றும் வழியைப்பற்றிச் சிறிதளவும் சந்தேகம் அவர்களிடம் இல்லை. அதிலும் சுந்தரமையரைவிட அவர் நண்பருக்குப் பொறுமை என்பது லவலேசமும் தெரியாது. இவையெல்லாம் சேர்ந்துதான் சிவஸ்வாமி ஐயரும், தமக்குத் தொழிற் பழக்கம் அதிகமான நாட்களில் பழையபடியே பால்ய சிநேகிதரை அணுகுவதற்குத் தயக்கம் கொள்ள நேர்ந்தது.

சில தவறுதல்கள் அவரிடமும் உண்டு. சாதாரணமாய்ப் பிறருடைய தன்மையை அறிவதினுல் தம் இயல்பைச் சற்றும் மாற்றிக்கொள்ள மாட்டார். சுவாரஸ்யமாய்க் கடற்கரை மணலில் இருந்து சம்பாஷிக்கையில், கிருஷ்ணஸ்வாமி ஆங்கில வார்த்தைகளைப் பேச்சில் கலந்து கொட்டி விடுவார். உணர்ச்சி, புத்திவேகம் இவைகள் அவரிடம் நிறைந்து இருந்ததால், தம்முடைய வார்த்தைகளை எவ்விதம் சேர்ப்பது என்பது பற்றி அவருக்குக் கவலை

இல்லை. ஆனால் எதிரில் உட்கார்ந்து கவனிக்கும் சிவ ஸ்வாமி ஐயருக்கு எங்காவது ஆங்கிலப் பதப்பிரயோகம் சரியானபடி இராவிட்டாலும், அல்லது உச்சாரணக் கோளாறு தெரிந்து விட்டாலும் மற்றவைகளில் கவனத்தைச் சற்று நிறுத்திக்கொண்டு, நண்பருடைய சொல்லைத் திருத்த முற்படுவார். பாவம், கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய பொறுமைக்கு அப்புறம் இடம் ஏது? "உமக்கு இதிலெல்லாந்தான் திருஷ்டி; நான் சொல்ல வந்ததை இனிமேல் சொல்லாதிருக்க வேண்டியதுதான்" என்பார் உடனே.

இரண்டு இருதயங்களும் ஒருவரை யொருவர் நன்கு நிர்ணயித்திருப்பினும், சுபாவ வேறுபாடுகளினால் ஒரே மனத்துடன் எல்லாவற்றையும் பார்க்க முடியாமல் நின்றுவிடும். சுந்தரமையரிடம் இவ்வித வேறுபாடுகள் உண்மையில் இல்லையோ, அல்லது அவருடைய வாழ்க்கை லக்ஷயங்களே தனிவழியில் இருந்ததால் தமக்கு முற்றிலும் அவசியமெனத் தோன்றாத விஷயங்களில் ஒற்றுமையைத் தெரிவிப்பதில் தவறு என்ன என்று எண்ணியதனாலோ, அநேகமாய் நண்பருடன் பலவிதமான காரியங்களிலும் முயற்சிகளிலும் சேர்ந்து ஒத்துப் போவார். இதுவேதான் புதிய நட்பு, வெளியில் பலருக்குப் பிரமாதமாய் வளர் வதாகத் தோன்றியதற்குக் காரணம்.

இரண்டு நண்பர்களின் குடும்பங்களும் சேர்ந்து ஒன்றோடொன்று பழகி வளர ஆரம்பித்தன. 1889-ஆம் வருஷத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு மூத்தபெண் பாலசுந்தரி பிறந்துவிட்டாள். தாய், தன்னுடைய பிறந் தகத்தில்தான் முதல் குழந்தையைப் பெற்றாள். கிருஷ்ண ஸ்வாமி ஐயரின் எளிய குடும்பம் பெருக ஆரம்பிக்கவே உறவினர்களின் கூட்டமும் சேர்ந்து, வீடு நிரம்பியிருந்தது. அவருடைய நண்பரின் குடும்பமும் அதே அளவில் உற்றாரும் உறவினரும் சேர்ந்து அதிகமாய்ச் சோபித்தது.

இரு குடும்பங்களும் கலந்து பழகிய காலங்களில் அவர்களுக்கு எத்தனையோ வித அநுபவங்கள் உண்டு. ஒரு சமயம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் திருடனைப் பிடித்த

கதையை வெகுகாலம் வரையிலும் இரு குடும்பத்தினரும் ஞாபகத்தில் வைத்திருந்ததைக் குறிக்கவேண்டும். ஓர் இரவு பிற்பகுதியில் வீட்டில் ஆள் ஒருவன் சந்தடி இன்றி நடக்கவே, விடிவிளக்கின் வெளிச்சத்திஞல் அவனுடைய நிழல் சுவர்மேல் விழுந்தது. அப்போது விழித்துக்கொண்டிருந்த கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அது தெரிந்துவிட்டது. உடனே அவர் தம் தைரியத்தை இழக்காது யோசனையோடு அசைவற்றுப் படுக்கையில் படுத்திருந்தார். ஆனல் திருடன் வந்த அரவத்தைக் கேட்டு அவருடைய மாற்றாந் தாய் மெள்ள, "யார்?" என்று வினவினுள்; பயம்கொண்ட திருடன் எஜமானர் படுத்திருந்த கட்டிலின் கீழே பதுங்கிக்கொண்டான். கட்டிலின்மேல் சயனித்திருந்தவரின் மனம் எவ்விதம் அச்சமயத்தில் அமைதியாக இருந்ததோ தெரியாது. அவர் தூங்குவதுபோல் பாசாங்கு செய்து படுத்திருந்தார். சப்தம் அடங்கியதும் திருடன் கீழே பதுங்கிய இடத்திலிருந்து எழுந்து மெள்ளத் தவழ்ந்து சென்று அடுத்த அறையின் வாசலை அடையலானுன். அதுவரையில் அமைதியாக இருந்த அந்தத் தீரர், மறுகணம் ஒரே பாய்ச்சலில் தாவி அவன்மேல் விழுந்தார். திருடன் இவ்விதமான அபாயத்தை எதிர்பாராதவனுனதால் நடு நடுங்கிப்போய்த் தப்பியோட முயன்ருன். வலிவுமிக்க தேகம் படைத்த கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவனைப் புரட்டிக் கீழே தள்ளி அவன் மார்பின்மேல் உட்கார்ந்துகொண்டு அவனைக் குத்திக்குத்தி அடக்கிஞர்.

இதற்குள் வீட்டில் எல்லோரும் எழுந்துவிட்டார்கள். பக்கத்து வீட்டில் உள்ளவர்களுக்கும் இந்த இரைச்சலைக் கேட்டு விழிப்பு ஏற்பட்டது. அங்கிருந்து அவர்களும் ஓடி வரவே, பலர் சேர்ந்து திருடனைப் பிடித்துத் தூணில் கட்டி, அடித்தார்கள். பொழுது விடிந்த பின்பே திருடனுக வந்தவன் கொஞ்சகாலத்துக்கு முன்பு பரிசாரகனுக இருந்த ஒரு பிராமணப்பையன் என்றும், வீட்டை விட்டுப் போன பின்பும், உளவு தெரிந்துகொண்டு திருட்டுத் தொழில் செய்யவந்தான் என்றும் பலரும் அறிந்தார்கள். புதிதாகத் திருட்டு தொழில் செய்த காரணத்திஞல்தான் அவனுக்குத் தப்புவதற்கு வேண்டிய தைரியமும் சமயோசித புத்தியும்

இல்லை. ஆனால் விடிந்த பிறகு அல்லவா இவ்விஷயம் தெரிந்தது? கிருஷ்ணஸ்வாமி ஐயரின் துணிவைக் கேள்விப் பட்டு ஸர். வி. பாஷ்யமையங்கார், "என்ன, கிருஷ்ண ஸ்வாமி ஐயர், நீங்கள் போலீஸ் இலாகாவிலும் வேலை பார்க்கத் தகுந்தவர் என்பது இதுவரையிலும் எனக்குத் தெரியாதே!" என்று ஆச்சரியப்பட்டாராம்.

முன்யோசனையும், துணிச்சலும் அவருக்கு இருந்ததை அக்காலத்தில் அவரை அறிந்தவர்களில் பலர் பிற்பாடு கதையாகச் சொல்லுவார்கள். அவருடைய உயரம் அவ்வளவு அதிகமில்லை. ஐந்து அடி எட்டு அங்குலத்துக்கு குறைவுதான். அதனால் சற்றுப் பருமனான தோற் றத்தையே பெற்றிருந்தார். ஆனால் இடுப்புக்குமேல் நிமிர்ந்த மார்பும், அதைவிட நிமிர்ந்த தலையும் தோள் களின்மேல் காணவே, பார்த்தவுடன் பயமே உணராத தோர் தோற்றம் அவரிடம் பிறருக்கு விளங்கும். வெளித் தோற்றத்திலேயே தைரிய மிகுதியின் சின்னங்களான களங்கமற்ற பார்வை, வேகமான நடை முதலியவைகள் அவரிடம் சிறு வயசிலேயே தெரிந்தன.

அவருடைய தைரியத்தைப் பரீக்ஷிக்கவே திருடர் சம்பந்தமான சம்பவங்கள் அவருக்குப் பின்னும் பல ஏற்பட்டன. ஒரு சமயம் நண்பர்கள் இருவரும் விசாகப் பட்டினத்தில் பெரிய வழக்கு ஒன்றின்பொருட்டுச் சென்றிருக்கையில், ஊருக்கு வெளியில் ஒரு விடுதியில் தங்கினார்கள். நல்ல பணத்தொகையை அன்றாட நடவடிக் கைக்காகக் கையில் ரொக்கமாகப் பெற்றுக்கொண்டு ஊக்கத்தோடு வழக்கை நடத்திக்கொண் டிருந்தார்கள். ஓர் இரவு தீவட்டிக் கொள்ளைக்காரர்கள் வெளியூர், வக்கீல்களின் சமாசாரத்தை முழுவதும் அறிந்துகொண்டு இரவு பெரிய கூட்டமாக வந்து, எல்லோரையும் எழுந்திருக்காதபடி காவலில் வைத்துவிட்டுப் பெட்டிகளை அப்புறப் படுத்திவிட்டார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயர் பயம் அறியாதவர் அல்ல; மேலும் பயம் தெரியவேண்டிய சந்தர்ப்பந்தான் அது. திருடர்களின் கூட்டமோ அதிகம். மேலும் அவர்கள் கைகளில் ஆயுதங்களும் இருந்தன.

ஆகையால் 'சிவனே' என்று பொழுது விடியும் வரையில் படுக்கையில் கிடந்துவிட்டு, பிற்பாடு போலீஸின் உதவியை வைத்துக்கொண்டு திருடர்களைக் கண்டு பிடிக்கப் பாடுபட்டார். ஆனால் ஒன்றும் பிற்பாடு பலிக்க வில்லை. நண்பர்கள் இருவர்களிடமும் ரூபாய் இரண் டாயிரம் வீதம் பொருள் களவாடப்பட்டது. இதுதான் வழக்குக்கென சென்ற கதையின் முடிவு.

இதிலிருந்து தெரிவது கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தைரியமும் கால தேச வர்த்தமானங்களுக்கு உட்பட்டது என்பதே. "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை" என்பது குறள் கூறும் உண்மையல்லவா! வாஸ்தவத்தில் அசட்டுத் தைரியம் பிரயோசனம் இல்லை. பலம் அதிகரித்த திருடர் களை ஆயுதங்கள் இல்லாமல் எதிர்ப்பதும் தவறு. முன் ஜாக்கிரதைகள் இன்றிப் பிற்காலங்களில் அவர் எங்கே சென்றாலும் இரவில் தங்குவதில்லை. எவ்வளவு பாது காப்புகள் இருப்பினும் தாமும் ஒரு தடவை, வீட்டில் தாழிட வேண்டிய கதவு முதலியவைகளைக் கவனித்து விட்டேதான் கடைசியாகச் சயனிக்கச் செல்லுவார்.

மற்றொரு மறக்கத்தகாத சம்பவம், இரண்டு வீட்டுக் குழந்தைகளும் மெத்தைக் கூரையில் நெருப்பைப் பற்ற வைத்துவிட்டதுதான். மாடியில் விளையாடிய சிறுவர்கள் விளையாட்டின் நடுவில் தீக்குச்சியைக் கொளுத்தி வெளியே எறிந்துவிட்டார்கள். அது கீற்றுக் கூரையில் விழவும் 'பகீர்' என்று கூரை பற்றிக்கொண்டு விட்டது. வீட்டில் கீழே இருந்த தாய்மார்களின் மனம் தவித்து விட்டது. குழந்தைகளைக் காணாமல் பயந்தவர்கள் பிற்பாடு அவர் களைக் கண்டுபிடித்துக் கீழே கொண்டு வந்தார்கள். தீயையும் அதிகம் பரவாமல் அணைத்து விட்டார்கள். மெத்தை பீரோக்களில் வைத்திருந்த சில புத்தகங்கள் மட்டும் தீப்பட்டு அரைகுறையாகச் சேதம் ஆயின.

இரண்டு குடும்பங்களும், குழந்தைகள் பள்ளிக் கூடம் போவதற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்வ திலுங்கூடச் சேர்ந்தே யோசிப்பது வழக்கம். எல்லாம் சிக்கனமான வாழ்க்கையையே லக்ஷ்யமாக வைத்திருந்த

தனுல் ஏற்பட்டவை. பிற்பாடு 1898-ஆம் வருஷம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் லஸ்ரோட்டில் பங்களாவை வாங்கினுர் ; அவருடைய நண்பர் அவர் வீட்டின் எதிரே இருந்த பெரிய நிலத்தை விலேக்கு வாங்கி ஒரு மாளிகையை அதில் கட்டத் தொடங்கினுர். சுந்தரமையரின் பங்களா கட்டி முடிவதற்கு வருஷம் ஒன்றுக்குமேல் ஆகிவிட்டது. பெரிய உயர்ந்த அழகான கட்டடமல்லவா அது ! அது வரையிலும் கூடச் சிநேகிதரையும் அவர் குடும்பத்தி னரையும் விட்டு விலக மனமில்லாமல், நண்பருடைய பங்களாவின் மேலண்டையில் இருந்த மற்ருெரு சிறு பங்களாவை வாடகைக்குப் பேசிக்கொண்டு வசித்து வந்தார்போலும்.

லஸ்ரோடு அக்காலங்களில் காட்டுக் கோயில் தெரு என்பதற்கு ஏற்றவாறே மரங்களடர்ந்த வனம் மாதிரி காணப்படும். எங்கும் ஆலமரங்களின் நிழலும், இரவில் தெருவில் நடப்பதற்குக்கூட பயப்படும்படி விஷ ஜந்துக்கள் ஊர்ந்துகொண்டும் இருப்பது சகஜம். பங்களாவிலும் உயர்ந்தோங்கிய மாமரங்களும், அடர்ந்த புதர்களும் நிறைந்திருந்ததால், இரவில் பாம்பு, தேள் முதலியவைகளே அடித்துப் போடுவதுதான் தொழிலாக இருந்தது. பங்களாவின் எதிர் வாடையிலும் வாழைத் தோட்டங்களும் ஏற்றத் துரவுகளும் பல இருந்தன. நரி ஊளே இடும் சப்தமே தூக்கத்திற்குத் தாலாட்டாக ஏற்பட்டது.

காலேயில் எழுந்ததும் கால்நடையாகச் சிநேகிதர்கள் வெகு தூரம் சென்று உலாவி வருவதுண்டு என்பது ஏற்கனவே அறிந்தது. ஆனுல் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு பென்னுத்தூர் சுப்பிரமண்ணிய ஐயரின் சிநேகிதம் ஏற்படவும் விடியும் நேரத்தில் குதிரை சவாரி சிறிது வைத்துக்கொள்ள வேண்டுமென்ற ஆசை பிறந்தது. கொஞ்ச காலம் குதிரை ஏறிப் பழக்கமும் செய்தார். ஆனுல் அப்பழக்கம் நீடிக்கவில்லே. புத்திமானிடம் மரியாதையாக நடந்துகொள்ள, குதிரைக்குத் தெரியவில்லே. ஒரு நாள் தன் மேல் ஏறியவர் போட்ட சப்தத்தில் குதிரை

மருண்டு அவரை இழுத்துக்கொண்டு ஓடிச்சென்று கீழே யும் தள்ளிவிட்டது. அவரும் குதிரையின் தாமதத்திற்கும் தம் வேகத்திற்கும் ஒத்து வராததை அறிந்து குதிரைச் சவாரி செய்யும் பழக்கத்தை அன்றுடன் விட்டு விட்டார். சிறு பிராயத்திலும் மாணவராயிருந்த காலங் களிலும் அதிக தேகப் பயிற்சிகளைச் செய்யாவிட்டாலும், அவைகளில் என்றுமே அவருக்கு அலக்ஷியம் இல்லை. டென்னிஸ் முதலிய விளையாட்டிலும் அவருக்கு வெறுப்புக் கிடையாது. தம் பங்களா தோட்டத்திலேயே அவை களுக்கு வேண்டிய ஏற்பாடு செய்திருந்தார்.

பங்களாவிற்குக் குடும்பம் வந்ததற்கு அடுத்த வருஷம் தம் முதல் பெண்ணின் கல்யாணத்தை விமரிசை யாகச் செய்தார். பென்னுத்தூர் சுப்பிரமணிய ஐயரின் உதவியால் அக்காலத்தில் புதிதாக வந்திருந்த 'போனுகிராப்' என்ற கருவியை கல்யாணத்தில் உபயோகப்படுத்தி னார்கள். சென்னையில் 'கிராமபோன்' கூட வராத காலம் அது. கேட்கவேண்டுமா கல்யாணத்திற்கு வந்தவர்களின் விநோத அநுபவத்திற்கு ?

இரண்டாவது பெண்ணான சுப்பலக்ஷ்மி மிகவும் புத்தி சாலி என்று பெயர் வாங்கியவள். அவளுடைய. அறிவு, அவள் வயசுக்கு மேல் மிகவும் தீக்ஷண்யமானது. சிறுமி யாக இருக்கையிலேயே அவளை எங்கள் தாய் அடிக்கடி 'இவள் பிள்ளையாய்ப் பிறந்திருக்கலாகாதா ?' என்பாளாம். அதற்குக் காரணம் குழந்தையின் புத்தி விசேஷத்தைத் தாய், மெச்சியது அல்ல. அவளுடைய பழக்கங்களும் பேசும் தோரணையும் சற்றும் பெண்களின் தயக்கமுள்ள இயல்பை ஒட்டிப் பின் செல்வதாக இல்லாமையால் அன்னைக்கு அவளை அப்படி வருணிக்கத் தோன்றியது. அவள் கல்விப் பயிற்சியிலும் நுட்பம் வாய்ந்தவள். அக்காலங்களில் அடையாறு சமீபமுள்ள பெண்களின் பள்ளிக்கூட மொன் றில் தலைமை உபாத்தியாயினியாக இருந்த மிஸ். கோர்ட்டு ரைட் என்னும் ஆங்கிலமாது, சுப்பலக்ஷ்மியின் சாணை தீட்டிய அறிவைப் புகழ்ந்து தகப்பனுருக்கு எழுதினாள்: *

*கடிதம் 4—10—1904

"இங்கு ஹிந்துப் பெண்களின் பள்ளியில் வாசிக்கும் பெண்களைக் கூர்ந்து கவனித்து வருகிறேன். தங்கள் குமாரி சுப்பலம் மிகவும் புத்திசாலிகளான பெண்களில் ஒருத்தி என உணர்ந்ததே இக் கடிதம் எழுதுவதற்குக் காரணம். தங்கள் பெண்ணை ஞாயிறு தோறும் காலையில் என்னிடம் தனிமையில் பாடம் கற்றுக்கொள்ள அடையாற்றுக்கு உங்களால் அனுப்பமுடியுமா என்றறியவேதான் இதைச் சொல்லுகிறேன். சுப்பலத்தின் புத்தி விசேஷங்களை நன்கறிந்து அவைகளுக்குத் தக்கவிதம் இது வரையும் படிப்புச் சொல்லி வைக்காததையும் உணர்ந்து வருந்துகிறேன்."

சிலர், வெள்ளையர்கள் இந்தியப் பெண்களைத் தங்கள் பால் வசியம் செய்யும் வகைகளில் இதுவும் ஒன்று என நினைப்பார்கள். தங்கள் ஊதியத்தை அதிகமாக்கிக் கொள்ளத் தனிகர்களிடம் காட்டும் பாசாங்கு என்பவர்களும் இருப்பார்கள். ஆனால் அவள் மேலே கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது வருமாறு:

"என்னிடம் பாடம் சொல்லிக் கொள்வதற்காக தாங்கள் ஒன்றும் பணம் தரவேண்டாம். குழந்தைகளிடம் எனக்கு உள்ள அன்பிற்கும் கல்வி அளிக்கும் ஆர்வத்திற்கும் கூலி வேண்டுமென்று நான் ஒரு நாளும் எண்ணவில்லை."

சுப்பலக்ஷ்மிக்கு வயசு அப்பொழுது பத்துகூட ஆகவில்லை. ஆனாலும், அவளுடைய புத்திவன்மையைப் பார்த்துப் பாராட்டாதவர்கள் வீட்டில் இல்லை. தந்தைக்கும் பெண்ணைப்பற்றி மிகுந்த பெருமிதம் உண்டு. தம்மைப் போன்ற சுபாவம் உள்ளவள் அவள் மட்டுமே, என்ற தனி வாஞ்சையும் அதனுடன் சேர்ந்துவிட்டது. ஆகையால் அவள் ஏதாவது குழந்தைகள் செய்யும் பிடிவாதங்களைச் செய்தாலும், அதிகமாக அவளைக் கோபிக்கமாட்டார். பிற்காலத்தில் ஒரு சமயம் மிஸஸ். வொயிட்ஹெட் என்னும் வெள்ளைக்காரப் பெண்மணி எழுதிய கடிதத்தில், "நம்மருமைச் சுப்பலம், சாமான்யமானவள் அல்ல; தந்தையின் அசாதாரண புத்தியின் தெளிவையும்* அவருடைய மனத்தின் பரிபாகத்தையும் பெற்றவள்" என்று சந்தேகமறச் சுப்பலத்தின் உயர்வைச் சகோதரிகளுக்கு நினைப்பூட்டினள்.

---

*கடிதம் 1—9—1933

பங்களா குடித்தனம் ஆரம்பித்தது. ஆனால் கிருஷ்ண ஸ்வாமி ஐயரின் வாழ்க்கையின் உயர்வு முன்பிருந்ததை விடப் பதின்மடங்கு அதிகப்பட்டிருந்தது. சிநேகிதர்களும், பெரிய தேசத் தொண்டர்களும் அவருடைய வீட்டிற்குச் சதா வந்து செல்லும் காலம். அவருக்கு எப்பொழுதும் ஊர் வேலையே அதிகம். வீட்டிலும் ஒழிவு கிடையாது. மனைவியுடன் சம்பாஷிப்பது என்பதே இல்லை. இடைவெளியில்லாத தொழில் சம்பந்தமான காரியங்களால் அவர் ஊரில் இருப்பதே குறைந்து விட்டது என்றுகூடச் சொல்லலாம்.

வீட்டிலுள்ள ஸகதர்மிணிக்கு மனக்குறைகள் அதிகம் உண்டு. ஆனால் தன்வசம் பணம் இல்லை, வேண்டிய நகைகள் இல்லை என்ற விதமானவைகள் அல்ல. தன்னைச் சேர்ந்த பந்துக்கள் தன்னிடம் இன்னும் அபிமானமாய் நடந்துகொள்ள வேண்டுமென்றுதான் அவள் ஆசைப் பட்டாள். சதா ராமாயணம் முதலிய புராணங்களைச் சிரவணம் செய்வாள். பிரம்மஸ்ரீ யக்ஞேச்வர தீக்ஷிதர் என்ற வடமொழிப் பண்டிதர் ஒருவர் மயிலாப்பூரில் அக் காலத்தில் இருந்தார். அவர் வீட்டில் வந்து புராணம் வாசிப்பதைக் கேட்டுத் திருப்திபெறும் மனம், வேறு எதை நாடும்? 'கைவல்யம்' என்னும் அரிய தமிழ் நூலை வாசிக்கச் சொல்லி, அதிலுள்ள விஷயங்களைத் தமிழறிஞர்களைக் கொண்டு தெரிந்துகொள்வாள். குடும்பக் காரியங்களைத் தவிர அவள் மனம் ஈடுபட்டது இதில் ஒன்று மட்டுமே.

நகை முதலியவைகளில் அவளுக்கு அதிகப் பிரமை எப்பொழுதுமே இல்லை; இக் குணம் குடும்ப வாழ்வை இன்னும் பல நல்ல விதங்களில் கழிக்கவைத்தது. மனைவியின் மனத்துள் இருக்கும் தவிப்புக்களை அறியாதவர் அல்ல கணவரும். ஆனால் அவர் ஒரு சமயமும் அவளை அணுகி அவளுடைய விருப்பங்களைக் கேட்டறிந்து நிறைவேற்றியவரும் அல்ல. விவேகிகள் இருவருடைய தாம்பத்தியமாகவேதான் அதை நாம் கூற வேண்டும்.

## அத்தியாயம் 5

### தொழிலில் அபிவிருத்தியும் பிரபல வழக்கும்

கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தொழிலில் சிறிது சிறிதாகப் பலவித செளகரியங்கள் ஏற்பட்டன என்பதை அறிந்தோம். சொந்தத்தில் வேலை அதிகம் இல்லாத நாட்களில் சிநேகிதர்களுடைய கட்டுக்களை வாசித்து, அவர்கள் தம்மைத் தங்களுக்குப் பதிலாகக் கோர்ட்டில் பிரஸன்னம் ஆகும்படி கேட்டுக்கொண்ட தருணங்களில், சிறிதும் பின் வாங்காமல் அவர்கள் கட்டுக்களை வாசித்து, அவைகளில் தம்முடைய முழு ஊக்கத்தைக் காட்டுவதிலும், கச்சேரியில் பேசுவதிலும் ஈடுபடத்தொடங்கினார். பேசிய வழக்குகளிலும் ஒருவாறு வெற்றிபெறவும் பாடுபடுவார். தம் நண்பர் சுந்தரமையருக்குத் தொழில் தொடங்கியது முதற்கொண்டு மாதத்தில் இரண்டு மூன்று முறையாவது கோர்ட்டில் அப்பீல்களைத் தாக்கல் செய்வதற்குத் தகுந்த செளகரியம் இருந்தும், தமக்குமட்டும் அந்த விதமான நல்ல காலம் நெருங்கவில்லையே என்று ஒரு பொழுதும் சிநேகிதரிடம் அவர் பொறுமை கொண்டது இல்லை. எப்பொழுதாவது சிநேகிதருக்கு ஊரில் இருக்க முடியாதுபோனால் தம்மிடம் கொடுத்துக் கவனிக்கச் சொன்ன காரியங்களை விடாமல் பார்வையிட்டுப் பொறுப்பையும் நன்கு தாங்கி வருவார்.

வேலை இல்லாத நாட்களே ஒரு வக்கீலுக்குச் சட்ட ஞானம் பெறத் தகுதிவாய்ந்த நல்லகாலம் என்பதைத் தம்முடைய அநுபவ சித்தமாகவே அறிந்தார். ஆராய்ச்சி முறையிலும் ஸதர்லண்டு என்பவரின் ஹிந்துநெறி மொழிபெயர்ப்பை மூலத்துடன் ஒப்பிட்டு, பல பிழைகளை மொழிபெயர்ப்பின் பிரதியில் குறித்திருந்தார். அவருடைய தினசரிக் காரியங்களை அவரே ஞாபகமாக எழுதி வைத்திருப்பதிலிருந்து இது நமக்குத் தெளிவாகின்றது.

அவர் வீட்டில் வீண்பொழுது போக்குவது இல்லை. மெட்றிகுலேஷன் படிப்பிற்காக ஸம்ஸ்கிருதத்தில் பாட புத்தகம் தயாரிக்கும் காரியத்தில், பண்டித நடேச சாஸ்திரி களுடன் சேர்ந்து உழைக்க ஒரு சமயம் ஒப்புக்கொண்டார் என்ற செய்தி இம்மாதிரியான குறிப்பு ஒன்றில் காணப் படுகிறது.* "திக்கற்ற இரு குழந்தைகள்" முதலிய நவீனங் களைத் தமிழில் எழுதிப் பெரும் புகழடைந்த பண்டித நடேச சாஸ்திரிகளே அவர் என்று ஊகிக்கவேண்டி இருக் கிறது. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் புத்தி தொழிலில் முன்னேற்றம் அடைவதுடன் மட்டும் நில்லாமல், பலவிதக் காரியங்களில் ஈடுபடுவதிலும், அறிவை வளர்ப்பதிலும் முயன்றது என்பதை மிகவும் தெளிவாக எடுத்துக் காட்டு கிறது மேலே குறித்த செய்தி.

டாக்டர் ஆபர்ட் என்பவர் அக்காலங்களில் ராஜ தானிக் கலாசாலையில் வடமொழி உபாத்தியாயராகவும், பரீக்ஷை செய்பவர்களை நியமனம்செய்யும் சர்வகலாசாலைச் சபையின் அங்கத்தினர்களில் ஒருவராகவும் இருந்தார். பி. ஏ. பரீக்ஷைக்கு ஸம்ஸ்கிருத பரீக்ஷகராகக் கிருஷ்ண ஸ்வாமியை நியமித்ததிலிருந்து, அவரிடம் ஆபர்ட்டுக்கு நல்ல கௌரவம் இருந்ததென்பது தெரிகிறது. 1890-ஆம் வருஷம் நடந்த பரீக்ஷைக்கு வடமொழியில் கேள்வி களைத் தயாரித்தவர் என் தந்தையே. அது சம்பந்தமாக ஒரு சிறு சம்பவத்தைத் திருச்சி வக்கீலாகிய ஸ்ரீ ஏ. வி. கோபாலாசாரியார் என்பவருடைய குறிப்பு ஒன்று விவரிப்பதைக் கவனிப்போம்.

"பி. ஏ. பரீக்ஷை எழுதுவதற்கு நான் உட்கார்ந்திருந்த சர்வ கலாசாலை மண்டபத்தில்தான் முதல் முதலில் வி. கிருஷ்ண ஸ்வாமி ஐயரை நேரில் பார்த்தேன். அது நடைபெற்ற காலம் 1890-ஆம் வருஷம் ஜனவரி மாதம். அவர் அவ்வருஷம் பரீக்ஷகர் களில் ஒருவராய் எங்களுக்கு வடமொழிப் பாடங்களில் கேள்வி களைக் கேட்டிருந்தார். அவருடைய வினாக்கள் சாதாரணமாக இருக்கவில்லை; ஞானத்தைப் புது முறையில் நன்கு பரிசோதிக்கும் அளவிலே இருந்தன. பரீக்ஷகர்கள் தாங்களே பரீக்ஷை நடக்கும் மண்டபத்தில் மேற்பார்வை இடுவது அக்காலத்திய வழக்கம்.

* தினசரி 1888-ஆம் வருஷம், மார்ச்சு, 5-ஆம் தேதி.

மத்தியான்னம் வடமொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும் பரீக்ஷையை நான் எழுதிக்கொண்டிருக்கையில், டாக்டர் ஆபர்ட்டின் நாய் ஒன்று, மேல் மாடியிலிருந்து பொத் தென்று கீழே விழுந்து, என் மேஜையிலுள்ள காகிதம் மைப் புட்டி முதலியவைகளைத் தள்ளி என்னையும் எதிர்பாராத மன வேதனைக்கு உள்ளாக்கிவிட்டது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் உடனே ஓடி வந்து என்னிடம் மிகவும் அநுதாபம் காட்டி எனக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்ததுமல்லாமல், ஆபர்ட்டை அழைத்து வந்து என்னிடம் மன்னிப்புக் கேட்கும் படியும் செய்துவிட்டார்.''

பரீக்ஷகர் ஒருவர் மேற்பார்வையிடும் கடமையில் காட்டிய சிரத்தையை வெளியிடும் இந்நிகழ்ச்சியில் ஓர் ஆச்சரியமும் இல்லை. ஆனால் பிற்பாடு அவரிடமே தொழில் பயின்ற ஏ. வி. கோபாலாசாரியாருக்கு என்றும் மறவாத அநுபவமாக இருந்தது யாதெனில், கிருஷ்ண ஸ்வாமி ஐயர் இளைஞர்களிடம் எதிர்பாராதவாறு காட்டிய அநுதாபத்தின் ஆழ்ந்த உணர்ச்சியே. கோபாலாசாரியார் வடமொழி பயின்ற தற்கால அறிஞர்களில் மிகவும் போற்றப் பெற்றவர் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

தொழிற் பயிற்சியில் மிகவும் செல்வாக்கு வராத காலமாயினும் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் நுண்ணிய அறிவையும், மேதையையும் சரியானபடி அக்காலத்தில் உள்ள பெரியவர்கள் உணர்ந்தார்கள் என்பது சில செய்திகளால் நன்கு வெளியாகிறது. வக்கீல்கள் பலர் ஒன்று சேர்ந்து ஒற்றுமைக்கான பல காரியங்களைச் செய்யத் தகுதியான சபையொன்றை 1889-ஆம் வருஷம் மார்ச்சு மாதத்தில் ஏற்படுத்தினார்கள். அதற்கு அவரையே காரியதரிசி யாகத் தேர்ந்தெடுத்தார்கள். அவர் அன்றுமுதல் பதின் மூன்று வருஷங்கள், அதாவது 1902–ஆம் வருஷம் வரையில் காரியதரிசி பதவியில் இருந்து கொண்டு, "அளவிடமுடியாத முயற்சியினாலும், காரிய நிர்வாக சக்தியின் பெருக்கினாலும் அக்கூட்டத்தின் காரியங்களைச் சிறப்பாகவே நடத்திவந்தார்".* இளமை மாறாதவரும், பொதுக் காரியங்களில் அதிக அநுபவம் இல்லாதவரு

*அட்வகேட் கழகம், பொன்விழா மலர், பக்கம், 102.

மான ஒருவரை இக்காரியத்திற்கு, சபை தோன்றிய வருஷமே நியமித்தார்களென்ற சமாசாரம், அக்காலத் திலேயே அவரிடம் மற்றப் பெரிய வக்கீல்களுக்கு இருந்த முழு மதிப்பையும், பூர்ண நம்பிக்கையையும் நன்ருக எடுத்துக்காட்டுகிறது அல்லவா?

அடுத்தபடி, சட்ட கலாசாலையில் அரிய சட்டஞானம் பெற்ற அநுபவசாலிகளான ஸ்ரீ ராமசந்திரராவ் ராவ்சாகிப் முதலியவர்களுடன் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும் ஆசிரியர் பதவியை அளித்தார்கள். வக்கீல் தொழிலுக்குத் தடை யின்றிச் சட்ட கலாசாலை வகுப்புக்கள் நடைபெறும்படி புதிய சீர்திருத்தத் திட்டத்தின்கீழ் ஏற்பாடாகி இருந்தது. சட்டப் பரீக்ஷைக்குத் தயாராவதற்கு அக்காலங் களில் மூன்று வருஷப் படிப்பு வேண்டியிருந்தது. இந்நாட்களில் உள்ளதுபோல் இல்லாமல், கோர்ட்டு நடவடிக்கை சம்பந்தமான ஞானத்தையும் அம் மூன்று வருஷங்களிலேயே சொல்லி வைத்தார்கள். கிருஷ்ண ஸ்வாமி ஐயர் 'சிவில் நடவடிக்கை முறைகளை' மாணவர் களுக்குப் புகட்டினர். அவரிடம் மாணக்கராக இருந்த ஒருவர் பழைய ஞாபகங்களை எடுத்துச் சொல்லுங்கால், "பாடம் சொல்லும் பொழுது அவரிடம் ஞானத்தின் ஆழமும் தெளிவும் நன்கு தெரிந்தன. சாதாரணமாய்ச் சட்டகலாசாலை மாணக்கர்கள் உபாத்தியாயர்களின் சொற்பொழிவுகளைச் சிறிதும் கவனிப்பது கிடையாது. ஆனல், அவர் அவைகளுக்கு விலக்கான விதத்தில்தான் போதித்தார்'' என்ருர். மற்ருெரு மாணக்கரான வி. ராமேசம் பந்துலு மறக்காமல் குறித்திருப்பது:

"1892-ஆம் வருஷம் முதல், சட்டகலாசாலை உதவி ஆசிரியர் களில் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் ஒருவர். உபந்நியாஸங்கள் சர்வ கலாசாலைக் கட்டடத்தில்தான் நடக்கும். சாயங்காலம் ஆறு மணி முதல் ஏழு மணி வரையும் வகுப்பு நடைபெறும். கிருஷ்ணஸ்வாமி ஐயர் 'சிவில் நடவடிக்கை முறை'களைப் புகட்டுவார். சில சமயங் களில் லிமிடேஷன் சம்பந்தமான ஞானத்தையும் எங்களுக்குப் போதிப்பார். அவர் சொன்னவைகளில் முக்கியமானது 'லிமி டேஷன் சட்டத்தில் அதிகமான விதிகளை ஏற்படுத்துவது சரி அன்று' என்பதே."

மூன்று நான்கு வருஷங்களே சட்டகலாசாலையில் உதவி ஆசிரியர் பதவியில் அவர் இருந்தார். உபாத்தியாயர் களுக்கு நாற்றைம்பது ரூபாய் மாதச் சம்பளம் கொடுக்கப் பட்டது. கலாசாலையில் பி. எஸ். சிவஸ்வாமி ஐயரும் ஹிந்து தர்ம நியாயங்களைப் போதிக்க அவருடன் கூடவே இருந்தார். 1896-ஆம் வருஷம் வரையில்தான் கிருஷ்ண ஸ்வாமி ஐயரால் அந்த ஸ்தானத்தில் இருக்க முடிந்தது. அவருடைய தொழில் சம்பந்தமான அலுவல்கள் வரவர அதிகமாய்விட்டதால், சாயங்காலங்களில் சட்டகலாசாலைக் கடமைகளைச் செய்ய அவரால் முடியவில்லை. அடிக்கடி வெளி ஊர்களுக்கு வழக்குகள் சம்பந்தமாகச் செல்ல வேண்டியிருந்ததாலும் சட்ட கலாசாலை வேலையை அவசியம் விடும்படி நேர்ந்தது.

1895-ஆம் ஆண்டில் சீகாழி சபாநாயக முதலியா ருடைய குடும்ப வழக்கில், பாஷ்யமையங்காருக்கு எதிரில் நின்று, கும்பகோணம் சப் கோர்ட்டில் வழக்கை ஜயித்தார் என்னும் செய்தி அவருக்குப் பல ஊர்களி லிருந்தும் கட்சிக்காரர்களைக் கொண்டுவந்து சேர்த்தது. மிஸ்டர் நார்ட்டனுக்கு எதிரேயும் ஒரு பிரபல வழக்கில் ஆஜர் ஆகி, அதிலும் தம் கட்சியை வலுக்கவைத்த விவரம் அவருடைய சக்தியைப் பிறர் கண்டு புகழும்படி செய்தது.

அக்காலத்தில் பிரான்ஸன் என்ற வெள்ளைக்காரர் சென்னைக் கோர்ட்டில் பிரபலராக இருந்தார். அவருக்கு ஒன்றிரண்டு தடவைகளில் என் தந்தை நடவடிக்கைகளில் உதவி செய்யவேண்டி வந்தது. தலைவருக்கு அவ்வப்பொழுது ஞாபகத்திற்காக விஷயங்களை எடுத்துச் சொல்லும் பழக்கத்தில், தலைவர் கோர்ட்டில் பேசுகையில் அவர் இடையிடையே விஷயத்தைக் குறிப்பித்துக்கொண் டிருந்தார். துரையால் வாதம் செய்ய முடியாமற் போகவே அவர், "என்னைச் சுற்றிச் சதா பேச்சு நடந்துகொண் டிருக்கிறது. என்னால் கோர்ட்டார் முன் என் வாதத்தைத் தடங்கலின்றி நடத்தமுடியாதது பற்றிக் கோர்ட்டார் மன்னிக்க வேண்டும்" என்றாராம். ஜயத்தின்பொருட்டுக் காட்டிய

அளவுக்கு மிஞ்சிய கவலையே அந்த அபவாதத்திற்குக் காரணமாயிற்று. பிற்பாடும் எத்தனையோ அநுபவசாலிகள் அவரிடம் இந்தப் பழக்கத்தை விடும்படி முறையிட்டிருக் கிறார்கள். கோர்ட்டில் எதிர்க்கட்சியைப் பேசவொட்டாமல் இடையே தாமும் குறுக்கு வழியில் பேசும் அவருடைய பழக்கத்தைக் கண்டு சிலர் கலக்கம் அடைந்தது உண்டு. ஆனால் அதற்காகத் தமக்குரிய கடமைகளைச் செய்யாதவ ரல்ல அவர். பலர், 'புத்திசாலிகளின் போக்கு' என்று அதை மன்னித்தும் இருக்கிறார்கள். இன்றும் நீதி ஸ்தலத்தில் வாதங்களின் இடையே எதிர்க்கட்சி வக்கீல்கள் மறுத்துச் சொல்லும் சொற்கள் நம்முடைய காதுகளில் விழுந்துகொண்டுதான் இருக்கின்றன. சிற்சிலர்மட்டும் என்றும் அப்பழக்கத்தைத் தழுவாமல், தங்களுக்கு அவகாசம் கிடைத்தபொழுது மட்டும் வேண்டியதை எடுத்துச் சொல்லும் நெறியை மேற்கொண்டுள்ளார்கள். சிவஸ்வாமி ஐயர் அப்பழக்கத்தை முக்கியமாகக் கடைப் பிடித்தவர்.

சிறு பிராயமானதாலும், தன்னம்பிக்கை உள்ள காரணத்தாலும் கிருஷ்ணஸ்வாமி ஐயரால் நீதிஸ்தலத்தில் அமர்ந்திருக்கும் உத்தியோகஸ்தர்களிடம் அடக்கத்தைக் காண்பிக்க இயலவில்லை. அவரும், அவருடைய நண்பர் சுந்தரம் ஐயரும் அடிக்கடி ஜட்ஜ் முத்துஸ்வாமி ஐயரின் அதிருப்திக்கு வழி செய்துகொண் டிருந்தார்கள். முத்து ஸ்வாமி ஐயரோ பெரிய நிபுணர்; பிரிட்டிஷார்களுடைய இந்திய ஆட்சியின்கீழ்ச் சென்னை மாகாணத்தில் முதல் முதலில் எவருக்கும் கிடைக்கக்கூடாத பதவியை யும் செல்வாக்கையும் அடைந்தவர். அப்பெரியாரின் அதிருப்தியை உண்டுபண்ணிக் கொள்வதில் பயம் இல்லாத இளைஞர்களைப்பற்றி என்ன சொல்வது!

ஒரு நாள் ஜட்ஜ் முத்துஸ்வாமி ஐயர் முன்பாக ஒரு வழக்கை நடத்தவேண்டி வந்தது. எவ்வளவோ நுட்ப மாயும் கட்டுக்களின் விவரங்களை அலசியும் பேசினார் இளைஞர். ஆனால் முத்துஸ்வாமி ஐயரின் தீர்மானத்தை எளிதில் மாற்ற முடியுமா? அவர் கேள்விக்கு மேல்

கேள்வி கேட்டதும் அல்லாமல், வாதாடுகிறவரின் துடுக்கையும் அடக்கிவிட்டார். பாவம்! பொறுமை தெரியாதவருக்குப் பொறுக்க வேண்டிய காலம் வந்தது. ஆனால் தினசரிக் குறிப்பில் மட்டும் தம் கோபத்தை ஓரளவு காண்பித்துவிட்டார்.

"1889-ஆம் வருஷம் ஏப்ரல் 17-ஆம் தேதி:—முத்துஸ்வாமி ஐயரின் கோர்ட்டில் கேசு ஒன்றில் ஆஜர் ஆகவேண்டி வந்தது. ஜட்ஜ் மிகவும் கேவலமாக நடந்துகொண்டார். பதிலுக்கு நன்றாக அவரைக் கொடுக்க வேண்டும்போல் எனக்கும் தோன்றியது. ஆனால் என்னைக் கட்டுக்குள் வைத்துக்கொண்டேன்."

இவ்வாறு உள்ளே குமுறியவருக்குக் கோபத்தை வெளிக்காட்ட வழி இல்லாமற் போனது பரிதாபமான நிலைமைதான்.

சட்டஞானமும், தீர்ப்புகளின் ஞாபகமும் அவரிடம் நன்றாகச் சிறு பிராயம் முதல் இருந்துவந்தன. ஒரு சமயம் நார்ட்டன் காபிரைட் சம்பந்தமான ஒரு வழக்கில் தம் கட்சியை வலிவு பெறும்படி செய்ய முயன்றுகொண் டிருக்கையில், கோர்ட்டில் விசாரணையைக் கவனித்திருந்த இளைஞர் சட்டென்று தம் நினைவிலிருந்து ஓர் ஆங்கிலத் தீர்ப்பை ஞாபகப்படுத்திக்கொண்டு, நார்ட்டனிடம் அதைத் தெரிவித்துவிட்டுப் புத்தகத்தையும் கொண்டுவந்து கொடுத்தாராம். நார்ட்டனும் அந்தத் தீர்ப்பில் நம்பிக்கையை வைத்தே கட்சியைப் பலப்படுத்தி வெற்றியையும் பெற்றதாக வரலாறு. வக்கீல் தொழிலில் உள்ள இளம் புத்திசாலிகளுக்கு இவை சாதாரணமாய்ச் செய்வதற்குரிய காரியம் என்பதில் சந்தேகம் இல்லை.

வெண்பாக்கம் பாஷ்யம் ஐயங்காருக்கு இளைஞர்களான என் தந்தையிடமும், பி. ஆர். சுந்தரையரிடமும் மதிப்பு அதிகம். அக்காலத்தில் சட்ட ஞானத்தில் நிபுணர் என்ற புகழ் பாஷ்யமையங்காருக்கு மட்டுமே இருந்தது. கட்டுக்களைச் சரிவரப் படித்து நுணுக்கமான சட்ட விஷயங்களை அலசிப் பார்க்கும் குணத்தை என் தந்தையிடம் கண்டு அவர் மிகவும் பாராட்டுவாராம். பாஷ்யமையங்காரின் மதிப்பு எவ்வளவு ஆழ்ந்து வேரூன்றி

யிருந்தது என்பதற்கு அத்தாட்சிப் பத்திரம்போலுள்ளது, தம் சொந்த வழக்கில் அவர் கிருஷ்ணஸ்வாமியை வக்கீலாக நியமித்த பெருமை. அச்சம்பவம் நடைபெற்ற காலம் 1899-ஆம் வருஷம். இளைஞரின் வருமானமும் அநுபவமும் ஓரளவு வளர்ச்சி பெற்ற காலம் அது. இருந்தாலும் பிரபல வக்கிலான பாஷ்யமையங்காருக்காக, வேறு பெரியவர்கள் பலர் சென்னையில் இருக்கும் நாளில், அப்பொழுதுதான் தலை தூக்கிக்கொண்டிருந்த கிருஷ்ண ஸ்வாமி ஐயரைப் பொறுக்கி எடுத்தது, இளைஞருக்கு இருந்த புத்திவன்மையை விளம்பரப் படுத்தியது என்றே கூறவேண்டும்.

ஐயங்கார் தொடுத்த வழக்கின் விவரமோ மிகவும் ரஸமானது. பாஷ்யமையங்கார் அக்காலத்தில் சட்ட சபையில் அங்கத்தினரானமையால், கனம் பாஷ்யமையங் காராகவும் விளங்கினர். அவரைச் சென்னையில் தினசரி யாக விளங்கிய 'ஸ்டாண்டர்ட்' என்னும் பத்திரிகை இரண்டு நாட்கள் சேர்ந்தாற்போல் அவதூறு செய்து விட்டது. அதாவது :

"இந்தியர்களில் ஸ்ரீ பாஷ்யமையங்காரைச் சர்வகலாசாலை யின் கமிட்டிக்குத் தேர்ந்தெடுப்பது தவறு. அவர் ஏற்கனவே 'சிண்டிகேட்' அங்கத்தினராய் இருந்த உரிமையில் வேண்டியவர் களுக்குமட்டும் பரீக்ஷகர்கள் ஸ்தானங்களைக் கொடுத்து உதவினர். பரீக்ஷகர்கள் எவ்வளவு, 'சப்பை சோடையாய்' இருப்பினும் சரி, தமக்கு வேண்டியவர்கள், உறவினர்கள், அல்லது தொழில் முறையில் தம்முடன் இருப்பவர்கள் என்னும் பக்ஷபாதமே அவர்களை அவர் நியமிக்கக் காரணமாக இருந்தது. இப்பேர்ப்பட்ட வரைச் சர்வகலாசாலை ரிஜிஸ்டிரார் வேலைக்காக மனுக் கொடுத்த வர்களைப் பொறுக்க ஏற்படுத்தியிருக்கும் 'கமிட்டி'யில் அங்கத் தினராகப் போடுவது சுத்தப் பிசகு. 'வேண்டாம் இப்பதவி' என்று தாமே மறுப்பதுதான் அவருக்கும் அழகு. அந்தக் கமிட்டியில் கொஞ்சமும் பக்ஷபாதிகளாக இல்லாதவர்களையே சேர்க்கவேண்டும்."

ஸ்டாண்டர்ட் பத்திரிகை இரண்டு தினங்கள் விநோதமான இவ்வபிப்பிராயத்தைத் தயக்கமின்றிப் பிரசுரித்தது. இக்கட்டுரை காரணமில்லாமல் தம்மை அவமானத்துக்கு உள்ளாக்கியதாலும், அதனல் கௌரவக்

குறைவு தமக்கு ஏற்பட்டதாலும், பாஷ்யமையங்கார் அந்தப் பத்திரிகையின் ஆசிரியரான ஜி. பரமேசுவரம் பிள்ளையின்மேல் நிச்சயம் வழக்குத் தொடர்வது என்று தீர்மானித்தார். பென்னுத்தூர் சுப்பிரமணிய ஐயரே நடவடிக்கையின் ஆரம்ப விவரங்களைத் தயாரித்தவர். என் தந்தையை, பாஷ்யமையங்கார் தமக்காகக் கோர்ட்டில் நின்று வழக்கை நடத்தும்படி சொல்லியவுடன் அதைத் தமக்குக் கிட்டக்கூடாத பெருமையாக அவர் மதிக்கத் தொடங்கிவிட்டார்; தமக்குக் கிடைத்த தனிப் பாக்கியமாகவே நினைத்தார். இராப்பகலாக அந்த நடவடிக்கையில் மனத்தைச் செலுத்தி, நாட்டில் மிகவும் கௌரவம் பெற்ற தலைவரின்மேல் ஏறிய அவதூறுகள் நிற்காவண்ணம் செய்வதில் அவருக்குப் புதியதொரு வேகம் பிறந்தது.

விசாரணை நடைபெற்ற இடம் போலீஸ் கோர்ட்டு. டபிள்யு. ஈ. கிளார்க் என்பவர் சென்னை மாஜிஸ்டிரேட். டாலி என்பவர் பிரதிவாதியின் வக்கீலாக எதிர்த்தார்.

நடவடிக்கை 1899-ஆம் வருஷம் ஜூலை மாதம் 5-ஆம் தேதி முதற்கொண்டு ஐந்து நாட்கள் நடந்து, தீர்ப்பும் 10-ஆம் தேதி சொல்லப்பட்டது. முதலிலிருந்தே கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் கட்சியைப் பலவிதமான பக்கபலங்களுடன், முன் யோசனையின்றி நடத்தியதாகப் பிற்பாடு தோன்றாமல் இருப்பதற்காக, சரியாக விவரித்தார்.

பிறரைத் தூற்றி அவர்களை அவமானத்திற்குள் கொண்டுவைக்கும் குற்றம் 'கிரிமினல்' குற்றங்களின் நீதிப் பிரகாரம் 499 இந்தியச் சட்டப் பகுதியின் கீழ்த் தண்டிக்கப்பட வேண்டியது. குற்றவாளி இதை நன்கு உணர்ந்திருக்க வேண்டும். அதாவது தாம் சாட்டிய குற்றம் பிராது செய்தவரின் பெயரையும் புகழையும் அதப்பாதாளத்தில் தள்ளுமென்பதை உணராமல் இருப்பது சாத்தியம் அன்று.



ஸர் வி. பாஷ்யமையங்கார்



மணி ஐயர்

தினசரிப் பத்திரிகையில் வெளிப்பட்ட அபிப்பிராயம் கேவலம் கெட்ட எண்ணத்திஞல்தான் ஏற்பட்டது. முதலில் சட்ட ரீதியாய்க் கவனிக்க வேண்டியது, ‘பீனல் கோடு’ பகுதி 499- ஆவதன் விலக்கு விதிகளின்கீழ் இக் குற்றம் வரக்கூடுமா என்பதுதான். குற்றவாளி கோர்ட்டாரைத் திருப்தி செய்யவேண்டிய அம்சங்கள்: (1) பிராது செய்தவர் பக்ஷபாதி ; உத்தியோகங்களைப் பிறருக்கு அளிக்கும் காரியத்தில் அவருடைய பக்ஷபாதம் மிகவும் பேர்போனது ; (2) தாம் சாட்டிய குற்றத்துக்கு ஆதாரமான காரணங்கள் இருக்கின்றன ; (3) பொது ஜனங்களின் நன்மையைக் குறித்தேதான் மேற்படி விவரங்களைக் கொடுக்க நேர்ந்தது.

இவை மூன்றும் கோர்ட்டார்களுக்கு நியாயமாக இருப்பதாகத் தெரிந்தால், பத்திரிகை ஆசிரியரின் மேலிருந்து குற்றம் நீங்கிவிடும். ஒருகால் பொது நன்மையை உத்தேசித்தே உண்மையென்று நம்பி இவ்வித அபிப்பிராயத்தைத் தவறுதலாக அப்பத்திரிகை வெளியிட நேரிட்டதாகக் காண்பித்தாலும், குற்றம் குறையும். ஆனல் மெய் என்று ஒன்றை நம்பி வெளியிடுவது தனி விஷயம். பொய்யான விஷயத்தை நிஜமாகக் காட்டுவது வித்தியாசமான காரியம். ஒரு சமாசாரத்தை உண்மையென நம்பி அதைப்பற்றிப் பிறர் நன்மைக்காக ஒருவர் தம் சொந்த அபிப்பிராயத்தைக் கொடுத்ததாக ஏற்பட்டாலன்றி, 499-ஆம் பகுதியின் விலக்குவிதிகளின் கீழ் வருவது அசாத்தியம் என்றும் நன்கு விளங்கும்படி வாதியின் வக்கீல் எடுத்துச் சொன்னர்.

பீனல் கோடு 499—ஆம் பிரிவின்கீழ், ஒருவன் வார்த்தையிலாவது அல்லது எழுத்திலாவது அல்லது ஜாடை முதலியவைகளினுலாவது மற்ருெருவனைத் தூற்றியதாக ஏற்பட்டால் அவனுக்குத் தண்டனை விதிக்கப்படுவது நிச்சயம் எனக் கண்டிருக்கிறது. ஆனல் விலக்கில்லாத விதி உண்டா? சட்டத்தின்கீழ்ப் பத்து விலக்கு விதிகள், குற்றத்தைச் சாட்ட வகையில்லாமல் செய்கின்றன. முதலாவது விலக்கு: சொன்ன வார்த்தைகள்

பலருடைய க்ஷேமத்திற்கு என உண்மையில் கருதப்பட்டுத் தெரிவிக்கப்பட்டிருந்தால் அவை குற்றமாகா. ஆனல் அவை அவ்விதமானவையா என்று கோர்ட்டார் விசாரணை யில்தான் தீர்மானிக்கப்பட வேண்டும். இரண்டாவது : உண்மையென ஒன்றை நம்பி உரைப்பது ; பொதுஜன ஊழியனொருவனை அவனுடைய பொதுஜனக் காரியத்தில் நிகழ்ந்ததைப்பற்றி மட்டும் கூறுவதாக இருந்தால், அது குற்றமாகாது. மூன்ருவதும் அவ்விதமானதே. சொந்த அபிப்பிராயத்தைப் பொதுஜன வாழ்க்கை சம்பந்தப் பட்ட வரையில் சொல்லுவது குற்றமல்ல. கோர்ட்டு நடவடிக்கைகளைப் பிரசுரிப்பது தவறல்ல. ஆனல் உண்மையான செய்தியாக மட்டும் அவை இருக்க வேண்டும். அடுத்தது, கோர்ட்டில் தீர்ப்பானதைப் பற்றியும், கோர்ட்டில் சாட்சி சொன்னவைகளைப் பற்றியும் அபிப்பிராயம் சொல்வது தவறல்ல. மேலும், பொது ஜனங்கள் முன்னிலையில் செய்த காரியத்தைக் குறித்து, குணதோஷ ஆராய்ச்சி செய்வது நியாயமானதுதான். ஏழாவது விலக்கு : அதிகாரத்தின்கீழ் உள்ளவரைக் கடிந்து சொல்லுவதோ அல்லது சட்டப்படி நடக்க வேண்டியதில் தவறியதற்காக மேலதிகாரி குற்றம் சாட்டுவதோ சரிதான். எட்டாவது : அதிகாரியாயுள்ள வரிடம் அவர் கீழ் வேலை செய்பவனைப் பற்றிப் புகார் செய்வது. அடுத்தது: ஒருவருடைய நடத்தையைக் குறை கூறுவது, உண்மையில் நம்பப்பட்டுப் பொதுமக்கள் நலத்திற்கும் உவந்ததென இருப்பின் தவருகாது. கடைசி யாக: ஒருவரிடம் அவருக்கு மற்ருெருவரால் ஏற்படக் கூடிய அபாயத்தைக் குறிக்கும் மொழிகள் உண்மையில் நல்லெண்ணத்தை முன்னிட்டு உருவாகி இருப்பின், அதிலும் தூற்றும் பழி இருப்பதாகக் கோர்ட்டாருக்குத் தோன்ருது.

எதிர்த்தரப்பினர், தங்களுடைய முயற்சி ஒருகாலும் விலக்கு விதிகளின் கீழ் வழக்கைக் கொண்டுவருவதாக இல்லை என்று எச்சரித்தார்கள். மாஜிஸ்டிரேட்டும் எதற்கு இவ்வளவு முன் ஜாக்கிரதையுடன் பிராது

செய்தவரின் வக்கீல் பேசுகிறார் என்று வாய் திறந்து வியந்துவிட்டார்.

சொந்த அபிப்பிராயத்தை ஒருவர் சொல்வது என்பது சட்ட ரீதியாய் என்ன என்பதையும், ஒரு சமாசாரத்தை உண்மையில் நடந்ததாகக் குறிப்பதுமட்டும் என்ன என்பதையும் தொடர்ந்து கிருஷ்ணஸ்வாமி ஐயர் எடுத்துத் தெளிவுபடுத்தினார். ஒருவன் கெட்ட எண்ணம் கொண்டு மற்றொருவரை அவதூறுக்கு உள்ளாக்கியதாக அவன் உபயோகித்த பாஷையிலிருந்தே தெரிந்து விட்டால், பிறகு அவ்விதம் தான் எண்ணவில்லை என்று கோர்ட்டுக்கு எடுத்துக் காட்டுவது குற்றவாளியின் முழுப் பொறுப்பாகிவிடும்.

இந்த வழக்குச் சம்பந்தப்பட்ட அளவில் குற்ற வாளியின் எண்ணம் அவதூறு செய்யவே ஏற்பட்டதாகக் கோர்ட்டுக்குத் தெளிவுபடுத்த, சில முந்திய குறிப்புக்களை அதே தினசரியிலிருந்து எடுத்துக் காட்ட முடிந்தது. உடனே அந்தப் பிரதிகளைக் கோர்ட்டில் வாதியின் பக்கம் தாக்கல் செய்தார்கள். முந்திய செய்திகளில் ஒன்று, பாஷ்யமையங்கார் சட்டசபையில் நடந்து கொண்ட விதத்தை, 'பல்லைக் காட்டி இளித்தார்' என்று ஏளனம் செய்திருந்தது. மற்றொன்று, "பாஷ்ய மையங்கார் சட்டசபையில் ஒரு தடவையாவது தம் நிஜ எண்ணத்தை வாய்விட்டு வெளிப்படுத்தினாரே!" என்று குத்தலாகச் சொல்லியிருந்தது. அப்படிக் குறிப்பதனால் மற்றச் சந்தர்ப்பங்களில் பாஷ்யமையங்கார் தம் உள்ளத்தைக் கொஞ்சமும் வெளியிடவில்லை என்று ஏற்படுமல்லவா! மேலும் பாஷ்யமையங்காரை அதிகாரி களின் நியமனத்தினால் சட்டசபையில் அமர்ந்தவர் என்று சொல்லி யிருந்தது. வாஸ்தவத்தில் விஷயம் அப்படி அன்று. இல்லாததைச் சொன்னதன் தாத்பரியம், அவர் ஒருகாலும் தம்முடைய சொந்த அபிப்பிராயத்தை வெளிக் காட்டியவர் அல்ல என்றும், சதா அதிகாரவர்க் கத்தின் எண்ணங்களையே கூறியவர் என்றும் குறிப்பிடவே தான். முந்திய பல தடவைகளிலும் அந்தப் பத்திரிகையில்

இவ்விதம் பல கட்டுரைகளைப் பிரசுரித்த விவரத்தைக் கோர்ட்டார் தெரிந்து கொள்ள வேண்டும். அவைகள் ஒவ்வொன்றையும் குறித்துத் தனிப் பிராது செய்ய வேண்டாமா என்பது இங்கே கேள்வி அன்று. தூற்றி எழுதியவர் பிராது செய்தவரிடம் எவ்வளவு காலமாய்க் கெட்ட எண்ணம் கொண்டிருந்தார் என்பதுமட்டுந்தான் இச்சந்தர்ப்பத்தில் முக்கியம்.

அதிகமாக நுண்ணிய விவரங்களினுள் போவது கோர்ட்டாருக்குச் சம்மதம் இல்லாததால், குறிப்பாக வாதியின் வக்கீல் ஒன்றிரண்டை மட்டும் கட்சியின் வலுவிற்காக விவரித்தார். அந்தப் பத்திரிகையில் வெளிவந்த செய்தி ஒன்று பின் வருமாறு:

"ஒரு நாளும் அதிகாரிகளின் கட்சி தோல்வி அடைவதற்கு ஹேது சிறிதும் இல்லை. ஏனென்றால், சட்ட சபையில் பிரிவு ஏற்பட்டு இரண்டு சாராரும் சமமான தொகையாக இருக்கும் சந்தர்ப்பங்களிலெல்லாம், அதிகாரிகளின் செல்லப் பிள்ளையான ஸ்ரீ பாஷ்யமையங்கார், அரசாங்கத்தாருடன் சேர்ந்து கொண்டு தம் வாக்குரிமையைத் தத்தம் செய்துவிடுகிறார்"

என்று எழுதப்பட்டிருந்தது. இதைவிட அதிகமாக ஒருவரைப் பழிக்கவும், தாழ்வாக நினைக்கும்படிச் செய்யவும் முடியுமா?

மற்றொருமுறை அந்தப் பத்திரிகை,

"பெரிய வக்கீலாக அவர் ஆனது முதல், எந்தச் சந்தர்ப்பத்திலும் - ஆபத்திலும் ஸம்பத்திலுங்கூட – அதிகாரவர்க்கத்தையே தொழுது வருகிறார்"

என்று குறை கூறியது. பொறுப்பாளியாக இருக்க வேண்டிய தினசரி ஆசிரியர் ஒருவர், இம்மாதிரி எழுதுவதால் எவ்வளவு அநாவசியமாய்த் தொந்தரவில் மாட்டிக் கொள்ளுவார் என்பது வெட்ட வெளிச்சமாயிற்று.

இன்னும் இம்மாதிரியான அபாண்டச் செய்திகளைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அந்த ஸ்டாண்டர்ட் பத்திரிகையின் பழைய பிரதிகளினின்றும் எடுத்துக் கோர்ட்டாருக்குக் காட்டியதோடு, வழக்கு விவரங்களை மே மாதம் மூன்றாம் தேதி சாயங்காலம் வெளியிட்டதும் அல்லாமல்,

நான்காம் தேதி காலைப் பிரதியிலும் அவதூறு மறுபடியும் வெளியானதை எக்காரணம் பற்றியும் மன்னிக்க இட மில்லை என்பதையும் எடுத்துக் காட்டினார்.

எதிர்க் கட்சியில், மன்னிப்புக் கடிதம் ஒன்றைக் கோர்ட்டில் தாக்கல் செய்திருந்தார்கள். அதைப்பற்றியும் எதிர்த்துச் சொன்னது வருமாறு: "மன்னிப்புக் கேட்பது 'கிரிமினல்' நடவடிக்கைக்குப் பதிலாகாது; சரியான வாதமும் அல்ல." இங்கிலாந்துச் சட்டப்படியும், இந்தியச் சட்டத்திலும் மன்னிப்பு ஒருகாலும் பிராதுக்குச் சரியான பதிலாக நினைக்கப்படமாட்டாது. கோர்ட்டார் மன்னிப் பைச் சற்றும் கவனிக்க நியாயமில்லை என்பதைப் பல ஆங்கிலத் தீர்ப்புகளைக் கொண்டு கிருஷ்ணஸ்வாமி ஐயர் எடுத்துரைத்தார். சீமையில் தினசரிப் பத்திரிகைகளின் வியவகாரங்களுக்கு என்று ஏற்பட்ட தனிச் சட்டத்தின் கீழ், கெட்ட எண்ணம் இல்லாமலும், ஜாக்கிரதைக் குறைவு இல்லாமலும் நடந்துகொண்ட பத்திரிகைகளுக்கு மட்டும், நெறி தவறியதற்கு மன்னிப்பையும், குற்றத்திலிருந்து விடுதலையையும் சில சமயங்களில் அளிப்பதை நினைப்பு மூட்டினார். ஆனால் இவ்வழக்கில் அவ்விதச் சந்தர்ப்பம் ஒன்றும் இல்லை. மேலும், வேண்டுமென்று பாஷ்ய மையங்கார் பிராது செய்வதாக எதிர்க்கட்சி சொல்லியது சுத்தத் தவறு என்றும் வாதித்தார்.

இதைக் கேட்டுச் சற்றுக் கோபமூண்ட பிரதிவாதி வக்கீலான டாலி, "பிராது செய்வது ஒன்றுதான் நியாயத்தை நிலைநிறுத்த மார்க்கம் என்று காட்ட இந்த மேடைப் பிரசங்கங்கள் அவசியமில்லையே!" என்றார்.

பதில் பளிச்சென்று உடனே கிருஷ்ணஸ்வாமி ஐயரிடமிருந்து கிளம்பியது: "ஓகோ! கெட்ட எண்ணங் கொண்டுதான் பிராது செய்யப்பட்டிருக்கிறது என்று சொன்னதே வெறும் மேடைப்பிரசங்கம் என்று நான் இதுவரையில் தெரிந்து கொள்ளாதது என்மேல் பிசகு தான்."

மேலும் மேலும் கட்சி வலுத்தது.

"ஒரு செயலின் குற்றம் அதன் இயல்பிலிருந்து தீர்மானிக்கப் படவேண்டும். வாஸ்தவத்தில் நடந்ததை மட்டும் வைத்துக்

கொண்டு தீர்மானிப்பது தவறு. குற்றம் செய்யும் எண்ணம் நிச்சயம் இருக்கிறதென்று ருசுப்படுத்த வேண்டும். பிராது செய்தவரின் கௌரவத்திற்குக் குறைவு ஏற்பட்டதாக மட்டும் சொல்வது சரியன்று.''

பாஷ்யமையங்காரைச் சாட்சிக்கூண்டில் ஏற்றினார்கள். வாதியின் பக்கம் கேட்க வேண்டிய வாக்கு மூலங்களை அவரிடம் வாங்கிய பிறகு, எதிர்க் கட்சியின் விசாரணைக்கு அவரை உட்படுத்தினர் கோர்ட்டார். நல்ல அநுபவசாலியானதாலும், வாஸ்தவத்தில் பத்திரிகை சாட்டிய அப்பெரிய பழிக்கு ஒருவிதமான ஆதாரமும் இல்லாததாலுமே சரியான பதில்களைப் பளிச்சென்று ஐயங்கார் கொடுத்தார்.

பீனல் கோடின் 500, 501-ஆம் பகுதிகளின் கீழ்க் குற்றம் சாட்டும் தாளைப் பத்திரிகை ஆசிரியரின் பேரில் மாஜிஸ்டிரேட் தயாரித்தார்.

அடுத்தபடி, மன்னிப்புத் தாளைப் பரிசோதித்ததில், குற்றத்தை முழுவதும் ஒப்புக்கொள்ளாமல், கட்டுரையின் அபிப்பிராயத்தைச் சரியாக உணராததால் தவறுதலான கற்பனைக்கு இடமேற்பட்டதாக மட்டும் அதில் கண்டிருந்தது. "அரைகுறை மனத்துடன் கேட்கப்பட்ட மன்னிப்பு, குற்றத்தைப் பின்னும் அதிகப்படுத்தும். முழு மனத்துடன் மன்னிப்புக் கேட்கப்பட்டாலும், கட்டுரைக்குக் கெட்ட எண்ணம் காரணமென்று ஏற்பட்ட பிறகு, அது செல்லாது. ஆகையால் மன்னிப்பைக் கோர்ட்டார் கவனிக்கக் கூடாது'' என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் அழுத்தமாகக் கேட்டுக்கொண்டார். சட்டத் தீர்ப்புகளையும் ஆங்காங்கே சரியான இடங்களில் நீதிபதியின் மனசில் பதிய வைத்தார். கடைசியில் முடிக்கும்பொழுது சொன்ன சொற்கள் சந்தேகமின்றி நியாயத்தைத் தெளிவுபடுத்தின:

"இக்கட்டுரை ஸ்ரீ பாஷ்யமையங்காரை அவதூறுக்கு ஆளாக்கி இருப்பதை ஐயமில்லாமல் ருசுப்படுத்தியாகிவிட்டது. பிரசுரித்த விவரமும் ரூபிக்கப்பட்டது. பத்திரிகையின் தற்காலத்திய பிரபல ஸ்திதியிலிருந்து அவதூறின் பிரசாரம் பரவுவதற்கு இடமிருக்கிறது என்றும் ஏற்படுகிறது. குற்றம் பெரிது என்பதைக் காட்ட, முந்திய ஆறு வருஷங்களாகவே பாஷ்யம் ஐயங்காரின்மேல் வேண்டுமென்று அவதூறைச் சுமத்தியதாகப்

புலப்படுத்தியாகிவிட்டது. குற்றத்திற்குச் சரியான சால்ஜாப்பும் கொடுபடவில்லை; 499-ஆம் பகுதியின் விலக்கு விதிகளின் கீழ் வருவதற்கு எவ்வித ஹேதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால் 'பீனல் கோடு' 499-ஆம் பகுதியின் கீழ் அவதூறு செய்த குற்றம் தண்டிக்கப்படவேண்டியது அவசியம்."

மறுநாள், அதாவது ஜூலை 10-ஆம் தேதி, கோர்ட்டில் பெரிய கூட்டம். மாஜிஸ்டிரேட் என்ன செய்யப் போகிறாரோ என்று எல்லோரும் ஆவலாய்க் கவனித்துக் கொண்டிருந்தார்கள். பாஷ்யமையங்காரின் மீது சுமத்திய அபக்கியாதி அவரை விட்டு அகல வேண்டுமென்றுதான் பலரும் விரும்பினார்கள். அவர் சிநேகிதர்களுக்கு மிகவும் கவலை. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பேச்சைப் பத்திரிகையில் அன்றன்று வாசித்து அநுபவித்த பிரமுகர்கள் நிச்சயம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இதில் வெற்றி கிடைத்தால் கியாதி அதிகமாகிவிடுமென்று எதிர்பார்த்தார்கள்.

ஏற்கனவே வழக்குத் தொடுத்ததும், பாஷ்யமையங் காருடைய நண்பரான ஸ்ரீநிவாஸராகவையங்கார் பரோடாவிலிருந்து தம் கவலையை நண்பருக்குத் தெரிவித் திருந்தார். அதற்குப் பாஷ்யமையங்கார், தாம் கிருஷ்ண ஸ்வாமி ஐயரைத் தம் கட்சிக்காக வாதம்செய்யும்படி கேட்டுக் கொண்டிருப்பதைக் கடிதம் மூலம் பதிலில் தெரிவித்திருந்தார்.

அக் கடிதங்களைக் கிருஷ்ணஸ்வாமியிடம் பாஷ்ய மையங்காரே காண்பிக்கவும், அவருக்குப் பழைய ஞாப கங்கள் மேலிட்டன. தம்மை ஒரு காலத்தில் வக்கீல் தொழிலையே மேற்கொள்ளும்படி வற்புறுத்திய பெரியாரை நினைத்துக்கொண்டு, நன்றியுடன் கடிதமொன்றை எழுதினார்.

"நம் தலைவர், கனம் பாஷ்யமையங்கார் தாங்கள் எழுதிய கடிதத்தை எனக்குக் காட்டினார். என் யோக க்ஷேமத்தில் தங்க ளுக்குள்ள குறையாத கவனத்தைக் குறித்து என்னென்று சொல்லுவது!

"தங்கள் தூண்டுதலின் பேரிலேயே நான் உபாத்தியாய ராவதை விட்டு வக்கீல் தொழிலை மேற்கொண்டேன் என்பது ஞாபகம் இருக்கலாம். தங்களுடைய தளராத உபதேச மொழி களும், அளவு குறையாத அபிமானமுமே என் தற்கால

ஸ்திதியின் ஸௌகரியங்களுக்குக் காரணம். இவைகளுக்காகத் தங்கள்பால் நன்றி செலுத்துவதிலும் எனக்கு மிகுந்த ஆர்வந் தான்." *

எதிர்பார்த்தவர்கள் ஏமாற்றம் அடையாமல் தீர்ப்பும், அநுகூலமாக இருந்தது. தீர்ப்பின் ஸாராம்சம் வருமாறு:

"பிரசுரிக்கப்பட்ட வார்த்தைகள் சட்ட ரீதியாய் ஒருவரை இழிவிற்கு ஆளாக்குமா என்று முதலில் பார்த்து, அவ்வாறு இருப்பதாகப் பட்டால், அவதூறு சுமத்தப்பட்டவரின் ஒழுக்கத்தின் உயர்வை அது மட்டமாக்கியதா என்று கவனிக்க வேண்டியது கோர்ட்டாரின் முதல் கடமை. அவ்விதமாகச் சோதிக்கையில் இந்தக் கட்டுரையின் கருத்து, பிராது செய்தவரை அவமதிப்புக்கு உள்ளாக்கியதல்லாமல், நல்ல பொறுப்பை வகிக்கவேண்டிய ஒரு சர்வகலாசாலே அங்கத்தினரின் பெயரையும் அபக்கியாதிக்கு உரியதாக்கியது என்று தெரிகிறது. மன்னிப்புக் கடிதத்தைப்பற்றி அதிகம் சொல்வதற்கில்லை. ஏனெனில் மன்னிப்பு முழுமனத்துடனும் இல்லை; அது சட்டரீதியாய்க் குற்றத்திற்குச் சரியான உத்தரமும் அல்ல. இதற்குத் தகுந்த தண்டனையை அடைவதே குற்றவாளி பெறவேண்டிய நியாய மான தீர்ப்பு. இரண்டு தினங்களில் பிரசுரித்த குற்றங்களுக்காக, ரூபாய் 400 முதலாவது குற்றத்தின் பேரிலும், ரூபாய் 100 இரண்டாவதற்கும் அபராதம் விதிப்பதுடன், தொகை கொடுபடாவிட்டால் அவைகளுடன் சேர்ந்து மூன்று மாதக் கடுங் காவலும் கொடுக்கப்பட்டிருக்கிறது."

பாஷ்யமையங்காரின் புகழுக்குத் தீங்கு நினைத்தவர் அவமானம் அடைந்தார். ஊரிலுள்ள பத்திரிகைகளுக்கும், இந்தத் தண்டனை பெரிய எச்சரிக்கையாகியது. பெரியவர்களைக் கண்டவாறு இழிவு படுத்தினால் தண்டிக்கப்படுவது நியாயம் என்றும் ஏற்பட்டது. என் தந்தையின் தொழில் முறையின் உயர்வும், பேச்சுத் திறமையும், பிரபலரான மற்றொரு வக்கீலுக்காக அவர் வாதித்த கௌரவமும், தென்னிந்தியாவில் பெரும் புகழை அவர் அடையக் காரணமாயின. பெரியவர்களிடம் அவருக்குள்ள சிறந்த பக்தி வீண்போகவில்லை. இந்திய சமூகத்திற்கே பாஷ்யமையங்கார் வக்கீல் பதவியில் காட்டிய பேரறிவும், செல்வாக்கும், கௌரவமளித்தன என்பது அவருடைய உண்மையான கருத்தல்லவா?

*கடிதம், 31-5-1899.

## அத்தியாயம் 6

### வக்கீல் தொழில் சம்பந்தமான ஊழியங்கள்

**''கல்வியைப்போல் அறிவும்அறி வினைப்போலக் கருணையுமக் கருணை போலப்**
**பல்விதவூக் கங்கள்செயுந் திறனுமொரு நிகரின்றிப் படைத்த வீரன்''**
**— பாரதியார்.**

ஒரு தேசத்திலுள்ள நீதிஸ்தலம் சிறப்படைவது எக்காரணம்பற்றி என்று நோக்குங்கால், நீதிபதி பதவியில் உள்ளவர்களும் நியாயவாதிகளும் ஒருவருக்கொருவர் தகுதியான மரியாதையும், கௌரவமும் காட்டும் விதத்தினுல்தான் என்று உறுதியாய்க் கூறி விடலாம். அதற்கும் பலவிதச் சௌகரியங்கள் வேண்டும். நம் நாட்டில் ஆங்கிலேயர்களின் ஆளுகையின்கீழ் நடவடிக்கைகளில் நியாயம் நிலைக்கச் செய்திருக்கும் ஏற்பாடுகள் அநேகமாய் மேல் நாடுகளினுடைய மரபை அநுசரித்தவையே. நீதி வழங்கும் முறையின் பல அம்சங்களை நாடெங்கும் கீழிருந்து மேல் வரையிலும் அமைப்பாகக் கட்டியிருக்கும் ஒழுங்கு ஆங்கிலேயர்களின் அதிகாரத்தின் கீழேதான் என்றும் சொல்லிவிடலாம். அநேகமாக இங்குள்ள நீதி முறைகளுங்கூட மேல் நாடுகளின் நீதியைக் கடைப்பிடித்தே ஏற்பட்டிருக்கின்றன. சென்னையிலும், அதைப் போல் மற்ற மாகாணங்களில் உள்ள முக்கிய நகரங்களிலும், ஹைகோர்ட்டுகளை ஸ்தாபித்து, நடவடிக்கைகளில் நியாயம் பெறக் கடைசி வரையிலும் கீழ்க்கோர்ட்டுகளிலிருந்து மேல் நீதிஸ்தலம் வரையிலும் ஒருவனுக்குக் கொடுக்கவேண்டிய உரிமைகளைக் கொடுத்திருக்கும் ஒழுங்கு போற்றத்தக்கதாக இருக்கிறது.

'பிரிட்டிஷ் நியாயம்' என்று வெள்ளைக்காரர்கள் தங்கள் நீதிமார்க்கங்களைப் பாராட்டி மார்தட்டுவார்கள். கௌரவம் ஏற்படக்கூடியவாறே நீதி வழங்கப்படும் ஏற்

பாடுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. பிரிட்டிஷ் நியாயம் வெள்ளைக்காரர்களின் ஆட்சி முறையில் குறைவுபடத் தொடங்கி, எத்தனையோ விதங்களில் பரிகாசத்திற்கு இடந் தரும் சொற்களாக ஆகியிருக்கும் காலத்திலும் நாம் வசிக் கின்றோம். வெள்ளைக்காரர்கள் நீதி பதவிகளில் அமர்ந்து தீர்ப்புக்களைச் செய்வதிலும் இடையூறுகள் இல்லாமற் போகவில்லை. ஹிந்து நீதியிலும் முகம்மதியர்களின் நீதிமுறைகளிலும் பிறநாட்டினர் என்ற காரணத்தினால் வெள்ளைக்காரர்களில் பலருக்கு அவ்வளவாக அநுபவம் ஏற்படவில்லை. அவர்கள் அடையக்கூடிய பயிற்சி யெல்லாம் மொழிபெயர்க்கப்பட்ட கிரந்தங்களை வாசித்து அறிவதிலிருந்து ஏற்பட்டதல்லவா? இந்தியர்களில் பலர் நீதிஸ்தலங்களை அலங்கரிக்கத் தொடங்கியவுடன், அவர்க ளுடைய உதவியினால் அநேக விதங்களில் ஹிந்து நீதித் தீர்ப்புக்களில் தெளிவு அதிகம் உண்டாயிற்று.

நம் நாட்டுத் தீர்ப்புக்களைத் தொகுத்து அதிகாரிகளே பிரசுரித்தார்கள். ஆனால் ஐம்பது வருஷங்களுக்கு முன் தீர்ப்புக்களின் தொகுதிகள் இப்பொழுதுபோல் இல்லை. காரணம், ஹைகோர்ட்டுகள் ஏற்பட்டு, நாட்டின் சட்ட முறைகளையும், ஆசார வழக்கங்களையும் மேல்நாடுகளி லிருந்து எடுத்து வந்த சட்டங்களுடன் சேர்த்து ஒன்றி வழங்கப் பிரயாசை எடுத்துக் கொண்டவர்களின் எண் ணிக்கை அதிகம் ஏற்படாததுதான். தீர்ப்புக்கள் வரவர உயர்தரமாகி, ஹிந்து நீதி, முகம்மதிய நீதி, முதலியவை களில் பயிற்சி செய்தவர்களின் புத்தி சோபிக்கத் தொடங் கியது. சட்ட ஞானம் பெற்று வக்கீலாக வந்தவர்களுடைய நுண்ணறிவு முதலியவை பிரகாசித்த பின்பே தீர்ப்புக்களும் மேம்படத் தொடங்கின. சென்னையில் இந்தியர்களில் முதல் நீதிபதியாக விளங்கிய ஸர். டி. முத்துஸ்வாமி ஐயர் வக்கீல் தொழிலிலிருந்து வந்தவரல்ல. ஆனால் அவருக்கு மற்ற எவருக்கும் இல்லாத புகழ் நியாயஸ்தலத்தில் ஏற்பட்டது ஓர் ஆச்சரியம். ஜட்ஜ் மணி ஐயரும், ஜட்ஜ் பாஷ்யம் ஐயங்காரும் நீதி ஸ்தானங்களுக்குச் செல்வாக்கையும் புகழையும் உண்டாக்கினார்கள். பிற

மாகாணங்களிலும், பெரும் கியாதியுடன் எத்தனையோ அறிவாளிகள் நீதிபதி பதவிகளில் வக்கீல் தொழிற் பயிற்சியினால் பக்குவமடைந்த மேதாவிகளாகத் தென்பட்டார்கள். அவர்களுடைய புத்தி விசேஷத்தினால் வெளி வந்த தீர்ப்புக்கள் புத்தகங்களில் நிறைந்தன. ஆனால் கோர்ட்டார் ஆதரவில் பிரசுரித்த தீர்ப்புத் தொகுதிகள் மாகாணத்துக்கு ஓவ்வொன்றுதான் அக்காலங்களில் உண்டாகி யிருந்தன. இவைகளில் எல்லாத் தீர்ப்புக் களுக்கும் இடம் இல்லை; அப்படி இடம் கிடைத்தாலும், மாதத்திற்கு ஒரு பிரதியானதால் கோர்ட்டுகளில் தீர்ப்புக்களை வேண்டிய அளவு எடுத்துக் காட்டத் தொழில் செய்பவர்களுக்குச் சௌகரியம் ஏற்படவில்லை.

மணி ஐயர் சென்னையில் வந்து தொழில் தொடங்கிய அளவில், அவருடைய புத்தி பல துறைகளில் சென்றதுடன் நில்லாமல், தொழில் அபிவிருத்திக்கு இன்றியமையாத தான சட்ட ஞானம் முதலியவைகளிலும் ஊன்றிப் பாய்ந்தது. அம்மாதிரிப் பாயும் புத்தி, தீர்ப்புக்கள் அன் றன்று வெளிவரும் காலங்களில், அவைகளைப் பரிசீலனை செய்து, ஒன்றோடொன்று ஒப்பிட்டு, முன்னுக்குப் பின் ஒவ்வாத யுக்திகளில் குற்றங்களைக் காட்டினால், வழக்காடு கிறவர்களுக்கும், மற்ற நீதி ஸ்தல நிபுணர்களுக்கும் உப யோகமான ஞான ஒளியைத் தருவதாகும் என்று எடுத்துக் காட்டியது. அவ்விதப் பரிசீலனைக்காகத் தம் வீட்டில், அவர், அறிவாளிகளில் சிலரை வருவித்து, அவர்களுடன் தீர்ப்புக்களில் உள்ள குற்றங் குறைகளை ஆராய்ந்து, அள வளாவிப் பேசத் தொடங்கினார். அக்காலங்களில், மணி ஐயருடன் உயர்தரமான பரிசீலனைகளில் கலந்து கொண்ட வர்கள் பாஷ்யம் ஐயங்கார், சிவஸ்வாமி ஐயர், கிருஷ்ண ஸ்வாமி ஐயர், சுந்தரம் ஐயர், தேசிகாசாரியார், ராமசந்திரராவ் ராவ் சாகிப், சங்கரன் நாயர் முதலிய வர்கள்.

புத்திமான்கள் கலந்து முடிவுக்கு வரும் விஷயங்களே தனிச்சிறப்புப் பெற்றவை. ஆகையால் இம்மாதிரி முடிவு களையும் வாதங்களையும் கோவையாகப் புத்தகங்களில்

அச்சிட்டால் பல நீதி ஸ்தல நிபுணர்களுக்கும் தொழில் செய்கிறவர்களுக்கும் உபயோகமாக இருக்கும் என்று அவர்களுக்குத் தோன்றியதில் ஆச்சரியம் இல்லை அல்லவா? சனிக்கிழமை தோறும் மணி ஐயர் வீட்டில் இவர்கள் கூடித் தீர்ப்புக்களில் முக்கியமாக எவைகளில் தங்களுக்குத் தெளிவு வேண்டியிருந்தனவோ, அவைகளைத் தங்கள் பரிசீலனைக்கு உரியனவாகப் பொறுக்கிக் கொண்டார்கள். இவ்வளவும் 1891-ஆம் ஆண்டில் ஸர். டி. முத்துஸ்வாமி ஐயர் நோய் வாய்ப்பட்ட பொழுது அவருடைய நீதிபதி பதவியில், மணி ஐயர் வேலை பார்த்த காலம் வரையில்தான் நடைபெற்றது. இப்பழக்கம் அடுத்த வருஷம் மணி ஐயர் ஜட்ஜாகி விட்டமையால் நிறுத்தப்பட்டிருக்கவேண்டும்.

1891-ஆம் வருஷம் இளைஞர்களில் முக்கியமானவர்களில் சிலர் சட்ட சம்பந்தமான ஒரு பத்திரிகையைத் தொடங்குவதெனத் தீர்மானித்தார்கள். சேலம் ராமஸ்வாமி முதலியார், சி. சங்கரன் நாயர், வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர், பி. ஆர். சுந்தரமையர் முதலியவர்களே முதலில் அந்தப் பத்திரிகையின் பொறுப்பை மேற்கொண்டார்கள்.

தாங்கள் வெளியிடும் பத்திரிகையின் நோக்கங்களைக் குறிக்கும்பொழுது அவர்கள் சொன்னதாவது:

"இம்மாதிரிப் பத்திரிகையின் உபயோகத்தைப்பற்றிப் பலர் எங்களிடம் ஏற்கனவே எடுத்துச் சொன்னார்கள். பல தீர்ப்புக்கள் அச்சில் ஏரு விட்டாலும், கட்சியாடுகையில் அவற்றைக் கோர்ட்டில் எடுத்துச் சொல்லும்படி நேர்ந்துவிடுகிறது. இப்பொழுது உள்ள தீர்ப்புக்களும், பதிப்பிக்கின்றவருடைய சொந்த நோக்கத்தையே நம்பி, கோர்ட்டு உத்தரவின்கீழ் நடத்தப்படும் பிரசுரத்தில் வெளியாகின்றன. உயர்தரமான சட்டஞானம் பெற்ற தீர்ப்புக்கள் - எப்படியும் வெளிவர வேண்டியவைகள் - ஏனோ சில சமயங்களில் அச்சில் ஏருமல் தங்கிவிடுகின்றன! நாங்கள் இம்மாதிரியான நல்ல தீர்ப்புக்களைக் கறையானுக்கு இரையாகாமல் பாதுகாக்க முயல்கின்றோம். மேலும், வாதாடுகிறவர்களின் கட்சிவாதங்களை ஓரளவில் இப்பொழுது அச்சில் கொடுப்பது போதவில்லை என்றும் அறிகிறோம். இவைகளுக்கு உரிய ஏற்பாடுகளைத் தக்க விதங்களில் செய்வது எங்கள்

உத்தேசம். ஏற்கனவே நாட்டில் பிரசுரிக்கப்படும், 'இந்தியன் ஜூரிஸ்ட்' என்னும் பத்திரிகையை ஒழிக்க எண்ணி இதை நாங்கள் ஆரம்பிக்கவில்லை. சட்ட ஞானம் விஸ்தாரமானது; ஒரு பத்திரிகைக்கு இரண்டாக இருப்பது ஒரு விதத்திலும் கெடுதலை விளைவிக்காது. மேலும் பலர் பத்திரிகைகளை நடத்துவதால் பலவிதமான வழிகளில் சட்டங்களைப் பரிசீலனை செய்யவும் கூடும்.''

மேலே அவர்கள் சொல்லுவது இன்னுங்கூட முக்கியம். ஏனென்றால், அக்காரியத்தில்தான் 'சென்னை லா ஜர்னல்' முதன்மை ஸ்தானம் வகித்துவந்தது :

''ஹைகோர்ட்டுத் தீர்ப்புக்களை விடாமல் வெளியிடுவதோடு நிறுத்திக்கொள்ளாமல், ஹிந்துநீதி நூல்களில் சில பகுதிகளின் சரியான மொழிபெயர்ப்புக்களையும், இதுவரையிலும் மொழி பெயர்க்கப்படாதவைகளையும் – அதிலும் அன்றாடம் வழக்குகளில் உபயோகப்படக் கூடியவையான பாகங்களையும் பதிப்பிக்கப் போகிறோம். இன்னும், ஒரே விஷய சம்பந்தமாக உள்ள பல இந்தியக் கோர்ட்டுக்களின் தீர்ப்புக்களைச் சேகரித்து ஓர் இடத்தில் காண்பித்து, பல மாகாணங்களின் ஒற்றுமைக்கு வழி ஏற்படுவதற்கு, அல்லது ஒற்றுமை அடையச் சட்டமொன்றை இந்திய அரசாங்கம் மேற்கொள்வதற்காவது யுக்தியை எடுத்துக் காட்டுவோம்''*

என்று முதலில் தலையங்கம் கம்பீரமாய்ச் சொல்லியது. வெகு நாட்கள் வரையிலும் 'சென்னை லா ஜர்னல்' எத்தனையோ உயர்தரப் பரிசீலனைகளையும், தீர்ப்புக்களின் விமர்சனங்களையும் அவ்வப்பொழுது அவகாசம் கிடைத்தவுடன் பிரசுரித்துள்ளது.

ஸ்ரீ யாக்ஞவல்கிய ஸ்மிருதியில் மிதாக்ஷரா உரையுடன் கூடிய 'ஆசார' அத்தியாயத்தை முதலிலிருந்தே அழகாக ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துவந்தார்கள். இன்னும் பல அரிய பழைய நூல்களையும் மொழிபெயர்ப்பில் அப்பத்திரிகையில் காணலாம். அவைகளுக்கு வேண்டிய வடமொழிப் பயிற்சி சிவஸ்வாமி ஐயருக்கும், கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும் இருந்தமையால் கொஞ்ச காலம் வரையிலும் வேறு அறிஞர்களைவிட இவர்களுடைய உழைப்பே மிகவும் அப்பத்திரிகைக்கு அவசியமாக இருந்

* 1891-ஆம் வருஷ சஞ்சிகை, பக்கம், 1.

தது. மற்ெருரு நண்பரான சீதாராம சாஸ்திரிகளும் இவ்விதமான தொண்டில் ஈடுபட்டிருந்தார்.

அக்காலங்களில் ஹைகோர்ட்டில் மொத்தம் ஐந்து ஜட்ஜ்களே இருந்தார்கள். ஆகையால் தீர்ப்புக்கள் எல்லா வற்றையும் பத்திரிகையில் பிரசுரித்துவிட்டுத் திட்டம் போட்டுக்கொண்ட மற்ற அம்சங்களையும் நன்கு கவனிக்க ஆசிரியர்களால் முடிந்தது. தொழில் முறைகளில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களையும் அப்பத்திரிகை பய மின்றியே வக்கீல்களுக்கு அறிவுறுத்திவந்தது. அம்மாதிரி எழுதுகையில், 1896–ஆம் வருஷம் 'சென்னை வக்கீல்களின் ஒழுக்கம்'* என்னும் தலையங்கத்தின் கீழ்ச் சில முக்கியமான சீர்திருத்தங்களை அப்பத்திரிகை தெரிவித்தது; தொழில் முறைகளில் அநுசரிக்கப்படும் தவறுதல்களை மிகவும் அழுத்தமாயும் கண்டித்தது. வக்கீலாக இருப்பவன் தனக்குரிய ஒழுக்கத்தை விட்டுப் பிறழாமல் நடக்க வேண்டிய தர்மத்தைப் போதித்தது. தொழில் செய்யும் வாலிபர்கள் கெடாமல் இருப்பதற்கு, வக்கீல்களே தங்க ளுக்குள் ஒரு சமாஜத்தை ஏற்படுத்திக்கொண்டு, ஒழுக்கம் தவறியவர்களை அடக்குமுறைகளுக்கு உள்ளாக்கவேண்டும் என்றது. அடுத்தபடியாக, வக்கீல்கள் நியாயமில்லாத வழக்குகளை அங்கீகரிப்பது தவறு என்று காட்டியது. சுத்தப் பொய் என்று அறிந்த கட்சிகளைப் பணத்திற்காக எடுத்துக்கொண்டு வாதாடும் பிரமுகர்களையும் அந்தக் கட்டுரை கண்டிக்காமல் விடவில்லை. வாதாடும் பழக்கத் திலும் சிறப்பற்ற தன்மையையே பலர் போற்றுவதைப் பகிரங்கப்படுத்தியது. ஒழுக்கம் தவறிய வக்கீலைப்பற்றிச் சொன்னதோடு, தொழில் செய்கிறவர்களிடம் மரியாதை தெரியாமல் நீதிபதி நடந்துகொண்டால், அதைவிடக் கெடுதல் நீதிஸ்தலத்திற்கு இல்லை என்று உணர்த்தியது. வெளி நாட்டினராய்ச் சிலர் இருப்பதாலும், 'சிவிலியன்' ஹோதாவில் சிலர் மேலே வந்தவர்களாயிருப்பதாலும் அவர் களிடம் பயம் காட்டுவதே நம் நாட்டு வக்கீல்களுக்குத் தொழிலாகிவிடுகிறது. ஆகையால், வக்கீல்கள் நடந்து

* 1896, சஞ்சிகை-6, பக்கம்-171, 178, 179.

கொள்ளும் முறையை மேம்படுத்த அவர்களினிடையே கட்டுப்பாடும் ஒழுக்க மார்க்கங்களும் புகட்டப்பட வேண்டும் என்றும் கூறிக் கட்டுரை முடிவடைந்தது.

இம்மாதிரி ஒளிவு மறைவு இல்லாத கட்டுரையை எழுதியவர் யார் என்பதைக் கட்டுரையின் கீழ், பெயர் பிரசுரிக்கப்படாமல் இருந்தாலும், பலர் ஊகித்து உணர்ந்தார்கள். 'ஹிந்து' பத்திரிகை இம்மாதிரி வெளிவந்த கட்டுரையைப் பழித்தது.

"இக்கட்டுரையில் நல்ல அம்சங்கள் இல்லை என்று நாங்கள் சொல்ல வரவில்லை. இதில் படிப்பும், நல்ல யோசனையும், சட்ட ஞானத்தைப் பயிலும் வித்தியார்த்தி ஒருவன் தயாரிக்கும் குறிப்புக்களின் தோரணையும் காணப்படுகின்றன என்பது உண்மை. ஆயினும் இவைகளெல்லாம் மேலேதான் இருக்கின்றன. இவைகளின்கீழ்க் காணப்படுபவை தம் இனத்தைப் பழிக்கும் கெட்ட எண்ணமும், கொஞ்சமும் கௌரவம் இல்லாமல் பிறரைக் குறை கூறும் குணமுமே யாகும்."*

நீதிபதி பதவியிலிருந்து விலகியவர்களைப் பற்றித் தலையங்கங்களை எழுதும் தோரணையில் மிகவும் நுட்பமாய்க் குணங்களைச் சீர்தூக்கிப் பார்த்து, அப்பதவியை இனி அலங்கரிக்கும் புத்திமான்களுக்கு நல்வழியைப் போதிக்கும் மொழிகளாகச் சிலவற்றைக் கவனத்துடன் எழுதிவந்தார்கள். 1893-ஆம் வருஷத்தில் சங்கரன் நாயர் ஆசிரியர் பதவியைவிடவும், பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் மற்றவர்களுடன் சேர்ந்து பொறுப்பைப் பங்கிட்டுக் கொண்டார். கிருஷ்ணஸ்வாமி ஐயர், சுந்தரம் ஐயர், சிவஸ்வாமி ஐயர் இம்மூவர் மட்டும் வெகு காலம் 'லா ஜர்னலை' நடத்திவந்தார்கள். உயர்தரமான தீர்ப்பு விமர்சனங்களையும் சட்ட சம்பந்தமான கட்டுரைகளையும் எழுதும்படி இளைஞர்களான சட்ட நிபுணர்களை அவர்கள் தூண்டிக்கொண் டிருந்தார்கள். சட்ட நிபுணர்களில், இளமைப் பருவத்திலிருந்தே 'சென்னை லா ஜர்னல்' சம்பந்தத்தைப் பெற்றவர் எஸ். வரதாசாரியார். பத்திரிகையில் அவருடைய ஞானம் மிகவும் சோபித்தது.

---

* ஹிந்து தலையங்கம், 1-8-1896.

பத்திரிகையின் க்ஷேமத்தில் ஊக்கம் உள்ளவர்கள் எவ்விதம் நடந்து கொள்ளுவார்களோ அவ்விதமே மணி ஐயர் தாம் ஜட்ஜ் பதவியில் இருக்கும்பொழுதுங்கூடத் தம் ஆதரவைக் காட்டினார். மணி ஐயர் நீதிபதி பதவியில் இருக்கையில் ஒரு சமயம் என் தந்தைக்கு எழுதிய கடிதம்* ஒன்றில் பின்வருமாறு குறித்தார் :

"பொது ஜனங்கள் செல்லும் பாதையில் ஊர்வலங்களை நடத்தும் உரிமையைப் பற்றிய கிரிமினல் வழக்குகளை, ஒருவருக்குப் பதிலாக மூன்று நீதிபதிகள் கேட்டுத் தீர்மானிப்பதுதான் சரி என்று நீங்கள் ஒரு தடவை கோர்ட்டில் வாதித்ததைப்பற்றி நான் எவ்விதம் நினைத்தேன் என்பதை உங்களுக்குத் தெரிவித்திருக்கிறேன். 'சென்னை லா ஜர்னலி'ல் உங்களுக்கு ஒழிந்த காலத்தில் அதைப்பற்றி ஒரு குறிப்பு எழுத உங்களால் முடியுமா என்று தெரியவேண்டும். அதைப் பொறுத்தமட்டில் சில சந்தேகங்கள் உண்டாகியிருக்கின்றன."

பெரியவர்கள், 'சென்னை லா ஜர்னல்' வெளியிட்ட கட்டுரைகளில் வைத்த மதிப்பையும், சந்தேகங்களைத் தீர்த்து வைக்க அப்பத்திரிகை எடுத்துக்கொண்ட சிரத்தையையும் இக்கடிதம் தெளிவுபட எடுத்துரைப்பதாக நாம் கொள்ளவேண்டும். தொழில் செய்கிறவர்களின் சுய முயற்சியால் முன்னுக்கு வந்த பத்திரிகையானதால், பலருடைய ஆதரவை முதலிலிருந்தே அப்பத்திரிகை பெற்றது. மேலும் சென்னை நீதிஸ்தலத்திலுள்ள முக்கிய வக்கீல்கள் அப்பத்திரிகையை மேற்பார்வையிடும் ஊழியத்தில் ஈடுபடும் வழக்கமும், மரபும் அதற்குக் கிடைத்தன.

நீதிபதிகளுக்கும் வக்கீல் தொழில் செய்கிறவர்களுக்கும் இடையே ஒருவருக்கொருவர் மரியாதை ஏற்படும்படி செய்வதற்கு மற்றொரு முக்கிய சாதனம் சென்னை வக்கீல்களின் சபை. 1889-ஆம் ஆண்டில் சிலர், முக்கியமாக, சுப்பிரமணிய ஐயரும், பாஷ்யம் ஐயங்காரும், கிருஷ்ணஸ்வாமி ஐயரும், சிவஸ்வாமி ஐயரும், சுந்தரம் ஐயரும், சங்கரன் நாயரும் வக்கீல்களுக்காக ஒரு சங்கம் ஆரம்பித்த பெருமை அவர்களுக்கு மட்டும் உரியது

* கடிதம், 5-1-1904.

என்பதற்கு இல்லை. ஏனெனில், ஏற்கனவே 1885-ஆம் வருஷம் வரையிலும் வக்கீல்களின் சமாஜம் ஒன்று இருந்த தாகத் தெரிகிறது. ஆனால் அங்கத்தினர்களின் எண்ணிக் கையையும் காரிய நிர்வாக உரிமையையும் அது செம்மை யாகப் பெருத காரணத்தால் சீக்கிரம் க்ஷீணித்ததாகவும் அறிகிறோம். புதிய சபையை ஆரம்பிக்கும்பொழுது முக்கியமாகத் தொழில் செய்கிறவர்களின் முன்னேற்றத் தையே லக்ஷ்யமாக வைத்துக்கொண்டார்கள்; வக்கீல்கள் ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து கொள்வதற்காக அச்சபை வழிகாட்டும் என்றுங்கூட நம்பினார்கள்.

பாரிஸ்டர்களாக வாதிப்பவர்களுக்கு மட்டுமே சட்டையின்மேல் 'கௌன்' தரித்துக்கொள்ளும் உரிமை பழைய காலங்களில் இருந்தது. வக்கீல்களுக்கும் பாரிஸ் டர்களுக்கும் இவ்விஷயத்தில் வேறுபாடு இருப்பது வக்கீல்களின் அந்தஸ்தைக் குறைவுபடுத்துவதாகும் என்று புத்திமான்களுக்குப் பட்டது. ஆகையால் இது சம்பந்த மாக வக்கீல்களின் சபை, அக்காலத்தில் கோர்ட்டில் தலைமை வகித்த முக்கிய நீதிபதியாகிய காலின்ஸ் என்ப வருக்கு விண்ணப்பம் செய்தது. அதற்கு முதலில் தடைகள் இருப்பினும், பிற்பாடு சம்மதம் அளிக்கப்பட்டு, கோர்ட்டில் வாதாடும் காலங்களில் யாவருமே வித்தியாச மில்லாமல் கௌனைத் தரிப்பது நியாயம் எனவும் ஒப்புக் கொள்ளப்பட்டது. சுமையாகும் அங்கிகளை ஒருகாலத்தில் நம்மவர்கள் - அதிலும் புத்திசாலிகள் - விண்ணப்பம் செய்து பெற்றார்கள் என்பதை, அதிகச் சட்டைகள் அணி வதைப் பெரிய தொந்தரவாக நினைக்கும் இக்காலத்தில் அறியும்பொழுது விநோதமாகவே தோன்றுகிறது.

அச்சபை அடுத்தாற்போல் செய்த நற்காரியம் பெரிய தொரு புஸ்தகசாலைக்கு வேண்டிய அஸ்திவாரத்தைப் போட்டதுதான். வக்கீல்களின் சபை அலமாரிகளில் இன்று இருபதினாயிரம் புஸ்தகங்களுக்குமேல் இருப்பதற்கு ஆதி காரணம், அன்று பாடுபட்டவர்கள் மேற்கொண்ட பிரயா சையே. இன்னும் எத்தனையோ அரிய தொண்டுகளை அச் சபை செய்து, தொழில் செய்கிறவர்களின் முன்னேற்

றத்தை நாடியது. பழைய காலங்களில் 'இன்சால்வன்சி' நடவடிக்கைகளிலும் அவை சம்பந்தமான மற்ற கோர்ட்டு வழக்குகளிலும் வக்கீல்கள் ஆஜராவது சாத்தியமன்று. வக்கீல்களின் சபையும், 'சென்னை லா ஜர்னலும்', இது சம்பந்தமாகப் பெருத்த கிளர்ச்சியை நடத்தின. 'சென்னை லா ஜர்னல்' ஆறுவது சஞ்சிகையில் வெளிவந்த கட்டுரை ஒன்று, இவ்விஷயங்களை நன்ருக அலசிச் சந்தேகங்களையும் அறவே ஒழித்ததன் விளைவாக வக்கீல்களுக்கு அவ்வுரிமை பிற்பாடு அளிக்கப்பட்டது.

சென்னை அட்வகேட் ஜனரல் பதவிக்கு வக்கீல்கள் வரமுடியாதபடி ஒரு தடை சட்டரீதியாக இருப்பதாய்ப் பழைய காலங்களில் நினைத்து வந்தார்கள். முதலில் அதன் சூக்ஷ்மத்தை விளக்கி, வக்கீல்களுக்கு உரிமை கிடையாது என்பதற்கு ஹேதுவே சட்டத்தில் இல்லை என்று காட்டியவர் பாஷ்யம் ஐயங்கார்தாம். அவரே சிறிது காலம் அக்காலத்திய கவர்னருடைய தண்ணளியால் 'அட்வகேட் ஜனரல்' பதவியையும் அலங்கரித்தார். அக்காலத்தில் வக்கீல்களில் பிரபலமாக வந்தவர்களுக்கே அப் பதவி உரியதென்ற மரபு ஒன்றும் ஏற்பட்டுவிட்டது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் வக்கீல்சபையின் காரியதரிசியாக இருந்த வரையில், வக்கீல்கள் தமக்குரிய உரிமைகளைப் பெறுவதற்கும், பயமில்லாமல் நீதிபதி பதவியில் உள்ளவர்களிடம் நடந்து கொள்ளுவதற்கும் வழி காட்டினுர். இது சம்பந்தமாக ஒரு சிறு சம்பவம் அவசியம் தெரிந்துகொள்வதற்கு உரியது. வெள்ளைக்கார ஜட்ஜ்களில் ஒருவரான ஹ்ராண்ட்லி என்பவர் வயசான காரணத்தால் நீதிபதி பதவியிலிருந்து விலகினுர். அவருக்குக் கோர்ட்டில் தொழில் செய்கிறவர்களின் சார்பாக அட்வகேட் ஜனரலாக இருந்த ஸ்பிரிங் பிரான்ஸன் சில உபசார மொழிகளைச் சொன்னுர். பிரான்ஸன் அவரைப்பற்றி நன்மதிப்பை வெளியிடும்பொழுது பாரிஸ்டர்களுக்கும் அட்டார்னிகளுக்கும் மட்டும் பிரதிநிதியாகத் தாம் பேசவில்லை யென்றும், சென்னை வக்கீல்களின் சார்பாகவும் நீதிபதி பதவியை விட்டு அகலும் ஜட்ஜுக்கு நன் மொழி

களைக் கூறியதாகவும் பெருமை பேசினார். மறுநாள் வக்கீல் சபைக் காரியதரிசி பின்வரும் கடிதத்தைப் பத்திரிகையில் வெளியிட்டார்.

"வக்கீல்கள் சென்னை அட்வகேட் ஜனரலைத் தங்கள் சார்பாகவும் பேசச் சொன்னதாகப் பத்திரிகையில் வெளிவந்த விஷயம் தவறு. பதவியை விட்டு நீங்கும் ஜட்ஜுக்கு அம்மாதிரியான நன்மதிப்பு மொழிகளைச் சொல்வதில் வக்கீல்களின் இடையே, ஒன்றுபட்ட அபிப்பிராயம் இல்லாத காரணத்தால் ஒருவரையும் தங்கள் சார்பாக அவர்கள் பேசச் சொல்லவில்லை."*

காரியதரிசியின் பகிரங்கமான அபிப்பிராயத்தைக் காணவே, ஸ்பிரிங் பிரான்ஸனுக்கு வருத்தம் உண்டாயிற்று.

"சென்ற மாதம் முப்பதாம் தேதி பதினொரு மணிக்கு ஸ்ரீ ராஜா டி. ராமராவும், ஸ்ரீ பி. அநந்தாசாருலுவும் என்னை வக்கீல்களின் சார்பாகவும் பிரிவுபசார மொழிகளைச் சொல்லும்படி கேட்டுக்கொண்டதன் பேரில்தான் ஒப்புக்கொண்டு நான் பேசினேன். ராஜா டி. ராமராவ் பெரிய வக்கீல் என்ற காரணத்தினாலும், இம்மாதிரி முன்பு பல சந்தர்ப்பங்களில் அவரும் ஸ்ரீ பி. அநந்தாசாருலுவும் என்னிடம் வக்கீல்களின் தலைவர்கள் என்ற உரிமையில் சிற்சில விஷயங்களைச் சொல்லியிருப்பதாலும் நான் அவர்களுடைய வேண்டுகோளை நம்பி இம்மாதிரிப் பேசினேன்"$

என்று பத்திரிகையில் ஒரு சமாதானத்தை வெளியிட்டார். நான்கு நாட்களுக்கெல்லாம் பி. அநந்தாசாருலுவிடமிருந்து தம் வருத்தத்தையும் கோபத்தையும் சேர்த்துத் தெரிவிக்கும் ஒரு சிறு கடிதம் காரியதரிசிக்கு வந்தது. மேலும் காரியதரிசி இளைஞரானதால் அவருடைய அதிகப் பிரசங்கித்தனத்தைக் கண்டித்துக் கண்டனம் ஒன்றும் பத்திரிகையில் வெளியாகியது. அதன் சாராம்சம் பின் வருமாறு.

"மிஸ்டர் பிரான்ஸனுக்கு வருத்தம் ஏற்பட்டதில் எனக்கும் வாஸ்தவத்தில் மனவருத்தந்தான். ஏனென்றால், நானும் சேர்ந்து கொண்டு அவரைக் கேட்டுக் கொண்டதன் பேரில்தான் அவர் சம்மதித்து வக்கீல்களின் சார்பில் பேசினார். வக்கீல்களின்

---

* கடிதம், 30-3-1893. $ கடிதம், 5-4-93.

சபையிலிருந்து நியாயமாக அனுமதி வந்திராவிட்டாலும், பதவியை விட்டு நீங்கும் ஜட்ஜின் குண விசேஷங்களில் அவர்களிடம் ஒன்றுபட்ட அபிப்பிராயம் இருந்ததைப் பிரான்ஸன் எடுத்து உரைத்ததில் எள்ளளவும் குற்றமில்லை. வக்கீல்களின் காரியதரிசி பெரிய குற்றமொன்றைச் செய்துவிட்டாரோ என்று முதலில் கவலை கொண்டேன். ஆனால் பிற்பாடு அவர் எழுதிய கடிதத்தைப் பத்திரிகையில் ஊன்றிப் பார்க்கும்போது அவர் செய்தது கேவலம் பகுத்தறிவற்ற சிறுபிள்ளை செய்யும் காரியமெனத் தெரிந்தது. முக்கியமாக இச்சந்தர்ப்பத்தில் அறிய வேண்டியது, கோர்ட்டிலுள்ள எல்லா வக்கீல்களும் வக்கீல்களின் சபை அங்கத்தினர்களாக இல்லை என்பதே. ஆகையால், பதவியை விட்டு நீங்கும் ஜட்ஜின் குணங்களைப் பொறுத்த மட்டில் வக்கீல்களிடம் ஒற்றுமை இருந்ததென்றுதான் தெரிந்துகொள்ளவேண்டும்.''*

இதை வாசித்ததும் பலருக்குக் காரியதரிசியின் பகிரங்கக் கடிதம் அநாவசியமான காரியமென்றும், வக்கீல்களின் சபைக் காரியதரிசி என்ற அளவில் அங்கத்தினர்களின் உரிமைகளைப்பற்றி அவர் நினைத்தது பிசகு என்றும் தோன்றக்கூடும். ஆனால் அவர் அநந்தாசாருலுவின் கடிதத்திற்குக் கொடுத்த கடைசிப் பதில் தைரியத்தையும் சுய நம்பிக்கையையும் எவ்வளவு தூரம் அவர் பெற்றவர் என்பதை வெளியாக்குகிறது.

“நேற்றுப் பிரசுரமான ஸ்ரீ அநந்தாசாருலுவின் கடிதத்திற்குப் பதில் எழுதும்படி நேர்ந்ததற்கு மிகவும் வருந்துகிறேன். பகுத்தறிவில்லாத செயலைவிடப் பெரிதான குற்றம் ஒன்றையும் நான் செய்து விடவில்லை என்று அவர் சொன்னதற்கு மிகவும் நன்றி பாராட்டுகிறேன். நான் வெளியிட்ட கடிதத்தின் கருத்து, வக்கீல்களின் சார்பில் மிஸ்டர் பிரான்ஸன் பேசியது சற்றும் அதிகாரம் பெறாத காரியம் என்று எடுத்துக் காட்டுவதற்காக அல்ல; ஆனால் அவரைப் பேசும்படி கேட்டுக்கொண்டவர்கள் அம்மாதிரி கேட்டுக்கொள்ளும் அதிகாரம் தங்களுக்கு இருப்பதாக நினைத்தது மிகவும் தவறென்பதையே நான் எடுத்துக் காட்டினேன். ஸ்ரீ அநந்தாசாருலு எழுதிய கடிதத்தில், ஏதோ ஜட்ஜ் ஹாண்ட்லியின் குணங்களில் சில அம்சங்களில் பலருக்கும் ஒருங்கே நன்மதிப்பு இருந்ததாகத் தெரிகிறது. ஆயினும் அவருக்கு விடை அளித்து அனுப்பும் விஷயத்தில் அம்மாதிரி பலருக்கு ஒற்றுமை இருந்ததாக ஸ்ரீ அநந்தாசாருலுகூட நினைப்பதாக எனக்குப் படவில்லை. நானும் இன்னும் அநேக வக்கீல்

---

* கடிதம், 9-4-1893.

சபை அங்கத்தினர்களும் பிரிவுபசாரம் நிகழ்ந்த தினத்தின் காலையில் அவரிடம் அதற்குப் பலத்த ஆக்ஷேபங்கள் இருப்பதாகத் தெரிவித்தோம். என் வரையிலும் அறிந்த விவரம், வக்கீல்களில் ஒரு சிறு பகுதியினரே விடை அளிப்பு விஷயத்தில் உத்ஸாகமாக இருந்தனர் என்பதுதான். பகுத்தறிவு இல்லாத செயல் அட்வகேட் ஜனரலிடம் விண்ணப்பம் செய்தவர்களின் காரியந்தான். வக்கீல்களினிடையே இருந்த அபிப்பிராய வேற்றுமையை அவர்களே மறக்காமல் அவரிடம் தெரிவித்திருக்க வேண்டும்.''*

இதைவிட அழுத்தமாயும் மனத்தில் தைக்கும் விதமாயும் பதில் சொல்வது எளிதல்ல. முப்பது வயசாகாத காரியதரிசிக்குப் பெரியவர்களிடம் பயமும் மரியாதையும் இருப்பது அவசியம். ஆயினும் தாம் காரியதரிசி என்ற முறையில் கடமையைச் சரிவரச் செலுத்துவதிலும், உடனுக்குடனே இம்மாதிரிக் காரியங்களில் பொறுப்பை வகிக்கும் விதத்தில் சபை அங்கத்தினர்களுடைய அபிப்பிராயத்தை நன்கு புலப்படுத்துவதிலும் அவர் பின்வாங்கவில்லை. அவர்மேல் ஏதாவது குற்றம் உண்டென்ருல், அது அவர் வக்கீல்களின் கௌரவத்தைப் பெரிதாக மதித்ததுதான். மேலும் நீதிபதி பதவியில் உட்கார்ந்து கவலை இல்லாதிருப்பவர்களுக்கும் தாங்கள் பெறக்கூடிய மரியாதைகளுக்கு ஆபத்து நேரிடும் என்பதை எச்சரித்ததற்காகத் தொழில் செய்கிறவர்களின் நன்றி அவருக்கு எந்நாளும் உரியதாகும்.

வக்கீல் சபையின் காரியதரிசி பதவியை விட்ட பிறகும் தமக்கு உவந்த சில பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டு தாமாகவே அரிய தொண்டுகளைக் கிருஷ்ணசாமி ஐயர் ஆற்றி இருக்கிருர். தொழில் சம்பந்தமானவைகளிலும் பொதுநலத்திற்கு என்று உள்ளவைகளிலும் முன் யோசனையுடன் தம்முடைய ஆர்வத்தையும் வெளிக் காட்டி யிருக்கிருர்.

பாஷ்யமையங்கார் ஜட்ஜ் பதவியில் 1901 முதல் 1903 ஏப்ரல் 13-ஆம் தேதி வரையில் இருந்துவிட்டு, அறுபது வயசு எல்லைக்கு உட்பட்டு நீங்கவேண்டிய சந்தர்ப்பம் நெருங்கியது. அப்பொழுது கிருஷ்ணஸ்வாமி

* கடிதம், 10-4-93.

ஐயர், உயர்ந்த சட்டஞானிகளின் முழு உதவியையும் இழக்கவே அரசாங்கம் இந்த அறுபது வயசு விதியைக் கொண்டுவந்ததோ என வருந்தி, அதை எப்படியாவது ரத்துசெய்ய வழிதேடினார். மற்ற மாகாணங்களுக்கெல்லாம் சென்னை வக்கீல் சங்கத்தின் உதவியாலும், தமக்குள்ள செல்வாக்கினாலும் கடிதங்கள் எழுதி இந்தியா மந்திரிக்கு முறையிட வேண்டிய விண்ணப்பங்களைத் தயாரித்தார். சென்னை வக்கீல் சங்கத்தின் சார்பாக இந்தியா மந்திரிக்கு விண்ணப்பம் அனுப்புவதற்கு முன்பாகத் தாமாகவே சொந்தத்தில் மற்ற மாகாணங்களிலுள்ள பிரமுகர்களுக்குக் கடிதம் எழுதினார். ஒரு கடிதத்தின் பல பிரதிகளையே தம் முக்கிய சிநேகிதர்களுக்கும் அனுப்பியிருந்தார். கடிதம் பின்வருமாறு :—

2—1—1903.

"ஐயா,

இப்பொழுது ஏற்படுத்தியிருக்கும் அரசாங்க விதிகளின் கீழ், ஸர் வி. பாஷ்யமையங்காருக்கு ஏப்ரல் மாதம் அறுபது வயசு ஆனதும் நீதிபதி பதவியை விட நேரிடும். இந்தியன் சிவில் சர்விஸில் உள்ள மற்றவர்களுக்கு மேற்பதவிகளுக்குத் தடையாக நின்றுகொண்டிருந்த, ஸர் ஹென்ரி பிரின்ஸெப் போன்றவர்கள் அதிக காலம் தவணையின்றி ஸ்தானத்தில் இல்லாமலிருப்பதற்கே இவ்விதி ஏற்பட்டது......இந்த ஏற்பாடு பாரிஸ்டராயிருப்பவருக்கோ, அல்லது நம் நாட்டு வக்கீலாக இருப்பவருக்கோ, அறுபது வயசை ஒரு தடையாக உண்டுபண்ண எண்ணியதல்ல. இந்த விதியை அமுலுக்குக் கொண்டுவரும் பிரயத்தனம், இளைஞர்களா யிருப்பவர்களில் அதிக யோக்கியதை இல்லாதவர்களுக்கும், பெரிய வரும்படி இல்லாதவர்களுக்கும் ஜட்ஜ் ஸ்தானம் கிடைக்கும்படி செய்யச் சாதனமாகும். இதுவரையிலும் இருந்த இந்திய ஜட்ஜுகளின் உயர்ந்த யோக்கியதாம்சங்களே நமக்கு முக்கிய பலமாக இருந்து வந்தது. அதிகமாய் நம்மவர்களை மேன்மேலும் இப் பதவிகளில் நியமிக்கத் தூண்டுவதற்கும் அதுவேதான் காரணம். இதுகாறும் உயர்ந்தவர்களையே பொறுக்கி எடுத்ததும் நம் அதிருஷ்டத்தினாலென்றே கொள்ளவேண்டும். ஒருகால் நாம் எதிர்க்கும் விதியை அரசாங்கம் மாற்றவும் கூடும். ஆனால் அதைச் சீக்கிரம் அவர்கள் செய்யாவிட்டால் பாஷ்யமையங்காரை நாம் அப்பதவியினின்றும் இழக்கும்படி நேரிடும். அவர் இன்னும் பல காலம் அப்பதவியை அலங்கரிப்பதில்தான் நமக்குத் திருப்தி. அறுபது வயசு ஆகியும் அவரிடம் அசாதாரணமான புத்தி

வன்மையும் தெளிவும் இருக்கின்றன. வேறு மாகாணங்களில் அவரைப்பற்றி எவ்வாறு கருதுகிருர்களோ நமக்குத் தெரியாது. ஆனல் நாம் இந்த இருபத்தைந்து வருஷங்களாக இத் தென் ஞட்டில் நீதிபதி பதவியிலுள்ளவர்களில் அவரையே மிகச் சிறந்த வர்களில் ஒருவராகவும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் மற்றத் தேசங்களில் புகழ்பெற்றவர்களுக்குச் சற்றும் குறையாதவராக வும் எண்ணுகிருேம். சென்ற தர்பாரில் அவருக்கு ஜாகீர் ஒன்றை ஸம்மானமாக அரசாங்கம் அளித்த கௌரவம், ஒருகால், அவருக்கு அறுபது வயசு விதியின் நியாயப்படி ஜட்ஜ் பதவியை விட்டு நீங்க வேண்டிய காரணத்தினுல் கொடுக்கப்பட்டதோ என்றுதான் சந்தேகப் படுகிறேன்........என் அபிப்பிராயங்கள் உங்களுடைய மனத்திற்கும் உவந்ததாகப்பட்டால், உடனே உங்கள் வக்கீல் சங்கங்களில் விஷயத்தை அலசிப் பார்த்துத் தீர்மானங்களையும் செய்து, இந்தியா மந்திரிக்கும் விண்ணப்பம் மூலம் தெரிவி யுங்கள்."

கடிதம் அவர் கையொப்பமிட்டுப் பல இடங்களுக்குச் சென்றது.

அதே மாதம், அதாவது 1903–ஆம் வருஷம், ஜனவரி 13-ஆம் தேதியன்று, கல்கத்தாவில் புகழ்பெற்ற வக்கீலான டாக்டர் ராஷ்பிகாரி கோஷ் என்பவர் இக் கடிதத்திற்குப் பதில் எழுதினர்.

"பாரிஸ்டர்கள் விஷயத்திலும் சரி, வக்கீலாயிருந்து ஜட்ஜ் பதவிக்குவந்தவர்களின் விஷயத்திலும் சரி, இந்த அறுபது வயசு விதியை மாற்றித்தான் ஆகவேண்டும்; இதை எதிர்ப்பதில் உங்க ளுடன் பூர்ணமாக ஒத்துழைக்க என்னல் முடியும். மேலும் ஸ்ரீ பாஷ்யமையங்காருடைய விஷயம் மிகவும் கவனிக்கவேண்டியது. ஏனென்ருல் அவர் சீக்கிரம் வேலையிலிருந்து நீங்குவது, சென்னை நீதிஸ்தலத்திற்கு மட்டுமல்லாமல், இந்திய நாட்டிற்கே பெரிய நஷ்டத்தை உண்டாக்கும். உங்கள் கடிதத்தில் குறிப்பிட்ட அபிப் பிராயங்களையே வைத்து யோசித்துக் கல்கத்தா நியாயவாதி களின் சங்கத்தில் ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டுப் பலரால் அங்கீகரிக்கப்பட்டும் இருக்கிறது."

தீர்மானம் பின்வருமாறு :

"ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய கடிதத்தில் கண்ட விஷயங்கள் இந்தச் சங்கத்தின் பூரண சம்மதத்துக்கும் உரியவை யாக இருப்பதால் சென்னை வக்கீல் சங்கத்தில் தயாரித்து இந்தியா மந்திரிக்கு அனுப்பப்படும் விண்ணப்பத்தின் பிரதி எங்களுக்குக் கிடைக்கும்படி செய்தால் சௌகரியமாயிருக்கும்."

சென்னை வக்கீல்களின் சங்கம் இந்தியா மந்திரிக்கு நேரில் விண்ணப்பம் செய்துகொண்டது. ஆனால் இந்தியா மந்திரி அந்த அறுபது வயசு விதியை மாற்றாத விவரம் எல்லோரும் அறிந்ததே. விண்ணப்பத்தின் விளைவாக ஒன்றுமட்டும் நிகழ்ந்தது. பாஷ்யமையங்காரை இன்னும் எட்டுமாதகாலம் நீதிபதி பதவியில் இருக்கும்படி அரசாங்கத்தார் அநுமதி அளித்தனர்.* அவ்வருஷக் கடைசியில்தான் அவரும் பதவியை விட்டு நீங்கினார்.

வருஷந்தோறும் வக்கீல் சபை அங்கத்தினரான பிரபல வக்கீல்கள் சிற்றுண்டி விருந்துகளைத் தங்கள் சொந்தச் செலவில் ஏற்பாடு செய்து, கொண்டாட்டத்தில் அங்கத்தினர்களின் கலை அபிமானங்களை வெளிப்படுத்த அவகாசம் கொடுப்பார்கள். இன்று சென்னை அட்வகேட்டுகளின் சபை, அங்கத்தினரின் பலமான எண்ணிக்கையைப் பெற்றதாகி, நிறையப் புஸ்தகங்களின் இருப்பிடமாக இருப்பதைக் காணும்பொழுது இவைகளை ஆரம்பித்துவைத்தவர்களின் தீர்க்க திருஷ்டியும் உண்மையான ஊழியமும் வீண் போகவில்லை என்ற எண்ணம் நம் மனத்தில் பதிகின்றது.

---

* சென்னை, கெஜட்டு, 13-4-03, குறிப்பு, 107.

## அத்தியாயம் 7

### தொழிற் சிறப்பு

"துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும்" —குறள்.

**1895**-ஆம் ஆண்டில் மணி ஐயர் நீதிபதி பதவியில் அமர்ந்ததுமே, வக்கீல் தொழிலில் அவருடைய இடத்தில் பரம்பரைத் தர்மத்தில் வந்தவர்கள்போல் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சுந்தரமையரும் விளங்கினார்கள். தொழில் சம்பந்தமான வேலைகளும் பொறுப்புக்களும் அவர்களுக்கு அதிகமாயின. மற்றும் 1899-ஆம் ஆண்டில் வி. பாஷ்யம் ஐயங்காரின் சார்பாகப் பிரபல வழக்கில் வாதாடிய விவரம், தொழில் துறையில் உள்ள பெரியவர்கள் தந்தையாரிடம் எவ்வளவு மதிப்பு வைத்திருந்தார்கள் என்பதை நமக்குத் தெளிவாக்கியது. கட்சிக்காரர்களின் ஆதரவைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. அக்காலங்களில் புத்திமான் என ஒருவரைத் தீர்மானிப்பதற்கு மணி ஐயருடைய சிபார்சு ஒன்றே போதும். அதோடு, ஒருவர் உண்மையில் நன்கு உழைத்து வழக்குகளில் தம் பக்கம் வெற்றியை நிலைநாட்டுவதை அறிந்தபின் யார்தாம் அவரை நோக்கிச் செல்லாமல் இருப்பார்கள்? சாமான்யக் கட்சிக்காரர்கள் மட்டுமல்ல; எத்தனையோ பெரிய ஜமீன் தார்களும், நாட்டுக்கோட்டைச் செட்டியார்களும் போட்டியிட்டுக் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் தங்கள் வழக்குகளின் தஸ்தாவேஜுகளையும், கட்டுக்களையும் கொண்டுவந்து கொடுத்தார்கள். சென்னை ஹைகோர்ட்டிலும் மற்றக் கீழ்க்கோர்ட்டுகளிலும் நியாயவாதம் செய்து பொருளையும் புகழையும் ஒருங்கே அவர் சம்பாதிக்கத் தொடங்கியது 1899-ஆம் ஆண்டிற்குப் பின்பேதான். அவருடைய மிகுதியான சம்பாத்தியமும் இந்தப் பத்து வருஷங்களிலேதான் என்று கூடச் சொல்லலாம். பிற்பாடு 1909-ஆம்

வருஷம் அவர் நீதிபதி பதவியில் அமர்ந்த வரையில் முக்கியமான வழக்குகளிலெல்லாம் அவருடைய பெயர் ஏதாவது ஒரு தரப்பில் காணப்படுவது நிச்சயமாகி விட்டது. அநேகமாக அச்சிடப்பட்ட தீர்ப்புக்களில் அவருடைய பெயரும் அவருடைய நண்பர் சுந்தரமைய ருடைய பெயருமே வாதித்தவர்களின் முன்னணியில் காணப்படுவதை வக்கீல்கள் அறிவார்கள்.

தொழில் துறையில் அவருக்குப் புகழ் வந்ததன் இரகசியத்தை நாம் முதலில் அறிய வேண்டும் அன்றோ? அவரிடம் நெருங்கிப் பழகியவர்களும், அவருடைய உத்தியோக சாலையில் அவருடன் உழைத்தவர்களும், அவருடைய வாதத் திறமையில் மோகங் கொண்டவர் களும், அவரைப் பற்றி நினைத்ததை உணரும்பொழுது அவருடைய யோக்கியதை சாமான்யமல்ல என்பது வெளியாகும்.

தொழில் கற்பதற்கு அவரைக் குருவாக வரித்தவர் களில், திருச்சி ஏ. வி. கோபாலாசாரியார், இரண்டாவது சிஷ்யராக 1894-ஆம் வருஷத் தொடக்கத்தில் அவரிடம் வந்தார். அக்காலங்களில் ஆபீசில் வேலை அவ்வளவு அதிகம் இல்லை. ஆகையால், தம்மை அடைந்தவர்களிடம் தம் கவனம் முழுவதையும் காட்ட அவரால் முடிந்தது. கோர்ட்டில் பேசுவதற்கு முன் ஆபீசில் தம் எதிரே இளைஞர்களை யுக்திகள் காட்டி வாதாடும்படி செய்வாராம். கோர்ட்டில் நீதிபதியின்முன்பு கட்சிகளை எவ்விதம் தெளிவாயும் சீக்கிரமாயும் சொல்லுவது என்பதைப் புகட்டுவாராம். அக்காலத்தில் ஜட்ஜ் முத்துஸ்வாமி ஐயர் நீதிபதி பதவியில் இருந்தார் அல்லவா? அவருடைய தீர்ப்புக்களையும் 'லா ஜர்னலில்' அலசியவரானமையால், சிற்சில சமயங்களில் அவருடைய விமரிசனங்களைக் குறித்தும் ஜட்ஜ் முத்துஸ்வாமி ஐயர் கோர்ட்டில் ஞாபகப் படுத்துவாராம். முத்துஸ்வாமி ஐயருக்குக் கிருஷ்ண ஸ்வாமி ஐயரைப் பற்றியும் சுந்தரமையரைப் பற்றியும் தனிமையில் நல்ல மதிப்பு என்பதில் ஐயம் இல்லை. ஒரு தனிகர் வீட்டு விருந்தில் இவ் விளைஞர்களை அவர்

காணவே பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு கனவானிடம், "இவர்கள் இருவரும் சிங்கங்கள்" என்றாராம்.

பேசும்பொழுது கிருஷ்ணஸ்வாமி ஐயர் வார்த்தைகளில் சற்றுத் தடைகளும் ஏற்படும். ஆனால் பாஷை மிகவும் இலக்கியச் சுவையுடன் இருக்கும். சில இடங்களில் அவருடைய சொற்பொழிவு வரப் பிரசாதத்துடன் புலப்படும்.

"அபாரமான பேச்சுத் திறமை அவரிடம் உண்டு; பாஷை மிகவும் நயமாக வரும்; இலக்கியச் சொற்களும் தாமாகவே கலந்து மடை திறந்தவாறு பெருகி வரும். சுத்தமாயும், அழுத்தம் திருத்தமாயும் வார்த்தைகளைச் சொல்லுவார்; குரலும் அதிக எடுப்பாக இருக்கும். ஆனால் அவரிடம் மெச்சத்தக்கதாக இராதது எது என்றால், அதிவேகமாய்ப் பேசும் பழக்கமே"*

என்று சிவஸ்வாமி ஐயர் தராசில் போட்டு நிறுத்துத் தம் நண்பரின் சொற்பொழிவாற்றும் சக்தியை வருணித்திருக்கிறார். எவ்வளவோ தடவைகளில் சிவஸ்வாமி ஐயர் தம் சிநேகிதரைக் கோர்ட்டில் எதிர்த்தவர்; எதிரியின் குணதோஷங்களை நன்கு அறிந்தவர். ஆகையால் அவருடைய மதிப்பைச் சாமான்யமாகக் கொள்வதற்கு இல்லை.

என் தந்தையிடம் மிகவும் குரு விசுவாசம் பூண்டவராகிய காலம் சென்ற ராவ் பகதூர் சி. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் குருவின் தொழிற் பழக்கத்தைக் குறிக்கும் பொழுது,

"கோர்ட்டில் அவர் பேசுவதற்கு முன் கட்டுக்களை நன்றாகப் பார்வையிட்டு விஷயம் முழுவதையும் ஒன்று விடாமல் தயாரிப்பார். முக்கியமாக அவரிடம் புலப்பட்ட சக்தி, எதிர்த்தரப்பில் எவ்விதம் ஆக்ஷேபங்களைக் கிளப்புவார்கள் என்பதை முன் ஜாக்கிரதையுடன் ஆராய்வதுதான்"$

என்றார். "இம்மாதிரி முன் ஜாக்கிரதை, ஸர். வி. பாஷ்யம் ஐயங்காரிடம் தென்பட்டவைகளில் மிகவும் முக்கியமான குணம்" என்பார் சிவஸ்வாமி ஐயர். பாஷ்யம் ஐயங்காரிடம் கண்ட, தொழிலுக்கேற்ற மற்றக் குணங்களும் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் பிரதிபலித்தனவென்று ஸர் சிவஸ்வாமி

---

*சென்னை லாஜர்னல், 50 சஞ்சிகை, பக்கம் 4.

$ 'வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் வாழ்க்கை வரலாற்றின் சுருக்கம்' பக்கம், 9.

ஐயர் பல தடவைகளில் கூறியுள்ளார். பாஷ்யம் ஐயங்காரைப் பின் தொடர்ந்ததற்கு மற்ருேர் அத்தாட்சி கிருஷ்ணஸ்வாமியின் நிதான புத்தியே என்பது சிவஸ்வாமி ஐயருடைய முடிவு. பலருக்கு இதில் சந்தேகம் ஏற்படலாம். அவர் பேச்சின் வேகத்தை உணர்ந்தவர்கள், சிவஸ்வாமி ஐயர் எதைக் குறிக்கின்ருர் என்பதைத் தெரிந்துகொள்ள ஆசைப்படுவார்கள். சிவஸ்வாமி ஐயரும் இச் சந்தேகம் பலருக்குத் தோன்றும் என்பதை அறிந்தே விஷயத்தைப் பின்வருமாறு தெளிய வைக்கின்ருர் :

"கச்சேரியில் அவருடைய படபடப்பான பேச்சைக் கேட்டவர்களில் மிகச் சிலரே அவருடைய வேகமும் ஆவேசமும் முன்பே நிதானமாய்த் தயாரித்தவைகளின் விளைவு என்பதைத் தெரிந்து கொள்வார்கள். வாஸ்தவத்தில் அவருடைய பதற்றம் நன்ருய் வெளியே தெரியும்; சுபாவமும் அடிக்கடி கட்டுக்கு அடங்காமல் எழும். ஆயினும், அவர் தம் சுபாவமான படபடப்பை அடக்க முயன்றவர் ; முயற்சியிலும் ஜயித்தவர். உங்கள் செவிகளில் பீரங்கிகளின் சத்தம் ஒலித்துக்கொண்டேதான் இருக்கும்; ஆயினும் அவைகளின்பின் அவசரமில்லாத புத்தி வேலை செய்வதை உணர்வீர்கள். வெளித் தோற்றத்தில் எவ்வளவு பதற்றத்தோடும், முன் யோசனையே இல்லாமலும் நடந்து கொள்பவரைப் போல் அவர் தோன்றினுலும், அவ்வளவையும் கவனித்தவர்களுக்குத் திடமான மனத்தைப் பெற்றவர் என்றும் புரியும்."*

மற்ருேர் அரிய குணம் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் உண்டு. அவர் வாதிக்கும் காலத்தில் தம் வழக்கின் எல்லா அம்சங்களையும் ஒரே விதத்திலும், அளவிலும் கோர்ட்டார் முன்பு தெரிவிப்பவர் அல்ல. முக்கியமாக இருக்கும் ஒன்றிரண்டையே பொறுக்கி வைத்துக் கொண்டு அவைகளின்பால் தம் முழுக் கவனத்தையும் செலுத்தி வெற்றியையும் நிலைநாட்டுவார்.

"வழக்கில் மர்மமாயுள்ள சிற்சில விஷயங்களையே எடுத்துக் கொண்டு நன்ருய் அழுத்திப் பேசுவார். வேலை அதிகமான நாட்களில் அதிக நாழிகை தாமே படித்து எல்லாவற்றையும் தயாரிக்காமல், தம்முடன் உழைத்த புத்திசாலியான இளம் உழைப்பாளிகள் எடுத்துக் கொடுத்த குறிப்புக்களை வைத்துக்

*சென்னை லா ஜர்னல், 50-ஆம் சஞ்சிகை, பக்கம் 2.

கொண்டு வெகு சீக்கிரத்தில் பிரமாதமான யுக்தி வாதங்களை ஜோடனை செய்யும் ஆற்றல் பெற்றவரை நான் வேறு எங்கும் கண்டதில்லை''*

என்று இன்றும் அவரை நினைத்து வியப்பார் அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயர்.

புத்திசாலியான உழைப்பாளியினுடைய உதவியை வைத்துக்கொண்டு கிருஷ்ணஸ்வாமி ஐயர் பேசியதை ஸர் அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயர் நினைவிற்குக் கொண்டு வந்ததற்குச் சொந்த அநுபவமே காரணமா யிருக்கலாம். ஒரு சமயம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஓர் அப்பீலில் பிரதி உத்தரம் தரவேண்டிய சந்தர்ப்பத்தில் மற்றொரு வழக்குக்காக வேறொரு கோர்ட்டுக்குச் செல்ல வேண்டி நேர்ந்தது. மனத்தினுள், தம் வாதத்தை வலி பெறச் செய்யத் துணைபுரியும் சட்டத் தீர்ப்புக்கள் எவை யேனும் இருந்தால் நல்லது என்று அவருக்குத் தோன்றி யது. ஓர் இடத்திலிருந்து மற்றொரு கோர்ட்டுக்குப் போகையில் வழியில் அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கண்டுவிட்டார். "என்ன, கிருஷ்ண ஐயர், சற்று எனக்கு ஏதாவது உதவி அளிப்பீர்களா?'' என்றார். அம்மாதிரி யான தருணம் தமக்கு எப்போது வாய்க்குமோ என்றிருந்த அவர், "ஆஹா, செய்கிறேன்'' என்றார். உடனே கிருஷ்ணஸ்வாமி ஐயர் தமக்கு உதவியாகக்கூடிய தீர்ப்பு எவ்விதம் இருக்கவேண்டும் என்பதை நடந்து போகும் பொழுதே அவரிடம் தெரிவித்துவிட்டு, "இந்தாரும், பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு எனக்கு விஷயங்களை எடுத்துக் கொடுக்கும் விதத்தையும் நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும். எல்லா விஷயங்களையும் அடிமுதல் சொல்லிக் காலதாமதம் ஆக்காமல், முக்கியமான கருத்தை மட்டும் எடுத்துச் சொன்னால் போதும். நீங்கள் சொல் வதை நின்று பேசுகையிலேயே மனத்தில் வாங்கிக் கொள்ள என்னால் முடியும்'' என்றாராம். அவர் அருமை யான இரண்டு தீர்ப்புக்களை வெகு நுட்பமாய் வாசித்து

---

* 'ஸர் அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயர் அறுபது ஆண்டு நிறைவு விழா மலர்' பக்கம் 93.

அறிந்துகொண்டு வந்து கோர்ட்டில் தந்தார்; பிறகு சொல்லவேண்டுமா? நொடியில் தம் வாதத்தை அவைகளினால் கிருஷ்ணஸ்வாமி ஐயர் வலி பெறச் செய்து விட்டார்.

சில தலைவர்களுக்குச் சிறியவர்களுக்கு உரிய நன் மதிப்பைக் காலம் அறிந்து வழங்கத் தெரியாது. சிற்சில ரிடம் அதற்கு வேண்டிய பெருந்தன்மையும் இருப்பதில்லை. தாம் தவறிவிட்டாலும் அதைப் பலர் அறிய வாய்விட்டுச் சொல்லுவதும் பெரியவர்களிடம் அரிதுதான். இவை களுக்கு விலக்கானவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். இவ்வகைக் குணங்களுக்கு இலக்கியம்போலுள்ள பல நிகழ்ச்சிகளை எடுத்துக்கூற இயலும். ஒன்றிரண்டை மட்டும் சொல்லு வதுதான் இங்குப் பொருத்தம்.

ஒரு நாள் வாலிபரான ஒரு வக்கீல், தலைவரிடம் கிரிமினல் சம்பந்தமான அப்பீலொன்றைக் கொண்டு வந்தார். தலைவர் ஆபீசில் காலையில் வந்ததுமே, அதிவேக மாய்க் கட்டுக்களில் உள்ளவைகளைப் பார்வையிட்டு, தயாரித்த இளம் வக்கீல்களை நடுங்க அடித்துக்கொண்டு ஆரவாரம் செய்வதைப் பார்த்தவர்களுக்கு, “இது ஏதடா இவரிடம் அல்லவா நம் கக்ஷிக்காரனை அழைத்து வந்திருக்கிறோம்? இவரிடம் முதலில் நாம் அவமானப் படாமல் தப்பித்தால்போதுமே” என்றுகிவிடுமாம். அப்படி யுள்ள சந்தர்ப்பத்தில் வந்தார் மேற்கூறிய இளைஞர். அவர் கட்சிக்காரன், தப்புக் கணக்குகளைத் தயாரித்ததற்காக குற்றஞ் சாட்டப்பட்டுக் கீழ்க் கோர்ட்டில் தண்டனையும் பெற்றிருந்தான். ஹைகோர்ட்டில் அப்பீல்செய்து ஒருகால் விடுதலை அடையலாமென எண்ணி இருந்தான். கட்டிலுள்ள விவரங்களை வாசிக்க ஆரம்பித்ததுமே கிருஷ்ணஸ்வாமி ஐயர், “ஓய் இந்த அப்பீல் ஜயிக்காது. எதற்காக உம்முடைய கட்சிக்காரன் பணத்தை வீணாக்கு கிறான்” என்று அதட்டும் குரலில் இளைஞரைக் கேட் டார். பாவம், சிறிய வக்கீல் ஒன்றும் சொல்ல வகை தெரியாமல், “அதற்காகத்தான் உங்களைப்போன்ற பெரிய அறிவாளிகளை வைத்து ஒரு கை பார்த்து விடுவதென்று

கட்சிக்காரன் வந்திருக்கிறான்" என்றார். பிற்பாடு ஒரு வித மாகக் கொடுபட வேண்டிய பீஸ் முதலியவைகளை நிர்ணயம் செய்து கொண்டு கோர்ட்டுக்கு இருவரும் வந்தார்கள். வழக்கும் மத்தியான்னம் எடுக்கப்பட்டது. அதற்கு முன்பு சில விவரங்களைக் குறிப்பாகக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் இளைஞரிடமிருந்து அறிந்து கொண்டு, போதாததற்கு ஒரு சொட்டும் அவருக்குக் கொடுத்தார்: "இதைக் கீழ்க் கோர்ட்டில் எந்த மடையன் நடத்தினான்?" என்றார். அந்த இளைஞரே கீழ்க் கோர்ட்டில் வழக்கை நடத்தியவர். அத்தருணத்தில் அவர் மனம் எவ்விதம் கலங்கி யிருக்க வேண்டும் என்பதை வாசகர்கள் ஊகித்துக் கொள்ள லாம். அப்பீலை எடுத்துச் சற்றுப் பேசியதும் கோர்ட்டார் தண்டனை அடைந்தவனிடம் தவறில்லை என நினைத்து, எதிர்த் தரப்பைக் கேள்விகள் கேட்கத் தொடங்கினார்கள். சீக்கிரம் வழக்கில் பழைய குற்றவாளிக்கு வெற்றி கிடைத்தது. ஆனால் வெளியில் வந்ததும், கிருஷ்ணஸ்வாமி ஐயர் இளைஞரைப் பார்த்து, "சிறுவராயினும் கீழ்க் கோர்ட்டு விசாரணையை நீர் நன்றாகச் செய்திருப்பதால் தான் வெற்றி உம் கட்சிக்காரனுக்குக் கிடைத்தது. ஆனால், ஒன்று மட்டும் சொல்லுகிறேன். உம் கட்சிக்காரன் வாஸ்தவத்தில் கணக்கு எழுதுவதில் புரட்டுச் செய்திருக் கிறான்" என்றார். இன்று நீதி மன்றத்தில் வயசு முதிர்ந்த வக்கீலாக உள்ள கே. நரசிம்ம ஐயர் அவர்களே அந்த இளைஞர். கிருஷ்ணஸ்வாமி ஐயர் தமக்கு அளித்த கடைசிச் 'சபாஷ்' அவருக்கு இன்றும் நினைவில் இருக்கிறது.

அல்லாடியின் நுண்ணறிவில் பெரியவருக்கு ஈடுபாடு வந்துவிட்டது என்பதை முன்பு கூறினோம் அல்லவா? பிற்பாடு சில தடவைகளில் தம் வழக்குகளில் சிலவற்றை அவரையே பார்க்கச் சொன்னதும் அல்லாமல், பலர் அறிய அவரைக் கொண்டாடியதை இப்பொழுதும் அவர் மறப்பதில்லை. கிருஷ்ணஸ்வாமி ஐயர் பிற்பாடு நீதிபதி பதவியில் இருந்த காலத்தில், ஒருநாள் காலையில் பத்து மணிக்குமேல் ஸ்ரீ ராமகிருஷ்ண இல்லத்தைப் பார்வை யிட்டுவரப் புறப்பட்டார். தம் நண்பரான காலஞ் சென்ற

ராவ்சாகிப் சி. ராமஸ்வாமி ஐயங்காருடன் [ராமுவுடன்] இரட்டைக் குதிரை வண்டியில் ஏறிச் சென்றுகொண் டிருந்தார். அவர்கள் பங்களாவின் வாசலைத் தாண்டுகையில் எதிரே ரஸ்தாவில் அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கண்டார்; உடனே தம் வண்டியை நிறுத்தி, "கிருஷ்ண ஐயர், ராமகிருஷ்ண இல்லத்தைப் பார்க்க என்னுடன் வரு கிறீரா?" என்றாராம் பெரியவர். அல்லாடிக்குப் பெருமை எவ்வளவு உண்டாயிருந்திருக்கும் என்பதை நம்மால் அள விட முடியாது. வண்டியில் அவர் ஏறி எதிரே அமர்ந்தது தான் தாமதம், ஜட்ஜ் தம் பக்கத்தில் உட்கார்ந்திருந்த நண்பரிடம், "ராமு, இவரை உங்களுக்குத் தெரியுமோ? இவர் பெரிய மேதாவி. வக்கீல் தொழில் செய்கிறவர்களில் தலைமைப் பதவிக்குக் கூடிய சீக்கிரமே வரக் கூடியவர்" என்றார். அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயர் அக்காலத்தில் பி. ஆர். சுந்தரமையரிடம் தொழிற் பயிற்சி செய்து, பின்னரும் அவருடைய ஆபீசிலேயே உதவிக்காக வேலை செய்து கொண்டிருந்தார். வக்கீல் தொழிலில் மேலே வரக்கூடியவருக்குத்தான் தம்மைப் பற்றித் தலைவர்களின் புகழ் வார்த்தைகள் சரியான உத்ஸாகத்தை ஊட்டும். அல்லாடி, வக்கீல் தொழிலில் உன்னத ஸ்தானத்திற்கு வெகு துரிதமாய் ஏறியவர். ஆனால், கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவரைப் பற்றிப் பல வருஷங்களுக்கு முன்னமேயே குறிப்பாகச் சொல்லியது காலஞ் சென்ற ராமுவின் உள்ளத்திலும், அல்லாடி கிருஷ்ணஸ்வாமி ஐயரின் உள்ளத்திலுமே உணர்ச்சியுடன் நிலவும். அல்லாடி, இன்று 'ஸர்' பட்டத்தைப் பெற்றவராயினும், அன்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் தமக்கு அளித்த பாராட்டுப் பரிசை இப்பொழுதும் மறந்தவரே அன்று. அதனால்தான் அவர், காலஞ்சென்ற பெரியாரைப் பற்றிப் பேச்சு வந்ததும், "தாராளமாகப் பொருளுதவி செய்வதைவிட, இளைஞர் களிடம் உள்ள விசேஷத்தைக் கண்டு தாராளமாகப் பாராட்டும் குணம் எவ்வளவோ சிலாக்கியமானது" என்று சொல்லுவார். அதில் அடங்கிய உண்மை மிகப் பெரியவர் களும் ஒப்புக்கொள்ளக் கூடியதுதான். 'உள்ளத்தின்

ஆழத்திலிருந்து எழுந்தவைகளே உண்மை ஒளியுடன் நாக்கில் வரும்' என்பதற்கு இவ்வார்த்தைகள் சான்ருகும்.

எத்தனையோ புத்திமான்களுக்குச் சிறு பிராயத்தில் உத்ஸாகம் ஊட்டக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் காரணமா யிருந்தார். காலஞ்சென்ற எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்காரைப் பற்றி அவர் கொண்டிருந்த நன்மதிப்பு, பின்பு வக்கீல் உலகிலும், வெளியிலும் அவருடைய புத்தி விசேஷத்தை உணர்ந்தவர்களின் வாழ்த்தினுல் நிலைபெற்றது என்பதும் நமக்குத் தெரிகிறது. ஒரு சமயம் ஸ்ரீநிவாஸ ஐயங்காரை, கல்கத்தாவிலிருந்து வந்த டாக்டர் ராஷ்பிகாரி கோஷிடம் அறிமுகப்படுத்தும் பொழுது கிருஷ்ணஸ்வாமி ஐயர், "இவர், ஸர் வி. பாஷ்யம் ஐயங்காரின் மாப்பிள்ளை; ஆனுல் மேதையில் அவரைவிட மேலே போனவர்" என்று சொன்னதாகச் சொல்வது உண்டு. சாதாரணமாய்த் தம்மிடம் வந்தவர்களிடமெல்லாம் 'சீமா'வின் புத்தியைப் பற்றிப் புகழ்வார். கட்சிக்காரர்களின் முன்னிலையில் தாராளமாய்ச் 'சீமா'வைக் கொண்டாடித் தம்முடன் பெரிய வழக்குகளில் உழைக்கும்படியும் செய்வார்.

ஒரு சமயம் 'நௌரங்கப்பூர்' வழக்கு என்ற பிரபல மான நடவடிக்கை விசாகப்பட்டணத்துக் கோர்ட்டில் நடைபெற்றது. ஜயப்பூர் மகாராஜா தம் பாட்டனு ருடைய சகோதரரின் மனைவிகளுக்கு ஏற்கனவே ஸம்ஸ் தானக் கொடையாக அளிக்கப்பட்ட நிலங்களில் தமக்கு உரிமையுண்டு என்று வாதாடினுர். அதனுல் ராஜாவின்மீது அப்பெண்மணிகள் வழக்குத் தொடுத்தார்கள். கீழ்க் கோர்ட்டில் வழக்கு நடத்திய ஆந்திர வக்கீலான கே. எஸ். ப்ரகாச ராவ், என் தந்தையைத் தம் பக்கம் ஆஜராகும்படி கேட்டுக்கொண்டு, அதற்கு உரிய பணத்தொகை முதலிய வைகளைப்பற்றி நேரில் பேசுவதற்குச் சென்னைக்கு வந்தார். வி. ராமேசம் அந்நாட்களில் சிறிய வக்கீலாக இருந்தார். தொழிலில் முன்னேற்றம் அடைய அவருக்கு மிகுந்த ஆசையுண்டு. பிரகாச ராவ், ராமேசத்தை நன்கு அறிந்தவர். ஒருகால் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருடன்கூட உழைக்க ஓர் இளைஞரை அவர் வேண்டலாம் என்று

ஆந்திர வக்கீல் எதிர்பார்த்தார் போலும். ராமேசமும் தம்மை உதவிக்காகக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அழைப்பார் என்று மனப்பால் குடித்தார். கீழ்க் கோர்ட்டு வக்கீலும் ராமேசத்தின் பெயரைப் பெரியவரிடம் குறிப்பிட்டார். ஆனால் உடனே கிருஷ்ணஸ்வாமி ஐயர் அதை மறுத்து, “ஸ்ரீநிவாஸ ஐயங்காரையே எனக்கு உதவிக்காக வையுங்கள். அவருக்குத்தான் மற்றெல்லோரையும்விட நில சம்பந்தமான வியவகாரங்களில் அநுபவமும், ஜமீன் தாரிகளின் வழக்குகளுக்கு ஏற்ற தீர்ப்புகளுடைய ஞாபகமும் அதிகம்” என்று சொல்லி ‘நௌரங்கப்பூர்’ வழக்கின் பொருட்டு ஸ்ரீநிவாஸ ஐயங்காரையே தம்முடன் அழைத்துச் சென்றார். ஜயப்பூர் மகாராஜாவின் கட்சி, நடவடிக்கையில் தோல்வி அடைந்தது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் எதிர்ப் பக்கத்தில் வாதாடியதைக் கண்டு பிரமித்த மகாராஜா தம்முடைய ஸம்ஸ்தான வக்கீலாக அவரை அன்று முதல் ஏற்படுத்திக்கொண்டார் என்றும் தெரிகிறது.*

எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்காரின் புத்திவேகத்தில் நம்பிக்கையும், நியாய வாதிகளில் மற்றொரு சிரேஷ்டரான கே. ஸ்ரீநிவாஸ ஐயங்காரின் அசாதாரணமான கட்சி ஆடும் திறமையில் பெருமிதமும் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அளவில்லாமல் ஏற்படுவது உண்டு. தாம் நீதிபதி பதவியில் அமர்வதற்குமுன் தம்மிடமுள்ள நடவாத வழக்குகளில் தாம் முன்பணமாக வாங்கிய பீஸுகளையும், கட்டுக்களையும் கட்சிக்காரர்கள் வசம் திருப்பும்பொழுது, சிலவற்றைப் பிரித்து எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்காரிடமும், சிலவற்றை, கே. ஸ்ரீநிவாஸ ஐயங்காரிடமும் கொடுக்கும்படி அவர் அவர்களைத் தூண்டியதாகச் சொல்வது உண்டு.

கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் தயாரானவர்களில் சி. பி. ராமஸ்வாமி ஐயர் முக்கியமானவர். குருவினால் சிஷ்யருக்குக் கௌரவமா அல்லது சிஷ்யரால் குருவுக்கு மதிப்பு ஏற்படவேண்டுமா என்றால் இன்று தீர்மானிப்பது சாத்தியமன்று. ஏனெனில் ஸர் சி. பி. இன்று

* ஸர். வி. ராமேசம் கொடுத்த குறிப்பு.

பெற்றிருக்கும் உலகப் பிரசித்தமான புகழ் நிச்சயமாக ஒரே ஒரு காரணத்தை முன்னிட்டுத்தான் என்று சொல்வது ஒருவராலும் இயலாது.

ஆனால் உயிருள்ளளவும் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு சி.பி. யிடம் தனிப்பட்ட பக்ஷம் உண்டென்பதில் சந்தேகம் ஒன்றும் இல்லை. தொழிலில் சிறுவர் காட்டிய ஆற்றலைக் கண்டு மட்டும் அவர் மோகம் கொள்ளவில்லை. மற்றப்படி அவருக்கு இருந்த அசாதாரண சக்திகளைக் கண்டே பெரியார் மனம் பறிகொடுத்தார்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பொறுமைக் குறைவைப் பற்றிச் சிலர் குற்றம் கூறுவார்கள். அவருடைய குறுக்குக் கேள்விகளும், அவசரமும் வழக்கில் அவருடன் வேலை செய்தவர்களுக்குக்கூடச் சொல்லமுடியாத தொந்தரவை உண்டாக்கும். பயந்தவர்கள் பாடு என்றுமே திண்டாட்டந்தான். அவருடைய மிரட்டலை எதிர்க்கக் கூடியவர்களே பிற்காலத்தில் தொழில் துறையில் சோபித்தார்கள். அவருடைய கோபமான வார்த்தைகளையும் அவசரமான காரிய நிர்வாகத்தையும் கண்டு நடுங்கியவர்களைக்கண்டால் அவருக்கே அநுதாபம் இல்லை. தம்மை எதிர்த்துத் தாம் சொல்வதைப் பிசகு என்று நிரூபிக்கக் கூடியவர்களிடமே அவர் அதிக மதிப்பு வைத்தார்.

ஒரு சமயம் ஸர் வி. பாஷ்யம் ஐயங்காருடன் ஒரு வழக்கில் அவர்கூட இருந்தார். சில நுண்ணிய சட்டச் சிக்கல்கள் அதில் எழுந்தன. பாஷ்யம் ஐயங்காருடன் இருந்து வாதித்தவர்களைத்தவிர மற்றவர்களுக்கு அவருடைய புத்தி வேலை செய்யும் வழி அவ்வளவாகப் புலப்படாது என்பார்கள். அவ்விருவர்களும் ஒரு சட்டத் தீர்ப்பைப் பற்றி ஆலோசனை செய்கையில் அவர்கள் சொல்லுவதைத் தூரத்தில் நின்று கவனித்திருந்த எஸ். வரதாசாரியார், அவர்களுக்கு வேண்டிய தெளிவைக் கொடுக்கும் மற்றொரு தீர்ப்பை எடுத்து அவர்களிடம் நீட்டினாராம். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு முதலில் அவ் விளைஞரின் துணிவைக் கண்டு ஆச்சரியம் ஏற்பட்டது. ஏனென்றால், கேசை வாசியாத சிறுவருக்கு இயற்கையில்

எவ்வளவு நீதி ஞானம் இருப்பினும், பாஷ்யம் ஐயங்காரைப் புத்தியில் அநுசரிக்க வேண்டிய அறிவு ஏற்பட்டிருப்பதைச் சாதாரணமாக எதிர்பார்க்க முடியாது அல்லவா? பிறகு வரதாசாரியார் காண்பித்த தீர்ப்பைத் தாம் அங்கீகாரம் செய்ததுமல்லாமல், வேறு எத்தனையோ சந்தர்ப்பங்களிலும் அவருடைய உறுதியான சட்ட ஞானத்தைக் கண்டு மதிப்பையும் காட்டிவந்தார்.

வரதாசாரியார், அட்வகேட் ஜனரலாக விளங்கிய சிவஸ்வாமி ஐயரிடமே தொழில் அபிவிருத்தியைப் பெற்று வந்தார். அட்வகேட் ஜனரல், அரசாங்கம் நாடியபொழுது சட்ட சம்பந்தமாய்த் தீர்மானிக்கவேண்டிய விஷயங்களில் எழுத்து மூலம் அபிப்பிராயங்களைக் கொடுப்பது உண்டு. அவ்விதம் அவர் எழுதியவைகளைப் பிற்காலத்தில் கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினராக இருக்கையில் கிருஷ்ண ஸ்வாமி ஐயர் பார்த்து, "வரதாசாரி எழுதிவைத்திருப்பான் இவைகளை" என்று சினேகிதர்களிடம் வாய் கூசாமல் சொல்லிவிடுவார். அவைகளில் காணப்பட்ட நுட்பமான அறிவை அவர் சிலாகித்தது அவ்விளைஞருக்குப் பெருமையை அளித்தாலும், அவர் சொன்ன தோரணை சிவஸ்வாமி ஐயருடைய மனத்தைப் புண்படுத்துவதாக இருந்தது. எத்தனையோ சமயங்களில் இம்மாதிரி கொஞ்சமும் கவலையின்றிப் பிறர் மனம் படும் துயரத்தைச் சட்டை செய்யாமலே சொந்த அபிப்பிராயங்களை அவர் சொல்லியது உண்டு. அவரைக் குறை சொன்னவர்கள் இந்தத் தோஷத்தையே பெரிதாகச் சொல்லுவார்கள்.

ஆனால் சிவஸ்வாமி ஐயரைப் பொறுத்தமட்டில், அவர் தம் நண்பரின் வாக்கின் கொடுமையை நேருக்கு நேர் பல சந்தர்ப்பங்களில் அநுபவித்தபோதிலும், அவரைப்பற்றி என்ன நினைத்தார் என்பதை நாம் குறிக்காமல் செல்வது தருமம் அன்று. நண்பர்களுக்குள் நடந்த ஒரு வாக்கு வாதத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பொறுமையை இழந்து வாயில் வந்தபடி வார்த்தைகளைக் கவனியாமல் பேசி விட்டார் என்பதைக் கீழ் வரும் கடிதம்* தெரிவிக்கின்றது:

*கடிதம், 2-8-98.

"எதற்கு மன்னிப்பு வேண்டும்? நீங்கள் அப்படி ஒன்றும் தப்பாகச் சொல்லவில்லை என்பதை நான் உணருவேன். உங்களுடைய வழக்கமான பேச்சின் போக்குத்தான் அது. நீங்கள் என்னை ஒரு நாளும் தவறுதலாக எண்ணிப் பேசி இருக்க மாட்டீர்கள் என்பதையும் நான் அறிவேன். நீங்கள் என்னிடம் அடிக்கடி இதை உணர்த்த வேண்டியதும் அவசியம் இல்லை. நீங்கள் பேசியதால் நான் வருத்தம் அடைந்ததாகச் சாஸ்திரிகள் சொல்லியிருந்தால் அது தவறுதான். கவனியாமல் சில சமயங்களில் நீங்கள் வேகமாயும் வேண்டத் தகாதபடியும் பேசிவிடுகிறீர்கள் என்பதுமட்டுமே நான் அவரிடம் சொன்னது."

சிவஸ்வாமி ஐயருடைய கடிதம் நண்பரின் சுபாவத்தை நன்கு வெளிப்படுத்துவ தாயினும், நண்பர் பச்சாத்தாபத்தைக் காட்டிய விவரத்தையும் அது நமக்குத் தெரிவிக்கின்றதல்லவா? அவரிடம் உள்ள பெரிய தோஷத்தைச் சற்றுக் குறைப்பது அவர் காட்டிய பச்சாத்தாபமே.

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் வாய்த் துடுக்கைக் காட்டும் மற்றொரு சம்பவமும் இங்கே தெரிந்துகொள்வதற்கு உரியது. வக்கீல்கள் சபையில் ஒரு விவாதம் ஏற்பட்டு ஒரு நண்பருடன் அவர் சண்டையிட்டுவிட்டார். எதிர்த்தவரும் ரோஷம் படைத்தவர். அன்று நடந்த சண்டையைப்பற்றி நேரில் அவர் பின் வருமாறு எழுதினர்:

"வேண்டுமென்று வசைமொழிகளையும் அவதூறுகளையும் என்மேல் நீங்கள் சுமத்தியதாகவே நான் கருதுகிறேன். நீங்கள் என்னைப் பேசவிடவில்லை; சற்றும் தயை இல்லாமல் என் வாயைக் கட்டிவிட்டீர்கள். அகப்பட்ட தருணத்தில் ஒவ்வோர் இடுக்கிலும் என்னை நிந்தித்ததும் அல்லாமல், பரிஹாஸத்துடன் ஏசி அவமரியாதைக்கு ஆளாக்கினீர்கள். இன்னும், நான் பேதை நெஞ்சன் என்றும் காட்டினீர்கள்...வெள்ளிக்கிழமை நடந்த விதம் இனி ஒருநாளும் மறுபடியும் நடக்காது. உங்களிடம் பழகாதவனுகவே நான் வாழ்க்கையில் நடந்து கொள்ளப் போகிறேன்...."*

என் தந்தையின் குரலோசையும், அவர் காட்டிய அடங்காத சுபாவமுமே வாக்கு வாதங்களைப் பலக்க வைத்துச் சச்சரவு ஏற்படக் காரணமாயின.

அவர் கோர்ட்டில் கட்சி ஆடும்பொழுது எதிரே உள்ளவர்களின் சௌகரியத்தைப் பொருட்படுத்தியதில்லை

*கடிதம், 7-9-96.

என்றும் சிலர் குற்றம் கூறுவார்கள். அதாவது, அடிக்கடி எதிர்க் கட்சியாரின் பேச்சுக்குத் தடையாகக் குறுக்கே எதையாவது சொல்லிக் கொண்டு, அவர்களுடைய யுக்திகளை முற்றும் உருப் படாமல் அடித்துவிடுவாராம். இதுவும் ஒரு கட்சியாடும் தந்திரம். கோர்ட்டு வாதங்களை யுத்த நடவடிக்கைகளுக்கு ஒப்பிட்டே சிலர் பார்க்கின் றார்கள். எதிரியின் பலவீனத்தை அதிகப் படுத்தும் மார்க் கங்களில் இது ஒன்று. ஆனால் இதை உயர்தரமான நட வடிக்கையாகக் கொள்ளார்கள் மாசற்ற மனம் படைத்த நியாயவாதிகள். தம் கட்சி எவ்விதத்திலும் ஜயிக்க வேண்டும் என்ற அளவுக்குக் கவலையினால்தான் நண்பரிடம் இந்த இழிவான பழக்கம் வளர்ந்தது என்பார் சிவஸ்வாமி ஐயர். கட்சியின்பால் உள்ள அதிகப் பற்றுதலே இவைகளுக்கெல்லாம் மூலாதாரம் என்றும் கூறுவார் சிவ ஸ்வாமி ஐயர். ஓரளவில் அவர் குறை கூறுவது சரி என்ரு லும், கச்சேரியில் ஒருவருடைய மனம் வாதங்களில் செல் லுகையில் சீரான நிதானத்தைப் பெறுவது சாத்தியமன்று. கட்சியை வெற்றி பெறச்செய்யும் மனப்பாங்கைக் கடைசி யில்தான் மதிப்பிட வேண்டும். எவ்வளவோ வித அநுப வங்கள் ஏற்படக்கூடிய கச்சேரியில், கட்சியாடும் முறை களை ஓரளவுக்குமேல் சீர்தூக்கிப் பார்ப்பது எல்லோருக்கும் கிட்டும் சக்தி அன்று. அவைகளை எல்லாம் தள்ளிவிட்டுப் பொதுவாக ஒருவருடைய குணம் எவ்விதம் இருந்தது என்பதையேதான் அறிவாளிகள் நிர்ணயிக்க வேண்டும். சிறு தவறுதல்களை வைத்துக்கொண்டு பெரிய குற்றமாக எடுத்துரைப்பது அவரவருடைய இயல்பின் குண தோஷங் களையே மறப்பதாகும்.

ஆனால் ஒன்றுமட்டும் வாஸ்தவம். கிருஷ்ணஸ்வாமி ஐயர் தமக்குத் தோன்றியதைச் சொல்லும்போது பயமோ, தாக்ஷிண்யமோ காட்டியதில்லை. யாராக இருந்தாலும் அவருக்கு லக்ஷ்யம் இல்லை; தம் குண்டாந்தடியை ஓங்கிவிடுவார். வலுச்சண்டைக்கு அவரை இழுத்து விட்டால், சில சமயங்களில் நீதிபதிகளும் அவருடைய வாய்ச்சொல்லுக்குப் பயப்படுவார்கள். கடலூர்க்

கோர்ட்டில் மிஸ்டர் மோபர்லி என்பவர் ஒரு காலத்தில் ஜட்ஜாக இருந்தார். கிருஷ்ணஸ்வாமி ஐயரைச் சென்னையிலிருந்து அழைத்து வந்திருப்பதை ஒரு நடவடிக்கையில் அவர் அறிந்ததும், "சென்னைப் பிரபல வக்கீல்கள் வந்திருக்கும் கேசு அல்லவா இது? எவ்வளவு நேரம் பிடிக்கும் முடிவதற்கு?" என்று ஏளனமாகக் கேட்டார். சாதாரணமாய் இவைகளைப் பொருட் படுத்தாதவர்களானல் அச்சமயத்தில் சும்மா இருந்திருப்பார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயர் தயக்கமே இல்லாததால், "எல்லாம் கோர்ட்டார் அவர்களுடைய கிரகிக்கும் சக்தியைப் பொறுத்தது" என்று பளிச்சென்று பதில் கொடுத்து விட்டார்.

இம்மாதிரியான மற்றெரு சம்பவம் திருச்சி ஜில்லாக் கோர்ட்டில் நடந்ததாகச் சொல்லுவார்கள். மிஸ்டர் எம். ஜே. ஜோஸப் என்பவர் ஜட்ஜாக அமர்ந்திருந்தார். அவருக்கு முன்கோபம் வந்துவிடும். கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவர்முன் பேசுகையில் ஜட்ஜைக் குறிக்கும் மரியாதையான சொற்களைப் பேச்சில் ஞாபகமாகச் சொல்லாமல், 'நீ' என்று தொனிக்கும் வார்த்தைகளை வாதத்தின் மும்முரத்தில் சொல்லிவிட்டார். தம்மை வக்கீல் வேண்டுமென்றே அவமதித்ததாக அந்த ஜட்ஜ் நினைத்துவிட்டார். உடனே அவர் தம் ஆத்திரத்தைக் காட்டினர். கிருஷ்ணஸ்வாமி ஐயர் பதிலுக்கு, "ஹைகோர்ட்டிலுங்கூட இவைகளைப் பொருட்படுத்துவது கிடையாதே" என்று எதிர்த்துச் சொன்னதும், ஜட்ஜுக்கு இன்னும் கோபம் அதிகம் மூண்டது. அவர், "உட்காரு, இல்லாவிட்டால் பேசித்தொலை" என்று இம்மாதிரியான வாக்கியங்களைக் காது கேட்க முணுமுணுத்தார். வாதாடியவருக்கு அதற்குமேல் பொறுமை இல்லை. அழுத்தமாய் எடுப்பான குரலில் அவர், "எத்தனையோ தடவைகளில் பெரிய பெரிய ஜட்ஜுகளிடமும் இம்மாதிரி நான் பேசியிருக்கிறேன். அவர்கள் ஒன்றும் ஆக்ஷேபித்ததில்லை. சின்ன விஷயத்திற்கு இங்கேதான் இவ்வளவு தடபுடல் படுகிறது" என்று கூறிவிட்டார். இதனல் தம்முடைய

கட்சிக்கு ஆபத்தையும் வருவித்துக் கொண்டார். ஆனால் பிற்பாடு ஹைகோர்ட்டார், விரோதமான தீர்ப்பை அங்கீகரிக்காததோடு, கவனியாமல் அவசரமாய் விசாரணை செய்ததற்காக கீழ்க் கோர்ட்டு ஜட்ஜை நிந்தனையும் செய்து, வழக்கையும் கீழே அனுப்பி மறுமுறை நன்றாக விசாரிக்கும்படி ஏவினார்கள்.

இம்மாதிரியான மற்றொரு சம்பவம், சென்னையிலேயே ஹைகோர்ட்டில் நடந்தது. புதிய ஜட்ஜாக நியமிக்கப்பட்ட அப்துர் ரஹீம் என்பவரும் அவருடன் மிஸ்டர் மன்ரோ என்பவரும் சேர்ந்து உட்கார்ந்துகொண்டிருக்கையில் எடுக்கப்பட்ட ஓர் அப்பீலில், கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பைப் பார்வையிட ஜட்ஜ்கள் முதலில் விரும்பினார்கள். அம்மாதிரி கிருஷ்ணஸ்வாமி ஐயர் முதலில் வாசியாததைத் தவறுதலாக எண்ணி அவரை மறுபடியும் வாசிக்கும்படிக் கேட்டார்கள். அவர் பழக்கம் சாதாரணமாய்க் கேஸின் விவரங்களைக் காலதாமதமின்றி முதலிலேயே தம் வார்த்தைகளில் தெளிவாகச் சொல்லுவதுதான். எதிர்க்கட்சி ஆக்ஷேபிக்காத அளவுக்கு அவர் சொன்ன விஷயங்களில் தவறுதல்கள் இல்லை என்று நீதிபதிகளும் உணர்வார்கள். ஆனால் வெள்ளைக்காரரான நீதிபதிக்குத் தம் சொந்தப் பழக்கத்தில் நம்பிக்கை. மேலும் அவர் தம் உயர்ந்த ஸ்தானத்தை மறக்காதவர். தாம் சொல்லுவதை எவ்வளவு பெரிய வக்கீலாயினும் கேட்க வேண்டுமென்னும் மனப்பாங்கைப் பெற்றவர். ஆகையால் அவர் இரண்டு தடவைகளுக்குமேல் தாம் சொன்னதையே வற்புறுத்தியமையால், வாதிக்க நின்றவருக்கு மிதமிஞ்சிய கோபம் வந்துவிட்டது. 'சரி' என்று சொல்லி மிகவும் வேகமாய்க் கீழ்த்தீர்ப்பை வாசிக்க ஆரம்பித்து ஒருவருக்கும் தம்மைப் பின் தொடர முடியாதபடி வாசித்து முடித்துவிட்டு நின்றார். பாவம்! ஜட்ஜுக்கு விஷயம் ஒன்றுமே புலப்படவில்லை. பக்கத்திலிருந்த ரஹீம் இவைகளைக் கவனித்துவிட்டுத் தாம் அவசியம் இதில் தலையிடவேண்டிய நிலைமை ஏற்பட்டதை உணர்ந்து, "சரி, மிஸ்டர் கிருஷ்ணஸ்வாமி ஐயர்; உங்கள் வார்த்தைகளிலேயே இனிச்

சொல்லுங்கள் : வாசித்தது போதும்” என்றூராம். வக்கீலுக்கு முதல் வெற்றி கிட்டியது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் நடத்திய கீழ்க்கோர்ட்டு வழக்குகள் பல உண்டு. ஒவ்வொன்றிலும் அவருடைய புகழ் விருத்தி அடைந்தது. ‘நிடதவோல் - மேடூர் வழக்கு’ என்பது அக்காலத்தில் அநுபவசாலியான ஜில்லா ஜட்ஜ் ஹாம்னெட்டின் முன் நடைபெற்றது. ஜட்ஜ் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் திறமையையும், பேசும் அழகையும் பிரமாதமாகக் கொண்டாடினூர் என்று சொல்வது உண்டு. இன்னும், பிரபலமான விஜயநகர சம்ஸ்தானத்தின்பேரில் வியாஜ்யம் செய்த ஞாதிகளின் பக்கம் அவர் ஆஜராகிக் கோர்ட்டில் நடவடிக்கைகளை வெகு காலம் நீடித்து நடத்திய விவரத்தைப் பல வக்கீல்கள் மறக்காமல் வெகு நாட்கள் வரையிலும் பேசிக்கொண்டிருந்தார்கள். விஜயநகரத்து ராஜாவின் ஞாதிகளோ பரம ஏழைகள். அவர்களுக்குப் பண உதவி செய்வதற்கு முதலில் ஒருவரும் முன் வரவில்லை. மூன்றே நாட்களில் முடிந்துவிட வேண்டிய வழக்கு என்று எதிர்க்கட்சியும் சொன்னதாம். எதிர்க்கட்சியில் விஜயநகர சம்ஸ்தானத்திற்காகச் சென்னைப் பிரபல வக்கீல்களில், முக்கியமாக ஸர். வி. பாஷ்யம் ஐயங்காரும், பி. ஆர். சுந்தரம் ஐயரும் என் தந்தையை எதிர்த்தார்கள். வழக்கில் சம்பந்தப்பட்ட மற்றொரு கட்சிக்கு வெள்ளைக்கார நியாயவாதியான மிஸ்டர் டபிள்யு. கார்த்து* என்பவரும், டி. ரங்காசாரியாரும் வாதாடினூர்கள். பிறகு வழக்கு ஆரம்பித்து மூன்று வருஷங்களுக்கு மேல் விசாரணை நடந்தது. தூணி ராஜா வாதிகளுக்குப் பொருள் உதவி செய்தார். என் தந்தைக்கு அவ்வழக்கில் வருமானம் அதிகம்; அலைச்சலும், உழைப்பும் மிகுதியாயின. காலஞ்சென்ற ராஜாவின் ‘உறவினர்கள்’ என்று வாதிகளைக் கோர்ட்டார் ஒப்புக்கொள்ளும்படி செய்ய அவர் பிரம்மப் பிரயத்தனம் செய்யவேண்டியதாயிற்று. சாட்சி விசாரணைகள் கணக்கில்லாமல் நடந்து முடிவடைந்த பிறகு, வழக்கை வாதிக்க எழுந்தபொழுது அவர் சொன்ன மொழிகள்:

* கல்கத்தா பாரிஸ்டர்

"மிகவும் பளு நீங்கிய உணர்ச்சியுடனே எழுந்து நின்று என் வாதங்களைக் கேட்க இப்பொழுது கோர்ட்டார் அவர்களை வேண்டிக்கொள்ளுகிறேன். சீமையில் 'டிச்போர்ன் நடவடிக்கை' என்ற பிரபல வழக்கு 183 நாட்கள் நடந்ததைப் பெரிதாகச் சொல்லுவார்கள். நாம் அந்த வழக்கு விசாரணையின் காலத்தையும்விட அதிகமாகவே இங்கு எடுத்துக்கொண் டிருக்கிறோம். சீமைக் கோர்ட்டில் மட்டுமன்று, மற்றப்படி இந்தியாவில் எங்கே சுற்றிப் பார்த்தாலும் காணாதபடி நாம் வெகு காலம் இதை நடத்திவிட்டோம்." இவ்விதம் பரிகாசம் கலந்த வாக்கின் வன்மையுடனே கட்சி வாதத்தைத் தொடங்கினார். தலைவர்களில் பலருக்குப் பேசும்பொழுது அழகாக ஆரம்பிக்கவே தெரியாது. 'ஸ்ரீ பாஷ்யம் ஐயங்காருக்கு நுணுக்கமான மேதை இதைவிட அதிகமாய் இருக்கலாம்; மணி ஐயருக்கு அநாயாஸமான அறிவின் வேகம் இருக்கலாம்; சுந்தரம் ஐயருடைய சட்டப் படிப்பு மிகவும் ஆழ்ந்திருக்கலாம்; நார்ட்டனுக்கு வாக்கின் வன்மை இவரைவிட எவ்வளவோ பிரமாதமாயிருக்கலாம். ஆனால், அவர்களைவிட ஒவ்வொன்றிலுமே அதிக விசேஷமாகச் சோபிக்காவிட்டாலும், கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் நியாயவாதிக்கு வேண்டிய எல்லாக் குணங்களும் ஒன்று சேர்ந்து பூரணமாக இருந்தன. அவைகளே அவரைத் தனிப்பிரகிருதியாகக் கொண்டாட வைத்தன' என்பார் சிவஸ்வாமி ஐயர்.* கோர்ட்டில் அவருடைய சுபாவத்தில் கோபமும் மரியாதைக் குறைவும் இருந்தனவென்று நினைத்தவர்களும் பிற்பாடு தாங்கள் நினைத்தது தவறு என்று அவரிடமே மன்னிப்பைக் கேட்டது உண்டு. விஜய நகரம் கேஸில் எதிர்த் தரப்பில் நின்ற கார்த்து, கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு எழுதிய கடிதத்தில் இதையே குறித்திருக்கிறார்.

"ஒரு தடவைக்குமேல் என்னிடம் வேண்டுமென்று மரியாதைக் குறைவாக நீங்கள் நடந்ததாக நான் எண்ணியது அபசாரந்தான். அதைக் குறித்து இப்பொழுது வருந்துகிறேன். நான் தங்களைக் கேட்டுக் கொள்வது, அம்மாதிரி என் பேச்சினால்

* லா ஜர்னல் சஞ்சிகை 50, பக்கம் 4.

தங்களுக்கு ஏதாவது கஷ்டம் மனத்தில் ஏற்பட்டிருந்தால் அதற்காக மன்னிக்கவேண்டும்.''*

கிருஷ்ணஸ்வாமி ஐயர் உடனுக்குடனே பிறர் தவறுகளை மறப்பவர். தாமும் கொடுப்பார்; பிறர் கொடுத்தாலும் வாங்கிக் கொள்ளும் தாராள மனமும் அவருக்கு உண்டன்றோ?

அக்காலங்களில் பெரிய வக்கீல்களைப் பார்த்தாலே தனிச்சிறப்புடன் தோன்றுவார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரின் கம்பீரமான நிமிர்ந்த தலையும், ஜரிகைத் தலைப் பாகையும், அழுக்குக் கொஞ்சமும் படியாத இடுப்பு வேஷ்டியும் திருஷ்டிபடும் அவர் தோற்றத்திற்குப் பின்னும் உயர்வை அளித்தன. அவருடைய வேகமான நடையும், அழுத்தமான பேச்சும், கணீர் என்ற குரலும், பயமற்ற தன்மையும், இளைஞர்களிடம் அவர் காட்டிய அளவு கடந்த அநுதாபமும் பலருடைய நன்மதிப்புக்குக் காரணமாயின. "இனி, கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய உதாரசீலத்தைப்போல் காணப் போகிறோமா?'' என்று தான் பலர் ஹைகோர்ட்டில், அவர் தொழிலை விட்ட பிறகு பல நாட்கள் வரையிலும் சொல்லுவார்கள்.

கட்சியாடும் முறையிலும் தர்மத்தையே நிலைநிறுத்தப் பாடுபட்டவர். அவர் தம் கட்சிக்காரர்களிடம் தவறுகள் இருந்தால் உடனே கண்டித்துவிடுவார். தவறுதலைக் கண்டாலே கோபம் அவருக்குப் பொங்கி வரும். தமக்குக் கட்சிக்காரர்களின் ஆதரவோ அல்லது உதவியோ அவசியத்திற்குமேல் வேண்டாம் என்ற மனப்பான்மையை ஆதிமுதல் வளர்த்தவர். அதனாலேயே சில சமயங்களில் பழைய கட்சிக்காரர்களிடம் உரிமை பாராட்டி, அவர்கள் கொண்டு வந்த பொய் வழக்குத் தஸ்தவேஜுகளை எடுத்துத் தூர வீசி எறிந்துவிடுவார். அம்மாதிரிச் சமயங்களில் அவர்களுக்கு மனவருத்தம் ஏற்படினும், அவர்பால் அவர்களுக்கு இருந்த நிலையுள்ள நன்மதிப்பு ஒருநாளும் போகவில்லை.

---

* கார்த்தின் கடிதம் 30-9-09.

## அத்தியாயம் 8

### சமூகத் தொண்டு

''அறிவினுல் ஆகுவ துண்டோ பிறிதினேய்
தன்னேய்போற் போற்ருக் கடை.'' — குறள்.

தம்மைப்போல் பிறரையும் நினைக்கும் மனப்பான்மை தனிச் சிறப்புடையது. சிலருக்குச் சொந்த வீட்டை நேர்மையாகவும், சுத்தமாகவும் வைக்கும் ஆசையில், அண்டைவீட்டு மனிதர்களுக்கு அதனுல் துன்பம் ஏற்படலாம் என்பதை அறிய இயலாமற் போகிறது. தங்கள் சௌகரியத்தையே பெரிதாக மதிப்பதுதான் அதற்கு முக்கிய காரணம். மேலும், பிறரிடம் ஓரளவாவது அநுதாபமும், இரக்கமும் இருந்தால் தங்கள் நலமொன்றேதான் பிரதானம் என்ற எண்ணம் எக்காலத்தும் அவர்களுக்கு உண்டாகாது. நல்ல நாளிலேயே மனப்பக்குவம் அடையாதவர்களுக்கு, சிரம தசையும் சேர்ந்து விட்டால் கேட்க வேண்டியதில்லே. ஒருவரை ஒருவர் பழிப்பதும், அவநம்பிக்கை முதலிய இழிவான குணங்களுக்கு இரையாவதுமே தொழிலாகி விடும். அப்பொழுது பொதுஜனங்களுக்கு உழைத்துப் பாடுபட மனம் வருவது எளிதன்று.

ஒரு காலத்தில் இந்திய சமூகத்தின் கதியும் அம்மாதிரியே ஆகிவிட்டது. பிறநாட்டினர் நம்மை அடிமைகளாக ஆக்கியதன் பயனுக நம்மிடம் இருந்த உயர்ந்த எண்ணங்களும் ஆசைகளும் மங்கின. வெள்ளேக்காரர்களின் சுயநலத்தை நாடும் செங்கோல் முறைமை, வாழ்க்கையை- அதிலும் சாமான்ய ஜனங்கள் நடத்தும் வாழ்க்கையை - உருத்தெரியாமல் தாழ்வடையச் செய்தது. நாட்டில் எங்கும் நிமிர்ந்து நடக்கும் பழக்கமே போய்விட்டது. சொந்த வீடு என்ற ஞாபகமும் போய், எங்கேயோ, யாருடைய க்ஷேமத்திற்கோ நாம் வாழ்வதாகவே ஒரு நினைப்பு உண்டாயிற்று. படித்தவர்கள் என்ருல் ஆங்கிலம்

படித்தவர்களே என்று நினைக்கும் நிலை உண்டாயிற்று. உயர்ந்தவர்கள் என்றால் வெள்ளைக்கார உத்தியோகஸ்தர் களுக்குச் சலாம் வைத்து அடக்க ஒடுக்கமாக நடப்பவர் களே என்ற எண்ணந்தான் நாட்டில் உலவியது.

இப்படி யெல்லாம் சிறிதுகாலம் நாட்டிற்கு நலம் இன்றி, உடைந்த மரக்கலத்திலிருந்து சிதறிய பலகைத் துண்டுகள் நடுக்கடலில் இடம் தெரியாது மிதந்து செல்வ தைப்போல, இந்திய மக்கள் மோதுண்டு மனம் தவித் தார்கள். இருள் மறைந்து அருணோதயகாலம் வருவதற்கு ஏற்படும் அறிகுறிகள் சிறிது சிறிதாகத்தான் தென்பட லாயின. 1885-ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 28-ஆம் தேதி பம்பாய் நகரத்தில் பிரபலரான சிலர், இந்திய சமூகத்தின் பிரதிநிதிகளாகக் கூடி, தேசோத்தாரணம் செய்யும் இயக்கம் ஒன்றைத் தோற்றுவித்துத் தொண்டு புரிவதற்குரிய சில திட்டங்களைத் தீர்மானித்தார்கள். ஆனால் அக்காலங்களில் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரே இந்திய தேசம் க்ஷேமம் அடைவதற்குத் தடை செய்து வருகிறார்கள் என்னும் கருத்து, சிறிதுகூட நம்மில் ஒரு வருக்கும் இல்லை. ஆகையால், சில ஆங்கிலேயர்களும், பல பெரிய அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்களுங் கூட, முக்கியமாக மக்களின் குறைகளைச் சீர்திருத்தம் செய்ய வேண்டிய நோக்கத்துடன், வருஷந்தோறும் கூடுவது என்ற வழக்கத்தை மேற்கொண்டார்கள். நாளடைவில் அக்கூட்டமே **'இந்திய தேசீய காங்கிரஸ்'** என்னும் புகழுடன், ஜனநாயகத்தின் பொருட்டு உழைத்துத் தேச சேவகர்களை உண்டாக்கும் கருவியாக ஆயிற்று. இன்று காங்கிரஸ் செய்யும் காரியங்களையும், அப்பொழுது அச்சிறு கூட்டம் கூடித் தீர்மானித்த விவரங் களையும் ஒப்பிடும்பொழுது, அநேக விதங்களில், அதன் சக்தியும், செல்வாக்கும் இன்று மேன்மை பெற்றுவிட்டன வென்று தெரிய வரும். பொதுஜன ஊழிய மகா சபை அதுவேதான் என்ற நிச்சயம் நம்பால் ஏற்பட்டு விட்டது. ஒவ்வொரு பொதுஜனக் காரியத்தின் சிறுபகுதியிலும் பலர் யோசனைக்கு என்று சேர்வதும் சிலர் நன்கு

உழைப்பதுமாகப் படித்தவர்கள் கவனம் செலுத்த ஆரம்பித்தார்கள் என்பதுதான் காங்கிரஸ் இயக்கத்தின் சிறந்த நன்மையாகக் கருதப்பட்டது.

சென்ன பட்டணத்தில் புத்திமான்கள் சிலர், முதல் முதலில் இக்காங்கிரஸ் சபை கூடியபொழுது, சற்று நேரமாவது பிறருடைய துன்பங்களைக் குறித்துக் கவலைப்படும் மனப்பாங்கைப் போற்றி, அச்சபையில் சேர்ந்தார்கள். பரம தயாளுவான மணி ஐயர் அவர்களும், இந்திய ஸநாதன தர்மத்தில் ஆர்வம்கொண்ட ஆசாரியர் சுந்தர ராமையர் அவர்களும், இடைவிடாமல் பத்திரிகைகளுக்கு விஷயதானமும், பொதுக்கூட்டங்களுக்குத் தம்மாலான உதவியும் அளித்த திவான்பகதூர் ரகுநாதராவ் அவர்களும் அதில் கலந்திருந்தார்கள். 'ஹிந்து' பத்திரிகையின் ஆரம்ப காலங்களில் அதற்கு முழுத்தொண்டை ஆற்றியவரும், பிறகு 'சுதேசமித்திரன்' ஆசிரியராய்ச் சிறப்புடன் விளங்கியவருமாகிய ஜி. சுப்பிரமணிய ஐயரும் இவர்களுடன் சேர்ந்தவர். இவர்கள் இந்நாட்டில் கௌரவமுள்ளவர்களாகவே எந்நாளும் கருதப்பட்டவர்கள். இவர்களிடம் தொடர்பு பெற்ற இளைஞர்களில் என் தந்தையும் ஒருவர். மணி ஐயருடைய இருதயத்தின் பரிசுத்தத்தைக் கண்டு எப்போதும் வியந்துகொண் டிருந்தவர்களில் அவர் முதன்மையானவர் என்றுதான் நாம் அறிவோமே!

"மணி ஐயரைப்போன்ற மற்றொருவரை நாம் பெறுவது அசாத்தியம்" என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் பல சந்தர்ப்பங்களிலும், பொதுக்கூட்டங்களிலும் வாய்விட்டுச் சொல்லியிருக்கிறார். மயிலாப்பூரில் பல பெரிய மனிதர்களும், நீதிபதிகளும், அரசாங்கத்தில் கௌரவ பதவிகளைப் படைத்தவர்களும், தனவந்தர்களும் அக்காலத்தில் வசித்தார்கள். வக்கீல் தொழில்செய்து முன்னுக்கு வரவேண்டும் என்று துணிந்து பட்டணம் வந்தவர்களோடு கிருஷ்ணஸ்வாமி ஐயரையும் சேர்க்கவேண்டும். மணி ஐயருடைய விசாலமான சிந்தை பணம் வழங்குவதில் அபரிமிதமாய் இருந்ததுடன், இளைஞர்களிடம் உள்ள அறிவொளியை அறிந்து அங்கீகரித்து, தாராளமாக அவர்களைக் கொண்

டாடும் இயல்பிலும் அதிகமாயிருந்தது. முதல் பழக்கம் முற்றும் பழக்கம் என்பதுபோல் மணி ஐயருடைய இருதயப் பண்பாட்டின் அதிசயமே அவர்பால் நெருங்கிய வர்களையும் முற்றும் பசும்பொன்னாக்கியது.

ஆனால் மணி ஐயருடைய மேதையில் தம் சிநேகித ரான சுந்தரம் ஐயரைவிட அதிகமாகமோகம் கொண்டவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்றே சொல்லவேண்டும்.

எந்தப் பொதுஜனக் காரியத்தை அக்காலங்களில் ஆரம்பித்தாலும் மணி ஐயரை முன் நிற்கவைத்தேதான் மற்றவர்கள் தொடங்குவார்கள். அந்தப் பழக்கத்துக்குத் தடையில்லாமல் தாம்கொண்ட பக்தி விசுவாஸத்தினாலும், வாழ்க்கையில் உயர்ந்த அம்சங்களைப்பெறவேண்டுமானால் எல்லா வகையிலும் பின்பற்ற வேண்டிய ஒழுக்கமும் கௌரவமும் பெற்றவர் மணி ஐயரேதான் என்னும் கருத்தினாலும் அவரை மனமார அநுசரித்தவர் கிருஷ்ண ஸ்வாமி ஐயர். எல்லாக் காரணங்களினாலும் புதியதோர் உணர்ச்சியைப் பொதுஜனக் காரியங்களில் மணி ஐயர் தம்மிடம் வந்தவர்களுக்கு எப்பொழுதும் ஊட்டினார். பண்பட்ட உள்ளத்தில் எந்த நல்ல விதையும் சீக்கிரம் முளையிடும் என்பதும் தெரிந்ததுதானே ?

மேலும், மயிலாப்பூரில் தொழிலுக்காக வந்தது தொடங்கி, மற்றச் சில நண்பர்களும் அரிய குணங்களைப் பொக்கிஷமாகப் படைத்தவர்களாகவே கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தோன்றினார்கள். சிறியதொரு சபை ஒன்றை மயிலாப்பூரிலே ஏற்படுத்தி, அதற்கு 'அதினியம்' என்று பெயரிட்டு, அதில் தங்கள் சாமர்த்தியங்களை வெளிக்காட்டச் சொற்பொழிவுகளையும், அரசியல் தர்க்கங் களையும் நடத்தி வந்தார்கள், சில இளம் புத்திசாலிகள். அதில் சிவஸ்வாமி ஐயரும், என் தந்தையும், காலஞ் சென்ற பரோபகார சிந்தாமணியான ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அடிக்கடி சந்தித்துத் தங்களுடைய புத்திக்கு எட்டிய விஷயங்களைப் பிறருக்குச் சொல்லியும், வாதாடி யும், தீர்மானித்தும் வந்தார்கள்.

சிலருக்குப் பேசிப் பேசித் தங்கள் வாக்கின் வன்மையை மட்டும் காட்டுவதில்தான் ஆசை. பொதுஜனக் காரியங்களில் பேச்சுடன் மட்டும் புகழ்பெறும் காலம், காந்தி அடிகள் தேசசேவையில் தலைமை வகிக்கத் தொடங்கியது முதல் மலையேறிவிட்டது. வாய்ப் பேச்சில் வீரராயிருக்கும் தேசசேவகர்களை வெட்கமடையும்படிச் செய்தவர் காந்தி அடிகள். இக்குணத்தை மிகவும் சிரத்தையாகக் கடைப்பிடித்தவர்களில் சிலர், காந்தி அடிகள் இந்திய அரசியல் அரங்கத்தில் வருவதற்கு முன்பும் இருந்தார்கள். ஆனால் அரசியல் சம்பந்தமான இயக்கங்களில் அல்லும் பகலும் ஈடுபடும் பரம தியாகிகளை அக்காலங்களில் சில இடங்களில் மட்டுமே காண முடிந்தது. பலமாறுதல்கள் அடைந்திருக்கும் இக்காலத்தில், பொதுஜன ஊழியத்தையே இடையீடில்லாத வாழ்க்கையின் முக்கிய நோக்கமாகக்கொண்ட ராஜாஜியைப்போன்ற உயர்ந்த கர்ம யோகிகளையும் உலகம் பெற்றிருக்கிறது.

ஒருவருடைய பொதுஜன சேவையை மதிப்பிட எண்ணும்பொழுது அவரிருந்த நாளையும், அவருக்கு ஏற்பட்ட சில தொட்டில் பழக்கங்களையும் நாம் மறக்கலாகாது. கிருஷ்ணஸ்வாமி ஐயரை அதிகக் கர்வம் கொண்டவர் என்றும், வாயடி அடித்து விடுவார் என்றும் நினைப்பவர்கள் தாம் அதிகமாயிற்றே! வாஸ்தவத்தில் அவருடைய உண்மையான சுபாவம், அதிகம் பொய் புனை சுருட்டுகளை ஒப்புவது வழக்கமில்லை. எவ்வாறு இருப்பினும் மற்றவர்களுக்கு மனத்தில் கஷ்டம் ஏற்படுமே என்று சுலபமாகவோ தயையுடனோ விட்டுவிடும் சாந்த சுபாவமும் அவரிடம் இல்லைதான். தாம் விட்டுக் கொடுக்கும்படி நேரிடினும் சரி, பிறர் வெற்றி பெறினும் சரி, புத்திசாலிகளைக் கண்டால் அவருடைய உள்ளம் பூரித்து மகிழும். இக்காரணங்களையெல்லாம் பொதுஜனக் காரியங்களில் ஈடுபட்ட எல்லோராலும் ஒருமனத்துடனே கூர்ந்து கவனிப்பது அரிது. ஆனால் அவருடைய ஜன்ம விரோதிகளும் அவரைப்பற்றி ஒன்று மட்டும் சொல்வார்கள் : சூழ்ச்சி,பயம், சுயநலம் முதலியவைகள் அவரிடம்

சிறிதும் காணப்படவில்லை. தப்பிதம் செய்தவர்களும் நியாயத்திற்கு விரோதமாக நடப்பவர்களும் அவர் எதிரில் நிற்கப் பயப்படுவார்கள். "இக்காலங்களில் உயர்ந்தவர்களான மஹாத்மாஜியைப் போன்றவர்கள் நிகரற்ற தைர்யத்துடன் இல்லையா? தவறுதல்கள் பிறரிடம் இருப்பினும் க்ஷமித்துத் தாங்கள் மேற்கொண்ட பொதுக் காரியங்களை அவர்கள் நடத்தவில்லையா?" என்ற கேள்வி எழும்பொழுதுதான் ஒருவருடைய பிறவிக் குணங்கள், அவர் இருந்த காலம், சகவாசங்கள் எல்லாவற்றையும் நாம் மனத்தில் வாங்கிக் கொண்டு அவைகளைச் சீர்தூக்கிப் பார்க்கவேண்டும் என்று தெரியவரும். சுவாமிநாதையரையும், அவர் தந்தை வேங்கடராம ஐயரையும் நேரில் அறிந்து பழகியவர்கள், 'ஏது, கிருஷ்ணஸ்வாமிக்கு அவர் அப்பாவின் நிர்த்தாக்ஷிண்யமும், சாமாவின் முன்கோபமும் கொஞ்சங்கூட இல்லை' என்று தீர்மானமாகச் சொல்லிவிடுவார்கள். அதற்காக அவரிடம் காணப்பட்ட சில இயல்புகள் தோஷம் ஆகமாட்டா என்பதற்கும் இல்லை. ஒன்றையும் ஒளிக்காத சுபாவத்தின் அடிப்படையான தருமமே விரோதிகளைத் தலைப்படச் செய்தது. ஒரு சமயம் அமராவதி நகரத்துப் பிரமுகராகிய, ராவ் பஹதூர் மதோல்கர் என்பவர், ஏதோ என் தந்தை அரசியல் விவாதத்தில் கடுமையாய்ச் சொன்னவுடன், "கிருஷ்ணஸ்வாமி, இதுதான் உங்களிடம் தவறு: புத்தியை நிதானத்தில் வைத்துக் கொள்ளவேண்டாமா? எதற்காக வீண் அபவாதத்திற்கு ஆளாகவேண்டும்?" என்று புத்திமதி சொன்னதும், அவரும், "என் புத்திக்கு நிதானம் இல்லாமல் இல்லை; ஆனால் நிதானம் இழந்திருப்பது என் நாக்குத்தான்" என்றாராம்.* தம் மேல் கொஞ்சங்கூடப் பக்ஷபாதம் இல்லாமல் தம்மையே நன்றாகச் சீர்தூக்கிப் பார்க்கும் இயல்புடையவர் என்று இதிலிருந்து தெரியவில்லையா?

பலர் முன்னிலையில் பேசுவது, அதிலும் ஆங்கிலத்தில் பிரசங்கம் செய்வது என்ற பலவித ஆற்றல்கள் அவரிடம்

* அலகாபாத் 'லீடர்' (1912), ஸி. ஒய். சிந்தாமணி எழுதிய 'வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் நினைவுகள்.

பால்யத்திலேயே ஏற்பட்டவை என்பதை அறிய முடிகிறது.

1888-ஆம் வருஷமே, திருச்சியில் அவருடைய சகோதரர், முன்சீப் வேலை பார்த்தபொழுது, விடுமுறைக்காகச் சென்றவர், விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சி என்னும் விஷயத்தைக் குறித்து ஓர் அறிஞர் பிரசங்கமொன்றைச் செய்ய, அதற்குத் தாம் தலைமை வகித்துவிட்டு, தம்முடைய தினசரிக் குறிப்பில் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

"1888-ஆம் வருஷம் ஜூன் மாதம் 29-ஆம் தேதி: என்னைப் பொதுஜனக் கூட்டம் ஒன்றிற்குத் தலைமை வகிக்கக் கேட்டுக் கொண்டார்கள். கூட்டம் 'டௌன் ஹாலில்' நடைபெற்றது. ஸ்ரீமான் லக்ஷ்மீ நரஸு என்பவர் விஞ்ஞானப் பயிற்சி என்பதைப் பற்றிப் பேசினார். நானும் ஏதோ பேசினேன். சிரமப்படாமல் ஆங்கிலத்தில் நான் பேசினேன். அவ்வளவுதான். கேட்டவர்களிடம் என்னவிதமான அபிப்பிராயத்தை உண்டாக்கினேன் என்பதை அறிய நான் அங்குள்ளவர்களைப் பிறகு விசாரிக்கவில்லை."

ஆம்; அவருக்கு அப்பொழுது வயசு இருபத்தைந்து; வாலிபத்தன்மை மாறாதவர். ஆங்கிலத்தில் பேசுவதில் சிரமம் இருக்குமென்று நினைப்பதற்கும் நிச்சயம் இடம் உண்டு. பிற்காலத்தில் பெரிய சபைகளில் சங்கோசமின்றியும், திடமான குரலிலும், அதிவேகமான சொற்றொடர்களைக் கொட்டியவர். அச்சிறு வயசிலேயே தம்மைப் பற்றிப் பெருமை அடித்துக் கொள்ளத் தெரியாதவர் என்றும் அவர் கொடுத்திருக்கும் தினசரிக் குறிப்பிலிருந்து அறிய இடமிருக்கிறது. மேலும் யார் என்ன நினைப்பினும் தமக்குப் பட்டதைச் சொல்லிவிட்டு, பிறகு அதைப்பற்றி அளவளாவும் பழக்கம் கொஞ்சமும் அவரிடம் இல்லை என்றும் தெரிகிறது.

ஏ. வி. கோபாலாசாரியார் அவர்கள், வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளைப்பற்றி அவரிடம் பேசுங்கால் அவர் தம்மிடம் சொன்னதாகச் சொல்லுவார்: "வாழ்க்கையில் எப்பொழுதும் தைரியமாய் இருக்க வேண்டும்; உமக்குள் நீர் சதா தீர்மானித்துக்கொள்ள வேண்டியது யாதெனில், 'எனக்குச் சரியென்று பட்ட

தைத்தான் வாய்விட்டுச் சொல்லுவேன். யார்வேண்டு மானுலும் தங்களுக்கு இஷ்டமானதை நினைத்துக் கொள்ளட்டும்' என்பதுதான்." முப்பது வயசாகாதவர் தம்மிடம் வாழ்க்கையின் முக்கியக் கருத்தான பிழைப்புக் காக வந்த ஓர் இளைஞரிடம் இம்மாதிரிச் சொல்லும் திட நம்பிக்கையைப் பற்றிச் சரியாக அறிவதற்கு நம்மிடமும் மனப்பக்குவம் வேண்டும்.

பொதுஜன ஊழியம் வேரூன்ற வேண்டிய காலமும் இளமைதான். பெயரும் பணமும் செல்வாக்கும் தொழில் துறையில் கிடைத்த பிறகுதான் பொதுமக்களுக்குப் பாடுபடுவது என்பது சிறந்த கருத்தாகாது. கிருஷ்ண ஸ்வாமி ஐயரும் பலவிதமான சௌகரியங்களைத் தேடுகை யிலேயே மற்றவர்களையும் நினைப்பதில் சில நேரமாவது செலவழிக்கலானுர். அம்மாதிரிச் செயல்களில் ஒன்று வருமாறு: 1896-ஆம் வருஷம் சிலர் கூடிப் பக்கிங்ஹாம் கால்வாயை மயிலாப்பூரின் வழியாக வெட்டினுல் அக்கம் பக்கங்களில் உள்ளவர்களுக்கு மிக்க கெடுதி விளையும் என்று கண்டு, கவர்ன்மெண்டுக்குக் கையெழுத்திட்டு விண்ணப்பம் செய்தார்கள். பொது ஜனங்களின் முன் அவ்விஷயத்தைத் தெளிவாகப் பேசி, அவர்கள் அபிப் பிராயங்களையும் கலந்து பார்த்தவர்களில் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் ஒருவர்.* கடைசியில் அவர்கள் நடத்திய எதிர்ப்பு வெற்றி பெறவில்லை. இருந்தாலும் அவர்கள் எதிர்த்தது எவ்வளவு நியாயமானது என்பது இன்றும் பக்கிங்ஹாம் கால்வாய் அருகில் வசிக்கும் மயிலை வாசிகள், மூக்கைக் கை விரல்களால் பொத்திக் கொண்டு ஆமோதிப்பார்கள்.

ஒரு சமயம் தென்னிந்திய ரெயில்வே அதிகாரிகள் 'பீச்' ஸ்டேஷனையும் சைதாப்பேட்டை ஸ்டேஷனையும் சேர்க்க ஒரு ரெயில் பாதையைக் கடற்கரை மணலில் போடுவது என்று தீர்மானித்துவிட்டு, அரசாங்கத்தாரின் அநுமதியையும் பெறும்படியான சந்தர்ப்பத்தை எதிர் பார்த்தார்கள். அதை எதிர்த்து முக்கியமாகப் பேசியவர் களில் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் ஒருவர். அன்று அக்

* 'மெயில்' பத்திரிகை, 1896-ஆம் வருஷம், மார்ச்சு, 17.

கூட்டத்திற்கு அக்கிராசனம் வகித்தவர் மிகுந்த செல்வாக்குடன் கூடிய ஸர் ஜார்ஜ் அர்பத்நட் என்னும் 'பாங்கு' அதிகாரியே. அந்தப் பொதுக்கூட்டத்தின் தீர்மானங்களை ஆமோதித்த பத்திரிகைகளும், கனவான்களும் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பேச்சைக் கொண்டாடினார்கள். பேச்சில் அழகான காரணங்களைக் கூறி, வாதிக்கும் வக்கீல் ஒருவர் எவ்வாறு கோவையாகவும், அடுத்தடுத்தும், விஷயங்களைக் காட்ட முடியுமோ, அவ்வாறு அவர் பேசியதைப் பத்திரிகைகளில் படித்தால், இன்றும் நாம் சந்தோஷப்படலாம். முதலில் சில காரணங்களைச் சொல்லிவிட்டுப் பின்வருமாறு தம் சொற்பொழிவை அவர் முடித்தார்.

"அழகைக் கெடுக்கவோ, நம்முடைய இன்ப உணர்ச்சியின் உயிர்நிலையைக் குலைக்கவோ போதுமானது, இக் காரியம். இது மட்டுமல்ல; பலவிதக் காரணங்களால் இந்த இருப்புப் பாதை போடும் காரியத்தை நாம் ஒப்புக்கொள்ளமுடியாது. வெயில்காலத்தில் பட்டணத்து ஜனங்கள் சமுத்திரக் கரையில் வந்து குளிர்ந்த காற்று வாங்குகிறார்கள். காற்றில்லாத கட்டடங்களில் காலையிலிருந்து வேலைசெய்துவிட்டு 'அப்பாடி' என்று கடற்கரை மண்ணில் விழுந்து, விச்ராந்தியைத் தேடுகிறார்கள். குழந்தைகளும், தாய்மார்களும் குளிர்ந்துவீசும் காற்றை அப்படியே அங்கம் பூரிக்க நுகர்கின்றார்கள்.... இந்தக் காரியம் எல்லோருக்கும் கவலையை உண்டுபண்ணும். அரசாங்கத்தார் எஞ்ஜினியரை மட்டும் ரெயில்பாதை சம்பந்தமாகக் கலந்துவிட்டார்கள். உண்மையில் ஒரு 'டாக்டரை' அல்லவா இப்பொழுது அவர்கள் கேட்கவேண்டும்! ஏனென்றால், பட்டணத்திலுள்ளவர்களுக்கு எவ்வளவு தேக அசௌக்கியத்தை இது விளைப்பக்கூடும்! ஏற்கனவே எவ்வளவு அதிகமாயிருக்கிறது ஊரில் சாவின் எண்ணிக்கை. இது போதாதா, அதிகாரிகள் தங்கள் முழுக் கவனத்தையும் முக்கியமாக இவ்விஷயத்தில் செலுத்துவதற்கு ?.......

"அதுதான் போகட்டும்............போடப்போகும் ரெயில் பாதையை, கொடுத்திருக்கும் படத்தில் கவனித்துப் பார்ப்போம். ஓரிடத்தில் மயிலாப்பூர் என்றும், ஓரிடத்தில் திருவல்லிக்கேணி என்றும் குறித்திருப்பதிலிருந்து, அந்த ஸ்டேஷன்களும் சமுத்திரக் கரையின் மேலேயேதான் இருக்கப்போகின்றன என்று விளங்குகிறது. இவ்வட்டங்களில் இருக்கும் ஜனங்கள் இந்த ரெயில் பாதையை முக்கியமாக உபயோகிப்பதையே எதிர்பார்க்கின்றார்கள் அதிகாரிகள். முதலில் இந்த ஸ்டேஷன்களுக்குச்

செல்லக் குறைந்தது ஒரு மைலாவது இருக்கும். மேற்கூறிய இடங்களிலிருந்து ஒரு மைல் செல்வது கேவலம் இரண்டு மைல் ரெயில் வண்டிப் பிரயாணம் செய்வதன் பொருட்டு ஏற்படலாம். இதற்காக யாராவது தனி வாடகைவண்டி வைத்துக்கொண்டு ரெயில் ஸ்டேஷன்களுக்குச் செல்வார்கள் என்று நம்புவதற்கு இல்லை. ஆகையால் ஏற்படப்போகும் உபயோகத்தை உத்தேசித்தாலும் அது சிறந்ததாகக் காணவில்லை.....

"அரசாங்க அதிகாரிகள் இந்த விஷயத்தில் பிழை செய்துவிட்டார்கள் என்பதில் சந்தேகமில்லை. இப்பட்டணத்து வாசிகளான மனிதர்களுக்கு அரசாங்க அதிகாரத்தில் பங்கு இருந்திருந்தால், இப்பெரும் குற்றத்தைச் செய்யத் துணியார்கள் என்பது என் எண்ணம். ஒரு காலை இங்கும், மற்றொன்றை வசதியான நீலகிரி மலையின் மேலும் வைத்திருக்கும் அதிகாரிகளாக மட்டும் இவர்கள் இல்லாமல், இந்தச் சென்னபட்டணத்திலேயே தங்கள் ஸர்வ சுதந்திரங்களையும் நாடியிருந்திருந்தால், ஒருகாலும் இவ்விதம் செய்ய நினையார்கள்......

"அதிகார வர்க்கம் சென்னை நகரவாசிகளாக இல்லாத காரணமும், வெயில் நாட்களில் அவசியமான இச்சுகமான சமுத்திரக்காற்றை இங்கிருந்து அடையாததுமேதான், இம்மாதிரி கடற்கரையைக் கெடுக்கும் ஏற்பாட்டில் சற்றும் யோசிக்காமல் முனைய வைத்திருக்கின்றன. கொஞ்சங்கூட யோசிக்காமல் செய்த இக்காரியத்தை, இன்னும் அவகாசம் இருப்பதால், வாபஸ்செய்து கொண்டு, அரசாங்கத்தார் இந்த ரெயில் பாதையைப் போடாமல், பொதுஜனங்களின் க்ஷேமத்தைக் கோருவார்கள் என்று திடமாய் நான் நம்புகிறேன்"*

என்றார். ஆங்கிலேயர்களில் ஸர் ஜார்ஜ் அர்பத்நட் முதலியவர்களும், வேறு சில பட்டணத்துப் பிரமுகர்களும் சேர்ந்துதான் அன்று பிரசங்கங்கள் செய்தார்கள். ஆனால் இவருடைய உணர்ச்சி ததும்பும் சொற்களும், படிப்படியாய் யுக்திகளை எடுத்துக்காட்டும் வன்மையும் அதிகாரிகளின் தீர்மானத்தைக் கலைத்தன என்றே சொல்ல வேண்டும். இன்றல்லவோ அதிகாரிகளைப்பற்றிக் காரசாரமாகப் பேசும் தைரியத்தைத் தேசபக்தர்கள் பெற்றிருக்கிறார்கள்? அக்காலத்தில், ஒருவர் பயமின்றி வெள்ளைக்காரர்கள் உள்ள கூட்டத்தின் மத்தியிலே, அரசாங்கத்தாருடைய அறிவின்மையைத் தெளிவுடன்

* பிரசங்கம்: 27-5-1903 'மெயில்' பத்திரிகை.

வெளிப்படுத்தினர் என்பது போற்றத்தக்கது. நாளும் சூழ்நிலையும் ஒருவருடைய மனத்தின் உண்மை நோக்கத்தையும், நேர்மையையும் கெடுக்கமுடியாது என்றும் இதிலிருந்து ஏற்படுகின்றது.

மற்றொரு சமயம் மயிலாப்பூரிலுள்ள சில கனவான்கள் அங்குள்ள ச்மசானத்தை வேறோரிடத்திற்கு மாற்ற வேண்டுமென்று எண்ணி அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்தனர். ச்மசானத்தைப் பழைய இடத்திலிருந்து மாற்றுவது, கோவிலோ குளமோ சிலருக்குப் பிரதிகூலமாக இருக்கிறதென்று இடத்தை விட்டுப் பெயர்த்துவிட முடியாதது போலவேதான் ஆகும், என்று கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மனம் அதை ஒப்பவில்லை. ஆகையால் அக்காரியத்தை அவர் கண்டித்துத் தடுத்தும் விட்டார்.*

---

* மஹாமஹோபாத்தியாய சாமிநாதையரின் "நினைவு மஞ்சரி" பக்கம் 154.

## அத்தியாயம் 9

### கோகலே பெரியாரின் பழக்கம்

"அரியவற்று ளெல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்." —குறள்.

சென்னையில் அரசியல் துறையில் பாடுபட்டுவந்த ஸ்தாபனம் சென்னை மஹாஜன சபை. அது மிகவும் புராதனமானது. 1884-ஆம் ஆண்டில் சட்டரீதியாய்ப் பதிவு செய்யப் பெற்றது. ஆகையால் அதன் வரலாறு மிகவும் விசேஷமானது. அதுவே இந்திய தேசீய காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கும், மாகாண ஸ்தாபனமாக உழைத்து அவ்வப்பொழுது சென்னை மாகாண அங்கத்தினர்களைப் பொறுக்கிக் காங்கிரஸுக்கு அனுப்புவதுபோன்ற முக்கிய வேலைகளையும் செய்து வந்தது. அதில் வெகு சீக்கிரமே கிருஷ்ணஸ்வாமி ஐயரும் ஓர் அங்கத்தினராகச் சேர்ந்தார். எத்தனையோ பொதுக் காரியங்களில் அவர் வாதாடியும், ஒத்துழைத்தும் இருக்கிறார். அச்சபையில் சிற்சில காலங்களில், தீர்மானங்களில் கலந்தவர்களின் பேச்சுத் தடித்து கைகலக்கவும் நேர்ந்தது என்பார்கள். கிருஷ்ண ஸ்வாமி ஐயர் சண்டையில் சளைத்தவர் அன்று. ஆதலால் ஆவேசம்கொண்டு எதிர்த்தவர்களைத் தாக்கியிருக்கிறார். தம்மேல் விழுந்த அடிகளை நினைந்து உருகாமல் மேன் மேலும் பொதுஜன சேவையில் ஊக்கத்தைக் கடைப் பிடித்தும் இருக்கிறார்.

நாளுக்குநாள் அவருடைய உழைப்பு ஊரெங்கும் பரவியது. இந்திய தேசீய காங்கிரஸிற்காக அநேக காரிய தரிசிகள் சென்னையில் நடைபெற்ற கூட்டத்திற்குத் தேர்ந் தெடுக்கப்பட்டிருந்தார்கள். அவர்களில் அவரும் ஒருவர். காங்கிரஸ் கூட்டம் நடைபெறும் சமயங்களிலெல்லாம், அக்காலங்களில் தொழிலாளர்களின் பொருட்காட்சி களையும் திறந்து வைப்பது வழக்கம். அதற்காகப் பொருள் திரட்டவும் பலரிடம் யாசகம் செய்திருக்கிறார்.

வெளியூர்களில் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய பெயர் பலருக்குத் தெரிவதற்குக் காங்கிரஸ் முக்கியமான ஒரு கருவியாயிற்று. மற்ற மாகாணங்களிலிருந்து வந்த வர்கள் தனிப்பட்ட முறையில் சென்னையில் தங்களுக்குச் செய்த சௌகரியங்களுக்காக அவருக்கு நன்றி அளித் திருந்தார்கள். ஆனால் மற்ற எல்லோரையும் அறிவதும், கோகலேயைப் போன்ற நற்குணங்களுக்கு நிதியானவர் களை அறிவதும் ஒன்றாகுமா? நாம் செய்யும் நல்ல காரியங் களுக்கு உடனே பலன் கிட்டுவதும் ஒரு பெரிய அதிருஷ் டம் அல்லவா? நேரில் பழக்கமாகாவிட்டாலும் கோகலே பெரியாருக்கு என் தந்தையைப்பற்றி அறிவதற்கு 1898-ஆம் வருஷம் சந்தர்ப்பம் கிடைத்தது என்றே சொல்ல வேண்டும்.

அவ்வருஷத்தில் சென்னை மாகாணக் காங்கிரஸில் நிகழ்ந்த சொற்பொழிவுகளோடு ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பிரசங்கத்தையும் சேர்த்துப் பதிப்பித்திருந்தார்கள். வடநாட்டுப் பிரமுகர்கள் தென்னாட்டுப் பேச்சாளரின் வலையில் விழுந்தார்கள் என்றே அந்த நிகழ்ச்சியைக் குறிக்க வேண்டும். அதற்குமேல் ஐந்து வருஷங்கள் கழித்து நடைபெற்ற 1903-ஆம் வருஷத்துக் காங்கிரஸில் கிருஷ்ண ஸ்வாமி ஐயர் எடுத்துக்கொண்ட ஊக்கமும் பங்கும், புகழ் பெற்ற தேசத்தொண்டர்களை அவர்பால் நேசம் கொள்ளச் செய்தன. முக்கியமாக கோகலேயின் செவிப் புலன்கள், பிற்காலத்தில் தமக்குப் பிராண சிநேகிதராக விளங்கிய கிருஷ்ணஸ்வாமி ஐயரின் படிகம்போன்ற உள்ளத்தை வாக்கினிலே தெரிந்துகொண்டன.

ஆனால் நேரில் அவரைக் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அறிமுகப்படுத்தும் பாக்கியம் ஜி. ஏ. நடேசன் அவர் களுக்கே ஏற்பட்டது. ஸ்ரீமான் நடேசன் அக்காலங் களில் சுறுசுறுப்பான இளைஞர்; அவர் பழக்கம் செய்து கொள்ளாத பெரிய மனிதர்களும் ஊரில் உண்டோ என்றுதான் வியக்கவேண்டி வரும். அவர் நடத்திய 'இந்தியன் ரெவியு'வில் எல்லாப் பெரிய இந்தியத் தலைவர் களின் படங்களையும், அவர்கள் செய்த சொற்பொழிவு களின் சாராம்சத்தையும் பதிப்பித்து ஜனங்களுக்கு

ஒருவிதத்தில் உபகாரம் செய்துவந்தார். நேரிலும் சந்தித்துப் பெரியவர்களின் பழக்கத்தையும் பெற்று விடுவார். எத்தனையோ தடவைகளில் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடமிருந்து கடுமையான மொழிகளைப் பெற்றும், ஒரு காதில் வாங்கி மற்றொன்றினால் வெளியே விடும் தன்மையையும் பெற்றவர். ஆனால் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவரிடம் பக்ஷபாதமும், பிரியமும் அளவு கடந்து வைத்திருந்தார் என்பது வீட்டிலுள்ள பெரியவர்கள் சொல்லியது மட்டுமன்று, மற்றக் கனவான்களுக்கும் நண்பர்களுக்கும் அவர் எழுதியிருக்கும் கடிதங்களே அத்தாட்சிகளாக இப்பொழுது இருக்கின்றன. நடேசனும், தம் நண்பர் காலமான பிறகு, அவருடைய ஞாபகார்த்த மாகச் சிலை எழுப்பும் காரியத்தில் ஈடுபட்டபொழுது, சிலர் பொறுமையினால் வாயில் வந்ததையெல்லாம் இறந்த வரைக் குறித்து எழுதிய சமயத்தில், தம்மால் முடிந்த வரையிலும், அவைகளைக் கண்டனம் செய்திருக்கிறார். ஓர் உயர்தர வக்கீல் என் தந்தைக்குச் சிலை வைப்பதைப் பத்திரிகையில் எதிர்த்து எழுதினார்.

"'ஹிந்து'வில் வெளிவந்த தலை அங்கத்தின் அபிப்பிரா யத்தில் எனக்கு ஒற்றுமை இல்லைதான். பலரும் என்னைப் போலவேதான் எண்ணுகிறார்கள். இது சம்பந்தமாய் நடந்த பொதுக்கூட்டத்தின் தகவல்கூட ஒருவருக்கும் சரியாகக் கொடுக் கப்படவில்லை. சில நெருங்கிய நண்பர்களும், ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி ஐயரின் குணங்களைக் கண்டு அதிசயித்தவர்களும், அதிக உத்ஸாகங்கொண்டு நடத்துவதால் மட்டும் போதுமா பொது ஜனத்தின் உள்ளத்தை முழுவதும் அறிவதற்கு?..........ஒருசிலை அவருக்கு வைப்பது சரியல்ல........."*

அக்கடிதத்திற்கு நடேசனுடைய பதில்பின் வருமாறு:

"......இதை எதிர்த்த சிலருடைய கக்ஷி ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் முறியடிக்கப்பட்ட விஷயத்தை எல்லோரும் உணர்வார்கள். காரணம் யாதெனில், ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் எதைச்செய்தாலும் பெரியதொரு நோக்கத்தின் பொருட்டே செய்தார் என்று, நண்பர்களும் அவருக்கு வேண்டியவர்களும் அறிந்திருந்தார்கள். பலர், இப்பெரிய ராஜதானியிலும், அதற்கு அப்பாலுங்கூட, அவருடைய உயர்ந்த, சுயநலமற்ற, தைரிய

* பகிரங்கக் கடிதம், 16-1-1912.

மான காரிய சக்தியில் ஈடுபாடுடையவர்கள்......ஆம், இவ்வளவு பெரிய மனிதனுடைய ஞாபகத்தை இம்மாதிரி அபவாதத்திற்கு உள்ளாக்கும் செயலை நினைத்தாலும் துக்கமாய்த்தான் இருக்கிறது. ஒரே ஒரு சந்தோஷந்தான் எனக்கு; அவருடைய ஜன்ம விரோதிகளும் தங்கள் குறைகளைப் பொதுக்கூட்டத்தில் வாய்விட்டுச் சொல்லிப் பார்த்தார்கள். சொல்லி என்ன பிரயோஜனம் என்று பின்பு நடந்த காரியங்களே நமக்கு நன்கு புலப்படுத்திவிட்டன. கிருஷ்ணஸ்வாமி ஐயரே உயிர்பெற்று இப்பொழுது வந்தாலும், அவருடைய ஞாபகத்திற்காகச் செய்யும் இக்காரியத்தை நிச்சயம் வெறுப்பார். ஒன்றுபட்டுச் செய்யாத இக்காரியத்தைச் செய்வதில் அவருக்கு வெறுப்பு வரலாம். அவரை அந்த ஒரு விஷயத்தில்தான், நீரும் உம்முடைய சகாக்களும் ஞாபகப்படுத்துகிறீர்கள். இதைத்தவிர வேறொன்றும் நான் சொல்வதற்கு இல்லை.''*

இச்சொற்கள் அழிவில்லாத கௌரவத்தை ஸ்ரீமான் நடேசனுக்கு அளிக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஒருவர் உயிருடன் இருக்கையில் ஒருவிதமாக இருப்பது, இறந்த பிற்பாடு வேறுவிதமாக அவர்களுடைய ஞாபகத்தைப் போற்றுவதும், அக்காலத்து மனிதர்களுக்கே அவ்வளவாகத் தெரியாது. நடேசனும் அக்காலத்தவர்களில் சேர்ந்தவர் அல்லவா?

நடேசன் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்தியதாக இப்பொழுதும் பெருமை பேசிக் கொள்ளுவார். காலஞ்சென்ற மஹாதேவ கோவிந்த ரானடேயின் ஞாபகார்த்தமாக ஒரு மண்டபம் கட்ட வேண்டுமென்று கிருஷ்ணஸ்வாமி ஐயரும், சுந்தர ஐயரும் கலந்து யோசித்த தருணத்தில், நடேசனும் அதில் கலந்துகொண்டு கோகலேயை அவசியம் அந்தக் கட்டடத்தின் அஸ்திவாரக்கல்லை நாட்டும் விழாவுக்கு அழைப்பது பொருத்தம் என்று தெரிவித்தாராம். அதில் என் தகப்பனாரின் திருப்தி இவ்வளவு அவ்வளவு என்று சொல்வதற்கு இல்லை. "சபாஷ்; நடேசன், நல்ல யோசனை. ஆனால் எனக்கு அவரை நேரில் தெரியாதே; நீ எழுது நேரில்; நானும் மரியாதையாக ஒரு கடிதம் எழுதி அவரை என்னுடைய வீட்டில் தங்கியிருந்துவிட்டுப் போகவேண்டு

* பத்திரிகையில் கடிதம், 18-1-1912.

மென்று கேட்டுக் கொள்ளுகிறேன்” என்றார். கேட்க வேண்டுமா நடேசனுடைய குதூகலத்திற்கு? அவருக்குப் பல முக்கியமானவர்களை ஒருவருக்கு ஒருவர் அறிமுகம் செய்விப்பதே சிறந்த தொழிலாக இருந்தது அக்காலங்களில் என்று சொன்னால்கூடத் தவறில்லை.

“சென்னையில் ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமி ஐயர் எனக்குத் தங்க இடந் தரவும் விருந்தளிக்கவும் தயாராக இருப்பதை அறிந்து அவருக்கு மிகவும் நன்றி பாராட்டுகிறேன். அவருக்குப் பொதுஜன ஊழியத்தில் உள்ள தீவிர ஊக்கத்தையும், அரிய ஆர்வத்தையும் தெரிந்து ஏற்கனவே நான் சந்தோஷப்பட்டது உண்டு. நீங்கள் தெரிவிப்பதுபோல் அவர் எனக்கு உபசாரமாக எழுதவேண்டியது அவசியமன்று. நேரில் அவரை அறிந்துகொள்வதில் எனக்கு ஆநந்தம் அதிகமேதான். ஜூலை மாதம் முடிவதற்குள் நான் அங்கு வருவதாக உத்தேசம்” *

என்று கோகலே, நடேசனுக்கு அறிவித்தார். மேலும் உபசாரக் கடிதத்தை நேரிலும் பெற்று, கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும், “உங்கள் வீட்டின் தோட்டத்திலேயே சிறியதான ஒரு விடுதியில் நான் தங்க ஏற்பாடுகள் செய்வது பற்றி மிக்க வந்தனம்” $ என்று அறிவித்தார்.

கோகலே அப்பொழுதே இந்திய அரசியல் இயக்கத்தில் மிகுந்த புகழுடன் விளங்கியவர். இந்திய சட்டசபை அங்கத்தினரானமையால் தம் பெயருக்கு முன் ‘கனம்’ என்ற எழுத்துக்களைப் பெற்றிருந்தார். வாஸ்தவத்தில் அவருடைய பொருளாதார சாஸ்திர ஞானம் மிகவும், கனமேதான்; இந்திய சமூக ஊழியத்தில் அவருக்கு இருந்த தேர்ச்சி மற்ற எவருக்கும் இல்லை. காந்தி அடிகள் இந்தியாவுக்குத் திரும்பிய பிறகு, இங்குள்ள விஷயங்களை அறிய எண்ணியபொழுது, முதலில் இந்தியாவை நன்கு தெரிந்துகொண்டு பிற்பாடு இந்திய சுதந்தர இயக்கத்தில் இறங்கவேண்டுமென்று கோகலே தமக்கு எச்சரிக்கை செய்ததைப் பெரிய தாரக மந்திரமாக நினைத்து, அதன்படியே தான்நடந்துகொண்டதாகவும் ‘சத்திய சோதனை’யில் வெளியிட்டுள்ளார். அவ்

---

* கோகலே கடிதம், 19-5-1904.

$ கோகலே கடிதம், 19-5-04.

வளவு பெரிய கீர்த்திமான் கோகலே. பல புத்தகங்களையும், நுண்ணிய அரசியல் வியவகாரங்களையும் கற்றவர். ஒன்றையும் தீர அறியாமல் மொத்தமாக ஆவேசத்துடன் பேசினவரல்ல. மேடையின்மேல் ஏறிவிட்டாலோ கேட்க வேண்டியதில்லை, அவருடைய வசீகரிக்கும் சக்தியைப் பற்றி. பார்வைக்குத் தந்தத்தினல் செய்தமாதிரி தோற்றம் அளிப்பார். அவருடைய முகத்திற்குத் தங்கக்கண்ணுடி தான் அழகுசெய்ததோ அல்லது கண்ணுடிக்குத்தான் அவருடைய முகம் கௌரவம் அளித்ததோ என்று தோன்றும். அவருடைய வணக்கமும், புன்சிரிப்பும் காணவந்தவர்களைக் கொள்ளைகொண்டு விடும். மனத்தில் கல்மஷம் இல்லாதவர் ; சிநேகிதத்தையே விரதமாகக் கொண்டவர்.

1904-ஆம் வருஷம் ஜூலை மாதம் 25-ஆம் தேதியன்று சென்னைக்கு விஜயம் செய்து ஒருவாரம் கிருஷ்ணஸ்வாமி ஐயருடன் வாசம் செய்தார். ஒருவாரப் பழக்கமே பலகாலப் பழக்கத்தின் உறுதி வேராக ஊன்றியது. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய உள்ளம், கோகலேயைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டதில் பெருமையும், அவர் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் நம்பிக்கையையும் பெற்றது. அந்தத் திட நம்பிக்கையும், நல்ல அறிவுணர்ச்சியுமே பிறகு ஒருகாலத்தில் கோகலே சீமையில் இந்தியாவின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் பொழுது, மற்றெல்லோரையும்போல் அவரைச் சதா சந்தேகிக்காமல், அவர் நடத்தும் காரியத்தில் மிக்க கவலையுடனும், மாருத அநுதாபத்துடனும் இருக்கச்செய்தது. நல்ல மனோதர்மம் படைத்தவர்களுக்குத்தான் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பிறரிடம் அநுதாபத்தைக் காட்டமுடியும். சொந்த வாழ்க்கையில் அந்தக் குணம் எவ்வளவு முக்கியமோ, அதைவிட முக்கியம் பொதுஜன வாழ்க்கையில் பாடுபடுகிறவர்களுக்கு. இதை, "ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒருவர்தாம் ஆயிரக்கணக்கான காதங்களுக்கு அப்பாலும் இருந்துகொண்டு, கடல் கடந்து பாடுபட்ட கோகலேயிடம் காட்டினர்" என்னும் பொருள்பட மஹாகனம் வி. எஸ். ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகள், பல ஆண்டுகளுக்குப்பின், கோகலே இறந்ததினக் கொண்டாட்

டத்தின் பொழுது, பேசிய மொழிகளின் இடையே என் தந்தையின் ஞாபகத்தையும் ஜனங்களுக்கு நினைவூட்டினூர்.

சென்னையில் 1904–ஆம் வருஷம் ஜுலை மாதம் 25-ஆம் தேதி அன்று சாயங்காலம் பெரிய வரவேற்புக் கூட்டம் கோகலே பெரியாருக்கு ஏற்பாடாகி இருந்தது. அது வரையும் கண்டிராதபடி திரள்திரளாக ஊரில் உள்ளவர்களெல்லாம் பச்சையப்பன் கல்லூரியின் விசாலமான ஹாலில் கூடினூர்கள். அக்காலத்தில் பச்சையப்பன் பெரிய ஹாலில் இடம்போதாவிட்டால் எதிரேயிருந்த மைதானத்திலேயே ஜனங்களைக் கூடச் செய்வது வழக்கம். அவரைப் பார்க்கவும் அவர் பேச்சைக் கேட்கவும் ஆவல் கொண்டிருந்தவர்களின் எண்ணிக்கை அதிகம். இந்திய சுதந்தர இயக்கத்தைப் பற்றித்தான் அவரும் பிரசங்கம் செய்தார். தளரவிடாத ஊக்கத்தை அரசியல் காரியத்தில் காட்ட வேண்டுமென்று கேட்போர்களின் மனத்தில் பதிய வைத்தார். மேலும் தம் பரம குருவான ரானடேயின் விடாமுயற்சியையும் தேசபக்தியையும் எடுத்துக் காட்டி மனச்சோர்வை ஒழிக்கும்படி ஜனங்களைக் கேட்டுக் கொண்டார்.

மறுநாள் மயிலாப்பூரில், திவான் பகதூர் ரகுநாதராவ் இனூமாகக் கொடுத்த இடத்தில், ரானடே பெயரில் கட்டடம் ஒன்று கட்ட அஸ்திவாரக்கல்லை நாட்டினூர். எல்லாக் கனவான்களும் விஜயம் செய்திருந்தார்கள். உயர்ந்த மொழிகளையும், தூய்மையான தேசப்பற்றுதலையும், இடைவிடாது அறிவாளிகள் தேடும் ஞான முதிர்ச்சியையும் கோகலேயின் பிரசங்கத்தைக் கேட்டவர்கள் உணர்ந்தார்கள்.

"சாமான்யமாகப் படித்த பல இந்தியர்களின் வாழ்க்கையைக் கவனித்தோமானூல், வாழ்க்கையை நடத்தப் பாடுபட்டதைத் தவிர வேறு இரண்டாவதான கருத்து அவர்களிடம் காணப்படுவது துர்லபம். சென்னையில் உள்ளவர்களுக்கு அம்மாதிரி இல்லாமல் தென்னிந்திய சங்கத்தில் சேர்வதால் பல புதிய விஷயங்களில் மனத்தைச் செலுத்த வழி இனி ஏற்படும். சிலராவது ஊன்றி இவ்விஷயங்களைக் கவனித்தால் அதுவே பெரிய காரியம். காலஞ்சென்ற ரானடே இம்மாதிரி சங்கத்தையேதான் கோரினூர்.

இளைஞர்களுக்குச் சரியான முறையில் நம் தேசத்தைப் பற்றிய ஞானம் ஏற்படாததைப்பற்றி வருந்தியவர் அல்லவா அவர்?''* என்று பேசினார் கோகலே.

அவர் பட்டணத்தில் இருந்த ஒருவாரமும் அவருடன் பழகுவதையே மிக்க பெருமையாக நினைத்தார் கிருஷ்ண ஸ்வாமி ஐயர். வீட்டிலும் தனியாகப் பெரிய விருந்தையும் விசேஷ உபசாரத்தையும் வந்தவருக்கு அளித்தார். அதற்கு வந்தவர்களில் பட்டணத்துச் சீமான்களும், சிறந்த அறிவாளிகளும் பலர் இருந்தார்கள். தம் மூத்த குமாரனையும் கோகலேயின் உதவிக்காக அவர் கேட்டதைச் செய்யும்படி ஏவினார். "இதையெல்லாம் தெரிந்து கொள்ளவேண்டும். பெரிய மனிதர்கள் வீட்டில் இருந்தால் அவர்கள் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் உயர்ந்த அம்சம் இருக்கத்தான் இருக்கும். சிறியவர்கள் அவ்விஷயங்களைப் பார்த்து அறிவதால் பின்னால் எல்லா நலத்தையும் அடைய வழி உண்டு" என்றெல்லாம் சொல்லிப் பிள்ளையை அவர் சமீபம் இருக்கச்செய்வார். கோகலேயும் வயசில் சிறியவர்களைக் கவனியாதவர் அல்ல. என் சகோதரி சுப்புலக்ஷ்மியை எவ்வளவோ விதங்களில் பரிவு காட்டித் தம்மருகே அழைத்துப் பேசுவார். வேண்டிய அழகிய பொம்மைகளை வாங்கி அவர் அவளுக்குக் கொடுத்ததும் உண்டு. தம் பாக்கியமெல்லாம் உருவெடுத்ததோவெனக் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அவருடைய வருகையை மதித்தார். சதா பல காங்கிரஸ் காரியங்களின் சூக்ஷ்மங்களையும், அந்தரங்கங்களையும் நண்பரிடம் கலந்து பேசவும் கோகலே தொடங்கிவிட்டார் அந்த ஒரு வாரத்திற்குள்.

ஒருநாள் அவர்கள் உணவு கொள்ளும்பொழுது ஆழ்ந்து பேசுகையில், அத்தான் ராமஸ்வாமி திடீரென்று எதையோ தாமும் நடுவில் சொல்லத் தொடங்கினார். அவ்வளவுதான்: கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குக் கோபம் அடக்க முடியாமல் வந்துவிட்டது. "இந்தா, ராமஸ்வாமி, எவ்வளவு தரம் சொன்னாலும் உனக்குத் தெரிவதில்லை. யாராவது பெரிய விஷயங்களைப்பற்றிச் சம்பாஷிக்கும்

* மெயில் பத்திரிகை, ஜூலை 26, 1904.

பொழுது நீ ஏன் அதில் தலையிட்டுக்கொள்ளவேண்டும்!" என்றெல்லாம் முகத்தை இருபக்கமும் திருப்பித் திருப்பி ஆங்கிலத்திலேயே அவரைக் கடிந்தார். ஒருவரும் அச் சமயத்தில் வாய் பேசவில்லை. அவர் படபடப்பாகப் பேசி முடிந்ததும், கோகலேயும் அவரும் மறுபடியும் தாங்கள் பேசிய விஷயத்தில் முழுகிவிட்டார்கள். ஆனால் கொஞ்ச நேரம் கழித்து என் தந்தையாருக்குத் தாம் கடிந்து கூறியது தவறு என்று பட்டதோ, அல்லது அளவுக்குமேல் வசை மொழிகளைக் கொட்டி விட்டதாகப் பட்டதோ, அவர் எங்கள் அத்தானிடம் வந்து, "நான் கோபித்துக் கொண்டு ரொம்பச் சொல்லிவிட்டேனா?" என்றார். அதற்கு அவர் சிறிதும் பின்வாங்காமல் "ஆஹா! என்ன பேச்சு உங்களிடமிருந்து வந்தது. ஆங்கிலச் சொற்கள் ஒன்றன்பின் ஒன்றாக வரிசையாயும் தெளிவாயும், ஏதோ முன்னமேயே தயாரித்த விதமல்லவா வந்தன!" என்று உண்மையாகவே பிரமித்துக் கூறினார். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இன்னது செய்வது என்று புரியவில்லை. வாய் விட்டுச் சிரித்துவிட்டு, "என்ன நீ எனக்குப் பாஸ் வெல்லோ?" என்று சொல்லி அப்புறம் சென்றார். "இதே போல் ஒரு சம்பவம் உண்டு, பாஸ்வெல் எழுதிய 'ஜான்ஸ னின் ஜீவிய சரித்திரத்தில்" என்று எங்கள் அத்தான் அடிக்கடி எங்களிடம் பிற்பாடு சொல்லுவார். ஆனால் அப்புத்தகங்களைப் படித்த எல்லோருமே எங்கள் அத்தானுடைய பண்பாட்டைப் பெற்றவர்களா அல்லது அவருக்குக் கிடைத்த சந்தர்ப்பம்போல் மற்றவர்களுக்கும் கிடைக்குமா என்று நம்மால் சொல்ல முடியாது.

"நான் அநுபவித்த - இல்லை - இனிச் சதா அநுபவிக்கப் போகும் உண்மை உணர்ச்சியைப் பத்திலொருபங்குகூட என்னால் விவரிக்க இங்கு இயலாது. அவ்விதம் தெரிவிக்கவும் சிரமப்படுவ தாக எனக்கு எண்ணம் இல்லைதான். உங்களுடன் அநுபவித்த ஒருவாரத்தின் ஞாபகம் எந்நாளும் என் மனத்தில் புதியதா யிருக்கும். நீங்கள் எனக்கு அளித்த சிநேகிதத்தின் பெருமையை என்றும் நான் பாராட்டுவேன்"*

என்று கோகலே சென்னையை விட்டுச் சென்று

* கடிதம், 2-8-04.

பூனுவிலிருந்து ஆகஸ்டு மாதம் இரண்டாம் தேதி ஒரு கடிதம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு எழுதினுர். காந்தம் போல் அவருடைய உயர்குணங்கள் கிருஷ்ணஸ்வாமி ஐயரை அவர்பால் இழுத்துவிட்டன.

கோகலேயின் பழக்கம் காங்கிரஸ் காரியங்களின் பொறுப்புள்ள அம்சங்களை அதிகம் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் சேர்க்கக் காரணமாயிற்று. இங்கிலாந்தில் நம் நாட்டின்பால் அநுதாபத்தைக் காட்டி அடிக்கடி பார்லிமெண்டு அங்கத்தினர்களிடம் இந்திய சுதந்திர இயக்கத்தைப்பற்றி நினைவு மூட்ட ஒரு கமிட்டி ஏற்படுத்தியிருந்தார்கள். அவ்விதம் ஏற்பட்டவர்களின் காரியங்களுக்காகத் திரவிய உதவியும் இங்கிருந்து செய்யும்படி ஏற்பட்டது. அதிலெல்லாம் என் தந்தையாரின் முழு ஒத்துழைப்பும் வேண்டப்பட்டது. கோகலே இது சம்பந்தமாக நண்பருக்கு,

"நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்? தயவுசெய்து தெரிவியுங்கள். நான் இன்று ஸ்ரீ தேசிகாசாரியாருக்கும், ஸ்ரீ ரைரு நம்பியாருக்கும் எழுதி இருக்கிறேன்; ஆனல் வரவேற்புக்கமிட்டி பொருளுதவிப் பொறுப்பை ஏற்றுக்கொள்வதற்கு உங்களையேதான் முக்கியமாக நம்பியிருக்கிறேன். என் வாக்குதானமும் அதில் கலந்து கிடக்கின்றது; ஏனென்றல் நான் ஸர் வெட்டர்பர்னுக்கும், மற்றும் சில சீமைக்கமிட்டி அங்கத்தினர்களுக்கும் சீக்கிரம் அவர்களுடைய கணக்குத் தீர்ந்துவிடுமென்றும், இனி, தாமதம் ஆவதற்கு ஒரு காரணமும் இல்லை என்றும் எழுதிவிட்டேன்"*

என்றும் தெரிவித்தார்.

கோகலேக்கும் என் தந்தையாருக்கும் ஏற்பட்ட பரிசயம் ஆழ்ந்த நட்பாகக் காலக்கிரமத்தில் வளர்ந்தது. அவர் ஆரம்பித்த இந்திய ஊழியர் சங்கத்தில் என் தந்தைக்கு உண்டாகிய சிரத்தை மேலும் அதை நன்கு உணர்த்தியது. கோகலேயின் நிஜமான சகோதர பாவத்தில் என் தந்தையும் தம் இருதயம் தேடிய லக்ஷ்யத்தைக் கண்டார். அன்றுமுதல் பொதுஜன வாழ்க்கையில் அவருக்குப் புதியதோர் உணர்ச்சி ஊற்று எடுத்தாற்போலத் தோன்றியது.

---

* கடிதம், 10-10-04.

# அத்தியாயம் 10

## காங்கிரஸ் ஊழியம்

### I

வானமழை இல்லையென்றால்
வாழ்வுண்டோ எந்தைசுயா
தீனமெமக் கில்லையென்றால்
நீனரெது செய்வோமே? —பாரதியார்.

இந்திய சுதந்தரப் போர் வலுத்து, நாடெங்கும் அதையொட்டிய பலவித இயக்கங்கள் ஏற்பட்டு, பொது மக்கள் மனம் அநேக விதங்களில் அரசியல் அநுபவம், தேர்ச்சி முதலியவற்றால் மாறுதல் அடைந்திருக்கும் இக் காலம் எங்கே? ஒன்றையும் அறியாமல், ஆங்கில அரசாங் கத்தாரால் சில நிபந்தனைகளுடன் நமக்கு அளிக்கப்பட்ட வாக்குரிமையைப் பயன்படுத்த மார்க்கம் ஒன்றைமட்டும் தேடி அதையே புதியதோர் அதிசயமாகக் கொண்டாடிய நாளெங்கே! ஆம்.—1885-ஆம் ஆண்டில் முதல் முதலாக, பம்பாயில் நம்மவர்கள் பலர் சேர்ந்து கூடி, இந்தியக் காங்கிரஸை ஆரம்பித்தது பெரியதொரு விந்தையாகவே கருதப்பட்டது. அன்று போட்ட விதை வீண் போகாமல், முளை கண்டு தளிர்விட்டுச் செடியாகி மரமாகித் தழைத் திருப்பதைப் பார்க்கும்பொழுது, காங்கிரஸின் வேர், நன்கு பூமியில் ஊன்றிச் செழிக்குமாறு பலகாலம் பாடுபட்டுத் தண்ணீர் விட்டு வளர்த்த பொதுஜன ஊழியர்களை நினை யாமல் இருக்க முடியுமா?

இந்தக் காங்கிரஸின் உற்பத்தியில் சென்னை நகர வாசிகளுக்குத் தனி உரிமை உண்டு. ஏனென்றால் 1884-ஆம் வருஷம் டிசம்பர் மாதத்தில், காலஞ்சென்ற திவான் பகதூர் ரகுநாத ராயரின் வீட்டில் பதினேழு பொதுஜன சேவகர்கள் கூடினதன் பயனே அடுத்தவருஷத்திய முதல் இந்தியக் காங்கிரஸாகப் பரிணமித்தது. அவர்கள் தீர்க்க

திருஷ்டியுடன் அகில இந்தியாவின் நன்மையின பொருட்டுச் சேர்ந்து நிறுவ எண்ணிய பொது ஸ்தாப னத்தின் பெயர்தான் இன்று, இந்திய தேசீயக் காங் கிரஸாக விளங்குகிறது. முதல் வருஷம் பம்பாயில் நூறு பெயர்கள் கூடச் சேராத கூட்டத்திற்குத் தலைமை வகிக்க உமேச சந்திர பானர்ஜி என்னும் வங்காளியைத் தேர்ந்தெடுத்தார்கள். தலைவர் தம் பிரசங்கத்தில், அப்பெரிய இயக்கத்தின் முக்கிய நோக்கங்களை விவரித்த வரலாற்றைக் கவனிக்கும்பொழுது, காங்கிரஸ் ஸ்தாப னத்தின் அஸ்திவாரம் மிகவும் சரியான முறையில்தான் கட்டப்பட்ட தென்று தெரியவருகிறது. அவையாவன: 1. ஆங்கில சாம்ராஜ்யத்தின் பல இடங்களில் உள்ளவர்கள் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகி நற்காரியங்களைச் சேர்ந்து செய்தல் 2. ஜாதி மத வேற்றுமைகளை அறவே ஒழிக்க மார்க்கங்களைத் தேடும் முறையில் பாடுபடுதல் 3. உயர்ந்த வித்தியாப்பியாசம் செய்த இந்திய மக்களின் பரிபூர்ண யோசனைகளையும், அரசியல் விவாதங்களையும், மற்ற முக்கியமாயுள்ள துறைகளின் சீர்திருத்தங்களையும் தீர்மானமாக அறிந்து, அத்தீர்மானங்களைப் பதிப்பித்துப் பாதுகாத்தல் 4. ஒவ்வொரு வருஷமும் காங்கிரஸ் கூடுவ தால், வரும் வருஷத்திய காரியங்களைச் சரிவரச் செய்யத் திட்டங்கள் போடுதல்.

அரசாங்கத்தார் இந்திய மக்களின் நன்றியைப் பெற்றிருந்த காலம் அது. ஒவ்வொரு மாகாணமும் சிறந்த படிப்பாளிகளையும், அரிய தேசத்தொண்டு செய்யக்கூடிய தொண்டர்களையும் பொறுக்கி எடுத்துக் காங்கிரஸ் காரியங் களில் ஈடுபடும்படி ஏவியது. தலைவர்களான தாதாபாய் நௌரோஜியும், ஸர் பிரோஸிஷா மேதாவும், ராய் பகதூர் பி. அநந்தாசாருலுவும், வேறு பற்பல அரிய தலைவர் களும் புதிய உணர்ச்சிபெற்றுத் தேச சேவையில் ஈடுபட் டார்கள். மற்றொருபக்கம் ஜார்ஜ் யூல் என்ன, ஆலன் ஆக்டேவியன் ஹியூம் என்ன, ஸர் வில்லியம் வெட்டர் பர்ன் என்ன - இவர்களைப்போன்ற வெள்ளைக்காரர்கள் இந்தியர்களின் முன்னேற்றத்தையே சிரமேற்கொண்டு

தங்களால் ஆனமட்டும், இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஜனங்களை இந்திய அரசியற் பொதுக் காரியங்களில் பயிற்சி பெறும்படி செய்யும் பொறுப்பாளிகளானார்கள். இந்தியா சம்பந்தமான இயக்கத்தை நன்கு உணர இங்கிலாந்திலும் ஒரு 'பார்லிமெண்டரி கமிட்டியை' உண்டாக்கினவர்கள் ஹ்யூம் முதலியவர்களே. பிற்பாடு கோகலே அடிக்கடி இங்கிலாந்தில் நம் நாட்டுச் சிரமங்களை நன்கு தெரியப்படுத்த முயன்ற காலங்களில், இந்தப் பார்லிமெண்டரி கமிட்டியே அவருக்கு முக்கிய உதவியாகவும் ஆயிற்று. இவைகளை எல்லாம் செய்வதற்கு இந்திய நாட்டிலிருந்து பொருள் உதவியும் அவ்வப்பொழுது அனுப்பப்பட்டது. காங்கிரஸின் பழைய சரித்திரத்தைப் புரட்டினால் இது நன்கு தெளிவுபடும்.

காங்கிரஸில் மஹாத்மா காந்தி தனித் தலைவராக வந்தது தொடங்கி அதன் சரித்திரமே மாறுபட்டு விட்டதை நாம் அறிவோம். ஆனால் முதல் இருபது வருஷங்கள் வரையும் காங்கிரஸின் தீர்மானங்கள் அநேகமாக இந்திய தேசத்தின் நிறைவேறாத எண்ணங்களையே அடிக்கடி வற்புறுத்திக்கொண் டிருந்தன. அதன் தீர்மானங்கள் நடைமுறையில் அமலுக்கு வரவில்லை என்றே எண்ணுவதற்கு இடம் இருக்கிறது. மேலும் அக்காலத்தில் அரசாங்கத்தார் ஆட்சிசெலுத்தும் வகையில் தங்களை இந்தியர்கள் ஒவ்வோர் அடியிலும் ஆக்ஷேபிக்காதவிதம் கண்ணியமாக நடந்துகொண்டார்கள். அரசாங்கம் இந்தியர்களிடம் காட்டிய வெளிப்படையான அநுதாபம் நீடித்து இருக்கவில்லை என்பது காங்கிரஸ் சரித்திரத்தினால் அறிவதற்கு உரியது.

ஆங்கிலக் கல்வி பரவவே அரசாங்கத்தார் ஜனங்களிடம் சிறிது சிறிதாகச் சந்தேகம் கொண்டார்கள். அதிகார எதிர்ப்பை உத்தேசித்துச் சில பாதுகாப்புச் சட்டங்களைத் தயாரித்தார்கள். ஒருவரை ஒருவர் சந்தேகிப்பது ஒருநாளும் சிநேகிதத்திற்கு வழியாகாது. ஆனாலும் ஆங்கில அரசாங்க அதிகாரம் இந்த நாட்டில் நூறு வருஷங்களுக்குக் குறையாமல் ஜனங்களிடம்

சந்தேகத்தை வைத்துக்கொண்டேதான் நடைபெற்று வருகிறது. ஒற்றுமையைப்பற்றி நாமும் பேசிவிட்டு, பலவிதங்களில் பிரிவுபட்டு, அவைகளை நீக்க வகையற்று, எந்நாளும் நற்கதிபெற மார்க்கமில்லாமல் தவிக்கின்றோம். 'ஆயிரம் உண்டிங்கு ஜாதி, இதில் அந்நியர் வந்து புகல் என்ன நீதி' என்ற கேள்வியைக் கேட்பதைத் தவிர அதைத் தீர்க்க ஒருவிதமான பிரயாசையும் மேற்கொள்ளாமல் இருந்திருக்கிறோம். எப்பொழுதாவது ஓர் இடத்தில் ஒரு பெரிய தேசபக்தர், ஒற்றுமையை முன்னிட்டு வெகுநாளாக உள்ளத்தில் வளர்த்த ஆசையை, செய்கையில் கொண்டுவர முயலும்பொழுது நம்மால் அவருக்குத் தடை பல ஏற்படுவதையும் நாம் நேரில் காண்கிறோம்.

வாய்ப்பேச்சில் சாமர்த்தியம் புலப்பட, உயர்ந்த எண்ணங்களை அழகான பாஷையில் வெளியிடவும் பலர் தொடங்கினார்கள். காங்கிரஸ் கூட்டங்களில் சொற்பொழிவு செய்வதால் பலருக்குப் பேசுவதில் தேர்ச்சி ஏற்பட்டது. காங்கிரஸ் கூட்டங்களுக்குப் போவதும், அது சம்பந்தமாகக் காங்கிரஸ் பொதுக்கூட்டம் நடத்தப்படும் முக்கிய பட்டணங்களைத் தரிசிப்பதும் சிலருக்கு முக்கிய வருஷாந்தரக் கொண்டாட்டமாயின. ஒவ்வொரு மாகாணத்தின் முக்கியஸ்தர்களுக்கும் மற்ற மகாணங்களில் உள்ள உயர்ந்த அறிவாளிகளின் பரிசயம் ஏற்பட்டது. ஒவ்வொரு ராஜதானியும் மற்ற இந்திய ராஜதானிகளுடன் அதிகம் சம்பந்தம் இல்லாதிருந்த ஒரு காலத்தில், காங்கிரஸ் கூட்டம் கூடுவதனால் இந்தியர்களுக்குள் தங்கள் தங்கள் ஊர்களை மட்டும் நினைக்கும் மனப்பாங்கு குறையவும், இந்திய சமூகத்தை மனசில் போற்ற அவகாசம் கிடைக்கவும், காங்கிரஸ் ஸ்தாபனம் உபயோகப்பட்டது என்றே சொல்லலாம்.

சென்னையில் 1887-ஆம் வருஷம் மூன்றாவது காங்கிரஸ் கூடியது. அதற்குத் தலைமை வகித்தவர் ஸர் படுருடீன் டையாப்ஜி என்பவர். பம்பாயில் நீதிபதி ஸ்தானத்தை அலங்கரித்தவர் அவர்தாம். அவ்வருஷம்

சென்னையில் பொதுஜனக் காரியங்களில் சதா ஈடுபட்டவர்களில் முக்கியஸ்தர்களான மணி ஐயரும், ஜி. சுப்பிரமணிய ஐயரும், சேலம் விஜயராகவாசாரியாரும் வேறு சிலரும் காங்கிரஸ் நடவடிக்கையில் கலந்து கொண்டார்கள். அந்தக் காங்கிரஸில் மணி ஐயருக்குப் பொறுப்பும், வேலையும் அதிகம். வரவேற்புக் குழுவுக்குத் தலைவராக ராஜா ஸர் டி. மாதவராயரை நியமனம் செய்திருந்தார்கள். காங்கிரஸ் கூட்டத்தில் முடிவுபெற்ற பல தீர்மானங்களுக்கு உதவியையும் வேறு பல ஊழியங்களையும் மணி ஐயர் செய்ததாகத் தெரியவருகிறது. அவ்வருஷம் காங்கிரஸுக்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரும், சுந்தர ஐயரும் மணி ஐயரிடம் பரிசயமான காரணத்தினால் சிறிதளவில் கைங்கரியங்கள் செய்தார்கள்.

பொதுஜனக் காரியங்களில் பற்றுள்ள கிருஷ்ணஸ்வாமியின் இருதயத்திற்குக் காங்கிரஸ் அரங்கத்தில் புகுந்து பெயரும் புகழும் சம்பாதிக்க ஆசை ஏற்படாமல் இருக்குமா? இந்தியாவின் பல முக்கிய இடங்களை நேரில் காண்பதாலும் ஆங்காங்குத் தலைவர்களின் உயர்ந்த பரிசயத்தினாலும் தம் புத்தி மேன்மேலும் தெளிவுபடும் என்றும், தம் அபிப்பிராயங்கள் செழிக்கும் என்றும் நம்பிக்கை கொண்டார். அநேகமாகக் காங்கிரஸ் நடக்கும் இடங்களான பம்பாய், கல்கத்தா முதலிய பட்டணங்களைப் பார்த்துவந்தார். அவர், 1894-ஆம் வருஷம் நடைபெற்ற சென்னைக் காங்கிரஸில் ஓரளவு தாமாகவேயும் பொறுப்பை வகித்து வேலை செய்தார் என்று தெரியவருகிறது.

*1890*-ஆம் வருஷம் நடந்த கல்கத்தா காங்கிரஸுக்குக் கடல்மூலம் சென்னையிலிருந்து நண்பர்கள் இருவரும் பிரயாணம் செய்ததாகவும் தெரிகிறது. அக்காலங்களில் கப்பல் யாத்திரையைச் சாஸ்திர ரீதியாய்த் தடுத்து வந்தார்கள். இருந்தாலும் இளைஞருக்கு இதிலெல்லாம் மிகுந்த உத்ஸாகம். கல்கத்தாவுக்குக் கடல் வழியாகப் பிரயாணம் செய்த வரலாறு தெளிவாகக் கிடைக்கவில்லை. இரண்டொருவர் சொல்லியே தெரிகிறது. ஆனால் அம்மாதிரி கப்பல் பிரயாணம் செய்வதில் அவருக்கு உத்ஸாகம்

இருந்திருக்கக்கூடும் என்பதுமட்டும் சிற்சில காரணங்களால் தெளிவு படுகிறது. கப்பல் பிரயாணம் செய்வது சாஸ்திரத்திற்கு விரோதம் என்ற எண்ணம் முக்கியமாக அவரை விட்டு அதற்கு முன்னமே பறந்து போயிருக்க வேண்டும். அவர் 1888-ஆம் வருஷம் புதுச்சேரிக்குக் கப்பலில் பிரயாணம் செய்து தம் அநுபவங்களைத் தினசரிக் குறிப்பில் எழுதி வைத்திருப்பதைக் கவனிக்கும்பொழுது இதை நம்பமுடிகிறது. 1888-ஆம் வருஷம் ஏப்பிரல் 2-ஆம் தேதி எழுதிய குறிப்பில் உள்ள வரலாற்றைக் கவனிப்போம்:

"கப்பலில் தலைவன் எங்களிடம் தயைகாட்டிக் கொடுத்த சிறுபடகில் துறைமுகத்திலிருந்த பியருக்குச் சென்று திரும்பி வரச் சௌகரியம் கிடைத்தது. எங்கள் படகு திரும்புகையில் மூன்று வெள்ளைக்காரர்களையும் எங்களுடன் கூட்டி வந்தது. அவர்கள் மரியாதை தெரியாதவர்கள் என்ற விஷயம் எங்களிடமும் படகோட்டிகளிடமும் அவர்கள் நடந்துகொண்ட விதத்திலிருந்து தெரிந்தது. அவர்களின் பெயர்கள் ஹால், ஒக்டன்; மூன்றாவது ஆள் பின்னிக் கம்பெனியில் வேலை பார்த்தவன். நாங்கள் கப்பல் ஏறி மேல் தளத்தில் வரவும், அது புகைவிட்டுக் கொண்டு கிளம்பத் தொடங்கியது. மெதுவாகவேதான் சென்றது. மணிக்கு ஐந்தாறு மைல்களே சென்றது. முதல் முதலில் சமுத்திரத்தில் யாத்திரை தொடங்குபவர்களுக்கு உண்டாகும் வயிற்றுக் குமட்டல் முதலிவைகள் எங்களுக்கு ஏற்பட்டன. கப்பல் தலைவன் நல்ல விளையாட்டுச் சுபாவமும் உபகாரியுமான ஸ்காட்லண்டு தேசத்தவன். அவன் பெயர் அலெக்ஸாண்டர். எங்களுக்கு இரண்டாவது வகுப்பு சௌக்கியமாக இல்லாததால், மேல் பணம் கொடுத்து முதல் வகுப்பு யாத்திரிகர்களானோம். ஹால் துரை (டீசர்ஸ் கலாசாலையைச் சேர்ந்தவர்) தாம் மரியாதை இல்லாமல் நடந்துகொண்டதற்காக எங்களிடம் மன்னிப்பை விரும்பும் வகையில் வந்து, வெகு நேரம் சம்பாஷணை செய்தார். பல விஷயங்களைப்பற்றிப் பேசினோம். பதினொரு மணி வரையிலும் நான் கப்பல் மேல் தளத்தில் இருந்தேன்."

கப்பற் பிரயாணம் மூன்று நாட்கள் செய்து நண்பர்கள் இருவரும் கல்கத்தா அடைந்தார்கள். கல்கத்தாவில் காங்கிரஸ் கூட்டத்தில் பேசித் தம்மைப் பலருக்கும் அறிமுகப்படுத்திக்கொள்ள அவருக்கு ஆசை இருந்திருக்க

வேண்டும். ஆனல் ஆசையெல்லாம் வீணுயின. அவ் வருஷம் தலைமை வகித்தவர் ஸர் பிரோஸ்ஷா மேதாவே. காங்கிரஸ் கூட்டங்களில் அவ்ருக்கு இருந்த செல்வாக்கை நம்மால் இக்காலத்தில் மதிப்பிட முடியாது. பம்பாயில் கவர்னருக்கு அடுத்தபடியான மதிப்புடன் அவர் விளங் கினர். அவருடைய கம்பீரமான தோற்றமும், தைரியமான சொற்பொழிவும் பார்த்தவர்களையும் கேட்டவர்களையும் பிரமிக்கச் செய்யும். அவர் தலைமை வகித்து நடத்திய கூட்டத்தில் எல்லோருக்கும் அவரைக் கண்டால் சிம்ம சொப்பனமேதான். ஒருவரும் தலைவரின் உத்தரவை மீறி நடக்கமுடியாது. அவ்விதமான நிலையில் இளைஞர் களுக்குத் தங்கள் சிறு பிரசங்கங்களை நடத்த முடியாததை ஒருவாறு நாம் ஊகிக்க இடமிருக்கிறது. ஆனல் வாலிபர் களானமையாலும், சுபாவத்தில் தைரியம் உள்ளவர் களானமையாலும் அவர்கள் ஒரு கை பார்க்கவே எண்ணினர். மேதா, சிறுவர்களுக்கு அநுபவ முதிர்ச்சி இல்லாததால், உட்காரவைத்து விட்டார். பிற்பாடு சென்னையில் நடந்த காங்கிரஸிலும் இதே கதியைச் சிறு வர்கள் அடைந்தார்கள். பிற்பாடும் 1903-ஆம் வருஷம் காங்கிரஸில் அவர்கள் ஒரு தீர்மானத்தைப்பற்றி விஷயா லோசனைக் கமிட்டியில் தாங்களும் பேச அநுமதி கேட்க எழுந்திருக்கவும், மேதாவின் 'உட்காரு' என்ற அழுத்த மான குரல், சேமித்த சர்வ தைரியத்தையும் இடம் தெரியாமல் விரட்டியது. "ஒரே மலைப்பில் ஊர் திரும்பி வந்தார்கள்" என்று 1890-ஆம் வருஷம் காங்கிரஸுக்குச் சென்று திரும்பியவர்களைப்பற்றி வேடிக்கையாக என் தந்தையின் உறவினரொருவர் சொல்லக் கேட்டிருக் கிறேன்.

கல்கத்தா காங்கிரஸில்தான் முதல் முதலில் கிருஷ்ண ஸ்வாமியும் பேசினர். அதுவும் சட்டசபையைச் சீர் திருத்தம் செய்யவேண்டிய விஷயத்தில்தான். மைசூர் சம்ஸ்தானத்தில் அக்காலத்தில் திவானுன ரங்கா சாருலுவின் சொற்பொழிவு ஒன்றைச் சான்ருக எடுத்துக் காட்டி, 'சட்ட சபை அங்கத்தினர்களைத் தேர்தலில்

பொறுக்கி எடுப்பதற்கு, கலாசாலைப் படிப்பு மட்டுமே அதிகமாக வேண்டியது அவசியமில்லை; ஓரளவு ராஜ்ய நிர்வாகத்தின் ஆலோசனைகளில் புத்திசாலிகளின் ஒத்துழைப்பு ஒன்றே அவசியம். அதிகம் படிப்பு ஒன்றுதானா நம்மிடம் அந்தச் சக்தியை உண்டாக்குகிறது? புத்தகப் படிப்பு இல்லாதவர்களிடமும் புத்திசாலித்தனம் உண்டு' என்றார். இதன் உண்மையை அறிந்தவர்கள், நம்மில் இக்காலத்திலும் பலர் இருப்பார்கள்.

*1898*-ஆம் வருஷத்திற்கு முன் எந்த எந்தக் காங்கிரஸுக்கு அவர் சென்றார், அவருடைய சொற்பொழிவுகள் முக்கியத் தீர்மானங்களுக்கு அடிகோலினவா என்பவைகளின் விவரம் தெளிவாகத் தெரியவில்லை. ஒன்று மட்டும் நிச்சயம். அநேகமாக, எல்லாக் காங்கிரஸ் கூட்டங்களுக்கும் அவர் சென்றிருந்தார். முடிந்த வரையில் தம் ஆலோசனைகளை அவ்வப்போது வெளியிட்டிருந்தார். ஆனால் *1898*-ஆம் வருஷம் சென்னையில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் அவர் செய்த பிரசங்கம் காங்கிரஸ் சரித்திர வரலாற்றில் முதலில் சிறப்பாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. அதாவது மாகாண கவர்னரின் மந்திராலோசனை சபையில் ஓர் இந்தியருக்காவது இடம் தரவேண்டுமென்று அவர் பிரேரேபித்தார். ஏனெனில் *1892*—ஆம் வருஷத்துச் சட்டத்தின்படி ஒவ்வொரு மாகாண சட்டசபையும் தேர்தலினால் சிறிதளவே அங்கத்தினர்களைப் பெற்றிருந்தது. அநேக விதங்களில் *1892*-ஆம் வருஷத்து இந்தியச் சட்டம் புதிய சீர்திருத்தங்களைச் செய்யவில்லை. காங்கிரஸ் தலைவர்கள் இடைவிடாமல் அதைக் குறித்து வருந்தினார்கள்.

*1893*-ஆம் வருஷம் லாஹூரில் கூடிய காங்கிரஸ் கூட்டத்தின் தலைவரான தாதாபாய் நௌரோஜி தம் பிரசங்கத்தில், இந்தியச் சட்டசபையில் தீர்மானங்களைக் கொண்டுவர அங்கத்தினர்களுக்கு உரிமையே இல்லாத குறையைக் குறித்து மிகவும் வருந்தினார். அவர் அப்பொழுது இங்கிலாந்தில் பார்லிமெண்டு சபை அங்கத்தினராயிருந்தார். ஜனங்களின் உரிமைகளை மேல்நாடு

களில் எவ்வளவு விதங்களில் குறைவுபடாமல் காப்பாற்றி வருகிறார்கள் என்ற விஷயம் அவருக்கு அநுபவத்தில் நன்கு தெரிந்ததுதான். ஆகையால் இந்தியாவில் ஆங்கில ஆட்சியில் அவ்வித உரிமைகளொன்றும் இல்லாமல், வரி வசூல் செய்யும் காரியத்தில் கொஞ்சமும் ஜனங்களின் அநுமதி இன்றிச் செய்யும் அநியாயத்தைக் கண்டு, மனம் பதறியது அவருக்கு. சீமையில் உள்ள ஜனங்களின் சுயாதீனத்தையும் இங்கு நடக்கும் அநீதியையும் கண்டு அவர் எவ்வளவோ வருந்தினார். ஆனாலும் அவசரப்பட்டுக் காரியத்தைக் கெடுக்கக் கூடாது என்றே எண்ணினார். கொஞ்சம் கொஞ்சமாகத்தான் நாமும் ஆலோசனைச் சபை களில் முழு உரிமையையும் பெறுவதற்கு வழி தேட வேண்டுமென்று நம்பினார். ஆனால் அவருக்கும், அவரைப் போன்ற மிதவாதிகளுக்கும் எவ்வளவு தீர்க்க திருஷ்டி இருந்திருப்பினும், ஒருநாளும் இந்தியர்களுக்குச் சுய ராஜ்யம் அளிக்கக்கூடாது என்ற எண்ணம் ஆங்கில அரசாங்கத்தாரிடம் உள்ளதென்பது அக்காலத்திலேயே தெரியக் காரணமில்லைதான். மேலும் ஆங்கில ஆட்சியின் நன்மைகளைப் பெற்று நன்றி காட்டும் உணர்ச்சிப் பெருக்கில், இவ்வளவு தூரம் சுய ஞாபகத்தைப் பெற்றிருந்தார்களே என்பதுதான், அவர்களுடைய புத்தி வன்மையையும் நிலை தவறாத மனநிலையையும் நமக்கு எடுத்துக் காட்டுகின்றது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர், 1898-ஆம் வருஷம் நடந்த காங்கிரஸில், மாகாண கவர்னர் சபையில் ஓர் இந்தியருக்கேனும் இடம் கொடுக்கவேண்டு மென்ற தீர்மானத்தைக் கொண்டுவந்து பேசியதை, ஐம்பது வருஷங்களுக்குப் பின் வாசிக்கும்போது மிகவும் வேடிக்கையாகவேதான் தோன்றும். ஆனால் காலத்தையும் சுற்றுணர்ச்சியையும் கவனிக்கும் பொழுது, அக்காலத்தவர்கள் செய்த காரியங்களை மதிப்பிட இன்றுள்ள அரசியல் ஞானமும், நாம் அடைந்திருக்கும் தற்காலத்திய அநுபவமும் சௌகரிய மானவை யல்ல. பம்பாயிலும், சென்னையிலும் கவர்னர் காரிய சபையில் இரண்டு ஆங்கில அங்கத்தினர்கள் மட்டும்

இருப்பது போதாது; மூன்ருவதாக இந்தியர் ஒருவரையும் சேர்த்துக் கொண்டு ஆட்சிபுரிவதுதான் உசிதம் என்று அவர் கொண்டு வந்த தீர்மானம் சொல்லியது.

அவர் பிரசங்கம் செய்யும்பொழுது வேகமாயும், வார்த்தைகளில் உணர்ச்சியுடனும் பேசத் தொடங்கினர். அவருடைய வாக்குச் சாதுர்யத்தையும் கம்பீரமான குரலையும் அதற்குமுன், வட இந்தியாவிலுள்ள தலைவர்களில் பலர் கேட்டறியார்கள். காங்கிரஸ் கூட்டம் என்ருல் பெரிய அறிவாளிகளின் சபை. அதில் நன்ருக, அநுபவ சாலிகளின் நடுவில் பேசுவது சிரமமான காரியம். 'ஏதோ பேசினேன்' என்ற திருப்தி மட்டும் போதாது. அவருடைய பேச்சு அரை மணி நேரமே நடைபெற்றது. பரஞ்சபை என்ற வட இந்தியர் ஒருவரும் அவர் பேசியதை ஆமோதித்துப் பேசினர். கடைசியில், தீர்மானம் திருப்தியாகச் சபையோரால அங்கீகரிக்கப்பட்டது. காங்கிரஸில் கூடியவர்கள் சென்னை அறிஞரின் அரிய பேச்சை மெச்சினர்கள். அன்று முதற்கொண்டு காங்கிரஸ் தலைவர்களில் பலர் அவரிடம் தங்கள் ஆலோசனைகளை அவ்வப்பொழுது தெரிவிக்கவும் தொடங்கினர்கள்.

காலஞ்சென்ற ஸர் ஸி. ஒய். சிந்தாமணி அந்தக் காங்கிரஸுக்குத்தான் முதல்தடவை வந்திருந்தார். அழகிய ஆங்கிலச் சொற்ருெடர்களில் அவருக்கு ஆசை அதிகம். மேலும் சிறந்த மேல்நாட்டுப் பிரசங்கங்களை அச்சில் வாசித்து மனப்பாடம் செய்தவர். அந்த வருஷம் காங்கிரஸில் பேசியவர்களில் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் வாக்கின் வன்மை அவருக்குப் பிரமையை உண்டாக்கியது.

"கிருஷ்ணஸ்வாமி ஐயர் பம்பாயிலும் சென்னையிலும் கவர்னர் மந்திராலோசனை சபைக்கு ஓர் இந்தியரை அங்கத்தினராக நியமிக்கவேண்டுமென்ற தீர்மானத்தை எடுத்துப் பேசினர். அந்த வருஷத்திய குறிப்பிடத்தக்க உயர்ந்த பிரசங்கங்களில் அது ஒன்று......கிருஷ்ணஸ்வாமி ஐயரை அப்பொழுது சென்னைத் தலைவர்களில் ஒருவராக மதிக்கவும், இன்னும் அவரிடம் எவ்வளவோ எதிர்பார்க்கவும் தொடங்கிவிட்டார்கள் பலர்"*

---

* 'கிருஷ்ணஸ்வாமி ஐயரின் நினைவுகள்', லீடர், ஜனவரி, 1912.

என்று ஸர் ஸி. ஒய். சிந்தாமணி குறித்தார். பிற்பாடு கிருஷ்ணஸ்வாமி ஐயருடன் மிகுந்த சிநேகம் அவருக்கு ஏற்பட்டது. ஆனால் அக்காலத்தில் அவரை நேரில் சிந்தாமணிக்குத் தெரியாது. ஆகையால், அவருடைய பக்ஷ பாதமற்ற அபிப்பிராயமே அது என்பதை நாம் அறியலாம்.

1898-ஆம் வருஷத்துக் காங்கிரஸேதான், கிருஷ்ண ஸ்வாமி ஐயர் பின்பு பத்து வருஷங்களில் செய்த ஊழியங்களுக்கு அஸ்திவாரம் ஆயிற்று. அறிவிலே பழுத்த வர்கள் நிறைந்த ஆலோசனைச் சபையில், வயசில் எல்லோரையும் விடச் சிறியவரான அவருக்கு ஓர் இடம் கிடைத்தது. பெரியவர்கள் அவரிடம் வைத்த மதிப்பும் கௌரவமுமே அதற்குக் காரணம்.

## II

1898-ஆம் வருஷம், கிருஷ்ணஸ்வாமி ஐயரின் வாழ்க்கையில் முக்கியமான பகுதி என்றே சொல்லலாம். அவர் கையிலும் சிறிது பணம் சேர்ந்திருந்தது. லஸ் ரோட்டில் தாம் வசிப்பதற்குரிய பங்களா ஒன்றை வாங்கி யதும் அப்பொழுதுதான். அவருடைய ஆப்த நண்பரான பென்னாத்தூர் சுப்பிரமணிய ஐயர், பங்களாவை அவருக் காக விலை பேசி முடித்து வைத்திருந்தார். நிறைந்த செல்வத்தால் வாழ்க்கையின் எல்லாச் சௌகரியங்களையும் பென்னாத்தூர் ஐயர் அடைந்தவர். அவருடைய பழக்கம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு ஏற்பட்டதிலிருந்து பல விதங் களில் தனிகர்களின் வாழ்க்கை முறையை அவர் அறிந்து கொள்ள முடிந்தது. முதலில் என் தாயின் காதுகளில் வைர ஓலைகள் ஏறியதற்கு அவரே முக்கிய காரணம். உயர்ந்த வைரங்களைக் கொண்டு வந்து நண்பரிடம் காட்டி 'உன் அந்தஸ்திற்கு உன் மனைவி வைர ஓலைகளைக் காதில் அணியாமலிருப்பது நியாயம் அன்று' என்று வற்புறுத் தினார். அதே விதமே பங்களாவையும் யோசியாமல் விலை பேசி முடித்துவிட்டார். அவரிடம் அதிக மரியாதை

உள்ளவரானமையால், மறுவார்த்தை பேசாமல் லஸ் ரோட்டில் பங்களாவையும் வாங்கி, மேல் செலவுகளைச் செய்யவும் ஆரம்பித்துவிட்டார் கிருஷ்ணஸ்வாமி ஐயர்.

1898-ஆம் வருஷம் முதற்கொண்டு பொதுஜனக் காரியங்களில் - பிரதானமாகக் காங்கிரஸில் - அவருக்குப் பற்று அதிகரித்தது எல்லாவற்றையும்விட மேன்மை யானது. அவருடைய உண்மையான தேசபக்தியையும் காரியத்தில் ஊக்கத்தையும் கண்டு, பலர் அவரைத் தங்க ளுக்குத் தலைவராகவும் மதிக்கத் தொடங்கினார்கள். அடுத்தாற்போல் சென்னைக் கங்கிரஸுக்கு, அதாவது, 1903-ஆம் வருஷம் நடந்த காங்கிரஸுக்கு, வரவேற்பு ஏற்பாடுகளைச் செய்யும் சபையின் ஒரு காரியதரிசியாகவும் அவர் நியமிக்கப்பட்டதற்குக் காரணம், 1898-ஆம் வருஷம் நடந்த காங்கிரஸில் அவர் காட்டிய ஆர்வமேதான். 1898-ஆம் வருஷம் முதல், 1903-ஆம் வருஷம் வரையில் நடந்த ஐந்து வருஷத்திய காங்கிரஸ் கூட்டங்களுக்கு அவர் சென்றிருந்தாரா, இல்லையா என்று தெரியவில்லை. மெள்ள மெள்ள, பண்டித மதனமோஹன மாளவியா, டின்ஷா அடுல்ஜி வாச்சா முதலிய பெரியோர்களின் ஆதரவையும் பிரேமையையும் பெறும் காலமும் அவருக்குச் சுலபமாய் கிட்டியது.

1902-ஆம் வருஷம் ஆமதாபாத்தில் கூடிய பதினெட் டாவது தேசீய இந்திய காங்கிரஸ் மறுவருஷம் சென்னை யில் கூட்டுவதற்காக, ஒரு தீர்மானத்தைச் சிறந்த சொற் பொழிவாளரான சுரேந்திரநாத் பானர்ஜியின் தலைமை யில் முடிவு செய்தது. அக்காரணம் பற்றிச் சென்னையில் வரவேற்புக் கழகம் முதலியவைகளைத் தேர்ந்தெடுக்க வும், காங்கிரஸ் விழாச் செலவின் பொருட்டு நிதியைச் சேமிக்கவும் ஊக்கத்துடன் சென்னைத் தலைவர், 1903-ஆம் வருஷம் முதலிலிருந்தே ஆரம்பித்தார். சென்னையில் மார்ச்சு மாதம் 12-ஆம் தேதியன்று, முதலில் கனம் நவாப் சயித் முஹம்மது என்ற முதிர்ந்த முஸ்லீம் தலைவரை வைத்துக்கொண்டு ஒரு கூட்டம் கூட்டி, காங்கிர ஸைப் பற்றியும் சென்னையின் வரவேற்புப் பொறுப்பைப்

பற்றியும் தீர்மானங்களைச் செய்வதற்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரே மூலகாரணமாக இருந்த விவரம் அக்காலத்துப் பத்திரிகைகளிலிருந்து தெரிகின்றது. 1903-ஆம் வருஷம் டிசம்பரில் கூடும் காங்கிரஸ் கூட்டத்திற்கு வரவேற்புக் கழகம் முதலியவைகளைத் தேர்ந்தெடுக்கவும், ஜனங்களிடையே காங்கிரஸ் சார்பான மனப்பாங்கை வளர்க்கவும் அந்தக் கூட்டம் மார்ச்சு 12-ஆம் தேதி கூட்டப்பட்டது. சென்னை நகரவாசிகள் வரவேற்புக் கமிட்டி ஒன்றை ஏற்படுத்த முன்வர வேண்டும் என்றும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் எடுத்துக்காட்டினார்.* அப்பொழுதே வரவேற்புக் கழக அங்கத்தினர்கள் 200-க்குக் குறையாமல் இருந்தார்கள். ஆயினும் இன்னும் அதிக அங்கத்தினர்கள் வேண்டியிருந்தது. வரவேற்புச் சபைத் தலைவரையும், நன்றாக உழைக்கக்கூடிய காரியதரிசிகளையும் தேர்ந்தெடுக்க வேண்டுமல்லவா? வரவேற்புக் கழகம் செய்ய வேண்டிய முதல் காரியம், காங்கிரஸின் காரியத்தைச் சரிவரச் செய்து முடிக்கப் பணம் சேர்ப்பதே. சென்னை, முன் தடவைகளிலும் இந்தப் பொறுப்பைச் சரிவரச் செய்திருக்கிறது. ஆகையால் இவ்வருஷமும் முன்பு போல் செய்யும் என்பது நம்பிக்கை. ரூபாய் 50000-ஆவது சேர்க்கவேண்டும். அதற்கு மேலும் தொகை வேண்டியிருக்கும். ஏனென்றால் காங்கிரஸுடன் பொருட்காட்சி ஒன்றைச் சென்னை மாகாணம் நடத்த மேற்கொண்டிருப்பதை மறந்து விடக்கூடாது.

அடுத்த விஷயம் காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டியில் தயாரிக்க வேண்டிய தீர்மானங்களைப் பற்றியது. முந்திய காங்கிரஸ் நடவடிக்கைகளைப் பற்றிய அச்சிட்ட அறிக்கைகளை வாசித்த பின்னரும், அதேமாதிரி காங்கிரஸ் கூட்டத்தில் ஜாப்தா முழுவதையும் நன்றாகப் பார்த்துத் தீர்மானம் செய்ய அவகாசம் இல்லாதபடி விஷயங்களைப் பெரிது படுத்துவது தவறு. இவ்விஷயத்தில் ஏன் வழக்கத்தை விட்டு மாறுபாடு ஒன்றைச் செய்ய

* பிரசங்கம், 'ஹிந்து', மார்ச்சு, 13-ஆம் தேதி, 1903.

லாகாது? ஏன் சிற்சில முக்கியமான விஷயங்களை மட்டும் விஷயாலோசனை ஜாப்தாவில் சேர்த்துக் காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் நன்ருக ஆராய்ந்து கவனித்துத் தீர்மானம் செய்யவழி தேடக்கூடாது? மேலும் காங்கிரஸ் வேலைக்குத் தகுந்த மனப்பாங்கை ஜனங்களிடம் முதலில் உண்டாக்கு வதுதான் வரவேற்புக் கமிட்டியின் முக்கிய காரியம். இவை போன்ற விவரங்களை உண்மையான ஊக்கத்துடன் பொது ஜனங்களிடையே பல தடவைகளில் அவர் எடுத்துப் பேசினுர்; முடிந்த அளவில் அவைகளுக்காகப் பிரசாரமும் செய்தார்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு காந்தி அடிகளும் மற்று முள்ள பெரியவர்களும், காங்கிரஸ் சபை உண்மையில் இந்திய மக்களின் ஆதரவைப் பெற்றுள்ளது என்பதை உலகம் அறிவதற்கும், இந்தியாவிலேயே ஊழியர்கள் பலர் அதைச் சரியாகக் கௌரவிப்பதற்கும், பலரை அங்கத் தினராக ஆக்குவதற்கும் நாலணுச் சந்தாவை ஏற்படுத்தி யிருப்பதை நாம் அறிவோம். பணத்தில் பெரியவனுயினும், சிறியவனுயினும் தேச சேவையில் பொதுஜன ஸ்தாபன மான காங்கிரஸை ஆதரிக்கும் விஷயத்தில் நாலணுவைக் கொடுத்து அதன் அங்கத்தினராகச் சேர்வதே, நாடெங்கும் காங்கிரஸ் ஸ்தாபனத்தை நன்கு பலப்படுத்தும் முறை ஆகும். அவ் விதமே செய்யாமற் போனுலும், உள்ளடங்கிய அதே அபிப்பிராயத்தை மேற்கொண்டு, காங்கிரஸ் கூட்டம் மேலும் மேலும் பொதுஜனங்களின் ஆதரவைப் பெறவேண்டுமென்ற எண்ணத்துடன் கிருஷ்ணஸ்வாமி ஐயர், வரவேற்புக் கமிட்டிக்குச் சென்னை மாகாணத்திலுள்ள பல ஜில்லாக்களில் ஆங்காங்கே சிறு சிறு கூட்டங்களைத் தயாரிக்கும்பொழுது, பின் வருமாறு தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். அதாவது, பணம் சேர்க்கும் வகையில் வீடு வீடாகப் பணத்தைச் சேமிக்க வேண்டும் என்ருர். எவ்வளவு ஏழையாயினும் சரி, எவ்வளவு தாழ்ந்தவனுயினும் சரி, அவனிடமிருந்து சிறு தொகையைப்பெறுவது, காங்கிரஸ் ஸ்தாபனம் பொது மக்களின் ஆதரவை நன்கு பெற்றிருப்பதையும், ஜனங்கள்

காங்கிரஸை மட்டுமே நம்பியிருப்பதையும் உறுதிப் படுத்தும் என்பது அவர் சித்தாந்தம்.*

அவ்வருஷம் காங்கிரஸ் கூட்டத்தின் சார்பாகப் பொருட்காட்சி ஒன்றையும் திறந்து வைக்கச் சென்னையில் ஏற்பாடுகள் நடந்தன. அதற்கு, பி. ஆர். சுந்தர ஐயர் காரியதரிசியாக நியமிக்கப்பட்டார். பொருட் காட்சி சம்பந்தமாகவும் அதற்குவேண்டிய ஒத்துழைப்புக் காகவும், பண உதவிக்காகவும் நண்பருடன் பல இடங் களுக்கு அவரும் சென்றிருந்தார்; போன இடங்களில் சொற்பொழிவு ஆற்றி முக்கியமான ஜில்லாக் கமிட்டி களையும் ஆங்காங்கே கூட்ட இருவரும் ஏற்பாடு செய் தார்கள்.

டிசம்பர் மாதத்தில், சென்னையில் பெரிய உத்ஸவ காலம் போல் ஜனங்கள் திரள்திரளாகக் காங்கிரஸ் வேடிக்கைகளைக் காண வந்துசேர்ந்தார்கள். மௌண்ட் ரோட்டிற்கு அடுத்தாற்போல் பெரிய தோட்டமொன்றில் காங்கிரஸ் பந்தல் போடப்பட்டிருந்தது. முதல் நாள், தலைவர் பிரசங்கம் முடிந்ததும், விஷயபரிசீலனைக்காகக் கூட்டத்தை மறுநாளைக்கு ஒத்திப் போட்டிருந்தார்கள். அவ்வருஷம் எதிர்பாராத விதம் மழை பெய்யத் தொடங் கியது. இரண்டாவது மூன்றாவது தினங்களில் விடாமல் மழை பெய்யவே காங்கிரஸ் பந்தலிலும், அதைச் சுற்றிய பிரதேசங்களிலும் முழங்கால் அளவுக்குத் தண்ணீர் தேங்கி நிற்கத் தொடங்கிவிட்டது. வெளி மாகாணங்களிலிருந்து வந்த அங்கத்தினர்களுக்கு வேண்டிய சௌகரியங்களை ஒழுங்காகச் செய்ய முடியாமல் போய்விட்டது. அதனால் பலருக்கு அசௌகரியங்கள் அதிகமாகிவிட்டன. அப்பொழுது, காரியத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இருந்த வேகத்தைப் பார்க்கவேண்டும்! சிலர் படித்துச் சிறப்புற்று உயர்ந்த உத்தியோகங்களை நன்கு பார்ப்பார்கள்; ஆனால் எடுத்த காரியத்தைச் சரிவரச் செய்து முடிக்கும் ஆற்றலைக் கடைசி வரையில் பெற்றிருக்கமாட்டார்கள். அதிலும் இம்மாதிரிக் காலங்களில் கேவலம் தேக அலைச்சலை

* பிரசங்கம், 'ஹிந்து', ஜூலை 9-ஆம் தேதி, 1903.

எண்ணியும் உடம்பை உழைப்பில் ஈடுபடுத்த முடியாமலும் பலர் தவிப்பார்கள். எதையாவது கடிதத்தில் எழுதி அனுப்பத் தயங்கமாட்டார்கள் ; தாங்களே ஓர் இடத்தை விட்டுச் சரேலென்று எழுந்து மற்ற இடங்களுக்கு நடமாடி ஒன்றையும் விடாமல் நேரில் கவனிக்கும் பழக்கமே அவர் களுக்குப் புதிதாக இருக்கும். அவ்விதம் இல்லாமல் அவர், தம் கீழ் உழைத்த வாலிபர்களையும், மற்றக் காரியங்களை நிர்வகிக்கக் கூடியவர்களையும் வெருட்டி வேலை வாங்கினர். 'கல்கத்தாவிலிருந்து வந்தவர்களுக்கு அங்கசுத்தி செய்து கொள்ளச் சௌகரியங்கள் குறைவாக இருக்கின்றனவாம்' என்று ஓர் ஊழியன் வந்து சொல்வான். 'இந்தா, தாமத மேன் ; உடனே பத்துக்குப் பதினைந்தாக அங்க சுத்திக்கு உபயோகிக்கும் பீங்கான்களை வாங்கி வாரும்' என்று அவரிடம் பணம் கொடுத்து ஓடச் சொல்லுவார். 'பம்பாயி லிருந்து வந்தவர்களுக்கு மழை வெள்ளத்தினால் சமையல் வசதி போதாதாம்' என்று அறிந்தவுடனே, தம் பங்களாவி லேயே இருந்தவிடமெல்லாம் இலைகளைப் போட்டு ஐந்நூறு பேருக்குக் குறைவில்லாமல் சாப்பாட்டுக்கு ஏற்பாடுகளைச் செய்யச் சொல்லுவார்.

மழைபெய்தது ஒரு விதத்தில் வீண் போகவில்லை. அசௌகரிய சந்தர்ப்பங்களில் பொதுக் காரியங்களில் எம்மாதிரி நடந்து கொள்ளவேண்டுமென்று அறிய, அதுவே ஒரு சிறந்த வழிகாட்டியாக ஆயிற்று. முக்கிய மாகப் பம்பாயிலிருந்து வந்தவர்கள், 'உங்கள் சிரத்தையையும், உபசாரம் செய்யும் குணத்தையும் எங்களால் போற்றுமல் இருப்பது அசாத்தியம்' என்று நேரில் சொல்லியும், காங்கிரஸ் முடிந்தபின் அவரவர்கள் இருப்பிடங்களுக்குச் சென்றபிறகும் கடிதங்கள் மூலம் தெரிவித்தும் இருக்கிறார்கள்.

அவ்வருஷத்திய காங்கிரஸ் தீர்மானங்களில் ஒன்று, ராணுவச் செலவைப் பற்றியது. 'இந்தியாவைப் பாதுகாப்பதற்காக ஏற்படுத்திய ராணுவச் செலவை வருஷந்தோறும் அதிகப்படுத்துவதும், வெளிநாடுகளுக்குக் கொண்டுபோகும் சைன்யங்களுக்கு இந்தியர்களிடம் வரி

வசூலித்து அரசாங்கச் செலவுத் திட்டத்தில் ஒரு பங்கைப் பகிர்ந்து கொடுத்து, அதை இந்திய மக்களின் பொறுப் பாக்குவதும் சுத்தப் பிசகு; தர்மமுறையில் நடத்தும் எந்த அரசாங்கத்திலும் நடவாத காரியம் இது' என்றெல்லாம் பிரேரேபணை செய்தவர்களே சொற்பொழிவு செய்து வாதித்தார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரும், என். எம். ஸமரத் கொண்டுவந்த அந்தத் தீர்மானத்தை ஆமோதித்து ஓர் அரிய சொற்பொழிவைச் செய்தார்.

"இந்திய அரசாங்கமே சைன்யச் செலவைக் கண்டனம்செய்து இம்மாதிரி வரி வசூல் செய்வது தவறு என்று முறையிட்டுள்ளது. வருஷத்தில் 786,000 பவுன்களை நம் நாட்டில் ராணுவச் செல வின் தொகைக்காக வரி வசூலிப்பது முறையாகாது என்பதைத் தெரியப்படுத்த இதைவிட உயர்ந்த அத்தாட்சி வேண்டியதில்லை. .........முன்பு தென் ஆப்பிரிக்காவில் ராணுவச் செலவின் நிமித்தம் 400000 பவுன்கள் நம்முடைய பங்காக விதிக்கப்பட்ட அளவில், நாம் மிகவும் அக்காரியத்தை எதிர்த்தோம். சீமையிலுள்ளவர் களில் சிலர் இங்கு இருந்துகொண்டும் அதை நம்முடன் சேர்ந்து எதிர்த்தார்கள். அம் மாதிரிச் செலவை நாம் மேற்கொள்ளாத விதம் அப்பொழுது அரசாங்கம் ஏற்பாடு செய்ய இணங் கியது. இன்று என்ன விதமாய்த் தீர்ப்பது என்பதுதான் கேள்வி. இம்மாதிரிப் பிரயோஜனமில்லாமல் பேசுவதில் ஒன்றுமில்லை. காங்கிரஸ் கூட்டத்தில் தீர்மானங்கள் செய்வதிலும் பயன் இல்லை. நடக்கும் அநீதியைக் கண்டு, ஜனங்களைக் கோபம் பெறச் செய்வதே தீர்க்கும் வழி. கடுதாசியிலும் நேரிலும் வீடு வீடாகச் சென்று ஜனங்களிடம் சொல்லுவதுதான் சிறந்த வழி. இத்தேசத்து மக்களின் கோபம் வீண் போகாமலிருக்க, சீமையி லுள்ளவர்களின் மனச்சாட்சியைக் கிளப்புவதுதான் நாம் செய்ய வேண்டிய தற்காலத்திய கடமை........."

மேலும் வங்காளப் பிரிவினையின் அக்கிரமத்தைக் குறித்த தீர்மானத்திலும் அவர் கலந்துகொண்டார். அவ் வருஷம் முதற்கொண்டு ஒவ்வொரு காங்கிரஸிலும் அவ ருடைய சொற்பொழிவுகள் அதிகம் ஏற்பட்டன. பல தீர்மானங்களிலும் அவருடைய அரிய பிரசங்கங்கள், மேதா, வாச்சா முதலிய பிரமுகர்களின் நன்மதிப்பைப் பெற்றன.

காங்கிரஸ் மேடையில் ஏறிப் பிரசங்கங்கள் செய்வ தையே முக்கியக் குறியாகக் கொள்வதைவிட்டு, காங்கிரஸ்

செய்யவேண்டிய காரியங்களில் தம் மனத்தைச் செலுத்தத் தொடங்கியது, கோபால கிருஷ்ண கோகலே யின் அந்தரங்கச் சிநேகிதத்தை அவர் பெற்ற பின்னரே தான். அதுவரையும் காங்கிரஸின் வெளி வரம்பில் நின்றவர், அவர் பழக்கம் ஏற்படவும் அதன் அந்தரங்க ஆலோசனை சபைகளிலும் இடம் பெற்றார். 1903-ஆம் வருஷத்துக் காங்கிரஸில் அவருடைய உழைப்பை மெச்சி வாச்சாவும், மேதாவும் கடிதம் எழுதினார்கள்.

மேலும் 1903-ஆம் வருஷம் விஷயாலோசனைக் கமிட்டியில் மிகவும் தீர்க்க திருஷ்டியுடன் அவர் ஒரு சட்டத்தைக் காங்கிரஸின் நேர்மைக்காகத் தயாரிப்பது உசிதமென்று வாதாடினார். ஆனால் அப்போது அவர் பேச்சு ஒருவர் காதிலும் ஏறவில்லை. பிற்பாடு சூரத் காங்கிரஸ் கூட்டத்தில் நடந்த கலகத்திற்கு ஒரு சட்டம் இல்லாத தவறுதல்தான் காரணமாயிருந்தது என்று பெரியவர்களும் ஒப்புக்கொண்டார்கள். 'பட்டால்தான் தெரியும்' என்று ஒரு பழமொழியுண்டு. அவ்விதமே ஒரு சட்டத்தைக் காங்கிரஸ் ஏற்படுத்திக்கொள்ளச் சூரத் கலகமே உதவி யாயிற்று.

மழை பெய்தாலும் பாதகம் இல்லை, வேறு எங்கே யாவது காங்கிரஸ் கூட்டத்தை வைத்து நடத்த வேண்டு மென்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் பாடுபட்டதை, வயசு முதிர்ந்த வாச்சா மிகவும் போற்றினார். 30-12-03-ல் ஒரு கடிதத்தில்,

"இந்த மழையில் நானும், மேதாவும் கூட்டம் கூட்டுவது அசாத்தியம் என்றுதான் நினைக்கின்றோம். நேற்று இரவு பெய்த மழை காங்கிரஸ் பந்தலைக் குளமாக்கி விட்டது........சிரமமான வேலைகளைச் செய்த பழக்கத்தினால் பலத்த அசௌகரியங்கள் உண்டாகி இருப்பது எனக்குத் தெரிகின்றது; நாங்கள் இருவரும் உங்களிடம் அநுதாபப்படுகிறோம். உங்களைப்போன்ற அரிய நண் பர்கள் எவ்வளவோ பாடுபட்டுக் காங்கிரஸை ஒருவித முடிவுக்குக் கொண்டுவருவதில் எங்களுக்கு மிகுந்த பெருமைதான். எதை வேண்டுமானாலும் எதிர்க்கலாம்; இயற்கையின் வேகத்தைத் தடுப்பது சாத்தியமா? இருந்தாலும் உங்களுடைய தளரா முயற்சியும், காரியத்தை நடத்தும் சாமர்த்தியமும், ஏதாவது

ஒருவழியைப் பிறப்பிக்கும் என்பதை நம்பிக்கொண்டுதான் இருக்கிரோம்''

என்று குறிப்பிட்டார்.

இளைஞருக்கு எவ்வளவு ஆறுதலாக இருந்திருக்க வேண்டும் இம்மொழிகள்! மழைத் தொந்தரவு இருப்பினும், வாச்சா முதலியவர்களின் நன் மதிப்பைத் தாம் பெறவேண்டியே மழை பெய்ததோ என்று அவர் நினைத்தார்; அவ்வருஷம் காங்கிரஸுக்கு வராத தாதா பாய் நௌரோஜி, என் தந்தையைப்பற்றிக் கேள்விப்பட்டு நேராகச் சீமையிலிருந்தவாறே 4-2-'04-இல் ஒரு கடிதம் எழுதினர்.

''சென்னையிலிருந்து வந்த தகவல்களிலிருந்து நீங்கள் காங்கிரஸில் மிகவும் சிரத்தை எடுத்துக்கொண்டதாகவும், அநேக காரியங்களைச் செய்ததாகவும் அறிகிறேன். அறிந்து மிகவும் திருப்தி அடைகிறேன்.''

நன்மதிப்புக்கு அத்தாட்சிபோல் அவ்வருஷம் டிஸம்பரில் காங்கிரஸ் கூட்டத்திற்குத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் நோக்கத்துடன், வாச்சா அந்தரங்கமாய் ஸர் ஹென்றி காட்டன் என்ற மாஜி உத்தியோகஸ்தரைப் பற்றி என் தந்தையிடம் கலந்து யோசித்தார்.

''அவரிடம் எத்தனையோ உயர்ந்த குணங்கள் சேர்ந்திருக்கின்றன. வேறு வெள்ளைக்காரரிடமாவது நம்மவர்களிடமாவது இவ்வளவு உயர்ந்த அம்சங்களை ஒருகாலும் காணவே முடியாது. மிகுந்த புத்தி நுட்பம் வாய்ந்தவர்; சக்தியிலும் உயர்ந்தவர். வெகுநாட்கள் அரசாங்க ஆட்சி இலாகா விவரங்களை நன்கு உணர்ந்த அநுபவசாலி''*

என்றெல்லாம் அவர் எழுதினர்.

1904-ஆம் வருஷம் ஜுலை மாதத்தில் சென்னையில் கோகலே, முதலில் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் விருந்தினராக வந்து, ரானடே ஞாபகார்த்தமாக எழுப்ப எண்ணிய ஹாலின் அஸ்திவாரக்கல்லை நாட்டும் விழாவுக்கு விஜயம் செய்திருந்தார் என்பதை அறிவோம் அல்லவா? அதைப் பற்றி வாச்சா, பின்வருமாறு எழுதினர்.

---

* வாச்சா கடிதம், 22-1-04.

"கோகலேக்குச் சென்னை அளித்த சிறப்பான வரவேற்பு சரியானதுதான்; எதிர்காலத்தில் வரும் பெரிய தலைவராகவே அவரை நாங்களெல்லோரும் கருதுகிறோம். இப்பொழுது இருக்கும் பெரிய தேசத்தொண்டர்கள் நம்மிடையிருந்து மறைந்த பிறகு, அவர்களிடம் இருந்த குணங்களையெல்லாம் ஒருங்கே கோகலே இடமேதான் காணமுடியும். நல்ல உழைப்பு, ஜனங்களை வசீகரிக்கும் வாக்கின் வன்மை, ஆங்கில பாஷையின் பயிற்சி, வேண்டிய அளவுக்குப் புத்தியின் சக்தி, நியாயமான சுய நம்பிக்கை - எல்லாவற்றையும் விட அவரிடம் மேலானவை, உயர்ந்த சீலமும், துய்மையான இதய பரிபாகமுமே."*

கேட்கவேண்டுமா என் தந்தையின் சந்தோஷத்திற்கு? ஏற்கனவே தாமாகக் கோகலேயுடன் பழக ஆசைப் பட்டவர் வாச்சாவைப்போன்ற பழுத்த தேசத்தொண்டர் களின் நற்சாட்சிப் பத்திரங்களைக் காணவே இன்னும் அதிக மதிப்பைக் கோகலேயிடம் வைக்கத் தொடங்கினர்.

1904-ஆம் வருஷம் பம்பாயில் காங்கிரஸ் கூட்டம் கூடியது. சீமையில் நம் நாட்டுக்காக உழைத்த பார்லி மெண்டரி கமிட்டி விஷயத்தில் கோகலேக்குச் சிரத்தை அதிகம் என்றுதான் அறிவோமே! அவர்கள் தலைமையில் ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் இந்தியாவின் முன்னேற்றத் திற்காகப் பாடுபட்டார். ஏற்கனவே கிருஷ்ணஸ்வாமி ஐயரின் வற்புறுத்தலால் சென்னைக் காங்கிரஸ் வரவேற்புக் கமிட்டி, சீமையிலுள்ள பார்லிமெண்டு கமிட்டிக்கு ரூபாய் 11,821 கொடுபடவேண்டிய பாக்கியைக் கொடுக்க ஒப்புக் கொண்டிருந்தது. அதைச் சீக்கிரம் சீமைக்கு அனுப்பும்படி கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு, கோகலேயும், வாச்சாவும் அடிக்கடி எழுதிக்கொண்டிருந்தார்கள். எல்லாம் அவர் பொறுப்பாக ஆகிவிட்டது. காங்கிரஸ் அந்தரங்கயோசனை களில் இடம் கிடைப்பது, கேவலம் கௌரவத்தின் பொருட்டு மட்டுமன்று; பொறுப்பையும் வேலையையும் செய்வதன் பொருட்டன்றோ? பம்பாயில் நடை பெற்ற காங்கிரஸுக்கு அவர் சென்றிருந்தார். சட்டசபை சம்பந்தமான தீர்மானத்திலும் சில அழுத்தமான யோசனை களைப் பிரசங்கத்தில் வெளியிட்டார். அங்கு ஸர் வில்லியம்

* வாச்சா கடிதம், 7-8-1904.

வெட்டர்பர்ன் விஜயம் செய்திருந்தார். என் தந்தைக்கு அவரைக் கோகலே அப்பொழுதுதான் நேரில் அறிமுகப் படுத்தினர். கோகலே சொல்லும் வார்த்தைதான் பரம குருவின் மொழியாகிவிட்டதே என் தந்தைக்கு! ஆகையால் சென்னையில் ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு வரவேற்பு ஒன்றை என் தந்தை அடுத்தமாதம் ஏற்பாடு செய்தார்.

"ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு மிகுந்த சந்தோஷத்துடன் சென்னை வாசிகள் சிறப்பான வரவேற்பு அளித்ததைப் பத்திரிகையில் வாசித்து அறிந்தேன். நம் நாட்டின் க்ஷேமத்தை உண்மையாக விரும்புகிறவர்கள் அனைவரும் அவருக்குச் செய்யப்படும் கௌரவத்தைத் திருப்தியாகவே ஆமோதிப்பார்கள்"*

என்று கோகலே எழுதியதை நண்பரால் நம்பாமல் இருக்கமுடியுமா? அவரும் வெட்டர்பர்னுடைய ஆப்த இந்திய நண்பர்களில் ஒருவராகச் சீக்கிரமே ஆகி விட்டார். வெட்டர்பர்ன் சீமைக்குச் சென்றதும் பிரிட்டிஷ் ஜனங்களுக்கு இந்திய மக்களின் வறுமைகளையும் குறைகளையும் தெரிவிக்கக் காங்கிரஸிலிருந்து சிலரை அனுப்பும்படி நம் நாட்டுத் தலைவர்களைத் தூண்டினர். கோகலேக்கு இக் காரியத்தில் மிக்க பிரமை. இங்கிலாந்திலுள்ள ஜனங்களின் பிரதிநிதிகளை இந்திய இயக்கத்தின்பால் கவனத்தைச் செலுத்த இதைவிடச் சிறந்த வழி வேறு இல்லை என்பது அவருடைய எண்ணம். மேலும் ஸர் வில்லியம் வெட்டர் பர்னும் அம்மாதிரிப் பொறுக்கப்பட்ட சிலர், 'செய்ய வேண்டியவைகளைப்பற்றியும் கோகலேக்கும் வாச்சாவுக்கும் அறிவித்திருந்தார். முதலில் இந்தியர்களின் சுய ஆட்சி சம்பந்தமான எண்ணங்களை அவர்களே நேரில் பிரிட்டிஷாரிடம் தெரிவித்துக் கொள்வது முறையாகும். இரண்டாவது, பலவித வகுப்புக்களின் பிரதிநிதிக் கூட்டங்களிடம் நேரில் பேசித் தங்கள் சிரமங்களை அவர்களே தெரிவிக்க வேண்டும். மூன்றாவது, சீமையிலுள்ள பிரமுகர்களை இந்தியத் தலைவர்கள் தனித்தனியே கண்டு பேசவேண்டும். இந்த இயக்கத்தின்பால் சிரத்தை

* கோகலே கடிதம், 16-1-05.

காட்டின பார்லிமெண்டரி கமிட்டியிடம் அவசியம் கோகலே நேரில் பழகவேண்டும். அவர்களுக்கு இந்தியப் பிரச்னைகளை நன்கு புலப்படுத்தவேண்டும். ஆனால் அந்தக் காரியங்களுக்கு எல்லாம் சௌகரியம், சீமையில் தேர்தல் நடைபெற்ற பிறகேதான் ஏற்படும். அந்த வருஷம் ஆகஸ்டு மாதத் தேர்தல் சீமையில் நடைபெறத் தடைப் பட்டது. ஆகையால் இந்தியாவிலிருந்து வரவேண்டிய வர்கள் தங்கள் யாத்திரையை அடுத்த வருஷம் தள்ளிப் போட்டுக் கொள்ளலாம் என்று வெட்டர்பர்னும் தெரிவித்துவிட்டார்.

மறு வருஷம் காசியில் காங்கிரஸ் நடைபெறுவ தாகத் தீர்மானமாகியிருந்தது. கோகலேயை அதன் தலைவராகத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். அதற்குள் அவரும் சீமை சென்று திரும்புவதாகவே உத்தேசித் திருந்தார். நினைத்தவிதமே அந்த வருஷம் டிசம்பரில் கூடிய காங்கிரஸுக்குத் தலைமை வகிக்கத் திரும்பியும் வந்து சேர்ந்தார். கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அந்தக் காங்கிர ஸுக்குச் சென்றிருந்தார். ‘அங்கே பல விஷயங்களைக் குறித்து நேரில் அந்தரங்கத்தில் பேச அவகாசம் இருக்கும்’ என்று ஏற்கனவே கோகலேயும் அவருக்கு எழுதியிருந்தார். எல்லாம் நினைத்தபடியே நடந்தது.

அந்தக் காங்கிரஸில், இரண்டு தீர்மானங்களையொட்டிக் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய சொற்பொழிவுகள் நடந்தன. ஒன்று, அடிக்கடி இந்திய நாட்டின் ராஜ்ய நிர்வாகத்தைப் பற்றிச் சீமையில் உள்ள பார்லிமெண்டு கவனம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று வற்புறுத்தியது. என் தந்தை யின் சீரான யுக்திகள் மிகவும் ஆழமான கருத்துக்களை உணர்த்தின. மற்றொரு தீர்மானம்: வங்காளத்தில் அரசாங்கம் காட்டிய கொடுமைகள் சரியல்ல என்பது. அரசாங்கத்தின் அடக்குமுறைகளினால் வங்காளம் மிகவும் சிரமப்பட்டது. அவைகளை மிகவும் கண்டித்துப் பேசினார் என் தந்தை: “பிரிட்டிஷ் அரசாங்கம் சற்றும் தாக்ஷிண்யமே தெரியாத முறையினாலும், தாங்களே உலகில் சிறந்தவர்கள் என்ற எண்ணத்தினாலும் பெரியதொரு சாம்ராஜ்யத்தை

இங்கு ஸ்தாபிக்கப் போவதில்லை" என்றார். இன்றும் நாம் இதையேதான் சொல்லிக்கொண் டிருக்கிறோம். அரசாங்கமும் அப்படியேதான் நம்மை ஆள்கின்றது.

கோகலேயின் சீமைப் பிரயாணத்தைப்பற்றிய தீர்மானத்தைப் பிரேரேபித்ததுடன் மட்டும் நிறுத்திக் கொண்டு, பொருள் உதவி செய்வதில் காங்கிரஸ் அதிகாரிகள் பின் வாங்கிவிட்டார்கள். வாச்சா மிகுந்த வருத்தத்துடன் என் தந்தைக்கு எழுதினார்:

"கோகலேக்குப் பொருளுதவி செய்வதன்பொருட்டுக் காங்கிரஸ் ஒருவித ஏற்பாட்டையும் செய்யாததை நான் அறிவேன். நானே அது சம்பந்தமாகக் கோகலேயிடம் பேசினேன். காங்கிரஸில் எப்பொழுதும் இப்படித்தான். முன்னொரு சமயம் பண சகாயத்தை ஒப்புக்கொண்டு முழுவதையும் செய்யாமல் விட்டு விட்டது. நம்மிடமுள்ள குறைகளில் இது ஒன்று."

கோகலேயிடம் பரம பக்தி ஏற்பட்டிருந்தமையால், காங்கிரஸ் சரியான விதத்தில் உதவி செய்யாததை எண்ணி மிகுந்த வருத்தமும் கோபமும் சேர்ந்து என் தந்தையினுடைய மனத்தை வாட்டின.

ஆனால் தம் வரையிலும், கோகலேயுடன் முற்றும் ஒத்துழைப்பதை மனத்தினுள் விரதமாகக் கொண்டார். கோகலே இந்தியா சம்பந்தமாக முக்கியச் சீர்திருத்தங்களைப் பெற்ற ஒரு மசோதாவைத் தாமாகத் தயாரித்துக் கையில் வைத்துக்கொண்டு சீமைக்குப் போகவேண்டும் என்ற எண்ணம் நண்பருக்கும் இருந்தது. அம்மாதிரி தயாரிக்கப்படும் மசோதாவைச் சரியாகத் தாம் பார்வையிடுவது மட்டும் அல்லாமல், ஸர் வி. பாஷியமையங்காரைக் கொண்டும் பார்வையிடச் செய்ய உத்தேசித்து, கோகலேயை மசோதாவைத் தயாரிப்பதில் மும்முரமாய் வேலை செய்யவும் அடிக்கடி தூண்டிக்கொண்டிருந்தார்.

## III

காசியில் நடைபெற்ற காங்கிரஸில் முடிவுசெய்த தீர்மானங்கள் பல உள்ளன. ஆயினும் வங்காளப் பிரிவினையைப் பற்றிய தீர்மானத்தில் மட்டும் ஒரு முகமாக

ஆக்ஷேபித்தது அந்த காங்கிரஸ். கோகலேயும் ஆரம்பப் பிரசங்கத்திலேயே, கர்ஸன் பிரபு ராஜப் பிரதிநிதியாக இருந்து நாட்டுக்கு விளைவித்த தீங்குகளைக் குறித்துக் காரசாரமாகச் சில வார்த்தைகளைச் சொன்னார்:

"நேயர்களே, உலகிலுள்ள யாவற்றிற்கும் ஒரு முடிவு உண்டென்பது எவ்வளவு உண்மை பார்த்தீர்களா? கர்ஸன் பிரபுவின் ஆட்சியும் முடிவடைந்துவிட்டது!..........கர்ஸனிடம் மிகுந்த பிரேமை கொண்ட எவரும், அவருடைய செய்கைகள் பிரிட்டிஷ் அதிகாரத்தின் அஸ்திவாரத்தை இந்நாட்டில் பலப்படுத்தியதாகச் சொல்லமாட்டார்கள். அவருக்கு, இந்தியதேசம் எக்காலத்திலும் வெள்ளைக்காரர்களின்கீழ் இருக்கவேண்டும், பிரிட்டிஷ்காரர்களும் தங்கள் கடமைகளைப்பற்றிச் சதா பேசி அத்துடன் நிறுத்திவிடவேண்டும் என்பதே எண்ணம்.

"........கடைசிப் பிரசங்கத்தில், பம்பாயில் பைகுல்லா கிளப்பில் நம்மிடம் விடைபெற்றுக் கொள்ளும்பொழுது அவர் சொன்னதாவது :

"இந்தியநாடு ஆங்கிலேயர்களின் உழைப்புக்காகவே ஏற்பட்டது. இங்குள்ள கோடிக்கணக்கான ஜனங்களுக்கு அவர்களே பாடுபடுகிறார்கள். இந்தியர்களில் நூற்றுக்கு எண்பது பெயர்கள் எப்பொழுதும் தாங்களாகவே, பின்னால் கிடக்கின்றார்கள். எஞ்சியுள்ள இருபது பேரையும் சமுத்திரத்திலேயே தூக்கிப் போட்டுவிடலாம்."*

கோகலே சாதாரணமாக மேடையிலிருந்து பேசும்பொழுது கோபாவேசத்தினால் குரலையும் கைகளையும் அடித்துப் பேசுபவரன்று. அவரே தம்மை மறந்து கர்ஸனுடைய இறுமாப்பை வருணிக்கும்பொழுது வார்த்தைகளை - அதிலும் எழுதிப் பதிப்பித்தவைகளை - மிகவும் கடுமையாகவும் ஆவேசத்துடனும் பேசினார். கேட்க வேண்டுமா அவரை அநுசரித்த் வங்காள நாட்டுச் சிங்கத்தின் கர்ஜனைக்கு?

பன்னிரண்டாவது தீர்மானம் வங்காளப் பிரிவினை சம்பந்தப்பட்டது. பாபு சுரேந்திரநாத் பானர்ஜி நாற்காலியை விட்டு எழுந்தவுடன் 'வந்தேமாதரம்' என்ற கோஷம் காதுகளைச் செவிடாக்கியது. உடம்பு இருபக்கமும்

---

* காங்கிரஸ் அக்கிராஸனர் பிரசங்கம், 1905.



ஸர் ஆர்தர் லாலி
சென்னை கவர்னர் (1906—1911)



ஸர் வில்லியம் வெட்டர்பர்ன்

ஊசலாடியும், குரலை உயர்த்தியும் தாழ்த்தியும், மேலும் பெரிய பெரிய வாக்கியத் தொடர்களிலும், நீண்ட மொழி களிலும் அவர் பேச ஆரம்பித்தார். வங்காளப் பிரிவினையை ரத்து செய்யும் வரையில் நாட்டில் கிளர்ச்சி நிற்காது என்று அதிகாரிகளுக்கு எச்சரிக்கை செய்தார். ஆம், வாஸ்தவமேதான். கல்கத்தாவில் ஏற்பட்ட கிளர்ச்சி பயங் கரமாய்த்தான் தோன்றியது தேச பக்தர்களுக்கு. 'கடை களை மூடினார்கள்; வீடுகளில் அடுப்பை மூட்டவில்லை; சோறு போடுவாரே இல்லை. வந்தேமாதரம் என்ற கோஷமே தெருக்களில் எங்கும் முழங்கி ஆகாயத்தை எட்டியது.' வாலிபர்களின் துடிதுடிப்பும், வயசானவர் களின் அமைதியற்ற நடவடிக்கையும் பயத்தையேதான் உண்டுபண்ணின. அரசாங்கத்தாரும் பொதுக்கூட்டங் களை நடைபெறாமல் செய்வதற்குப் போலீஸ் உதவியை நாடினார்கள். சிறுவர்களைப் பிடித்துச் சிறையிலிட்டார்கள். அநேக துன்பம் தரும் சட்டங்களை, கர்ஸனுடைய ஆட்சி யின் முறை அமலுக்குக் கொண்டு வந்திருந்தது.

நாடெங்கும் ஒரே அமர்க்களம். வங்காளத்தின் கோபவெறி மற்ற மாகாணங்களையும் தாக்கியது. கர்ஸ னுடைய அநீதிகளைக் குறித்துத் தனியாகவே காசி காங் கிரஸில் பண்டித மதன மோஹன மாளவியாஜி ஒரு பிரேரணையைக் கொண்டுவந்து, 'அரசாங்கத்தாருடைய அடக்குமுறைப் பிரயோகங்களே நாட்டில் பிரிட்டிஷ் அதிகாரத்தின்கீழ் நடத்தப்படும் யாவற்றையும் இனி இந்தியர்கள் மறுக்கும்படிச் செய்கின்றன' என்றார். 'அர்த்த மற்ற பிடிவாதச் செய்கைகளால் ஜனங்களை அதிகார வர்க்கம் ஏன் விரோதித்துக் கொள்ளவேண்டும்' என்று அவர் கேட்டார். வங்காளத்தில் மட்டுமல்லாமல் நாட்டின் மற்றப் பாகங்களிலும் அரசாங்கத்தாருடைய அடக்கு முறையை ஒட்டிய காரியங்கள் பலத்த விரோதத்தையே கிளப்பிவிட்டன என்றும் அவர் எடுத்துக்காட்டி, தாம் கொண்டுவந்த தீர்மானத்தையும் சாதகமாக முடித்துக் கொண்டார்.

லோகமான்யரான பாலகங்காதர திலகர் சும்மா இருப்பாரா? அவருடைய உணர்ச்சியெல்லாம் ஒருங்கே

சேர்ந்து பிரவாகமாய் ஓடத் தொடங்கியது. ஆங்கில அரசாங்கத்தின் அநீதியை எதிர்க்க வங்காள மாகாணமே சரியான முறையைக் மேற்கொண்டதாகவும், மற்ற மாகாணங்கள் அவர்கள் காட்டும் வழியையே பின் பற்றினுல் சீக்கிரத்தில் தேசம் விடுதலை அடைய மார்க்கம் உண்டு என்றும் அழுத்தமாக அவர் எடுத் துரைத்தார். வங்காளத்தில் சிற்சில பொறுப்பற்ற இளைஞர்கள் அளவுக்கு மீறி அரசாங்க வர்க்கத்தை எதிர்த் தார்கள். அரசாங்கமும் வழியற்று, குரூரமான பலாத்கார முறையை நாடியது. அவர்களையேதான் திலகர் சரியான முறையை நாடுகிறவர்களாகக் காங்கிரஸ் சபையில் குறித்தார். அடுத்த வருஷம் கல்கத்தாவில் நடந்த கூட்டத்தில், பஹிஷ்காரத் தீர்மானத்தில், மனவேறு பாடுகள் உண்டானதுதான், காங்கிரஸில் தீவிரவாதக் கட்சி பிறந்ததன் முக்கியகாரணம். அரசாங்கத்தார் மீது பிரத்தியேக கோபம் மூண்டதனுலேயே வங்காளிகள் எதிர்ப்பு முறைகளை நாடினுர்கள். திலகரையும் இன்னும் பாபு விபின சந்திரபாலரைப்போன்ற தேச பக்தர்களையும் சமயம் வாய்த்தபொழுது பலாத்கார முறையைப் போற்றும்படியும் தூண்டியது வங்காளத்தின் கிளர்ச்சி யேதான்.

சட்டத்தை மீருமல் ஒழுக்க முறையைக் கொண்டே நாட்டின் நலத்தைத் தேடியவர்கள் மேதா, வாச்சா, கோகலே முதலியவர்கள். கோகலே சீமையில் எத்த னையோ விதங்களில் அதிகாரவர்க்கத்தின் மனப்பாங்கை மாற்றுவதற்குரிய முயற்சியை மேற்கொண் டிருந்தார். 1906–ஆம் வருஷம் மறுபடியும் சீமைக்குப் போவதாக கோகலே ஏற்பாடு செய்துவிட்டார். ஆனுல், அவர் எடுத்துச்செல்ல உத்தேசித்த சட்ட மசோதாவை மேதா ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால் கோகலே அதைப் பற்றிப் பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம் என்று நினைத் திருந்தார். சீமையில், இதற்குள் இந்தியா மந்திரியான மார்லி பிரபு இந்தியாவைப்பற்றியும், இந்தியர்களின் எண்ணங்களைப்பற்றியும் மிகுந்த அநுதாபத்துடன் ஒரு

பிரசங்கத்தில் பேசியிருந்தார். அதைப் பத்திரிகையில் வாசித்து விட்டுக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் மார்லியின் மீது சற்றுக் கௌரவத்தைச் செலுத்த ஆரம்பித்தார்.

"உங்களைப்போல் மார்லியின் பிரசங்கத்தை வாசித்து உண்மையை அறியக்கூடியவர்கள் சிலர் இருக்கிறார்களே என்பதுதான் எனக்குச் சந்தோஷம். கொஞ்சங்கூட அரசியல் காரியங்களில் பிரவேசம் இல்லாதவர்கள், உடனே தங்கள் யோசனையற்ற அபிப்பிராயங்களைக் கொட்டி விடுகிறார்கள். அவர்களுக்கு எதிலும் ஒரே அவசரந்தான். அப்படித்தான் அவசரப்படட்டுமே; யோசிக்கிறார்களா விஷயங்களை? அதுவுமில்லை"*

என்று சென்னை நண்பருக்கு வாச்சா எழுதினார். யோசனைக்கும், அரசியல் காரியங்களில் நிதானத்திற்கும், மிதவாதிகள் மட்டுமே உரியவர்களென்று அவர்கள் எண்ணியதாகத் தெரிகிறது.

கோகலே சீமைக்குச் சென்று மார்லியுடன் பேசுவதற்கு அதுவே சமயம் என்பது மிதவாதிகளின் யோசனை. ஆயினும் காங்கிரஸில் கோகலேக்குச் சீமை போய்வரச் செலவு தொகையைக் கொடுத்து அனுப்ப ஒருவரும் பிரேரேபிக்கவில்லை. கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அவ்விஷயத்தில் மனத்துயரம் அடங்கவில்லை. வாச்சா, காங்கிரஸ் அகில இந்தியக் காரியதரிசியானதால், அவரை அடிக்கடி அது சம்பந்தமாக எழுதிக் கேட்டுக் கொண்டிருந்தார். அவரும், "நான் என்ன செய்வேன்! காங்கிரஸ் நிர்வாக சபை பணத்தைக் கோகலேக்குக் கொடுத்துதவ எனக்கு உத்தரவிடவில்லையே" என்று பதில் சொல்லிக்கொண்டிருந்தார். சென்னையில் ஜி. சுப்பிரமணிய ஐயர் கோகலேயின் சீமைப் பிரயாணத்திற்குப் பணத்தைத் திரட்ட முயற்சி எடுத்துக்கொண் டிருந்தார். மற்ற மாகாணங்களிலிருந்து பணம் கொஞ்சம் கொஞ்சமாய் வர ஆரம்பித்ததைப்பற்றி வாச்சாவும் திருப்தியுற்றார். ஒவ்வொரு மாகாணத்தினரும் கோகலேயின் சீமை யாத்திரையை உத்தேசித்து, தங்களால் முடிந்த பொருளுதவியைச் சற்றுத் தாமதமானாலும் செய்யத் தொடங்கினர். கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஏப்பிரல் மாதம் சீமைக்குக் கோகலே புறப்பட்டதி

* கடிதம், 8-3-05.

பிருந்து மனத்தை ஒருவாறு ஆறுதல் செய்துகொண்டாரே ஒழிய, கோகலேயின் காரியம் கைகூடவேண்டுமே என்று மிகவும் மனத்துள் கவலை கொண்டார்.

அவ்வருஷம் சென்னை மாகாணப் பொதுக்கூட்டத்தைத் திருநெல்வேலியில் நடத்த நிச்சயித்திருந்தார்கள். அதற்கு என் தந்தையாரையே தலைவராகத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். இம்மாதிரிக் கூட்டங்களுக்கு தலைமை வகிப்பது பெரிய பொறுப்பு. என் தந்தையைக் குறித்த மட்டில் தலைமை வகிப்பதில் அவருக்குக் கஷ்டம் அவ்வளவு இல்லை. ஏனென்றால் 1903-ஆம் வருஷம் செங்கற்பட்டில் நடைபெற்ற ஜில்லா மகா நாட்டுக்குத் தலைமை வகித்ததிலிருந்து அவருக்கு, தம்முடைய முன்கோபத்தையும் அநாவசிய வேகத்தையும்கூடப் பொதுக் கூட்டங்களுக்கு அக்கிராஸனம் வகிக்கையில் கட்டித் தூரத்தில் வைக்க முடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருந்தது.

ஆனால் மூன்று வருஷங்களுக்குள் அரசியல் காரியங்களில் பல மாறுதல்களும், புதிய முறைகளும் ஏற்பட்டிருந்தால், எல்லோருக்கும் திருப்தியாகவே அக்கூட்டத்தை நடத்தவேண்டுமென்ற அக்கறை அவருக்கு இருந்தது. ஆப்தர்களிடம் முன்னமேயே தம் கவலையைத் தெரிவித்துக் கொள்ள அவர் எண்ணினார். 'எனக்கு அரசியல் துறையில் ஞானம் குறைவுதானே' என்று அவர் எழுதியவுடன், வாச்சா,

"உங்களுடைய ஆத்ம ஸம்ஸ்காரமே இக்கவலையை உண்டாக்கி, 'நான் அரசியல் உலகில் சிறியவன்' என்று சொல்லும்படித் தூண்டியிருக்கும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஏனென்றால் உங்களுடைய நண்பர்களில் சிலர், காங்கிரஸ் பொதுக்கூட்டத்திலும் சரி, உள்ளே விஷயாலோசனைச் சபையிலும் சரி, உங்களைக் கவனித்துப் பார்த்தவர்கள், இவ்விஷயத்தில் நினைப்பது வேறு விதம். எப்பொழுதும் தெளிவான திருஷ்டியுடனேதான் நீங்கள் பல விஷயங்களைப் பார்க்கின்றீர்கள் என்பது அவர்கள் எண்ணம். முக்கிய அம்சத்தைத் தெரிந்துகொள்வதிலும் வெகு கூர்மையுடனேதான் இருக்கிறீர்கள். நிச்சயம் உங்கள் தலைமைப் பிரசங்கம் அரிய விஷயத்தைப்பற்றியே இருக்கும் என்பது என் நம்பிக்கை"*

* கடிதம், 19-5-06.

என்றெழுதினர். தைரியக் குறைவினால் ஏற்பட்ட கவலை தானா, அல்லது, வெறும் வெளி வேஷமா என்று சிலர் சந்தேகிக்கலாம். ஒருவருக்கு மிகுந்த தைரியம் ஏற்படுவது, சுய நம்பிக்கையினால்தான் என்றிருந்தால், படித்த அநுபவ சாலிகளின் உத்ஸாக மொழிகளும் ஓரளவு தைரியத்தை ஒருவருக்கு ஊட்டும் என்று அறிய இயலுமல்லவா?

பத்திரிகைகள் அவருடைய தலைமையைப்பற்றி முன்னதாகவே எழுதத்தொடங்கின. சென்னையில் 'ஹிந்து' பத்திரிகை அவரிடம் எப்பொழுதும் அநாவசியமான அநுதாபம் காட்டுவது வழக்கம் இல்லை. ஆனாலும் திருநெல்வேலி ஜில்லாக் கமிட்டி, கிருஷ்ணஸ்வாமி ஐயரைத் தலைவர் பதவிக்குத் தேர்ந்தெடுத்ததைப்பற்றி ஒரு தலையங்கம் எழுதியது.

"இதைவிடச் சிறந்த ஏற்பாடு செய்ய நம்மால் சாத்திய மில்லை. இம் மாகாண சபை அங்கத்தினர்களுடைய தீர்மானத்தைப்பற்றி எங்கள் அங்கீகாரத்தைத் தெரிவிக்கின்றோம். ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இந்தக் கௌரவம் கிடைத்ததைப்பற்றி எங்களுக்குப் பரம திருப்திதான். ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் சிறு பிராயத்திலேயே, வக்கீல் தொழிலில் மிகுந்த செல்வாக்கை அடைந்துவிட்டார். மேலும் பொதுக் காரியங்களில் மிகுந்த ஊக்கமும், எதிர்ப்பைக் கண்டு பயப் படாத மனப்பாங்கையும் பெற்றவர். நல்ல இயக்கங்களில் அவருக்கு இருக்கும் அநுதாபத்தாலும், பல தர்ம ஸ்தாபனங் களைச் சொந்தமாக ஆரம்பித்திருக்கும் ஆற்றலினாலும் ஜனங் களிடமிருந்து மதிப்பு அவருக்கு அதிகம் கிடைத்திருக்கிறது. நடக்கப்போகும் சென்னை மாகாண சபை முக்கியமானது. இப் பொழுது சில முக்கிய அகில இந்தியப் பிரச்னைகள் ஏற்பட்டிருக் கின்றன. மாகாணக் கூட்டத்தில் இவைகளை எல்லாம் சரிவரத் தீர்மானிப்பதற்கு அதிகாரம் அதற்கு இல்லாவிட்டாலும், இவை களில் முக்கியமானவைகளை அதனால் கவனியாமல் இருப்பதும் சாத்தியமன்று."*

தலைவரின் யோக்கியதையைப் புகழ்வதுபோல், வரும் கூட்டத்தில் தலைமை வகிக்கும் பொறுப்பு எவ்வளவு கஷ்டம் என்பதையும் அந்தத் தலையங்கம் நினைப்பு மூட்டியது.

* 'ஹிந்து' பத்திரிகை, மே 5-ஆம் தேதி, 1906.

*1906*, ஜூன் *14*-ஆம் தேதியில் திருநெல்வேலியில், கிருஷ்ணஸ்வாமி ஐயர் அக்கிராஸனத்தின் கீழ், பெரிய மாகாணக்கூட்டம் கூடியது. திருநெல்வேலியில் அவர் பெயர் ஏற்கனவே அடிபட்டிருந்தது. வக்கீல்களான எம். ஆர். ராமகிருஷ்ணையரும், ஏ. சுந்தர சாஸ்திரி களும், மற்றும் பல நண்பர்களும் அவரைப் பரம வாஞ்சையுடன் வரவேற்றூர்கள். சிநேகிதத்தைக் கௌர விக்கும் குணத்தை அவரும் நன்ருகப் போற்றியவர். இடம், காலம், ஏவல் எல்லாம் சௌகரியமாகவே இருந்தன. திருநெல்வேலிக்கு அவருடன் சென்னையி லிருந்து பல நண்பர்களும் சென்ருர்கள். அரசியல் உலகில் பெயர்பெற்ற ஜி. சுப்பிரமணிய ஐயரும், அவர் சிஷ்யரான ஸி. ஒய். சிந்தாமணியும் மாகாணத் தொழிற் சாலைக் கூட்டத்தின் பொருட்டு அங்கே செல்லவேண்டி யிருந்தது. கைத்தொழில் மகாநாடு திருநெல்வேலியில் மாகாணக் கூட்டத்தின் ஆதரவிலேயே நடைபெறும்படி ராமகிருஷ்ணயர் முதலிய நண்பர்கள் ஏற்பாடுகள் பல செய்திருந்தார்கள். ஸி. ஒய். சிந்தாமணி என் தந்தையிடம் மிகுந்த அன்பு கொண்டவர். கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய அக்கிராஸனத்தில் நடத்தப்படும் கூட்டத்தையும், மற்றக் காரியங்களையும் நேரில் பார்ப்பது என்ற ஒரு காரணமே போதும் அவருக்கு. மேலும் சொந்தத்திலேயே அவருக்குப் பொதுக்காரியங்களில் மிகுந்த ஆர்வமும் கலந்து விட்டால் கேட்கவேண்டுமா ?

அக்கிராஸனரின் பிரசங்கம் சுமார் ஒரு மணிக்குக் குறைவில்லாமல் நடை பெற்றது. அந்தப் பிரசங்கத்தில் எத்தனையோ விஷயங்களைக் குறித்த அபிப்பிராயங்கள் வெளியாயின. இந்திய அரசியல் இயக்கமும், பலர் சேர்ந்து பொதுக்காரியங்களைச் செய்யும் ஒழுக்கமுறையும், சட்ட சபைகளின் சீர்திருத்தமும், தேர்தல் சம்பந்தமான கொள்கைகளும், மாகாணப் பிரிவினையின்கீழ் அங்கங்கே ஏற்படவேண்டிய சிறிய ஸ்தாபனங்களும், ஆரம்பக் கல்வியும், தொழிற்சாலைக்கு வேண்டிய தனிப்பட்ட பயிற்சி முறையைக் கற்பிக்கும் வித்தியாலயங்களும்,

ஹிந்து தர்ம ஸ்தாபனங்களும், சைன்யச்செலவும், அரசாங்க அதிகாரத் துறையில் நம்மவர்களுக்கு அமைய வேண்டிய பங்கும், அரசாங்கக் காரிய நிர்வாக இலாகா விற்கும் நீதி அளிக்கும் இலாகாவிற்கும் பிரிவுவேண்டும் என்பதும், அரசாங்கத்தாரின் குறையாத அவநம்பிக் கையும், நம்முடைய தனிக்கடமையும் அப்பிரசங்கத்தில் விசாரிக்கப் பட்டிருந்தன.

"காங்கிரஸ் ஸ்தாபனம் தற்காலத்தில் இந்திய தேசம் முழுவதற்கும் பிரதிநிதியான ஒரு சபை என்று சொல்வது அவ்வளவு சரியில்லைதான். ஏனென்றால் அங்கே கூடும் மனிதர் களுக்கும் இந்தியாவிலுள்ள மற்றக் கோடிக் கணக்கான ஜனங் களுக்கும் சம்பந்தம் இப்பொழுது அதிகம் இல்லை. ஆகையால் கட்ட டத்தை அதிகம் மேலே கட்டிக்கொண்டு போவதற்குமுன் அஸ்தி வாரத்தைப் பலமாய்ச் செய்துவிடவேண்டும். அவசியம் இருப்பின், கடைக்காலையே மறுபடியும் ஆழமாக வெட்டவேண்டி வரும். ஏற்கனவே கட்டிய கட்டடத்தின் சேதத்தைக் கவனியாமல், பழைய அஸ்திவாரத்தை மாற்ற வேண்டியும் வரலாம்."

பிரசங்கத்தில் வெளிவந்த ஓர் அபிப்பிராயம் இது.

காங்கிரஸ் ஸ்தாபனம் ஆரம்பமாகி இருபது வரு ஷங்கள் ஆகி யிருந்தன. எழும்பியதைத் தள்ளியதையும், சரியான வழியில் புதிய அஸ்திவாரத்தைப் போடச் சொன் னதையும் மிகவும் தைரியமான வார்த்தைகளாகவே எண்ணினார்கள் பலர். உண்மையான உணர்ச்சியுடன் காரியத்தைச் செய்யும் மனப்பாங்கைப் பெற்றவர்கள் இப்படித்தான் பேசுவார்கள் ; செய்கைகளிலும் நடத்திக் காட்டுவார்கள். முதலில் அவர்களைக் கண்டு தூஷித்தவர் களும் பிற்பாடு அவர்களுடைய மொழிகளைத் தீர்க்க திருஷ்டியுடன் சொன்னவைகளாகவே கருதுவார்கள். சாமான்ய ஜனங்களின் இயல்பு புதியது எதையும் நம்பத் துணியாது; புது மார்க்கங்களில் யோசிப்பது மேதாவிகளின் இயல்பு.

ஆரம்பக் கல்வியைவிடக் கைத்தொழில் கற்பிப்பது இத்தேசத்தில் முக்கியமானது என்பது தலைவரின் துணிபு. இத்தேசத்தில் தொழில்கள் பல விருத்தியாக வேண்டு மென்று ஆசைப்பட்டுவிட்டு, அரசாங்கத்தாரால் ஓர்

உபகாரமும் இது சம்பந்தமாக நாம் பெருமல் இருப்பதை இனியும் நாம் பொறுப்பது பிசகு என்ருர். பல புள்ளி விவரங்களை எடுத்துக்காட்டி வேறு காரியங்களுக்குப் பணத்தை நியாயமாகச் செலவிட வேண்டியிருப்பினும், இந்த விஷயத்திற்கும் அவசியம் அரசாங்கம் பணச்செலவு செய்து, பொருளாதார நிலை முன்னேற்றம் அடைய வழிகாட்ட வேண்டுமென்று வற்புறுத்தினுர்.

மடங்களுக்கும் கோயில்களுக்கும் வைத்திருக்கும் பணத்தில் ஒருபங்காவது மக்கள் படிப்புக்காகச் செலவு செய்வது உசிதம். இதையும் அரசாங்கத்தார் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

ராணுவ இலாகாச் செலவை ஒருவராலும் தொட முடியாதபடி இருக்கிறது. புள்ளி விவரங்களை எடுத்துக் காட்டி, 'அநாவ்சியச் செலவு எது என்ருல், அது ராணுவ இலாகா சம்பந்தமானது தான்' என்று எடுத்துக் காட்டினுர்.

வேறு பல விஷயங்களையும் பற்றி ஆராய்ந்து விட்டு, அரசாங்கத்தாரின் அவநம்பிக்கையைப்பற்றிப் பின்வருமாறு சொற்பொழிவு ஆற்றினுர் :

"பிரிட்டிஷ் ஆதிக்கத்தின் இறுமாப்பு ஒன்றே கர்ஸன் பிரபுவின் ஆட்சியில் நமக்குத் தெளிவாகத் தெரிந்தது. கேவலம் தங்கள் சாம்ராஜ்யத்தின் பெருமையையே அடிப்படையாகக் கொண்டது அவ்வெண்ணம். கர்ஸன் பிரபு இந்தியாவின்மீது ஆசை வைத்ததும் மற்ற அநேகம் வெள்ளைக்காரர்கள் பிரேமையுடனிருப்பதும், இங்கிலாந்தின் வியாபார விருத்திக்கு இந்தியாவே அடிப்படையான ஒரு நாடு என்ற கருத்தினுல்தான். மேலும் அநேக வெள்ளைக்காரர்களின் குடும்ப சௌகரியத்திற்கும், அவர்களுடைய சந்ததிகளுடைய உத்தியோகங்களுக்கும் இந்தியா நல்ல போக பூமி அல்லவா ?......கிழக்கு நாடுகளில் இன்று புதிய இயக்கங்கள் கிளம்புகின்றன. ஜப்பான் தேசத்தின் சக்தி மேல்நாட்டு அரசியல் பண்டிதர்களின் எண்ணங்களுக்கு ஏமாற்றத்தை விளைவித்ததுமட்டுமல்லாமல், மற்ற நாடுகளிலுள்ள ஜனங்களின் யோக்கியதையையும் அளவிட முடியாது என்ற ஞானத்தை மேல்நாட்டார்களிடம் திடப்படுத்திவிட்டது...... இன்னும் பல காரியங்களைச் செய்ய நம்முடைய பொது

ஜனசேவை மேன்மை அடையவேண்டும்; அரசியல் வாழ்க்கை ஒரு புனித வாழ்க்கையாகவும் மாறவேண்டும்.''

பிரசங்கத்தின் முழுவேகமும், ஆர்வமும் கேட்டவர்களை உயரக் கொண்டுபோயின. அதன் அச்சிட்ட பிரதியைச் சீமையில் பெற்று வாசித்தவரான கோகலே,

''பிரமாதமான அறிவை ஊட்டும் உங்களுடைய பிரசங்கத்தின் பிரதியை வாசித்து அநுபவித்தேன்''[1]

என்று தெரிவித்தார். மேதாவோ பிரசங்கத்தின் பிரதியை வாசித்த பிறகு தந்தி ஒன்று உடனே கொடுத்தார். ''எவ்வளவோ விஷயங்களைப்பற்றி அறிவூட்டுகிறது'' என்று வாச்சா அதை வாசித்துச் சந்தோஷம் அடைந்தார். சீமையில் ஸர் வெட்டர்பர்ன் வாச்சாவுக்கு எழுதிய கடிதமொன்றில் பின் வருமாறு குறித்தார்:

''நான் சென்னை மாகாணக் கூட்டத்தில் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயரின் அக்கிராஸனப் பிரசங்கத்தை வாசித்தேன். மிகுந்த உயர்தரமானதாயும், அறிவூட்டும் விஷயமாகவும் அதைக் கருதுகிறேன். இந்த வருஷம் கோகலே இங்கே செய்திருக்கும் வேலையைப் பூர்த்திசெய்ய அவர் (கிருஷ்ணஸ்வாமி ஐயர்) ஏன் இங்கு வரக்கூடாது?''[2]

''ஏன் நீங்கள் சீமைக்குச் செல்லக்கூடாது?'' என்று கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் வாச்சாவும் வெட்டர்பர்னுடன் சேர்ந்துகொண்டு ஒத்துப் பாடினார்.

சென்னை மாகாணக் கூட்டத்தின் பிரசங்கம் இம்மாதிரி மிகவும் எல்லோராலும் போற்றப்பட்டது. வேண்டியவர்களும் வேண்டாதவர்களுங்கூட, ஒருங்கே அவருடைய உயர்ந்த தேசபக்தியையும், விஷயங்களைப் பக்ஷபாதமின்றி அறியும் ஆற்றலையும், மேலும் புதிய முறையில் காரியங்களைத் திறனுடன் நடத்திக் காட்டும் தைரியத்தையும் மெச்சினார்கள். லாகூரிலிருந்து லாலா லஜபுத்திரர் எழுதினார்:

''உங்களுடைய மிகவும் ஆழ்ந்த கருத்துக்களை வாசித்துச் சந்தோஷிக்கிறேன். முக்கியமாக, நாடெங்கும் ஆங்காங்கே அரசியல் வேலைக்காக ஒழுங்கான ஸ்தாபனங்களை ஏற்படுத்த வேண்டும் என்ற யோசனையைப் போற்றுகிறேன். பக்குவம்

---

1. கடிதம், 27-7-06.
2. கடிதம், 17-8-06.

அடைந்த புத்தியின் தெளிவையும், நயம்பட்ட சொல்லையும் பெற்ற பிரசங்கங்களுக்கு இது ஒரு சான்ருகும்.''*

லாலா லஜபுத்திரரிடமிருந்து இவ்வித மதிப்புக் கிடைப்பது சாமான்யமாக எண்ணக்கூடியதன்று.

ஏன் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சீமைக்குச் சென்று கோகலேயின் உழைப்பில் தாமும் கலந்துகொண்டு நன்மையைச் செய்யக்கூடாது என்ற கேள்வியே எல்லோரிடமிருந்தும் கிளம்பியது. கோகலேயும் அதே விருப்பத்தை ஓர் அந்தரங்கக் கடிதத்தில் தந்தையாருக்குத் தெரிவித்திருந்தார். ஆனுல் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குச் சீமைப்பிரயாணத்தில் இஷ்டமில்லைதான். உறவினர்களின் ஆக்ஷேபணையை அவர் பொருட் படுத்தியதாகப் பல நண்பர்கள் கருதினுர்கள். ஒரு சமயமும் அவர் அதை மறுத்துச் சொல்லவில்லை.

---

* கடிதம். 26-6-06.

## அத்தியாயம் 11

### இந்திய ஊழியர் சங்கத்தின் ஆரம்பம்

மற்ற எல்லாவற்றையும்விட இந்திய ஊழியர் சங்கத்தை முதல் முதலில் ஸ்தாபிதம் செய்வதற்குக் கோகலே மேற்கொண்ட சிரத்தையும், அதில் கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்கு உண்டான கௌரவபுத்தியும் சிலாகிக்கத் தக்கவை. அவ்விருவர்களின் நட்பு ஒரு விதமான சிறுமை இல்லாமலும் இடையூறின்றியும் வளரத் தொடங்கியதற்கு, இந்திய ஊழியர் சங்கத்தின்பால் இருவருக்கும் இருந்த பேரார்வமே காரணம் என்றால் அது பொய்யாகாது. ஒவ்வோர் அடியையும் கோகலே எடுத்து வைக்கும்பொழுது நண்பருக்கு ஒரு கடிதமோ அல்லது தகவலோ கொடுத்து வந்திருக்கிறார் என்றும் தெரிகிறது.

"இந்திய ஊழியர் சங்கத்தில் சேருபவர்களுக்கான விதிகளின் பிரதியை ஸ்ரீ நடேசன் என்னிடம் தந்தார். ஒன்றிரண்டு விதிகளின் நியாயத்தை என்னால் சரியாக அறிய முடியவில்லை. இருந்தாலும் வேலையை நடத்தித் தீரவேண்டும். ஒருவேளை ஊழியர்களின் சுய உரிமைகளுக்கும் சுதந்திரத்திற்கும் விதிகளினால் ஏதாவது பங்கம் நேரிடலாம் என்று நினைக்கின்றேன்......"*

என்று சென்னையிலிருந்து கிருஷ்ணஸ்வாமி ஐயர் தயக்கத்துடன் எழுதியதற்கு, உடனே கோகலே மறு கடிதத்தில்,

"......உங்கள் கடிதம் பெற்று மிகவும் சந்தோஷம் அடைந்தேன். நான் நினைத்த மாதிரியே நீங்கள் நினைப்பதும் ஓர் ஆச்சரியமே. நீங்கள் நினைத்தவிதமேதான் கொஞ்ச காலமாக எனக்கும் ஒரு கவலை இருக்கிறது. நீங்கள் முக்கியமாகக் குறித்த விதமே ஊழியர்களின் பிரத்தியேக சுதந்திரத்திற்குத் தீங்கு ஏற்படுமென்றே தோற்றுகிறது. கடைசியில் யோசித்ததில் வேறு வழியில்லை என்று பட்டது. இச்சங்கம் சரியாக உழைக்க வேண்டுமானால் நம் வாலிபர்கள் இப்பொழுது இருப்பதுபோல் கட்டில் அடங்காமலும் ஒழுக்கமில்லாமலும் பொதுக் காரியங்களில் ஈடு

---

* கடிதம், 28-7-1905.

படுவது நல்லதல்ல என்றுதான் தோன்றுகிறது. அதற்காகவே தான் சிற்சில நிபந்தனைகளை அவசியமாக்கினேன்......நானும் நீங்கள் நினைத்ததுபோல் கவர்னரிடம் இதைக் காட்டவேண்டும் என்று நினைத்தேன். ஆனால் சந்தேகப்பட்டுக்கொண் டிருந் தேன். உங்கள் கடிதம் என் சந்தேகத்தை நீக்கி என்னுடைய பழைய கருத்தை உறுதிப்படுத்தியது......''

என்றெல்லாம் எழுதினர் ; பின்,

''நீங்கள் என்ன உதவி அளிப்பீர்கள்? உங்கள் உண்மையான தேசசேவைக்குத் தக்கவிதமும், தாராள இயல்பிற்கு ஒத்தவித மும் எதையாவது செய்யுங்கள். தேசமாதா உங்களுக்கு எவ் வளவு சொந்தமோ அவ்வளவுதான் எனக்கும். ஒவ்வொருவரிட மிருந்தும் அவரவர்களுக்கு உவந்த பக்தியையே அவள் வேண்டு கிருள். எங்களைப் போல உங்களால் எல்லாவற்றையும் துறப் பதும் சரியன்று. ஆனால் உங்கள் சம்பாத்தியத்தின் ஒரு பகுதியை எங்களுக்குக் கொடுத்துதவலாம். ஏனென்றால் எல்லாம் தாயின் சேவையிலேயேதான் செலவிடப்படும்?''[1]

என்று நண்பரிடமிருந்து கொடையை உத்தேசித்தும் எழுதினர். இந்திய ஊழியர் சங்கத்தை அந்த வருஷமே ஆரம்பித்துவிட்டார்கள். வேண்டிய உபகாரத்தை நாடி வந்த கோகலேயின் மற்றொரு கடிதத்திற்குப் பதில்,

''மாதம் ஐம்பது ரூபாய் தரட்டுமா? அல்லது, ஒரே தடவையில் கொடுக்கவேண்டுமானாலும் பொருள் உதவி செய் கிறேன்......எதற்கும் உங்கள் கையில் என்னை ஒப்படைத்து விட்டேன். எது செய்வதாயினும் அதில் ஒத்து உழைக்கிறேன்''[2]

என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் எழுதிவிட்டார். கோகலே இதனிடையே சீமைக்குப் புறப்பட்டுவிட்டார். வழியில் போர்ட் ஸெயிட்டிலிருந்து எழுதியதில்,

''உங்கள் ஒத்துழைப்பை எவ்விதம் காட்டவேண்டுமென்று தோன்றுகிறதோ அவ்விதமே காட்டுங்கள்''[3]

என்று பதிலும் கோகலேயிடமிருந்து வந்தது.

கோகலே அந்த வருஷம் சீமையிலிருந்து திரும்பி வந்ததும் காசியில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டத்திற்கு அக்கிராஸனம் வகித்தார் என்றுதான் அறிவோமே!

---

1. கடிதம், 31-7-05.
2. கடிதம்,12-8-05; 3. கடிதம், 25-9-1905.

நண்பரும் சென்னையிலிருந்து விஜயம் செய்திருந்தார். அவருடன் என் தாயும் தமையனுரும் சென்றூர்கள். கங்கை ஸ்நானத்திற்கும், காசியின் புண்ய பூமியை மிதித்து விச்வேசுவர தர்சனம் செய்து களிப்பதற்கும் யாருக்குத்தான் மனக் கசப்பு? காசிக்கு அவர்களுடன் அவருடைய இரண்டு சிஷ்யர்களான காலஞ்சென்ற ராவ்பகதூர் சி. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரும், காலஞ் சென்ற டி. வி. கோபாலஸ்வாமி முதலியாரும் ரெயில் பிரயாணம் செய்தார்கள். எவ்வளவோ குட்டுகள் பட்டும் திண்டாடியும் வழியெல்லாம் தலைவரிடம் தாங்கள் பெற்ற சம்மானங்களை அவ்விருவரும் வேடிக்கை வேடிக்கையாய்ப் பிற்காலத்தில் சொல்லுவார்கள். சிரமம் எல்லாவற்றையும் மறக்கடிக்கும் உதாரகுணத்தையும் தம்மிடமுள்ளவர்களை மேம்படுத்தும் மனப்பாங்கையும், அவர்கள் எவ்விதம் நினையாமல் இருப்பார்கள்?

காங்கிரஸ் அக்கிராஸனர் செய்த சொற்பொழிவைப் போற்ருதவர்கள் இல்லை. "இந்திய ராஜப் பிரதிநிதியான கர்ஸன் பிரபுவும், என் காங்கிரஸ் சொற்பொழிவைப் பிரமாதப் படுத்திவிட்டார்"* என்று தாமே எழுதினுர் கோகலே என் தந்தைக்கு.

கோகலே அக்கிராஸனம் வகித்த காங்கிரஸ் பல முக்கிய மான தீர்மானங்களைச் செய்து முடித்தது என்பது எல் லோரும் அறிந்ததே. ஆனுல் பலருக்கு அந்தக் காங்கிரஸில் நடந்த ஒரு சிறு சம்பவம் தெரிந்திராது. காங்கிரஸைப் பற்றி வெளிவந்த புத்தகங்களும் வெளியிட்டிரா. காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கு வரவேற்புக் கமிட்டி செய்த உப சாரங்களில் ஒன்று கை விசிறி ஒவ்வொருவருக்கும் கொடுத்துதவியது. ஜி. ஏ. நடேசன் அக்கிராஸன ரிடம் அநுமதி பெற்று விசிறிகளில் இருபக்கங்களிலும் 'இந்தியன் ரெவியூ'வின் விளம்பரங்களைக் கொட்டை எழுத்துக்களில் அச்சிட்டு ஒட்டிவிட்டார். அக்காலங் களில் விளம்பரத்திலும் புதிய வழியை நடேசன்

* கடிதம், 31-1-1906.

காண்பித்ததாகவே பலர் நினைத்து மகிழ்ந்தார்களாம். நடேசனுடைய சாமர்த்தியத்தைக் கண்டு எல்லோரையும் விட அதிகமாக அவருடைய சென்னை நண்பர் கொண்டாடினதாகவும் கேள்வி.

இது நிற்க, 1906-ஆம் வருஷம் மாட்சிமை தங்கிய ஜார்ஜ் இளவரசர் தம் மனைவியுடன் இந்தியாவை அடைந்து, சென்னைக்கும் விஜயம் செய்தார். சென்னை இப்பொழுது இருப்பதுபோல் இல்லை. சிறிய சம்பவங்களே அமர்க்களப்படும். கேட்கவேண்டுமா, மன்னர் வருகையை எவ்வளவு ஆரவாரத்துடன் ஜனங்கள் எதிர்பார்த்திருப்பார்கள் என்பதை! அரசகுமாரர் பவனி வரும் காட்சியைப் பார்க்கப் பெருத்த கூட்டம் தெருக்களிலெல்லாம் சேர்ந்து விட்டது. ஊரில் பெரிய தனிகர்களும் பிரபல உத்தியோகஸ்தர்களும் இளவரசரைத் தனிப் பேட்டி கண்டார்கள்.

"எங்களில் முக்கியமாக ஸர் சுப்பிரமணிய ஐயரும், ஸர் வி. பாஷ்யமையங்காரும் இளவரசரைப் பேட்டி கண்டார்கள்."[1]

என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் கோகலேக்கு எழுதிய கடிதமொன்றில் தெரிவித்திருந்தார்.

"மேலும் இளவரசர் ஸ்ரீ சுப்பிரமணிய ஐயருடன் பேசும்பொழுது, இந்திய மக்கள் ஆங்கில அரசாங்கத்தால் மிகவும் தவிக்கின்றார்கள் என்று நீங்கள் சொன்னதைச் சற்றும் அங்கீகரிக்காதவிதம் பேசினாராம். இங்குள்ளவை அனைத்தையும் இளவரசர் அதிகாரவர்க்கக் கண்ணாடியின் வழியாகப் பார்க்கின்றார் என்றுதான் ஸர் சுப்பிரமணிய ஐயரும் சொல்லுகிறார். மேலும், ஸர் சுப்பிரமணிய ஐயரிடம், இந்தியச் சிற்றரசர்களுக்கும் சீமான்களுக்கும் ப்ரத்தியேகமாக ஒரு சபை ஏற்படுத்தும் காரியத்தில் அவருடைய கருத்து என்ன என்று அரசர் வினவினாராம். இதுவும் ஒரு கீழ்த்தரமான அபிப்பிராயம். இதைப்பற்றி இனிமேல் நாம் அடிக்கடி கேட்கப் போகிறோம் என்றுதான் நினைக்கவேண்டி யிருக்கிறது"[2]

என்று கோகலேக்கு அவ்வப்போது தெரிவித்த தம் அபிப்பிராயங்களில் இதுவும் ஒன்று. முதலில் தாம் மறந்து விட்டதையும் கீழேயுள்ள ஒரு குறிப்புத் தெரிவிக்கின்றது.

---

1. கடிதம், 27-1-06. 2. கடிதம், 27-1-06.

"லார்ட் ரிப்பனுக்குச் சிலை வைக்கும் விஷயம் எம்மட்டில் இருக்கிறது? வங்காளம் இவ்வளவு தூற்றிவிட்டு இப்பொழுது முதலில் லார்ட் கர்ஸனுக்கு ஒரு சிலை தயாரிப்பது, அதுவும் அவன் உயிருடனிருக்கும்பொழுது செய்வது நியாயமில்லை அல்லவா?"

பதிலும் உடனே அக்கடிதத்திற்கு வந்துவிட்டது.

"......என்னையும் இளவரசர் நேரில் பார்த்துப் பேசிய பொழுது பல விஷயங்களின் நடுவில், அதிகாரிகள் ஜனங்களை வருத்தத்திற்கு உள்ளாக்குகிறார்கள் என்று ஏன் நான் சொன்னேன் என்று கேட்டவுடன், 'நானும், வேண்டுமென்று அவர்கள் சிரமப்படுத்துவதாக நினைக்கவில்லை; ஆனால் அவர்கள் மனத்தில் இந்நாட்டின் க்ஷேமம் ஒன்றே முக்கியமாக இல்லாததாலும், பல வேறு நோக்கங்களை முன்னிட்டே காரியங்களைச் செய்வதாலும், இம்மாதிரி அடிக்கடிக் கஷ்டம் உண்டாகிறதென்று தெளிவுபடுத்தினேன்"[1]

என்று எழுதிவிட்டு, குறிப்பின் விஷயத்திற்காகப் பதிலையும்,

"ரிப்பன் பிரபுவுக்குச் சிலை வைப்பதைப்பற்றி வங்காளத்தில் இப்பொழுது ஒன்றும் நடைபெறாது; ஆனால் நாம் அதை மறக்கப் போவதில்லை; ஏனென்றால் சென்னையில் போன வருஷத்துக்கு முந்திய வருஷம் நீங்கள் எல்லோரும் தைரியமாய்ச் சொன்னதனால் என் பொறுப்பாகி விட்டது அக்காரியம்"[2]

என்றெழுதினார். ரிப்பனுக்கு இந்தியாதேசம் நன்றியைத் தெரிவிப்பது அவசியமென்றும், அவருக்கு ஒரு சிலை வைக்க வேண்டியது முக்கியமென்றும் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் பல நண்பர்களும் சென்னையில் கோகலேயிடம் சொன்னார்கள். ஜி. ஏ. நடேசன் சென்னையில் எடுத்துக்கொண்ட சிலை சம்பந்தமான முதல் காரியமும் அதுவே. அவர் காரியதரிசியாக மூன்று சிலைகளுக்காகச் சென்னையில் வேலை செய்தார். ரிப்பன் பிரபு, கிருஷ்ணஸ்வாமி ஐயர், கோகலே, இம் மூவருடைய சிலைகளும் முக்கியமாக அவரால் எழும்பியவை.

அவ்வருஷம் எத்தனையோ முக்கிய காரியங்கள் இந்திய சுதந்தர இயக்கத்தில் உண்டாயின. இங்கிலாந்தில் மார்லி பிரபு இந்தியா தேசத்திற்கு மந்திரி சபையில்

---

1. கடிதம், 31-1-06. 2. கடிதம், 31-1-06.

பொறுப்பாளியானுர். அவரிடத்தும் அவருடைய அரசியல் காரியங்களின் மேன்மையிலும் இந்தியாவில் சில அறிவாளிகளுக்கு மதிப்பு உண்டாயிற்று. மேதா, கோகலே, கிருஷ்ணஸ்வாமி ஐயர் முதலியவர்கள் நம் நாட்டுக்கு க்ஷேமம் வருவதானுல், மார்லியினுல் வரலாம் என்று மனப்பால் குடித்தனர். நம் குறைகளைத் தீர்த்துக் கொள்ளவும், நம் ஆசைகளை ஒருங்கு சேர்த்து ஒரு சட்டம் நாமே தயாரித்துப் பார்லிமெண்டு அங்கத்தினர்களில் இந்தியாவுக்காக உழைக்கும் கமிட்டியினிடம் தெரிவிக்கவும் அதுவே தருணமென்று நினைத்து, செய்ய வேண்டியவைகளைத் துரிதப்படுத்தினுர்கள்.

"சீமையில் உங்கள் யோசனைகளுக்கெல்லாம் இதுதான் சமயம். எனக்கு இப்பொழுது நம் எண்ணம் கைகூடும் என்று தோன்றுகிறது. நாமும் சரியாகத் தருணத்தை உபயோகித்தால்தான் நல்லது ஏற்படும். மார்லியின் பிரசங்கத்தில் அநுதாபமான மொழிகள் காண்கின்றனவே. பொறுப்பாளியான ஒருவர் இதைவிட அதிகம் சொல்லவே முடியாது. நாமும் அவரிடம் நமக்கு வேண்டியவைகளைத் தீர்மானமாக இன்னும் தெரிவிக்கவில்லை அல்லவா? வங்காளப் பிரிவினை விஷயத்தை அவரால் ஒன்றும் செய்யமுடியாதோ என்னவோ? ஏனென்ருல், முன்னுல் செய்ததை மாற்றி ஒன்றும் பண்ணுவதற்கில்லை......எதற்கும் நாம் அவரிடம் சில குறிப்பான விஷயங்களை வைத்துக்கொண்டுதான் நெருங்கவேண்டும். உங்களால் தயாரிக்கப்படும் மசோதாவையே எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்... இப்பொழுது நம் தென்னுப்பிரிகா நண்பர்கள், இதுதான் தக்க தருணமென்று அவர்கள் இயக்கத்தைப் பலப்படுத்தவேண்டும். டிரான்ஸ்வாலுக்கு ஓர் அரசியல் சட்டத்தைக் கொடுப்பதாக அதிகாரிகள் வாக்களித்துமிருக்கிருர்கள். சைனுவுக்குக் குடி ஏறிச் செல்லுபவர்களின் வசதிகளுக்கும் ஓர் ஏற்பாடு செய்யவேண்டும். நம்மவர்களான காந்தியும், மதனஜித்தும், மற்றுமுள்ளவர்களும் வேறு விஷயங்களை விட்டுவிட்டு இந்தியமக்கள் குடியேறியதற்கு வேண்டிய வசதிகளை அளிக்கும் சில திட்டங்களைச் செய்து தீர்த்துக் கொள்ள இதுவேதான் முக்கிய தருணம்" *

என்றெல்லாம் கோகலேக்கு எழுதினுர். உடனே கோகலேயும் அவரிடம் மிகுந்த மதிப்புடன் தம் எண்ணங்களைத்

* கடிதம், 14-2-1906.

தெரிவித்தார். விசாகப்பட்டணத்தில் நடந்த பெரிய கோர்ட்டு நடவடிக்கையில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஆஜர் ஆன காலம். கோகலேயின் கடிதமும் விசாகப்பட்டணம் வந்து சேர்ந்தது. அதில் கோகலே பின் வருமாறு குறிப்பிட்டார் :

''விசாகப்பட்டணத்திலிருந்து நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது......இங்கிலாந்துக்கு ஏப்பிரல் நாலாம் தேதி புறப் படுவதாக எனக்கு உத்தேசம். நான் தயாரித்த அரசியல் மசோதாவுக்குப் பல இடையூறுகள் ஏற்பட்டுவிட்டன. மேதா அதை ஒப்புக்கொள்ள மறுக்கின்ருர். 'நாம் ஒன்றையும் முடிவு செய்யக் கூடாது; நாமாக ஒன்றையும் கடிதாசியில் குறிக்கவும் கூடாது; ஏனென்ருல், அரசாங்கத்தார் மேன்மேலும் கொடுத்து உதவவேண்டிய அரசியல் சீர்திருத்தங்களை நாமாகவே அளவிடக் கூடாது' என்பதுதான் அவர் அபிப்பிராயம். நியாயத்தில் அவருக்கு இந்திய உலகில் இருக்கும் கௌரவத்தையும் அநுபவத் தையும் நோக்குங்கால் அவருக்கு மரியாதை செய்வது இன்றி யமையாததாகும் என்று தோன்றியதால், தயாரித்த அரசியல் மசோதாவை எடுத்துச் செல்லவேண்டாமென்றுதான் நினைக் கின்றேன். அங்கே சென்றபின் அவ்விதம் தயாரிக்கும்படி நேரிட் டால் பார்த்துக் கொள்வோம். பாபு சுரேந்திரநாத் பானர்ஜியும், இன்னும் சில நண்பர்களும் சீமையில்தான் தற்சமயம் இருக் கிருர்கள். என் முன் யோசனையில் விதித்த இந்தக் காரியத்தை மாற்றுவதில் எனக்குச் சற்று மனத்தளர்ச்சியேதான் உண்டா யிருக்கிறது. உங்களுக்குத்தான் தெரியுமே, என் சங்கோச புத்தியும், வலுச்சண்டைக்குப் போகாத மனப்பாங்கும்!

மேலும் சட்டசபையில் இந்த வருஷத்துச் செலவுத் திட்டங்கள் வேறு வருகின்றன. அவைகளுக்கும் தனிப்பட நான் சில குறிப்புக்கள் தயாரித்த பிறகே சட்ட சபையில் பிரசங்கம் செய்யவேண்டும்.''*

ஏப்பிரல் மாதமும் நெருங்கியது. கோகலேயும் இங்கிலாந்துக்குப் பிரயாணமானர். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தொழில் முறையில் பல அலுவல்கள் இருந்தன. கோகலேக்குக் கடிதம் எழுதுவதிலும், தமக்குத் தோன்றிய கருத்துக்களைப் பயமின்றியும் சங்கோசமின்றியும் தம் நண்பருக்கு அறிவிப்பதிலும் அவருக்கு மிகவும் வேகம் ஏற்பட்டது. ஆதலால் அவர்,

* கடிதம், 10-2-06.

"அதிகாரிகள் உதவி செய்வதாயிருப்பினும் நாம் அவர்களுக்குக் கொஞ்சமும் சௌகரியத்தைச் செய்யாமல் இருக்கிறோம். இப்பொழுது சீமையில் ஆட்சி செலுத்தும் அதிகார வர்க்கம் தங்கள் அரசாட்சியை முடிக்கும் தருணத்தில் நமக்கொன்றும் செய்ததாக ஏற்படாதுபோலிருக்கிறது. ஒவ்வொரு மாகாணமும் விண்ணப்பங்கள் மூலம் அதிகாரிகளுக்கு முறையிட்டாலாவது நன்மை ஏற்படும் என்று எனக்குப்படுகிறது. அவைகளில் சந்தேகம் இல்லாமல் நாம் வேண்டுவதைக் கேட்கலாம். மார்லியும் தம்மிடம் தெரிவிக்கப்படும் விஷயங்களின் பலம் கொண்டேதான் எதையாவது செய்யத் துணிவார். மேதாவிடமும் வாச்சா முதலியவர்களிடமும் அம்மாதிரி விண்ணப்பம் ஒன்றையாவது செய்வது உசிதமா என்று ஏன் நீங்கள் விசாரிக்கலாகாது?"*

இதில் உள்ள ஆத்திரமெல்லாம், கோகலே சீமைக்குச் சென்று வெறும் கையுடன் வரலாகாது என்னும் கருத்தினாலேயே ஏற்பட்டவை. ஆனால் இக்காலத்தில் எவ்வளவோ விதத்தில் அரசியல் துறையில் தைரியமும் அநுபவமும் கொண்ட தலைவர்களுக்கு, விண்ணப்ப முறையே ஒரு கீழ்த்தரமான உபாயமாகப் படுவதைப் பார்க்கிறோம். ஆனாலும் சூழ் நிலையை வைத்தேதான் அக்காலங்களில் பொதுஜன வேலை செய்தவர்களை மதிப்பிட முடியும். ஆனால் அன்று இருந்தவர்கள்—தைரியமாயும், சுயநலம் இல்லாமலும் அரசாங்கத்தாருடன் வாதாடியவர்கள்—இக்காலத்தில் இருந்திருந்தாலும் இந்நாட்களின் முறையைப் பின்பற்றுவார்கள் என்பதிலும் சந்தேகமில்லை. மிதவாதக் கொள்கை என்பது நியாயமான உணர்ச்சியில் இருக்கமுடியாது என்பதை, இக்காலத்து மிதவாதக் கட்சியில் உள்ள பெரியவர்கள் அறியாதது ஒன்றே நமக்குச் சில சமயங்களில் சிரமத்தை உண்டு பண்ணுகிறது.

கோகலேயின் பதிலை வாசிப்போம் :

"நீங்கள் சொல்வதுபோல் இந்தியாவில் பெரிய இயக்கம் இப்பொழுது இருக்கவேண்டியது அவசியம். காங்கிரஸ் தீர்மானங்களில் சிலவற்றையாவது வெற்றிபெறும் நோக்கத்துடன் அதிகாரிகளின் முன்னால் வைக்க நல்ல சமயம் இதுவேதான். சட்டசபையின் அமைப்பைப்பற்றி நம் வேண்டு

* கடிதம், 5-4-06.

கோளையாவது ஒருவிதத்தில் சீர்திருத்தம் பெறச் செய்ய இப்பொழுது இயலும். இதேமாதிரி நீதிஸ்தல அதிகாரத்திற்கும் மற்ற அரசியல் துறை அதிகாரத்திற்கும் பிரிவை ஏற்படுத்தும் விஷயமும், அடிப்படையான படிப்புத் திட்டத்தை எவ்விதம் கூடிய சீக்கிரம் கட்டுப்பாடான படிப்பு ஏற்பாடாக ஆகும்படிச் செய்யமுடியும் என்பதைப் பற்றியும் கவனிக்கக் காலம் வந்துவிட்டது. இங்கே பம்பாயில் நண்பர்களிடம் என்னுல் ஒன்றும் சொல்ல முடியாது என்பதை நீங்களே அறிவீர்கள். மேலும், சொன்னுலும் காரியத்தைச் செய்ய அவர்கள் முன்வர மாட்டார்கள். ஏன், உங்கள் மாகாணத்தில் இவ்வேலையை ஆரம்பம் செய்யக்கூடாது?.........நான் சீமையிலிருந்து திரும்பி வருவதற்கு மூன்று மாதங்கள் ஆகும். அதற்குள் இந்திய ஊழியர் சபையின் கட்டடம் முடிந்துவிடலாம். ஆகையால் வந்தவுடன் என் இருப்பிடமாக ஓர் இடத்தை அங்கேயே வைத்துக் கொள்ளப்போகிறேன்.''*

இதற்கிடையில் பாரிஸால் என்னும் கிழக்கு வங்காளப் பிரதேசத்தில் பாபு சுரேந்திரநாத் பானர்ஜி அரசாங்கத்துக்கு விரோதமாகப் பிரசங்கம் செய்யத் துணிந்ததாக, அவரைச் சட்ட ரீதியாய்க் கைது செய்தார்கள். அதைப் பற்றி அதிகாரிகளிடம் மிகுந்த கோபங்கொண்டு, மனத்தில் ஆழ்ந்த வருத்தத்துடன் கோகலேக்கு ஒரு கடிதம் எழுதினுர் என் தந்தை. கோகலேயும் சீமையிலிருந்து ஒரு கடிதம் எழுதினுர். அதில் அவைகளைப்பற்றி எழுதிவிட்டு, தம்மை மார்லி பிரபு எவ்வளவு கௌரவித்துப் பேசினுர் என்பதையும், அதிலிருந்து இந்திய இயக்கத்தில் அவருக்கு (மார்லிக்கு) உள்ள சிரத்தையையும் வெளியிட்டார்.

''உங்களிடம் என்னுல் ஒன்றிரண்டு தடவைகளில் எல்லாவற்றையும் பற்றி எடுத்துரைக்க முடியாவிட்டால் மூன்ருவது தடவை பேட்டிகாண அநுமதி கொடுக்க முடியுமா?''

என்று கோகலே மார்லியைக் கேட்டார். அதற்கு உயர்ந்த எண்ணங்கொண்ட அந்தச் சீமானும்,

''நான் உங்களுக்கு எவ்வளவு தடவைகள் பேட்டிகொடுத்து உதவுவேன் என்பதில்லை. இப்பொழுது முக்கிய விஷயம், நீங்கள் எனக்கு எவ்வளவு தடவை கொடுத்துதவப் போகிறீர்கள் என்பதேதான். பத்துத் தடவைகள் சந்தித்துப் பேசுவோமா?

* கடிதம், 9-4-1906.

உங்களுக்கு அவ்வளவு சிரமம் எடுத்துக்கொள்ள முடியுமா ?"* என்றுராம் கோகலேயினிடம். இவைகள் எல்லாம் வெள்ளைக்காரர்களிலும் முக்கியமான சிலர் இந்தியாவின் நன்மையைக் கருதியவர்கள் என்பதைக் குறிக்கின்றன. கோகலேயிடம் மார்லிப் பிரபுவுக்கு இருந்த உண்மையான கௌரவமும் நம்பிக்கையும் இதிலிருந்து வெளிப்படு கின்றன.

மறுபடியும் கோகலே செய்த காரியங்களைப்பற்றி ஒரு சந்தோஷ அறிக்கையைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அனுப் பினுர்.

"நீங்கள் செய்யும் பிரமாதமான காரியங்களைப் பத்திரிகை களில் வாசித்தறிந்து எனக்குச் சந்தோஷம் பொங்குகிறது. நாம் எதிர்பார்த்த காரியங்கள் சரியென்று காட்ட மார்லி ஏதாவது செய்வார் என்று நம்புகிறேன்."†

அதற்குப் பின்வருமாறு பதில் வந்தது:

"மார்லி பேசியதைக் குறித்து 'ராய்ட்டர்' தெரிவித்ததை முற்றும் வாசித்திருப்பீர்கள். நிச்சயமாய் மறுமுறை சட்ட சபை சம்பந்தமான சீர்திருத்தங்களைச் செய்வதாக அவர் வாக்களித்து விட்டார்."‡

அதன் பிறகு, இந்திய ஊழியர் சங்கத்தின் கட்ட டத்தைப்பற்றிய விவரங்களை அக்கடிதத்திலேயே குறித் திருந்தார்.

"எங்கள் காரியாலயத்தில் ஒரு புத்தகசாலை வைப்பதற்குப் புத்தகங்களைப் பொறுக்க வேண்டியிருந்தது. சீமையை விட்டு வருவதற்குள் அதையும் செய்து முடிக்கும்படி ஆகி விட்டது. சென்னையிலிருந்து வந்த ஓர் இளைஞர், இப்பொழுது கேம் பிரிட்ஜ் சர்வ கலாசாலையில் படித்துக்கொண்டு இருக்கிருர்—மிஸ்டர் ரெட்டி என்ற பெயர் பெற்றவர். அவரைப் புஸ்தகங் களைப் பொறுக்கும் வேலையில் உதவி செய்யும்படி கேட்டுக்கொண் டேன். நாம் முதலில் செய்யவேண்டிய காரியங்களை அவர் செய்து வருகிருர்."$

---

* கடிதம், 8-6-06.
† கடிதம், 21-6-06.
‡ கடிதம், 27-6-06.
$ கடிதம், 27-6-06.

இங்கே குறிக்கும் இளைஞர் ஸர் சி. ஆர். ரெட்டி காருவேதான். கோகலேயைத் தம் இளம்வயசிலேயே மயக்கிய வாக்கின் வசீகர சக்தியைப் பெற்றவர். கோகலேயின் அரிய காரியத்திஞல் மார்லியும் இந்திய அரசாங்கத் திட்டங்களுக்குச் சில ஏற்பாடுகளைச் செய்யப் போவதாக வாக்குறுதி கொடுத்தார்.

"நீங்கள் செய்துவரும் உயர்ந்த காரியத்தை அறிந்து மிகவும் பெருமை கொள்கிறேன் நான். என்ஞல் நன்றி செலுத்தத் தக்க வார்த்தைகளையும் தேட முடியவில்லை. மார்லியின் பேச்சு ஒரே பிரமாதமாயிருக்கிறது. எனக்கு அதில் ஏமாற்றமில்லை. செய்ய முடியாதென்று நினைத்த காரியத்தைச் செய்து காட்டிவிட்டீர்கள். திரும்பும்பொழுது கடல் யாத்திரையும் உடம்பிற்குக் குணம் அளிக்கும். இரண்டுமாதகாலம் முழுவதும் விச்ராந்தியாயிருக்க வேண்டும் என்று நான் உங்களை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். ஸ்ரீ நடேசனும் உங்கள் கடிதத்தை வாசித்துவிட்டு, உங்கள் ஒப்பு உயர்வற்ற காரியத்தை மெச்சி ஆனந்தக் கடலில் ஆழ்ந்துவிட்டார்."*

அவருக்கு மிகுந்த சந்தோஷமும் பெருமையும் கலந்து வந்ததால் உணர்ச்சியைக் கொட்டிக் கோகலேக்குத் தெரிவித்தார். எவ்வளவோ சிரமங்களினிடையேயும் பலவிதச் சிக்கல்களினிடையேயும் அகப்பட்டுக் கொண்டிருந்த கோகலேயினுடைய மனம் சற்றுச் சாந்தி அடைந்தது. இவ்வித நண்பர்களின் ஹிருதய பூர்வமான வார்த்தைகள் நிச்சயம் மனத்திற்கு ஆறுதல் அளித்ததில் ஆச்சரியமில்லை. அவர்கள் ஒருவருக்கு ஒருவர் அடிக்கடி கடிதங்களையும் தந்திகளையும் அனுப்புவதும், அரசியல் காரியங்களில் ஈடுபடுவதுமாக இருந்ததால், கோகலேயின் பெயர் எங்கள் வீட்டிலுள்ள எல்லோருக்கும் மிகவும் பழக்கமானதாகிவிட்டது. சீமையிலிருந்து ஸெப்டம்பர் மாதம் கோகலே பூனுவுக்கு வந்ததும் அவரைப் பாராட்டி ஒரு தந்தி நண்பரிடமிருந்து சென்றது. எத்தனையோ வேலைகளுக்கு நடுவில் கோகலேயும் மறவாமல்,

"உங்கள் அன்பு ததும்பும் செய்திக்கு உடனே நன்றி செலுத்தாததற்கு மிகவும் வருந்துகிறேன்"†

---

* கடிதம், 11-8-06.

† கடிதம், 28-9-06.

என்று எழுதினர் அம்மாதம், 28-ஆம்தேதி அவர் எழுதிய கடிதமொன்றில். மறுநாளும் அவர்,

"பம்பாயில் வந்ததுமே பல இடங்களிலிருந்து வந்த பத்திரிகைகளின் பழைய பிரதிகளை—மூன்று வாரங்களுக்குமேல் குவிந்தவைகளை—பார்வையிட்டு, வங்காளத்திலும் மற்ற இடங்களிலும் நடந்த செய்திகளை அறிந்தேன்"*

என்று எழுதினர். பொதுஜன ஊழிய மென்றால் இடைவிடாமல் பொறுப்புடனே யாவற்றையும் நடத்தும் வேலை என்று அறிவதற்கு இதைவிட வேறு அத்தாட்சி என்ன வேண்டும்?

அதிகாரிகளிடமிருந்து ஏதாவது நல்ல செய்தி வரலாம் என்று எதிர்பார்க்கும் சமயத்தில் தடைகள் வராமல் இருக்க வேண்டுமே என்ற கவலையும் கோகலேயைப் பிடுங்கித் தின்றது.

"நேரில் கல்கத்தாவுக்குப் போவது உசிதமோ என்றுதான் முதலில் தோன்றியது. அங்கிருக்கும் வேற்றுமைகளை ஒருவாறு சரிப்படுத்துவதுதான் முக்கியமாக முதலில் தோன்றியது. ஆனால் மறுபடியும் யோசனை செய்ததில், என்னிடம் உதவி ஊழியர்களில் ஒருவரான தேவதார் என்பவரை அனுப்பி, என்னால் எதையாவது செய்து பார்க்கத் தகுந்த விதம் அங்குள்ள விவரங்கள் இருக்கின்றனவா என்று அறிந்து வரச் செய்வதுதான் மேல் என்று பட்டது. அவ்விதமே அங்குள்ள சமாசாரங்களை 16-ஆம் தேதியிலும், 19—லும், 20—லும் அவர் அனுப்பிய தந்திகளின் உதவியால் நடந்தவாறே அறிந்தேன்...இரண்டு தடவைகள் பம்பாயில் திலகரைக் கண்டு பேசினேன். மேதாவிடமும் கலந்து அவ்விருவரையும் சந்திக்கச்செய்து, மற்றும் மேதாவின் அறையிலேயே ஒரு சிறிய ஆலோசனைக் கூட்டத்தையும் கூட்டிப் பார்த்தேன். திலகரையும் அதற்கு வரவழைத்தேன். அந்தத் தலைவர்கள் சந்திப்பிலிருந்து ஒன்றும் உபயோகமாக ஏற்படவில்லை...... சுரேந்திர நாதரின் மன்னிக்க முடியாத வாய்வெடிகளும், அவருடன் அமிருதபஜார் பத்திரிகையின் தீராச் சண்டையும், சுரேந்திரநாதருக்கும் விபினசந்திர பாலருக்கும் ஏற்பட்டிருக்கும் விரோதமும், பெரிய தலைவராகத் தாம் ஆக வேண்டுமென்று கூத்தாடும் பேராசை பிடித்த விபின சந்திரருடைய மிதமிஞ்சிய காரியமும், இந்நாட்டிலுள்ள வெள்ளைக்காரர்கள் இந்தத் தேச மக்களிடம் கொண்டிருக்கும் பகையும்,

* கடிதம், 29-9-06.

முகம்மதியர்கள் ஹிந்துக்களை வெறுக்கவேண்டிய விதம் செய்யும் அரசாங்கத்தாருடைய சூழ்ச்சியும், கடைசியாக ஆசார சீலர்களான சில ஹிந்துக்களை வேண்டுமென்று வரவழைத்து முகம்மதியர்களுடன்கூடச் சம பந்தி போஜனம் செய்யும்படி அடித்ததும்—இவையெல்லாம் சேர்ந்தே அடக்க முடியாததொரு பெரிய கிளர்ச்சியைக் கிளப்பிவிட்டதென்று தெரிகிறது''*

என்று கோகலே எழுதினர். அவ்வருஷம் காங்கிரஸுக்காகச் செய்யவேண்டிய ஏற்பாடு ஒன்றும் நடந்தேறவில்லை. இன்னும் மூன்று மாதங்கள்கூட அவகாசம் கிடையாது.

வேண்டியவர்களும் வேண்டாதவர்களும் அடங்கியதாகப் பெரிய வரவேற்புக் கமிட்டி ஒன்றை உண்டாக்கி விட்டார்கள், காங்கிரஸ் காரிய நிர்வாகிகள். விபின சந்திரபாலர், தாதாபாய் நௌரோஜி அவசியம் காங்கிரஸ் தலைமையை ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும், அவ்விதம் அவர் செய்யாவிட்டால் திலகரைத் தாங்கள் தேர்ந்தெடுப்பதாகவும் ஓர் எச்சரிக்கை விடுத்திருந்தார். மேலும் அவரும் அவருடைய கட்சியில் சேர்ந்தவர்களும் மூன்று முக்கியமான தீர்மானங்களைக் கொண்டுவர வேண்டுமென்று யோசித்திருந்தார்கள். அதாவது (1) இந்திய தேசத்தை ஆளுவதற்கு முழு உரிமை இந்தியர்களுக்கே உரியது ; (2) காங்கிரஸில் சேர்ந்தவர்கள் எல்லாம் அவரவர்களின் புதல்வர்களை அரசாங்க அதிகாரிகளால் நடத்தப்படும் பள்ளிக்கூடங்களிலும் கலாசாலைகளிலும் படிக்கவே விடக்கூடாது என்று வற்புறுத்தல் ; (3) சுதேசி சாமான்களை மட்டும் உபயோகித்தல் போதாது ; இங்கிலாந்திலிருந்து வரும் சாமான்கள் அவ்வளவையும், இங்கிலாந்து சம்பந்தமான யாவற்றையும் இந்தியர்கள் புறக்கணித்தல். பல ஆண்டுகள் சென்ற பிறகு காந்தி அடிகள் இவையெல்லாவற்றையுமே சுதந்தர இயக்கத்தின் முக்கியக் கொள்கைகளாக இந்திய மக்களுக்குக் கற்பித்துவிட்டார்.

மக்கள் மனம் அப்பொழுது பொதுஜனக் காரியங்களிலும் அரசியல் வாதங்களிலும் நல்ல தேர்ச்சி பெருத காலம். தலைவர்கள் கூறும் புத்திமதிகள் முழுவதையும்

---

* கடிதம், 29-9-06.

மனத்தில் சரியாக வாங்கிக்கொண்டு அவைகளை ஒழுங்காக அநுசரிக்கும் மனப்பாங்கே அவர்களிடம் உருவாகாத சமயம். அதனால் வெறியைக் கிளப்பும் வார்த்தைகளில், சிறந்த தேச ஊழியர்களான கோகலே முதலியவர்களுக்குச் சிறிதும் பற்றுதல் இல்லை. அதிகம் கவலைதான் அடைந்தார்கள். ஆவேச மொழிகளைக் கொட்டும் விபின சந்திரர் போன்றவர்களின் அர்த்தமற்ற செயல்களைக் கண்டும் திலகரை இளைஞர்கள் தங்கள் தலைவராக நினைத்தார்கள். திலகர் பெரிய புத்திமான். வெறும் பேச்சைப் பிரமாதமாக நினைப்பவரன்று. எனினும் அவர் வங்காளத்து இளைஞர்கள் செய்வது தவறு என்று எடுத்துக் காட்டவில்லை. காங்கிரஸ் அவ்வருஷம் கூடும்பொழுது அமளியாக ஆவதற்குவேண்டிய அறிகுறிகள் நிறையக் காணப்பட்டன. அவ்வருஷம் ஸெப்டம்பர் மாதம் சென்னையிலிருந்து கோகலேக்கு 26-ஆம் தேதியன்று ஒரு கடிதம் சென்றது. அதில் பல செய்திகளைப்பற்றிச் சொல்லிவிட்டு,

"நம் இந்திய நாட்டு வெள்ளைக்காரர்கள் வேண்டுமென்று முகம்மதியர்களுடன் கொஞ்சுகிறார்கள். ஆனால் கிணறு வெட்டப் பூதம் கிளம்பியதாகத்தான் ஆகும்"*

என்றார் நண்பர். முப்பத்தைந்து வருஷங்களாகியும், பழையபடியே அதிகாரிகள், முகம்மதியர்களுக்கும் ஹிந்துக்களுக்கும் ஒற்றுமை ஏற்படாத விதம் எதையாவது செய்துகொண் டிருப்பதை இந்நாட்களில் அரசியல் இயக்கத்திலுள்ள அநுபவசாலிகள் நன்கு அறியலாம். கோகலேயிடமிருந்து பதிலுக்குக் கடிதம் வருவதற்கு முன்னமேயே என் தந்தை அவருக்கு எழுதிவிட்டார்.

"காங்கிரஸ் சம்பந்தமாக அசௌகரியங்கள் பல ஏற்படும் போல் தோன்றுகிறது. வங்காளத்து இளைஞர்கள் 'நவ இந்தியர்' என்று தாங்களாகவே பெயர் வைத்துக்கொண்டு ஆரவாரம் செய்கிறார்கள். திலகரும், லஜபுத்ரரும், கபர்தேயும் இந்தப் புத்தியில்லாத செயலுக்குப் பலம் கொடுக்கிறார்கள். மேதாவும், வாச்சாவும் தனிமையில் வாயை மூடிக்கொண்டு இருக்கிறார்கள்... பாபு சுரேந்திரநாதரோ கூட்டங்களை அடக்காமல், அவர்கள்

* கடிதம், 26-9-06.

பின் செல்லுகிறுர்...எனக்கு ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் சீமையிலிருந்து கடிதமொன்று எழுதினுர். என்னை உங்கள் ஸ்தானத்தில் இருந்து கொண்டு சீமைக்காரியத்தை நிர்வகிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டிருந்தார். உங்கள் காரியத்தை வேெருருவரும் இவ்வளவு நன்ருகச் செய்யமுடியாது என்று அவர் அறியார் போலும். மேலும், சீமைக்குப் போகும் காரியத்தில் எனக்குச் சொந்தக்காரர்களிடமிருந்து ஏற்படக்கூடிய தடைகள் வேறு உண்டு என்று அவர் தெரிந்துகொள்ளவில்லை.''*

கடிதங்கள் ஒவ்வொன்றிலும் கோகலே ஒரு பகுதியில் தாம் விதையிட்ட இந்திய ஊழியர் சங்கத்தைப் பற்றி எதையாவது குறிக்காமல் விடுவதில்லை. அந்தச் சபையேதான் அவர் இறக்குமளவும் அவருடைய மூச்சுக் காற்ருகப் பரிணமித்தது. என் தந்தையாரும் அதில் மிக்க கவனத்தைச் செலுத்தவேண்டும் என்பது அவருடைய எண்ணம். தமக்குப் பிறகு கிருஷ்ணஸ்வாமி ஐயரையே அதற்குத் தலைமை வகிக்கும்படி ஏற்பாடு செய்யக் கோகலே உத்தேசித்தார் என்று கூடச் சில கடிதங்களிலிருந்து தெரிகிறது.

இந்திய ஊழியர் சங்கம் என்ருல் என்ன என்பதும், அது எவ்விதக் கொள்கைகளை வைத்துக்கொண்டு ஆரம்பமாயிற்று என்பதும் பலருக்குத் தெரியா. கோகலே என் தந்தைக்குத் தாமே தம் சங்கத்தைப்பற்றிக் கடிதத்தின் மூலம் தெரிவித்தார்:

"அதன் முக்கிய நோக்கம் உலகெங்கும் சுதந்தரமான ஜன நாயகம் பரவி யாவரும் சுகமாக வாழவேண்டும் என்பதே. உலகில் எங்கும் காணுத தேச உணர்ச்சியையும், மனித சமூகத்தின்பால் ஒழுகும் சிரத்தையையும் அச்சபை மேற்கொள்ளவேண்டும். அதன் புத்தக சாலையில் உலக சரித்திரங்களை எல்லாம் முறையே தொகுத்த அரிய நூல்களும், முகம்மதியர் பாரசிகர் இவர்களின் தனி வளர்ச்சியின் பெருமையை எடுத்துக்காட்டும் பல புத்தகங்களும் வைக்கப்படும். மேலும் இந்திய நாட்டைப் பார்க்கவந்த பழைய யாத்திரிகர்கள் முதற்கொண்டு இன்றுவரையும் உள்ளவர்கள் அனைவரும் எழுதிய அரிய விஷயங்களைப் போஷிக்கும் நூல்களையும் அதில் காணலாம். சர்க்கார் கொடுக்கும் பொருளாதார விவரங்களும், மற்ற அரசாட்சி சம்பந்தமான குறிப்பு

* கடிதம், 29-8-06.

முதலியவைகள் அடங்கிய அரசாங்கப் பிரசுரங்களும், வழக்கிலுள்ள அரசியல் காரியங்களுக்குச் சகாயமாக அறிவூட்டும் நூல்களும் அந்தப் புத்தகசாலையின் அலமாரிகளை அலங்கரிக்கும் என்பதிலும் சந்தேகமில்லை. அவை மட்டுமா? நம்நாட்டுத் தலைவர்கள் செய்திருக்கும் ஒப்பற்ற சொற்பொழிவுகளின் தொகுதிகளையும், தேசத்தை விருத்தி செய்பவர்களின் வார்த்தைகள் பெரிய கூட்டங்களை எவ்விதம் தம் வசப்படுத்தின என்ற வரலாறுகளை விவரிக்கும் அச்சுப் பதிப்புக்களையும், அரசியல் ஞானம் பூரணமாய் ஏற்பட வழிகாட்டுவனவாகிய கட்டுரைகளையும் அவ்விடத்தில் நிறையச் சேர்க்கப் போகிறேன்...... எல்லா எண்ணங்களும் கைகூடுவதற்கு இன்னும் ஒரு வருஷ காலம் செல்லும். ஜஹாங்கீர் பெடிட் என்னும் கனவான், என்னுடன் கப்பல் யாத்திரை செய்தபொழுது இக்காரியத்திற்காக ரூபாய் 5000-0-0 கொடுத்துதவினார்......"*

இது ஒரு பெரிய கடிதம். இதை வாசிப்பதற்கு வேண்டிய சிரத்தையும் விஷய அறிவும் நமக்கு வேண்டும். அக்காலத்து அரசியல் இயக்கத்தின் அநேக சமாசாரங்களையும், மற்றப் பொதுஜனக் காரியங்களையும்பற்றி நமக்கு இது தெரிவிக்கின்றது. எல்லாவற்றையும் விட முக்கியமாக இந்திய ஊழியர் சங்கத்தைப்பற்றியும், அதில் சேருபவர்கள் அறிவாளிகளாக ஆவதன்பொருட்டு அங்கே நிர்மாணம் செய்த புத்தக சாலையைப் பலவிதங்களில் மேன்மைப்படுத்தி, அதற்கு வேண்டிய சிரமத்தையும் தாமே மேற்கொண்டார் அப்பெரியார் என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. அவரிடம் அசாதாரணமான காரியப் பொறுப்பும், உண்மை அறிவை நாடும் மனப்பாங்கும் இருந்தன என்பதை அறிவிக்க இந்த விவரங்களே போதுமானவை.

---

* கடிதம், 29-9-06.

## அத்தியாயம் 12

### தீவிரவாதமும் காங்கிரஸில் பிரிவும்

“களக்கமுறும் மார்லிநடம் கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்துக் காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ வெம்பிவிழுந் திடுமோ” —பார்தியார்

I

**1906**-ஆம் வருஷம் ஏப்பிரல் மாதம் 14-ஆம் தேதி, வங்காளத்தைச் சார்ந்த பாரிஸால் பிரதேசத்தில் பெரியதொரு மாகாண மகாநாட்டைக் கூட்டி வங்காளப் பிரிவினையைப்பற்றிக் கிளர்ச்சி செய்தார்கள் இளைஞர்கள். கோகலே அப்பொழுது சீமையில் இருந்தார். மற்ற இந்தியத் தலைவர்கள் மிகவும் மனவமைதி இழந்து, இன்னது செய்வது என்று அறியாமல் தவித்துக்கொண்டிருந்தார்கள். பாபு சுரேந்திரநாதரைக் கைதுசெய்ததைக் கண்டித்துப் பல மாகாணங்களில் கூட்டங்கள் போட்டார்கள். சென்னையிலும் ஒரு பெரிய கூட்டம் நடைபெற்றது. பட்டணத்து வக்கீல்களில் ஒருவரும், அதிகமாக அரசியல் வியவகாரங்களில் சேராதவருமான ராமசந்திரராவ் ராவ்சாகிப் என்பவரை அப்பெரிய கூட்டத்தின் தலைமையை வகிக்க என் தந்தை முதலியவர்கள் கேட்டுக்கொண்டார்கள். பச்சையப்பன் கல்லூரியின் எதிரே அக்காலங்களில் பெருங் கூட்டங்கள் நடைபெறுவது வழக்கம். அன்று கூடியவர்கள் பதினாயிரம் பேர்கள் இருக்கலாம். பாரிஸால் அதிகாரிகளின் நியாயமற்ற செயல்களைக் கண்டித்தும், ஆங்கில ஆட்சியின் கீழ் ஜனநாயகத்தின் உரிமைகளைக் கொஞ்சமும் பாதுகாக்காமல் செய்த இந்த இழிவான காரியத்தை மிகவும் தூற்றியும் பிரசங்கங்கள் நடந்தன. தலைவர், “மிகவும் தெளிவாகவும் விஷயத்தை ஒட்டியும் பேசி, வெள்ளைக்காரர்களின் பத்திரிகைகள் பாரிஸால் அதிகாரிகளின் செயல்களை ஆமோதிப்பது கொஞ்சமும் நியாயமற்றது” என்று எடுத்துக் காட்டினார்.

முக்கியமாக வங்காள தேசத்தைப் பிரிப்பதற்காக நடந்த காரியங்களைக் கவனித்து அதற்குக் காரணமாயிருந்தவர்களைச் சிக்ஷிக்கவேண்டும் என்று மார்லி பிரபுவை அந்தக் கூட்டம் வேண்டிக்கொண்டது.

ராமசந்திரராவ் ராவ்சாகிப்பைத் தலைமை வகிக்கக் கேட்டுக்கொண்டவர்களில் முக்கியமானவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். சாதாரணமாக அரசியல் காரியங்களில் சற்றும் கலந்துகொள்ளாதவர், பாரிஸால் அதிகாரிகளின் நடவடிக்கையைக் கண்டு மிகவும் சினங்கொண்டதை அறிந்து என் தந்தை, "ஏன், நீங்கள் தலைமை வகிப்பதும் ஒரு நன்மைதான். ஏனெனில் சதா அரசியலில் வாதாடுகிறவர்களைப்போல் உங்களைப் பொதுஜனங்களும் அரசாங்கத்தினரும் நினைக்கமாட்டார்கள். ஆகையால் உங்களுடைய மொழிகளின் வேகம் நியாயத்தை உணரச் செய்யும்" என்றார். ராவ்சாகிப்பும் தம்முடைய காரியாலயத்தில் அந்நாட்களில் உடன் உழைத்த ஒரு சிறுவரிடம் பின்வருமாறு சொன்னாராம்:

"ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் எல்லோரையும்போன்றவரல்ல. அவருடைய மனம் உண்மையைத்தான் சொல்லும். என்னால் அவர் வேண்டுகோளை மறுப்பது முடியாது."

கிருஷ்ணஸ்வாமி ஐயர் பேசியதைக் கவனிப்போம்: மார்லி பிரபுவின் அநுதாபமொழிகளை அவரால் மறக்க முடியவில்லை. மார்லி பார்லிமெண்டில் பேசி வெகு நாட்கள் ஆகவில்லை; அதனால்தான் அவைகளைப்பற்றிக் கூட்டத்திற்கு ஞாபகப்படுத்த அவருக்குத் தோன்றியது. இந்திய அரசாங்கத்தாரின் பொறுப்பற்ற காரியங்களை அவர் நிந்தித்தாலும், மார்லியிடமிருந்து அவசியம் இவைகளுக்கெல்லாம் ஒருவித முடிவு ஏற்படும் என்பதே அவர் எண்ணம்.

அன்று கூடிய ஜனங்களின் மனநிலையை அறிந்தவர்கள், அதிகாரிகளிடமிருந்து நன்மை எதுவும் நம் நாட்டுக்கு இனி வரும் என்பது வீண் கனவு என்றே எண்ணினார்கள். உடனே கோகலேக்கு ஒரு கடிதம் சீமைத் தபாலில் சென்றது. ஏன் அவரிடமிருந்து பாரிஸால் சம்பவம் சம்பந்தமாக ஓர் அபிப்பிராயமும்

வெளிவரவில்லை என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் கவலைப் பட்டார். அவ்வருஷம் ஜூன் மாதம் எட்டாம் தேதி எழுதிய சீமைத் தபாலில் பின்வருமாறு கோகலே பதில் எழுதினார்:

"உங்கள் கடிதத்திற்குப் பதில் இதற்குமுன் அனுப்ப முடிய வில்லை என்பதைக் குறித்து வருந்துகிறேன். மார்ஸேல்ஸ் செல்லும் வரையிலும் பாரிஸால் சமாசாரமொன்றும் எனக்கு எட்டவில்லை. அங்கு 'இந்தியா' பத்திரிகைப் பிரதியைக் கையில் வாங்கிய பின்பே பாபு சுரேந்திரநாதரைக் கைதுசெய்ததை அறிந்தேன். உடனே கப்பலில் என்னுடன் பிரயாணம் செய்த ஸர் ஆண்டிரு பிரேஸருக்குப் பத்திரிகையிலுள்ள தந்தி விவரத்தைக் காட்டினேன். அவரும் என்னுடன் சேர்ந்து கவலைப் பட்டுவிட்டார். இங்கு வந்தது முதற்கொண்டு இந்த ஊரில் எல்லோரையும் இதைப்பற்றிக் கவனிக்கும்படித் தூண்டிக் கொண்டிருக்கிறேன். மேலும் முக்கியமாக மார்லியிடமும், எல்லிஸிடமும் இந்த விஷயத்தைப்பற்றித் தாராளமாய்ப் பேசியிருக்கிறேன்."*

பேசின விஷயம் முழுவதையும் எழுதுவதற்கு அச் சந்தர்ப்பத்தில் சௌகரியம் இல்லாமையாலேயே கோகலே யின் கடிதம், சமாசாரங்களை விவரமாக வெளியிடாமல் மார்லியினிடம் நம்பிக்கையையும், அவருடன் பேசினதில் சந்தோஷத்தையும் மட்டும் தெரிவித்தது.

அடுத்த கடிதத்தில் அவர்,

"மார்லி நிச்சயமாய்ச் சட்டசபைகளைச் சீர்திருத்தம் செய்யப் போவதாக வாக்குக் கொடுத்திருக்கிறார்...உப்பு வரியையும் நிறுத்தப் போகிறார். ராணுவச் செலவும் இனிக் கட்டிலடங்க வேண்டியதுதான்; என்னவாயினும் இனிக் குறைவுபடுவது நிச்சயம். ஆரம்பக் கல்வி மானியம் அதிகமாகும்போலிருக்கிறது. அரசாங்கக் காரிய இலாகாவிற்கும் நீதி இலாகாவிற்கும் பிரிவு ஏற்படலாம்...மார்லி இருக்குமளவும் நம் நாட்டுக்கு ஏதாகிலும் க்ஷேமம் ஏற்படுமென்றுதான் நினைக்க இடமிருக்கிறது"†

என்று தைரியமாக எழுதிவிட்டார்.

இந்தியர்களின் சுய ஆட்சி ஆசைகளைக் குறித்து மார்லி அவ்வளவு அநுதாபத்துடன் பேசவில்லை. வருங்காலத்தில்

---

* கடிதம், 8-6-06.

† கடிதம், 1-10-06.

சுய ஆட்சி உரிமையுடன் விளங்கும் மற்ற ஆங்கில சாம்ராஜ்யத்திலுள்ள நாடுகளுக்கு ஒப்ப இந்திய நாடும் ஆகவேண்டும் என்பதை அவர் அங்கீகரிக்கவில்லை. கோகலே அவர் அவ்விதம் சொல்லாததை அதிகம் பொருட் படுத்தவும் இல்லை. அவைகளைப் பிற்பாடு பார்த்துக்கொள் வோம் என்பது அவருடைய எண்ணம். இந்தியாவில் தம் நண்பர்கள், மார்லியின் பிரசங்கத்தில் இந்திய சுய ஆட்சியை அங்கீகரிக்காத பாகத்தை மட்டும் வாசித்து மனம் இடிந்துவிடப்போகிறார்களே என்னும் கவலையினால் நண்பருக்கு,

"நம் சுயாட்சியைக் குறித்துச் சொன்ன மார்லியின் மொழிகளைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம்"

என்று கேட்டுக்கொண்டார். கிருஷ்ணஸ்வாமி ஐயர்தாம் எவ்விதத்தில் உடனுக்குடனே பிரகிருதத்திற்கு ஒட்டிய செயலில் நம்மை ஈடுபடுத்திக் கொள்வது என்ற கருத்தை வளர்த்தவராயிற்றே! ஆகையால் அவர், 'எனக்கு இதில் ஒருவித ஏமாற்றமும் இல்லை' என்று அவருடைய சந்தேகத்தைத் தீர்த்துவிட்டார்.

இவ்விதம் கோகலேயும் அவருடைய நண்பர்களும் மார்லியிடமிருந்து நன்மை பயக்கும் காரியங்களை எதிர் பார்த்துக்கொண்டிருக்கையில், திலகர் கோஷ்டி வலுத்துக் கொண்டே வந்தது. போதாததற்கு பாபு விபின சந்திர பாலர் காங்கிரஸில் அட்டகாஸம் செய்ய ஆரம்பித் திருந்தார். அவருடைய பிரசங்கங்களில் ஓரே தீவிரவாதம் மண்டிக்கிடந்தது. அந்த வருஷம் கல்கத்தாவில் நடைபெற இருந்த காங்கிரஸுக்குத் தடைகள் எவ்வளவு செய்ய லாமோ அவ்வளவையும் தாராளமாகப் பொறுப்பில்லாமல் அவர் செய்துவந்தார். எப்படியாவது காங்கிரஸ் கூட்டத்தில் தங்கள் ஆட்களை வைத்துக்கொண்டு முந்திய வருஷத்துத் திட்டங்களை முழுவதும் தூக்கி எறிந்து, புதிய தீர்மானங்களைக் கொண்டுவருவதே சரி என்பது அவருடைய திட நம்பிக்கை. அதற்காகப் பிரசாரம் செய்யவும் ஆரம்பித்திருந்தார்.

காங்கிரஸில் அவ்வருஷம் ஏதாவது அமர்க்களம் நடைபெறும் என்றுதான் எதிர்பார்த்தார்கள், கோகலே

போன்ற மிதவாத வீரர்கள். என்ன செய்வது! இந்தியா மந்திரி அப்பொழுதுதான் சீர்திருத்தங்கள் சில வற்றைப் புகுத்திப் பார்க்க முயன்றுகொண்டிருந்தார். அதற்குள் இம்மாதிரிக் கலகங்கள் ஏற்பட்டால் தாம் எதிர்பார்க்கும் நன்மைகள் வீணுகுமோ என்பது கோகலேயின் கவலை. கிருஷ்ணஸ்வாமி ஐயரும்,

"வங்காளத்தில் சந்தர்ப்பம் மோசமாகி வருகிறதே! வரவரச் சண்டைகள் மனத்திற்கு அருவருப்பையே உண்டாக்குகின்றன"

என்று அவருக்கு எழுதினர்.

காங்கிரஸில் அவ்வருஷம் நடத்தவேண்டிய காரியங்கள் பல இருந்தன. முதலில் தாதாபாய் நௌரோஜியை அக்கிராஸனராகத் தேர்ந்தெடுக்கவேண்டும். எங்கே திலகரை அதற்கு நியமித்து, வங்காளத்துப் புதிய கக்ஷி தடை செய்துவிடுமோ என்ற பயம் உள்ளூற மிதவாதக் கக்ஷியில் பரவியது.

காங்கிரஸ் கூட்டத்தில் அமைதியும் காரிய நிர்வாகமும் சரிவர ஏற்படவேண்டுமே என்ற கவலை கோகலேயைப் பாதிக்கத் தொடங்கியது. அவர் ஒருவருக்கே இந்தக் கிளர்ச்சியில் நல்ல காரியத்திற்கு நஷ்டமேற்படலாமென்று பட்டது. தம் அபிப்பிராயத்தை நண்பருக்குத் தெரிவித்துச் சென்னையிலிருந்து அதிகமான அங்கத்தினர்களைக் கல்கத்தா காங்கிரஸுக்கு அழைத்துப் போகும்படி அடிக்கடி அவர் எழுதிக்கொண்டிருந்தார்.

"வங்காளம் எதிலும் தலைவிரித்தாடும் குணம் பெற்றது. சென்னை வாசிகளின் தெளிவான புத்தியிலும், ஆவேசங்களை அறவே தள்ளும் மனப்பாங்கிலுமே எங்களுக்கு நம்பிக்கை"*

என்று சொல்ல ஆரம்பித்துவிட்டார் கோகலே.

காங்கிரஸ் அவ்வருஷம் கல்கத்தாவில் கூடியது. தாதாபாய் நௌரோஜியும் சிறந்த விதத்தில் பலமேற்கோள்களுடன் உபந்யாசம் செய்து முடித்தார். சிறு வயசில் அவர் படித்ததெல்லாம் வயசு ஆக ஆக, அவருக்கு

---

* கடிதம், 30-10-06.

ஞாபகத்திற்கு வரத் தொடங்கின. வாசித்த புத்தகங்களில் உள்ள கருத்துக்களை, பிரசங்கத்தை எப்படியாவது பலப்படுத்த, ஞாபகமாகக் கொண்டுவந்து சேர்த்து விடுவார். மூன்றும் நாள் சபையில் சுதேசி இயக்கத்தைப் பற்றியும், பஹிஷ்கார முறையைக் கையாளுவதைப் பற்றியும் பிரமாதமான சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. விபினசந்திரர் கீழே உட்காராமல் பஹிஷ்காரத் தீர்மானத்தின்மேல் பலமான குரலில் வெறிபிடித்தவர்போல் பேசத் தொடங்கிவிட்டார். அக்கிராஸனருக்கு உட்கார்ந்த இடத்தில் இருப்புக் கொள்ளவில்லை. வயசோ அவருக்கு அதிகம். அவர் மனம் விபினசந்திரபாலருடைய வழியில் செல்லாததுதான் அவருடைய சிரமத்திற்கு முக்கியமான காரணம். ஒருவாறு விபினசந்திரரை சமாதானப்படுத்தும் வகையில் வங்காளம் மட்டில் பஹிஷ்கார முறையை நாடுவது என்றும், மற்ற மாகாணங்களில் அது தற்காலம் அமலுக்கு வரவேண்டியதில்லை என்றும் தீர்மானம் நிறைவேறியது. 'அப்பாடா' என்று எல்லோரும் காங்கிரஸ் பந்தலை விட்டு வெளியேறினர்கள்.

ஆனால் உள்ளே கொதித்த வேகம் வெளிவராமல் இருக்குமா? மறுவருஷமே சூரத்தில் போர்க்களத்தின் கோலம்போல் காங்கிரஸ் மேடையில் ஜோடுகளும் குல்லாய்களும் விழுந்தன. நெருப்பைத் தணிக்கப் பாடுபட்டவர்களுக்கு ஒரே ஏமாற்றமும் மனக் கசப்பும் ஏற்பட்டன. 1907-ஆம் வருஷம் காங்கிரஸை எங்கே வைத்து நடத்துவது என்பதே எல்லோருக்கும் கவலையாகிவிட்டது. நாகபுரியில் நடத்துவது என்று கல்கத்தா காங்கிரஸ் தீர்மானித்தது. ஆனால் அங்கே நடத்துவது உசிதமாக இல்லை. திலகர் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் அங்கே நிறைய இருந்ததால், சிரமப்படுத்தி விடுவார்கள் என்ற பயம் காங்கிரஸின் க்ஷேமத்தை எண்ணியவர்களிடம் ஏற்பட்டது.

"திலகர், காங்கிரஸ் தலைமைப் பதவியை மனத்தில் நாடி வருவதால் நிச்சயம் அதை அடைய ஒரு கை பார்ப்பார்"* என்று சில மிதவாதிகள் பயந்தார்கள். அவருடைய

* மதோல்கர் கடிதம், 16-1-07.

'கேஸரி' என்னும் பத்திரிகையில் விஷயங்களை அவர் தமக்கு இஷ்டமானபடி எழுதிவந்தார். அவரைத் தடுப்பவர் இல்லை; தடுக்கவும் முடியாது. நாகபுரியில் காங்கிரஸ் கூடுவதாயிருந்தால் அங்கேயுள்ள இரண்டு கட்சிகளைச் சமாதானப் படுத்தவேண்டும். பழையதான கட்சி ஒன்று உண்டு. புதியதில் இளைஞர்களில் பலர் சேர்ந்து கலகக் காரர்களாக இருந்தார்கள்.

"இரண்டு கட்சிகளின் சமாதான உடன்படிக்கை சீக்கிரத்தில் நடைபெறுதென்று தெரிந்தால், நாகபுரியில் வேண்டாம், சென்னையிலாவது காங்கிரஸை வைக்கலாம்"*

என்று கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு வாச்சா தெரிவித்திருந் தார். சென்னையில் மஹாஜன சபையில் சீக்கிரம் தீர்மானம்செய்து அதற்கு வேண்டிய தந்தி ஒன்றை அடிக்க வேண்டுமென்று கேட்டிருந்தார்கள். ராவ்பகதூர் ஆர். என். மதோல்கர் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு,

"காங்கிரஸை எப்படியாவது சென்னையில் நடத்துங்கள். நாகபுரி மறுபடியும் தொந்தரவு கொடுக்கிறது. சென்னையில் காங்கிரஸ் நடத்துவது பேருபகாரமாகும்"†

என்று தந்தி கொடுத்தார்.

"சரியான விவரம் என்னவெனில் நாகபுரியில், இவ்வருஷம் காங்கிரஸ் நடப்பது அசாத்தியம் என்பதுதான்"‡

என்று வாச்சா ஏற்கனவே ஞாபகமாய்த் தந்தி கொடுத் திருந்தார். ஸர். பிரோஸிஷா மேதாவும் பின் வருமாறு தந்தியை அனுப்பி யிருந்தார்:

"நாகபுரியில் மறுபடியும் சச்சரவு. சென்னையே இத்தரு ணத்தில் முன் வருவது பெருத்த உபகாரமாகும்."$

என் தந்தையின் எண்ணங்களை எல்லோரும் அறிவார்கள். ஏற்கனவே அவர் கோடைக்கானல் மலைக்கு விடுமுறைக்காகச் சென்றவர், தீவிரவாதிகளைப் பாதிரிமார் களின் கூட்டத்தில் பயமில்லாமல் கண்டித்திருந்தார். தமக்குப் பிடிக்காதவைகளைத்தான் அவர் பயமின்றிக்

* தந்தி, 27-10-07.
† தந்தி, 26-10-07.
‡ தந்தி, 21-10-07.
$ தந்தி, 27-10-07.

கண்டிப்பவராயிற்றே! ஏன் அவரிடமே எல்லோரும் சரணுகதி அடையவேண்டும்? ஜனங்களிடையே தமக்குச் செல்வாக்கு எங்கே குறைந்து விடுமோ என்று பயப்படும் மனப்பாங்கை ஒழித்து, தமக்குச் சரி என்று பட்டதைக் கடைசி வரையில் பிறருக்கு எடுத்துச்சொல்லி, காரியத்தையும் சாதிக்கும் தீரராக அவர் ஒருவர் மட்டும் மிதவாதக்கட்சியில் அக்காலத்தில் இருந்தார் போலும்.

அச்சமயம் லாலா லஜபதிராயைத் தீவாந்தர சிக்ஷை செய்து அனுப்பியதைக் குறித்து அவ்வருஷம் மே மாதம் கோடைக்கானலிலிருந்து ஒரு தந்தியை அவர் கொடுத்தார். பத்திரிகைகளில் அது வெளியாகி யிருந்தது.

"தீவிரவாதிகளின் பேச்சையும் நடவடிக்கைகளையும் நான் ஒப்புக்கொள்ளாவிடினும், லாலாலஜபதிராயைத் தீவாந்தரத்துக்கு அனுப்பும் அரசாங்கத்தாரின் செயல், முழுப் பிசகு என்பது என் திட நம்பிக்கை. இக்காரியம் மிதவாதிகளையும் அரசாங்கம் விரோதித்துக்கொள்ளும் வகையில் இருக்கிறது."*

சென்னை மாகாணக் கூட்டத்திற்கு, நியாபதி சுப்பராவ்காருவை விசாகபட்டணத்தில் அவ்வருஷம் தலைவராகத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். அக்கிராஸனருக்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு பகிரங்கக் கடிதம் கோடைக்கானலிலிருந்து எழுதியிருந்தார். பத்திரிகைகளிலும் பொதுக்கூட்டத்திலும் அதைப் பலர் வாசித்தார்கள். ஒளிவு மறைவு இல்லாமல் அதில் தீவிர வாதிகளைக் கண்டித்து எழுதியிருந்தார். அக்கடிதம் மிகவும் நீண்டது. சுருக்கமாய்ச் சொல்ல முயலுவது விஷயத்தை முழுவதும் சீர்தூக்கிப் பார்க்கமுடியாமல் செய்துவிடும். அநேகர் அக்கடிதத்தைப்பற்றி வாய்கொண்ட மட்டும் வைதார்கள். சிலருக்குக் கடிதம் எழுதியவரின் மீது பழிசுமத்த அவகாசம் சரியாகக் கிடைத்ததாகவே தோன்றியது. முதலில் அரசாங்கத்தாரின் குற்றங்களை எடுத்துக்காட்டி விட்டு, பின்வருமாறு நம்மிடமுள்ள குற்றங்களையும் அக் கடிதம் எடுத்துக் காட்டியது:

---

* 'ஹிந்து', 13-5-07.

"நம் அரசியல்துறை சென்ற வருஷம் பல மாறுதல்களைப் பெற்றுவிட்டது. எல்லாவற்றைக் காட்டிலும் முக்கியமானது அதிகார வர்க்கத்தினிடம் ஜனங்கள் காட்டும் அவநம்பிக்கையே. அநேக அடக்கு முறைகளை அரசாங்கத்தாரும் இடைவிடாமல் கையாண்டிருக்கிறார்கள். அதாவது: ஒழுக்கமாய், சட்டத்திற்கு உட்பட்டுக் கூடும் ஜனங்களைச் சிதற அடித்தல்; சட்டக் கட்டுப் பாட்டை உணர்ந்த சிறந்த தலைவர்களைக் கைதுசெய்தல்; நாட்டி லுள்ள உண்மையான தேசத்தொண்டர்களில் முக்கியமானவரைத் தீவாந்தர சிக்ஷைக்கு உட்படுத்தல்; இன்னும், சாமான்ய சட்டங் களை விலக்கும் அரசாங்க அதிகாரம் உத்தரவுகளைத் தனக்கு இஷ்டமான சமயங்களில் விடுத்தல் போன்றவை. இவைகள் நிலைக்காமல் மறைந்து சீக்கிரத்தில் பழைய சங்கதிகளாக ஆகிவிடும் என்பது நிச்சயம். ஆனால் அமைதியற்ற நிலை நாட்டில் தற்காலத்தில் தங்கிவிடும் போலிருக்கிறது. ஏனென்றால் இந்திய மக்களிடம் புதியதோர் எண்ணம் பிறந்து வியாபித்திருக்கிறது... 'இங்கிலாந்து நம்மை அரசாளும் வழி, இந்தியரின் க்ஷேமத்தின் பொருட்டன்று; தங்களுடைய சுயநன்மைக்காகவே தான்; ஆகையால் நிச்சயம் ஒருநாள் அரசாங்கத்தாருடன் நாம் கைகலக்க நேரிடும்' என்பதே............வெள்ளைக்காரரிடம் கனிந்த சிந்தனை இருப்பதுபோல் தோன்றினும் கறுப்பு மனிதர்களைக் கண்டால் பிடிக்காத கெட்ட குணம் அவர்களிடம் இருக்கத்தான் செய்கிறது. கொழுத்த மேல்நாட்டு நாகரிகம் புராதனமான நம் தேச நாகரிகத்துடன் கலக்கும்பொழுது நன்றாக அவைகளுடன் சேராமல் இந்தியர்களின் தனிப்பட்ட கௌரவத்தை ஒழிக்கின் றதைப் பார்க்கிறோம். பூமியின் சில பாகங்களில் இன்னும் வெள்ளைக்காரர்களுக்குத் தங்கி வாழ வசதிகள் ஏற்படாமல் இருப்பதாகத் தெரிகிறது. ஆனால் விஞ்ஞான சாஸ்திரத்தின் உபயோகத்தினால் அவர்களால் சீதோஷ்ண நிலைகளையும் ஒருகால் மாற்ற முடியலாம்? இன்னும் ஒரு நூறு வருஷங்களுக்கு இதே ரீதியாக வெள்ளைக்காரர்களின் ஆதிக்கம் உலகில் வலுத்தால், உலக முற்றுமே வெள்ளைக்காரர்களின் கீழ் வரலாம்.........

அநேக ஜனங்களுக்குச் சண்டை சச்சரவுகள் இல்லாத காலத்தை நன்கு பயன்படுத்தி அநுபவிப்பதைத் தவிர வேறு பிரச்னைகளே இருப்பதாகத் தோன்றுவதில்லை. சிலர் எதிர் காலத்தை நினைத்து அதன் இருண்ட தன்மையைக்கண்டு மிரளு கிறார்கள். மற்றும் சிலர், வரக்கூடிய அபாயத்தை உணர்ந்து, பயத்தில் சுற்றுணர்ச்சியின் இரும்புச் சங்கிலிகளைத் தறிக்கச் செய்ய, தங்கள் பற்களையே உபயோகிப்பதைச் சிறந்த தரும மாகக் கருதுகிறார்கள். இவ்விதமே நம்மில் சில நிபுணர்கள் பஹிஷ்காரப் பிரசாரத்தினாலும், ஆங்கில ஆட்சியின் சம்பந்தம்

பெருத சுயராஜ்யத்தினாலும் நமக்குச் சர்வக்ஷேமமும் ஏற்படுமென்று கருதுகிறார்கள்...நம்மில் ஒருவரும் இந்த உயர்ந்த உத்தேசங்களைத் தவருகக் கொள்ள நியாயமில்லை. வெள்ளைக்காரர்களும், 'உங்களுக்கும் உலகத்தின் ஏக குடும்பத்தில் ஓர் இடம் தரவே நாங்கள் உங்களைப் பழக்கி வருகிறோம்' என்று நம்மிடம் சொல்லுகிறார்கள். பிணைப்பில்லாத சுயராஜ்யம் நாளை வருவதானாலும், நமக்குள் யார் ஆட்சிபுரிவது, யார் சொற்படி யார் கீழ் நடப்பது - என்பதைக் குறித்துச் சதா விவாதிப்பதும் குழம்புவதுமாகத்தான் இருக்கும்...

நல்ல உழைப்பையும் புத்தியையும் பயன்பெறச்செய்ய, சாமான்யமான லக்ஷ்யங்களே முதலில் தேவை என்று படாதகும் ஒருவிந்தையயே. பிரகிருதத்திற்கு உபயோகமான காரியங்களை ஒழுங்காகச் செய்தால், அதுவே சுயராஜ்யத்திற்கு இன்றியமையாததான வழியாகும்........நான் மட்டும் நம்மிடமுள்ள ஆயிரக்கணக்கான குற்றங்களை எடுத்து விவரித்தேனேயாகில்—நீங்கள் விரும்பும் சுயராஜ்ய லக்ஷ்யத்தை உத்தேசித்தே அவைகளை நான் எடுத்துச் சொல்வேனானால்—நிச்சயம் உங்கள் தலையைத் தொங்கவிடும்படி செய்துவிடுவேன். ஆகையால் இப்பொழுது தற்காலத்தில் நடக்கவேண்டியதை மட்டும் செய்ய நாம் வரிந்து கட்டிக்கொண்டு முன் வருவோமானால், ஆங்கிலேயர்களும் நம்பால் அதிசீக்கிரம் மரியாதை காட்டி நம்முடன் ஒத்துழைக்கத் தலைப்படலாம்...நாடெங்கும் படிப்பில்லாத ஜனங்கள் அதிகம் இருக்கிறார்கள்...தேசத்தின் இயற்கைச் செல்வங்களை ஒருவரும் இன்னும் பரிசீலனை செய்யவில்லை... இங்கும் அங்கும் ஒரு வெளிநாட்டானுடைய முயற்சியால் ஏதோ இயந்திரத் தொழிற்சாலை அபிவிருத்தியாகி வருகிறது...தேச மக்களுக்கும் தங்களால் வைத்துப் பாதுகாக்க முடியாத எந்த அரசாட்சி முறையையும் நீடித்து அடைய வழி ஏற்படாது. பஹிஷ்காரப் பிரசாரம் வெளிநாட்டுச் சாமான்களை மறுத்ததேயன்றி ஏதேனும் ஒரு தொழிற்சாலையையாவது நாட்டில் ஏற்படுத்திப் பலிக்கும்படிச் செய்ததா? நம்மிடமுள்ள ஆவேசம், இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட சாமான்களை வெறுப்பதுடன் நிறுத்திக்கொள்ளாமல், அரசாங்கத்தாரால் பரிபாலிக்கப்பட்ட பள்ளிக்கூடங்களையும், கலாசாலைகளையும் நம் குழந்தைகளை விட்டுவிடத் தூண்டுகிறது......அடுத்தது, செய்வதென்ன என்று வாயைப் பிளந்துகொண்டு கேட்கவேண்டியிருக்கிறது. ஒருகால் ஆங்கிலம் பேசுவதையே இப்பொழுது ஒழிக்க வேண்டும் என்று தீவிரவாதிகள் ஆரம்பிக்கலாம்...... நம்முடைய பல சிரமங்களின் இடையே பிறர் அநுதாபத்தையும் ஒத்துழைப்பையும் வேண்டாம் என்று விலக்குவது நியாயம்

அன்று. ஏற்கனவே தேசத்தின் தீங்கிற்கு ஏற்பட்டிருக்கும் அறிகுறிகளுடன் நம்முடைய வெறுப்பையும், ஒருவரையொருவர் பழி தீர்க்கும் துர்க்குணங்களையும் அதிகப்படுத்த வேண்டாம். ஒருவன் தனக்கு ஏற்பட்ட அவமானத்தையும் கௌரவக் குறைவையும் குறித்துத் துடித்துக் கொண்டிருக்கையில், அவனிடம் அன்பையும் மிதவாதத்தையும் உபதேசிப்பது சரியன்று என்பதை நானும் உணர்ந்தவன்தான். கேவலம் உத்தியோக வேட்டையினால்தான் இச்சொற்கள் ஏற்பட்டிருக்கின்றன என்ற அவதூறுக்கும் என் வார்த்தை இடம் தருமென்று எனக்குத் தெரியும். ஆனாலும் நான் அந்தப் புகாரைக் கண்டு நடுங்குகிறவன் அல்ல. ஹிந்து மதத்தின் அடிப்படையான கொள்கைகளில் நீடித்த விரோதத்திற்கு எங்குமே இடம் இல்லை. நம் தர்மத்தில் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. சீக்கிரத்தில் ஹிந்து தத்துவ சாஸ்திரங்கள் இவ்வுலகைத் தம் வசப்படுத்திவிடும் என்பது திண்ணம். கர்மபல ஞானமும், அவதார மகிமையும் புத்திமான்களுக்கு மேலை நாடுகளில் கொஞ்சம் கொஞ்சமாக விளங்கத் தொடங்கி விட்டன... ஜாதி வர்ண வித்தியாசங்கள் மனிதர்களை வேற்றுமைப்படுத்தாத ஒரு காலத்தில், உலகத்தில் சகோதரத்துவம் நன்கு உண்டாகி, எல்லாத் தேசங்களும் தாங்கள் தனித்திருப்பதை விடும்நாளில், இந்தியாவின் உயர்ந்த பண்பாட்டினால் தானும் கரை ஏறியதாகவே இங்கிலாந்து நினைத்து நமக்கு நன்றி காட்டி, நமக்குச் சுய ஆட்சியையும், மற்றத் தேசங்களிடையே தகுதி வாய்ந்த ஓர் இடத்தையும் அளிக்கும்...''*

இக்கடிதத்தில் அடங்கிய கருத்துக்கள் நிதானமான குணம் படைத்தவர்களுக்குச் சரியாகவே தோன்றின. அக்காலத்திய கக்ஷிப் பிரதி கக்ஷிகளில் புகுந்தவர்களுக்கு இதில் பலவித அர்த்தங்கள் தொனித்தன. விபின சந்திரர் இதற்கு ஒரு மாதத்துக்கு முன்புதான் சென்னையில் கடற்கரை மணலில் பெரியதோர் இளைஞர்கள் கூட்டத்தின் நடுவில், பஹிஷ்காரப் பிரசாரத்தை நடத்தினர். அதைக் கண்டித்ததிலிருந்து சிலருக்குத் தீவிர வாதக் கக்ஷியைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பகிரங்கமாய் வெறுத்தார் என்று தெரிந்தது. அப்பொழுது சிலர் அவரைத் தூற்றினர்கள். சிலர் அக்கடிதத்தை, "பக்குவ ஞானம் ஏற்படாத எண்ணங்களின் வெளியீடு" என்றார்கள். ஒருவர் 'நியாய

* 'ஹிந்து', கடிதம், 5-6-1907.

வாதி' என்ற கையெழுத்தில் 'ஹிந்து' பத்திரிகையில் கீழ்க்கண்டபடி எழுதினர்:

"வாஸ்தவத்தில் அவருடைய சம்பாத்தியத்திற்கும், சட்டப் படிப்பிற்கும், மற்ற நல்ல எண்ணங்களுக்கும் கௌரவம் கொடுக்கத் தயாராக இருக்கிறோம். ஆனல் இம்மாதிரிப் பெரிய பிரச்னைகளை, அதாவது சுதேசீய இயக்கம், பஹிஷ்காரம், சுயராஜ்யம், தேசீய முறையில் படிப்பு—இவைகளைப்பற்றி அவர் தெரியாமல் பேசுவது நம்மை மிகவும் சிரமப்படுத்துகிறது."*

இன்னும் ஒருவர்,

"ஐயோ! கோடைக்கானல் மலை அவருடைய மூளைக்குக் குணம் செய்யாமல் எதையோ கோளாற்றைக் கொண்டுவந்து விட்டதே"

என்று பரிதபித்தார். பெரிய அரசியல்அநுபவசாலியான ஜி. சுப்பிரமணிய ஐயரும், 'ஹிந்து'வில் பெரிய கண்டன மொன்றை † இது சம்பந்தமாக வெளியிட்டார். ஒவ் வொரு வாக்கியமாகக் கடிதத்தினின்றும் எடுத்துக் கொண்டு பிய்த்து எறிந்தார். கோபம் பொங்கியது அவருக்கு. அவைகளுக்குச் சொந்தமான இடங்களி லிருந்து மொழிகளை எடுத்துத் தனியாக அலசி, பெரிய புகார் செய்து விட்டார். மலையாளத்தில் அச்சிடப்பட்ட "தினசரிச் செய்தி" என்னும் பத்திரிகை மட்டும் பகிரங்கக் கடிதத்தைப் புகழ்ந்தது.

"ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் கோகலேயுடன் சீமையில் வேலை செய்ய யாராவது ஒருவர் சென்னையிலிருந்து போவதாயிருந் தால், அதற்கு வேண்டிய செலவுகளுக்கு நான் பொறுப்பு ஏற்றுக்கொள்ளுகிறேன்"‡ என்று சொன்னதும் எல்லோருக்கும் தெரியும்."

என்று ஆரம்பித்தது. மேலும், அப்பத்திரிகை கூறியது:

"வெறும்பேச்சைப் பேசும் தேசபக்தர்களை நாம் நிறைய இந்நாட்டில் பெற்றிருக்கிறோம். ஆனல் தங்கள் இடுப்பைத் தடவித் தாங்களாக ஒருகாசு பொதுக்காரியங்களுக்குத் தரும் உதார சீலர்களை எங்கும் நாம் காண முடிவதில்லை. ஸ்ரீ

---

* 'ஹிந்து', 10-6-1907.

† 'ஹிந்து', கடிதம், 11-6-07.

‡ கடிதம், 24-6-07.

*கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவ்வித உதாரசீலர்களின் கோஷ்டியைச் சேர்ந்தவர் என்று சொல்வது மிகை ஆகாது.''*

பகிரங்கக் கடிதத்தை வாசித்தவுடன் நண்பர்கள் என்ன சொன்னார்கள் என்று பார்ப்போம்:

*''கடுமையான புகார்களும், நிந்தையும் கிருஷ்ணஸ்வாமி ஐயரை ஒன்றும் செய்யவில்லை. அவர் பழையபடியேதான் கவலையின்றி இருக்கிறார்''**

என்று மஹாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் என் தந்தையின் மன உறுதியைக் குறித்துக் கோகலேக்கு எழுதினார். ஏற்கனவே தாம் கோகலேக்கு எழுதிய கடிதமொன்றில் கிருஷ்ணஸ்வாமி ஐயர், தீவிரவாதிகளின் அட்டூழியங்களைக் குறித்து எல்லாப் பிரமுகர்களும் சேர்ந்து கையொப்பமிட்ட ஒரு கண்டன அறிக்கையை வெளியிடவேண்டுமென்று கேட்டிருந்தார். அது சமயயோசிதமற்றது என்றும், தம்மைப்போல் மேதாவும் நினைக்கிறார் என்றும் கோகலே மறு தபாலில் பதில் எழுதியிருந்தார். எனினும் சிலர் கோகலேயிடம், எதற்காகக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் இவ்விதம் தம் தலையில் மண்ணை வாரிப்போட்டுக் கொள்ள வேண்டுமென்று கேட்டவுடன்,

*''தீவிரவாதிகளைப் பயமில்லாமல் கிருஷ்ணஸ்வாமி ஐயரைப் போல் ஒருவர் எதிர்த்துச் சண்டையிடும்பொழுது, நாம் அவரைப் பின்னால் கையைப் பிடித்து இழுக்கக்கூடாது. அவர் திடசித்தம் உள்ளவர்; வாதத்தை உண்மையில் அதிகம் வெறுக்கின்றார். தீவிர வாதிகளுடன் அவராகச் சண்டை போட்டுத் தீர்த்துக் கொள்ளட்டுமே! உங்களுக்கு என்ன?''†*

என்றுதான். கோகலேயும் ஆசீர்வதித்தார்.

அவர் எழுதிய பகிரங்கக் கடிதத்தைப்பற்றிப் பலர் பலவிதம் சொன்னார்கள். என் தந்தையிடம் சதா உரிமை பாராட்டிய இளைஞர்களில் எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ஒருவர். அவருடைய புத்தியைக் கண்டு கிருஷ்ணஸ்வாமி ஐயர் சிலாகித்துப் பிரமித்திருக்கிறார் என்றுதான் சொன்னோமே!

---

* கடிதம், 16-6-07.

† கடிதம், 16-6-07.

"உண்மையில் மிகவும் தெளிவுடன் கூடிய அபிப்பிராயத்தின் ஓட்டம் இதில் தெரிகிறது...விஷயங்களை நேருக்கு நேர் நீங்களும் பார்க்கிறீர்கள்; மற்ற அரசியல் வாதிகளையும் பார்க்க அடிக்கிறீர்கள்...நிதானத்திலும், இரண்டு கட்சிகளைச் சீர்தூக்கிப் பார்க்கின்ற முறையிலும் தங்களுடைய நுட்பமான அறிவையும் தராதரத்தைக் காட்டும் மனப்பாங்கையும் வெளிப்படுத்துகிறது இக்கடிதம். கத்திரிப்பாய் இல்லாமலேயே அழகாயும், அசட்டுத் தனம் ஒன்றுமில்லாமல் சற்றுக் கரடு முரடாயும் வார்த்தைகள் காண்பதைப் பார்க்கும்பொழுது, சுபாவத்தின் அம்சந்தான் இதுவும் என்ற நினைப்பை மூட்டுகிறது. வெளியே கொந்தளிப்புத் தெரிந்தாலும் உள்ளூற நிலையான அமைதி இருப்பதை வார்த்தையில் நாம் உணருகிறோமல்லவா?"*

என்று ஸ்ரீநிவாஸ ஐயங்கார் பகிரங்கக் கடிதத்தைப் புகழ்ந்தார். பகிரங்கக் கடிதம் பெரிய வாக்குவாதத்தை எங்கும் கிளப்பியது.

ஒன்று மட்டில் நிச்சயம். இக்கடிதத்தை எழுதியவர் தைரியசாலி என்று புலப்படுகிறது. பெரிய கிளர்ச்சி நாட்டில் கிளம்பியிருக்கும்பொழுது, அபிப்பிராய பேதங்களைப்பற்றிப் பலர் பலவிதமாகவேதான் நினைப்பார்கள். தைரியங்கொண்ட தலைவர்கள் தங்களுக்குச் சட்டென்று பொதுஜனங்களின் அங்கீகாரம் கிடைக்காதே என்று பயந்து மனத்தில் திடமாகத் தோன்றியவைகளை வெளியிடாமல் இருப்பது பிசகல்லவா? நின்றவிடத்தில், பேச்சின் வேகத்தில், சொன்ன மொழிகளன்று அந்தக் கடிதத்தின் சாராம்சம். கோடைக்கானல் மலையின்மேல், குளிர்ந்த பிரதேசத்தில், தனிமையில், நிதானமாக யோசனை செய்ததன் பயனாக உண்டான உணர்ச்சி வெள்ளமே இவ்வகையில் கடித ரூபமாக வெளிவந்தது. அக்கடிதத்தில் நிதானம் தெரியவில்லை என்பதற்கும் காரணம் இல்லை. புயற்காற்றடித்துச் சட்டென்று மறைவதுபோல் அரசியல் உலகில் இன்று கிளம்பும் கிளர்ச்சி, நாளைக்கு மறைவதையும், அன்று சொன்னவைகளே இன்று பலிப்பதையும் நாம் உணராமலில்லை. காந்தி அடிகள் அரசியல் இயக்கத்தைப் புனிதப்படுத்த முயற்சிசெய்தார்; ஓரளவு

* கடிதம், 8-6-07.

வெற்றியும் பெற்றார். அரசியல் வாதங்களை உயர்ந்த படியில் நாம் ஏற்றவேண்டும் என்பதுதான் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் எண்ணமும். அரசியல் வாழ்க்கையைப் புனிதமாக்கவேண்டும் என்பதும் அவர் கருத்து. ஆனால் அவருடைய குணங்களில் பொறுமைக்கு இடம் சிறிதளவுதான் உண்டு. கோகலே தம் அந்தரங்கத்தில் நினைத்ததும் அதுவே: 'கடிதத்தின் உத்தேசமும், லக்ஷ்யமும் உயர்ந்த அளவிலேயே இருக்கின்றன. ஆனால் கடிதம் முழுவதையும் வாசித்தால், எழுதியவிதம் சமயோசிதமாக இல்லை' என்றுதான் அவர் அபிப்பிராயப் பட்டார்.

"உங்களிடம் இம்மாதிரியான பாரமார்த்திகக் கொள்கைகள் உண்டு என்பதை நான் அறிவேன், ஆயினும் உங்கள் அரசியல் வாதத்திற்கு அடிப்படையானதோர் தத்துவ விசாரத்தை வேறு நீங்கள் வளர்த்திருப்பதை இதுகாறும் நான் உணரவில்லை"*

என்றார் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள். அவர் எழுதிய கடிதத்தின் வார்த்தைகளில் சிறிது பரிகாஸம் தொனித்தது. ஏன், எல்லோருமே முதலில் இப்படித்தான் சிரிப்பார்கள். காந்தி அடிகள் 'பட்டினி கிடக்கப்போகிறேன்' என்று சொன்னபொழுது அவரைப் பரிகாஸம் செய்தவர்களுக்குக் குறைவா? ஆனால் உண்மையின் முன் யார் நிற்க முடிந்தது? காந்தி அடிகளுக்கும் என் தந்தைக்கும் அரசியல் வாதத்தில் ஒற்றுமை இருந்ததற்குப் போதுமான அத்தாட்சிகள் இல்லை; ஆனாலும், 'தூய்மையான முறையை நாடுவதே அரசியல் வாழ்க்கையை மேம்படுத்தும்' என்று நினைப்பதில் இருவருக்கும் கொஞ்சம் ஒற்றுமை இருப்பதாகத் தெரிகின்றது. காந்தி அடிகள் நிதானமாக ஆத்ம சோதனை செய்து காரியங்களைச் செய்தவர். அவ்விதம் செய்யாமல், பொறுமை இழந்து வேகத்தினால் மட்டும் நடத்தும் காரியம் கீழ்ப்பட்ட ரகத்தைச் சேர்ந்ததே. அவ்விதம் இருப்பினும் சுயநலத்தைமட்டும் பெரிதாக எண்ணிப் பொது ஜனக்காரியங்களில் ஈடுபடும் அரசியல் வாதிகளின் செயல்களைவிட, இவை எவ்வளவோ மேம்பட்டவை என்பதில் ஐயமில்லை.

---

* கடிதம், 16-6-07.

## II

தீவிர வாதிகளைப்பற்றித் தம் அபிப்பிராயத்தைப் பகிரங்கப்படுத்திய கிருஷ்ணஸ்வாமி ஐயரின் உதவியையே மற்ற மிதவாதிகளில் பலர் நாடினார்கள். நாகபுரியில் அவ் வருஷம் காங்கிரஸ் நடைபெறுவது சந்தேகம் என்று தீர்க்க தரிசிகளான காங்கிரஸ் தலைவர்களுக்குத் தோன்றியது. ஆகையால் உடனே சென்னையில் நடத்துவதுதான் உசிதம் என்றும் பட்டது. சென்னையில் காங்கிரஸைக் கூட்டு வதற்கு மற்றெல்லாச் சௌகரியங்களை விட முக்கியமான சௌகரியம், கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தைரியமேதான். எதிர்ப்புக்களைக் கண்டு அவர் பயப்பட்டவரே அல்ல. மேதாவிடமிருந்தும், வாச்சாவிடமிருந்தும், ராவ்பகதூர் மதோல்கரிடமிருந்தும் தந்திகள் வந்ததுதான் தாமதம், உடனே கூட்டமொன்றைக் கூட்டி அதில், வரும் காங்கிரஸ் கூட்டத்தைச் சென்னையில் வைப்பதுதான் உசிதமென்று ஒரு தீர்மானத்தை முடிவுசெய்ய வேண்டும் என்று மஹாஜன சபைக் காரியதரிசிகளுக்குத் தெரி வித்தார் கிருஷ்ணஸ்வாமி ஐயர்.

நடக்கவேண்டிய காரியங்கள் மிகவிரைவில் நடந்தன. மகாஜன சபைக்கு வந்தவர்கள் நூறுபேருக்குக் குறை வில்லை. கொண்டுவந்த தீர்மானமும் வெற்றிபெற்றது. 92 பெயர்கள் சென்னையில் காங்கிரஸை நடத்துவது உசிதம் என்று நினைத்தார்கள். எட்டுப் பேர்களே அதை ஆக்ஷேபித்தார்கள். காரியங்களை வேகமாகவும் வீண் யோசனைகளால் தாமதமில்லாமலும் செய்யும் மனப்பாங்கு கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் நிரம்ப உண்டு என்பதற்கு இதுவும் ஒரு சிறந்த அத்தாட்சி. ஆனால் பொதுக் காரிய மானதால் நல்ல காரியங்களுக்கும் ஏதாவது எதிர்ப்பு வருவது சகஜமேதான். ஒரு பொது மனிதர் 'ஹிந்து'வில் இத்தீர்மானத்தைக் குறித்துக் கோபமாக எழுதினார்:

"'ஹிந்து' பத்திரிகை ஆசிரியரும் மஹாஜனசபைக் கூட் டத்தில் அன்று இருந்தார். நான் அவர்களை வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன்; தீர்மானத்தைச் செய்தவர்களின் உண்மையான

உணர்ச்சி அன்று எவ்விதமிருந்தது என்பதை அவர்கள்தாம் வெளிப்படுத்த வேண்டும்.''*

வேறு ஒருவர் கோபம் தாங்காமல்,

''மஹாஜன சபையில் இரண்டு கூட்டங்கள் நடைபெற்றன. முன்பே சொல்லாமல் கொண்டுவந்த இந்தத் தீர்மானம் வேறு காரியங்களுக்காகவென்று கூட்டிய கூட்டத்தில் நடைபெற்றது. அந்தக் கூட்டத்தில் நடந்த ஏற்பாடுகள் நான்கு தலைவர்களுக்குள் நடந்த கடிதப் போக்குவரவின் விளைவுகளே. அந்த நான்கு பேர்கள் பம்பாயிலுள்ள ஒரு பெரியாரும், காங்கிரஸ் காரியதரிசி ஒருவரும், அமராவதியைச் சார்ந்த ராவ்பகதூர் ஒருவரும், சென்னை வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருமே. இவர்கள் நான்கு பேர்களும் காங்கிரஸில் தீவிர மிதவாதிகள் என்பதையும், மற்றெவருக்கும் அடங்காத சொந்த அரசு செலுத்துகிறவர்கள் என்பதையும் உலகம் அறியும்''†

என்று பத்திரிகைகளில் எழுதினர்.

சென்னை மஹாஜன சபையின் தீர்மானத்தை அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி ஆமோதித்த பிறகே அது அமலுக்கு வரமுடியும். ஆகையால் சென்னைத் தலைவர் எதிர்ப்புக்களைக் கண்டு பயப்படாமல் ஏற்பாடுகளைச் செய்துவிட்டார். நடக்கவேண்டிய மற்றக் காரியங்கள்தாம் தடையாயின.

மஹாஜன சபையில் கூட்டம் நடைபெற்ற விமரிசையை அந்நாட்களில் பார்த்தவர்கள் வர்ணிப்பார்கள். மிதவாதியான கிருஷ்ணஸ்வாமி ஐயர் பெருத்த சத்தம் போட்டுக் கூட்டத்தில் உள்ளவர்களை அடக்கியதாகவும், சில சந்தர்ப்பங்களில் வாய்ப்பேச்சு, கைகலக்கும் சச்சரவாக முடிந்ததாகவும் சொல்லுவார்கள். தமக்கு உண்டான வேகத்தை அறிந்து செய்ய, பிறரிடம் சக்தி இல்லை என்பதே அவருடைய பதற்றமான நடத்தைக்கு அஸ்திவாரம். மேலும், நாவை அளவுக்குள் வைப்பதை உணராத சுபாவமும் அந்த வேகத்துடன் சேரவே, எரிமலையைப்போல் உள்ளே கொதித்த எண்ணங்கள்

---

* 'ஹிந்து' 4-11-07.

† 'ஹிந்து' 8-11-07.

கூடாக வெளி வந்தன. அரசியல் வாதம் இக்காலங்களில் பல விதங்களில் மேம்பட்டு விட்டது. குணக்குன்று களாகத் தோன்றியவர்களும் சாமான்யர்கள் செய்யும் சிறு குற்றங்களைச் செய்தார்கள் என்பதுதான் அக் காலத்தவர்கள் மேலுள்ள குற்றம்.

ஸர் பிரோஸிஷா மேதாவின் கிருஹத்தில் ஒரு சிறு கூட்டத்தைக் கூட்டி நாகபுரியிலுள்ள இரண்டு கட்சிகளின் முக்கியஸ்தர்களையும் கலந்து விசாரித்ததில் ஒன்றும் சரியான முடிவுக்குச் சமாதானமாக வரவில்லை. காரியங்கள் தடைப்படாது இருக்கவேண்டுமே என்ற மனப்பாங்கு வேண்டாமா வேற்றுமைகளைக் குறைக்க? அதுதான் இந்நாட்டு அரசியல் சரித்திரத்தில் இதுவரையும் காணப் படவில்லையே! தீவிரவாதிகள் கூடி ஒரு தனிக் காங்கிரஸ் நடத்தப் போவதாகவும், திலகரைத் தலைமை வகிக்கத் தேர்ந்தெடுக்கப் போவதாகவும் ஒரு பக்கம் பயமுறுத் தினார்கள். ராவ்பகதூர் மதோல்கர் தந்தி அடித்தாரே ஒழியச் சென்னையில் காங்கிரஸ் நடப்பதைக் காட்டிலும் சண்டையோ, சமாதானமோ, நாகபுரியில் நடத்துவதே அதிக ஆக்ஷேபணைகளுக்கு இடம் தராது என்று எண்ணினார். அகில இந்தியக் காங்கிரஸ் சீக்கிரத்தில் கூடாதென்பதற்குரிய அறிகுறிகள் எங்கும் காணப் பட்டன. கோகலே சிம்லாவில் இரண்டு வாரம் வேலையாகச் சென்றிருந்தார். வாச்சா ஒன்றும் செய்யாமல் சும்மா விருந்தார். அவருடைய குருவான மேதா ஒன்றுக்கும் வழிபிறக்கமாட்டாது என்றார். காங்கிரஸ் வேலையையே கொஞ்சகாலம் ஏன் நிறுத்திவைக்கலாகாது என்று இருந்தது அவர் மனதில்.

"வேடிக்கைதான்! சென்னை வலுவில் ஒப்புக்கொள்ளவிருந்த பொறுப்பைக்கூட அவர்களிடம் கொடுக்காமல் இந்தியத் தலைவர்கள் பயந்து பயந்து சும்மாவிருக்கத் தொடங்கினார்கள்."*

இவ்விதம் சிந்தாமணி அமராவதியிலிருந்து பரித வித்தார் ஒரு கடிதத்தில். "தலைவர்களின் சோம்பலினால் ஏன் காங்கிரஸ் மறைய வேண்டும்? 'நோயாளியின்

* கடிதம், 20-10-07.

பக்கத்தில் சும்மா உட்கார்ந்துகொண்டு இருந்துவிட்டு, அவன் உயிர் பெற மருந்து கொடுக்க மறுப்பது பெரிய அநியாயந்தான். என்னல் தாங்கமுடியவில்லையே! காரிய தரிசிகள் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியைக் கூட்டா விட்டால் போகிறது; நாமாவது சிலர் சேர்ந்து கையொப்ப மிட்டுக் கமிட்டியைச் சீக்கிரம் கூட்ட வழி தேடுவோமா?" என்றார் அவர். கிருஷ்ணஸ்வாமி ஐயரால் என்றைக்கும் சும்மா உட்கார முடியாது. அவருக்கு எதிலும் அவசரம். எங்கே காரியங்கள் நம்முடைய ஆலஸ்யத்தினல் கை கூடாமல் போய்விடுமோ என்ற கவலை ஒரு புறம் உண்டு.

"என்ன செய்யப்போகிறீர்கள்? காங்கிரஸை நடத்தச் சென்னை தயார்"

என்று வாச்சாவுக்கு ஒரு தந்தி பறந்தது.

"எனக்கு உடம்பு சரியில்லை. உங்கள் தந்தியும் மகாஜனசபைக் கடிதங்களும் கிடைத்தன. காங்கிரஸைச் சென்னையில் நடத்த 92 பேர்கள் ஒப்புக்கொள்ள, எட்டுப்பெயர்கள் மட்டும் ஆக்ஷேபித்த விவரம் தெரிந்தது. சந்தோஷம். நான் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கு வழக்கமாய் அனுப்ப வேண்டிய முறையில் தகவல் அனுப்புகிறேன். பம்பாயில் நவம்பர் 13-ஆம் தேதி அன்று கூடுகிறோம். அதற்கு மேதா வரவேண்டியதும் அவசியம்......"*
என்று வாச்சா நண்பரைச் சற்றுப் பொறுத்துக்கொள்ளும் படிச் சமாதானப்படுத்தினர். காங்கிரஸுக்கு ஒன்றரை மாதங்களே பாக்கி இருந்தன. காங்கிரஸ் கூடுவதற்கும் ஏற்பாடுகளைச் செய்வதற்கும் முதலில் எந்த இடம் என்று தெரிய வேண்டாமா? எல்லாம் நிர்வாகம் செய்ய வகையற்றவர்களின் கைகளில் காரியங்கள் இருந்த குற்றமேதான் இவ்விதத் தாமதத்தின் காரணம். மறுபடியும் ஒருகடிதம் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடமிருந்து சென்றது.

"சென்னையில் காங்கிரஸை இந்த வருஷம் வைப்பது என்று ஒருகால் அகில இந்தியக் கமிட்டியிலும் தீர்மானம் நிறைவேறினல் அப்புறம் சரியான ஏற்பாடுகளை நாம்தானே செய்யவேண்டும்."†

இதே கவலைதான் அவருக்கு. ஆகையால் இனி எக்காரணத்தினலும் தாமதம் முடியாதென்று மிகுந்த

---

* கடிதம், 20-10-07.

† கடிதம், 23-10-07

கவலையுடன் வாச்சாவிடம் தெரிவித்தார். அவரும் சிரமங்களை உணராதவரல்ல.

"மிதவாதக் கட்சியின் முழுநன்றியும் உங்களைச் சேர்ந்தது. நீங்கள் சிரத்தை எடுத்துக்கொண்டு நடத்தும் காரியங்களைக் கண்டும், உடனுக்குடனேயும் பொறுப்புடனேயும் வேலைசெய்து வருவதை எங்களால் எவ்விதம் மறக்கமுடியும்! கமிட்டியின் தீர்மானம் முதலில் அவசியம். உங்கள் வேலையை இன்னும் துரிதப்படுத்தவும் மேலே நடத்தவும் தொடங்கவேண்டுமென்று விரும்புகிறேன். ஆனால் இவ்வளவு குறைந்த காலத்தில் நடத்துவது மிகவும் கஷ்டம் என்பதை நான் நன்கு அறிவேன்"* என்றார். இதற்குள் சென்னை மஹாஜனசபையின் காரிய தரிசிகள் எழுதிய கடிதத்தில் கண்ட விவரங்கள் வாச்சாவை மனக் குழப்பம் அடையச் செய்தன. ஏனென்றால் அதில் காரியதரிசிகளான ஜி. சுப்பிரமணிய ஐயரும், ரைரு நம்பியாரும் கையெழுத்திட்டு வேறுவிதமாகத் தெரிவித்திருந்தார்கள். அதன் வாக்கியங்களைக் கூர்ந்து கவனித்தால்,

"மஹாஜனசபை உண்மையில் சென்னையில் காங்கிரஸை நடத்துவதற்குச் சம்மதிக்கவில்லை என்றும் நாகபுரியில்தான் நடத்துவது உசிதமென்றும் தொனிக்கும்படி எழுதியிருந்தது. வாச்சா என்ன செய்வார்? சூரத்தில் காங்கிரஸை நடத்துவோமா என்றுதான் அபிப்பிராயப்பட்டார். ஏற்கனவே சூரத்திலிருந்து விண்ணப்பம் அது சம்பந்தமாக வந்திருந்தது."†

நடவடிக்கைகளை அவ்வப்போது எழுதி வைக்கும் 'மினிட்' புஸ்தகத்தில் கண்டவிவரம் என் தந்தை வாச்சா வுக்குக் கடிதத்தில் குறித்ததையே உறுதிப்படுத்தியது. கிளர்ச்சியினால் எல்லாம் சின்னபின்னமாயிருந்த சமய மானதால் யார் சொல்வது உண்மையென்று தீர்மானிப்ப வர்களே குறைவாக இருந்தார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குப் பம்பாயில் நடைபெற்ற கமிட்டிக்குப் போக முடியவில்லை. கூடியிருந்த தலைவர்கள் மேதா, கோகலே, வாச்சா, சேலம் விஜயராகவாச் சாரியார், மதோல்கர், முரளீதர், அம்பாலால், தேசாய்,

---

* கடிதம், 4-11-07.

† கடிதம், 5-11-07.

கோகுல்தாஸ், பாரேக், ஜின்னு, காரே, திலகர், கபர்தே, கோலத்கார் என்பவர்கள். அவர்கள் மொத்தம் பதினைந்து பேர்கள். சண்டையைத் தீர்த்துவைக்கச் சேலம் விஜயராகவாச்சாரியார் ஆனமட்டும் பாடுபட்டார். எண்ணெயையும் நீரையும் சேர்ப்பது போலிருந்தது, கட்சிகளின் நிலைமை. கபர்தேயும் திலகரும் எந்த வழியிலும் சேர்ந்து வர மறுத்தார்கள். கடைசியில் ஒரு மாதிரியாகச் சமாதானம் ஏற்பட்டது. ஆனல் சூரத்தில் உள்ளவர்கள் ஏற்கனவே காங்கிரஸைத் தம் ஊரில் நடத்த வேண்டுமென்று கேட்டிருந்ததால், அவ் வேண்டுகோளுக்கு இணங்கி அங்கேயே நடத்துவது என்று ஏகோபித்துத் தீர்மானித்தார்கள். கூட்டம் முடிய இரண்டு மணிக்கு மேலாயிற்று. எல்லா விஷயங்களையும் போட்டு உடைத்துப் பேசியதன் பயனுக ஒரு முடிவுக்கு வந்ததுபற்றி வாச்சாவுக்குத் திருப்திதான். அதை உடனே கடிதத்தில்* எழுதிச் சமயத்தில் சென்னை செய்யவிரும்பிய உதவிக்கு நன்றியையும் தெரிவித்திருந்தார்.

ஆனல் சிரமங்களும் தடைகளும் தாமாகவே நின்றுவிடுமா? விரோதிகளின் தீவிரம் உள்ளே வேலை செய்துகொண்டுதான் இருந்தது. மேலுக்கு ஒருமாதிரி சமாதானமானலும், உள்ளே எவ்விதத்தில் காங்கிரஸைத் தங்கள் வசம் ஆக்கிக்கொள்வது என்றே தீவிரவாதிகள் முயற்சி செய்தார்கள். அடுத்தபடியாகக் காங்கிரஸ் அக்கிராஸனரைத் தேர்ந்தெடுப்பதில் தொந்தரவு கொடுக்க ஆரம்பித்தார்கள். கபர்தே, லாலா லஜபுத்ரராயை நியமனம் செய்யவேண்டும் என்றூர். அதை எவ்விதம் மிதவாதிகள் ஒப்புவார்கள்? மறுபடியும் மனவேற்றுமைகளால் பிரிக்கப்பட்டு, ஒருவரை யொருவர் பழிசாற்றத் தொடங்கினர் காங்கிரஸ் காரியக்கமிட்டியில்.

காங்கிரஸ் கூட்டத்தைச் சௌகரியமாய் நடத்தச் சூரத்தில் ஏற்பாடுகள் நடந்தன. மிகவும் காலம் குறைவானபடியால் காரியதரிசிகள் மிகவும் உழைக்கவேண்டிவந்தது. எங்கே காங்கிரஸ் நடுச்சபையில் அடிதடியாகிவிடுமோ

---

* கடிதம், 10-11-07.

என்று என் தந்தைக்குக் கவலே; ஆகையால் அவர் எப்படியாவது காங்கிரஸ் கூட்டத்தில் வேடிக்கை பார்க்க வருகிறவர்களின் தொகையைக் குறைக்க வழி தேடவேண்டுமென்று மன்ருடினுர். சாதாரணமாக அவர் களிடமிருந்துதான் குழப்பமும் சண்டைகளும் வலுப்பது வழக்கம். சிந்தாமணி தம் நண்பருக்கு எழுதினுர்:

"உங்களுடைய கவலேகளே நானும் ஒப்புக்கொள்ளுகிறேன். என்னசெய்வது? பந்தலே ஆருயிரம் ஏழாயிரம் பேர்களுக்காக நிர்மாணம் செய்கிருர்கள். மேலும் வேடிக்கை பார்க்க வருகிற வர்களிடம் ரூபாய் இரண்டு அல்லது மூன்றுக்குமேல் டிக்கெட் கேட்கப் போவதில்லேயாம். இளம் ஊழியர்களான மூந்நூறு பேர்களேக் கூட்டத்தை நிர்வகிக்க ஏற்படுத்தியிருக்கிருர்கள். அவர்களுடைய தலேவர் ஒரு தீவிர வாதி......நிச்சயம் டாக்டர் ராஷ்பிஹாரி கோஷின், தலேமை வகிக்கச் செய்யும் பிரேரே பணேயைத் திலகர் முதலில் எதிர்ப்பார்.........கடைசிவரையிலும் அவரும் அவருடைய கோஷ்டியும் எதையாவது தொந்தரவைச் செய்துகொண்டுதான் இருப்பார்கள். நாம் மிகுந்த சச்சரவான கூட்டத்தையேதான் இவ்வருஷம் காணப்போகிருேம்......" *

நடக்கப் போகும் ஒவ்வொன்றையும் தீர்க்க திருஷ்டியுடன் மூன்று வாரங்களுக்கு முன்பே படம் பிடித்தவிதம் சிந்தாமணியின் கடிதம் சொல்லிவிட்டது என்பதை பிற்பாடு நடந்தவற்றைக் கொண்டு அறிய முடிகிறது.

சூரத் காங்கிரஸ், காங்கிரஸ் சரித்திரத்திலேயே பெயர் போனது. அதில் நடந்த சண்டையும் பிரிவுமே பல காலம் காங்கிரஸ் ஒற்றுமையைச் சீர்குலேயச் செய்தன. முதலில் தீவிரவாதிகள் தீவாந்தரத்திலிருந்து திரும்பி வந்த லாலா லஜபுத்ரராயை அக்கிராஸனம் வகிக்கச் சொல்லப் போவதாகப் பயமுறுத்தினுர்கள். நல்ல காலம், அவராக மாட்டேனென்று மறுத்ததுதான் சௌகரியமாயிற்று. கல்கத்தா காங்கிரஸில் கொண்டுவந்ததும், மிதவாதிகளின் மனத்திற்குப் பிடிக்காததுமான நான்கு தீர்மானங்களேயும் விஷயாலோசனைக் கமிட்டி தொடப்போவதில்லேயாம் என்ற புரளி ஒரு பக்கம் கிளம்பியிருந்தது. கிளர்ச்சிகள் மிகுந்த

---

* கடிதம், 14-12-07.

சந்தர்ப்பத்தில் கூடும் காங்கிரஸ் கூட்டத்தில் எதுதான் நடக்காது? டாக்டர் ராஷ்பிகாரி கோஷை அக்கிராஸனம் வகிக்கக் கேட்டுக் கொள்ளும் பிரசங்கத்தைக் கேட்க வொட்டாமல் அடித்துவிட்டார்கள். பாபு சுரேந்திரநாத் பானர்ஜி சாதாரணமாய்ப் பேசினுலும் வெகுதூரம் கேட்கும். அவருடைய தொனியையும் கேட்கவொட்டாமல் செய்யவேண்டுமானுல் ஜனங்கள் போட்ட சப்தம் எவ்வளவு அதிகம் என்பதை ஊகித்துக்கொள்ளலாம். ஆம்! அன்று உண்டான சப்தத்தையும் கலவரத்தையும் தாங்கமுடியாமல் காங்கிரஸ் கூட்டத்தை மறுநாளுக்கு ஒத்திப்போட்டார்கள். மறுநாள் உஷ்ணம் தணிந்து பலர் அமைதியாக இருப்பார்கள் என்றுதான் தலைவர்கள் எண்ணினுர்கள். ஆனுல் நினைத்தது நிறைவேறவில்லை. பாபு சுரேந்திரநாத் பானர்ஜி மறுநாள் தம் பேச்சை முடித்ததும், அவரை ஆமோதித்த பண்டித மோதிலால் நேருவும் தம் சிறிய பிரசங்கத்தைப் பேசி முடித்தார். டாக்டர் ராஷ்பிகாரி கோஷ் நாற்காலியில் அமர்ந்தவுடன், முதலில் நிறைவேறிய தீர்மானத்தில் சிறுமாறுதலைத் தாம்கொண்டு வருவதாகப் பேசி, வார்த்தைகள் சொல்லத் தமக்கு அவகாசம் வேண்டுமென்றுர் பாலகங்காதர திலகர். நிறைவேறிய தீர்மானத்தை மறுபடியும் கலைப்பது சரியன்று என்று வாக்கு வாதம் கிளம்பியது. திலகர் பிடிவாதக்காரர்; ஒன்றையும் கவனியாமல் பேசத்தொடங்கிவிட்டார். யார் கேட்டாலும் கேட்காவிட்டாலும் பேசிவிடுவது என்று மேடையில் ஏறியவர் அவர். உடனே ஜனங்களில் சிலர் 'வேண்டாம்' என்று கூவினுர்கள். திலகரைச் சேர்ந்த சிலர் தடிகளைக் கையில் எடுத்துவிட்டார்கள். பெரிய குழப்பம் உண்டாயிற்று பந்தலில். அறுந்த செருப்புகளில் ஒன்று மேதாவின் மீதும், ஒன்று பாபு சுரேந்திரநாத்தின் முதுகிலும் விழுந்தன. பலருக்கு இன்னது செய்வதென்று புரியவில்லை. சிலர் மேடையிலிருந்து வேகமாய்க் கீழே இறங்கினுர்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயர் உட்கார்ந்த இடத்தை விட்டு எழாமல் உரக்க அதிகாரம் செய்யத் தொடங்கி விட்டார். ஆனுலும் அன்று காங்கிரஸ் பந்தலில் ஏற்பட்ட

அமர்க்களம் அடங்கவில்லை. கூட்டத்தைக் கலைக்க அக்கிராஸனர் உத்தரவிட்டு விட்டு உடனே எழுந்து பலபிரமுகர்களுடன் வெளியே சென்றார். எங்கும் அவமானமும் ஆத்திரமும் பரவிக் கிடந்தன. 'என்ன அநியாயம்?' என்று மிதவாதிகளில் சிலர் கத்தினார்கள். 'பார்த்து விடுகிறோம் ஒரு கை!' என்று தோள் கொட்டினார்கள் தீவிரவாதிகளில் பலர்.

காங்கிரஸைப் பக்தியுடன் போற்றிய தீரர்கள் அங்கு இல்லாமலில்லை. முக்கியமாக என் தந்தையாரை மிதவாதிகளின் கட்சியில் புகழ்ந்த காலம் அது. ஏனென்றால் எல்லோருடைய நிதானமும் முறியடிக்கப்பட்டுக் கிடக்கும் தருணத்தில், ஒரு வழி பிறக்க யோசனை செய்தவர் அவர் தாம். சூரத்தில் கலகம் ஏற்பட்டபின், ஒரு சிறு பகுதியாகக் காங்கிரஸைக் கூட்டும்படி கிருஷ்ணஸ்வாமி ஐயரே யோசனை சொன்னார். கோகலேயிடமே முதலில் அதை அவர் சொன்னார். அவரும் கேட்டவுடன் சந்தோஷமடைந்தது மட்டுமல்லாமல் வாய்விட்டுப் பலர் நடுவில்,

"நாங்களும் அரசியல் சரித்திரம் படித்திருக்கிறோம்; ஆனால் பிரகிருதத்திற்கு ஒத்து வழி காட்டிய மேதாவி நீங்கள் ஒருவரே"*

என்றாராம். கோகலே, டாக்டர் ராஷ்பிகாரி கோஷிடம் இந்த யோசனையை உடனே தெரிவித்தார். அவரும் சந்தோஷம் பொங்கி, கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கட்டியணைத்தார். அன்று நடந்த அமர்க்களங்களுக்கு அப்பால் தான் 6-மணிக்கு ஸர் பிரோஸிஷா மேதாவின் விடுதியில் ஒரு சிறு கூட்டம் கூடியது. அதில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு தீர்மானத்தைப் பேசி முடித்தார். எதையாவது செய்து வழி பிறக்கச் செய்வதுதான் நம்முடைய கடமை என்றும், இன்றில்லாமல் மற்றொரு நாளுக்கு என்று தள்ளிப்போட்டு விட்டு அவரவர்கள் வீடு திரும்புவதென்பது, நினைக்க முடியாத அவமானம் என்றும் கேட்டவர்கள் மனத்தில் பதியவைத்தார். அவரை அநுசரித்து, பாபு சுரேந்திரநாதர் பேசினார்.†

---

* கிருஷ்ணஸ்வாமி ஐயரின் நினைவுகள், 1912 ஜனவரி 'லீடர்' பத்திரிகை.

† மெயில், 27-12-07.

மிதவாதிகளில் முக்கியமானவர்களில் 900 பேர்கள் கையொப்பமிட்டு அறிக்கையை உடனே பிரசுரித்தார்கள். 23-ஆவது காங்கிரஸ் நடைபெறுமல் போய்விட்டதால் அங்கத்தினர்களின் சிறுபான்மை யோரையாவது 'கன்வென்ஷனைக்' கூட்ட, பெரியோர்கள் தீர்மானித்தார்கள்.

(1) சுயராஜ்ய லக்ஷ்யமே காங்கிரஸ் இயக்கத்தின் முடிவு (2) சரியான ஒழுக்கமுறையில்தான் இந்திய இயக்கம் நடத்தப்படவேண்டும். சிறிது சிறிதாகவே சீர்திருத்தங்களை நாடி, நம்முள் ஒற்றுமையைப் பெற்று, நாட்டிலுள்ள பலரும் சுதந்தரம் பெறவேண்டும். அதுவே பிற்காலத்தில் நம் லக்ஷ்யத்தைக் கைகூட வைக்கும் (3) இதற்காக நடத்தப்படும் கூட்டங்கள் ஒழுங்காகவும், அக்கிராஸனர் இட்ட கட்டளையை மீறுமலும் நடைபெறவேண்டும். மேலே குறித்த விஷயங்களை விசாரிக்க டிசம்பர் மாதம் 28-ஆம் தேதி ஒரு மணிக்குக் கூடுபவர்கள், விதிகளை முதலில் அநுசரிக்கவேண்டும் என்று எச்சரித்தார்கள் காங்கிரஸ் தலைவர்கள்.

அந்தச் சிறுகூட்டம் ஒரு கமிட்டியை ஏற்படுத்தியது. காங்கிரஸுக்கு ஒரு சட்டம் தயாரிப்பதை அதனிடம் முழுவதும் விட்டுவிட்டது. மறுவருஷம் அலகாபாத்தில் அந்தக் கமிட்டி பின்வருமாறு முக்கியமான விதிகளை அமலுக்குக் கொண்டுவரத் தீர்மானித்தது.

விதி. 1. சுய ஆட்சி லக்ஷ்யமாயுள்ள காங்கிரஸ் இயக்கம் பலிப்பதற்கு, ஜனங்களிடம் ஒற்றுமையையும், பொதுஜன சேவையில் ஆர்வத்தையும், மேலும் பல வேறு துறைகளில் நடக்கவேண்டிய காரியங்களையும் மேற்கொள்ளச் சாதனங்களைச் சட்ட ரீதியாய் உண்டாக்குவதே நியாயம்.

விதி. 2. அடுத்தபடியாக ஒவ்வொரு காங்கிரஸ் அங்கத்தினரும் தாம், காங்கிரஸ் லக்ஷ்யத்தை ஒப்புக்கொண்டு, காங்கிரஸ் சட்டத்தையும், ஒழுங்கான நடத்தைக்கு வேண்டிய விதிகளையும் அநுசரிக்க இஷ்டப்படுவதாக வாக்குறுதி அளிக்கவேண்டும்.

இந்த இரண்டாவது விதியை மிகவும் தூற்றியவர்கள் பலர். எத்தனையோ பேர்கள் இதனால் தங்கள் வாக்குரிமைகளை இழந்துவிட நேரிடுமென்று கருதினார்கள்.

'மறுவருஷம் சென்னையில் காங்கிரஸை நடத்தியே தீருவேன்' என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் கொடுத்த வாக்குத்தத்தம் வீண்போகவில்லை. வேறு யாராயிருந்தாலும் சங்கடங்கள் பல உண்டானபோது, 'எதற்கு நமக்கு இத்தனை தொல்லை?' என்று சளைத்திருப்பார்கள். அவருடைய உண்மையான சிரத்தையேதான் எதிர்ப்புக்களையும் விரோதங்களையும் சுலபமாகத் தாண்டச்செய்தது.

அலகாபாத்தில் 'கன்வென்ஷன்' கூடிக் காங்கிரஸுக்கு ஒரு சட்டத்தைத் தயார் செய்தது. 1908-ஆம் வருஷம் ஏப்பிரல், 18-ஆம் தேதி 19-ஆம் தேதிகளில் இக் கூட்டம் நடைபெற்றது. கோகலேயின் கையெழுத்தில் உள்ள குறிப்புக்களை வைத்துக் கொண்டுதான் விதிகளையும், காங்கிரஸ் சட்டத்தையும் அப்பொழுது தயாரித்தார்கள். பாபு சுரேந்திரநாத் பானர்ஜியும், காரேயும் அச்சிடுவதற்குமுன் அவைகளை ஒழுங்குசெய்து சரியான முறையில் தயாரித்து அக்கிராஸனரிடம் கையொப்பம் வாங்கினார்கள். உடம்பு அசௌகரியத்தினால் அக்கிராஸனருக்கு உடனே அவைகளைச் சீராகப் பார்வையிட முடியவில்லை. பார்த்த பிறகும் சிற்சில விஷயங்களுக்கும் கூட்டத்தில் நடந்தவைகளுக்கும் வித்தியாசம் இருந்ததாக ஞாபகத்தில் தோன்றியதால் அவைகள் சரியா, தம் ஞாபகத்தில் உள்ளவைதாம் சரியா என்று ஒத்துப்பார்க்கக் கொஞ்சம் தாமதம் ஆயிற்று. எல்லாம் சேர்ந்து மாதம் இரண்டுக்கு மேலாகியும், காங்கிரஸ் புதுவிதிகள் அச்சிடப்பட்டு அங்கத்தினர்கள் கைக்கு வரவில்லை. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் கவலைக்குக் கேட்பானேன்? உடனே வாச்சாவுக்கு அவசரத் தபால் சென்றது. சென்னையில் நடத்தவேண்டிய காங்கிரஸின் முழுப்பொறுப்பும் அவருடையதாகிவிட்டது. அவருக்குச் சென்னையில் எத்தனையோ விரோதிகள் இருந்தார்கள். அவர் மேற்கு என்றால் கிழக்கு என்றுதான் சிலர் சொல்லு

வார்கள். மேலும் முன் கோபத்தைக்கண்டு சிலருக்கு எப்பொழுதும் தீராப்பழி அவரிடம். அவரும் தம் பதற்றத்தைச் சற்றும் மறைக்கப் பார்த்ததில்லை. எல்லாம் சேர்ந்து கொண்டு அவருக்குத் தொந்தரவு கொடுக்கத் தொடங்கின. அவருக்குக் காரியத்தில் இருந்த சிரத்தை, எதிர்ப்பு எதுவரினும் அதைத் தூக்கி எறிந்துவிட்டு மேலே செய்ய வேண்டியதைக் கவனிக்கும் தைரியத்தைக் கொடுத்தது. வாச்சா, சற்று சால்ஜாப்பாகவே பதிலும் எழுதினுர். காலதாமதம் ஆனதன் காரணங்களை எடுத்துச் சொல்லி விட்டுப் பின்வருமாறு தெரிவித்தார்:

"நீங்கள் மிகவும் அவசரப்படுகிறீர்கள். ஆனல் நான் அறிவேன், உங்கள் ஊக்கத்தையும், காரியத்தைச் செய்து முடிக்கும் ஆற்றலையும். எல்லாம் சரியாகவே நடக்கும். இன்னும் கூடிய சீக்கிரத்தில் காங்கிரஸ் சட்டத்தை அச்சிட்டுப் பிரதிகளை ஒவ்வோர் அங்கத்தினர் கைக்கும் சேரும்படி செய்கிறேன். கவலை வேண்டாம், அதைப்பற்றி."*

காரியதரிசி என்ற முறையில் வாச்சாவையும் என் தந்தை வெருட்டினுர் என்று ஏற்படுகிறது.

இதனிடையில் 'கேஸரி'யில் வெளிவந்த அரசாங்கத்திற்கு விரோதமான கட்டுரைகளுக்காகத் திலகரை அதிகாரிகள் கைதுசெய்து விசாரணைசெய்ய ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். திலகரைப் பம்பாயில்தான் கைது செய்தார்கள். ஆகையால் பம்பாய் நகரம் அல்லோல கல்லோலமாயிருந்தது. மேலும் கொஞ்ச காலமாகத் திலகர் தொழிற்சாலைகளில் வேலைசெய்யும் ஆட்களின் அரசராகவே விளங்கிக் கொண்டிருந்தார். தொழிலாளிகள் என்றுல் கொஞ்சமா? அவர்களின் தொகை சுமார் எண்பதினுயிரத்துக்குமேல் இருக்கலாம். போலீஸாரும் வேண்டிய முன் ஜாக்கிரதைகளைச் செய்ய வேண்டியிருந்தது. கூட்டத்தை உத்தேசித்துப் பூனுவிலிருந்துகூடச் சைனியங்களை வருவிக்க வேண்டியிருந்தது. தொழிலாளிகள் திலகரைப்பற்றிப் பெரிய ஆரவாரம் செய்யத் தலைப்பட்டார்கள். போலீசாருடன் சண்டைகள் ஏற்பட்டு

---

* கடிதம், 6-6-08.

இரண்டு மாஜிஸ்டிரேட்டுகள் கூட்டத்தைக் கலைக்க வந்து சேர்ந்தார்கள். இவையெல்லாம் கோர்ட்டில் திலகர் குற்றம் விசாரணையாகும் பொழுதுதான் நடந்தன. பம்பாயில் நடந்த அமளி வீண்போகாமல், மற்ற மாகாணங்களிலும் மிதவாதக் கட்சியின் பலத்தைத் தாக்கத் தொடங்கியது. மேலும், வங்காளத்தில் ரகஸியச் சங்கங்கள் சில வெடி குண்டுகளைச் செய்வதாக வதந்தி ஏற்பட்டு, அம்மாதிரிச் செய்வதையும் சில இடங்களில் போலீசார் கண்டு பிடித்தார்கள். ரகஸ்யமாய்ச் சிலர் கூடி அதிகார வர்க்கத்தைக் கூண்டுடன் கைலாஸம் அனுப்பச் செய்த ஏற்பாடாகவே அவை கருதப்பட்டன. பத்திரிகைகளை ஒரு பக்கம் அரசாங்கத்தார் அடக்க ஆரம்பித்து விட்டார்கள். எதை எழுதினாலும் பத்திரிகைச் சட்டத்தின் கீழ்க் குற்றமாகக் கருதப்பட்டது. சட்டங்களினால் வேறு சங்கடங்கள் உண்டாயின. காங்கிரஸ் காரியத்தை இந்தச் சந்தர்ப்பத்தில் யார் மன அமைதியுடன் கவனிக்கமுடியும்? "இப்பொழுது வேறு ஒன்றையும் நம்மால் கவனிக்க முடியாது"* என்று வாச்சா சென்னையிலிருந்து சென்ற கடிதங்களைக் கவனிக்க மறுத்துவிட்டார்.

திலகரை நாட்டைவிட்டு வெளியேறும்படி, தண்டித்ததனால் எங்கும் இருள் சூழ்ந்தவிதம் இருந்தது. தண்டனை கடுமை என்று எங்கும் கூக்குரலாயிருந்தது. கோகலே இதனிடையில் சீமைக்குப் போவதாக ஏற்பாடு செய்துகொண்டிருந்தார். அவரும் நேரில் மார்லியிடம் பேசி ஒருவாறு திலகருக்கு அளித்த தண்டனையைக் குறைக்க முயலுவதாகத் தீர்மானித்திருந்தார்.†

கிருஷ்ணஸ்வாமி ஐயரும் திலகரைச் சிறையிடுவதில் அரசாங்கம் செய்வது பெரும் அநீதி என்றே அபிப்பிராயப்பட்டார். "புத்தியில்லாத அரசாங்கத்தின் கொடுமையினால் எவ்வளவோ சிரமங்களைப் பெற்றும், திலகருடைய அசைக்க முடியாத மனவலிமை ஒன்றே குற்றம் செய்யாத தூய்மையின் ஞாபகத்தினால் அவரைத்

* கடிதம், 18-7-08.

† ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளின் கடிதம், 25-7-08.

தலையைக் கீழே தொங்கவிடா வண்ணம் செய்தது. அவருடைய மனத்தின் நிதானமே அவரைப் பெரியதொரு காரியத்தையும் செய்யச் சௌகரியம் செய்தது'' என்று உணர்ச்சியுடன் வெளியிட்டார் தம் அபிப்பிராயங்களை.

கோகலே சீமையிலிருந்துகொண்டு செய்த காரியங்கள் இவைமட்டுமா? எத்தனையோ விதங்களில் அவர் பாடுபட்டும் மார்லி பிரபுவின் அநுதாபத்தைப் பெற்றிருந்தார்.

## அத்தியாயம் 13

### இந்திய ஊழியர் சங்கத்தில் ஊக்கம்

"அன்பர்பணி செய்யவெனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" —தாயுமானவர்.

கோகலே இந்திய ஊழியர் சங்கத்திற்காக யாசித்த பணத்திற்கு அதுவரையும் ஒரு கடிதத்திலாவது கிருஷ்ணஸ்வாமி ஐயர் எவ்வித உத்தரமும் கொடுக்காததைக் கண்டு சிலர் சந்தேகித்திருப்பார்கள். மொத்தமாக ஒரு தொகை கொடுக்க அவருக்கு இஷ்டமில்லையோ என்றுகூடச் சிலர் நினைத்திருக்கலாம். அவர் செய்த தாமதத்திற்குக் காரணம் அஃதல்ல என்பது அடுத்த மாதம், அதாவது, அக்டோபர் இரண்டாம் தேதியில் அவர் எழுதிய கடிதத்திலிருந்து நமக்கு நன்கு புலப்படுகிறது. அரசியல் விஷயங்களைப் பற்றி எழுதிவிட்டுக் கடைசியில்,

"இதனுடன் ரூபாய் 5000த்துக்கு ஒரு செக்கும் வைத்திருக்கிறேன்; உங்கள் இந்திய ஊழியர் சங்கத்தின்பொருட்டு நான் வாக்குறுதி செய்ததை நிறைவேற்றுவதற்காக இதை அனுப்புகிறேன். உங்கள் சங்கத்தின்பொருட்டுச் செலவுகள் அதிகம் இருக்குமென்று எனக்குத் தோன்றியதால், நான் மாதம் தோறும் பணம் அனுப்புவதைவிட ஒரே தடவையில் இப்பணத்தை அனுப்புவதும் உங்களுக்குச் சௌகரியமா யிருக்குமென்று நம்பியேதான் அனுப்புகிறேன்"*

என்று தெரிவித்திருந்தார். கோகலே முன் கடிதத்தில் புஸ்தகசாலையைத் தாம் நிர்மாணம் செய்வதற்குச் செலவிட ரொக்கப் பணம் கையில் இல்லாமல் போய்விடுமோ என்று பட்ட கவலையேதான் இப்பொருளுதவியை உடனே கிருஷ்ணஸ்வாமி ஐயர் செய்ததற்கும் காரணம். அவரும்,

"உங்கள் கடிதமும், பணமும் கிடைத்தது பற்றி மிக்க வந்தனம்; அனுப்பிய தொகைக்கு இதனுடன் ரசீதும் அனுப்பி

* கடிதம், 2-10-06.



மகாகனம் வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார்

யிருக்கிறேன். உங்களுடைய மிகுந்த தாராளமான கொடைக்கு என்னால் முழுவதும் நன்றியைக் காட்டவும் இயலாதுதான்''* என்று எழுதினர்.

இதனிடையில் நிகழ்ந்த சில முக்கிய விஷயங்களைக் குறிக்காமல் செல்வது உசிதமன்று. வி. எஸ். ஸ்ரீநிவாஸ் சாஸ்திரிகள் அக்காலங்களில் கோகலேயுடனும் கிருஷ்ணஸ்வாமி ஐயருடனும் பழகிப் பெரியவரானதன் சில விவரங்களையும் உலகம் அறிய ஆசைப்படுமல்லவா? 1903-ஆம் வருஷம் முதற்கொண்டுதான் என் தந்தை ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளிடம் நெருங்கிப் பழகியதாகத் தெரிகிறது. அதுவும், ஒரு நாள் கடற்கரை மணலில் பல நண்பர்களுடன் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, முதல் முதலில் அவரை அறிந்ததாகத் தெரிகிறது. பட்டணத்தில் கோகலே 1904-ஆம் வருஷம் ரானடே ஹால் கட்டடம் சம்பந்தமாக வந்தபொழுது சாஸ்திரிகளுக்கு என் தந்தை மூலம் கோகலேயின் பரிசயம் சிறிது ஏற்பட்டது. 'உங்களுக்கு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளை அறிமுகப்படுத்துவதில் எனக்கு மிகவும் சந்தோஷம். ஏனென்றால் அவருடைய மனம் பொதுஜனக் காரியங்களில்தான் ஈடுபட்டிருக்கிறது. அவர் பள்ளிக்கூட உபாத்தியாயராக இருந்தும், அரசியல் விஷயங்களில் அவருக்குள்ள நுண்ணறிவின் சக்தியினாலும் வாக்கின் வன்மையினாலும் பொதுஜனக் காரியங்களில் உழைப்பதற்குத் தகுதி வாய்ந்தவராக இருக்கிறார்' என்றாராம். இதே வார்த்தைகளைச் சொன்னாரோ என்னவோ? சாஸ்திரிகளைப் பாராட்டி, பூரண அநுக்கிரஹத்துடன் வாய்விட்டு வார்த்தைகளைச் சொன்னார் என்பதுமட்டும் உண்மை. சிலரைப்போல் மென்று விழுங்கிப் பிறரைச் சிலாகிக்க முடியாமல் தவித்தவரல்ல அவர். வேண்டிய அளவு பண உதவியைவிட, பிறரிடம் கௌரவத்தை, வாய்ச் சொல்லில் உண்மையான உணர்ச்சியுடன் சொல்லவல்லவர் என்றுதான் நாம் அறிவோமே!

---

* கடிதம், 4-10-06.

இந்திய ஊழியர் சங்கத்தில் சாஸ்திரிகள் எவ்விதம் சேர்ந்தார் என்பதை நம் கைக்கு வந்த சில கடிதங்களைப் பார்த்தாலே தெரியும். என் தந்தையாரை மிகவும் வாழ்த்திய சிலர், சாஸ்திரிகள் அச்சங்கத்தில் அங்கத்தின ராக ஆனதற்கு முக்கிய காரணம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் தான் என்பார்கள். ஆனால் அவ்விதமில்லை நடந்தவிவரம். சாஸ்திரிகள் சங்கத்தில் சேருவதில் என் தந்தைக்குச் சற்றுக்கூட இஷ்டமில்லை என்பது சாஸ்திரிகளுடைய ஒரு பிரசங்கத்திலிருந்து இப்பொழுது தெரியவருகிறது. மேலும் கோகலேயின் வசமிருந்த சில கடிதங்களே சாஸ்திரிகளின் தியாகச் செயல் அவரிடமே முளைத்தது என்பதைப் புலப்படுத்துகின்றன. முதலில் சாஸ்திரிகள் இந்திய ஊழியர் சங்கத்தில் தமக்கு ஏற்பட்டிருக்கும் ஆசையைப்பற்றிக் கோகலேக்கு எழுதினர்:

"ஆறு மாதங்களுக்கு முன், என் கையில் இந்திய ஊழியர் சங்கத்தின் சில விவரங்களைப் பதிப்பித்த தாள்கள் கிடைத்தன. அதுமுதல் எனக்கு அச்சங்கத்தில் அங்கத்தினராக ஆகவேண்டுமென்ற ஆவல் இருந்து வருகிறது. ஆனால் என்னை அங்கத்தின ராக எடுத்துக்கொள்வதற்குமுன், என்னைப்பற்றியும், நான் நம்பிக்கைக்குப் பாத்திரமானவனு என்று அறியவும் நீங்கள் முயலலாம். எனக்கு ஏற்பட்டிருக்கும் இந்த நல்ல தருணத்தை விடுவதும் சரியன்று. ஆகையால் என்னுடைய கைங்கரியங்களை எப்படியாவது ஏற்றுக்கொள்ளவேண்டும். சென்னையிலிருந்து வந்த காங்கிரஸ் அங்கத்தினர்களை வேண்டுமானாலும் என்னைப் பற்றி விசாரித்து அறிந்து கொள்ளலாம். முக்கியமாக ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரையும், ஸ்ரீ ஜி. ஏ. நடேசனையும் விசாரியுங்கள். அவர்களே உங்களுக்கு என்னை முதலில் அறிமுகப்படுத்தி வைத்தவர்கள்"*

என்றெழுதினர். கோகலே அப்பொழுது காசி காங்கிரஸ் அக்கிராஸனராக இருந்த சமயம். பின்பு நடந்தவைகளைப் பற்றியும் நாம் அறியவேண்டும். சாஸ்திரியார் மேலே குறித்தபடி தாம் கடிதம் எழுதியதை என் தந்தையிடம் சொன்னர். என் தந்தை முதலில் அவருடைய செய்லை யோசனையின்றிச் செய்ததாகவே கருதினர்.

* கடிதம், 27-12-05.

"உம்முடைய குடும்பம் பெரியது. தம்பிகள் வேறு வீட்டில் இன்னும் சம்பாத்தியம் செய்ய ஆரம்பிக்காமல் இருக்கிறார்கள். உமக்கோ நூறு ரூபாய் சம்பளந்தான் வருகிறது. மற்றச் சௌகரியங்களை எல்லாம் விடும்படியான கடுமையான விதிகளுக்கு உட்பட்டல்லவா இந்திய ஊழியர் சங்கத்தின் அங்கத்தினராக வேண்டும்? நான் இதை ஒப்பமாட்டேன். நீங்கள் உங்கள் தாயாரிடமும் மனைவியிடமும் கலந்து பிற்பாடு தீர்மானத்தைச் சொல்லுங்கள்" என்றாராம். அதற்கு அவர் தம் தீர்மானத்தை வெளியிட்டு, அதற்கு எதிராகப் பேசுபவர்கள் இருப்பினும் தாம் அவர்களுடைய வார்த்தைகளைக் கவனிக்க முடியாது என்றும், மேலும், வயசு இன்னும் அதிகம் ஆனபிறகு அந்தச் சங்கத்தில் சேர்வதைவிட அப்பொழுதே (அப்பொழுது சாஸ்திரிகளுக்கு வயசு 37) சேர்ந்து விட்டால் தம் ஆயுட்காலத்தில் குறைந்தது கொஞ்ச நாட்களாவது பொதுஜனக் காரியத்தில் ஈடுபட்டிருந்த தான மன அமைதி தமக்கு ஏற்படும் என்றெல்லாம் சொல்லி, தலைவருடைய சந்தேகங்களை விடும்படி கேட்டுக்கொண்டார். இதற்குள் ஊரில் சிலர், சாஸ்திரிகள் அச்சங்கத்தில் சேருவதற்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரே முக்கியத் தூண்டுகோலாக இருந்தார் என்றும், சாஸ்திரிகளுடைய குடும்பச் செலவுக்கே போதாத வரும்படியையும் இழக்கும்படி, கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவரைச் செய்தது தவறு என்றும் வம்பைக் கிளப்பினார்கள். வெகு காலங் கழித்த பிறகு, சாஸ்திரிகளே தாராபுரத்தில் நடந்த ஒரு பிரசங்கத்தில்* தம்மை வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் இந்திய ஊழியர் சங்கத்தில் சேரச் சொல்லவில்லை என்றும், நண்பருடைய மனைவியே ஐயரை, 'உங்களால் செய்ய முடியாத ஒரு காரியத்தை எதற்காக மற்றொருவரைச் செய்யச் சொல்வது?' என்று கேட்டதற்கு, பதிலும் அவருடைய வழக்கமான விதத்தில் அவர் சொன்னதாகவும் சொன்னார். அதாவது, என் தந்தை சாஸ்திரிகளை இந்திய ஊழியர் சங்கத்தில் சேரச் சொல்லவும் இல்லை; வேண்டாமென்று

* 'ஹிந்து', 8-10-1933.

வற்புறுத்தவும் இல்லை. ஏனென்றால், இந்திய ஊழியர் சங்கம் சாஸ்திரிகளைப் போன்ற உயர்குணம் பெற்ற ஒருவரை அடைவதைத் தம்மால் தடுக்க முடியாதல்லவா என்றாராம். ஆனால் மஹாகனம் சாஸ்திரிகள் பல ஆண்டுகள் கடந்த பிறகு எதற்காக இப்பழைய சமாசாரத்தை ஒரு பொதுக்கூட்டத்தில் ஞாபகப்படுத்த வேண்டுமென்று வாசகர்கள் கேட்கலாம். உண்மையை மக்கள் எப்பொழுதாவது அறியவேண்டுமே என்ற ஏக்கமேதான் அதற்குக் காரணம். ஒருகால், பல ஸந்ததிகள் கடந்த பிற்பாடு, யாராவது சரித்திரம் எழுதுபவர்கள் அவருக்குச் சொந்தமான ஒரு நற்காரியத்தில் பிறர் தூண்டுதலை அவர் எதிர்பார்த்தவராகக் காட்டி அபக்கியாதியையும் அவரிடம் சேர்க்கலாம் அல்லவா?

சாஸ்திரிகள் சங்கத்தில் சேர்வதற்கு ஒருவிதச் சிபார்சும் என் தந்தை செய்யவில்லை என்பதற்கில்லை. ஏனெனில் கோகலே வசத்தில் இருந்த கடிதங்களில் ஒன்று இதைப்பற்றிக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சொன்னதை விளக்குகின்றது.

"என் நண்பர் ஒருவர் - மிகுந்த சிரத்தையுடன் கூடியவர், உயர் குணமும் யோக்கியதையும் பெற்றவர், நடேசனுடைய 'இந்தியன் ரெவியூ'வில் உங்களுடைய ஜீவிய சரித்திர வரலாற்றைச் சுருக்கமாக எழுதியவர் - உங்கள் ஊழியர் சங்கத்தின் அங்கத்தினர் ஆவதற்கு ஆசைப்படுகிறார். உங்களுக்கும் காசியிலிருந்து தம் விருப்பத்தை எழுதினாராம். ஆனால் பதிலொன்றும் நீங்கள் எழுதவில்லையாமே!"*

என்று கேட்டார். முன்பு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் கோகலேக்கு எழுதிய கடிதம், காசியிலிருந்து எழுதப்பட்டது. என் தந்தையாரிடம் அவர் நேரில் கோகலேக்கு எழுதச் சொன்னதன்பேரிலோ அல்லது தாமாகவோ என் தந்தையும் இக்கடிதத்தை எழுதியிருக்கவேண்டும் என்பது நிச்சயம். கோகலே அதற்குப் பதில் எழுதினார் என்பதும் மற்றொரு கடிதத்திலிருந்து விளங்குகிறது:

"இந்திய ஊழியர் சங்கத்தில் சேரவேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொண்ட சிநேகிதரை முதலில் நான் தெரிந்து

* கடிதம், 10-1-06.

கொள்ள முடியவில்லை. ஏனென்றால் காசியிலிருந்து வந்த அவருடைய கடிதத்தில் கையொப்பமிட்ட விதத்திற்கும், ஜி. ஏ. நடேசன் நேரில் என்னிடம் தெரிவித்த பெயருக்கும் சற்று வித்தியாசம் இருந்தது. மேலும் ஜி. ஏ. நடேசனிடமும் கேட்கச் சொல்லி அவரே எனக்கு எழுதி யிருந்ததாலும், சௌகரியப் பட்ட பொழுது பதில் எழுதச் சொல்லி யிருந்ததாலும் பார்த்துக் கொள்வோம் என்று தள்ளிப் போட்டு விட்டேன். ஜி. ஏ நடேசனிடமும் பேசியாகி விட்டது. ஆகையால் நிச்சயம் அவரைச் சங்கத்தில் சேரும்படி எழுதி விடுகிறேன்.''*

அவ்வருஷம் பலவிதமான புயற்காற்றுக்கள் பல இடங்களில் அடித்து, வேருடன் அதுகாறும் உயர்ந் தோங்கி வளர்ந்த மரங்களைக் கீழே சாய்த்தன. முதலில் அர்பத்நட் பாங்கியின் மோசம் பெரிய கலவரத்தை உண்டாக்கிய விவரம் சென்னையில் யாவரும் அறிந்ததே. அதனால் பெரிய மனிதர்கள் பலர் ஏழையாயினர். சிறிது தனம் சேர்த்து வைத்தவர்களும் முழு ஓட்டாண்டிகள் ஆனார்கள். சென்னையில் துயரமே உருவெடுத்து வந்த விதம் ஜனங்களின் பெரும்பகுதி துன்புற்றது. கிருஷ்ண ஸ்வாமி ஐயர் நண்பருக்குத் தெரிவித்தார் :

“உங்கள் அநுதாப மொழிகளுக்கு என் நன்றியைப் பெற்றுக் கொள்க. சொந்தத்தில் எனக்கு ஒருவித நஷ்டமும் இல்லை. ஆனால் பலர் படும் துயரத்தைப் பார்த்துப் பன்மடங்கு எனக்கு வருத்தமாயிருக்கிறது.”

கோகலே அவ்வருஷம் மே மாதம் எழுதிய கடிதம் ஒன்றில் பின்வருமாறு தெரிவித்தார் :

''நானும் மேதாவும் இன்னும் மற்ற நண்பர்களும் சேர்ந்து ஒரு விண்ணப்பம் தயாரித்து அதில், தீவிரவாதிகளையும், அவர்கள் செய்யும் அட்டூழியங்களையும் கண்டித்து அதிகாரிகளின் முன் வைக்கவேண்டும் என்கின்றீர்களே ; இந்த அபிப்பிராயத்தில் உங்களுடன் என்னால் சேர முடியவில்லை''†

என்றார். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தீவிரவாதிகளின் மேல் மிகுந்த கோபம். அவர்களால் நல்ல காரியம் கெட்டுவிடும் என்ற கவலையும் உண்டு. எதையும் கண்டு பயப்படாத உள்ளத்தினராகிய அவர், கோடைக்கான

* கடிதம், 13-1-06.

† கடிதம், 27-5-07.

லுக்கு விடுமுறைக்காகச் சென்ற இடத்தில், பாதிரி மார்கள் கூட்டத்தில் பேசியபொழுதும், தீவிரவாதிகள் அரசியலில் செய்யும் காரியங்களைக் கண்டித்தார். அதைப்பற்றி 'ஹிந்து' 'மெயில்' முதலிய பத்திரிகை களில் பலர் கோபித்துக் கடிதங்கள் எழுதினார்கள். சிலர் அவைகளை அவருடைய பிதற்றல்களென்று வைதார்கள். அவருடைய தேசபக்தி பெரும் புரட்டு என்றார்கள். அவருடைய மிதவாதம் எல்லாம் கீழ்த்தரமென்று கத்தி னார்கள். இதனிடையில் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளும், 'எதற்கு உங்கள் தலையில் பெரும் புகாரை வரவழைத்துக் கொண் டீர்கள். போகிறது; பாதிரிமார்களை மனம் கரைய வைத்துவிட்டீர்கள். மிக்க நன்மை வராவிட்டாலும் இதைச் சொல்லவேண்டியதும் அவசியமே' என்றார். கோகலே எவ்வாறு நண்பரை மெச்சினார் என்பதையும் சாஸ்திரிகள் அதே கடிதத்தில் குறிக்கின்றார்:

"கோகலே உங்கள் பிரசங்கத்தை வாசித்துவிட்டு, 'என்ன ஆச்சரியம் இந்த மனுஷ்யனுடைய புத்தி வேகந்தான்! எப் பொழுதும் நுண்ணியதாகவும் ஆழ்ந்ததாயும் தெரிகிறது. சாமான்யமாகக் காணவில்லையே! தனிப்பட்ட ரகந்தான் இவ ருடைய புத்தி என்றார்."*

கோகலேயின் தமையனார் இதனிடையில் இறந்து விட்டதால், கோகலே மிகுந்த வருத்தத்துக்கு உள்ளானார். அவ்வருஷம் ஜூன் மாதம் வந்த கடிதத்தில் நண்பரின் அநுதாபத்தைப் பெற்றதற்கு நன்றி செலுத்தியபின் அவர் கேட்ட விதமே ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளைக் காங்கிரஸ் காரியத்திற்காகச் சென்னைக்கு அனுப்புவதாகவும் வாக்களித்திருந்தார். ஆனால் அக்காரியங்களை அந்த வருஷமே செய்ய முடியவில்லை. மேலும் சீமையிலிருந்து தொழிலாளிகளின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கீர்ஹார்டி என்பவர் இந்தியாவைச் சுற்றிப்பார்த்து, கிராம வாசங்களையும் பற்றி அறிய முயன்று இங்கு வந்து சேர்ந்தார். அவரைத் தென்னிந்தியாவில் வரவேற்கவும், மற்றப்படி அவருக்குச் சௌகரியங்களைச் செய்து கொடுக்

* கடிதம், 27-5-07.

கவும் கோகலே கிருஷ்ணஸ்வாமி ஐயரையே வேண்டிக் கொண்டார். பெரிய தொழிலாளர்கள் சங்கத்தின் பிரதிநிதி அல்லவா மிஸ்டர் கீர்ஹார்டி ? அதனால் இந்திய சுதந்தர இயக்கத்தின் பொருட்டும், நல்ல வார்த்தை எதையாவது சீமையில் பார்லிமெண்டில் சொல்ல முயல்வார் என்ற நம்பிக்கையும் சேர்ந்தே அவரை இங்கு வரவழைப்பதில் என் தந்தையாருக்கும் ஆவல் அதிகம் உண்டாயிற்று. மஹாஜன சபையில் அவர் வருகையைக் குறித்துச் சில தீர்மானங்களைக் கொண்டுவந்தார்கள். அவரை நேரில் பம்பாயில் சந்திப்பதாகக் கோகலேயும் ஒரு கடிதத்தில் நண்பருக்கு எழுதினார்.*

பிறகு கீர்ஹார்டிக்குத் தென்னிந்தியாவைச் சுற்றிப் பார்க்க உதவிக்காக ஸ்ரீநிவாஸ சாஸ்திரியாரையும் கூட அனுப்பினார். கீர்ஹார்டியும் இலங்கையிலிருந்து சென்னைக்கு வந்தார். வருவதற்குமுன் என் தந்தைக்கும்,

> "எந்தத் தேதியில் சென்னை வருவது என்பதை நான் இன்னும் தீர்மானிக்கவில்லை. பிற்பாடு எழுதுவேன். உங்களை நேரில் பார்க்க ஆவலுடன்தான் இருக்கிறேன்"†

என்று கடிதம் எழுதியிருந்தார். விருந்தினரைச் சரியானபடி வரவேற்கத் தக்கதான ஏற்பாடுகளைச் செய்ய, கிருஷ்ணஸ்வாமி ஐயர் சென்னை வாசிகளைத் தூண்டிக்கொண் டிருந்தார். பிறகு குறித்த தினத்தில் கீர்ஹார்டி பட்டணம் வந்து சேர்ந்தார். வந்தவர், மயிலாப்பூர் வாசிகளுடன் சரஸமாய்ச் சல்லாபம் செய்ய மயிலாப்பூர் கிளப் தோட்டத்திலேயே ஓர் அழகிய வரவேற்புக் கொண்டாட்டத்தை என் தந்தை சிறப்புடன் நடத்திவைத்தார். அன்று அச்சமயத்தில் சொற்பொழிவு களும் நடந்தன. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பேச்சைக் கேட்டுவிட்டு கீர்ஹார்டி, "எங்கள் தேசத்தில் கிளாட்ஸ்டன் என்பவரே இவ்வளவு வேகமாயும், சுருக் கெழுத்துக்களில் பிரசங்கத்தைக் குறித்துக்கொள்பவர் களைத் திணற அடிக்கும்படியும் பேசுவார். அதன் பிறகு

---

* கடிதம், 1-9-07.

† கடிதம், 2-10-07.

இன்று கிருஷ்ணஸ்வாமி ஐயரே அம்மாதிரி வேகத்துடன் பேசியதை நான் நேரில் கேட்டேன்" என்றாராம். இதை ஸர் சிவஸ்வாமி ஐயர் ஞாபகத்தில் வைத்துச் சொன்னார். உண்மையில் திகைப்பைக் கிளப்பும் வேகத்தோடு பேசியவர் தெளிவை இழக்கவில்லை என்பதுதான் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குப் பெருமையை அளிக்கின்றது.

இதனிடையில் நெவின்ஸன் என்ற சீமைப் பத்திரிகை ஆசிரியர் ஒருவர் சென்னைக்கு வந்து சேர்ந்தார். அவருக்குச் செய்யவேண்டிய வரவேற்பு மரியாதைகளைப்பற்றி, என் தந்தைக்குக் கோகலே ஒரு தகவல் கொடுத்துவிட்டார்.

கோகலே சீமைக்கு மறுவருஷம் செல்லவேண்டியிருந்தது. பாதியில் நிறுத்திவைத்த இந்திய அரசியல் திட்டங்களைப்பற்றிய கவலையே அவருக்கு அதிகம். அங்கே சென்று அது சம்பந்தமாக வேலைசெய்யத் துரிதமாக ஆரம்பித்தார். கோகலே அச்சமயத்தில் உடம்பு அசௌகரியத்தினால் சில மாதங்கள் சீமையில் தங்கி, சில வைத்தியர்களையும் கண்டு தேகஸ்திதியையும் கவனித்துக் கொண்டிருந்தார்.

இந்திய ஊழியர் சங்கத்தின் செய்தி இதனிடையில் சற்று நம் முன் வருகிறது. கட்டட சம்பந்தமாக அவர்களுக்குச் செலவு அதிகமாயிற்று. மேலும் சென்னையிலும் ஒரு கிளைச் சங்கம் வைத்தால் நலம் என்பது கோகலேயின் அபிப்பிராயம். சென்னை நண்பரைக் கேட்டதற்கு அவர் ஆக்ஷேபம் செய்யவில்லை. அதனுடன் நில்லாமல் தாம் மறுபடியும் ரூபாய் 5000 கொடுப்பதாகவும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சாஸ்திரிகளிடம் சொல்லிக் கோகலேக்குத் தெரிவிக்கச் சொல்லி யிருந்தார். அப்பொழுது வீட்டில் எங்கள் தாய் நோய் வாய்ப்பட்டுக் கிடந்தாள். பலகாரியங்கள் வேறு அவருக்கு இருந்தன. விசாகப்பட்டணம் முதற்கொண்டு தூத்துக்குடி வரையும் சதா தொழில் முறையில் அலைச்சலும், பல பொதுஜன ஸ்தாபனங்களுக்காக உழைப்பும் அவருக்கு ஏற்பட்டன.

"மறுபடியும் ரூபாய் 5000-0-0 நீங்கள் கொடுக்க உத்தேசித்த விவரம் சாஸ்திரிகள் எனக்கு எழுதியிருக்கிறார்.

அதை வேண்டும்பொழுது கொடுப்பதாகச் சொன்னதாய்த் தெரிகிறது...நீங்களே தெரிவிப்பதால், எல்லாத்தொகையையும் உடனே அனுப்புவதுதான் தேவலை......ஒன்று நிச்சயம்; இனி உங்களை மறுபடியும் பணம் கேட்கமாட்டேன். இதை நான் எழுதுவதன் காரணம், சாஸ்திரிகள் நீங்கள் இட்ட நிபந்தனைகளை என்னிடம் தெரிவித்ததால்தான்...சாஸ்திரிகள், மேலும் உங்கள் மனைவியின் தேகநிலைமை மனத்திற்குத் திருப்தியாக இல்லையென்று சொல்லுகிறாரே! உங்கள் உடம்பும் நன்றாக இல்லையாமே! உங்களை விட்டால் வேறு ஒருவரும் உங்கள் இடத்தைப் பொதுவாழ்க்கையில் அடைவதற்குத் தகுதியுடையவராகவே எனக்குத் தெரியவில்லை. ஆகையால்தான் கேட்டுக் கொள்ளுகிறேன்: தயவுசெய்து உங்கள் உடம்பையும் கவனித்துக் கொள்ள வேண்டும்''*

என்று கோகலே எழுதினார். அதனுடன் நிறுத்திக் கொள்ளாமல் மேலும்,

''நீங்கள் உடனே சொன்னபடி அனுப்பிய பணத்தைப் பெற்றுக்கொள்வதில் என் சந்தோஷந்தான் எவ்வளவு என்று அளவிடமுடியாது. ஏன் மிக்க பொறுப்புள்ள இக்காரியத்தை மேற்கொண்டோம் என்ற கவலைதான் எனக்கு உண்டாகி விட்டது''†

என்று எழுதினார்.

நண்பருக்குச் சற்று மனக்கலவரம் ஏற்பட்டது. ஏனென்றால் தாம் ஏதோ சில நிபந்தனைகளை இட்டதாகச் சாஸ்திரிகள் சொன்னார் என்று கோகலே எழுதியதுதான் அவர்கொண்ட கலவரத்தின் காரணம். ஆகையால் பிற்பாடு மூன்று மாதங்கள் கழித்துப் பணம் அனுப்பும் பொழுது,

''சாஸ்திரிகள் என்னைச் சரியாக அறிந்துகொள்ளவில்லை என்று நினைக்கிறேன். நான் ஏதோ நிபந்தனைகள் இட்டதாகச் சொன்னார் என்பது தவறு. இனி என்னைப் பணம் கேட்கவே கூடாது என்று நான் சொன்னதாகவல்லவா தெரிகிறது? நீங்கள் சென்னைக் கிளைச் சங்கத்துக்குத் திரட்டும் பொருளுதவி ஜாப்தாவைப் பொறுத்தமட்டில் 'இவ்வளவுதான்' என்றேன். மேலும், உடனே மறுபடியும் கேட்கவேண்டாம் என்றுதான் சொல்லியிருப்பேன். இந்த விஷயத்தில் ஒருவிதமான தீர்மானமும் எனக்கு இல்லை. நீங்கள் அவசியம் உங்கள் சங்கத்தைக் கவலைப்படாதவிதம்

* கடிதம், 16-6-09.

† கடிதம், 16-6-09.

வைக்கவேண்டாமா? இதைச் செய்வதற்கு உங்களைத் தவிர வேறு ஒருவரையும் நான் காணவில்லையே!''*

பணத்தைக் கொடுப்பதிலும் தாராளம். நல்ல விஷயங்களில், கொடுப்பது போதாது என்ற கவலையும் ஒருங்கே சேர்ந்திருந்தது அவருள்ளத்தில். ஆகையால்தான் உடனே சாஸ்திரியாருக்கு எழுதியும் இருக்க வேண்டும் என்று தெரிகிறது. சாஸ்திரிகளுடைய ஜூன் மாதக் கடிதம்,

"இது சின்னவிஷயம். ஆனல் நான் இதைப்பற்றி விளக்க வேண்டியதும் அவசியம். நான் நீங்கள் சொல்லியதைப் புரிந்து கொள்ளாமலும் இல்லை; வேண்டுமென்று மாற்றிச் சொல்லவும் இல்லை. நீங்கள் சொன்னபடி, 'ரூபாய் 5000 தான் தருவேன்; இனிமேல் இல்லை' என்றதை அவருக்கு எழுதினேன். கடைசி இரண்டு வார்த்தைகளின் பேரில் நீங்கள் அழுத்தியதாகச் சொன்னேன். நீங்கள் சொல்லும் குரலும் அவைகளின்மேல் அழுத்தியதாக எனக்குத் தோன்றியது. ஒருகால் இதைக் கோகலே வேடிக்கைக்காக 'நிபந்தனை' என்று குத்திக் காட்டி யிருக்கலாம்''†

என்று முன்பே தெரிவித்திருந்தது.

கோகலேயையும், அவருக்குச் சதா உதவிசெய்ய முன் வந்தவரையும், இவர்களிடையே உயர்ந்த கருத்துக்களை மட்டும் உட்கொண்ட ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளையும் பற்றி அறியும்பொழுது நம் யாவருக்குமே சிநேகிதத்தின் எல்லையை எட்டிப்பிடித்த உதார குணங்களைப்பற்றிய பெருமை வரத் தொடங்குகிறது. கோகலே மேலும் சொன்னதை அதே கடிதத்தில் எழுதுகிறார் சாஸ்திரிகள்:

"உங்களைப்பற்றி அவர் சொல்வதைக் கேட்கக் கேட்க என் மனத்தில் உணர்ச்சி பெருகுகிறது. உங்களிடம் சகோதர வாஞ்சை அவருக்கு ஏற்பட்டிருப்பதாகவே சதா என்னிடம் சொல்லுகிறார். உங்கள் உயர்ந்த கருத்தையும் உள்ளத்தின் கனிவையும் கண்டு உளம் பூரிக்கின்றார்."

எழுதியிருப்பதைப் படித்தாலே, சாஸ்திரிகளும் எவ்வளவு தம் குருவின் மொழிகளை ஆமோதித்தார் என்பது எளிதில் விளங்கும்.

* கடிதம், 18-9-09.

† கடிதம், 22-6-1909.

அடுத்ததாக ஒரு விஷயம்: அது கோகலேயின் உடம்பைப் பற்றியது. நீர்ரோகம் அவரைத் தன் வசப் படுத்திக்கொண்டது. அதிலும் அவர் தம் நண்பரை முழுவதும் ஒத்திருந்தார். அவருடைய நீர்ரோகம் நாளுக்கு நாள் அவரை உருக்கியது. வியாதி அதிகமாகி நோயாளியாகத் தாம் ஆகிவிட்டால், இந்திய ஊழியர் சங்கத்தைக் கவனிக்க ஒருவரும் இல்லாமல் போய் விடுமே என்ற கவலை அவருக்கு வந்ததும்,

"நான் இருக்குமளவும் என்னாலானதைச் செய்து பார்ப்பேன். பிறகு கிருஷ்ணஸ்வாமியைத்தான் இக்காரியத்தை ஏற்றுக் கொள்ளச் சொல்லவேண்டும்; சொல்லுவீர்களா சாஸ் திரிகளே?"*

என்று தம்மருகில் இருந்த சாஸ்திரிகளை மனக்கலக்கத் துடன் கேட்பாராம். கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மனம் இதைக்கேட்டதும் பூனாவிற்கே பறந்து சென்றுவிடும். பிறகு கேள்வியின்மேல் கேள்விதான் கோகலேயின் உடம்பைப்பற்றி. "நல்ல மருந்து வேண்டுமானால் சென்னைக்கு வந்தால் சாப்பிடலாமே. ஏன், இரண்டு மூன்று அல்லது ஆறுமாதம் விச்ராந்தியாக எங்காவது போய்த் தனியே இருக்கலாகாது?" என்பார் கலவரத்துடன். பிறகு,

"நல்ல குணம் ஏற்பட்டிருக்கிறது அவருடைய தேக ஸ்திதியில்"†

என்று சாஸ்திரிகளிடமிருந்து பதில் வந்ததும் சிறிது மன அமைதி பெறுவார்.

---

* சாஸ்திரிகள் கடிதம், 22-6-09.

† கடிதம், 10-7-09.

## அத்தியாயம் 14

### அர்பத்நட் பாங்கு நடவடிக்கை

சென்னை நீதிஸ்தலத்தில் புகழ்பெற்ற வக்கீல்கள் அன்றும் இருந்தார்கள், இன்றும் இருக்கிறார்கள். ஆனால் சாமான்யமாகச் சட்டஞானத்தில் தேர்ச்சிபெற்ற நீதிவாதிகளுக்கு நடவடிக்கை விசாரணைகளில் அவ்வளவாகத் திறமை ஏற்படுவது எளிதன்று. விசாரணை செய்யும் பழக்கம் நன்கு ஏற்பட்டவர்களுக்குச் சட்ட ஞானம், தீர்ப்புக்களின் ஞாபகம் முதலியவை ஏற்படுவதும் சுலபமன்று. இன்னும் சிலருக்குச் 'சிவில்' வழக்குகளில் அதிக அநுபவம் இருந்தும், 'கிரிமினல்' வழக்குகளின் விதங்களே தெளிவுபடுவதில்லை. இவைகள் எல்லாம் தொழில் துறையில் உள்ளவர்களுக்கு அதிகம் சொல்லாமலே அநுபவத்தில் தெரியவரும். வக்கீல்தொழில் சம்பந்தமான காரியங்களில் பல துறைகள் இருப்பதும், அவைகளில் தனித் தனியே பயிற்சி பெற்றவர்கள் ஏற்படுவதும் நீதிஸ்தலத்தைச் சிறப்பிக்க உதவியாக இருக்கும் என்பது ஒரு கொள்கை. ஏனென்றால், எல்லாத் துறைகளிலும் சமமான பிரவேசம் இருந்துகொண்டு, ஒன்றிலும் தனிச் சிறப்பு ஏற்படாத மரபைக் காட்டிலும், ஒவ்வொரு விதமான அநுபவத்திற்கும், பயிற்சிக்கும் தனித்தனியே சிலர் மட்டும் இருப்பது கட்சியாடுகிறவர்களுக்குத் தயக்கம் இல்லாமல் தங்களுக்கு வேண்டியவிதத்தில் வக்கீல்களைத் தேடச் சௌகரியமாக இருக்கும்.

முன்னதாகவே எல்லாம் யோசித்துத்தானா உலகத்தில் காரியங்கள் நடைபெறுகின்றன என்றால், இல்லை; ஓர் அளவுக்கு அவரவர்களின் சொந்தத் தகுதிகளையும் பொறுத்துத்தான் தொழிற் சிறப்பு ஏற்படுகிறது. தொழிற் பயிற்சியும், நீதிஸ்தல அநுபவமும் வளர வளர, கிருஷ்ண

ஸ்வாமி ஐயருக்கு விசாரணை வழக்குகளில் எவ்வளவுக்குப் புத்தி சென்றதோ அதே அளவில் வாதங்களைத் தீர்ப்பு ஞாபகங்களுடன் ஜோடனை செய்து காட்டும் ஆற்றலிலும் வேகம் உண்டாயிற்று. .அவருக்கு இருந்த பேச்சு வன்மை அதிகமாகச் சோபித்ததன் காரணங்கூட அவருக்கு உண்டான விசாரணை வழக்குகளின் அநுபவமே. முதலில் இருந்தே வெளி ஊர்களில் விசாரணை நடவடிக்கை சம்பந்த மான வழக்குக்குத் தம்மை ஆஜராகும்படிக் கேட்டுக் கொண்டால், சற்றும் தயங்காமல் அதை ஒப்புக்கொண்டு கிளம்பி விடுவார். சென்ற இடங்களில் விசாரணை நடத்து கையிலும் தம் புத்தி சாதுர்யம் முழுவதையும் அதில் காண்பித்து வெற்றியுடன் திரும்புவார்.

தென் இந்தியாவிலுள்ள பெயர் பெற்ற தருமபுர ஆதீனத்திற்காகப் பலவிதமான நடவடிக்கைகளில், சிறிய வக்கீலாக இருந்த நாட்கள் முதற்கொண்டு ஆஜரானவர் அவர். 1892 - 1893-ஆம் வருஷங்களின் இடையில் பூண்டி வாண்டையார் என்ற பிரபல கனவா னுடைய ஆட்களில் சிலர் திருவையாற்றுப் பஞ்நதீசுவரர் ஆலயத்துக்குச் சொந்தமான சிறு கிராமமொன்றில் புகுந்து, அங்குள்ள நெற்களஞ்சியங்களை யெல்லாம் கொள்ளை அடித்து விட்டார்கள். அப்போது எடுத்துக் கொண்ட கிரிமினல் நடவடிக்கையில் கோவில் தருமகர்த்தர் என்ற உரிமையில் தருமபுரம் பண்டார சந்நிதியும் அதில் கலந்துகொள்ள வேண்டியதாயிற்று. ஆதீனத்திற்காகக் கிருஷ்ணஸ்வாமி ஐயரைச் சென்னையிலிருந்து மடத்து அதிகாரிகள் அழைத்துச் சென்றார்கள். வாண்டையாருக் காக அக்காலத்தில் தஞ்சையில் பிரபல வக்கீலாக இருந்த கல்யாணசுந்தரம் ஐயர் நடவடிக்கையை நடத்தக் கோர்ட்டில் நின்றார். குற்றவாளிகளுக்கு 7-வருஷம் கடுங் காவல் தண்டனை விதிக்கப்பட்டது. கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தருமபுர ஆதீனத்தின் சார்பாக அன்று முதல் அடிக்கடி ஆஜர் ஆகவேண்டியதாயிற்று.

1894–ஆம் ஆண்டில் ஒரு சிவில் வழக்கில் தஞ்சாவூர் கே. எஸ். ஸ்ரீநிவாஸ பிள்ளையுடன் ஞானசம்பந்த பண்டார

சந்நிதிக்காக ஆஜராகி, பிற்பாடு சென்னை ஹைக்கோர்ட்டிலும், வி. பாஷ்யம் ஐயங்கார் தலைமையின் கீழ் வாதித்து, பண்டார சந்நிதியின் சார்பில் ஜயத்தை அடைந்த விவரம் அந்நாட்களில் பலர் அறிந்திருந்தார்கள். தருமபுரம் பண்டாரசந்நிதி வைத்தீசுவரன் கோவில் டிரஸ்டி என்ற முறையில் பெற்ற ஜயம் அது.

1897-ஆம் ஆண்டில் கிரிமினல் வழக்கு ஒன்றில் தருமபுரம் பண்டார சந்நிதியின்மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டுக் கும்பகோணம் சப் கலெக்டர் முன்பாக நடந்த விசாரணையில் ஆதீனத்திற்காக நின்று விசாரணை செய்து, பிற்பாடு தஞ்சாவூர் ஜில்லா ஜட்ஜின் முன்னிலையிலும் ஸெஷன்ஸ் கோர்ட்டில் ஆஜரானார். மிகவும் கியாதியுடன் விளங்கிய கல்யாணசுந்தரம் ஐயர் தலைவராக இருந்து அந்த விசாரணையில் உழைத்தார். மிஸ்டர் ஸ்காட் என்பவர் ஜட்ஜாக இருந்தார். எதிர் தரப்பில் பப்ளிக்ப்ராசிகூட்டர் கேசை நடத்தவும், கிருஷ்ணஸ்வாமி ஐயர் சாட்சி விசாரணைகளைத் தாமே செய்து, ஜூரிகளுக்குத் தமிழிலும் வழக்கை நன்கு விவரித்த வரலாற்றைப் பிரமாதமாக அக்காலத்து மனிதர்கள் புகழ்வார்கள். அன்று முதல் கல்யாணசுந்தரம் ஐயருடைய நுண்ணறிவைப் பற்றிச் சிலாகிப்பார் கிருஷ்ணஸ்வாமி ஐயர்; 'நார்ட்டன் துரையைவிடக் குறுக்கு விசாரணையில் கல்யாண சுந்தரமையருக்குத்தான் புத்தி அதிகம்' என்பார்.

கிரிமினல் ஆனால் என்ன, சிவில் ஆனால் என்ன, விசாரணை வழக்கும் சரி, சட்ட வாதமும் சரி, என்றுதான் கிருஷ்ணஸ்வாமி ஐயர் எல்லாவித அநுபவங்களையும் தம் புத்தி வளர்ச்சிக்கு இன்றியமையாதனவாகக் கருதத் தொடங்கினார். அக்காலங்களில் பிரபல கிரிமினல் வக்கீலான ஆர். சடகோபாசாரியாருக்கு எதிர் தரப்பில் மற்றொரு நடவடிக்கையில் ஆஜரான விவரமும் பலருக்கு ஞாபகம் உண்டு. எதைக் கண்டும் சளைக்காத புத்தி என்றுதான் அவர் அறிவைச் சொல்லவேண்டும். ஆனால் உண்மையில் அவருடைய விசாரணை சக்தியின் சிகரம்போல் உள்ளது, 'அர்பத் நட் இன்ஸால்வன்ஸி' நடவடிக்கைதான்.

அதில் அவர் காட்டிய நுண்ணறிவும், விசாரணைக்கான சமயோசித புத்தியும் வெகு காலம் வரையில் நீதி ஸ்தலத்தில் உள்ள பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் குன்றாத வியப்பை அளித்தன. சீமையிலுங்கூட அவருடைய புகழ் எட்டியது என்றே அச்சம்பவத்தைக் குறிக்குங்கால் சொல்லவேண்டும்.

அர்பத்நட் பாங்கு என்பது சுமார் நூறு வருஷங்களாகப் பணம் கொடுக்கல் வாங்கல் செய்து வந்திருந்தது. சென்னையில் பெரியதொரு பாங்காக வெகு காலமாய் ஜனங்களின் ஆதரவைப் பெற்றும் வந்தது. அதன் முக்கியமான பங்காளிகளில் ஒருவராகிய ஸர் ஜார்ஜ் அர்பத்நட் என்பவர் மிகுந்த செல்வாக்குப் படைத்தவர். சென்னையில் கவர்னருக்கு அடுத்தபடியாகப் பொது ஜனங்கள் அவருக்கு மரியாதைகளைச் செய்வார்கள். தெருவில் சிலசமயம் நான்கு புரவிகள் பூட்டிய அவருடைய உயர்தர வாகனத்தைப் பார்த்த ஜனங்களுக்கு அவருடைய அந்தஸ்தில் ஏற்பட்ட பிரமையை விவரிக்க வொண்ணாது. அவருடைய சொற்பொழிவுகளைப் பல முறை மேடைகளில் கேட்டவர்கள் உண்டு. சாதாரண மாய் அவர் தலைமை வகிக்கும் பெரிய கூட்டங்களும், அவருடைய ஆதரவில் நடை பெறும் விசேஷங்களும் ஊரில் அதிகம் ஏற்பட்டன. சென்னைச் சட்ட சபையில் அரசாங்கத்தாரால் அங்கத்தினராக நியமிக்கப் பட்டவர் களிலும் ஒருவராக அவர் இருந்தார்.

1904–ஆம் ஆண்டில் ஒரு சமயம் அவரையும் மற்றும் சில வெள்ளைக்காரர்களையும் 'இந்த நாட்டில் தங்காதவர்கள்' என்று ஏசிய வார்த்தைகளைக் குறித்துச் சட்ட சபையி லேயே பெரியதொரு பிரசங்கத்தை அவர் செய்தார்.

"என்னுடைய கடையும், மற்றும் என்னைப்போல் உள்ளவர் களின் வியாபாரப் பழக்கங்களும் இந்தச் சென்னபட்டணத்தில் ஒருநாள் இரண்டு நாட்கள் நடக்கும் காரியங்கள் அல்ல. குறைந் தது நூறு வருஷங்களுக்குச் சரியான காலத்தில் இங்கு எங்க ளுடைய பழக்கம் ஏற்பட்டு இருக்கிறது. எங்கள் கடையில் மட்டும் 1200 பேர்களை வேலையில் வைத்துள்ளோம். அவர்களில் 95 சத வீதம் இந்தியர்களே வேலைகளில் அமர்த்தப்பட்டுள்

ளார்கள், ரூபாயும் பத்து லக்ஷங்களாவது வருஷந்தோறும் செலவு ஆகின்றன, வேலைக்காரர்களின் சம்பளத்திற்காக. இப்படிப்பட்டவர்களைப் பார்த்து 'இங்கே தங்காதவர்கள்' என்று குறை கூறுவது சுத்தப் பிசகு. எங்களுக்கு இந்த நாட்டின் க்ஷேமத்தில் உள்ள கவலை கொஞ்ச நஞ்சம் அன்று. அப்படி இருக்கையில் இவ்விதம் எங்களை அவதூறு செய்வது அக்கிரமம் என்பதில் ஐயம் இல்லை''

என்று தம் கோபத்தை எல்லாம் வைத்துக்கொண்டு காரமாய்ப் பேசிவிட்டார்.

ஆனால் இப்பிரசங்கம் செய்யப்பட்டு இரண்டே வருஷங்களில், அதாவது 1906-ஆம் ஆண்டு அக்டோபர் 20-ஆம் தேதியுடன் சென்னையில் 'அர்பத்நட் பாங்கு' மூடப் பட்டது. சென்னை ராஜதானியில் இதைவிடப் பெரிய துர்க்கதி ஜனங்களுக்கு ஏற்படக் கூடியது இல்லை. பெரியவர்களும், சிறியவர்களும், கோடீசுவரர்களும், சாமான்ய அந்தஸ்துள்ளவர்களும் தாங்கள் சேமித்த சொத்தையெல்லாம் அந்தப் பாங்கில்தான் போட்டிருந் தார்கள். சுமார் ஒரு வருஷத்திற்கு முன்பே கல்கத்தா நண்பர் ஒருவர் என் பெரிய தகப்பனாரிடம் எச்சரிக்கை செய்ய, அவர் தம் சுயார்ஜிதமான தொகைகளைப் பாங்கில் இருந்து வாங்கிவிட்டார். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குச் சொந்தத்தில் பணம் ஒன்றும் 'அர்பத்நட் பாங்'கில் இல்லை. ஆனால் 'சுதேசி நிதி'யின் தொகையில் சிறிது அங்கேதான் வைக்கப்பட்டிருந்தது. பாங்கு மூடும் தினத் தன்றுகூட ரூபாய் 2000-த்தைச் 'சுதேச நிதி'க்காக அதில் கட்டியிருந்த விவரம் பிற்பாடு வெளியாகியது. சுதேச நிதியின் காரியதரிசியாக அக்காலத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் இருந்தார்.

கொஞ்ச காலமாகவே பாங்கின் காரியங்களில் ஊழல்கள் இருக்கக் கூடுமென்று எதிர்பார்க்க இடம் இருந்தது. ஆனால் சொத்துக்களை அதில் வைத்திருந்தவர் களுக்கு ஒரு விதத் தகவலும் தெரியாதபடி பாங்கு அதிகாரிகள் ஊழல்களை மறைத்து விட்டார்கள்.

சீமையில் பாங்கின் கிளைக் காரியாலயம் ஒன்று இருந்தது. அங்கே பங்காளியாக இருந்த மிஸ்டர் மாக்

பாடியன் என்பவர் திடீரென்று தற்கொலை செய்து கொண்ட செய்தி சென்னைக்கு எட்டியது. உடனே ஜனங் களுக்கெல்லாம் 'பெரிய துஷ்கிருத்தியங்கள் சில வருஷங் களாக அங்கு நடந்திருக்கவேண்டும்; அம்மாதிரி ஒருவர் தம் உயிரை மாய்த்துக்கொள்ளத் துணிந்ததற்குக் காரணம் அவைதாம்' என்றும் பட்டது. உண்மையில் பாங்கு படுத் தது பணம் போட்டவர்களுக்குத் தொகை முழுவதும் கைக்கு வராவிட்டாலும், ஏதாகிலும் ரூபாய்க்குப் பாதி யாகிலும் வருவதற்கு வழி செய்யும் காரியத்திற்கும் இடையூருகவே மாக்பாடியனின் மரணம் ஏற்பட்ட தென்று பல அநுபவசாலிகளுக்குத் தோன்றியது. சீமைப் பத்திரிகைகளில் ஒன்ருன 'லண்டன் டைம்ஸ்' இச்சம்பவத்தைக் குறித்து மிகவும் வருந்தியது. "இந்தி யர்களுக்கு வெள்ளைக்காரர்களின் தூய்மைக் குணங்களில் நம்பிக்கை குன்றிவிடுமே! எத்தனையோ காலமாக வியா பாரத் துறையில் நேர்மையுடன் இருந்தும், இச்சம்பவம் வெள்ளைக்காரர்களின் ஒழுக்கத்தின் கியாதியைப் பள்ளத்தில் தள்ளிவிடுமே!" என்று அப்பத்திரிகை வருந்தியது.

சென்னையில் 'ஹிந்து' இடைவிடாமல் அன்ருடம் தலை அங்கங்களை எழுதிப் பொதுஜனங்களின் சிரமத்தையும், இனிச் செய்யவேண்டிய வேலையையும் குறித்துப் பலவித வழிகளைக் காண்பித்தது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் பாங்கின் ஊழல்களைப் பரிசோதிக்கச் சட்டரீதியாய்த் தனிப்பட்ட ஓர் உத்தியோகஸ்தரை நியமிக்க வேண்டு மென்று முறையிட்டதையும் 'ஹிந்து' தன் முழுப் பலத்தையும் கொண்டு ஆமோதித்து எழுதியது.

"இச்சந்தர்ப்பத்திலும் மற்றப் பங்காளிகள் செய்யவேண் டியது யாதெனில், முதல் முதலில் மனம் உடைந்த ஜனங்களின் கஷ்டத்தை எப்படியாவது குறைக்க வழி தேடவேண்டியதுதான். அதற்காக, எவ்விதம், அதாவது எக்காரணங்கள் சேர்ந்து கொண்டு பாங்கை முழுக வைத்தன என்பதைப் பகிரங்க மாகவும், ருஜுவுடனும் வெளிப்படுத்தவேண்டும்"*

என்றது.

---

* 'ஹிந்து', 23-10-06.

முக்கிய சீமைப் பங்காளி இறந்தது மிகுந்த அதைரியத்தையே எங்கும் கிளப்பியது. அவன் இறந்ததனுல் பாங்கினுடைய சீமை சம்பந்தமான முழுசமாசாரமும் தெரிவதற்கு முடியாமல் போய்விட்டது. 'இச்சந்தர்ப்பத்தில் ஸர் ஜார்ஜ் அர்பத்நட்டின் பொறுப்பு உண்மையிலேயே அதிகமாகிவிட்டது. ஆனுல் தைரியமாய் நின்று உண்மையை ஒளிவு மறைவு இன்றி வெளிப்படுத்தியிருந்தால் எடுத்துக்கொண்ட அவ்வளவு சிரமமும் வீண் போயிருக்காது. ஸர் ஜார்ஜ் அர்பத்நட்டும் ஓர் அளவில் தம் கடமையைச் செலுத்தியவராவார்' என்ருர் கிருஷ்ண ஸ்வாமி ஐயர்.

வேறு சில வதந்திகளும் ஊரில் பரவின. அதாவது பாங்கு முழுகுவதற்குச் சிறிது காலம் முன்தொடங்கியே சிற்சிலருக்குமட்டும் பாங்கிலிருந்து பணத்தைத் திரும்பிப் பெறச் சௌகரியங்கள் செய்யப்பட்டதாகத் தெரிந்தது. இத்தருவாயில் சற்றும் யோசனை இன்றிப் பாங்கை மூடும் தினம் வரையிலும் பாங்கினுள் பண வரவைத் தடுக்காமல் இருந்தது, பாங்கு அதிகாரிகளின் சூழ்ச்சிதான் என்று ஊர்ஜிதமாகியது.

அர்பத்நட் பாங்கைத் 'திவாலானது' என்று தீர்மானிக்கக் கோர்ட்டில் மனுவும் பாங்கு அதிகாரிகளே கொடுத்திருந்தார்கள். கோர்ட்டும் அன்றைத்தினமே பாங்கின் நிர்வாகத்தை, அதாவது அங்குள்ள பணத் தொகைகள், கணக்குப் புஸ்தகங்கள் எல்லாவற்றையும் கவனமாய்ப் பாதுகாக்க அவைகளை 'அபிஷியல் அஸைனி' யிடம் கொடுக்கும்படி பாங்கு அதிகாரிகளுக்கு உத்தரவு இட்டது.

இவை ஒரு புறம் இருக்க, கிருஷ்ணஸ்வாமி ஐயரின் புத்தி சும்மா இருக்கவில்லை. விசாகபட்டணத்தில் நடந்த ஒரு பெரிய வழக்கு விசாரணை சம்பந்தமாக அவருக்கு அடிக்கடி ஊரைவிட்டுச் செல்லவேண்டி இருப்பினும், தம் யோசனைகளைப் பத்திரிகைகளில் பகிரங்கப்படுத்திக் கொண்டே இருந்தார். 'ஹிந்து' பத்திரிகையும் அவருடைய கடிதங்களைப் பிரசுரிப்பதுடன் நிறுத்திக்

கொள்ளாமல், அவர் கூறும் யோசனைகளைத் தலை அங்கங்களில் ஆமோதித்து அவருடைய உழைப்பைப் பரிமளிக்கச் செய்தது.

"கோர்ட்டார்கள் அவசியம் 'அபிஷியல் அஸைனி'க்கு உதவியாக இதற்கென்று ஒரு தனி ஆளை நியமிப்பதுதான் உசிதம். பணம் போட்டவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி ஒருவரை அவசியம் அவர்கள் அவ்விதம் ஏற்பாடு செய்யவும் வேண்டும். மேலும் ஸர் ஜார்ஜ் அர்பத்நட்டை நாட்டை விட்டு வெளிக் கிளம்பாமல் இங்கேயே இருக்கும்படியும் செய்யவேண்டும். கோர்ட்டு நடவடிக்கை நடக்கும்பொழுது பணம் பாங்கில் போட்டவர்களின் பிரதிநிதிகளுக்கு, விசாரணையில் தங்கள் சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ளப் போதுமான சௌகரியங் களைச் செய்யவேண்டும்"*

என்று ஒரு கடிதம் பத்திரிகையில் வெளியிடப்பட்டது.

மறுபடியும் இரண்டு நாட்களில் ஒரு பகிரங்கக் கடிதம் 'ஹிந்து'வில் வந்தது.

"உடனே பணம் போட்டவர்கள் இரண்டு வாரங்களுக்குள் செய்யவேண்டியவைகளுக்காக ஒரு கூட்டத்தைக் கூட்டத் தீர்மானிப்பதுதான் சரி. முதலில் அவர்கள் ஒவ்வொருவரும் நூற்றுக்கு ஒன்று வீதம் தங்களிடமிருந்து பணத்தை வசூலித்து, செய்யவேண்டிய செலவுகளுக்கு ஒரு நிதியைச் சேமிக்கவேண்டும். உடனே நல்ல யோக்கியதையுடன் கூடிய ஒரு பிரபல வக்கீலைத் தங்கள் சார்பில் ஆஜராக ஏற்படுத்த வேண்டும். அடுத்தது, அவர்கள் புதிதாகத் தனி மனிதனை 'அபிஷியல் அஸைனி'யின் உதவிக்காக ஏற்படுத்தக் கோர்ட்டுக்கு மனுப்போட்டுக் கேட்க வேண்டும். சாதாரணமாய் 'அபிஷியல் அஸைனி'க்கு வசூலிக்கும் தொகையில் ஐந்து சதவீதம் பங்கு கோர்ட்டார் அனு மதிக்கலாம். இப்பெரிய நஷ்டத்தையும் கஷ்டத்தையும் உத்தேசித்துப் பணம் போட்டவர்களுக்காக ஏற்படுத்தப்படும் புதிய உத்தியோகஸ்தர், 'அபிஷியல் அஸைனி' ஆகிய இருவருக்குமே ஏன் இந்த ஐந்து சத விகிதத்தை இருபாகமாகப் பங்கு செய்து கொடுக்கக்கூடாது? வசூலிக்கும் பணத்தை இரு வருமே சேர்ந்து சொந்தப் பொறுப்பில் பாதுகாப்பது கடமை என்று கோர்ட்டாரையும் ஒப்புக்கொள்ளச் செய்யவேண்டியது. அடுத்தது, இந்த நாட்டில் ஊர் ஊராகவும், மேலும் சீமைக்கும் சென்று, இந்தப் பாங்கு சம்பந்தமான விவகாரங்களைக்

* 'ஹிந்து'வில் பகிரங்கக் கடிதம், 24-10-06.

கேட்டறிந்து வர ஓர் ஆசாமியைப் பாங்கினால் நஷ்டப்பட்டவர்கள் சேர்ந்து நியமித்து, அவனுக்கு ஊதியம் முதலியவைகளுக்கான ஏற்பாட்டையும் செய்யவேண்டும்.''*

அடுத்ததாக அவர் சொன்ன யோசனையே மிகவும் முக்கியமானது. ஆனால் அவருடைய யோசனைகளைக் கேட்க அரசாங்கம் சற்றும் முன் வரவில்லை. அவர் சொன்னதாவது:

''இச்சந்தர்ப்பத்தில் தானாகவே அரசாங்கம் ஒரு சட்டத்தைத் தயாரித்து அமலுக்கும் கொண்டுவர வேண்டும். அதாவது, ஒரு வாரத்திற்குள் அதைத் தயாரித்து அர்பத்நட் பாங்கின் சொத்துக்களை மூன்று நான்கு உயர்தர உத்தியோகஸ்தர்களிடம் ஒப்படைக்க வழி தேடவேண்டும். ஒருகால் இதுவரையில் அநுபவத்தில் செய்திராத காரியமாய்ப் படலாம் இது. ஆனால் இது வரையிலும் இம்மாதிரிச் சிரமமான சந்தர்ப்பம் நாட்டில் ஏற்படவில்லையே!''

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் யோசனைகளை ஆமோதித்து 'ஹிந்து' பத்திரிகை தலை அங்கம் ஒன்றை வெளியிட்டது:

''ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் கடிதத்தில் கேட்டது இந்தப் பாங்கு விஷயங்களுக்கான தனிக் கமிஷன் ஒன்றை நியமிப்பதற்கு அரசாங்கம் சட்ட ரீதியாக ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என்பதே. அவர் இன்று மறுபடியும் எழுதுகையில் மாகாணச் சட்ட சபைக்கு இந்தச் சட்டம் தயாரிக்க அதிகாரம் இல்லாததையும் ஞாபகப்படுத்தி இருக்கிறார். ஆனால், அதனால் அவருடைய அபிப்பிராயத்தின் விசேஷம் சற்றும் குறையவில்லை. அரசாங்கம் எதையாவது செய்து ஜனங்களின் கஷ்டத்தைக் குறைப்பது முறையாகும். ஆனால் அரசாங்கம் இது வரையிலும் ஒன்றும் செய்ததாகத் தெரியவில்லை. ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஊரிலுள்ள பலருடைய அபிப்பிராயத்தையே ஊன்றிப் பார்த்து வெளியிட்டிருக்கிறார். ஏற்கனவே, ஜட்ஜான 'பாடம்' என்பவர் 'அபிஷியல் அஸைனி'யின் வாக்கு மூலங்களின் பேரில் மட்டும் நம்பிக்கையை வைத்துச் சில உத்தரவுகளை இட்டிருக்கிறார். 'அபிஷியல் அஸைனி'யும் தம் வாக்கு மூலத்தின் விவரங்களை அர்பத்நட் பாங்கின் காரியதரிசி ஒருவரிடமிருந்தே பெற்றிருக்கிறார். இச்சந்தர்ப்பத்தில் அரசாங்கத்தாரும் நியாயமாக

* கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பகிரங்கக் கடிதம், 26-10-06.

எதையாவது செய்து விசாரணையைச் சரிவரச் செய்வதற்கான உதவியைச் செய்வதுதான் கடமையாகும்''*

என்பது தலை அங்கத்தின் சுருக்கமான சாராம்சம்.

பிறகு தம் சொந்தப் பொறுப்பில் ஸர் ஜார்ஜ் அர்பத்நட் ஓர் அறிக்கையைப் பத்திரிகைகளில் பிரசுரித்தார். தம் பாங்கின் விவகாரங்களை ஒருவிதமாகச் சீர்பெறச் செய்ய ஏற்பாடு செய்வதாக அதில் கண்டிருந்தது. புதிதாக ஒரு கடையைச் சொந்தத்தில் ஆரம்பிக்கும் உத்தேசத்தையும் வெளியிட்டார். பணம் போட்டவர்களுக்கு நஷ்டம் முழுவதும் ஏற்படாமல் இருப்பதற்காக இவ்வுபாயம் வெளியிடப்பட்டது.

அதையும் என் தந்தை ஆராய்ந்து பார்த்து மறுபடியும் பத்திரிகையில் தம் அபிப்பிராயத்தை வெளியிட்டார் :

"அர்பத்நட்டின் அறிக்கை சிலருக்கு மனக் கலக்கத்தைக் கிளப்பிவிட்டது. முதலில் அவர் பாங்கு படுத்ததன் காரணங்களைச் சொல்லவேண்டும். புதிதாக ஆரம்பிக்கும் கடைக்குத் தம் உழைப்பை முழுவதும் கொடுப்பதாக அவர் தரும் வாக்கு, இதுவரையும் நடந்தவைகளில் அவர் மீது புகாருக்கு இடமில்லை என்றறிந்த பிறகே நம்பப்படுமல்லவா? அடுத்தது, அவர் உத்தேசமாகச் சொல்லும் தம் கைவசம் உள்ள பொருளின் கணக்குச் சரியாக இல்லை. இதற்கும் நல்ல விசாரணையே அவசியம் வேண்டியது என்று புலப்படுகிறது. இவைகளில் சம்பந்தமில்லாத ஒரு மனிதரை நியமிக்கக் கோர்ட்டார் இன்னும் சிரத்தையைக் காட்டாதது வருத்தத்திற்கு இடம் தருகிறது. சென்னைக் கவர்னரும் பணம் நஷ்டப்பட்டவர்களிடம் அநுதாபம்கொண்டு நேற்றுத்தான் தனியே ஓர் உத்தியோகஸ்தரை நியமிக்கும் விஷயத்தில் தம் அங்கீகாரத்தைப் பகிரங்கப்படுத்தியுள்ளார்." †

ஆனால் இதன் சம்பந்தமாக ஒரு சட்டம் இல்லாததால் கோர்ட்டு ஒன்றையும் செய்ய முடியாமல் தவித்தது. ஊரிலும் பணநஷ்டம் அடைந்தவர்கள் முன்னிலையில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அரிய பிரசங்கம் ஒன்றைச் செய்தார்.

---

* தலை அங்கம், 26-10-06.

† 'ஹிந்து', 1-11-06.

'பணம் தொலைத்தவர்கள் முதலில் இருந்தே விசாரப்படுவது, பாங்கின் நஷ்டம் எவ்வளவு மட்டில் உள்ளது என்றறியவே தான். ஆனால் ஸர் அர்பத்நட் இன்னும் அதைப்பற்றி வாயைத் திறக்கவில்லை. மேலும் 'இன்சால்வென்சி' சட்டத்தின் கீழ், பணம் போட்டவன் ஒவ்வொருவனுக்கும் பாங்குப் புஸ்தகங்களைப் பார்வையிட முழு உரிமையும் உண்டு. என்ன கேட்டாலும் புஸ்தகங்கள் நம்முடைய கையில் கிடைப்பதில்லை. இப்பொழுது இருக்கும் சந்தர்ப்பத்தில் எல்லா விவரங்களும் நமக்குத் தெரிய வேண்டியது அவசியம். சீமைச் சட்டத்திற்கும் இங்குள்ள நீதிக்கும் வேறுபாடுகள் பல இருக்கின்றன. வெகு துரிதமாய் வேலைகளைச் செய்யச் சீமையில் சௌகரியங்கள் சட்டரீதியாக உண்டு. இங்கு அவ்விதம் சௌகரியங்கள் இல்லாததுடன், 'அபிஷியல் அஸைனி' நாடியிருக்கும் பேர்வழி மிஸ்டர் 'பீபல்ஸ்' என்னும் பாங்கு மானேஜர்தாம். ஆகையால் இதி லிருந்து 'அபிஷியல் அஸைனி'க்கு உதவியும் அர்பத்நட்டினிட மிருந்தே வருகிறது என்று ஏற்படுகிறது.''*

"என்ன வெட்கக்கேடு! இதற்கு ஒரு வழி செய்ய வேண்டாமா ?" என்று அவர் தவித்தார்.

இதற்குள் கணக்குப் புஸ்தகங்களைப் 'அபிஷியல் அஸைனி' பரிசோதித்ததிலிருந்து பாங்கு முழுகியதன் காரணங்களில் சில வெளிப்பட்டன. சீமைக் காரியா லயத்தில் முதல் பங்காளியான மாக்பாடியன் தம்மிடம் இருந்த தொகையில் ஒரு சிறிதும் வியாபாரத்திற்கென்று முதலாகக் கடையில் போடவில்லையாம். 1871-ஆம் ஆண்டில் ஸர் ஜார்ஜும் கடையில் ஒரு பங்காளியானார்; அவரும் ஒரு சல்லிக் காசைக்கூட முதலாகக் கடையில் போட வில்லையாம். 'அபிஷியல் அஸைனி' கொடுத்த விவரங்களில் இன்னும் தெரிவித்தவை என்னவெனில், பங்காளிகளின் உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் திட்டம் வகுத்த ஒருவித உடன்படிக்கைப் பத்திரமும் இல்லையாம். விசித்திரமாகவே பங்காளிகள் கடைக்குள் வருவதும், விலகுவதுமாக இருந்திருக்கிறது. சீமையில் வைத்த கடை சென்னைக் கடைக்குப் பிறகே ஏற்பட்டது. 1877-ஆம் ஆண்டில் சென்னையிலிருந்து எடுத்துச்சென்ற பொருளை உபயோகித்தே சீமைக் கடையை ஆரம்பித்த விவரம்

* கடிதம், 12-11-06.

பலருக்கு இப்பொழுதுதான் வெளியாகியது. மொத்தம் பாங்கின் வரவு 277½ லக்ஷங்கள் என்றும், கையில் அச்சமயம் உள்ளவை 76 லக்ஷங்களே என்றும் ஏற்பட்டது. ஸர் ஜார்ஜும் அவருடைய மற்றப் பங்காளி களும் உத்தரவாதமாகவேண்டிய கணக்குகள் பின் வருமாறு உள்ளன:

காப்பித் தோட்டங்கள் வீதம், 47½ லக்ஷம்.

கைக்கு வரக்கூடாத தொகை, 41¾ லக்ஷம்.

லண்டன் கணக்கு, 35¾ லக்ஷம்.

சொந்தக் கணக்கு, 34¾ லக்ஷம்.

1903-ஆம் வருஷம் தொடங்கி வருஷ வரவு செலவு அறிக்கைகளும் தயாரிக்கப் படவில்லை. 1897-ஆம் வருஷம் முதல் பாங்கின் விவகாரங்கள் ஒரே ஊழல்தான். சென்னைப் பாங்குக்குச் சீமைக் கடையின் நஷ்டங்கள் முதலிலிருந்தே தெரிந்தவைகள்தாம். ஸர் ஜார்ஜுக்கும் 1893-ஆம் வருஷமே கடையின் க்ஷீணதசை தெரிந்திருக்க வேண்டும். நிச்சயம் எப்படியும் 1897-ஆம் வருஷம் வரையிலும் தெரியாதிருக்க வகையில்லை.

1906 நவம்பர் 24-ஆம் தேதி அன்று பாங்கில் பணம் போட்டவர்களின் கூட்டம் ஒன்று கூடியது. அவ்விடத்தில் 'அபிஷியல் அஸைனி'யின் பக்ஷபாதமும் வெளிப்பட்டு விட்டது. அவர் ஸர் ஜார்ஜின் பேரில் புகார்கள் சாராதபடி அவரைக் காப்பாற்ற முயன்றார்.

இதனிடையில் ஊரில் உள்ள ஜனங்களும் கொஞ்சங் கொஞ்சமாகக் கஷ்டத்தைப் பொறுத்து ஒருவிதமாகச் சாந்தம் அடைந்தார்கள். ஆனால் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மனம் மட்டும் சதா என்ன செய்யலாம் என்றுதான் கவலைப்பட்டது. மூன்று மாதங்களுக்குமேல் ஆகி விட்டன, அர்பத்நட் பாங்கு முழுகி. 'இன்சால்வென்சி' கோர்ட்டில் மஞ்சள் காகிதத்தை தயாரித்து நீட்டியும் ஆகிவிட்டது. விசாரணைக்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. இவைகளின் அனாவசியமான கால தாமதத்தையும் விசாரணையின் அவசியத்தையும் அவர்

உணர்ந்தார். 1907-ஆம் வருஷம் பிப்ரவரி 7-ஆம தேதி அன்று அவர் மறுபடியும் தம் அபிப்பிராயத்தை வெளியிட்டார் :

"அபிஷியல் அஸைனி தூங்குகிறார் ; அவருக்கு உதவிக்காக ஏற்படுத்திய 'கமிட்டி'யும் வேலை செய்யவில்லை. யார் மீது குற்றம் என்று இன்னும் தெரியவில்லை. 'கமிட்டி'யில் உள்ளவர்களில் சிலர் 'பாங்குக் கணக்குப் புஸ்தகங்களைத் தங்களுக்குக் காட்டவில்லை' என்று என்னிடம் கூக்குரல் இட்டார்கள். பின்வரும் விஷயங்களைக் குறித்து விசாரணையின் பொழுது கேள்விகள் கேட்கவேண்டும்."*

(1) பாங்கு படுத்ததன் காரணங்கள்.

(2) எவ்வளவு காலமாய்ப் பாங்கின் ஊழல்களைப் பங்காளிகள் அறிந்திருந்தார்கள்.

(3) அவர்கள் செய்தலேவாதேவிகள் என்ன என்ன ?

(4) கணக்குகள் சரியாக இல்லை. வரவு செலவு அறிக்கைகள் தயாரிக்கப் படவில்லை; ஏன் ?

(5) பாங்குவேலையில் இருந்த மேல் உத்தியோகஸ்தர்களுக்குப் பாங்கு வேண்டிய அளவில் பணம் எடுத்துக்கொள்ள வசதிகளைச் செய்தது நியாயமா ?

(6) இப்பொழுது கையில் உள்ள சொத்துக்கள் எவ்வளவு ?

(7) வசூலிக்க வேண்டிய தொகைகளுக்குச் செய்ய வேண்டிய முக்கிய ஏற்பாடுகள் என்ன ?

ஊரில் உள்ளவர்களுக்கும் ஒரு சாட்டையடி கொடுத்தார் அவர்.

"இன்னும் ஒரு வாரத்தில் விசாரணை நடக்குமே! யாரிடம் விசாரணைக்கு வேண்டிய விவரங்கள் கையில் உள்ளன ? இவ்விதம் எல்லோருக்கும் சம்பந்தப்பட்ட ஒரு பொதுக் காரியத்தில் பணம் போட்டவர்கள் கொஞ்சமாகிலும் ஊன்றி வேலை செய்யாமல் இருப்பது மிகுந்த மானக்கேடு"

என்று தம் ஆத்திரத்தை எல்லாம் காட்டி எழுதினார். மறுநாள் பத்திரிகையில் சி. வி. சுவாமிநாத ஐயர் என்பவர் அக்கடிதத்திற்குப் பதில் ஒன்று அனுப்பினார்.

---

* 'ஹிந்து', 7-2-1907.

"பொது ஜனங்களுக்குப் பாடுபடக்கூடிய உழைப்பைத் தெருவிலும் தம் வீட்டுக்கு வெளியிலும் தேடவேண்டாம். ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் இதயக்கோவிலில் அதைக் காணலாம். அவர் தேடும் பொது ஜனங்களின் மனச்சாட்சி அங்கேதான் நிலைத்து வீற்றிருக்கிறது. பிறர் தூண்டுகோல் இல்லாமல், நடக்க வேண்டியதை அதுவே அவரிடம் உணர்த்தும். நிச்சயம் அவர் அதைக் கவனித்தால் புதியதொரு பிரகிருதியாகத் தாம் ஆவதுடன், பிறரிடம் வேண்டிய உத்ஸாகத்தையும் கிளப்ப முடியும்"*

என்று அழகாகக் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தைரியத்தையும், பொது ஜனங்களுக்காக உழைக்கும் அவருடைய ஆற்றலையும் நினைப்பூட்டினுர்.

அவருக்குப் பிறர் சொல்ல வேண்டியது உண்டா? தம்முடன் சில மணிகளான இளைஞர்களை வைத்துக் கொண்டு விசாரணைக்கு வேண்டிய விவரத்தை, கணக்குப் புஸ்தகங்களைப் பரிசீலனை செய்ததிலிருந்து குறித்துக் கொண்டார். பாங்கு நடவடிக்கை அவருக்குப் புதியது. பாங்குகளைச் சொந்தத்தில் நம் ஜனங்கள் நடத்திப் பார்க்காத காலம் அது. ஆகையால் பாங்குக் கணக்குகளில், பொதுஜனங்களில் பலருக்கும் தேர்ச்சிக் குறைவுதான். எத்தனையோ விதமான பரிபாஷைச் சொற்கள் பாங்கு வியவகாரங்களில் காணப்படும். அவைகளைப் பரிசீலனை செய்யவேண்டியதும் முக்கியமாக ஏற்படும்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் அதில் துணிந்துவிட்டார். ஸர் ஜார்ஜ் ஜனங்களுக்குச் செய்த தீங்கு சாமான்யமன்று; அவர் ஒரு 'கிரிமினல்' குற்றவாளி என்று தண்டிக்கப் படுவதற்கு வேண்டிய அநுமானங்களைக் கோர்ட்டுக்குத் தெரிவித்தால், குற்றவாளியின் விசாரணைக்கு அவசியம் அவரை அனுப்புவார்கள். அக்காலங்களில் வக்கீலாகச் 'சன்னது' பெற்றவர்கள் 'இன்சால்வென்ஸி' நடவடிக்கையில் ஆஜராவது சட்டரீதியாக முடியாது. பாரிஸ்டர்களால் மட்டுமே சாத்தியம். ஆகையால் 'சுதேச நிதி'யின் நிர்வாகஸ்தர்களில் தாமும் ஒருவரென்ற

---

* 'ஹிந்து', 8-2-1907.

உரிமையிலும் பணம் போட்டவர்களின் வேண்டுகோளின் பேரிலும் அவர் ஆஜரானர்.

ஜட்ஜ் மணி ஐயரின் முன்னிலையில் 1907-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் 25-ஆம் தேதிமுதல் விசாரணை தொடங்கியது. நேப்பியர் என்னும் ஆங்கிலேயர் அர்பத்நட்டின் பக்கம் ஆஜரானர். காலம் சென்ற சி. ஆர். திருவேங்கடாச்சாரியாரும், இன்னும் சிலரும் கிருஷ்ணஸ்வாமி ஐயருடன் ஆஜரானர்கள். கோர்ட்டில் போட்டுக்கொள்ளும் வக்கீல் மேலங்கியைக் களைந்து விட்டுச் சொந்த உரிமையில் வாதாடும் சாமான்யனைப் போல் விசாரணையைத் தொடங்கினர் கிருஷ்ணஸ்வாமி ஐயர்.

ஸர் ஜார்ஜ் அர்பத்நட் செய்த குற்றங்களைத் தம் குறுக்கு விசாரணையில் வெளிப்படுத்த முயன்ற தலைப்புக் களில் முக்கியமானவை பின்வருமாறு: (1) பொய்க் கணக்குகளை ஸர் ஜார்ஜ் தயார் செய்தது. (2) தம் பேரில் ஒரு சொந்தக் கணக்கை ஏற்படுத்திக்கொண்டு பாங்குப் பணங்களைக் களவாடியது. (3) ரூபாய் 2,03,113-க்கு வரவு வரவேண்டிய தொகைக்குத் தப்புக் குறிப்புக்களைத் தனித்தனியே கணக்கில் புகுத்தியது. (4) வெள்ளைக்காரர் ஒருவரிடமிருந்து வரவேண்டிய தொகையான ரூபாய் 1,67,666-க்கு கணக்குச் சொல்லாதது. (5) ரூபாய் 5,55764-12-1-க்கு அவர் தாமே உத்தரவாதமாகவேண் டியது. (6) சிலருக்கு மட்டும் பணத்தைப் பாங்கு முழுகு வதற்குச் சற்று முன்னல் கொடுத்து உதவியது. (7) பணம் பாங்கியில் போட்டவர்களுக்கு மோசம் செய்யும் விதத்தில் 1500 பங்குதார்களின் தொகையைத் தாமே எடுத்துக் கொண்டது. (8) தம் மாப்பிள்ளைக்கு ரூபாய் 1,50,000-க்கு விலை போகக் கூடிய சில 'ஷேர்களை' மாற்றியது. (9) 1902-லிருந்து 1906-ஆம் வருஷத்திற்குள், 8680 பவுன்கள் கொண்ட தொகையைத் தம் மனைவியின் பேரில் சீமையில் எழுதி வைத்தது. (10) 30,000 ரூபாய் பெறுமான சில 'டிபன்சர்களை'த் தம் சகோதரிக்கு உரிமை

யாக்கியது. (11) சீமையிலுள்ள தம் சொந்தப் பங்களாவைக் கடனுக்காக அடைமானப்படுத்தியது.

இவைகளே பிற்பாடு ரூபிக்கப்பட்டுக் குற்றம் சாட்டும் நடவடிக்கைக்கு ஆதாரமாயின. சாமான்ய அந்தஸ்தில் இல்லாத பிரபலரான அவரை விசாரணை செய்யப் போகிறார்கள் என்று கூறவே நீதிஸ்தலத்தில் எள்ளுப் போட்டால் விழாதபடி ஜனங்கள் கூடினார்கள்.

மேலும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் முனைந்து வேலை செய்து சிற்சில புது விஷயங்களை வெளியாக்குவார் என்ற நம்பிக்கையால் சென்னையிலுள்ள அறிவாளிகள் கோர்ட்டு நடவடிக்கையைக் கவனிக்கத் தொடங்கினார்கள். இதைத் தவிரவும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சுபாவமும் பேச்சும் பலருடைய இதயங்களைக் கொள்ளை கொண்டிருந்த காலம் அல்லவா? 'இந்தியன் பேட்ரியட்' என்ற தினசரி யொன்று அவருடைய கம்பீரமான தோற்றத்தையும், பயமற்ற விசாரணைப்போக்கையும், மற்றும் அவருடைய நடை உடை பாவனைகள் அனைத்தையும் அன்றாடம் வருணிக்க முயன்றது. பத்திரிகைகளை வாசிப்பதிலும் தென்னிந்தியாவில் ரஸிகர்கள் உண்டல்லவா? அவர்களுக்கு இவ்வருணனைகள் எல்லாம் சீக்கிரத்தில் மனப்பாடமாகிவிட்டன. எங்கும் சென்னையில் கிருஷ்ணஸ்வாமி ஐயரைப்பற்றிய பேச்சுத்தான்.

விசாரணை தொடங்கவும் நேப்பியர் முக்கியக் குற்றவாளிக்கு முன் சிலரை விசாரணை செய்துவிட்டுப் பிற்பாடு ஸர் ஜார்ஜை விசாரித்துச் சிற்சில வாக்குமூலங்களைப் பெற்றார். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குக் குறைந்த காலத்தில் பாங்குக் கணக்குப் புஸ்தகங்களின் ஊழல்களையும், மற்றத் திருட்டுத் தனங்களையும் கூர்மையாக அறியவேண்டிய அவசரம் ஏற்பட்டது. அவர் ஒன்றிற்கும் பயந்த சுபாவம் உடையவர் அல்ல; வேலையிலும் சளைத்தவரன்று அல்லவா!

பாங்குக் காரியங்களைப் பொறுப்பாளியான ஒருவர் எவ்விதம் கவனிக்கவேண்டுமோ அவ்விதம் கவனிக்கவில்லை

என்பதைக் கோர்ட்டுக்கு வெட்ட வெளிச்சமாக்குவதற்காகச் சில கேள்விகளை முதலில் அவர் கேட்டார்.

வினா: லாப நஷ்டக் கணக்குகளை அவ்வப்பொழுது பார்வையிடவேண்டுமென்று உமக்குத் தோன்றவில்லையா?

விடை: என் பங்காளியான மிஸ்டர் மாக்பாடியனுடைய வார்த்தையில் எனக்கு நம்பிக்கை இருந்தபடியால் நானாக எதையும் ஊன்றிப் பார்ப்பது இல்லை.

கோர்ட்டு: கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லும்.

விடை: ஆம்; எனக்குத் தோன்றவில்லை.

வினா: சரி, லாப நஷ்டக் கணக்குக் கிடக்கட்டும்; எப்பொழுதாவது மாக்பாடியனிடமே வருஷ முடிவில் மொத்தமாகவாவது லாப நஷ்டம் ஏற்பட்ட விவரத்தை நீர் விசாரித்ததில்லையா?

விடை: வருஷ முடிவில் கேட்டது இல்லை.

வினா: சீமைக் கடையின் லாப நஷ்ட அறிக்கையை நீர் பார்த்ததுண்டோ, அதுவும் கிடையாதோ?

விடை: இல்லை; பார்த்ததில்லை.

வினா: ஸர் ஜார்ஜ், ஒரு பாங்கு செய்யவேண்டிய முக்கியக் காரியங்களில் லாப நஷ்ட அறிக்கையைத் தயாரிப்பது அவசியம் என்பது உமக்குத் தெரியாதா?

விடை: தெரியும்.

வினா: பின்பு ஏன் மாக்பாடியனைக் கேட்காததற்குக் காரணம் ஒன்றும் நீர் சரியாகச் சொல்லவில்லை?

விடை: அவரிடம் உள்ள நம்பிக்கை பாதியும், மற்றப் பாதிக்காரணம் மொத்தமான விவரங்களை மாக்பாடியன் தாமே கொடுத்ததுந்தான். அதனால் எனக்கு விஷயங்களைத் தீர விசாரிக்க அவசியம் தோன்றவில்லை.

* * * *

இம்மாதிரி முதலிலிருந்தே ஸர் ஜார்ஜ் தம் பொறுப்பைத் தாம் வகிக்காததற்குச் சரியான காரணங்களைச் சொல்லத் தெரியாமல் ஏதேதோ சொல்லி விழித்தார்.

சீமைக் கடை மாக்பாடியன் வசம் முழுவதும் இருந்து கவனிக்கப் பட்டு வந்த விவரமும், அந்தக் கடையில் மோசமான கொடுக்கல் வாங்கல்களின் விவரமும் கோர்ட்டாருக்கு நன்கு வெளிப்படச் செய்த விசாரணை பின்வருமாறு:

வி௲: மாக்பாடியன் கடை ஆரம்பத்திலிருந்தே கண் தெரியாமல் லேவாதேவியில் பணம் போட்டு எடுத்துக்கொண் டிருந்த விவரத்தை நீர் அறிவீர் அல்லவா ?

விடை: அவருடன் சேர்த்துப் பதிவான கணக்கில் இருப் பதைத் தவிர எனக்கு 1893-ஆம் வருஷம் முதல் அவர் என்ன என்ன விதங்களில் பணத்தை வியாபாரத்தில் போட்டு எடுத்தார் என்பது கொஞ்சமும் தெரியாது.

வி௲: நீர் கேட்டறிவதற்கு ஆசைப்படவில்லை என்று நாங்கள் எண்ணவேண்டும் என்கிறீர்களா ?

விடை: எனக்கு அவ்வித லேவாதேவிகள் இருந்த விவரம் தெரியாது என்பதுதான் என் பதில்.

வி௲: அவரை நேராகக் கேட்டீரா ?

விடை: இல்லை; நான் விசாரிக்கவில்லை.

வி௲: அவ்விதம் சந்தேகத்தைக் கிளப்பவேண்டிய தப்புச் சமாசாரம் ஒன்றும் உம்முடைய காதுகளில் விழவில்லையா ?

விடை: பிற்பாடு பத்திரிகைகளில் கண்டேன், சில தகவல்களை. ஆனால் நான் அவைகளை நிஜமென நம்பவில்லை.

வி௲: வாஸ்தவத்தில் உமக்குச் சந்தேகம் ஏற்படுவதற்குத் தகுந்த விதம் ஒன்றையும் கேள்விப்பட வில்லையா ?

விடை: இல்லை.

* * * *

இம்மாதிரி ஸர் ஜார்ஜ் தமக்குச் சற்றேனும் சந்தேகம் ஏற்படவில்லை என்று சொல்லவும், ஸர் ஜார்ஜ் சீமைக் கடையில் தமக்கெனத் தனிக் கணக்குகளை வைத்திருந்த விவரங்களை விசாரணையில் வெளிப்படுத்தி, சீமைக் கடையின் லாப நஷ்டங்களைப் பற்றி அவர் அறியவில்லை என்பதே பொய் என்பதைக் கோர்ட்டுக்கு விளக்கினார் விசாரித்தவர்.

பிறகு குறித்த விவரங்களைக் காண்பித்துச் சில தொகையைத் தங்கள் பேருக்கு மாற்றிக் கொண்டதை ஸர் ஜார்ஜ் அர்பத்நட்டும், மிஸ்டர் மாக்பாடியனும் சேர்ந்து செய்த குற்றமாக விசாரணை வெளிப்படுத்தியது. அதற்கு அத்தாட்சியான கடிதம் ஒன்றைச் சீமையிலிருந்து மாக்பாடியன் அனுப்பியதையும் பற்றி விசாரணை செய்தார்.

வினு: உமக்கு வந்த கடிதத்தைக் கிழித்து எறிந்து விட்டீரா?

விடை: ஆமாம்.

வினு: கடிதத்தைப் பார்த்தவுடன் கிழிப்பதுதான் உம்முடைய வழக்கமோ?

விடை: எப்பொழுதும் செய்வது அவ்விதந்தான். ஆனல் ஒன்றிரண்டு தடவைகளில் நான் அம்மாதிரிச் செய்யவில்லை. உதாரணமாகக் கோர்ட்டில் நான் போட்டிருக்கும் அத்தாட்சியான கடிதம் ஒன்று. சாதாரணமாக, கடிதங்களை உடனே கிழிப்பதுதான் என் வழக்கம். கிழிக்காதவைகளை மட்டும் அபிஷியல் அஸைனியிடம் தந்துள்ளேன்.

வினு: உங்கள் பாங்கு சம்பந்தமானவைகளைக் கூடவா நீங்கள் கிழித்தெறிவது வழக்கம்? உங்கள் பேருக்கு நேரில் வந்தவைகளைத் தவிர, பாக்கி உள்ளவைகளைத்தானே?

விடை: எல்லாவிதக் கடிதங்களையுந்தான்.

வினு: எப்பொழுது முதல் ஆரம்பித்தீர்கள் இப்பழக்கத்தை?

விடை: ஞாபகம் இல்லை எனக்கு.

வினு: எப்பொழுது ஆரம்பித்தீர்கள் என்பதுதான் நான் கேட்பது.

விடை: இருபது, அல்லது முப்பது வருஷங்களுக்கு முன்னிருந்து.

வினு: அதுவரையும் நீங்கள் கடிதங்களைக் கிழிக்காமல் வைத்திருந்தீர்களா?

விடை: என் வழக்கம், வேண்டாத கடிதங்களைக் கிழிப்பதே.

வினு: உங்கள் ஞாபகத்தில் கடிதங்களைப் பாதுகாத்ததாக ஒரு பொழுதும் இல்லையா?

விடை: இல்லை; நான் பாதுகாத்ததில்லை.

வினு: இப்பழக்கத்தை அமலுக்குக் கொண்டுவராத காலமே உங்களுக்கு ஞாபகத்தில் இல்லையா?

விடை: இல்லை.

* * * *

ஸர் ஜார்ஜ் பொய் சொல்லிவிட்டு இந்தக் குறுக்குக் கேள்வியில் அகப்பட்டுக் கொண்டார்.

விடை: கிழிக்காத கடிதம் கோர்ட்டில் நான் தாக்கல் செய்தது ஒன்று மட்டுந்தான். அதை மிஸ்டர் மாக்பாடியனுக்குக் காண்பிக்கவே என்னிடம் இவ்வளவு காலம்

வைத்திருந்தேன். மற்றச் சமயங்களில் வேண்டுமென்று என் கையில் பழைய கடிதங்களை வைத்துக்கொண்டது ஞாபகம் இல்லை.

வினு: எதற்காக இதை மட்டும் கிழிக்கவில்லை?

விடை: ஏனென்ருல் உபயோகப் படவேண்டியவைகளை மட்டுமே நான் வைப்பது வழக்கம்.

வினு: என்ன உபயோகம்?

விடை: அக்கடிதத்தில் மிஸ்டர் மாக்பாடியன் எனக்கு அளித்திருக்கும் சந்தேக நிவர்த்திதான் அதைமட்டும் கிழிக்காமல் நான் வைத்த காரணம்.

வினு: இந்த ஒரு சமயத்தில்தான் இம்மாதிரி உமக்குச் சந்தேக நிவர்த்தி ஏற்பட்டதோ?

விடை: இல்லை; வேறு சமயங்களிலும் உண்டு. ஆனல் அச்செய்திகள்கொண்ட கடிதங்களை நான் பாதுகாக்கவில்லை.

வினு: ஒருகால் ஒன்றே ஒன்று மாதிரிக்காக வைப்பது போதுமென்று எண்ணினீர் போலும்!

விடை: எனக்கு அம்மாதிரி ஒன்றும் மனத்தில் தோன்றவில்லை

* * * *

பதில் கூற முடியாமல் ஸர் ஜார்ஜ் திக்குமுக்காடிவிட்டார். இன்னும் அவரைக் கேள்விகள் தாக்கின.

வினு: ஒரு வியாபாரி கடைக் கணக்குகள் சம்பந்தமான தகவல்களைச் சேர்த்து வைக்காதது சரியல்லவென்று உமக்குப் படவில்லையா?

விடை: இவைகள் எனக்குத் தனிப்பட்ட உரிமையில் வந்த கடிதங்கள். ஆகையால், அவைகளை நான் எடுத்து ஜாக்கிரதையாக வைக்கவில்லை.

வினு: உமது பாங்கு சம்பந்தப்பட்ட பொழுதுங்கூட ஜாக்கிரதையாக வைத்ததாகத் தெரியவில்லையே! ஏன்?

விடை: இல்லை. இவைகள் அவ்வளவு பாங்கு சம்பந்தமானவைகள் அல்ல என்பதால் நான் ஜாக்கிரதையாக வைக்கவில்லை.

* * * *

இன்னும் பாங்குக் காரியங்களில் இம்மாதிரிச் சகல விதமான தகவல்களையும் தெரியாத வண்ணம் கடிதப் போக்கு வரவுகளைக் கிழித்தெறிந்ததைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் விசாரணையில் நன்கு வெளிப்படுத்திவிட்டார்.

பாங்கு சம்பந்தமான மற்றப் பங்காளிகளான மாக்பா டியன், ஆர். அர்பத் நட், யங், எல்லோருமே இவ்விதந் தான் கடிதங்களை வைக்கவில்லையா என்பதைப்பற்றி விசாரணை செய்தார். அதாவது பெருத்த சூழ்ச்சியாகவே முதலிலிருந்தே பிறர் பணங்களை அநுபவிக்கும் கொள்ளைக் காரர்களாகப் பங்காளிகளின் நடத்தையைக் கோர்ட்டார் அறியுமாறு விசாரணையைச் செய்தார். பிறகு, பங்காளி களானவர்களின் கடமைகளைப் பற்றிய உடன்படிக்கைப் பத்திரம் ஒன்றுமில்லாததைப் பற்றி விசாரணை நடந்தது. வான்ஸ் அக்னியுஸ் என்ற பங்காளி இறக்கவும், அவருடைய சந்ததிகளுக்குப் பணம் கொடுத்த விதத்தில் தொகையைத் தீர்மானித்த விவரத்தைப் பற்றிக் கேள்வி பிறந்தது. அடுத்ததாக ஜே. டபிள்யூ. அர்பத்நட் என்பவர் கடையை விட்டு விலகி வெளியேறியபொழுது அவருக்கு இட்ட திட்டம் எவ்விதம் கணக்கிடப்பட்டதெனக் கேட் டார். இவைகளுக்கெல்லாம் ஆதாரமான ஒரு பத்திரமும் இல்லை என்பதை நம்ப வழி இல்லாதிருப்பதை விசாரணையில் வெளியாக்கினர்.

பிறகு மிஸ்டர் மெக்கன்சியிடமிருந்து ரூ. 1,67,666 வரவேண்டியதை, வராத கடனாகக் காட்டியதன் மர்மத்தை வெளிப்படுத்தினர். ஸர் ஜார்ஜ், "எங்களுக்கு அது வரவேண்டிய தொகையே அல்ல. கணக்கில் மட்டும், மெக்கன்சியினிடமிருந்து வராத கடனாகக் காண்பிக்கப்பட்டது" என உளறவும், கேள்விகள் பின் வருமாறு அவரைத் திணற அடித்தன.

வினா: மிஸ்டர் மெக்கன்சியிடமிருந்து வரவேண்டிய கடனாக அது இல்லாவிட்டால் பின் யாருடைய கடன் அது ?

விடை: ஒருவரிடமிருந்தும் வரவேண்டியதல்ல. சொந்தக் கணக்கில் கொடுபடவேண்டிய சிற்சில தொகைகளுக்குப் பதிலாக ஒப்படைப்பாக இதைக் காட்டியிருந்தது............

விடை: அந்தத் தொகையை அவர் பேரில் கணக்கில் காண்பித்ததே தவறு.

வினா: சரி, இது போதும். நீர் தவறு என்று ஒப்புக்கொள் கிறீர். அவ்வளவுதான் எனக்கு வேண்டியது.

விடை: ஆம்; பணம் வரவேண்டியது. இல்லாவிட்டால் எதற்காக அவரிடம் இருந்து வரக்கூடாத ஒரு தொகையை அவருடையதாகக் காண்பிக்கவேண்டும்?...........

விடை: லாப நஷ்டத்தைப் பார்க்கையில், விடவேண்டிய தொகை என்றுதான் அதை இப்பொழுது நாம் கருதவேண்டும்.

இம்மாதிரி ஒன்றுக்கொன்று ஒவ்வாத பதில்களை அவர் சாட்சிக் கூண்டிலிருந்து கூறி வந்தார்.

பிறகு முதலாளிகள் பங்காளிகளாகச் சேர்ந்த பொழுது போட்ட முதலைப்பற்றிய விவரங்களை விசாரணை செய்து, சரியான ஆதாரம் ஒன்றும் இல்லாமல் தொகைகள் அவரவர்களுக்குக் கொடுபட்டிருப்பதை நன்கு வெளிப்படுத்தினர். வேண்டியவர்களுக்குக் கொடுபட்ட பணங்களுக்கு ஒருவித நியாயமும் இல்லாதிருப்பதையும் ஊர்ஜிதப் படுத்திவிட்டார். தாம் கேட்ட கேள்விகளின் பதில்களில் இருந்து, 'வீட்டுக் கணக்கு' என்பதைப் பற்றிய மர்மத்தை உடைத்துவிட்டார். வீட்டை அடைமானம் வைத்த விஷயத்தில் ஸர் ஜார்ஜுக்குப் பணம் கிடைத்த விவரங்களை விசாரணை செய்து அவைகளிலும் பாங்குப் பணம் எவ்விதம் உபயோகப்பட்டிருந்ததெனவும் புலப்படுத்தினர். அதன் பிறகு 'பங்குகள்' மாற்றிய விவரத்தை நன்கு பரிசோதித்து அதில் நடந்திருந்த தவறுகளையும், வேண்டியவர்களுக்குப் பாங்குப் பணத்தைக் கொடுத்ததில் உள்ளடங்கிய சூதையும் நன்கு கோர்ட்டாருக்குப் படும்படி விசாரித்து வெளிப்படுத்தினர். கல்யாணத்தின் ஏற்பாடாக மனைவியின் பேரில் கொடுக்கப்பட்ட தொகையின் விவரமும் பாங்கின் பணத்தினின்றும் அநுமதியின்றி எடுத்ததாக நிரூபிக்கப்பட்டது.

அர்பத்நட் பாங்கு நடவடிக்கையில் குறுக்கு விசாரணைகளில் காட்டிய நுண்ணறிவை வாசகர்கள் நன்கு அறியும்படி சொல்லுவது மிகவும் சிரமம். பாங்கு சம்பந்தமான கணக்கு விவரங்களைப் பற்றிய கேள்விகளை மொழி பெயர்ப்பில் விளக்க முடியாததால் இங்கே குறிக்கமுடியவில்லை. சிறிதளவுதான் விசாரணையில் காட்டிய சாமர்த்தி

யத்தையும், விடாமுயற்சியையும், கேள்விக்குமேல் கேள்வி போட்ட தோரணையையும் இங்கே தெரிவிப்பது சாத்தியம்.

இரண்டு வாரங்களுக்குக் குறையாமல் குறுக்கு விசாரணை நடைபெற்றது. எப்பொழுதெல்லாம் கிருஷ்ண ஸ்வாமி ஐயரின் கேள்விகளுக்குக் குற்றவாளியின் பக்கத்தி லிருந்து எதிர்ப்புகள் வந்தனவோ, அக்காலங்களில் எல்லாம் ஐட்ஜ் மணி ஐயர் விசாரிப்பவரது மனத்திலுள்ள சந்தேகங்களை நன்கு உணர்ந்து, ஆக்ஷேபங்கள் ஏற்படாமல் இருப்பதற்காகத் தாமே அக்கேள்விகளைச் சாட்சியிடம் கோர்ட்டாருக்குள்ள உரிமையில் கேட்டுவிடுவார். கிருஷ்ணஸ்வாமி ஐயர் கோர்ட்டில் விசாரணை செய்த தோரணை கண்டு மணி ஐயருக்குப் பெருமை இருந்தது. ஆனால், நீதிபதிப் பதவியில் இருந்த காரணத்தால் தம் உணர்ச்சியை வெளிக்காட்ட முடியாத நிலையில் தவித்துக் கொண்டு இருந்தார். தம் சந்தோஷத்தைப் பலர் அறிய வெளிக்காட்ட முடியவில்லை. ஆனால், சிலரிடம் மட்டும் தனிமையில் சொல்லுவாராம்: "கிருஷ்ணஸ்வாமியின் மேதையை வாய்விட்டுப் புகழ்வதற்கு என் பதவியினால் அசக்தனாக இருக்கிறேன்."

கோர்ட்டில் விசாரணை நடந்தபொழுது ஊரிலுள்ள பத்திரிகைகள் குறுக்கு விசாரணையின் தோரணையை மிகவும் சிலாகித்தன. எங்கும் ஜனங்களுக்குத் திருப்தி. விசாரணையை அநுபவித்த சில புத்திசாலிகள் சொன்ன தாவது: "மணி ஐயர் ஜட்ஜாகவும், ஸர் ஜார்ஜ் அர்பத்நட் சாட்சிக்கூண்டில் ஏற, குறுக்குக் கேள்விகளைப் போட வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் இனிக் கிடைப்பார்களா?" என்றனர். கடைசியில் தீர்ப்பும் நியாயப்படி மணி ஐயர் வழங்கினார். ஸர் ஜார்ஜின் நடத்தையில் பெரிய குற்றமாகத் தெரிந்தவைகளைக் குறித்துக் குற்றம் சாட்டும் தாளை அவரே தயாரித்தார். ஏப்ரல் மாதம் 3-ஆம் தேதி சட்ட வாதங்களைக் கேட்ட பின்னர் மணி ஐயர் தீர்ப்பில் சொன்ன விஷயத்தின் சாராம்சம் பின்வருமாறு:—

"ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் வாதித்ததிலிருந்து முக்கியமான சில பிரச்னைகளை நான் பரிசோதித்து எழுதியது என்னவென்றால்: முதலில் அர்பத்நட் கடையும், சீமையில் மாக்பாடியன் கடையும் ஒரே பங்காளிகளினால் நடத்தப்பட வில்லை. அப்படிப் பங்காளிகளாகச் சேர்ந்து நடத்தியிருப்பினும், இவை இரண்டும் தனித்தனியேதான் சீமையிலும் சென்னையிலும் நடைபெற்றன. மேலும் சீமையில் மாக்பாடியன் கடை சம்பந்தமான 'இன்சால்வென்ஸி' நடவடிக்கையில் அர்பத்நட் பாங்கின் சொத்தில் சிலவற்றைக் கையில் வைத்திருப்பதைக் காட்டி, இங்குள்ள கடைக்குக் கடனாளியாகவும் தன்னை அந்தக் கடை ஒப்புக்கொண்டது."

பிறகு மிஸ்டர் நேபியரது ஆக்ஷேபங்களுக்குச் சட்டத்தின் சமாதானங்களைக் காட்டி, ஜட்ஜ், "இங்குள்ள 'இன்சால்வென்ஸி' கோர்ட்டு அர்பத்நட் பாங்கின் மேற்காரியங்களைச் சரிவர நடத்துவதில் ஒருவிதத் தவறுதலும் இல்லை" என்று காட்டினார். கடைசியில் இந்த இரண்டு நடவடிக்கைகளும், அதாவது சீமை நடவடிக்கையும் சென்னை நடவடிக்கையும், ஒன்றுக்கொன்று ஒத்தாசை செய்வது நியாயமே என்று வாதங்களைப் பரிசீலனை செய்ததிலிருந்து தீர்மானித்தார். பிறகு சென்னை நடவடிக்கையே முந்தியது என்று இரண்டு நடவடிக்கைத் தேதிகளினின்றும் எடுத்துக் காட்டி, சென்னை அபிஷியல் அஸைனியின் கையிலுள்ள பாங்குச் சொத்துக்களை சீமை இன்சால்வென்ஸியில் ஏற்படுத்தப் பட்ட 'டிரஸ்டி' தொடமுடியாதென்றும் உணர்த்தினார். இங்குள்ள அபிஷியல் அஸைனியின் வசம் உள்ள தொகைகளை நிர்வகிக்க அவருக்கு உரிமையுண்டு என்று பழைய தீர்ப்புக்களை முன்னிட்டுத் தெரிவித்தார். மற்ற அசௌகரியங்களும் சீமைக்குத் தபால் போக்கு வரவினால் ஏற்படலாம். பாங்கில் பணம் போட்டவர்களுக்குக் கிடைக்கவேண்டிய பொருளில் 'கமிஷன்' செலவை அதிகப்படுத்துவது நெருக்கடியான சந்தர்ப்பத்தில் சரியன்று என்றும் தம் தீர்மானத்தைத் தெரிவித்தார்.

ஏப்ரல் 26-ஆம் தேதி குற்றம் சாட்டும் தாளைத் தயாரித்து முன்பு கொடுத்திருந்த தலைப்புக்களின்கீழ்க்

குற்றங்களை வரிசையாகக் கணக்கிட்டு, குற்றவாளியென ஸர் ஜார்ஜைச் சுட்டிக்காட்டி ஸெஷன்ஸ் விசாரணைக்கு அனுப்பிவிட்டார். பிறகு சென்னை முக்கிய நீதிபதியான ஸர் ஆர்னல்டு வைட்டின் முன்னிலையில் நார்ட்டன் துரை ஸர் ஜார்ஜின் பக்கம் எவ்வளவோ பாடுபட்டும், குற்றம் நிரூபிக்கப்பட்டு, அர்பத்நட்டுக்குப் பதினெட்டு மாதம் கடுங்காவல் தண்டனை அளிக்கப்பட்டது.

சீமையிலிருந்து டாக்டர் டங்கன் என்னும் ஆசிரியர், (இராஜதானிக் கலாசாலையில் உபாத்தியாயராகப் பல நாட்கள் முன்பு இருந்தவர்) தம் சிஷ்யரான கிருஷ்ண ஸ்வாமியினுடைய புகழைக் கேட்டுச் சந்தோஷத்தினால் எழுதினார்:

"அர்பத்நட் நடவடிக்கையில் உன்னுடைய குறுக்கு விசாரணையைப் பத்திரிகைகளில் கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டேன். என்னுடைய நண்பர்களில் சிலர் இங்கு உன்னுடைய அசாதாரணமான யோக்கியதையைக் குறித்து என்னிடம் எடுத்துச் சொன்னதும், எனக்கு ஏற்பட்ட பெருமை இவ்வளவு அவ்வளவு அல்ல. என் மாணாக்கன் நீ என்று அவர்களிடம் சொல்லிக் கொள்வதில் கேவலம் தற்புகழ்ச்சி என்பதில் சந்தேகமில்லை. வாஸ்தவத்தில் உன் சுயயோக்கியதையும், அரிய குணங்களுமே இவ்விதமான புகழைப் பெறக் காரணங்கள் என்று நான் அறிவேன். என்னிடம் நீ அடைந்த நன்மைகள் மிகக் குறைவுதான். எவ்விதம் இருப்பினும் உன்னிடம் எனக்குள்ள பெருமையை நம்புவாய் எனவே மதித்து இதை எழுதுகிறேன்."*

சீமையிலுள்ள பிரமுகர்கள் சென்னை அர்பத்நட் பாங்கு நடவடிக்கையை அன்றன்று பத்திரிகையில் கவனித்ததன் காரணம், இதனுடன் சேர்ந்தே அங்கும் கோர்ட்டில் நடவடிக்கை நடந்தமையே. மேலும், அங்கே பணம் பறிகொடுத்தவர்களில் பலர் அர்பத்நட்டைக் குற்றவாளியாக மதித்துத் தண்டனையும் அவருக்கு இடப் படவேண்டுமென்று கோரினார்கள். சென்னை வக்கீலின் செல்வாக்கு உச்சநிலையை அடைந்ததெனவே இச்சந்தர்ப்பத்தில் பலரும் ஒப்புக்கொண்டார்கள். நாடெங்கும் அவருக்கு நல்ல பெயர் உண்டாயிற்று.

* கடிதம், 20-9-07.

அவரும் அர்பத்நட் குற்றவாளியென ஏற்பட்டால் போதும் என்று சும்மா இருந்து விடவில்லை. பணம் நஷ்டப்பட்ட ஜனங்களுக்கும், இனித் தங்கள் சம்பாத்தியங்களை எங்கே சேர்த்துவைப்பது என்று தவித்தவர்களுக்கும் தம்மால் நிலைக்கக் கூடிய ஒரு பாங்கு ஸ்தாபனத்தைப் பலருடைய சகாயத்தின் பேரில், நிர்வகிக்கும் பொறுப்பைப் பலரும் சேர்ந்து பங்கிட்டுக் கொள்ளும் வகையில் ஒரு லிமிடெட் கம்பெனியாகச் செய்ய முற்பட்டார்.

அவருடைய மனம், தொழில் முயற்சிகளின் நடுவிலேயே எதிலும் ஊன்றி செல்லக் கூடியது என்று காட்ட இதுவும் ஓர் உயர்ந்த உதாரணம். அர்பத்நட் நடவடிக்கை ஆரம்பித்தபாடில்லை. அதற்குள் தம்முடைய யோசனைகளை முக்கியமான சில நண்பர்களுடன் கலந்து ஒரு கடிதம் சென்றது அவரிடமிருந்து :

"ஐயா,

சுதேசிகளாக ஒரு பாங்கு ஏற்படுத்தவேண்டும் என்கிற விஷயத்தைப் பற்றி நாளது நவம்பர் மாதம் மூன்றுந்தேதி சனிக்கிழமை மாலை மூன்று மணிக்கு மயிலாப்பூர், லஸ் ரோட்டில், நம்பர் 2/16 பங்களாவில் கூட்டம் கூடப்போகிறபடியால் அதற்குத் தாங்கள் வரவேண்டுமென்று கோருகிறேன். அந்தப்படி பாங்கு ஒன்று ஆரம்பிப்பதற்கு இது ரொம்பவும் தகுந்த சமயம்.

தங்கள்

**வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்**

ஹைகோர்ட் வக்கீல்"*

இவ்விதம் சென்ற தகவலின் பேரில் கூடிய கூட்டம் பல நண்பர்கள் கையெழுத்திட்ட பெரிய அறிக்கை ஒன்றையும் அதே தேதியில் வெளியிட்டது. அதற்கு வந்த பதில்கள் திருப்தியாக இருக்கவே, 'இந்தியன் பாங்கு லிமிடெட்' என்ற சிறந்த பாங்கை ஏற்படுத்த, செட்டி நாட்டுப் பிரமுகர்களில் மிகவும் உண்மையாக உழைத்த திவான் பஹதூர் ச. ர. ம. ம. ராமஸ்வாமி செட்டியாரையும் தம்முடன் சேர்த்துக்கொண்டார் கிருஷ்ணஸ்வாமி ஐயர்.

* கடிதம், 2-11-06.

1907–ஆம் வருஷம் மார்ச்சு 5-ஆம் தேதியில் சட்டப்படி பாங்கை ரெஜிஸ்டர் செய்தார்கள். முதல் கோஷ்டி நிர்வாகஸ்தர்களில் கிருஷ்ணஸ்வாமி ஐயர், ராமஸ்வாமி செட்டியார், சி. பி. ராமஸ்வாமி ஐயர் முதலியவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டு, இருபது லக்ஷ ரூபாய் மூலதனம் வைத்து, ரூபாய் நூறுவீதம் 20,000 ஷேர்களாக, அதைப் பிரித்துப் பண வசூல் செய்தார்கள். முதல் காரியதரிசியாக நியமிக்கப்பட்டவர் ஆதிநாராயண ஐயா என்னும் முதிர்ந்த அநுபவசாலியே.

சூரியன் ஒரு புறம் அஸ்தமிக்கையில், சந்திரன் தன் பதினாறு கலைகளுடன் உதிப்பது போல், அர்பத்நட் நடவடிக்கை முடிந்து, முழுகிய பாங்கின் அதிகாரி சிறைப்படவும், மற்றொரு புறம் சொந்த நிர்வாகத்தில் 'இந்தியன் பாங்கு லிமிடெட்'டைக் கிளப்பக் கூடிய செல்வாக்கு ஒருவருக்கு இருந்ததை இன்று யோசித்துப் பார்த்தால் சாமான்யமாகத் தோன்றவில்லை. யோசிப்பவர்கள் இல்லாமல் இருக்கலாம். ஆனால் அவ்விதம் யோசனை செய்யத் தகுதி உள்ளவர்கள் ஆச்சரியப்படாமல் இருப்பது மட்டும் எதிர்பார்க்கக் கூடியதல்ல.

பல ஊர்களிலிருந்தும் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய உதாரகுணத்தையும், அவருடைய நன்மை பயக்கும் செயல்களையும் போற்றாதவர்கள் இல்லை. உதாரணமாக நந்தியால் என்னும் ஆந்திர தேசத்தில் பொதுக் கூட்டமொன்று காட்டிய ஆதரவு குறிப்பிடத்தக்கது. அக்கூட்டத்தின் தீர்மானம் பின்வருமாறு:

"ஒருவிதப் பிரதிப் பிரயோஜனமும் இல்லாமல், முழு உழைப்பையும் காட்டி ஏழை ஜனங்களுக்குத் தாங்கள் பாடு பட்டதை எங்களால் மறக்கவே முடியாது. அர்புத்நட் நடவடிக்கையில் தங்கள் விசாரணைகள் சாமான்யமானவைகள் அல்ல. ஸர் ஜார்ஜை நீங்கள் சாக்ஷிக் கூண்டில் வைத்துத் திணற அடித்ததை நினைத்துத் தென்னிந்தியா முழுவதுமே பரவசமடையும் என்பதில் எங்களுக்குச் சந்தேகமில்லை"*

* 'ஹிந்து', 9-4-07.

என்று பொதுஜனங்கள் வாயாரப் புகழ்ந்தார்கள். பணம் போட்டவர்களின் கமிட்டி, தலைவரின் கீழ் வேலை செய்த உதவி வக்கீல்களுக்கு ரூபாய் 500 பீசுக் காகக் கொடுத்தது. தலைவரும் தம்முடன் உழைத்தவர்களில் சி. ஆர். திருவேங்கடாச்சாரியாரின் தொழிற் சிறப்பையும் சட்ட ஞானத்தையும் மிகவும் பாராட்டினர். எதைச் செய்தாலும், எவ்வளவு துரிதமாய்ச் செய்தாலும் தாம் நியாயமாகச் செய்ய வேண்டியதை மறக்காத குணமே உயர்ந்ததல்லவா ? அம்மாதிரி நிதானம் அவரிடம் இருந்தது.

# அத்தியாயம் 15

## சர்வகலாசாலைச் சபையும் கல்வி முன்னேற்றமும்

"........யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத்தறி வித்தல்" —பாரதியார்.

சர்வகலாசாலையின் ஆலோசனைச் சபைகளில் அங்கத்தினராக ஆவது ஆங்கிலக் கல்வி கற்ற பலருக்கு, பொதுஜன சேவையில் ஈடுபட்ட பெருமையை அளிக்கின்றதை நாம் தினமும் பார்க்கின்றோம். சிலருக்குச் சர்வகலாசாலைச் சபை அங்கத்தினரான காரணம் ஒன்றினால் மட்டுமே வேறு பல சௌகரியங்களைப் பெறவும் வழி ஏற்படுகிறது. அச்சபையில் வாதாடுவதைத் தினசரிப் பத்திரிகைகள் வெளியிடுவதிலிருந்து ஒருவாறு படிப்பாளிகளின் கண்முன் நிற்கும் பாக்கியம் அவர்களுக்குக் கிடைக்கின்றது. மேலும் பெயரைச் சொன்னவுடன் இன்னாரென்று அவர்களை அறியவும் நாட்டில் பலருக்கு முடிகிறது.

அநேகமாக அறிவாளிகளும் கல்வி விஷயங்களில் காட்டும் ஊக்கம் இவ்வளவேதான். பொதுஜனங்களின் வித்தியாப்பியாச முன்னேற்றத்தைக் குறித்து ஒழிவுள்ள நேரங்களில் சற்றுக் கவலை எடுத்துக்கொள்வதும், மற்றப்படி, பொதுக் கூட்டங்களில் கல்வி முறைகளின் சீர்திருத்தங்களைப் பற்றிச் சொற்பொழிவுகளை ஆற்றுவதுமே பலர் நாடும் பரோபகார முறை எனலாம். ஆனால் உண்மையில் கல்வி சம்பந்தமாகப் பாடுபடவும் கூடும்; பாடுபடுகிறவர்களுடைய பிரயாசைகளும் ஓரளவு வீண் போகாமலும், மறக்கப்படாமலும் இருத்தலை நாம் காண்கின்றோம்.

சென்னையைப் பற்றிய வரையில் முதல்முதலில் அறிவாளிகளில் முக்கியமாய்ச் சிலர் சேர்ந்துகொண்டு

1900–ஆம் வருஷத்தில் நம் ஜனங்களின் கல்வி வளர்ச்சியின் பொருட்டு ஒரு சபையைக் கூட்டினார்கள். நாட்டினர்களின் கல்வி முறையைச் சீர்திருத்தும் சபை என்றுதான் பொதுவாக அதைக் குறிக்கவேண்டும். அதன் நோக்கங்களில் சிலவற்றை ஆராய்வது இவ் விடத்தில் நியாயமாகத் தோன்றுகிறது. அதன் லக்ஷயங் களில் முதலாவது, நம் ஜனங்களுக்கு அவசியமாக உபயோகப்படக் கூடிய கல்வி ஸ்தாபனங்களில் அறிவாளி களின் சிரத்தையைக் காட்டுவது. இரண்டாவது, நம் நாட்டு மக்களில் அறிவாளிகளுடைய கல்வி சம்பந்த மான அபிப்பிராயங்களை ஒருமுகமாய்த் தீர்மானித்து வற்புறுத்துவது.

அம்மாதிரிக் கூட்டிய சபை அங்கத்தினர்களில் ஜட்ஜ் மணி ஐயர் முதலியவர்களுடன் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பெயரையும் சேர்த்தார்கள். 1900–ஆம் வருஷம் ஏப்ரல் மாதம் 16–ஆம் தேதி கூடிய பொதுக் கூட்டத்தில் கொண்டுவந்த தீர்மானத்தை ஆமோதித்துப் பேசும்படி அவரையே கேட்டுக் கொண்டார்கள் மற்றவர்கள். அவரும், சமீபத்தில் கர்ஸன் பிரபு கல்வி சம்பந்தமாக விடுத்திருந்த அறிக்கையைப்பற்றி ஜனங்களுக்கு ஞாபகப்படுத்திவிட்டு,

"நம் நாட்டினர்களுக்கான கல்வி என்ற குறிப்பின்கீழ்க் கொண்டுவந்த தீர்மானத்தின் முக்கிய உத்தேசம், இதுகாறும் கல்வி விஷயங்களில் சிரத்தையைக் காட்டிய ஸ்தாபனங்கள் முழுவதுமே, பிற நாட்டினருடைய ஆதீனத்திலும், கிறிஸ்துவ மதப் பிரசாரகர்களுடைய கையிலும் இருந்தன என்பதால் இச்சபையை அவைகளிலிருந்து இப்பெயரினாலேயே பிரித்துக் காட்டுவதாகும். இனி நம் படிப்பு விஷயங்களில் நமக்கும் பங்கு ஏற்படுத்திக் கொள்ளும் முயற்சி இச்சபையின் மூலம் சரியாகவே பரிணமிக்கும்"*

என்று அதன் நோக்கங்களை எடுத்துச் சொன்னார். அக்கூட் டத்தில் அப்பொழுது உபாத்தியாயராக இருந்த வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் அச்சபையின் நோக்கங்களையும், உத்தேசங்களையும் குறித்து விரிவான வியாசமொன்றை எழுதி வாசித்ததாகவும் தெரிகிறது. அக்காலங்களில்

* 'ஹிந்து' பத்திரிகை, 17-4-1900.

ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் பச்சையப்பன் உயர்தரப் பள்ளிக் கூடத்தில் உபாத்தியாயராகவும் கல்விக்குத் தொண்டாற்று வதில் மிகவும் ஊக்கமுள்ளவராகவும் இருந்தார். கல்வி முறைகளைச் சீர்திருத்தம் செய்யும் இச்சபை அன்றுமுதற் கொண்டு சில வருஷங்கள் வரையில் சமயம் அறிந்து தொண்டுகள் ஆற்றியதாகவும் தெரிகிறது.

கர்ஸன் ராஜப்பிரதிநிதியாக இருந்த காலத்தில், அதிகாரவர்க்கம் சர்வகலாசாலை சம்பந்தமாக அரசாங்க அதிகாரம் பெற்ற சிலரைச் சீமையிலிருந்து அனுப்பி யிருந்தது. இந்தியா முழுவதும் சுற்றிப் பார்த்து, ஆங்காங்கே கல்வி கற்பிக்கும் சர்வகலாசாலைகளில் கல்வி வளர்ச்சிக்குரிய விசாரணை செய்வதோடு, கல்வி விஷயங் களில் தீர்மானங்கள் சில செய்யவும் அந்தச் சர்வகலா சாலைக் 'கமிஷன்' நியமிக்கப்பட்டது. ஆனால் அதன் அங்கத் தினர்களின் யோக்கியதையைப் பற்றியாவது, அவர்களைப் பொறுக்கியதில் இந்தியர்களின் சம்மதத்தையாவது கொஞ்சமும் கவனியாமல் அம்மாதிரி ஒரு கமிஷனை நியமித்ததனால், எங்கும் பெருத்த மனவருத்தம் நாட்டில் கிளம்பி இருந்தது.

பச்சையப்பன் கல்லூரியின் பெரிய ஹாலில் சர்வ கலாசாலைக் கமிஷனைக் குறித்துக் கண்டனம் செய்யக் கூட்டமொன்று கூடியது.* அக்காலத்தில் மிகவும் கியாதி பெற்றவரும், வாக்குச் சாதுர்யம் படைத்தவருமான கனம் நார்ட்டனை அதற்குத் தலைமை வகிக்கக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். துரைக்குத் திடீர் என்று பம்பாய்க்குச் செல்ல வேண்டிவந்ததால், தம்மால் கூட்டத்திற்கு வரமுடியாமற் போனதை அன்று கூட்டத்தைக் கூட்டிய பொறுப்பாளிகளுக்கு அறிவித்தார். அதனால் அவர்களுக்கு அன்று சாயந்தரத்திற்குள் எப்படி யாவது நார்ட்டனுடைய மேதைக்கும், பேச்சுவன்மைக்கும் குறைவில்லாத மற்றொருவரைப் பொறுக்கவேண்டும் என்ற பெருங் கவலை ஏற்பட்டது. சென்னை வக்கீல்கள்

* 'ஹிந்து' பத்திரிகை, 17-10-02.

அன்றுடம் ஒழிவு நேரங்களிற் கூடும் சபைக்கு ஓடி வந்தார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரைத் தலைமை வகிக்க நேரில் கேட்டு அவருடைய சம்மதத்தைப் பெற்றார்கள். அவரும் அதிக ஆக்ஷேபணைகள் இன்றி ஒப்புக்கொண்டார்.

நார்ட்டன் துரைக்குப் பதிலாகத் தலைமை வகிக்க ஒப்புக் கொண்ட தைரியமும், முன் தகவல் இன்றி வெகு சீக்கிரத்தில் பேசவேண்டிய பொறுப்பைக் கொஞ்சமும் யோசிக்காமல் அங்கீகரித்த பெருமையும் அவருக்கு உரியன. தலைவர் பேச்சு, சற்றும் தங்கு தடை இல்லாமல் பல விஷயங்களைத் தெளிவாகப் புலப்படுத்தியது. கமிஷனில் அங்கத்தினர்களாக வந்தவர்களின் தகுதிகளைக் குறித்துச் சொல்லுகையில் அவர்,

"கமிஷன் அங்கத்தினர்களில் ஒருவராவது உண்மையில் கல்வி விஷயங்களில் சிரத்தை காட்டிய பிரமுகர் அல்ல. மேலும் அதில் சேர்ந்த ஒருவர் மட்டும் நிச்சயமாய் மேற் படிப்பு விஷயத்தில் நமக்கு விரோதி என்றாலும் தவறில்லை"*

என்று சுட்டிக் காட்டினார். பிறகு அவசியமான இரண்டு பிரச்னைகளை எடுத்து விவரித்தார். ஒன்று, இந்தியா தேசத்தில் சர்வ கலாசாலைகள் பழையபடியே பரீக்ஷைகளை வைக்கும் அதிகாரிகளாய் மட்டும் இல்லாமல் போதனா முறையையும் பரிசீலனை செய்பவர்களாக இருப்பதும் அவசியம் என்பதைப் பற்றி அழுத்திச் சொன்னார். இரண்டாவது, அக்காலங்களில் சர்வகலாசாலைகளில் ஆராய்ச்சிகளுக்கென்று பிரத்தியேக சௌகரியம் ஒன்றும் இல்லாதது பெருத்த குறை. ஆகையால் அக் குறைகள் இரண்டையும் ஒழிக்கவேண்டும் என்பதுதான் அவருடைய அன்றைய பேச்சின் முடிவு.

இரண்டாவதாகக் குறிப்பிட்ட ஆராய்ச்சி: ஸ்தாபனங்களை ஏற்படுத்தும் முயற்சியில் முக்கியமாய்ச் சர்வகலாசாலையே ஊக்கத்தைக் காட்டவேண்டும்; அப்பொழுதுதான் படித்தவர்கள் தங்கள் சொந்தத் தகுதியை உலகிற்குப் பயன் படுத்த முடியும்; அவர்கள் கற்ற கல்வியும் அப்பொழுதுதான் பரிமளிக்கும். கடைசியாகக்

---

* 'ஹிந்து', 17-10-02.

கர்ஸன் பிரபு கலாசாலைச் சபைகளிலுங்கூட அதிகார வர்க்கத்தின் அபிப்பிராயங்களையே நிலை நாட்டும் லக்ஷயத்துடன் நியமன அங்கத்தினர்களின் எண்ணிக் கையை அதிகமாக்கப் பாடுபட்டதையும் குறித்துச் சொல்லி, "சர்வகலாசாலையையும் அரசாங்க இலாகாவின் ஒரு கிளை ஸ்தாபனமாக ஆக்குவது சற்றும் பொருத்த மல்ல" என்று காட்டிப் பிரசங்கத்தை முடித்தார்.

ஆனால் கர்ஸன் பிரபு இத்தகைய எதிர்ப்பைக் கண்டு பயப்படவில்லை. தம் இஷ்டம்போல் சர்வகலாசாலைச் சபைகளில் அரசாங்க நியமன அங்கத்தினர்களின் எண்ணிக்கையை அதிகப் படுத்தி ஓரளவு அரசாங்க அதிகாரத்தின்கீழ்க் கலாசாலைகளும், கல்வி ஸ்தாப னங்களும் நாட்டில் இனி வளர வேண்டும் என்று சட்டத்தில் ஒரு திட்டத்தைப் புகுத்திவிட்டார். பள்ளிக்கூடச் சம்பளங்களை உயர்த்தியதும் புதுத் திட்டங்களில் ஒன்று. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மனம் சதா இவ்விஷயங்களில் மிகவும் ஆழ்ந்தும் பொறுப் புடனும் கவனிக்கத் தொடங்கியது. எங்கு அவகாசம் கிடைத்தாலும் பத்திரிகையிலும், மேடையிலும் கல்வி விஷயத்தில் அரசாங்க அதிகாரிகள் காட்டும் அறிவின் மையை முக்கிய விஷயமாக வைத்துக்கொண்டு காரசார மாக எழுதியும் பேசியும் விடுவார்.

பச்சையப்பன் கலாசாலை வருஷாந்தரக் கொண்டாட் டத்தில் 1904-ஆம் வருஷம் அவர் பேசினார் :

"பிற்பாடு நடந்த காரியங்களிலிருந்து சர்வகலாசாலைச் சட்டம் வேறொன்றையும் செய்யாவிட்டாலும் ஏற்கனவே சர்வ கலாசாலை அங்கத்தினர்களாக இருந்தவர்களில் சிலரை, அவர்கள் ஸ்தானங்களை விட்டு அகற்றி விட்டது. கர்ஸன் பிரபு நினைத்தவிதம் ஒன்றையும் பிரமாதமாக இந்தப் புதுச் சட்டம் செய்து காட்டிவிடவில்லை. ஒன்றுமட்டும் நமக்கு இதனால் கிடைத்து இருக்கிறது; அதாவது சட்டத்தின் மூன்றும் பகுதியின் கீழ், சர்வகலாசாலைகளுக்கு இதுவரையிலும் கிடைக்காததான உரிமை ஒன்று கிடைத்திருக்கிறது. சர்வகலாசாலை வேண்டிய உபந்நியாஸகர்களையும் ஆராய்ச்சியாளர்களையும் ஏற்பாடு செய் வதற்கான அநுமதியைத் தந்திருக்கிறது. மேலும், ஐந்து லக்ஷ

ரூபாய் அதன் பொருட்டு அரசாங்கம் கொடுக்க உத்தேசித்திருப்பதும் போற்றத்தக்க விஷயம்.''*

ஆனால் சர்வகலாசாலை முக்கியமாய்ச் செய்ய வேண்டியதைச் செய்யவில்லை என்பது அவருடைய எண்ணம். அதைப்பற்றியும் பின்வருமாறு எடுத்துக்காட்டிவிட்டார்:

"கலாசாலைப் படிப்பினால் இந்த 46-வருஷங்களில் குறைந்தது 7000 அல்லது 8000 பட்டதாரிகள் சென்னையில் இருக்கிறார்கள். அநேகர் நல்ல உத்தியோகங்களில் வேலை பார்த்துக்கொண்டு, தங்கள் சொந்த யோக்கியதைக்கும் தாங்களடைந்த படிப்பிற்கும் தக்கபடி கௌரவமாய்க் காலக்ஷேபம் நடத்தி வருகிறார்கள். ஊதியமும் அதனால் சம்பாதிக்கின்றார்கள். ஆயினும் இங்கும், மற்ற மாகாணங்களான கல்கத்தா, பம்பாயிலுள்ள சர்வகலாசாலைகளிலும் மிகச் சிலரே வியாபாரத் துறையிலும், யந்திர சாலைகளின் அபிவிருத்திக்குரிய கல்வியிலும் பாடுபட்டிருக்கிறார்கள். அதையும்விடக் குறைவுதான் விஞ்ஞானம் முதலிய ஆராய்ச்சித் துறைகளில் உழைப்பவர்கள். தேசத்திற்கும், தாங்கள் கல்வி பயின்ற சர்வகலாசாலைக்கும், எவ்வளவு கௌரவம் ஒருவருடைய சொந்த ஆராய்ச்சியின் பலன் கொடுக்கக்கூடியது என்பதை நன்கு யோசித்தால் விளங்கும். இவைகள்தாம் பெரிய குறைகள், இன்றுள்ள நம் கல்வி முறையில்''

என்றெல்லாம் தாம் சதா நினைத்திருந்த எண்ணங்களை வார்த்தைகளில் உருவாக்கிவிட்டார்.

தொழிற் கல்வியை வளர்க்க எண்ணி எத்தனையோ புள்ளி விவரங்களையும், பிறநாட்டினர் அத்துறையில் அடைந்திருக்கும் முன்னேற்றத்தையும் பற்றி விவரித்தார். அந்தப் பிரசங்கத்திலேயே பெண்களின் படிப்பைப் பற்றியும் அவர் சொல்லாமற் போகவில்லை. கடைசியாக, வித்தியாப்பியாச நிலயங்களுக்குப் பொருளுதவி செய்வதையும், இந்நாட்டில் எல்லாக் கொடைகளையும் விடப் படிப்பிற்காக அளிக்கும் கொடையே உயர்ந்ததெனக் கருதும் மரபையும் உணர்த்தினார்.

சென்னை 'மெயில்' பத்திரிகை இச்சொற்பொழிவைப் பற்றி அழகான தலையங்கம் ஒன்றை எழுதியது. பத்திரிகைகள் அவருடைய பேச்சுக்களைப் பற்றிய தலை

* 'ஹிந்து', 19-10-04.

ய்ங்கங்களை எழுதத் தொடங்கிச் சில வருஷங்களுக்கு மேலாயின. முக்கியமாக 'ஹிந்து' பத்திரிகை அடிக்கடி அக்காலங்களில் அவருடைய பேச்சைக் குறித்துத் தலை யங்கங்களை அவ்வப்பொழுது எழுதாமல் இருந்த தில்லை. அநேக விதமான பொதுஜன ஊழியங்களில் அவருடைய கருத்துக்களைக் காது கொடுத்துக் கேட்கத் துணிந்தார்கள், அரசாங்க அதிகாரிகளும் பொதுஜனத் தலைவர்களும். அம்மாதம் 31-ஆம் தேதி வெளிவந்த மெயில் பத்திரிகை குறித்ததாவது :

"வித்தியாப்பியாசத்தின் தற்கால நிலைமையைப் பற்றி வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் சொல்லிய ரஸமான விஷயங்களை வேறு இடத்தில் வெளியிட்டிருக்கிறோம். முதலில் சர்வ கலாசாலைச் சட்டத்தின் பயனாய்க் கிடைத்திருக்கும் இரண்டு நல்ல மாறுதல்களைப்பற்றி அவர் சொல்லிவிட்டு, இந்த 46 வருஷங் களாக நடவாத ஆராய்ச்சித் துறையின் அவசியத்தைப் பற்றி யும், தொழிற்சாலைக்கு உவந்த யந்திரசாஸ்திர ஞானத்தையும் மற்றப் படிப்பைப் பற்றியும் அவர் கேட்டவர்களின் மனத்தில் பதியும்படி பேசி, அதற்காக நாம் செய்யவேண்டிய சீர்திருத்தங் களையும் குறித்தார். முடிவில் அவருடைய அரிய பிரசங்கத்தில், இந்நாட்டு மடங்களும் கோவில்களும் சேர்த்து வைத்திருக்கும் பொருளைப் படிப்பு விஷயத்திலும் கொஞ்சம் செலவிடுவது நியாயமென்றும் காட்டினார்."

கோவில்களில் அபரிமிதமாய்ப் பொருள் சேர்த்து வைத்திருப்பதை வித்தியாப்பியாச நிலையங்களுக்குப் பரி மாறினால் அதைவிடச் சிறந்த தொண்டு வேறில்லை என்பது அவர் சித்தாந்தம்.

1903-ஆம் வருஷம் சர்வகலாசாலை ஆலோசனைக் கூட்டத்தில் முதல் முதல் ஓர் அங்கத்தினராக அவர் சேர்ந் தார். அவரும் அவருடைய சிநேகிதரான வி. ஸி. தேசிகாச் சாரியாரும் சேர்ந்து ஏககாலத்தில் காலியாக இருந்த இரண்டு இடங்களுக்கு நின்று தேர்தலில் வெற்றியும் அடைந்தார்கள். 'ஹிந்து' தலை யங்கமும் அவ்விருவர் களின் தேர்தல் வெற்றியைக் குறித்து,

"நினைத்தவாறே ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் ஸ்ரீ வி. ஸி. தேசிகாச்சாரியாரும் தேர்தலில் வெற்றி அடைந் தார்கள். ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஏற்கனவே சர்வ

கலாசாலைச் சபையில் இருந்திருக்க வேண்டியவர். போகிறது; தாமதப்பட்டு வந்ததில் அவ்வளவு அதிருப்தி இல்லைதான். ஏனென்றால் வராதிருப்பதைவிட வந்தது சிலாக்கியமல்லவா?''* என்று தெரிவித்தது.

ஸர் வி. ஸி. தேசிகாச்சாரியார் மயிலாப்பூர் தெற்கு மாடவீதியில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் வசித்த நாட்களில் எதிர் சாரியில் சொந்த வீட்டில் வசித்து வந்தார். நேர்மை நெறியைப் பின்பற்றியவர். அவரும் அவருடைய தம்பி வி. ஸி. சேஷாச்சாரியாரும், பரம்பரையாகச் செல்வம் படைத்த குடும்பத்தைச் சார்ந்தவர்கள். மேலும் தேசிகாச்சாரியார் சொந்தப் பொறுப்பில் மயிலையில் அக்காலத்தில் ஆரம்பக் கல்விக்கான சிறு பள்ளி ஒன்றையும் நடத்தி வந்தார். பென்னுத்தூர் சுப்பிரமணிய ஐயருடைய தர்மம் பெரும் பள்ளிக்கூடமாக நிறுவப்பட்டு ஓங்குவதற்குமுன் மயிலையில் தேசிகாச்சாரியாருடைய சிறு பள்ளியே தனவந்தர்களுடைய குழந்தைகளுக்குங்கூட எழுத்து அறிவை ஊட்டியது. பிற்பாடு பென்னுத்தூர் பள்ளிக்கூடம் ஆரம்பித்தபொழுது தம் சிறுபள்ளியையும் அதனுடன் சேர்த்துவிட்டார்.

சிநேகிதர்களுக்குள் முதலில் தேர்தல் சம்பந்தமாக சற்று மனஸ்தாபமும் ஏற்படும்போல் ஆகிவிட்டது. ஓரே இடம் சபையில் காலியாவதாக முதலில் நினைத்து, இருவரும் அதற்கு நிற்க நேர்ந்ததும் வி. ஸி. தேசிகாச்சாரிக்கு மனவருத்தம் ஏற்பட்டது. தம் நண்பர் அதற்கு நிற்கப் போவதில்லை என்று தெரிந்துதான் தாம் அதில் மனத்தைச் செலுத்தியதாகவும் பிற்பாடு அவர் திடீரெனப் போட்டியிட வந்ததாகவும் தேசிகாச்சாரியார் சிலரிடம் புகார் செய்தார். நேரிலும் அவர்,

''நீங்கள் நிற்கப் போவதில்லை என்று அறிந்தேதான் நான் இதில் துணிந்தேன். எண்ணத்திலும், பேச்சிலும், நடத்தையிலுங் கூட என்னுடைய சௌகரியத்தை ஒருநாளும் குறைக்கப் போவதில்லை என்று நீங்கள் சொல்லிவிட்டு, பிற்பாடு நிற்கப் போகிறேன் என்று சொன்னதும் 'என்னால் நம்பமுடியவில்லையே, கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய பேச்சை!' என்று நண்பர்களிடம்

* 'ஹிந்து', 17-11-03.

புகார் செய்தேன். நீங்கள் நம்மிருவரையும் போட்டியில் ஒப பிட்டுப் பார்க்க இந்தச் சந்தர்ப்பத்தை எடுத்துக்கொள்வது சுத்தப் பிசகு. உங்களுடன் போட்டி இட்டால் எதிலும் நீங்கள் தான் முதன்மையாக வருவீர்கள். நான் இரண்டாவதாகத்தான் வருவேன்; எனக்குத் தெரியாதா இது?''*

என்று வருத்தத்துடன் சொல்லிவிட்டார். ஆனால் கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்குப் பொறுமை அவ்வளவாகக் கிடையா தென்பதற்கு அத்தாட்சி இதோ வெளியாகின்றது:

"இது சம்பந்தமாகக் கடிதப் போக்கு வரவை உடனே நிறுத்திவிடவேண்டும் என்றுதான் முதலில் எனக்குப் பட்டது. ஆனாலும் வேண்டியவர்கள்போல் வேஷம்போட்ட சிலர் உங்களிடம் என்னைப்பற்றித் தவறுதலாகச் சொல்லியிருக்க வேண்டும். நாளடைவில் எல்லாம் தானே சரியாகி விடும் என்று நம்பி நிறுத்திக்கொள்ளாமல், இவ்விஷயத்தை இப்பொழுதே தெளிவுபடுத்த வேண்டியதுதான் உசிதம்......நடுவிலுள்ள மனுஷ்யர்கள் செய்திருக்கும் வேலையைப்பற்றி என்னால் விவரிக்க இயலவில்லை. நான் நிற்கத்தான் வேண்டுமென்றும், யாதொருவித விரோதமும் அதனால் உங்களுக்கு ஏற்படாதென்றும் எடுத்துக் காண்பித்துவிட்டு, இப்பொழுது நம்பமுடியாத நடவடிக்கையை நான் மேற்கொண்டதாக என் மேல் குற்றத்தை ஆரோபணம் செய்கிறீர்களே, அவர்களைப்பற்றி என்னவென்று சொல்வது! நான் நிற்பது தெரிந்திருந்தால் நீங்கள் நிற்க முன் வந்திருக்க மாட்டீர்களென்பதை மிகவும் நன்றியுடன் ஏற்றுக்கொள்ளு கிறேன். சந்தோஷம்; நானும் அம்மாதிரியேதான்; நீங்கள் நிற்கப்போவதாக முன்னதாகத் தெரிந்திருந்தால் அவ்விதமே நடந்துகொண்டிருப்பேன். ஆனால் ஓர் இடம் மட்டும் காலியாக இருந்தால்தானே இவ்வளவு மனக் கவலைக்கும் இடம் ஏற்பட் டிருக்கும்!"†

தேர்தல் சண்டைகள் இம்மாதிரி நெருங்கிய சிநேகிதர் களையும் சில சமயம் பிரிப்பதுண்டு. ஆனால் அக்காலங்களில் மரியாதை யுள்ளவர்களும் இருந்தார்கள் என்பதற்கு எடுத்துக் காட்டாக இவ்விருவருடைய மன வேறுபாடு களும், அவைகளை அவர்கள் நேரில் தீர்த்துக்கொண்ட விதமும் சிறந்து விளங்குகின்றன.

---

* வி. ஸி. தேசிகாச்சாரியாரின் கடிதம், 11-7-03.

† கடிதம், 11-7-03.

மறு வருஷம் நடந்த தேர்தலில் மறுபடியும் ஐந்து இடங்களுக்குப் பலருடன் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அவருடைய நண்பரும் நின்று வெற்றியும் பெற்றார்கள். மற்ற முக்கிய நண்பர்களான டி. வி. சேஷகிரி ஐயரும், கே. பி. ராமநாத ஐயரும் இவர்களுடன்கூட, சபை அங்கத்தினர்களானார்கள். டி. வி. சேஷகிரி ஐயர் கிருஷ்ணஸ்வாமி ஐயருடன் சட்ட கலாசாலையிலும், தொழில் துறையிலும் சேர்ந்தே வந்தவர். சிநேகிதர்களாக இருந்தவர்கள் பொதுக் காரியங்களைச் செய்யும் பொறுப்பிலும் சேர்ந்தே செய்வதற்கு ஓரளவு அவகாசம் அவர்களுக்குக் கிட்டியது. பிறகு குறைந்தது ஆறு வருஷங்கள் வரையில் சர்வகலாசாலை ஆலோசனைச் சபைகளில் இவர்கள் மிகவும் அரிய தொண்டுகளைச் செய்ததாகத் தெரிகின்றது.

ஸம்ஸ்கிருதம் படித்தவர்களுக்கும் நம் நாட்டு மற்றப் பாஷைகளில் தேர்ச்சி பெற்றவர்களுக்கும் தகுந்த கௌரவப் பட்டத்தைச் சர்வகலாசாலை அளிக்குமானால், அது ஒன்றினாலேயே ஆங்கிலம் கற்றவர்களுடன் அவர்களையும் கல்வித் துறையில் சமமாக நினைக்க இடமேற்படும் என்பதை என் தந்தை வெகுகாலமாக மனத்திற்குள் எண்ணி வந்தார். இதைப் பற்றி அடிக்கடி சர்வகலாசாலைச் சபைகளில் பல தீர்மானங்கள் கொண்டு வந்ததுடன், மேலும் இதைப் பற்றி முக்கியமாக அறிய வேண்டிய விஷயங்களை உணர ஒரு பிரத்தியேகக் கமிட்டியையும் சிண்டிகேட் சபை நியமிக்க வேண்டுமெனவும் முயற்சி எடுத்துக் கொண்டார். அதுகாறும், பண்டிதர்கள் சாஸ்திரங்களைக் கற்று ஞானக்களஞ்சியங்களாக இருந்திருக்கலாம். ஆயினும் தேசம் மாறி இருப்பதாலும், இந்திய நாட்டின் தற்கால வளர்ச்சிக்கு மேல்நாட்டுக் கல்வி முறைகளில் காணும் சில அரிய விஷயங்களையும் அறியவேண்டியது அவசியமாகி விட்டதாலும், சில புதிய பரீக்ஷைத் திட்டங்களை ஏற்படுத்தி அவற்றிலும் அவர்களைத் தேர்ச்சி பெறவைப்பது உசிதம் என்பது அவர்களுடைய உத்தேசம். ஒவ்வொரு சாஸ்திரத்திலும் படிப்பை நான்கு வருஷங்களுக்குத் தக்கவிதம் ஏற்பாடு செய்வது,

அம்மாதிரி படித்து, பரீட்சை கொடுத்தவர்களுக்குச் "சிரோமணி" போன்ற சர்வகலாசாலைப் பட்டங்களை அளிப்பது - இவைபோன்ற ஏற்பாடுகளைப் புதிய திட்டம் கொண்டு வந்தது.* எல்லாம் காலக்கிரமத்தில் 1909-ஆம் வருஷம் என் தந்தை நீதிபதியான பிறகுதான் சபையில் எடுக்கப் பட்டன. அரசாங்க உத்தியோக ஹோதாவிலும் சர்வகலாசாலைச் சபையில் அவருக்கு இடம் உண்டான படியினால், அவர் அத்தீர்மானத்தைத் தாமே நீதிபதியாக இருக்கையில் கொண்டுவந்து ஒருவாறு சீர்பெற முடித்தார். 1915-ஆம் வருஷம் தொடங்கிப் புதிய முறையில் சாஸ்திரப் பரீட்சைகளுக்கு உட்காரும்படி, ஸம்ஸ்கிருதம் முதலிய இந்திய பாஷைகளைக் கற்கின்றவர்களுக்குச் சர்வகலாசாலையில் ஏற்பாடாகியது.

அதே சபையில் ஆராய்ச்சி முறைகளைக் கற்பதற்குரிய ஏற்பாடுகளைச் சர்வகலாசாலை செய்யத் தீர்மானித்தது. இனி ஆராய்ச்சியாளர்கள் பல துறைகளில் நன்கு வேலை செய்யவேண்டிய விதமும் பல சௌகரியங்களை அவர்களுக்கு உண்டாக்கச் சர்வகலாசாலை அதிகாரிகள் வழி தேடினார்கள். சர்வகலாசாலையின் தனிப் பார்வையில் போதனைக்கென்று சிற்சில ஆசாரியர்களையும் உபந்யாசகர்களையும் ஏற்படுத்துவதற்குச் சர்வகலாசாலை அதிகாரிகளை ஒப்புக்கொள்ளச் செய்தது அச்சபை. எல்லாம் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அவருடன் ஒத்துழைத்த பல அரிய சிநேகிதர்களும் சேர்ந்து செய்த முயற்சியின் பயன் என்றே கொள்ளவேண்டும். இன்று சர்வகலாசாலை மண்டபத்தில் பல அறைகளில் பல துறைகளில் வேலை செய்யும் ஆராய்ச்சி யாளர்கள் ஏற்படுவதற்கு ஆதிகாரணமாக இருந்தவை, கிருஷ்ணஸ்வாமி ஐயர், சிவஸ்வாமி ஐயர் முதலியவர்கள் தெரிந்து செய்த உயர்ந்த யோசனைகள்தாம்.

இன்னும் 'டெக்னலஜி' என்னும் சாஸ்திரப் பயிற்சியையும் சென்னைச் சர்வகலாசாலை ஒரு கல்வி முறையாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்பது என் தந்தையின் நெடுநாளைய எண்ணம். ஆனால் சமீபத்தில்

* மெயில், 15-10-09.

வெளிவந்திருந்த பங்களூர் தாதா விஞ்ஞான சாஸ்திர ஸ்தாபனம் ஏற்படுத்திய திட்டங்களைத் தெரிந்து சென்னைச் சர்வ கலாசாலைச் சபையினர் தாங்களும் அந்த லக்ஷ்யத்தின் பொருட்டுச் செலவு செய்வது அவசியமில்லை என்று தீர்மானித்தனர். புதிய வழிகளில் கல்வி கற்பிக்கப் படுவதிலும், விஞ்ஞானப் பயிற்சியிலும் அவருக்கு இருந்த அடங்கா ஆர்வத்தையே மேலே குறித்த விவரங்கள் தெரிவிக்கின்றன. சிறு பிராயத்தில் கலாசாலைப் படிப்பு முடிந்த பிறகும் விஞ்ஞான ஆராய்ச்சியாளரான டாக்டர் வில்ஸனின் அரிய உபந்யாசங்களை இவரும், இவருடைய சிநேகிதர் சிவஸ்வாமி ஐயரும் கேட்டு வந்ததை நினைக்கும் பொழுது, சொந்தத்தில் விஞ்ஞானப் பயிற்சியில் அவர்களுடைய மனம் சிறுவயசு முதல் எவ்வளவு ஈடுபட்டிருந்தது என்பதை வாசகர்கள் அறியலாம்.

மேலும் பொதுஜனக் கூட்டங்களிலும் கல்வி சம்பந்தமான பல அரிய மொழிகளைச் சொல்லி வந்தார். 1907–ஆம் வருஷம் நடந்த விசாகப்பட்டணத்து மாகாணக் கூட்டத்திற்கு, கைத்தொழில் அபிவிருத்திக்காக ஏற்படுத்திய சபையின் வேண்டுகோளுக்கு இணங்கித் தம் அபிப்பிராயங்களைக் கடிதமொன்றில் எழுதி அனுப்பி இருந்தார். அதில் சிற்சில அருமையான விஷயங்களை அவருடைய கூர்மையான அறிவு அலசிப் பார்த்திருந்ததை நாம் அறிய வேண்டும்.

"நம்மைச் சுற்றிப் பார்த்தால் புதியதான ஒருவிதத் தொழில் அபிவிருத்தியையும் காணமுடியவில்லை. பழைய தொழில் நிலையங்களையாவது நாம் புஷ்டிப்படுத்தியிருக்கின்ருேமா என்ருல் அதுவும் இல்லை. நம்மில் சிலர் வெளி நாட்டுச் சாமான்களை, அதிலும் முக்கியமாக இங்கிலாந்து சாமான்களை வாங்கக் கூடாதென்று திடமாக நம்புகிறவர்கள், அவ்விதம் செய்வதால் நம் தேசத்தில் தொழில் அபிவிருத்தி ஏற்படும் என்று எண்ணுவது கேவலம் அநுமானம். நாளைக்குச் சீமைத் துணி வாங்குவதை நிறுத்தி விட்டால் இந்தியாவில் பாதிப் பேர்கள் உடுக்க உடை இன்றிக் கிடக்கவேண்டியதாகும். அவசியம் ஏற்பட்டால்தான் நாமும் எதையாவது செய்து பார்க்கக் கூடுமென்பது என்னவோ வாஸ்தவம். ஆயினும் எவ்வளவு பேர்கள் இதனுல் சிரமப்படு

அம்மாதிரி படித்து, பரீட்சை கொடுத்தவர்களுக்குச் "சிரோமணி" போன்ற சர்வகலாசாலைப் பட்டங்களை அளிப்பது - இவைபோன்ற ஏற்பாடுகளைப் புதிய திட்டம் கொண்டு வந்தது.* எல்லாம் காலக்கிரமத்தில் 1909-ஆம் வருஷம் என் தந்தை நீதிபதியான பிறகுதான் சபையில் எடுக்கப் பட்டன. அரசாங்க உத்தியோக ஹோதாவிலும் சர்வகலாசாலைச் சபையில் அவருக்கு இடம் உண்டான படியினால், அவர் அத்தீர்மானத்தைத் தாமே நீதிபதியாக இருக்கையில் கொண்டுவந்து ஒருவாறு சீர்பெற முடித்தார். 1915-ஆம் வருஷம் தொடங்கிப் புதிய முறையில் சாஸ்திரப் பரீட்சைகளுக்கு உட்.காரும்படி, ஸம்ஸ்கிருதம் முதலிய இந்திய பாஷைகளைக் கற்கின்றவர்களுக்குச் சர்வகலாசாலையில் ஏற்பாடாகியது.

அதே சபையில் ஆராய்ச்சி முறைகளைக் கற்பதற்குரிய ஏற்பாடுகளைச் சர்வகலாசாலை செய்யத் தீர்மானித்தது. இனி ஆராய்ச்சியாளர்கள் பல துறைகளில் நன்கு வேலை செய்யவேண்டிய விதமும் பல சௌகரியங்களை அவர்களுக்கு உண்டாக்கச் சர்வகலாசாலை அதிகாரிகள் வழி தேடினார்கள். சர்வகலாசாலையின் தனிப் பார்வையில் போதனைக்கென்று சிற்சில ஆசாரியர்களையும் உபந்யாசகர்களையும் ஏற்படுத்துவதற்குச் சர்வகலாசாலை அதிகாரிகளை ஒப்புக்கொள்ளச் செய்தது அச்சபை. எல்லாம் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அவருடன் ஒத்துழைத்த பல அரிய சிநேகிதர்களும் சேர்ந்து செய்த முயற்சியின் பயன் என்றே கொள்ளவேண்டும். இன்று சர்வகலாசாலை மண்டபத்தில் பல அறைகளில் பல துறைகளில் வேலை செய்யும் ஆராய்ச்சி யாளர்கள் ஏற்படுவதற்கு ஆதிகாரணமாக இருந்தவை, கிருஷ்ணஸ்வாமி ஐயர், சிவஸ்வாமி ஐயர் முதலியவர்கள் தெரிந்து செய்த உயர்ந்த யோசனைகள்தாம்.

இன்னும் 'டெக்னலஜி' என்னும் சாஸ்திரப் பயிற்சியையும் சென்னைச் சர்வகலாசாலை ஒரு கல்வி முறையாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்பது என் தந்தையின் நெடுநாளைய எண்ணம். ஆனால் சமீபத்தில்

* மெயில், 15-10-09.

வெளிவந்திருந்த பங்களூர் தாதா விஞ்ஞான சாஸ்திர ஸ்தாபனம் ஏற்படுத்திய திட்டங்களைத் தெரிந்து சென்னைச் சர்வ கலாசாலைச் சபையினர் தாங்களும் அந்த லக்ஷ்யத்தின் பொருட்டுச் செலவு செய்வது அவசியமில்லை என்று தீர்மானித்தனர். புதிய வழிகளில் கல்வி கற்பிக்கப் படுவதிலும், விஞ்ஞானப் பயிற்சியிலும் அவருக்கு இருந்த அடங்கா ஆர்வத்தையே மேலே குறித்த விவரங்கள் தெரிவிக்கின்றன. சிறு பிராயத்தில் கலாசாலைப் படிப்பு முடிந்த பிறகும் விஞ்ஞான ஆராய்ச்சியாளரான டாக்டர் வில்ஸனின் அரிய உப ந்யாசங்களை இவரும், இவருடைய சிநேகிதர் சிவஸ்வாமி ஐயரும் கேட்டு வந்ததை நினைக்கும் பொழுது, சொந்தத்தில் விஞ்ஞானப் பயிற்சியில் அவர்களுடைய மனம் சிறுவயசு முதல் எவ்வளவு ஈடுபட்டிருந்தது என்பதை வாசகர்கள் அறியலாம்.

மேலும் பொதுஜனக் கூட்டங்களிலும் கல்வி சம்பந்தமான பல அரிய மொழிகளைச் சொல்லி வந்தார். 1907–ஆம் வருஷம் நடந்த விசாகப்பட்டணத்து மாகாணக் கூட்டத்திற்கு, கைத்தொழில் அபிவிருத்திக்காக ஏற் படுத்திய சபையின் வேண்டுகோளுக்கு இணங்கித் தம் அபிப்பிராயங்களைக் கடிதமொன்றில் எழுதி அனுப்பி இருந்தார். அதில் சிற்சில அருமையான விஷயங்களை அவருடைய கூர்மையான அறிவு அலசிப் பார்த்திருந்ததை நாம் அறிய வேண்டும்.

"நம்மைச் சுற்றிப் பார்த்தால் புதியதான ஒருவிதத் தொழில் அபிவிருத்தியையும் காணமுடியவில்லை. பழைய தொழில் நிலை யங்களையாவது நாம் புஷ்டிப்படுத்தியிருக்கின்றோமா என்றால் அதுவும் இல்லை. நம்மில் சிலர் வெளி நாட்டுச் சாமான்களை, அதிலும் முக்கியமாக இங்கிலாந்து சாமான்களை வாங்கக் கூடாதென்று திடமாக நம்புகிறவர்கள், அவ்விதம் செய்வதால் நம் தேசத்தில் தொழில் அபிவிருத்தி ஏற்படும் என்று எண்ணுவது கேவலம் அநுமானம். நாளைக்குச் சீமைத் துணி வாங்குவதை நிறுத்தி விட்டால் இந்தியாவில் பாதிப் பேர்கள் உடுக்க உடை இன்றிக் கிடக்கவேண்டியதாகும். அவசியம் ஏற்பட்டால்தான் நாமும் எதையாவது செய்து பார்க்கக் கூடுமென்பது என்னவோ வாஸ்தவம். ஆயினும் எவ்வளவு பேர்கள் இதனால் சிரமப்படு

வார்கள் ! வெளிநாட்டுச் சாமான்களை விலக்குவது மட்டும் ஒரு நாளும் நமக்குத் தொழில் அபிவிருத்தியை அளித்துவிடாது.''*

அவருடைய மிதவாதக் கொள்கைகளில் ஏற்பட்ட கீழ்த்தரமான அபிப்பிராயங்களில் இதுவும் ஒன்று என்று பலருக்குப் படலாம். ஆயினும் நம் நாட்டில் தொழில் அபிவிருத்திக்காக அவருடைய உள்ளம் உண்மையில் பாடுபட்டதை அக்காலத்தில் அவர் பலருடன் சேர்ந்து ஆரம்பித்த, தேச அபிவிருத்தி நிதியும், தொழிற்சாலை அபிவிருத்திக்கான சபையும், நன்கு எடுத்துக் காட்டு கின்றன.

மேலும் அதே வியாசத்தில் தம்முடைய உண்மையான லக்ஷ்யத்தையும் தெளிவு படுத்துகிறார் :

"இத்தேசத்திலுள்ள ஒரு பணக்காரனாவது, அல்லது பணக்காரர்களில் சிலர் சேர்ந்தாவது, இது வரையிலும் ஒருவிதத் தொழில் அபிவிருத்திக்கும் பாடுபடவில்லை. காரணம் கேட்கும் போது நம்மிடம் இதற்கு வேண்டிய பொருள் இல்லை என்றுதான் சொல்லப்படும். இது நிஜந்தானா? நூற்றுக்கு ஐந்து வட்டி என்றதும் பிற நாட்டு வியாபாரியினிடம் மூன்று கோடி ரூபாயைக் கொடுத்து வைக்க நம்மால் முடிந்ததே! நாம் பிறரிடம் வைத்த அசட்டு நம்பிக்கை அல்லவா அதற்குக் காரணம்? நம்மிடம் ஒருவருக்கொருவர் நம்பிக்கைக் குறைவு கொண்ட காரணமே வியாபார உணர்ச்சியும், அதற்கு வேண்டிய தொழில் அபிவிருத்திக் கல்வியும் நம்மிடம் ஏற்படவில்லை. வெட்கித் தலை குனிவது ஒன்றுதான் நம்மால் இப்பொழுது செய்யக்கூடியது."

அவர் குறித்த விஷயம் 'அர்பத்நட் பாங்கு' மூழ்கிப் போனதால் பெரும் நஷ்டம் நாட்டிற்கு ஏற்பட்டது என்பதுதான். போட்ட பணம் போகாது என்ற நம்பிக் கையே மூன்று கோடியைப் பிறநாட்டினரிடம் கொடுத்து வைக்க நம்மைத் தூண்டியது; சற்று ஏதாகிலும் ஆபத்து விளையும் என்று மனத்திற்குப் பட்டால் நம்முடைய பணம் கண்ணுக்குத் தெரியாமல் பதுங்கும் என்பது அவருடைய புகார். தொழில் அபிவிருத்தியும், வியாபாரமும் பணத்தைக் கவலை இன்றிப் போட்டு எடுக்கும் மனப்

---

* 'ஹிந்து', 29-6-07.

பாங்கை ஆதாரமாகக் கொண்டவை என்பதையே இவ் வார்த்தைகள் உணர்த்துகின்றன.

மேலும் அவருடைய கோவையான விஷயப் பரிசீலனையைக் கவனிப்போம்:

"நம் தேசத்தில் விக்டோரியா டெக்னிகல் இன்ஸ்டிடியூட் போன்றதும், பரோடா 'கலாபவனம்' போன்றதுமான தொழில் ஞானத்தை ஊட்டும் ஸ்தாபனங்களில், கல்வி பயிலும் இளைஞர்களுக்கு வேண்டிய சௌகர்யங்களைச் செய்வதற்குப் பண உதவியை அங்குள்ளவர்கள் செய்து வருவதாக அறிகிறோம். இங்கு நம்மிடம் சுதேச அபிமானம் சரியான அளவில் இருந்திருக்கும் பக்ஷத்தில் சென்னை ராஜதானியில் இரண்டு மூன்று பட்டணங்களிலாவது தொழில் அபிவிருத்தியின் பொருட்டு டெக்னலஜியைப் போதிக்கும் ஸ்தாபனங்களை நாமே உண்டாக்கி விடலாம். எத்தனையோ முனிசிபாலிட்டி பள்ளிக்கூடங்கள் ஆரம்பப் படிப்பிற்காக இன்று உண்டாக்கப்பட்டு இருக்கின்றன நம்முடைய சொந்தத் தர்மத்தில் ஆரம்பப் படிப்பிற்கு ஏற்பாடுகள் செய்வது ஓரளவு சாத்தியங்கூட. முனிசிபாலிட்டி அதிகாரிகள் தொழில் அபிவிருத்திப் பள்ளிக்கூடங்களை ஆரம்பித்து, இப்பொழுது ஆரம்பக் கல்விக்குச் செலவிடும் தனத்தைக் கைத்தொழில் முதலியவைகளைக் கற்பிக்க ஏற்பாடு செய்யலாம். மற்ற நாடுகளைக் கவனித்தால், கைத்தொழில் செய்யத் தெரியாத கல்விப் பயிற்சியைப் பூரணமான வித்தியாப்பியாசமாக ஒருவரும் நினைப்பதில்லை............ஏன் ஒவ்வொரு பள்ளியிலும் கைத்தொழிலையும் உடம்பினால் உழைக்கும் மற்ற வேலைகளையும், கற்றுக்கொடுக்கக் கூடாது?"

என்று கேட்டார்.

"ஏன் நம் நாட்டுப் பிரமுகர்களின் நிர்வாகத்தின் கீழ் நடத்தப்படும் பள்ளிகளிலும் வித்தியா ஸ்தாபனங்களிலும் ஒழிவு நேரங்களில் மாணாக்கர்களுக்கு இரண்டொரு தொழில் முறையையாவது கற்றுக்கொடுக்க ஏற்பாடு செய்யலாகாது? கைத்தறியை விருத்தி செய்வது யந்திர சக்தியினால் நெசவு செய்வதைக் காட்டிலும் நீடித்து வாழக்கூடும் என்று நன்றாகத் தெரிந்திருக்கிறது. வெளி நாட்டுச் சாமான்களின் விலையில் சாமான்கள் சமுத்திர வழியாக இடத்துக்கு இடம் கொண்டு போகப்படும் செலவும் சேர்ந்திருக்கின்ற விவரமும் நாம் அறிந்ததே. இங்கே செய்யப்படும் சாமான்களுக்கும் வெளி நாட்டுச் சாமான்களுக்கும் விலையில் நிச்சயம் அக்காரணத்தினால் வித்தியாசம் இருக்கும். நாம் மட்டும் தீர்க்க

திருஷ்டியுடன் நம் கைத் தொழில்களை முன்னுக்குக் கொண்டு வருவோமாயின் எவ்விதத்திலும் நம்மிடமே நமக்குச் சுயநம்பிக்கை ஏற்படும்''

என்றார்.

இன்று உயர்ந்த தேசபக்தர்கள் போதிக்கும் கல்வி முறை நோக்கங்களில் சிலவற்றை அன்றே கிருஷ்ண ஸ்வாமி ஐயர் வற்புறுத்தி இருக்கிறார் என்பது திண்ணம்.

கடைசியாகச் சொன்னவை:

''சற்றும் புதுமுறையில் அமையாத நோக்கங்களுடன் மட்டும் கல்வியைக் கற்பிக்கச் சர்வகலாசாலைகள் தீர்மானித் திராவிட்டால், இத்துறையில் தொண்டு செய்வதற்கு எத்தனையோ வழிகள் இன்னும் இருக்கின்றன? சீமையிலுள்ள உயர்தர சர்வகலாசாலை களான, ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் முதலியவைகள்தாம் புராதன நோக்கங்களில் கட்டுண்டு கிடக்கின்றன. வித்தியாஸ்தாபனங்களை நிர்வாகம் செய்யும் அதிகாரிகளும், அவைகளில் விவசாயம் உலோக ரசாயனம், வியாபாரம் முதலியவைகளுக்குத் தகுந்த கல்வியைப் புகட்ட மார்க்கங்களைச் செய்யவில்லை. ஆனால் சீமையில் மற்ற இடங்களில், அதாவது, பர்மிங்ஹாம், லிவர்பூல் போன்ற இடங்களிலும் மற்றச் சர்வகலாசாலைகள் இருக்கும் இடங்களிலும், ஜப்பான், அமெரிக்கா போன்ற அயல் நாடுகளிலும் எடுத்துக் கொள்ளும் புதிய சிரத்தையில் கொஞ்சமும் நமக்குக் கருத்து இருப்பதாகத் தெரியவில்லை. ஒருகால் ஆக்ஸ்போர்டிலும் கேம்பிரிட்ஜிலுங்கூடப் புதிய மாறுதல்கள் ஏற்பட்டு விடலாம். ஆறாயிரம் மைல்கள் கடந்துவந்து, தாங்கள் படித்த நாளுக்கும் இந்நாளுக்கும் வித்தியாசம் இருக்கும் என்றுகூடத் தெரிந்துகொள்ளாத இங்கு வசிக்கும் ஆங்கிலேய நிர்வாகஸ்தர் களிடமிருந்து எதைத்தான் நாம் எதிர்பார்க்க முடியும்?''

எத்தனையோ விதங்களில் இந்த வியாசம் குறிப்பிடத் தக்கது. நிகழ்காலத்தை ஒட்டிய காரியங்களில் சற்றும் சளைப்பில்லாமல் விஷயங்களை அலசிப் பார்க்கும் மனப் பக்குவமும் இதனால் நன்கு வெளியாகின்றது.

சுதேச நிதியின்பாலும், தொழில் அபிவிருத்திச் சங்கத்தினிடமும் அவர் காட்டிய உண்மையான ஆதரவையும் மறக்க இயலாது. 1906-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் மூன்றாம் தேதி யன்று ஆரம்பித்தார்கள் தொழில் அபிவிருத்திச் சங்கத்தை. முக்கியமாகக்

கிருஷ்ணஸ்வாமி ஐயரும், ஜி. சுப்பிரமணிய ஐயரும் சேர்ந்துகொண்டு ஆரம்பித்தார்கள். சுதேசநிதியின் காரிய தரிசியாக ஜி. சுப்பிரமணிய ஐயர் நியமிக்கப் பெற்றார். அவர் இவரிடம் தெரிவித்ததாவது:

"நீங்கள் எழுதிய கடிதத்திலிருந்து, தொழில் அபிவிருத்தியின் பொருட்டுச் சங்கம் ஒன்றை ஆரம்பிக்கவேண்டும் என்னும் கருத்தில் எனக்கும் சர்வ சம்மதம். அவ்விதச் சங்கம் ஒன்று வேண்டியது அவசியமுங்கூட. தொழில் அபிவிருத்தி இயக்கத்தைக் காங்கிரசுடன் கலப்பதால், இரண்டையும் சரிவரச் செய்யமுடியாமல் போவதையும் நான் உணருவேன். காங்கிரஸ் பொதுக் கூட்டம் கூடும் சமயத்தில் ஒரு சபையைத் தொழில் அபிவிருத்தியைப் பற்றிக் கூட்டுவதற்குரிய நியாயம் எப்படி இருப்பினும், மற்றக் காலங்களில் இதைப்பற்றித் தொடர்ந்து காரியத்தை நடத்த ஒரு சங்கமும் இல்லாதிருப்பது மிகவும் தவறுதான். மகா ஜன சபையார் இதில் தாங்களாகக் கலந்துகொள்ள மாட்டார்கள்......எதற்கும் நாம் இருவரும் சேர்ந்து இதை ஆரம்பிப்போம். நீங்களே ஒரு கூட்டத்தை இது சம்பந்தமாகக் கூட்டுவதுதான் உசிதம்."*

சிறிது நாட்களில் மறுபடியும் அவர்,

"சுதேச நிதிக்கு என்ன செய்வது? அதற்கு வேண்டிய சட்ட ரீதியான பத்திரத்தை ஒரு சட்ட நிபுணரே தயாரிக்க வேண்டும். இதைத் தயாரிக்க உங்களால் ஏற்பாடு செய்ய முடியாதா? பத்திரம் எழுதி முடிந்ததும் நாம் செய்ய வேண்டியவைகளைச் செய்வோம்"†

என்றார்.

சுதேச நிதியை ஆரம்பித்த விவரமும் கொஞ்சம் தெரியவேண்டும். அதன் முக்கிய நோக்கங்களாவன (1) நம் நாட்டுத் தொழில்களை விருத்தி செய்தல். (2) வெளி தேசங்களில் சென்று தொழில் அபிவிருத்திக்கென்று கல்வி கற்கும் இந்திய இளைஞருக்குப் பொருளுதவிசெய்தல். (3) தொழில் அபிவிருத்தி செய்யும் ஆற்றலை நன்கு வெளிப்படுத்தும் உழைப்பாளிகளுக்குப் பொருளுதவி செய்வது. இக்கொள்கைகளை வைத்துக்கொண்டு முதலில் தீபாவளி தினத்தன்று வீடு வீடாக யாசித்துப் பணம்

* கடிதம், 29-1-06.

† கடிதம், 10-2-06.

திரட்டினார்கள். உண்டிப் பெட்டிகளுடன் வீடு வீடாய்ச் சென்று வந்தவர்கள், பெட்டிகளைத் திரும்பிக் கொடுக்கவும், திறந்து கணக்கிடுகையில், சென்னை நகரில் மட்டும் கிடைத்த தொகை ரூபாய் 3150-1-2, என்று தெரிந்தது. அத்தொகையில் எல்லோரையும் விடத் தனம் கொடுத்தவர் கிருஷ்ணஸ்வாமி ஐயரே என்று கணக்கிடும்பொழுது தெரிந்ததை மெயில் பத்திரிகை குறித்திருக்கிறது. பிற்பாடு தனியாகவும் வேண்டிய தொகையைத் தொழில் அபிவிருத்திச் சங்கத்திற்குக் கொடுத்தார். பணம் திரட்டச் சென்றவர்களைப் பொறுக்கி, அவர்களைத் தனித்தனிக் கோஷ்டிகளாகப் பிரித்து, சென்னை நகரத்தின் பல பாகங்களுக்கு அனுப்பும் ஏற்பாட்டையும் கிருஷ்ணஸ்வாமி ஐயரே செய்தார்.

பிறகு 1907-ஆம் வருஷம் இவ்விருஸ்தாபனங்களையும் சேர்த்து ஒரு ஸ்தாபனமாக மாற்றிக் காரியதரிசி களையும் நியமித்திருந்தார்கள். ஜி. சுப்பிரமணிய ஐயர் அதற்கு வெகு காலம் காரியதரிசி முறையில் பல ஊழியங்களைச் செய்துவந்தார். 1907-ஆம் வருஷம் 'ரிப்போர்'ட்டைக் கவனித்தால் எவ்வளவு விதங்களில் அந்த நிதி, தொழில் அபிவிருத்திக்கும், இளைஞர் களுக்கும், தொழில் முறையைக் கையாண்டவர்களுக்கும் பொருளுதவி செய்தது என்பது தெளிவாகும்.

வடமொழியின்பாலும், பெண் கல்வி விஷயத்திலும் முதலிலிருந்தே கிருஷ்ணஸ்வாமி ஐயர் காட்டிய பேராவல் சொல்லில் அடங்குவதன்று. ஸம்ஸ்கிருத பாஷைக்கும் அதிலுள்ள சாஸ்திரங்களை உயிர்ப்பிக்கத் தகுந்த விதம் தம்மால் ஆன பொருள் உதவியைச் சொந்தத்தில் செய்திருப்பதை வேறு சந்தர்ப்பத்தில் கவனிப்போம்.

பெண்கல்வியின் திறத்திலும் அவருடைய ஆற்றல் வெளிப்பட்ட விதம் தெரிய வேண்டியதே. மயிலாப்பூரில் விஜய நகரம் மகாராஜாவின் ஆதரவில் ஹிந்துப் பெண் களுக்கென ஒரு சிறு பள்ளி இருந்தது. அது வரவர க்ஷீண தசையை அடைந்து கொண்டே வந்தது. மயிலாப்பூர்ப் பிரபுக்களின் பெண்கள் எல்லாம் ஆரம்பக்

கல்வி கற்ற இடமும் அதுதான். அதன் க்ஷீண தசையை உத்தேசித்து என் தந்தை, தாம் தொடங்கிய தென் இந்திய சுதேச சங்கத்தின் ஆதரவில் அதை நிர்வகிக்க ஒப்புக் கொண்டு, 1903-04-ஆம் வருஷத்துச் செலவுக்காகக் கடன் பட்டிருந்த தொகையை உதவப் பல ஏற்பாடுகளைச் செய்தார். இன்னும் பல ஜமீந்தார்களின் உதவியைக் கொண்டு, ஒரு கட்டடத்தை அதற்காகக் கட்ட ஏற்பாடு செய்தார். அதன் நிர்வாகத்திற்காகப் பெரிய செல்வாக்குடன் கூடிய கமிட்டி ஒன்றை நியமிக்கச் சிரமம் எடுத்துக்கொண்டார். ஜட்ஜ் மணி ஐயரும், பி. ஆர். சுந்தரம் ஐயரும், வி. ஸி. தேசிகாச்சாரியாரும், கிருஷ்ண ஸ்வாமி ஐயரும் அதில் அங்கத்தினர்களாக இருந்து அவரவர்களால் முடிந்த பொருள் உதவியையும் செய்து வந்தார்கள். வக்கீல் தொழில் கற்கத் தம்மிடம் வரும் இளைஞர்கள் தருகின்ற குரு தக்ஷிணையை வெகு நாட்கள் வரையிலும் மயிலாப்பூர்ப் பெண்கள் பள்ளிக்கூடத்திற்கே இவர்களில் சிலர் கொடுத்து வந்த விவரம் எல்லோரும் அறிவார்கள்.

கல்வி விஷயத்தில் எதுவாயினும் சரி, அதற்குத் தம்மால் ஆன உதவியைச் செய்துவருவார். பழைய மெட்றிக்குலேஷன் பரீக்ஷைக்குச் சென்றவர்களுக்குப் பலவிதமான பாடங்களைக் கற்பதால் சிரமம் அதிகம் இருந்தது. ஒன்றிரண்டு பாடங்களை மட்டும் ஊன்றிக் கவனித்து வாசிப்பதற்கும், பரீக்ஷைக்கெனச் சிற்சில பாடங்களை மட்டும் மாணுக்கர்கள் பொறுக்கிக் கொள்வதற்கும் வசதிகளைச் செய்யும் காரியத்தில் அத்தியக்ஷராக நின்று, பள்ளிக்கூடப் படிப்பு முடிவில் கலாசாலையில் பிரவேசிக்கத் தகுந்த பரீக்ஷை மட்டும் போதுமென்று அவர் நினைக்கத் தொடங்கினர். அக் காரியத்தால், இதுகாறும் கணக்கு, விஞ்ஞானப் பயிற்சி, வடமொழி, பிற பாஷாஞானம் முதலியவைகளை ஒவ்வொருவரும் கற்க வேண்டியது அவசியமாக இருந்தது போய், அவைகளை மாணுக்கர்கள் கவனியாதிருக்கத் தொடங்கினர்கள். மறுவருஷமே புதிய பரீக்ஷைத் திட்டத்தின் உபயோகங்

களில் சந்தேகங் கொண்டிருந்த சிலர், தாங்கள் பயந்த தெல்லாம் உண்மையாயின என்று கூக்குரல் இட்டார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரும் தாமும் மற்றவர்களும் சேர்ந்து உருவாக்கிய புதிய திட்டம் அவரவர்களுக்குப் பிடித்த பாடங்களின் அறிவை ஊன்றி வளர்க்க மாணுக்கர்களுக்கு உதவி புரியும் என்று எதிர்பார்த்ததை வாய் விட்டுச் சொல்லிப் பார்த்தார். கல்வி முறைகளை நன்கு பரிசோதித்தவர்கள் அதை ஒப்புக் கொள்ளவில்லை. பழையது எதுவாயினும் அதுவே உயர்ந்ததென்பதும், புதியது எதுவாயினும் சரியல்ல என்பதும் பலருடைய சித்தாந்தம். எதையும் புதிய வழியில் செய்து பார்க்கும் மனப்பாங்கு பலரிடம் இருப்பதில்லை. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் எண்ணம் புதிய பரீக்ஷையை அமலுக்குக் கொண்டுவந்து, அதில் ஏதேனும் குறைகள் இருப்பின் அவைகளைப் பிற்பாடு சீர்திருத்தம் செய்யலாம் என்பதே. ஆகையால் அவர் எல்லோரையும் கேட்டுக் கொண்டது, புதிய கல்வித் திட்டத்திற்கும் சற்று அவகாசம் கொடுத்து, அது சரியாக இருக்கின்றதா என்று பார்வையிட்டு, அவ்விதம் சரியில்லாததை உணர்ந்தபிறகே அதைத் தள்ள வேண்டும் என்பதுதான்.

மாணவர்களின் பள்ளிக்கூட முடிவுப் பரீக்ஷைக்கான வயசையும் பதினாறிலிருந்து பதினைந்துக்குக் குறைக்க வேண்டுமென்று அவர் பாடுபட்டார். இது ஏற்கனவே சர்வ கலாசாலைக் கமிட்டி செய்த தீர்மானத்தைச் சற்று மாற்றியது. அடுத்தாற்போல் சர்வகலாசாலையில் ஆராய்ச்சித் துறையில் நன்கு வேலை செய்தவர்களுக்கும் மற்றும் கல்விப் பயிற்சியால் பெரிய பெயர் கொண்டவர் களுக்கும், உலகம் அறிய 'டாக்டர்' பட்டங்களை அவ்வப் போது சர்வகலாசாலை கௌரவமாக அளிக்கவேண்டும் என்பதைப்பற்றியும் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்து அவர் பேசியிருந்தார்.

சர்வ கலாசாலைச் சபைகளில் சட்டத்தின் கீழ்ச் சிற்சில விதிகளை நிர்ணயிக்க ஏற்படுத்திய கமிட்டியில் என் தந்தையும் ஒருவராயிருந்து, மிகவும் உழைத்து வேலை

செய்தார். எவ்வளவோ தினங்களில் கோர்ட்டு அலு வல்கள் முடிந்த பிறகு சர்வகலாசாலைக் கமிட்டிகளில் இரவு 9-மணி வரையிலும் டாக்டர் போர்ன் என்றவரைப் போன்ற அறிவாளிகளுடன் சபை விதிகளைத் தீர்மானிக்கும் காரியத்தில் ஈடுபட்டிருப்பார்.

தம் ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளும் அளவில், தாம் சதா மதிப்புக் கொண்ட மஹான் மணி ஐயர் பெயரில், இந்திய சரித்திர சம்பந்தமாகவோ அல்லது விஞ்ஞான ஆராய்ச்சியின் விஷயமாகவோ உபந்நியாஸம் ஒன்றை வருஷந்தோறும் சர்வ கலாசாலையில் செய்வதற்கு வேண்டிய செலவுக்காகப் பொருளுதவியும் தாம் கொடுப்பதாக வாக்குத்தத்தம் செய்திருந்தார். உப அத்தியக்ஷகர் ஹோதாவில் ஜட்ஜ் வாலிஸ் அவருடைய கொடையை மிகவும் உயர்ந்ததாகக் கொண்டாடி அங்கீகரித்தார். சர்வகலாசாலைச் சபையின் அங்கீகாரத்தைப் பெறுவதற்கும் ஏற்பாடுகள் நடந்தன. சர்வகலாசாலை அறிவாளிகளான பிரமுகர்களிடம் பெற்ற கொடைகளில் முக்கியமானது 'ஸர் சுப்பிரமணிய ஐயர் உபந்நியாஸ' நிதி. அந்தத் தொகை கொடுபடுவ தற்குள் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய ஆயுட் காலம் முடிவடைந்த விவரமும் தெரிகிறது. நிதியை அங்கீகரிக்கச் செய்யும்பொழுது இரண்டு நிபந்தனைகளை அவர் ஏற்படுத்தினார். அதாவது அடுத்தடுத்து வருஷந்தோறும் சரித்திரம், விஞ்ஞானம் இவை சம்பந்தமான ஆராய்ச்சி யாளர்களே அதன் பிரயோஜனத்தை அடைய வேண்டு மென்றார். தேச முன்னேற்றத்தில் பற்றுள்ளவர்கள் வாஸ்தவத்தில் இவ்விரண்டு லக்ஷியங்களையே பெரிதாக மதிப்பார்கள்.

மணி ஐயர் பெயரில் வைத்த மூலதனமே அம் மாதிரியான நிதிகளைப் பிற்காலங்களில் சர்வகலாசாலை அதிகாரிகள் பெறுவதற்கு வழிகாட்டி ஆயிற்று. பிற்பாடு சிற்சிலர் இவ்வழியே சென்று தாங்களும் கொடைகளைக் கல்விக்கு என்று தந்திருக்கிறார்கள். ஆனால் மிதமான சம்பாத்தியமுள்ளவர்களால் இதைவிட மிகவும் அதிகமான

தொகையைக் கொடுத்ததாகவோ அல்லது பலர் அடுத் தடுத்து இம்மாதிரிக் கொடுத்ததாகவோ சர்வகலாசாலையின் சரித்திரத்தால் இதுவரையில் விளங்கவில்லை.

சர்வகலாசாலை என் தமையனுருக்கு எழுதிய கடிதம் ஒன்றில், பின் வருமாறு அம் மூலதனத்தைப் பெற்றதன் அங்கீகாரத்தைத் தெரிவித்தது :

"நீங்கள் அனுப்பிய ரூபாய் 7200 விலையுள்ள கவர்ன்மெண்டு ப்ரோநோட்டுக்கள் எங்கள் கைக்கு வந்ததற்கு மிகவும் நன்றி பாராட்டுகிறோம். காலம் சென்ற உங்கள் தகப்பனுர் வாக்களித்தபடி ஸர் சுப்பிரமணிய ஐயர் பேரிலுள்ள உபந்யாஸச் செலவிற்காகக் கொடுத்த மூலதனம் இது என்பதை எந்நாளும் மறவோம்"*

என்று எழுதியிருந்தது கடிதத்தில்.

எத்தனையோ விதங்களில் கல்வி முன்னேற்றத் திற்காகப் பாடுபட்டவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். பலவிதச் சீர்திருத்தங்களைச் செய்யப் பிரயாசைப்பட்டதால் உடனுக்குடனே மிகுந்த நன்மை ஏற்படாமல் இருந்திருக்க லாம். உதாரணமாக மெட்றிக்குலேஷன் பரீக்ஷை கட்டாய மாக இருந்ததை மாற்றியது தீமையையே செய்ததென இன்றுள்ள பல கல்வித்துறைப் பொறுப்பாளிகள் முடிவு கட்டி யிருக்கிறார்கள். ஆயினும் தவறுதல்களையும் செயலில் ஈடுபடுபவர்கள்தாம் செய்வார்கள். சும்மா உட்கார்ந் திருக்கும் மனிதர்கள் பிறரைத் தூஷித்துவிட்டுத் தங்கள் கையை அசைக்காமல் இருப்பதைத்தான் நாம் பார்க்க முடியும். இன்னும் சிலர் ஒன்றையுமே செய்யாததால் தவறுதல்களுக்கு அவர்களிடம் கொஞ்சமும் இடம் ஏற்படக் காரணமே இல்லை அல்லவா ?

* கடிதம், 15-7-12.

## அத்தியாயம் 16

### லார்ட் கர்ஸனுக்குக் கொடுத்த பதில்

**''வண்மையி லேயுளத் திண்மையி லேமனத்**
**தண்மையி லேமதி நுண்மையிலே**
**உண்மையி லேதவ றுத புலவர்**
**உணர்வினி லேஉயர் நாடு''** **—பாரதியார்.**

இந்திய நாடு அடிமைத் தேசமாக இருப்பதனுல் தான் பலவிதமான அவதூறுகளுக்கு எப்பொழுதும் பாத்திரமாகிறது. மிஸ் மேயோவைப் போன்ற மேல் நாட்டுக் கர்விகள் கொஞ்சங்கூடக் கூச்சமில்லாமல் நம்மை இழிவுபடுத்தியதற்குக் காரணம் ஆங்கில அரசாங்கம் அவர்களுக்குத் தங்கள் முழு ஆதரவையும் அளித்தது தான். மேல் நாட்டார்கள் செய்யும் இவ்விதக் காரியங்களை இறுமாப்பின் விளைவு என்றுகூடச் சொல்லலாம். ஜெனரல் டையர் போன்றவர்கள் பஞ்சாப்பில் நடத்திய அக்கிரமச் செயல்களுக்காக அவர்களுக்குச் சம்மானமும் வழங்கிய சமாசாரம், எவ்வளவு வரையிலும் நம்மிட முள்ள அடிமைத்தனத்தை உலகிற்கு எடுத்துக் காட்டியது! ஆம், ஆங்கில ஆட்சி நிலைப்பதற்கு வெள்ளைக் காரர்கள் மேற்கொள்ளும் முறையில் ஒன்று, இடை விடாது நம்முடைய அரசியல் காரியங்களின் ஊழல்களைப் பிறருக்கு எடுத்துக்காட்டி, மேலும் நமக்குள்ளேயுள்ள வேற்றுமைகளையும் பெரிது படுத்திக் காட்டுவதே.

நாற்பது வருஷங்களுக்கு முன் இந்தியாவை ஆளவந்த ஒரு ராஜப்பிரதிநிதி இன்னும் அதிகமாக நம்பால் அலக்ஷ்யத்தைக் காட்டினுர் என்பதை இந்த நாடு மறக்க வில்லை. எந்நாளும் மறக்காதபடி அவரே நடந்து கொண்டார் என்ருலும் தவறில்லை. கர்ஸன் பிரபு இந்திய ராஜப் பிரதிநிதியாக இருந்து ஒருவருக்கும் நன்மையைச் செய்யவில்லை. ஆங்கில ஆட்சியின் செருக்கு, கர்ஸன் பிரபுவின் வீண் டம்பத்தினுல் உலகிற்கு ஓரளவு வெளிப் படுத்தப்பட்டது என்றே கொள்ளவேண்டும்.

முதல் முதலில் 1898-ஆம் ஆண்டில் அவரை அரசாங்கத்தார் நம் தேசத்தின் கவர்னர் ஜெனரலாக நியமித்த போது, அவருடைய இளம்பருவ வரலாறுகளைக் கேட்ட பலருக்கு அவரிடம் பிரமை இருந்தது. அவரால் தேசத்துக்கு நன்மை விளையுமென்று எதிர்பார்க்க ஆரம்பித்தார்கள். ஆனால் உடனே அவர்களுக்கு ஏமாற்றமே ஏற்பட்டது. கர்ஸன் பிரபு, தாம் கர்ஸன் பிரபுவே என்பதை மட்டும் சற்று மறந்திருந்தால் அவரும் பெரியவராக இருந்திருப்பார் ; நாமும் அவருடைய குற்றங்களை மன்னித்திருப்போம். அவரிடம் சுபாவத்தில் இருந்த கெட்ட குணங்களுக்குத் தூண்டுகோல்போல ஆங்கில அரசாங்க முறையின் அநீதி அமைந்தது. ஏதோ இந்திய நாட்டிற்கே அமைந்த புதிய அவதாரங்களில் ஒன்ருகத் தம்மை நினைத்து, தம் கடமை யாது என்பதையும் உணராமல் அவர் இருந்ததால்தான் அவ்வளவு தீமைகளுக்கும் இருப்பிடம் ஆனுர். தம்மிடமும் தம்மைச் சேர்ந்தவர்களிடமும் அவருக்கு இருந்த அளவுகடந்த மதிப்பும் கௌரவமுமே பிறரைச் சதா தூஷித்ததற்கும், இழிவு படுத்தியதற்கும் முக்கியமான காரணம். நிலைக் கண்ணுடிகள் நிறைந்த ஓர் அறையில்தான் அவர் வசித்து வந்தார். சுற்றிப் பார்த்ததெல்லாம் தம் பிரதி பிம்பமே அல்லாமல் வேறு எதையும் அல்ல.

இந்தியர்களைப் பெரிய உத்தியோகங்களில் வைப்பது பிசகு என்பது அவர் சித்தாந்தம். அவர்கள்பால் அதற்குத் தகுந்த படிப்பு, நல்ல பழக்கம் முதலியவை கிடையா என்பதும் அவருடைய எண்ணம். சட்டசபையின் அங்கத்தினர்களில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளையும் அவர் மதிக்கவில்லை. சர்வகலாசாலைச் சட்டமொன்றைப் புதிதாக அமலுக்குக் கொண்டுவந்து, அதனுல் அங்குள்ள ஆலோசனைக் கூட்டங்களில்கூட நியமன அங்கத்தினர்களின் தொகையை அதிகப்படுத்தினுர் என்று அறிந்தோமல்லவா? இந்திய சர்வகலாசாலைகள் அரசாங்க அதிகாரிகளின் கீழ்த்தான் நடத்தப்படவேண்டும் என்பது அவருடைய துணிவு. இவ்வளவிற்கும் அடிப்படையாக

ஒரு கருத்து அவரிடம் இருந்தது. இந்தியர்களின் கீழ்த் தரமான கொள்கைகளும் யோக்கியதைகளும் எப்போதும் பெரிய பொறுப்புக்களை அவர்களால் வகிக்க முடியாதபடி செய்தன என்பதே அவர் கருத்து.

ஒரு சமயம் இந்திய சட்டசபையில் புது வருஷத்துச் செலவுத் திட்டங்களைப் பற்றிச் செய்த பிரசங்கத்தில் அவர் சிறிதும் பயமின்றிச் சொன்னதாவது :

"இந்த நாட்டின் அரசாங்க அதிகாரப் பதவிகளில் அவசியம் வெள்ளைக்காரர்களே இருக்கவேண்டும். ஏனென்றால் அவர் களுக்குத்தான் பிறவியினாலும், பயிற்சியினாலும், படிப்பினாலும், ஆட்சி செலுத்தும் அநுபவத்தினாலும் வேண்டிய அளவு நல்ல பழக்கங்களும், சிறந்த ஒழுக்கமும் இக்காரியத்திற்கு ஏற்ப இருக்கின்றன. வெள்ளைக்காரர்களின் ஆட்சியைத் தவிர வேறு எதுவும் இங்கு இருக்க முடியாததால், வெள்ளைக்காரர் களே ஒழுக்க முறைகளையும், சீர்தூக்கிப் பயிலவேண்டிய கொள்கைகளையும் கடைப்பிடித்துக் காட்டவேண்டும்."*

இதனுடன் நிறுத்திக்கொள்ளாமல், மறு வருஷம், அதாவது 1905–ஆம் வருஷம் பிப்ரவரி 11-ஆம் தேதியில், சர்வகலாசாலை மாணவர்களுக்குக் கல்கத்தாவில் சொற் பொழிவு செய்யுங்கால் அவர், நம் நாட்டு மக்களைப்பற்றிச் சில குற்றங்களைத் தெரியப்படுத்தினார் :

"உண்மை என்பது, பெரிதும் மேல் நாட்டார்களின் கருத்துக் களில் ஒன்றே என்று சொல்லுவதால் நான் பொய்யுரைப்ப தாகவோ, தற்பெருமை அடித்துக்கொள்வதாகவோ நீங்கள் நினைக்கவேண்டாம். அதனால் ஐரோப்பியர்கள் சதா உலகெங்கும் உண்மையைத் தவிர வேறொன்றையும் சொல்லமாட்டார்கள் என்றும் நான் சொல்ல வரவில்லை. அதேபோல் ஆசியா கண்டத் தவர்கள் சுபாவத்திலோ வேண்டுமென்றோ சத்தியத்தை நழுவ விட்டவர்கள் என்பதற்கும் இல்லை. அப்படிச் சொல்வது அசட்டுத் தனம் மட்டுமல்ல, பிறரை இழிவுபடுத்துவதுமாகும். ஆனால், நிச்சயமாய் மேல்நாட்டார்களின் ஒழுக்க நெறிகளில் சத்தியம் உயர்ந்த ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறது. கீழ் நாடுகளில்

* 1904-ஆம் வருஷத்தில் "இந்திய நாட்டு வரவு செலவுத் திட்டம்" என்ற தலைப்புடன் பேசிய பிரசங்கத்தினின்றும் எடுக்கப் பட்டது. 'இந்தியாவில் லார்ட் கர்ஸன்' என்ற புத்தகத்தில் 142-143 பக்கங்களைப் பார்க்க.

சத்தியத்திற்கு இவ்வளவு உயர்வைக் கொடுக்கவில்லை. தந்திரமும் சூதும் இங்கே புகழப்படுகின்றன. சாதாரணமாய் உலகெங்கும் தந்திரத்தைக் கீழ் நாட்டுக் குணமாகவே குறிக்கின்றார்கள். எல்லோருக்கும் புரியாத விதம் மிகவும் நுட்பமாக, சுற்றிச் சுற்றித் தேடும்படியான ஏதோ உள்ளடங்கிய ஒன்று அக்குணத்தில் பதிந்து கிடக்கின்றது. கீழ் நாட்டின் இலக்கியங்களிலும் இதையே பார்க்கலாம். உங்கள் புராணங்களில் சத்தியத்தை மிகவும் உயர்த்திப் பேசுவார்கள். ஆனால் எங்கும் சத்தியத்தை விட்டு விலகும் மார்க்கங்களையே உங்கள் புஸ்தகங்களில் குறித்திருப்பதை நீங்களே பார்க்கலாம். அடிக்கடி சரியென்று நம்பிச் செய்யும் சூழ்ச்சியே புகழப்படுவதையும் கவனித்திருக்கலாம்........."

எவ்வளவு துணிச்சலும் அகம்பாவமும் ஒருவரிடம் குடிகொண்டிருந்தால், இம்மாதிரி வார்த்தைகளை, எதிரில் உட்கார்ந்திருப்பவர்களின் இருதயபாவங்களையும் உணர்ச்சிகளையும் பொருட்படுத்தாமல் சொல்ல இடம் கொடுத்திருக்கும்? நேரில் கேட்டவர்களும், நாடெங்கும் பத்திரிகைகளில் இந்த அதிகப்பிரசங்கத்தை வாசித்தவர்களும் மிகவும் கோபம் கொண்டார்கள். 'அமிருத பஜார் பத்திரிகை' என்னும் கல்கத்தா தினசரி ஒன்று மட்டும் கர்ஸனை நன்றாய்ப் பரிகசித்தது. தம்முடைய புஸ்தகம் ஒன்றில் கர்ஸன் தாமே பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

"ஒரு சமயம் கொரியா தேசத்துத் தலைவரைக் காண நேர்ந்தது; அவரிடம் என் வயசை முப்பத்துமூன்று என்று தெரிவிக்கவேண்டாம் என முன்பே எச்சரிக்கப் பட்டதால், நான் சந்தேகமில்லாமல், 'என் வயசு நாற்பது' என்றேன். 'நீங்கள் இங்கிலாந்து ராணியின் பரம்பரையைச் சார்ந்தவரா?' என்று என்னை மறுபடியும் விருந்தினர் கேட்டார். 'இல்லை' என்று சொல்வதுடன் நிறுத்திக்கொள்ளாமல், 'எனக்குக் கல்யாணமாகவில்லை' என்னும் மனச்சாக்ஷிக்கு விரோதமான செய்தியைப் பகிரங்கப்படுத்தி அவருடைய நன்மதிப்பைப் பெற்றேன்."*

எவ்வளவு பொய் இதில் தெரிகிறது! காக்கை கரிச் சட்டியை அதன் கருமையைக் கண்டு பழித்ததாம்!

---

* லார்ட் கர்ஸன் எழுதிய 'கீழ்நாடுகளிலுள்ள சில முக்கியச் சிக்கல்கள்' என்ற புஸ்தகம், பக். 155.

கர்ஸன் பிரபு பிறரிடம் உள்ள பொய்மையையும் ஏமாற்றும் சுபாவத்தையும் பழித்தது அப்படித்தான் இருந்தது. மேலே குறித்த விஷயத்தை 'அமிருத பஜார் பத்திரிகை' இந்தியர்களுக்கும் மற்றத் தேசத்தவர்களுக்கும் சரியான தருணத்தில் ஞாபகப்படுத்தியது.

கர்ஸனுடைய பிரசங்கத்தை வாசித்து ஒரே அமர்க்களமாகிவிட்டது எங்கும். கர்ஸனுடைய வாய்க் கொழுப்பினால் ஏற்பட்டதுதான் அது. அகில இந்தியக் காங்கிரஸின் காரியதரிசியாகிய டின்ஷா அடுல்ஜி வாச்சா சும்மா இருப்பாரா? 1905-ஆம் ஆண்டு பிப்ரவரி 21-ஆம் தேதி தம் நண்பருக்கு அவர் எழுதிய கடிதத்தில்,

"நீங்கள் எழுதுவதற்கு முன்பே கல்கத்தா நண்பரொருவர் மேதாவுக்கு நேரில் தெரிவித்துவிட்டார். உடனே பொதுக் கூட்டமொன்றைக் கூட்டி, அதில் நம்முடைய ஆத்திரத்தைக் காட்டி, அரசரும் பிரிட்டிஷ் பார்லிமெண்டும் இந்த இந்திய ராஜப்பிரதிநிதியை ஊருக்குத் திரும்பும்படி உடனே கட்டளையிட வேண்டுமென்று விண்ணப்பமூலம் கேட்க நாம் தீர்மானிக்க வேண்டும் என்பதே அவர் வேண்டுகோள். மேதா ஊரில் இல்லை. 23-ஆம் தேதி அவர் திரும்பி வந்ததும் அவரைக் கலந்து கொண்டு உங்களுக்குத் தந்தி மூலமோ தபாலிலோ பதிலைத் தெரிவிக்கிறேன். சென்னையும் கல்கத்தாவும் நினைப்பதைப் போலவேதான் நாங்களும் இங்கு நினைக்கிறோம். பொதுக் கூட்டத்தினால் வேறு பிரயோசனம் இராவிட்டாலும், வைஸ்ராயினுடைய மிதமிஞ்சிய பொய்களையாவது கண்டனம் செய்த திருப்தி உண்டாகுமல்லவா? மேலும், உடனே கர்ஸனைக் கண்டிக்காவிட்டால் நம்முடைய கௌரவத்திற்கே ஹானி வந்துவிடும்"

என்று குறித்திருந்தார். கட்டில் அடங்காத அவருடைய கோபத்தைக் கடிதம் வெளியிட்டது.

"நீங்கள் இதில் சிரமம் எடுத்துக்கொண்டால் நாம் வெற்றி பெறலாம்; தேசத்திற்கு நன்மை செய்த பெருமையும் உங்களைச் சாரும்"*

என்று கூறிப் பெரியதொரு கூட்டத்தைச் சென்னை நகரில் கூட்டும்படி சேலம் விஜயராகவாச்சாரியார் என் தந்தையைத் தூண்டினார். பிறகு கூட்டமும் மார்ச்சு மாதம்

* கடிதம், 19-2-05.

25-ஆம் தேதியில் கூடியது. கர்ஸன் பிரபுவைப் பிறர் கண்டு நகைக்கும்படி எத்தனையோ விஷயங்களை எடுத்துக் காட்டிப் பேசினார்கள் அன்று பேசிய பிரமுகர்கள்.

ஆனால், கிருஷ்ணஸ்வாமி ஐயரின் உள்ளத்தில் யோசனை ஒன்று புரண்டது: "வார்த்தைகளில் கோபத்தைக் காட்டுவதால் நம்முடைய கட்சி வலிவு பெறுவது ஓரளவுதான் சாத்தியம்; ஆனால் நிரந்தரமான காரியம் ஒன்றைச் செய்து, என்றும் கர்ஸன் சொன்னது நியாயமல்ல என்று காட்டுவது எவ்வளவு மேல்?"

எந்த நல்ல காரியத்தையும் உடனே செயலில் காட்ட விரும்புவதும், அதற்குத் தகுந்த விதம் உடனே செயலில் புகுவதும் அவருடைய பிறவிக் குணங்கள். ஆகையால் சில சிநேகிதர்களுடன் கலந்து, நம் நாட்டுப் புராணக் கதைகளினின்றும் உயர்ந்த தர்மங்களைப் புகட்டும் கதைகளைப் பொறுக்கிக் கோவையாகச் சேர்த்துப் பிரசுரித்தால் கர்ஸன் சொன்னவை எவ்வளவு புத்தியீனம் என்பது தானே நன்கு புலப்படும் என்று உணர்ந்தார்.

அக்கதைகள் வடமொழியில் உள்ளவை. அவைகளை வடமொழியில் வாசித்தால்தான் அவற்றின் முழு அழகும் உண்மையான கருத்தும் விளங்கும். எல்லோருக்கும் வடமொழி புரியாதே என்ற ஆக்ஷேபம் ஓரளவு தோன்றி னாலும், புரிந்தவர்களாவது கதைகளைத் தாங்கள் முதலில் வாசித்துப் பின்பு பிறருக்கு மொழி பெயர்த்துச் சொல்லட்டும் என்பதே அவர் யோசனை. பிறர் நம்மைப் பற்றிக் குறை சொல்வதை மட்டும் வெறுத்துப் பயன் என்ன? நாமே படிக்கிறதில்லையே நம் மூதாதையர் கதைகளை! ஹரிச்சந்திரன் கதையை அறிந்தவர்களும், இந்த நாட்டுக் கொள்கைகளில் முழுகியவர்களும், கர்ஸன் குறித்தவிதம் நாம் சத்தியத்தைக் கடைப்பிடிக்காதவர்கள் என்பார்களா? ராமனை வால்மீகி தாம் அறிந்தபடியே எடுத்துரைத்த பின்னர், சத்தியத்தை அவ்வாறு நடத்தையில் காட்டியவர் உலகில் வேறு ஒருவர் பிறந்திருப்பாரென்று சொல்ல முடியுமா? எதை

வைத்துக்கொண்டு கர்ஸன் புராணங்களில் சூதையும் தந்திரத்தையும் நாம் பிரமாதப் படுத்துகிறோம் என்று சொன்னார்? அதுதான் தெரியவில்லை. 'எதற்கும் நம் கதைகளை நல்ல அச்சில் தெளிவாகப் பதிப்பித்து உலகிற்குக் கொடுப்போம்' என்ற ஒரே எண்ணம் அவரை அன்று முதல் ஆட்கொண்டது.

திருச்சிராப்பள்ளி ஸ்ரீமான் ஏ. வி. கோபாலாச்சாரியாருக்கு என் தந்தையாரிடமிருந்து இது சம்பந்தமாகக் கடிதங்கள் சென்றன. ஸ்ரீரங்கத்தில் வாணீ விலாஸ அச்சுக்கூடத்தார் அக்காலத்திலேயே மிகவும் பிரபலமானவ்ர்களாக இருந்தார்கள். அவர்களுடைய ஸம்ஸ்கிருதப் பிரசுரங்கள் பெயர்போனவை. வாணீ விலாஸப் பதிப்பென்றாலே அப்புஸ்தகங்களைக் காணவும் அவைகளைக் கையில் எடுக்கவும் ஆசையைக் கிளப்பும்படி இருக்கும். ஸம்ஸ்கிருதப் புஸ்தகங்களை அவர்கள் கவர்ச்சியுடன் புதிய முறையில் வெளிப்படுத்தினார்கள். அந்த அச்சுக்கூடத்தில்தான் இக்கதைக் கோவையைப் பதிப்பிக்க வேண்டுமென்ற கருத்து அவருக்கு ஏற்பட்டது.

பணத்துக்கு அவரிடம் என்றுமே பஞ்சம் இல்லை. சகாயம் செய்யப் பண்டிதர்களையும், பல அரிய ஸம்ஸ்கிருத ஆராய்ச்சியாளர்களையும் சேர்த்துக்கொண்டு புஸ்தகத்தை வெளியிட உத்தேசித்திருந்தார். பலர் கூடுவதற்காக அவர்களுக்குச் சௌகரியமான சில தினங்களை வைக்க வேண்டியிருந்தது. இதனால் பலரும் சேர்ந்து பார்வையிட்டுக் கதைகளைப் பொறுக்குவதற்கு இரண்டு வருஷங்கள் ஆகிவிட்டன. ஹரிச்சந்திரன் கதை பாரதத்திலும் சொல்லப்படுகிறது; மார்க்கண்டேய புராணத்திலும் வருகிறது. நடை, வரலாறு முதலியவைகளில் எது அழகாக இருக்கும் என்பதுதான் முதல் யோசனை. அடுத்தபடி ராமாயணத்தைச் சுருக்கி எழுதும் முயற்சியில் வால்மீகியின் சுபாவ நடை சிதறிவிட்டால் என்ன செய்வது என்றெல்லாம் கவலை. இதனிடையில், என் பெரிய தகப்பனாருக்கு ராமாயணத்தைச் சங்கிரகப் படுத்துவதனால் அதன் அழகு குலையுமென்று தோன்றி

விட்டது. அவர் தம் மனத்தை மிகவும் ஆயாஸப்படுத்திக் கொண்டு, இக்காரியம் ராமாயணத்தையே கெடுத்துவிடு மென்று சொல்லத் தொடங்கி விட்டார். எல்லாம் சேர்ந்து காலதாமதம் உண்டாகக் காரணமாயின.

முதலில் வாணீ விலாஸ அச்சுக்கூடத்தார் இதற்குச் செலவுத் திட்டத்தைப் போடும்பொழுது ஆயிரம் பிரதி களுக்கு ரூபாய் 1350 ஆகும் என்று குறித்தார்கள். இம்மாதிரி ஐயாயிரம் பிரதிகள் போடுவதற்கு ஏற்பாடாகியது. புஸ்தகம் மொத்தம் நாற்பது கதைகள் அடங்கியது. புஸ்தகத்தின் பெயர் "ஆர்ய சரித்திரம்". ராமாயணத்தினின்றும், பாரதம், பாகவதம், தேவி பாகவதம், விஷ்ணு புராணம், மார்க்கண்டேய புராணம் ஆகியவைகளிலிருந்தும் அரிய கதைகள் சேர்க்கப்பட்டன. கர்ஸன் பிரபுவின் பிரசங்கத்தை மனத்தில் வைத்துக் கொண்டு, புஸ்தகம் பதிப்பித்ததன் நோக்கத்தையும் முகவுரையில் குறித்திருந்தார் பதிப்பாசிரியர்:

"இக்கதைக் கோவையைப் பதிப்பிக்கத் துணிந்ததற்குக் காரணம், இப்பொழுது பிரமாதப்படும், கர்ஸன் பிரபு கல்கத்தா மாணவர் கூட்டத்தில் செய்த பிரசங்கந்தான். கர்ஸன் இந்தத் தேசமக்களின் உயர்ந்த தர்மங்களைப் பழித்தார் என்பதை உணர்ந்து அது பொய் என்று காட்டப் பல இடங்களில் குவிந்து கிடக்கும் கதைகளையும், இன்னும் அச்சிடப்படாமல் ஓலைச் சுவடி களில் இருக்கும் உயர்ந்த கருத்துக்களையும் தேடுவது எல்லோ ராலும் முடியாது. கர்ஸன் பிரபுவின் பேச்சுக்கு எதிரே நம்முடைய பதிலை ஒரு சொல்லில் எடுத்துரைப்பதும் அசாத் தியம். பலருக்குக் கர்ஸன் சொல்லும்பொழுது அவர் கூறுவது நியாயமன்று என்றுமட்டும் பட்டது. ஆனால் கோபத்தைக் காட்டுவதைத் தவிர வேறொன்றையும் அவர்களால் செய்ய முடிய வில்லை. தங்களுக்கு ஏதோ அநியாயம் நடந்துவிட்டதை மட்டும் உணர்ந்தார்கள். இந்தக் கதைக் கோவை நாம் விரும்பும் சர்வத்தையும் எடுத்துக் கொடுப்பதாக நான் எண்ணவில்லை. இந்தத் தேசதர்மங்களில் குறை இருப்பதாக இந்தியர்கள் எண்ணி வெட்கித் தலை குனியாவண்ணம் இக்கதைகள் உதவி செய்யுமாயின் அதுவே போதும். இந்த நாட்டின் பெரிய இலக்கிய நிதிகளை வழங்கிய நிபுணர்கள் உலகிற்கே உவந்த உயர்ந்த கருத்துக்களை ஊட்டினார்கள் என்பது ஒன்றே நாம் என்றும் அடையும் பெருமை."

அதிற் காணும் வார்த்தைகளின் அமரிக்கையும், லக்ஷ்யத்தின் விசாலமும் வாசிக்க வாசிக்க, இன்றும் அக் கதைகளைப்பற்றியும் அவைகளைச் சேர்த்துப் பதிப்பிக்கத் துணிந்தவரைப் பற்றியும் குறைவுபடாத நன்மதிப்பையும் மரியாதையையும் உண்டாக்குகின்றன. முதலில் திட்டம் போட்டதற்கு மாறாக ஐயாயிரம் பிரதிகள் தயாரித்ததில் பணச்செலவு அதிகம் ஆயிற்று என்று அது சம்பந்தமான கணக்கிலிருந்து தெரிகிறது.

புஸ்தகம் 1908-ஆம் வருஷம் ஜனவரி முதல் தேதி வெளிவந்தது. அழகான காகிதத்தில் பளிச்சென்ற எழுத்துக்களில் சோபித்தது அவ்வழகிய கதைக்கோவை. 741 பக்கங்கள் கொண்டு அழுத்தமாகவும் பருமனாகவும் புஸ்தகம் காணப்பட்டது. ஹரிச்சந்திரன் கதை விரிவாக முதலில் இருக்கிறது; கடைசியில் ராமனுடைய கதை வால்மீகியின் சொற்களிலேயே கூடிய வரையில் அழகைக் குலைக்காமல், தொகுத்து எழுதப்பட்டுள்ளது. நடுவே பல அரிய லக்ஷ்யங்களுக்காகப் பாடுபட்ட தேசம் இது என்பதை உணர்த்தும் விசித்திர உபாக்கியானங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சாவித்திரியும், தமயந்தியும், சுகன்யையும் இந்நாட்டுப் பெண்மணிகளில் உயர்ந்த வர்கள். சாவையும் துக்கத்தையும் பொருட்படுத்தாத இல்லற தர்மத்தைக் கடைப்பிடித்தவர்கள். துருவனும், பிரஹ்லாதனும் கூற்றறியாத பெரும் தவத்தினர்கள். சத்தியத்தின் வன்மை ஹரிச்சந்திரன் கதையின் மூலம் வெளிப்படுவதைப்போல், எங்கும், எந்த நாட்டு இலக்கி யத்திலும், தீவிரமான விரதமென்று நம்மால் அறிய முடியாது. காந்தி அடிகளை இன்று உலகம் நேரே கண்டு அறியும்போது ஹரிச்சந்திரன் போன்றவர்களை நம்பு வதற்கு இடம் தருகிறது. ஆரிய சரித்திரத்தை வாசித்த வர்களுக்கு, இந்நாட்டின் உயர் தத்துவங்களை அறியா தவர்கள் மனம்போனபடி பேசுவதைக் கவனிக்க வேண்டியதில்லை என்றுதான் தோன்றும்.

எத்தனையோ பள்ளிக்கூடங்களுக்கும், பொது நூல் நிலையங்களுக்கும் விலையில்லாமல் அப்புஸ்தகம் வழங்

பட்டது. நண்பரான பண்டித மதன மோகன மாளவியா அப்புஸ்தகத்தைப் பெற்றதும் உள்ளம் பூரித்தார்.

"உங்கள் அழகிய ஆரிய சரித்திரப் பதிப்பின் பிரதியைப் பெற்று மகிழ்ச்சி அடைகிறேன். என்னைப்போல் இங்குள்ள மற்ற நண்பர்களும் அதைக் கொண்டாடுகிறார்கள்"*

என்று தெரிவித்தார். பண்டித மாளவியாஜி ஹிந்து தர்மங்களிலும், அதன் பண்பாட்டிலும் தேர்ச்சி பெற்றவர். எப்பொழுதும் மனு நெறியையும், பாகவதம் முதலிய புராணங்களையும் வடமொழியில் வாசித்து அநுபவித்து, ரெயில் பிரயாணம் செய்யுங் காலங்களிலும் தம்முடன் அவற்றை எடுத்துச் செல்வது அவர் வழக்கம். நண்பரின் முயற்சியில் அவர் காட்டிய ஆர்வம் இன்னும் எவ்விதம் இருந்தது என்பதை அறிய வேண்டியது நம்முடைய கடமை.

"அதன் பிரதியை ஒவ்வொரு கலாசாலையிலும் சிறு பள்ளியிலுங்கூட வைக்கும்படி நாம் ஏற்பாடு செய்யவேண்டும். பிரதிகளில் சிலவற்றை மற்ற மாகாணங்களில் உள்ள கல்வி இலாகாத் தலைவர்களுக்கும், பாட புஸ்தகங்களைத் தேர்ந்தெடுக்கும் காரிய நிர்வாக சபைகளுக்கும், இதுவரையிலும் நீங்களாகவே அனுப்பாவிட்டால், உடனே அச்சுக்கூடத்தாரை அம்மாதிரி இடங்களுக்கு அனுப்பச் சொல்லுங்கள்"†

என்றும் கேட்டுக்கொண்டார். அவர் சொல்லியதைத் தட்டாமல் நண்பரும் அவ்விதமே அனுப்பினார்.

பரோடா காயக்வாடிடமிருந்து அவர் காரியதரிசி,

"இப் புஸ்தகத்தை நம் தேச பாஷைகளில் மொழி பெயருங்கள்; அல்லது எங்களுக்காவது மொழிபெயர்க்க அநுமதி கொடுங்கள்"‡

என்று தெரிவித்தார்.

பதிப்பிக்க எடுத்துக்கொண்ட பிரயாசையைக் குறித்தும், புஸ்தகத்திலுள்ள விஷயங்களின் சேர்க்கை முதலியவைகளைப் பற்றியும் புகழுரைகள் பல வந்தன.

---

* கடிதம், 20-8-1908.

† அதே கடிதம், 20-8-1908.

‡ கடிதம், 16-3-1908.

ராமகிருஷ்ண மடத்தின் சென்னைத் தலைவரான ஸ்ரீ ராமகிருஷ்ணானந்த சுவாமிகள் அப்புஸ்தகத்தை நன்கு பாராட்டினார். அவர் படித்தவர்; உயர்ந்த கருத்துக்களைச் சதா பிறருக்கும் போதித்தவர்.

"நம் தேசத்து உயர்குணங்கள் கொண்ட ஆண்பெண்களின் வாழ்க்கைச் சிறப்பை வெளியிடுவதனால், ஒவ்வோர் இந்தியனுடைய நன்றியும் உங்களைச் சாரும் என்றுதான் நினைக்கிறேன். உண்மைத் தேசபக்தி பெற்ற ஒவ்வொருவரும் இந்நாட்டில் தாமாகவே உங்களைப் புகழ்வார் என்பதிலும் ஐயமில்லை. பொறுக்கி இருக்கும் விஷயங்கள் பொருத்தமாயும், வாசித்த அளவில் நன்மையும் நற்கதியும் பெறச்செய்வனவாயும் இருக்கின்றன. முக்கியமாக வால்மீகி ராமாயணத்தைக் கவியின் வார்த்தைகளிலேயே எடுத்துக் கொடுத்து, சொல்லும் விதத்திலும் ஆரம்பிக்கும் முறையிலும் வேறு பாஷையைக் கலக்காமல், இவ்வளவு சுருக்கமாகத் தந்தது மிகவும் போற்றவேண்டிய விஷயம். ஆதிகாவியத்தின் உயர்வும் தூய்மையும் கெடாமல் இருப்பதும் அதன் விசேஷ அம்சந்தான்"*

என்று புஸ்தகத்தை வாசித்தவுடன் என் தந்தையாரை வாழ்த்தித் தகவல் கொடுத்து அனுப்பினார். என் பெரிய தகப்பனாருடைய ஆக்ஷேபமும் ஒருவாறு இந்தப் படிப்பாளியின் நன்மதிப்பினால் சற்று நீங்கி, என் தந்தையாரின் மனக் கவலையைக் குறைத்தது.

நம்மைப் பிறர் தூஷிக்கும்பொழுது கோபம் வருவது சகஜம். ஆனால் கோபப்படுவதுடன் நிறுத்திக் கொள்ளாமல், அச் சந்தர்ப்பத்தையே ஓர் உயர்ந்த காரியத்திற்குப் பயன்படுத்திக்கொள்வது எல்லோராலும் இயலாது. அவ்விதம் செய்வதற்கு வேறு குணங்களான தீர்க்க திருஷ்டி, தேசபக்தி, தைரியம் முதலியவைகள் வேண்டும். எல்லாவற்றையும் விட மனத்திற்கு அழியாத வளத்தைத் தருவது தேசப் பண்பாட்டிற்கு உவந்ததான காரியத்தை நிலைநிறுத்துவதே.

'ஆரிய சரித்திரம்' இந்திய நாட்டு உத்தமர்களின் சரித்திரம். நம் நாட்டுத் தர்மங்களிலும் கொள்கைகளிலும் பயின்றுவரும் மனத்திற்கு 'ஆரிய சரித்திர'த்தை மட்டு

---

* கடிதம், 27-1-1908.

மல்ல, இன்னும் எத்தனையோ பதிப்புக்களையும் புஸ்தகங்களையும் வெளியிடவே மனம் தூண்டும். ஆனுல் மானிட ஆயுட்காலத்தின் குறைவுதான் பலவிதப் பயன்களுக்கும் தடையாக இருந்தது.

பழமையை நம்பியவர்கள் எந்நாளும் புதியவர்களாகத் தென்படுவர் என்பதற்கும் இது ஓர் அத்தாட்சி.

"எந்த நாட்டு மக்களும் பழமையை அலக்ஷ்யம் செய்ததால் பெரும் பதவியைப் பெற்றதாகத் தெரியவில்லை. ஜப்பான் தேசம் புத்துயிர் பெற்ற வேகத்திலுங் கூட இதை மறக்கவில்லை."

இவைபோன்ற சில அரிய உண்மைகள் முகவுரையில் காணப்படுகின்றன.

கர்ஸனுக்கு மட்டும் இது பதிலா, அல்லது மேல்நாட்டினர்களில் பலர், கீழ் நாடுகளைப்பற்றி அறியாமையால் கூறும் மொழிகளுக்கே இவை பதிலா என்றுதான் இன்றும் நாம் யோசிக்கின்றோம். எது எவ்விதமாயினும் பதில் என்னவோ சரியானதுதான்.

## அத்தியாயம் 17

### தர்ம சிந்தனைகளும் கல்வி ஸ்தாபனங்களும்

''ஈந்தே கடந்தான் இரப்போர் கடல்'' — கம்பர்.

பிறர் படும் சிரமத்தைக் கண்டதுமே மனம் இளகும் குணம் உலகில் சிலாகிக்கப்படுகிறது. "ஐயா! பிச்சை போடுங்கள்!'' என்ற தீனமான குரலைக் கேட்டதுமே இரக்கம் கொள்ளும் இருதயம் படைத்தவர்களும் உண்டு. ஆனால் புத்திசாலியான ஒருவன் மற்றொருவனிடம் தனக்குச் சமானமாகவோ அல்லது தன்னைவிட அதிகமாகவோ யோக்கியதையைப் பார்த்தால் தன் ஞாபகமே தோன்றாமல், அவனை மனமாரக் கொண்டாடும் இயல்பைப் பெறுவது மிகவும் சிரமம். எவ்வளவு மேம்பட்டவனும் இரண்டு காசை வாரி இறைக்கத் தயங்க மாட்டான்; ஆனால் இருதயபூர்வமாய் மற்றவர்களிடமுள்ள குணங்களைப் பெரிதும் உணர்ந்து தாராளமாய்ப் புகழ்ந்து பேசும் பழக்கத்தை அவ்வளவு எளிதில் அடைவதில்லை. பிறருக்குக் காசுபணம் கொடுக்கக் கூடிய இயல்பும் ஓரளவே தர்ம சிந்தனையைப் பெற்றுள்ளது. மற்றப்படி, மனத்தில் மற்றவர்களின் பெருமைக்கு இடம் வைப்பதும் நியாயம் என்ற எண்ணம் மிகச் சிலரிடமே காணக்கூடியது.

பழைய காலங்களில் மணி ஐயரிடம் நெருங்கிப் பழகியவர்கள் அடிக்கடி கண்டு வியந்த குணங்கள் மேலே குறிப்பிட்டவைகள்தாம். கேட்டவனுக்குப் பொருளுதவி செய்யாமல் இருப்பதும் அவருக்குக் கஷ்டம். புத்திசாலிகளைக் கண்டு அவர்கள்பால் மனத்தைப் பறிகொடுக்காமல் இருப்பதும் அவருக்கு முடியாத காரியம். பள்ளிக்கூடத்தில் வாசிக்கின்ற ஏழைப் பையன்களுக்கும், எத்தனையோ விதமாகப் பிச்சையெடுக்கும் மாந்தர்களின் வேண்டு

கோளுக்கும் அவர் இணங்கியது உண்டு. கையில் வந்த பணத்தை எடுத்துக் கொடுத்துவிடுவார். பிற்பாடு கணக்குப் பார்ப்பதும் இல்லை. அவ்வளவுக்குத் தர்ம சிந்தையில் ஆழ்ந்த கருத்து அவரிடம் உண்டு. மேலும் தம்மெதிரே உட்கார்ந்திருக்கும் மிகச் சிறுவர்களான கிருஷ்ணஸ்வாமி ஐயரையும், பி. ஆர். சுந்தரம் ஐயரையும் கட்சிக்காரர்களிடம் காட்டி, "இந்த இளஞ்சிங்கங்கள் இருக்கையில் என்னிடமே கட்டுக்களை நீட்டுகிறீர்களே" என்று கொஞ்சமும் சூது வாது இல்லாமல் சொல்லு வாராம். 'கண்டெடுத்த மாணிக்கம்' என்று கூடத் தனியே கிருஷ்ணஸ்வாமி ஐயரைப் பலர் முன்னிலையில் புகழ் வாராம். மேலும் வெறும் பேச்சுடன் நிறுத்திக் கொள்ளாமல் காரியத்திலும் காட்டிவிடுவார் தம் தாராள புத்தியை.

இப்பெரிய குணக் குன்றின் நிழலில் நின்றவரின் உள்ளம் உன்னத சிகரத்தின் காம்பீர்யத்தையும் பெருமையையும் உணராமல் இருக்குமா? வயசாகவும் வரும்படி ஏறவும், பல நல்ல காரியங்களிலும் தம் மனத்தை ஈடுபடச் செய்துவந்தார் கிருஷ்ணஸ்வாமி ஐயர். ஆனால் கர்ணனின் கொடையைப் போன்ற மணி ஐயருடைய உதாரத்தின் பக்கத்தில் இவருடைய தர்மச் செயல்கள் சாமான்யமாகவேதான் தோன்றும். பிற்காலத்தில், ஸம்ஸ் கிருதம் படித்த பண்டிதர் ஒருவர் அவரைப் புகழ்ந்து, "தங்களுடைய கொடைகளை அறிந்தவர்கள் தங்களுக்குச் சதா அஞ்சலி அல்லவா செய்யவேண்டும்" என்றார். அதற்கு அக்கொடையாளியும், "மணி ஐயரவர்களுடைய பரோபகார மகிமையை அறிந்தால் அவரைக் கண்டு என்னைப் போன்றவர்கள் சென்னியின்மேல் அல்லவா கரங் குவிக்கவேண்டும்?" என்றாராம் பதிலுக்கு.

தம்மிடம் தர்ம சிந்தனைகள் வரம்புக்குள் அடங்கிய விதமே இருந்தனவென அவர் தம் மனத்தைப் பரிசோதித்து அறிந்தவர். தம்மிடம் யாசிக்கும் மனிதர்களிடம் தராதரம் தமக்குப் படுவது அவருக்குத் தெரியும். மேலும் தர்மத்துக்கு அளித்த தனத்தின் உபயோகத்தில் தம் மனம் செல்லும்

போக்கையும் அவர் அறிந்திருந்தார். ஆகையால் ஒருவித மான பிரயோஜனத்தையும் எதிர்பாராத கொடைக்குரிய உயர்நிலை தம்மிடம் கொஞ்சமும் இல்லை என்பது அவருடைய கடைசித் தீர்மானம். சாதாரணமாக யாராவது ஒருவன் அவரிடம் வந்து, "ஐயா! நான் பிராம்மணன், பிள்ளைக்கு உபநயனம் செய்யவேண்டும். ஏதாவது பொருள் உதவி செய்தால் சௌகரியமாய் இருக்கும்" என்றால், உடனே அவர் வந்தவர் பேரில் சீறி விழுவதுண்டு. "ஓய்! உம்முடைய பிள்ளை செய்யப் போகிற அனுஷ்டானங் களுக்குப் பணம் தேடித்தான் பூணூல் தரிக்க ஏற்பாடு செய்யவேண்டுமோ? இங்கு அழைத்து வாரும். நான் அவனுக்கு ஒரு காசு செலவு பண்ணாமல் உபநயனம் செய்துவைக்கிறேன்" என்று வேகமாய் அவரிடம் வார்த்தைகள் புறப்படும். யாசகன் நில்லாமல் அவ்விடம் விட்டு அகன்று விடுவதுதான் அவனுக்கு நற்கதி.

ஆனால் ஒருவருக்கு ஏதாவது பொருள் கொடுக்க வேண்டுமென்று தோன்றினால், "நாளைக்கு வாரும் தருகிறேன் எதையாவது" என்று சொல்லும் பழக்கமே அவரிடம் இல்லை. அவ்விதம் தள்ளிப் போடும் எண்ணம் ஒருகால் மறுநாளே தம்மிடம் மாறிவிடலாம் என்பது அவர் பயம் போலும். அல்லது செய்யமுடியாமல் போக வேறு காரணங்களும் உண்டாகலாம் அல்லவா?

ஒரு சமயம் குற்றாலத்தில் அருவி ஸ்நானம் செய்து விட்டு அவர் திரும்பி வரும் வழியில், ஒரு கைம்பெண் எதிர்ப்பட்டாள். அவள் நல்ல தூய்மையுடையவளாய் ஒழுக்கமுறையில் பணம் திரட்டி, தேவாலயத்தில் சிற்சில திருப்பணிகள் செய்துவந்ததால், செல்வரென அறிந்து அவரிடமும் பணம் யாசித்தாள். அவருக்கு அவளுடைய தோற்றத்திலும் பேச்சிலும் நம்பிக்கை ஏற்படவே, தம் அருகிலிருந்த ஓர் உறவினரைப் பார்த்து, "ரூபாய் 25 இவளிடம் கொடு" என்று சொல்லிவிட்டு மேலே நடந் தாராம். ஆனால் பணப்பையை வைத்திருந்த உறவின ருக்குக் கொஞ்சமும் இதில் இஷ்டமில்லை. இருந்தாலும் உத்தரவை மீறாமல் அவளிடம் ரூபாய் 25-உம் சேர்ப்பித்து

விட்டு, விடுதிக்கு வந்ததும் என் தந்தையிடம், "எதற்காக யோசியாமல் அவளுக்குப் பணம் தரவேண்டும்? எல்லாம் நாளை அவளைப்பற்றி விசாரித்துக் கொடுக்கக் கூடாதா?" என்றாராம். அக்கேள்விக்குப் பதில் அதிகத் தாமதம் இன்றிக் கிடைத்தது. "தர்ம சிந்தை வருவதே நம்மிடம் கஷ்டம். அப்படி வந்ததை நாளைக்குத் தள்ளிப் போட்டால், நாளை வராமலேயே போய்விடலாம். ஆகையால் தர்மத்தைத் தோன்றியதும் செய்வதே உத்தமம்; தெரிந்துகொள்" என்றார்.

இம்மாதிரியான ஒரு தருணத்தில்தான் ஸம்ஸ்கிருதக் கலாசாலை ஒன்றையும், ஆயுர்வேத வைத்தியசாலை ஒன்றையும் ஸ்தாபிக்கத் தீர்மானித்தார் அவர். வட மொழியின் சிறந்த சான்றாண்மையையும் அதிலுள்ள உயர்ந்த சாஸ்திரங்களையும் பயில அதிகம் வித்தியார்த்திகள் ஏற்படாததைக் குறித்துப் பல நாட்களாய் அவரிடம் யோசனை வளர்ந்துகொண்டுதான் இருந்தது; திடீரென்று ஒருநாள் ஏற்பட்டதல்ல. மேலும் அவர் தமையனார், வேதாந்தம், மீமாம்ஸை முதலிய உயர்ந்த சாஸ்திரங்களைக் கற்பவர்களின் பரம்பரை நாட்டில் விருத்தியாக வேண்டுமெனக் கருதித் தம்மிடம் தம் நண்பரான சுவாமிநாத சாஸ்திரிகள் என்றொருவர் ஒப்படைத்த பொருளை, எவ்விதத்திலும் ஒரு வடமொழிப் பாடசாலைக்கே தருவதென்று உள்ளூற நினைத்துவந்தார். அது ஒரு புறம் இருக்க, அவருடைய தர்பியின் கருத்தும் இவைகளுக்காக ஏதாவது மூலதனம் வைக்கவேண்டும் என்று பலகாலமாக இருந்து வந்தது.

*1903*–ஆம் வருஷம் செங்கற்பட்டு ஜில்லாப் பொதுக் கூட்டத்திற்குத் தலைமை வகிக்கும்பொழுது கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் பிரசங்கத்தில் ஸம்ஸ்கிருதப் படிப்பைப் பற்றியும், ஆயுர்வேதத்தைப் பற்றியும் தெளிவாக எடுத்துச் சொல்லி இந்நாட்டிற் பிறந்த ஒவ்வொரு மனிதனும் மனத்தில் அவற்றைப் போற்றவேண்டும் என்று வற்புறுத்தினார். அரசாங்கத்தார் இவ்விரண்டையும் கொஞ்சமும் கவனியாததைக் குறித்து அவர் வருந்தினார்.

அதே சந்தர்ப்பத்தில், தெலுங்கு, தமிழ்ப் பாஷை களுக்குப் பிரத்தியேகமாய்ப் பள்ளிகளை வைக்கவேண்டு மென்றும் எடுத்துக் காட்டினார். மதுரைபோன்ற செந்தமிழ் வழங்கப்பட்ட இடங்களில் தமிழுக்கும், இராஜமகேந்திரம் போன்ற ஊரில் தெலுங்கு பாஷைக்கும் இடம் கொடுத்து அரசாங்கம் கலாசாலைகளைத் தனித் தனியே வைப்பது முறை என்றும் தம் பிரசங்கத்தில் சொன்னார். வடமொழியில் அண்ணன் தம்பி இரு வருக்கும் இருந்த சிரத்தையும் ஞானமுமே அவர்களை எப்படியாவது அரிய சாஸ்திரப் படிப்பிற்கும், ஆயுர்வேதப் பயிற்சிக்கும் ஏற்றனவாக இரண்டு ஸ்தாபனங்களை ஏற்படுத்தத் தூண்டின.

1906-ஆம் வருஷம் பிப்ரவரி மாதம் முதல் தேதியில் தொடங்கியது சென்னை ஸம்ஸ்கிருத கலாசாலை. அவரும், ராவ்பகதூர் ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரும், தம்மிடம் தொழில்முறையில் பழக்கமாய் இருந்த ஏ. எஸ். பாலசுப்பிர மணிய ஐயரும் ஆகிய மூன்று பேர்களுமாகச் சேர்ந்து தர்ம நிர்வாகக் கழகத்தின் முதல் அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டார்கள். முதலில் மூலதனமாக ரூபாய் 25,000-த்தைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் தர்ம நிர்வாகஸ்தர் களிடம் சேர்ப்பித்தார். அவரைக் குருவாக மதித்த சி. பி. ராமஸ்வாமி ஐயர் தாமும் அந்த மூல தனத்துடன் சேர்த்து ரூபாய் ஐயாயிரம் கொடுக்கச் சம்மதித்தார். ஸம்ஸ்கிருத கலாசாலை நோக்கங்களில் சாஸ்திரப் பயிற்சி மட்டுமே குறிக்கப்படாமல், ஆராய்ச்சி முறைகள், மற்றும் பண்டித சபைகளை வைப்பது, அதில் பிரகாசித்தவர்களுக்குச் சம்மானங்கள் வழங்குவது போன்ற இத்தேசத்துப் புராதன வழக்கங்களைச் செய்வதற்கும் வேண்டிய சௌகர்யங்களும் குறிக்கப்பட் டிருந்தன. மூலதனத்துடன் கலாசாலைக்கு இட வசதிக்காக இன்னும் ரூபாய் 20,000 கொண்ட தொகையைப் பின்னும் அவர் கொடுத்து உதவினார். மேலும் காலஞ் சென்ற எஸ். ஏ. சுவாமிநாத சாஸ்திரி களுடைய மனப்பூர்வமான கொடையாகிய ரூபாய்

15000 சேர்ந்து மொத்தம் ரூபாய் 65000 மூலதனம் வைக்கப்பட்டு ஆரம்பமாகியது கலாசாலை. பிறகு இடம் வாங்குவதற்கான தொகை முதலிய செலவுகளைத் தம்முடைய சொந்தப் பொறுப்பாகவும் அவர் கருதியதால், அன்று வைத்த மூலதனம் குறைவுபடாமல் விருத்தி அடைய முடிந்தது. "ஸ்ரீ சுவாமிநாத சாஸ்திரி வேதாந்த பாடசாலை" என்று எஸ். ஏ. சுவாமிநாத சாஸ்திரிகளின் பெயரை முன்னிட்டே வழங்கலாயிற்று அந்தத் தர்ம பாடசாலை.

'ஆயுர்வேதம் எவ்வளவு நம் நாட்டில் உள்ளவர்களுக்கு உதவக் கூடியது? அதற்கும் ஏதாவது வழி தேடவேண்டும்' என்று எண்ணியது அவருள்ளம். எண்ணம் தோன்றியது தான் தாமதம், அதை உடனுக்குடனே செய்தாகவேண்டும். 'ரிஷி கர்ப்பம் இராத் தங்காது' என்ற பழமொழியை உயிர்ப்பிக்கவே பிறந்தாரோ என்று தோன்றும் விதம், 1905-ஆம் வருஷமே டிசம்பர் மாதம் 15-ஆம் தேதி வெள்ளிக்கிழமை, தர்ம வைத்திய சாலைக்காக ரூபாய் 25000 தொகையை தனியே எடுத்து வைத்துவிட்டார். அந்த வைத்திய சாலைக்கு 'வேங்கடரமண வைத்திய சாலை' என்றும் பெயரிட்டார். தந்தையின் ஞாபகத்திற்கு இதை விடவும் உயர்ந்த செயல் வேண்டுமா? ஆயுர்வேத கலாசாலை ஒன்றையும் அதனுடனே சேர்த்து ஏற்படுத்தினர். அதில் வெகு காலமாக மறக்கப்பட்டிருந்த மூலிகைகளின் உபயோகங்களையும், இன்னும் நம் நாட்டில் தொன்று தொட்டு வந்த சிறந்த ஆரோக்கிய சிகிச்சைகளையும் மாணுக்கர்களுக்குக் கற்பிக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. திருவிசைநல்லூர்ச் சியாமளா வைத்தியர் அக்காலத்தில் பெயர் போனவர். அவரே முதலில் ஆயுர்வேத கலாசாலைக்குத் தலைமை வகித்து வைத்திய முறைகளை மாணுக்கர்களுக்குப் புகட்டினர்.

கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய தர்ம காரியங்களை நினைக்குங்கால், அவருடைய மற்றொரு தேகமாகத் தோன்றிய ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரையும் நாம் நினைக்காமல் இருப்பது முடியாது. ஏனென்றால், எதை நண்பர் செய்

தாலும் தம்முடைய பிராண சிநேகிதரான ஏ. கிருஷ்ண ஸ்வாமி ஐயரைக் கலந்து யோசியாமல் செய்யமாட்டார். தங்கள் வீட்டில் மட்டுந்தான் சிலர் சிநேகிதர்களுக்கு உரிமைகளைத் தருவார்கள். தாங்கள் செய்யும் பொதுக் காரியங்களிலும், அவர்களுக்குப் பங்கு கொடுப்பது சற்று அருமைதான். எங்கள் குடும்பத்தில் ஒருவராக ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் கருதப்பட்டாலும், அவருடைய சுய நலமற்ற சுபாவம் உலகத்தில் எல்லோரையுமே தம் குடும்பமாக நினைக்க இடம் கொடுத்தது. அவருடைய குணம் தம் வரையிலும் ஒன்றையும் விரும்பாத வழியில்தான் சென்றது. போலீஸ் இலாகாவில் வேலை பார்த்தவர் என்று அவரை அறிந்தவர்களும் நம்பமாட்டார்கள். அரசாங்க அதிகாரியின் பழக்கமும் பிறர் மனம் நோவச் செய்யும் தோரணையும் அவரிடம் கொஞ்சமும் தென்படாமையால், பார்த்தவர்கள் சற்றும் பயமின்றி அவரை அணுகித் தங்கள், தங்கள் குறைகளை அவரிடம் முறையிடுவதற்கு முடிந்தது. அவரும் உதவி செய்வதை விரதமாக வைத்திருந்ததால், தம்மால் இயன்ற அளவிலும் மிகவும் பிறருக்காக உழைப்பார்.

> "ஒருவர் தர்மம் செய்துவிடலாம். அது அவ்வளவு சிரம மன்று. மற்றொருவர் அந்தத் தர்மத்தை மிகவும் பொறுப்புடன் இமைக்குள் வைத்துக் காப்பாற்றுவது அதைவிட மெச்சத்தக்கது"

என்று மணி ஐயர் அவர்களே ஒரு சமயம் வேங்கடரமண வைத்திய சாலையில் நடந்த ஒரு விழாவில் சொன்னார். உதாரணமாக அவரால் குறிக்கப்பட்டவர் ஏ. கிருஷ்ண ஸ்வாமி ஐயரே. நாமும் யோசித்துப் பார்த்தோமானால், விஷயம் விளங்கும்; உயர்ந்த நட்பென்னும் பற்று ஒருவருக்கு இருந்தால்தான் நண்பர் ஒப்பித்த தர்ம காரியத்தைக் கண்ணிமையில் வைத்துப் பாதுகாக்க மனம் வரும். மேலும் சொந்தத்தில் தர்மம் செய்வதில் தான் அழியாத கௌரவம் ஒருவருக்குக் கிடைக்குமா? பிறருடையது என்ற வேற்றுமை எண்ணமே தோன்றாமல், தம்மிடம் வைத்த நம்பிக்கையை நியாயம் என எடுத்துக் காட்டுவது அதைவிடச் சிறந்ததன்றோ?

விடாமுயற்சி என்னும் அரிய குறிக்கோள் ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் பூரணமாக இருந்தது. மத்திய வயசில் யோகம் செய்து தேகத்தை ஒருவாறு தம் வசப்படுத்தியவர் அவர். மனத்தின் தெள்ளிய இயல்பும், ஊடுருவிப் பாயும் சக்தியும் எந்தக் காரியத்தையும் நின்று செய்யும்படி அவரை உத்ஸாகப் படுத்தின. சொந்தத்தில் அதிகமாகத் தனம் சேர்க்காவிட்டாலும், தயாளுவான காரணம் தம்மிடம் உள்ளவைகளை அஞ்சாமல் பிறருக்குக் கொடுத்துதவுதற்குத் துணிந்தவர். அவரிடம் நண்பருக்கு ஏற்பட்ட மதிப்பிற்கும், அன்பிற்கும் காரணம் அவருடைய சிறந்த பண்பாட்டின் செயலென்றே கொள்ளவேண்டும். எத்தனையோ சமயங்களில் அவ்விருவர்களும் இரைந்து வாக்கு வாதங்கள் செய்வதைப் பார்த்தவர்கள், அவர்கள் உண்மையாகச் சண்டையிட்டுக் கொள்வதாக நினைப்பார்கள். ஆனால் வாஸ்தவத்தில் ஒருவருக்கு ஒருவர் அவர்கள் இருவரும் காட்டிய பேரன்பு சொல்லத்தகாதது. நண்பர் காலமான பிறகு பல மாசங்கள் ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் சூன்யமான வாழ்க்கையாகக் கருதித் தம் நாட்களை விசனத்தில் கழித்தார். புருஷனை இழந்த மனைவியைப் போல் பிறர் பார்வையில்கூட வெகுநாட்கள் தென்படார்.

ஸம்ஸ்கிருத கலாசாலையை ஸ்தாபித்த பிற்பாடு ஏ. எஸ். பாலசுப்பிரமணிய ஐயரையே அதனை மேற்பார்வை இடக் காரியதரிசியாக நியமித்திருந்தார்கள். பாலசுப்பிரமணிய ஐயர் பெரிய குடும்பத்தைச் சார்ந்தவர். பி. ஆர். சுந்தரம் ஐயரிடம் தொழில் பயிற்சியைச் செய்தவர். அவருடைய தகப்பனாரான சீதாராம ஐயரிடம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குக் கௌரவம் அதிகம். அக்காரணம் பற்றியும், இன்னும் சலிப்பில்லாமல் எக்காரியத்தில் புகுந்து உழைத்தாலும் அவரையே தம் தர்ம ஸ்தாபனங்களுக்கு முதல் முதலில் காரியதரிசியாகப் பொறுக்கினார். அவரும் அன்றுடம் கலாசாலை, வைத்திய சாலைக் காரியங்களைக் கவனித்ததுமல்லாமல், வேண்டிய

அவகாசத்தை அவற்றிற்குச் செலவழித்து நல்ல பெயரையும் சம்பாதித்துக்கொண்டார்.

ஸம்ஸ்கிருத கலாசாலையின் ஆரம்பத்தைப் பற்றி அறியும்பொழுது, அதனுடைய முதல் கோஷ்டி உபாத்தியாயர்களின் தலைவரைப் பற்றியும் அறியவேண்டியது நியாயமாய்த் தோன்றும். சமீபகாலம் வரையில் நம்மிடையே மஹா மஹோபாத்தியாயராயும் வித்தியாவாசஸ்பதியாயும் விளங்கிய பிரம்ம ஸ்ரீ குப்புஸ்வாமி சாஸ்திரிகளைப் புதிதாக ஆரம்பித்த கலாசாலைக்கு அத்தியக்ஷராக நியமித்த ரஸமான செய்தி நமக்கு விளங்குகிறது. இருபத்தைந்து வயசு முடியாத ஒருவரை நல்ல திடமான சாஸ்திரப் பயிற்சி உள்ள காரணத்தைக் கொண்டுமட்டும் பொறுக்கி விடவில்லை; கலாசாலையை நிர்வகிக்க உதவக் கூடிய ஆங்கில ஞானத்தையும் எம். ஏ. பரீக்ஷைக்குப் போயிருந்த விஷயத்தினுல் தீர்மானித்து, கலாசாலையில் தலைமை வகிக்க எற்பாடு செய்தார்கள். ஆனுல் அவருடைய சாஸ்திர ஞானம் எம்மட்டும் உள்ளது என்று பரிசோதிக்க, தமையனுர் சுவாமிநாதையர் போட்ட சிற்சில வேதாந்த சாஸ்திரப் பிரச்னைகளுக்குச் சற்றும் தயங்காமல் அவர் மறுமொழி கொடுக்கவே, அவருடைய நிலைத்த அறிவை அறிந்து தலைமை உபாத்தியாயராக நியமித்தார்கள். தமையனுருடைய பரீக்ஷை முடியவே, கிருஷ்ணஸ்வாமி ஐயர் சாஸ்திரிகளைத் தம்மிடம் கூப்பிட்டு நம்பிக்கையை ஊட்டும் குரலில் சொன்னதாவது :

"இவ்வளவு சாஸ்திர அறிவும் அதனுடன் ஆங்கில கலாசாலைப் படிப்பும் பெற்றவரைச் சுலபமாகப் பெற முடியாது. நீங்கள் சட்டப் பரீக்ஷைக்கும் தயாராவதாக அறிகிறேன். வக்கீல் தொழிலில் சேர்வதால் பலருடன் சேர்ந்து ஒருவராகவேதான் சாமான்ய கௌரவத்துடன் இருப்பீர்கள். ஆனுல், நான் சொல்லுவதைக் கேட்டு எங்கள் ஸ்ம்ஸ்கிருத கலாசாலை அத்தியக்ஷராக நியமிக்கப்பட்டு, உயர்ந்த விதத்தில் சாஸ்திர பாடத்தைச் சொல்லிக் கொடுத்துப் பழகினுல் ஆயிரத்தில் ஒருவராகவே பிற்காலத்தில் சோபிப்பீர்கள்" என்ருராம்.

மஹா மஹோபாத்தியாயர் பெரிய மதிப்புடன் கனவானுடைய மொழிகளைத் தட்டாமல் அநுசரித்ததன் பயனை நன்றியுடனே உயிருள்ளளவும் அநுபவித்துச் சொல்லுவார்; அவ்வுபதேச வார்த்தைகளால் ஸம்ஸ்கிருத உலகிற்கு ஓர் உதாரணமாயும் தம்மைச் செய்துகொண்ட பெருமையையும் உணர்ந்திருந்தார்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் அக்காலங்களில் பண்டிதர்களுக்கும் சாஸ்திரப் பயிற்சி பெற்றவர்களுக்கும் எவ்வளவு மரியாதை காட்டினுர் என்பதைக் குப்புஸ்வாமி சாஸ்திரிகள் பலமுறை சொல்லியிருக்கிறுர்; "சிறுவனுயினும் என்னை மிகவும் கௌரவித்துக் கலாசாலைத் தலைவர் என்ற அளவில் என்னிடம் தனி மரியாதையையும் காட்டுவார்" என்று அடிக்கடி சொல்லுவார்.

ஒரு சம்பவம் அவரிடம் காட்டிய மரியாதையை இன்னும் நன்கு தெளிவுபடுத்திக் காட்டியது. ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு சிறந்த பண்டிதரை வேதாந்த சாஸ்திர போதனைக்கென்று வரவழைக்க ஏற்பாடுகளைச் செய்துவிட்டார். ஆனுல் வேதாந்தத்திற்காக வரைவழைக்கப் படுபவருக்கு வியாகரணந்தான் பாடம் சொல்ல முடியும் என்பது குப்புஸ்வாமி சாஸ்திரிகளுக்குத் தெரியும். ஆகையால், தம் அபிப்பிராயத்தைச் சந்தேகமின்றித் தெரிவித்துவிட்டார், கலாசாலை நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களுக்கு. அங்கத்தினர்கள் கூடி யோசிக்கையில் ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் அபிப்பிராயத்தையே வற்புறுத்தி அவர்களையும் தாம் எதிர்பார்க்கும் பண்டிதரை நியமிக்கவே ஒப்புக்கொள்ளச் செய்துவிட்டார். இது தெரிந்ததும் குப்புஸ்வாமி சாஸ்திரிகளுக்கு வருத்தமும் கோபமும் ஒருங்கே ஏற்பட்டன. தம்மை அலக்ஷ்யம் செய்துவிட்டார்களே! கலாசாலைக் காரியங்களில், அதிலும் உபாத்தியாயர்களைத் தேர்ந்தெடுக்கும் முக்கிய காரியத்தில், தம் வார்த்தைக்கு மதிப்பில்லை என்ருல் அத்தியக்ஷரான யார்தாம் சும்மா இருப்பார்?

இளம் வயசும், சொந்த அபிப்பிராயமும் படைத்த ஒருவரால் வாயை மூடிக்கொண்டு இச்சந்தர்ப்பத்தில் இருக்க முடியாதுதான். வேலையை ராஜிநாமாக் கொடுப்பதுதான் சரி என்று தீர்மானித்தார் சாஸ்திரிகள். எப்படியோ காரியதரிசி ஏ. எஸ் பாலசுப்பிரமணிய ஐயருக்குச் சாஸ்திரிகளின் வருத்தம் தெரிந்துவிட்டது. சாஸ்திரிகளை அவர் எப்படியாவது கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் நேரில் விஷயத்தைச் சொல்லும்படி கேட்டுக் கொண்டார். ஆனால் ரோஷத்தினால் அந்த வழியை அங்கீகரிக்க அவர் மறுத்துவிட்டார். இரண்டு தினங்களில் சர்வகலாசாலை மண்டபத்தில் சாஸ்திரிகள் கிருஷ்ண ஸ்வாமி ஐயரை நேரில் சந்திக்க நேர்ந்தது. அவர் என் தந்தையை அணுகாமல் வேறு பக்கமாய்ச் செல்லத் தொடங்கவே கிருஷ்ணஸ்வாமி ஐயர், "சாஸ்திரிகளே !" என்று உச்சஸ்தாயியில் அவரைக் கூப்பிட்டார். என்ன செய்வது ? சாஸ்திரிகளும் நின்றார். மறுபடியும் அவர், "உங்களுடன் பேசவேண்டும் எனக்கு. ஆகையால் என்னோடு சற்று வண்டியில் ஏறுங்கள்" என்றார். வண்டியில் உட்காரவே கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் வருத்தத்தைத் தெரிவித்துவிட்டு, கலாசாலை ஆரம்பித்த நாட்களில் உயர்ந்த முறையில் போதனை இருக்க வேண்டியது முக்கியமானதால், சாஸ்திரிகளின் கருத்தைக் கவனியாதது தவறுதான் என்றும், ஆனாலும் கமிட்டியில் எல்லோருடனும் ஒத்துத் தாம் வேறு பண்டிதரை வரவழைக்கச் சம்மதித்ததனால் திடீரென்று அதை மாற்றிச் சொல்வது முடியாது என்றும், ஆகையால் சாஸ்திரிகளே தம் சொந்த உரிமையில் அவருக்குப் பிடித்த பண்டிதரை வரவழைத்து விட்டால், தாம் அதற்கு மாறாக ஒருவரும் ஒன்றும் சொல்லாத வகையில் பார்த்துக் கொள்வதாகவும் வாக்குக் கொடுத்தார். எல்லாம் இளைஞரான சாஸ்திரிகளிடத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இருந்த மதிப்பை நன்கு புலப்படுத்துகின்றன. மேற்கொண்ட காரியங்கள் அவர் இஷ்டம்போல் நடந்தனவாம்.

ஆயுர்வேத வைத்தியசாலையை ஆரம்பித்த நாள் முதல் கல்கத்தாவிலிருந்து காலஞ் சென்ற என். ஆர். ஐயர் வருஷந்தோறும் ஒரு பையனுக்குரிய படிப்புச் செலவுத் தொகையைத் தம் பொறுப்பாக ஏற்று உதவி செய்து வந்தார். நண்பர் இறந்து பத்து வருஷங்களுக்குப் பிறகுங்கூட, வேங்கடரமண ஆயுர்வேத கலாசாலை மாணவர்களுக்கு வசிக்க ஓர் இல்லம் தேவையாக இருப்பதை அறிந்து 10000 ரூபாய் நன்கொடையாகக் கல்கத்தா தனிகர் கொடுத்துதவினுர். வெகு நாட்கள் வரையில் தம் பெயரை வெளிப்படுத்த வேண்டாம் என்று சொல்லித் தர்மத்தைப் பிறருக்குத் தெரியாமல் அவர் செய்துவந்தார் என்று தெரிகிறது.

தாய் நாட்டிற்கும் சொந்த மக்களுக்கும் தம்மால் எவ்வளவு விதங்களில் நற்காரியங்களைச் செய்யமுடியுமோ அவ்வளவையும் செய்யத் தாம் தயார் என்று வாய்விட்டுப் பலதடவைகளில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சொல்லி இருக்கிறுர். சிலருக்கு இருப்பதுபோல் 'கொக்குக்கு ஒன்றே மதி' என்பதுபோல ஒரு லக்ஷ்யத்தில்தான் குறி என்று தம் தர்ம சிந்தனைகளை அவர் வைத்துக் கொண்டவரல்ல. இந்த நாட்டில் யந்திரசாலைகள் பல ஏற்படவேண்டும் என்ற கருத்துடன், அவைகளுக்காகப் பாடுபடுகிறவர்களில் எவர் தம்மிடம் அடைந்து கேட்டாலும் யோசியாமல் ரூபாய் 500க்குக் குறையாமல் பொருளுதவி செய்வதை வழக்கமாக வைத்துக் கொண்டார்.

1908-ஆம் வருஷத்தில், ஒரு சமயம் காலஞ் சென்ற கோபல்லி ஹநுமந்தராவ் என்னும் ஆந்திரர் ஆந்திர ஜாதீய கலாசாலை என்ற பெயருடன் உயர்ந்த படிப்பு, கைத்தொழில், இவைகளுக்காக ஒரு கல்வி நிலையத்தை ஆரம்பித்துப் போற்றக்கூடிய கொள்கைகளைக் கடைப்பிடிக்கத் தொடங்கினுர். சென்னையிலுள்ளவர்களின் உதாரகுணத்தைப் பற்றி அறிந்திருந்ததால் ராஜமகேந்திரத்தை விட்டு, கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் அவர் வந்து சேர்ந்தார். அரைமணி நேரம் அவருடன்

பேசியதில் அவரிடம் மிகுந்த பிரியம் உண்டாயிற்று கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு. அவருடைய தேச பக்தியும், மனத் தூய்மையும், உயர் நோக்கங்களும் ஐயருடைய இருதயத்தைக் கவர்ந்தன. உடனே அவரிடம் ரூபாய் இரண்டாயிரத்துக்கு ஒரு செக்கை எழுதிக் கையில் கொடுத்து, "இந்தாரும், என்னுடைய உதவியை அங்கீகரியுங்கள்; ஆனால் என்னிடம் மறுபடியும் வருகையில் இந்த இரண்டாயிரத்தையும் செலவழித்து விட்டுத்தான் வரவேண்டும்; ஞாபகம் இருக்கட்டும்" என்றாராம். இளம் வயசில், சீக்கிரமே ஹநுமந்தராவ் இறந்துவிட்டார். ஆனாலும், 1918-ஆம் வருஷம் எங்கள் வீட்டில் விருந்தினராக வந்த சமயத்தில் எங்களிடம், "உங்கள் தந்தை ரூபாய் 2000-த்தையும் செலவழித்து விட்டுத்தான் தம்மிடம் வரவேண்டும் என்று உத்தரவிட்டதை நினைத்தால், நான் எடுத்துக்கொண்ட காரியத்தில் அவருக்கு எவ்வளவு ஊக்கம் உண்டாயிற்று என்பதை நன்கு அறிய முடிகிறது" என்றார். மேலும் கவனிக்குங்கால், தம்மிடம் மறுபடியும் பணத்தை நாடி வரும்படி தூண்டும் மொழிகளாகவே தோன்றுகின்றன கிருஷ்ணஸ்வாமி ஐயர் சொன்ன வார்த்தைகள்.

இம்மாதிரி நற்காரியம் ஏதேனும் தோன்றினதும் அது உடனே நடந்து தீரவேண்டும் என்ற ஒரே எண்ணம் மேலிட்டதால், பலரைப் பல சமயங்களில் நற்காரியங்களில் தூண்டியிருக்கிறார் அவர். அந்நாட்களில் சீமைக்கு மேற்படிப்புக்காகச் சென்ற இளம் வாலிபர்களுக்குத் தம்மால் ஆன உதவியையும் உத்ஸாகமொழிகளையும் தாராளமாகவே வழங்கியிருக்கிறார். என். ராகவேந்திர ராவ் என்னும் வாலிபர் ஒருவர் சீமையிலிருந்து எழுதிய கடிதத்தில் பின் வருமாறு தம் நன்றியை விவரிக்கின்றார். தம்முடைய தேக நிலைமையைப் பற்றி முதலில் சில விவரங்களைத் தெரிவித்துவிட்டு அவர் எழுதியது:

"தாங்கள் எனக்குச் சமயோசிதமாயும் தாராளமாயும் செய்த உதவியை என்னால் மறக்கவே முடியாது. அதுவே என்னுடைய வயசு முதிர்ந்த தாயாரைத் தனியே வீட்டில் விட்டு வருவதற்கு

வேண்டிய மன அமைதியை எனக்கு அளித்தது. சாதாரணமாக என்றால் உணர்ச்சியை அதிகம் வெளிக்காட்ட முடிவதில்லை. இருந்தாலும், என்னுடைய சொல்லொணாத நன்றியறிவைத் தாங்கள் அறிவீர்கள் என்று நம்புகிறேன்........."*

என்று மனத்தில் பட்ட உணர்ச்சியைக் கடிதத்தில் சொற்களாக வரைந்திருந்தார். பொருள் உதவியைக் காட்டிலும் இளைஞருக்குத் தம்மைத் தட்டிக்கொடுத்த அன்பு மொழிகளே மனத்தைக் கவர்ந்தன என்பதிலும் சந்தேகமில்லை. ஏனென்றால், அவர் மறுபடியும் வருஷப் பிறப்பன்று எழுதியதில்,

"என்னை உத்ஸாகப்படுத்தும் பொருட்டுக் கடிதம் எழுதுவதில் தாங்கள் எடுத்துக்கொண்ட சிரமத்திற்காக தங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்யமுடியும்?"†

என்று குறித்திருந்தார்.

தம்மைவிட வயசில் குறைந்தவர்களிடம் கொஞ்சமும் அலக்ஷ்ய புத்தியின்றித் தமக்குச் சமமாகவே அவர்களைக் கருதி, அவர்களது புத்தி நுட்பத்தை, மெச்சியும், நல்ல ஒழுக்கத்தை மேன்மேலும் வளர உத்ஸாகப்படுத்தியும் மனமாரக் கொண்டாடிய இயல்பு கிருஷ்ணஸ்வாமி ஐயரை இன்றும் மறக்கமுடியாதபடிச் செய்கின்றது. ஐ. சி. எஸ். பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றுப் பெரிய பதவிகளைப் பெற்றிருக்கும் எஸ். வி. ராமமூர்த்தி சிறுவயசில் அரசாங்கம் வழங்கிய பொருளுதவியைப் பெற்றுச் சீமைக்கு ஏகினார். அக்காலத்தில் அவருக்குச் சர்வ கலாசாலைச் சபையின் சிபார்சு கிடைப்பதற்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரே தூண்டுகோலாக இருந்தார். இளைஞரிடம் கண்ட புத்தி நுட்பத்தைச் சிலாகித்து அக்காலத்தில் அவர் சொன்ன வார்த்தைகளையும் மறக்க முடியாது: "உன்னை ஓர் இந்திய மாகாணத்தில் கல்வி இலாகாவின் தலைவனாக நியமனம் செய்ய நான் தயார். சீமை சென்று நல்ல பயிற்சி பெற்றுவா!" என்று ஆசி கூறினாராம். ஆசீர்வாதங்களுக்கும் மேலாகவே ஆசீர்

* கடிதம், 24-10-08.

† கடிதம், 1-1-1909.

வதிக்கப்பட்டவருடைய செல்வாக்கு இன்று உண்மை யாயிற்று என்பதைக் கூறவேண்டியதில்லை.

தம்மிடமுள்ள மனோவேகத்தைப் பலரிடம் ஊட்டும் சக்தி சாமானியமானதல்ல. மற்றெவ்வித உதவியைக் காட்டிலும் மிகவும் உயர்ந்தது, அகங்காரம் சற்றும் இல்லாமல் பிறரிடம் தென்படும் உயர்ந்த அம்சங்களை மனமாரப் போற்றும் இயல்பு. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய வாழ்க்கை விரதமாக விளங்கியதும் அதுவேயன்றோ!

## அத்தியாயம் 18

### உறவினரும் ஊராரும்

கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்'' —குறள்.

இங்கிலாந்தில் வெகுநாட்கள் முக்கிய மந்திரி ஸ்தானத்தை வகித்து, அளவிட முடியாத புகழைப்பெற்ற கிளாட்ஸ்டனைப்பற்றி ஒரு வரலாறு கூறுவது உண்டு. தமக்கு மிகுந்த செல்வாக்கும் கௌரவமும் இருந்த காலங்களில், தம் பேரன் பேத்திகளுக்குத் தம் தகப்பனுரைப் பற்றிய வரலாறுகளைப் பெருமிதத்துடன் சொல்லுவாராம். அவ்விதம் சொல்லுகையில் அப்பெரியார் கண்களில் நீர் துளித்துக் கன்னங்களிலும் வழிந்து ஓடுமாம். உணர்ச்சி வசப்பட்டுத் தாம் இங்கிலாந்தின் முதல் மந்திரி என்பதையும் மறந்து தம் தகப்பனுரைப் பற்றி ஆர்வத்துடன் பேசுவாராம். உலகமெங்கும் பெரிய இருதயங்கள் நாடும் உயர்குணங்கள் இவ்வகையைச் சார்ந்தவையே போலும் !

எங்கள் பெரிய தகப்பனுர் அடிக்கடி பின்வருமாறு சொல்லுவார் :

"எங்கள் அப்பாவின் புத்தியின் சக்தியிலும், சுபாவமான தைரியத்திலும் எனக்குப் பாதிதான் உண்டு ; கிருஷ்ணனுக்கு முக்கால் பாகம் உண்டு என்று நிச்சயம் சொல்லுவேன்."

அவருடைய மனம் அவ்வளவு தூரம் தம்மைக் குறைத்துக்கொண்டது. தம் இளவலின் புத்தியையும் தைரியத்தையும் சிலாகித்துத் தம்மைவிட அவரை மேலாகக் கருதிய குணம் ஒருபுறம் இருக்க, தங்கள் தகப்பனுரைப் பற்றியும், மேதையில் அவர் சாமானியரல்லர் என்ற எண்ணத்தையே பிறரிடம் உணர்த்தும் மொழிகளாகவே அவை தோன்றுகின்றன.

"எங்கள் அப்பாவுக்குத் தெரிந்த ஆங்கிலச் சொற்கள் சொற்பந்தான் ; ஆனாலும் அவைகளை வைத்துக்கொண்டே எவ்வளவோ விதங்களில் நன்றாக நியாயத் தீர்ப்புக்கள் எழுதவும், வாயடி அடித்துப் பேசவும் அவருக்கு முடிந்தது" என்று இளையவரும் பல தடவைகளில் சொன்னதை எங்கள் குடும்பத்தில் ஒருவரும் மறந்ததில்லை.

தந்தையிடம் அவ்விருவர்களும் காட்டியது பரம பக்தி என்றுதான் நாம் கொள்ளவேண்டும். அரிவிழி மங்கலம் வேங்கடராம ஐயர் என்றதும் அவர் பந்துக்களிடம் அன்பு பூண்டவர் என்ற ஞாபகம் பலருக்கு ஏற்படும். அவருடைய பிள்ளைகளுக்கும் அதேவிதம் உறவினர்களிடம் பற்று ஏற்பட்டதில் ஆச்சரியமில்லை. தம் சம்பாத்திய வரும்படியைக்கொண்டு, தமக்கென்று பங்களா ஒன்றை லஸ்ரோட்டில் வாங்கிய நாளில் மற்றொருவரும் செய்தற்கரிய ஒரு காரியத்தைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் செய்தார். அவருடைய சொந்தப் பெரிய தகப்பனாரின் பிள்ளையான ராமண்ணா என்பவர் மிகவும் உடம்பு சௌகரியப்படாமல் திருவிடைமருதூரில் படுத்த படுக்கையாகக் கிடந்தார். தாயாதிகள் என்ற கணக்கில் சிற்சில காரணங்களால் அவ்விரண்டு குடும்பங்களுக்கும் அவ்வளவாகப் போக்குவரத்தும், பேச்சுவார்த்தையுங்கூட இல்லாத காலம் அது. ராமண்ணாவினுடைய இளம் பிள்ளைகளுக்குச் சரியான பாதுகாப்பு இல்லாமல் இருந்தது. அந்தச் சமயந்தான் உறவினரைப் பார்க்க நேர்ந்தது கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு. படுக்கையில் கிடந்தவர் பழைய ஞாபகங்கள் மேலிட்டு உறவினரின் வருகையை மிகவும் உயர்ந்த எண்ணத்தின் அறிகுறியாக நினைத்து உள்ளம் உருகினார். அவரும் வியாதி முற்றியவரைத் தம்முடன் சென்ன பட்டணத்திற்கு அழைத்துவந்ததுமல்லாமல், தாம் புதிதாக வாங்கிய பங்களாவிலேயே சிகிச்சைக்காகவும் வைத்துக்கொண்டார். ராமண்ணாவின் தேக நிலைமையை அறிந்ததும் தமையனார் சுவாமிநாத ஐயர் தம் சகோதரருக்குப் பின்வருமாறு கடிதம் எழுதினார்.

"உன் கடிதம் கிடைத்தது. நம்முடைய ராமண்ணுவின் நிலைமையைக் கேட்டு மிகவும் வருந்துகிறேன். குறுகிய நோக்கம் படைத்தவர்களாயின் இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் தொந்தரவுகளை வேண்டாமென்று விலக்கிவிடுவார்கள்; ஆனால் உன்னுடைய இருதயம் நிச்சயம் மற்ற இருதயங்களைவிட உயர்ந்ததுதான். உற்றார் உறவினர்களுடைய காரியங்களில் நீ மேற்கொள்ளும் சிரத்தையும் உதாரமான மனப்பாங்கும் எவ்வளவோ புண்ணியத்தை உனக்கு விளைவிக்கும் என்பதில் சந்தேகமில்லை. ராமண்ணுவினுடைய குழந்தைகளின் வித்தியாப்பியாசத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை உடனே செய்யவேண்டியதும் நம்முடைய கடமை......அவர் சரியாக உயில் எழுதி வைத்திருக்கிறாரா என்பதைப் பார்த்துத் திருப்தி செய்துகொண்டாயா?"*
என்றெல்லாம் தமையனார் தம்பிக்குத் தம் அளவுகடந்த திருப்தியைத் தெரிவித்தார்.

அவருடைய சொந்த உயர்குணமும் அவர் காட்டும் உண்மையான கவலையிலிருந்து நன்கு தெளிவுபடுகிறது. மேலே குறித்த கடிதம் எழுதியதற்குப் பிறகும் அதே விஷயத்தில் அவருக்கு இருந்த கவலை மற்றொரு கடிதத்தாலும் வெளியாகியது:

"நம்முடைய உறவினரின் கதியை அறிய மிகவும் வருந்துகிறேன். என்னால் அவரை நேரில் வந்து பார்க்க முடியாததைப் பற்றியும் வருந்துகிறேன்...விற்குடி மனுஷர்கள் குழந்தைகள் விஷயத்தில் என்ன தீர்மானித்திருக்கிறார்கள்? சென்ற இரண்டு வாரங்களாக உனக்குத் தொந்தரவும் மனக்கவலையும் இது சம்பந்தமாக அதிகம் ஏற்பட்டிருக்கும் என்றே நினைக்கிறேன்."†

இக்கடிதங்களை எழுதும் காலங்களில் சுவாமிநாத ஐயர் மானாமதுரையில் முன்சிப்பாக இருந்தார். அவருடைய சொந்தக் குடும்பம் பெருத்திருந்தது என்றே சொல்ல வேண்டும். பத்துக் குழந்தைகளுக்குக் குறைவில்லாத ஸம்ஸாரம். தம்பிக்கோ தமையனாருடைய தேகஸ்திதியில் மிகவும் கவலை. அதிகமாகத் தம் வேலையிலும் சுவாமிநாத ஐயர் உழைத்துப் பாடுபட்டவர். சதா ஊருக்கு ஊர் மாற்றப்பட்டு அங்கங்கே குவிந்து

* கடிதம், 17-7-98.
† கடிதம், 19-7-98.

கிடந்த தீராத வழக்குகளை விசாரணை செய்து ஒருவிதமாக முடித்தவர் என்ற பெயர்அவருக்கு உண்டு.

"திருமங்கலம் கோர்ட்டில் தீராத வழக்குகள் குவிந்திருக்கின்றனவாம். எனக்கு ஏற்கெனவே போதும் என்றிருக்கிறது வேலையின் சிரமம். எதற்கு அரசாங்க உத்தியோகத்தை ஒப்புக் கொண்டோமென்றுதான் சில சமயங்களில் தோன்றுகிறது"*

என்றும் தம் சலிப்பைத் தம்பியினிடம் தெரிவித்திருந்தார் ஒரு சமயம்.

தம்பிக்குத் தமையனாரிடம் இருந்த கௌரவம் பல விதங்களில் வெளியாயின. எப்படியாவது தமையனாரை அவருடைய குடும்பப் பாதுகாப்பிற்காகத் தம்மிடமிருந்து சொற்ப தனத்தை அங்கீகரிக்கச் செய்யவேண்டும் என்ற அவா ஒரு பக்கம் அவரைத் தூண்டிக்கொண்டே இருந்தது. மற்றொரு புறம் எங்கே தமையனார் தாம் அளிப்பதைப் பெறுவதற்கு மனம் கூசுவாரோ என்ற கவலையும் கலந்தது. அவ்விதம் சந்தேகப்படச் சில காரணங்களும் இருந்தன. முதலில் தமையனாரை வேலையிலிருந்து ரஜா எடுத்துக்கொள்ள அவர் சொல்லிப் பார்த்த பொழுது சுவாமிநாத ஐயர் 'லீவ்' எடுக்கச் சம்மதிக்கவில்லை.

"என்னால் உங்களுடைய காரணங்களை ஒப்புக்கொள்ள முடியவில்லை. சம்பாத்திய ஆசையால்தான் வேலையிலிருந்து ரஜா எடுக்க உங்களுக்குப் பிடிக்கவில்லை என்று தாழ்மையாக எண்ணுவதற்கு, உங்களுடைய குணங்களை அவ்வளவு அறியாதவன் அல்ல நான்"

என்று ஆரம்பித்தவர் மெதுவாக விஷயத்தைப் புகுத்தினார்:

"உங்களுக்கு நான் காட்டவேண்டிய நன்றிக்குச் சிறிதளவிலாவது இவ்வாழ்க்கையில் என்னால் செய்யமுடிந்தால் போதும். இன்று திரும்பிப் பார்க்கையில், ஒருகாலத்தில் எனக்கு இன்னது செய்வதென்று புரியாத சமயத்தில், நீங்கள் என் பக்கம் என்னை ஆட்கொண்ட தெய்வம்போல் நின்று எனக்களித்த உபகாரம் என்னால் என்றும் மறக்கமுடியாதது."†

---

* கடிதம், 19-7-98.

† என் தந்தையின் கடிதம், 16-2-1901.

என்று பழைய நாட்களில் தமக்கு வருமானமே கொஞ்சமும் இல்லாதபொழுது தமையனார் மாதந்தோறும் அனுப்பிய ஐம்பதையும் நூறையும் பெற்றுக்கொண்டு தாம் குடித்தனம் செய்ததை இருதய பூர்வமாய்ச் சகோதரர் நினைத்து உருகினார்.

மேலும் தமையனாரை எப்படியாவது உத்தியோகத்தை விட்டு நீங்கிக் கொஞ்ச மாதங்கள் ஓய்வாக இருக்கவேண்டும் என்று வற்புறுத்தினார். ஆனால் அவர் ஒன்றிலும் தம்பிக்குச் சளைத்தவரே அல்ல. தமக்குச் சமயம் அகப்பட்டவுடன் சூடாகப் பதில் கொடுத்து விடுவார் :

"உன் உடம்பும் வரவர நன்றாக இல்லை என்று அறிகிறேன். நீ வடக்கே இப்பொழுது போவதை நிச்சயம் நான் ஒப்பவில்லை. வரும் கிறிஸ்துமஸ் விடுமுறையில் விச்ராந்தியாய் இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய். உன்னைக் காட்டிலும் பிறருக்குக் குறைவாக உபயோகப்படக் கூடியவர்களை நீ சதா உடம்பைக் கவனித்துக்கொள்ள உபதேசிக்கின்றாயே! அவர்கள் என்ன பாடு பட்டாலும் இன்னும் கொஞ்சகாலம் வேண்டுமானால் உலக வாழ்க்கையைத் தள்ளலாம். அவ்வளவுதான்; நீ பிறருக்குக் கூறும் புத்திமதி மாதிரி அல்ல நான் உனக்குத் தருவது"*

என்று அவர் தம்பியிடம் தம் கோபத்தைக் காட்டினார். அக்கடிதத்தில் குறைத்துப் பேசியிருப்பதும் தம்மைப் பற்றியே. தாம் யோக்கியதையில் தம்பியைவிடச் சாமானியமானவர் என்றதனாலேயே தம்முடம்பைக் கவனிப்பதில் சிரத்தை தம்பிக்கு வேண்டியதில்லை என்பது அதன் கருத்து. கோபம் மற்றொரு பக்கத்திலும் வெளியாகியது. தமையன், தம்பியின் உடம்பைப் பற்றிக் கவலைப்படுவது நியாயம் என்பதும், தம்பி தமக்காகக் கவலை எடுத்துக்கொள்வது சரியன்று என்பதும் தொனிக்கின்றன அம்மொழிகளில். எல்லாம் அன்பின் பெருக்கை நன்கு புலப்படுத்துகின்றன; பிறரிடம் வைத்த பிரேமை ஒருவரைப் பிறர்பால் மனம் கரைய வைப்பதையும், சொந்தத்தில் அவ்வளவு ஜாக்கிரதையாக இல்லாமல்

---

* கடிதம், 17-12-02.

இருக்கச் செய்வதையும் இலக்கியங்களில் மிகவும் சிறந்த உணர்ச்சிகளாக நாம் கொண்டாடுகிறோம். தன்னலத்தைக் கவனியாமல் மற்றவர் நலத்தையே எண்ணும் குணந்தான் அன்பைப் பூரணமாகப் பெற்றதாகக் கருதப்படுகிறது.

இன்னும் எத்தனையோ கடிதப் போக்குவரவு இது சம்பந்தமாக அவ்விருவருக்கும் நடந்தது. ராமனும் பரதனும் ஒருவரை ஒருவர் வெல்லும் விதம் காட்டிய கடமைப் பற்றும் அன்பின் ஊற்றுப்பெருக்கும் கட்டுக் கதைகளல்ல, உலகில் நடக்கக்கூடியவைகளே என்று தெரிவிக்கும் அரிய விஷயங்கள் தாம் இவையும்.

உண்மையில் சுவாமிநாத ஐயரின் மனம் தம்பியினிடமிருந்து எதையும் பெறுவதை விரும்பவில்லை. ஆனால் தாம் எதையாவது செய்தே தீருவது என்றவிதம் கங்கணம் கட்டிக்கொண்டு சகோதரர் விடாமல் கடிதந் தோறும் அவரை வேண்டலானார். தம் இஷ்டத்தைப் பூர்த்தி செய்யவே அவர் மனம் ஏங்கியது. பின் வருமாறு தமையனாருக்குத் தம் அபிப்பிராயத்தைக் கடைசியாகத் தெரிவித்துவிட்டார்.

''என் அருமை அண்ணாவுக்கு,

உங்கள் கடிதம் பெற்றேன். இகலோக விஷயங்களில் உங்கள் மனம் எவ்விதம் இருக்கின்றதென்பதை நான் உணராதவனல்ல. ஆனாலும் நாம் ஒவ்வொருவரும் சிற்சில முக்கிய கடமைகளைச் செய்யவே இங்கு உயிர்பெற்று இருக்கின்றோமல்லவா? நான் இதைப்பற்றித் தீர யோசித்தேன். நீங்களே நான் கொடையாக எழுதிவைக்கும் தனத்திற்குப் பொறுப்பை வகிக்க வேண்டும். நான் யோசித்ததை மாற்றவும் இனி முடியாது. நான் செய்வது சரி என்றே என் மனச்சாட்சி சொல்லுகிறது...... இத்தொகைகளைச் சரியானபடி பாதுகாக்கவேண்டிய ஏற்பாடுகளை நான் செய்துவிடுகிறேன். உங்களை ஒன்றுமட்டும் செய்யவேண்டுகிறேன். எந்த எந்தக் குழந்தைகளுக்குத் தொகைகள் கொடுக்கவேண்டும், எவ்வளவு ஒவ்வொருவருக்கும் கொடுக்கவேண்டும் என்பதை அறிவிக்கவேண்டுகிறேன்''*

என்றெல்லாம் எழுதித் தமையனாரை ஒரு பக்கமும் போகவிடாமல் அடித்துவிட்டார். பாவம், அவர் என்ன

---

* கடிதம், 2-11-01.

செய்வார்? விடாமல் தம்மால் ஆன அளவில் தம்பியைத் தடுத்து வந்தார். "அடுத்த வருஷம் யோசிப்போம்" என்று தள்ளிப் போட்டார். பலவிதத் தொழில் தொந்தரவுகளின் இடையேயும் வருமானம் அதிகமாக ஆகத் தம்பி தம் முக்கியக் கடமையை நினையாத நாளில்லை என்றே சொல்லவேண்டும்.

"தேவா நுக்கிரஹத்தால் நீங்கள் எனக்கு ஆரம்பத்தில் செய்த பேருபகாரத்தினுலேயேதான் இவ்வளவு அதிருஷ்டமும் எனக்குக் கிடைத்திருப்பதாக நான் எண்ணுகிறேன். அதிருஷ்டக் கோளாறினுல் நாம் இருவரும் இடம் மாறி இருக்கின்ரும். நீங்கள் நியாயத்தில் என் ஸ்தானத்திலும், நான் உங்களிடத் திலுமேதான் இருந்திருக்கவேண்டியது. ஏதோ நம்மை ஆட் கொண்ட தெய்வம் செய்ததாகவே நினைக்கின்றேன் இவ்வித்தி யாசத்தை......எனக்கு ஒரே ஒரு காரணந்தான் இம்மாதிரி அடிக்கடி உங்களை வற்புறுத்தத் தூண்டுகிறது. வைத்தியர்கள் நீங்கள் அவசியம் வேலையை விட்டுச் சிறிது காலம் கவலை இல்லாமல் இருக்கவேண்டும் என்று தற்காலத் தேக நிலைமையி லிருந்து கருதுகிருர்கள். ஒருகால் வேலையை விட்டு அகலுவது குழந்தைகளின் க்ஷேமத்திற்குப் பாதகமாய் இருக்கலாம் என்று மனத்தினுள் நினைத்துக் கவலையை நீங்கள் அடையக் கூடுமானதால், நான் இந்தவித ஏற்பாட்டைச் செய்யத் துணிந்தேன்."*

இன்னும் என்ன செய்வார் தமையனுர் அச்சந்தர்ப் பத்தில்! சற்று அவர் யோசனையில் இறங்கினுர். சமயம் அறிந்தவரல்லவா தம்பியும்? மேலும் காரியத்தைச் செய்து காட்டினுர்:

"தொகையை உங்கள் பேரில் எழுதிவைத்து விட்டேன். எவ்விதம் வேண்டுமானுலும் நீங்கள் அதை உபயோகிக்க லாம். வேண்டும் என்றுதான் இதைச் செய்கிறேன். உங்கள் குடும்பக் கவலையை நீங்கள் ஒழிக்க வேண்டுமென்பதுதான் என் உத்தேசமும். உங்களிடம் உள்ள பணத்துடன் இதையும் சேர்த்தால், குழந்தைகள் ஒவ்வொருவருக்கும் பிழைக்க வழி பிறக்கும் நாளில், மிக்க சௌகரியமாயிருக்கும். நீங்கள் மிகவும் ரோஷமுள்ள சுபாவம் உடையவர்கள் என்பதை அறியாதவன் அல்ல நான். இதை நீங்கள் ஒரு தானமாக நினைக்கவும் வேண்டாம். ஏனென்ருல் அதன் பெரும்பாகத்தில்

* என் தந்தையின் கடிதம், 12-11-03.

நம்முடைய முன்னோர்களது வீட்டையும் நிலத்தையும் விற்ற தொகையும் கலந்து கிடக்கின்றது. ஆகையால் இத்தொகையை நான் தருவதால் பெரிய தருமம் செய்ததாக எண்ண எள்ளளவும் காரணம் இல்லை.''*

எவ்வளவு நினைத்தாலும் அவ்விரு இருதயங்களும் தனிப்பட்டவைகளே என்பதிலும் எள்ளளவும் சந்தேகம் இல்லை.

அதே கடிதத்தில் மேலும் எழுதி இருப்பது:

''சிறிது தொகையை சௌ. மீனாக்ஷிசுந்தரத்தின் பேரில் எழுதிவைத்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கும் என்று எண்ணுகிறேன். தற்காலத்துப் பண நெருக்கடியை நினைக்குங்கால் அந்தப் பணம் அவளுக்குப் போதாது என்று எண்ணிக் கிராம வீட்டை விற்ற பணத்தில் என் பங்கை அவளுக்கென்று குறித்துச் சந்திரகுடனிடம் கொடுத்திருக்கிறேன். முன்பு செய்ததுபோல் இத்தொகையையும் அவனையே நிர்வகிக்கச் சொல்லிவிட்டேன். ஏற்கெனவே நான் கொடுத்திருக்கும் பணத்துடன் சேர்த்து அவனுக்கும், தம்பி ராமசந்திரனுக்கும் அவர்களுடைய சொந்தப் பங்கான வீட்டை விற்ற பணத்திலிருந்து தொகையைக் கொடுத்து விட்டேன்.''†

இக்கடிதம் சென்ற நாட்களில் பரமதியில் வசித்திருந்த சுவாமிநாத ஐயர் பணத்தைப் பெற்ற பின்னரும் தம் மன உறுதியை விடவில்லை.

"உன்னுடைய தாராளமான சுபாவத்தைக் குறித்து மகிழ்கிறேன். உன் கவலையை ஒழிக்கவே நான் இத்தொகையை வாங்கிக்கொள்கிறேன். நான் பெறும் இத்தொகையில் முக்கால் வாசி எனக்கு நியாயமாக வரவேண்டியதுதான் என்று வெகு சாமர்த்தியமாய் எடுத்துக் காட்டிவிட்டாய். ஆனால் மற்றொரு விஷயத்தை நான் மறந்தவன் அல்லன். அநேக வருஷங்களாகப் பலவிதமான குடும்பச் சுமைகளை நீயே தனிமையில் தாங்கி வருகின்றாய். பணத்தினால் மதிப்பிட முடியாத பல அரிய காரியங்களில் உன்னுடன் நானும் பங்கெடுத்துக்கொள்வது போக, தனியே அவைகளைத் தாங்க உன்னை விட்டுவிட்டவன் அல்லவா நான்? என்ன விதமான நியாய வாதம் செய்தும் என்னையே ஏமாற்றிக்கொள்ள நான் தயாராக இல்லை. இது நீ இரண்டாந்தடவை செய்யும் உபகாரம்

* கடிதம், 25-11-03.

† அதே கடிதம், 25-11-03.

என்பதையும் நான் மறக்கவில்லை. இதைப் பெற்று உன்னை மனமார ஆசீர்வதிக்கிறேன். ஆனால் ஒரு சிறு மாறுதல் மட்டும் செய்ய ஆசைப்படுகிறேன். என் பிதிர் ஆர்ஜிதச் சொத்தின் பங்கில், அதாவது கிராம வீட்டை விற்ற பணத்தில் சிறிது தொகையை சௌ. மீனாக்ஷி சுந்தரத்திற்கும், பாக்கித் தொகையைச் சந்திரசூடனுக்கும் ராமசந்திரனுக்கும் என் வீதம் பங்கு கொடுக்கப் போகிறேன். ஆகையால் நீயே அவ்விதம் பாகம் செய்து பாக்கியை மட்டும் என் பேரில் மாற்றிவிடு; தகுந்தபடி மற்ற ஏற்பாடுகளையும் செய்துவிடு''*

என்று எழுதியிருந்தார். வார்த்தைகளில் சொல்லியதைக் காட்டிலும் காரியாம்சத்தில் உறவினர்களிடம் அவ்விருவர்களும் காண்பித்த அபிமானம் கணக்கிட முடியாதது.

இதனுடன் நிறுத்திக்கொள்வாரா தமையனார்! அவருக்கு எங்கே மறுபடியும் தம்பி சமயம் பார்த்துத் தம்மை ஏமாற்றி விடுவானோ என்ற கவலை ஏற்பட்டது:

''வேண்டும்பொழுது இனி நானே தெரிவித்துவிட்டு உன்னிடம் எதையாவது பெறுவதற்கு எழுதுகிறேன். வேண்டியதற்கு மேலே என் கையில் பணம் வைத்துக்கொள்ள எனக்கு இஷ்டம் இல்லை. மேலும் நம்முடைய வார்சுகளை அநாவசியமான சம்பத்திலும் விட்டுச் செல்ல எனக்கு அவா இல்லை. பரமனருளாலும், பிதாவின் ஆசீர்வாதத்தினாலும் நாம் ஒவ்வொருவரும் அவரவர்கள் சம்பாத்தியத்திலேயே காலம் தள்ள வேண்டும் என்பது என் கோரிக்கை. சில சமயங்களில் குடும்பத்திலுள்ளவர்களுக்கு இவ்வித ஏற்பாடுகளைச் செய்வது கெடுதலையே விளைவிக்கும். அவரவர்கள் தனித்தனி அபிப்பிராயங்களைக் கொள்ளவும், மற்றப்படிச் சொந்த நியாயங்களைக் கடைப்பிடிக்கவும் இதுவே காரணமாகும். மானிட வாழ்க்கை மிகவும் அநித்தியம். நீ செய்வதும் தவறல்ல. உன் செயல் உலக வாழ்க்கையை ஒட்டியே இருக்கிறது.''†

வார்த்தைகளில் தொனிக்கும் காம்பீர்யமும் கௌரவமும் வாசிக்க வாசிக்க எழுதியவரை உயர்வாக நினைக்கச் செய்கின்றன. பெரும்புகழ் பெறவேண்டியவர் அநியாயமாக அகால மரணம் அடைந்தார் என்றே சுவாமிநாத ஐயரைப்பற்றி நாம் நினைக்க இடம் உண்டாகிறது. அவருடைய ஆழ்ந்த கருத்துக்களும், தீரச்செயலும்,

* கடிதம், 27-11-03.

† கடிதம், 3-12-03.

உயிருடன் கொஞ்ச நாட்கள் மட்டும் அவர் இருந் திருந்தால் பெரும் புகழை அடையச் செய்திருக்கும்.

தனக்குத்தான் உடம்பு சரியாக இல்லை, தவிரவும் தம்மால் உலகிற்கு அவ்வளவு உபயோகமில்லை; தம்பியின் நிலைமை அவ்விதம் இல்லையே; அவனுக்குச் சர்வகுணங் களும் பொருந்தியிருக்கையில், தேக நிலைமைமட்டும் சௌகரியமாக இல்லாததை அறிந்ததும் சுவாமி நாத ஐயரின் மனம் தவித்துவிட்டது. இரகசியமாய்த் தம்பி சந்திரசூடனிடமிருந்து வந்த கடிதத்திலிருந்து கிருஷ்ணனுக்கும் நீர் ரோகம் வேரூன்றத் தொடங்கிவிட் டதை அறியவே, அவரால் அதைப் பொறுக்க முடியவே இல்லை; "ஐயோ கொன்றுவிடுமே வியாதி. இளம் வயசில் வந்துவிட்டதே!" என்ற ஏக்கம் மேலிட்டு வாய்விட்டுப் புலம்பிவிட்டார். தங்கள் குடும்பத்தில் மிகவும் அன்பு காட்டிய தம் அருமை நண்பர் ஏ. கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்கு உடனே தபால் சென்றது:

"சிரஞ்சீவி கிருஷ்ணனுக்கு உடம்பு சௌகரியமில்லாமல் வியாதியின் வெளுப்பும் தட்டத் தொடங்கிவிட்டதாக அறிகிறேன். என்னால் இக்கவலையைப் பொறுக்கமுடியவில்லை. நேற்றுத்தான் இந்த விவரம் தெரிந்தது எனக்கு. அதுமுதல் என்னால் ஒன்றும் செய்யமுடியாமல் மனம் தவிக்கின்றது. அவனோ பிடிவாதக்காரன். வேண்டியவர்களான எல்லோரும் சொல்லியும் ஒன்றும் காதுகொடுத்துக் கேளேன் என்பான். அவனுக்காக மட்டுமல்ல; எத்தனையோ பேர்கள் அவனையே நம்பி வாழும் பொழுது, அவசியம் அவனுக்குக் கெடுதல் ஒன்றும் வரக்கூடா தென்று பகவானை ஸதா பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன். அவனிடம் வைத்திருக்கும் நம்பிக்கையால் அல்லவா நான் உயிர் வாழ்ந்திருக்கிறேன்! தன் உடம்பை அவன் கவனித்துக் கொள்ளாததனால், அவனையே நம்பி வாழ்கின்றவர்களுக்கு மனக் கவலையை அதிகம் உண்டுபண்ணுகின்றதை அவன் சிறிதும் அறிவ தில்லை. உங்களுடைய வார்த்தையில் அவனுக்கு மதிப்பு உண்டு. ஆகையால் புத்திமதி சொல்லுங்கள். நானும் நேரில் எழுதி இருக் கிறேன்...என் மனத்தின் தவிப்பைக் கடவுளே அறிவார்"*

என்ற உருக்கமான தோரணையில் வார்த்தைகள் எழும்பின.

---

* கடிதம், 13-8-03.

உள்ளன்பு அப்படியே சொற்களில் பிரதிபலிக்கின்றது. இக்கடிதத்தை வாசித்த ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயர் உடனே தம்முடைய வேண்டுகோளையும் சேர்த்து இதனுடன் அனுப்பினார் நண்பருக்கு :

"சாமாவின் கடிதத்தையும் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். உன்னிடம் தெரிவித்தபடியே அவனுக்கு நானாக ஒன்றும் எழுதவில்லை. அவனும் இவ்வளவு அதைரியப்படக் காரணம் இல்லை. அம்மாதிரியே அவனுக்குப் பதில் எழுதுகிறேன். இருந்தாலும் உன் விஷயத்தில் கவலை வரவர ஏற்படத்தான் செய்கிறது. முன் தடவையைவிட இந்தத் தடவை பரீக்ஷித்ததில் உன் நீரில் சர்க்கரை அதிகமே தெரிகிறது. உன் சாப்பாடும் குறைவாகத்தான் தெரிகிறது. தேகத்தில் சதைப்பற்றுக் குறைவும், ஓய்ச்சலும் உன்னிடம் காண்கின்றன. நம்முடைய அளவிற்குள் அகப்பட்ட யுக்தியினால் செய்யக் கூடியது அவ்வளவையும் செய்து பார்க்க வேண்டியதே. நீ எடுத்துக் கொள்ளும் மற்ற முன் ஜாக்கிரதைகளுடன் நிறுத்திக்கொள்ளாமல், ஒரு வருஷகாலமாவது வக்கீல் தொழிலை விட்டு, ஆறு மாதம் கோடைக்கானல் மலையிலும், ஆறுமாதம் ஏதாவது குக்கிராம வாசத்திலும் செலவழித்தால் உடம்பிற்கு நலம்."*

அன்றாடம் நேரில் என் தந்தையைக் கண்டுகொண்டிருந்தவர், கடிதம் எழுதித் தெரிவிக்கும் காரணம் வேறு எதுவாக இருக்கக் கூடும்? ஒருகால் நேரில் பேசும்பொழுது தம்மை நண்பர் வாயடி அடித்துவிடலாம் என்று பயந்தே கடிதம் மூலம் தம் கவலையைத் தெரிவித்திருக்கவேண்டும். ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு எழுதியதற்கு முந்தியதினம் தம்பிக்குத் தம் கவலையைச் சுவாமிநாத ஐயர் நேரிலும் எழுதியிருந்தார் :

"உன்னிடம் வைத்திருக்கும் பெருமையினாலும், அன்பினாலுமே நான் இதுவரையிலும் திடமாய் உயிருடன் இருக்கிறேன். நான் இந்த வரிகளை எழுதும்பொழுது படும் மனத்துயரத்தை முழுவதும் அறிய உன்னால் முடியாதுதான். நான் பகவானை வேண்டிக்கொள்வது, அவசியம் உன் உடம்பைக் கவனித்துக் கொள்ளத் தகுந்த நல்ல புத்தியை உனக்குக் கொடுக்கவேண்டும் என்பதே. உன் தீர்மானங்களை மனிதனால் மாற்றுவது முடியாது என்பதை நான் அறிவேனல்லவா? எனக்கு இருக்கும் ஆசைகளையெல்லாம் உன்னிடமே பூர்த்திசெய்துகொள்ள நான் விரும்பு

* கடிதம், 15-8-03.

வதால், உன் உடம்பு கெட்டுப் போவதன் மூலம் நம்மிருவர் களின் உயிர்களையும் மாய்க்க நீ வழி செய்கிறதாகவே எனக்குப் படுகிறது.''*

வரவரத் தமையனாரின் இருதயம் உடைந்துவிடும் போலாகிவிட்டது. தம்பியின் தொழில் அலுவல்களும், மற்றும் பொதுக்காரியங்களில் உழன்ற சுபாவமும் வாஸ்த வத்தில் அவருக்குக் கவலையையே விளைத்தன. போதாத தற்குக் கிறிஸ்துமஸ் விடுமுறைதோறும் காங்கிரஸ் கூட்டங்களுக்காக வெளியூர்களுக்குப் பிரயாணமாவதை அண்ணா ஒப்பவில்லை. வயசில் பெரியவர் என்ற உரிமை யால் தமையனார் கண்டித்தும் சொல்லுவார் :

''......பயங்கரமான இவ்வியாதியின் அறிகுறிகள் உன்னிடம் காணத் தொடங்கிவிட்டதைக் கேட்க என் மனம் அதிகம் கவலைப் படுகிறது. இனித் தாமதிப்பது தவறு. உடனே விடுமுறை எடுத்துக்கொண்டு நீடித்த அமைதியைப் பெறுவது தான் உன் உடம்பிற்கு நன்மையை அளிக்கும்.''†

அவருக்குத் தம்பியின் விஷயத்தில் மற்றுமொரு கவலை இருந்தது. மிகவும் ஆசாரமாய் ஸநாதனதர்மத்தைக் கடைப்பிடித்தவர்களின் குடும்பம் அவர்களுடையது. என் தந்தைக்குக் காங்கிரஸ் காரியங்களில் புகுந்ததுமுதல் ஜாதிக் கட்டுப்பாடுகளைச் சற்று விடும்படி நேர்ந்தது. முதலில் மற்ற ஜாதிக்காரர்களை வீட்டில் சாப்பாடு செய் வித்த அபவாதம் ஊர் முழுவதும் பரவியது. அதனால் புகழ் கிறவர்களோடு தூற்றுகிறவர்களும் சிலர் ஊரில் ஏற்பட் டார்கள். அவைகளைப்பற்றியும் மறவாமல் குறிப்பிட்டு, தமையனார் தம்பிக்கு எச்சரித்து விட்டார் :

''ஜாதிமதக் கொள்கைகளிலும் ஆசாரங்களிலும் நீ கொண்டுள்ள அபிப்பிராயங்கள் சரியாகவும் இருக்கலாம், அல்லது தவறாகவும் இருக்கலாம். நான் அவைகளைப்பற்றி இப்பொழுது விசாரிக்காத காரணம், அவைகளைப்பற்றி என்னால் ஒன்றும் சொல்வதற்கில்லை என்பதுதான். ஆனால் ஒன்று மட்டும் சொல்லத் துணிகிறேன்; நீ இவ்வளவு பகிரங்கமாக இல்லாமல் கவனத்துடன் நடந்துகொள்வதுதான் நல்லது; மேலும்

---

* கடிதம், 12-8-03.

† கடிதம், 15-12-04.

அவசியமுங்கூட. ஏற்கனவே இதைப்பற்றி ஊரில் பெரிய வம்பு கிளம்பியிருக்கிறது.''*

கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தமையனாரிடம் பக்தியும் கௌரவமும் அதிகம் என்றால் மிகையாகாது. அண்ணாவுக்கும் தம்பியிடம் பிரேமையும் நம்பிக்கையும் குறைவில்லாத அளவில் இருந்தன. நேரில் பேசிக்கொள்ளும்பொழுது மட்டும் அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் சளைக்காமல் வாக்குவாதங்களில் அகப்பட்டுக்கொண்டு இரைந்து பேசி விடுவார்கள். அதிலும் சுவாமிநாத ஐயருக்கு எதிராக யாராவது பேசிவிட்டால் அவருடைய மனம் தாங்கவே தாங்காது. சிற்சில காலங்களில் வசைமொழிகள் அவர் வாயினின்றும் அதிகம் ஏற்பட்டு எதிரில் உள்ளவர்களைத் திணற அடித்து விடும்.

ஒரு சமயம், இந்தமாதிரி அவர் வசைமொழிகளைப் பேசியதால் கோர்ட்டிலுள்ள ஒரு வழக்காளிக்குக் கோபம் பொறுக்க முடியாமல் வந்துவிட்டது. அவர் பூவிருந்தமல்லியில் முனிசீபாக இருந்த காலத்தில், அவன் அவரைப் பழி வாங்கும் கருத்துடன், சகோதரர் கிருஷ்ணஸ்வாமி இறந்து விட்டதாகத் தந்தி ஒன்றை அவருக்குக் கொடுத்து விட்டான். அவர் கோர்ட்டில் இருக்கையில் தந்தி கிடைத்தது. தந்தியைக் கண்டதும் அப்படியே உளறி அடித்துக் கொண்டு ஜட்கா ஒன்றில் ஏறி மயிலாப்பூருக்குச் சாயங்காலம் வந்து சேர்ந்தார். பிறகுதான் தம்மை வேண்டுமென்று மனவேதனைப் படுத்தியவன் தம் வாய்க் கொடுமையைத் தாங்காதவனாகவே இருக்கவேண்டும் என்று ஊகிக்கத் தலைப்பட்டார்.

ஆனாலும் பிறவிக் குணம் அவரை விட்டு ஒரு பொழுதும் அகலவே இல்லை. சாகும் தறுவாயிலும் அவருக்குக் கோபம் வராமல் இல்லை. அவருக்கு ஆபத் சந்நியாஸம் வாங்கிக் கொள்ளவேண்டும் என்றிருக்கையில் தமக்குச் சந்நியாஸ ஆசிரமத்தில் பிரவேசிக்கத் தகுதி உண்டா என்று பெரியவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள எண்ணித் தம் குருவான மஹா

---

* கடிதம், 15-12-04.

மஹோபாத்தியாய சந்திரசேகர சாஸ்திரிகளிடம் கேட்கச் சொல்லித் தம்பியிடம் தெரிவித்தார். தம்பி உடனே அதற்கு, "உங்கள் அருகதையைப் பற்றிச் சந்தேகமிருக் கின்றதா?" என்று கேட்டார். பதில் வெகு வேகமாய் வந்தது அவரிடமிருந்து, "உனக்குச் சந்நியாஸ ஆசிரமத்தில் நம்பிக்கை இல்லை. எனக்குத் தெரியும் அது. அதனால் இம்மாதிரிப் பேசுகிறாய். ஆனால் அவ்விதமில்லை எனக்கு; அதில் எனக்குக் கௌரவமுண்டு. ஆசிரமத்திற்கு என்னைப் போன்றவர்களால் இழிவு வரக்கூடாதே என்றுதான் கவலைப்படுகிறேன்" என்று கடிந்து பேசி விட்டார். இவைகளையெல்லாம் முன்னதாகவே அறிந்தவர் தம்பியும். சந்நியாஸம் வாங்கிய பிறகுங்கூட எதையாவது கோபா வேசத்துடனேதான் நோயாளி சொல்லிக் கொண்டிருந்த தாகச் சொல்லுவார்கள் எங்கள் வீட்டிலுள்ளவர்கள்.

சுவாமிநாத ஐயர் க்ஷயரோகத்தின் கடுமையால் வருந்தி வெகுநாட்கள் ஜ்வரமாகப் படுக்கையில் இருந்தார். லீவ் எடுத்துக் கொண்டு சென்னையில் தம்பியின் பங்களா வில்தான் கடைசிக் காலத்தைத் தள்ளினார். அவருக்குப் பார்க்காத வைத்தியமில்லை. காலஞ்சென்ற டாக்டர் நஞ்சுண்டராவ் புதியதாக அக்காலத்தில் வந்திருந்த மருந்துகளையெல்லாம் நோயாளியின்மீது பிரயோகிப்பார். ஊசியினால் மருந்தை ஏற்றும் பழக்கம் அப்பொழுது தான் சென்னையில் ஆரம்பமாகி இருந்தது. பலருக்கு ஊசி முனையைக் கண்டாலே சிம்ம சொப்பனம். என் பெரிய தகப்பனாருக்கும் ஊசிகுத்திக் கொள்வதில் கவலை அதிகம். டாக்டரிடம் அதற்காக அவர் கடுமை யாய்ப் பேசாத நாள் இல்லை. அதிகப் பழக்கமானதால் ஏகவசனத்தில் டாக்டர் நஞ்சுண்டராவை அவர் அதட்டியே பேசுவார்; "டே நஞ்சுண்டராவ், ஜன்மாந் தரத்தில் உன்னை என்ன பாடுபடுத்துவேன் தெரியுமா? நீ மாடாய்ப் பிறந்து, இதேவிதம் நான் உன்னைத் தாற்றுக் குச்சியினால் வேண்டியமட்டும் குத்துவேன். சொல்ல மாட்டாத வாயில்லா ஜீவனாய் நீ வேதனையைப் பொறுக்க வேண்டி வரும், தெரியுமா?" என்பார்.

அண்ணுவுக்கு வியாதி அதிகரித்து வரவே தம்பி கிருஷ்ணஸ்வாமி ஐயரை அக்காலங்களில் கண்டவர்கள் அவர் முகத்தில் காணப்பட்ட குங்குமம் போன்ற சிவப்பை அறிந்து அவருள்ளத்தில் கொதிக்கும் வருத்தத்தை உணர்ந் தார்கள். தமையனருக்குச் சமாதியைத் திருவான்மியூர் க்ஷேத்திரத்தில் அவர் செய்வித்தார். 'ஆசிரமம்' பங்களாவில் ஒரு பர்ணசாலை உண்டு. அவ்விடத்தில்தான் குருபூஜை முதலியவைகள் சாஸ்திரோக்தமாய் நடந்தன. பிறகு 'தைத்திரீயம்' முதலிய உபநிஷத்துக்களை அந்தணர்கள் கோஷிக்க, மயிலாப்பூரிலிருந்து சுவாமிநாத ஐயருடைய தேகத்தைத் திருவான்மியூர் கொண்டு சென்றார்கள். 1908–ஆம் வருஷம் டிசம்பர் மாதம் 21–ஆம் தேதி அவர் சமாதி அடைந்தார். அன்று பிற்பகல் கிருஷ்ணஸ்வாமி ஐயர் மறுபடியும் தமையனர் பிள்ளைகளுக்குப் படிப்பிற் காகச் சிறிது தொகையை எழுதிவைத்தார். அவைகளின் பொறுப்பை இளைய சகோதரர் சந்திரசூடரிடம் ஒப் படைத்தார். தம்பி சந்திரசூடர் தம் இரு தமையனர்க ளிடம் காட்டிய பக்திப் பிரேமையும் குறிக்கத் தக்கதே. அவர் தமையனருக்கு எழுதித் தெரிவித்ததாவது:

"நேற்று உங்கள் கடிதத்தையும் அதனுடன் அடங்கிய 'செக்'கையும் பெற்றுக்கொண்டேன். கடிதத்தின் குறிப்பையும் வாசித்தறிந்தேன். என்னிடம் இவ்வளவு பொறுப்பையும் வகிக்க யோக்கியதை உண்டோ என்று நான் சந்தேகிக்கின்றேன். ஆயினும் நீங்கள் யோசித்துத்தான் எதையும் செய்திருப்பீர்கள். என்னிடம் உள்ள யோக்கியதாம்சங்களைச் சீர்தூக்கிப் பார்த்துத் தான் இப்பொறுப்பையும் என்னிடம் தருகிறீர்கள் என்று எண்ணு கிறேன். நம்முடைய காலஞ்சென்ற முத்தண்ணு அவர்களே தம் பிள்ளைகளின் ரக்ஷணையையும் வித்தியாப்பியாசத்தைப் பற்றிய ஏற்பாடுகளையும் என்னிடம் ஒப்படைத்திருப்பதால், இதையும் அதனுடன் சேர்ந்ததொரு கடமையாகச் செய்யக் காத்திருக் கிறேன்."*

தமக்கும் தம் தமையனருக்கும், வேண்டிய வயசு ஆனதாலும், மேலும் உத்தியோக முறையிலும், வக்கீல் தொழிலிலும், சம்பாத்தியம் நல்ல வகையில் ஏற்பட்ட

---

* கடிதம், 22-12-08.

தாலும் தங்கள் வாழ்க்கை ஒருவிதமாக ஆரம்பமாகி விட்டதாகக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் எண்ணினதுண்டு; ஆனால் மற்ற இரு சகோதரர்கள், மாற்றாந்தாயின் வயிற்றில் பிறந்தவர்கள், வாலிபர்களாக அக் காலத்தில் இருந்தார்கள். தகப்பனாருடைய சொத்தில் அவர்களுக் கென்ற பாகம் முற்றும் அவர்களுடைய வாழ்க்கைத் துறையின் விருத்திக்குப் போதாதென்று தோன்றவே, அவ்விருவர்களுக்கும் வேண்டிய தொகையைத் தனியாகக் கொடுத்தார். அவ்விதம் செய்த ஏற்பாட்டைப் பற்றியும் முன்பே தமையனாருக்குத் தெரிவித்திருந்தார்.* அவ ருடைய சிறிய தாயாரும் சகோதரர்களும் அவருடனேயே மயிலாப்பூரில் சிறிது காலம் வசித்தார்கள்.

தம்பி சந்திரசூடரும் இளமையிலிருந்தே மிகுந்த பொறுப்பும் குலத்துக்கு ஏற்ற உதார உணர்ச்சியும் பெற்ற வராக இருந்தார். என் தந்தையின் மாதுலரான கிருஷ்ண பாகவதர் ஒரு சமயம், வேற்றுமைப் புத்தியுடன் அவரைப் பற்றிப் புகாராக என் தந்தையின் எதிரில், "அண்ணா நிறையச் சம்பாதித்தால், தம்பி தாராளச் செலவு செய்வதில் என்ன பிரமாத விந்தை?" என்று கேட்டுவிட்டார். வந்துவிட்டது கோபம் மருமகனுக்கு. "அது கிடக்கட்டும் பாகவதரே! எல்லோ ராலும் பணத்தை முதலில் ஒழுங்காகச் செலவு செய்யத் தெரியுமோ, பார்க்கலாம்" என்றாராம். உண்மையில் சந்திர சூடருக்கு அப்பொழுது வயசு இருபது ஆகவில்லை. ஆனாலும் அவரிடம் வீட்டுச் செலவுகளையும் மற்றப்படி எத்தனையோ விதமான குடும்பக் கவலைகளையும் சகோதரர் தயக்கமின்றிச் சுமத்திவிடுவார். அவருக்குத் தம்பியினிடம் அவ்வளவு நம்பிக்கை. மேலும் உணர்ச்சி உள்ளவ ரானதால் ஜாக்கிரதையாகவும் சமயமறிந்தும் அவரிடம் தம் மதிப்பைக் காட்டுவார்.

குடும்பங்களில் ஏற்படக்கூடிய சிறிய மனஸ்தாபங்கள் உண்டாகாமல் இருக்கவும் முடியவில்லை. ஏக குடும்பமாய்ச் சேர்ந்து வாழ்வதன் தவறு சதா ஒருவரை ஒருவர் அளந்து

* கடிதம், 12-6-01.

பார்த்து மனக்கசப்பைப் பெறுவதன்றோ? ஆனால் அடிப் படையான பக்தியும் அளவு கடந்த அன்பும் சகோதரரிடம் என் சிறிய தகப்பனாருக்கு இருந்ததில் ஒருவித ஆச்சரியமும் இல்லை.

"உங்களுடன் மனவேற்றுமை அடைவதென்பதை என் உலகவாழ்க்கையை நீக்கும் தருணமாகவே நான் கருதுவேன்"* என்பார் சில சமயம், உணர்ச்சி வெள்ளத்தில் அடிபட்ட சந்திர சூடர்.

* * * *

உறவினர்களிடம் பழகுவதற்கும் ஊராருடன் கலந்திருப்பதற்கும் வித்தியாசம் உண்டு. ஓரளவில் வெளி மனிதர்களுடன் தம் சுபாவத்தை மறைத்துக்கொண்டு நடந்து கொள்ளத்தான் பலருக்கு மனம் இடம் கொடுக்கும். ஆனால் வீட்டிலுள்ளவர்களிடம் நடந்து கொள்வது போலவே பிறரிடமும் அநுதாபமும் தயவும் காட்டியும், ஒழுக்கமுறைக்கு வழி சொல்லும் கடுமையான மொழிகளை ஓய்வின்றி வீட்டிலுள்ள வர்களிடம் உபயோகிக்கத் துணிவது போலவே பிற ரிடம் காண்பிப்பதும் ஓர் ஆச்சரியந்தான். மனத்தின் புரட்டில்லாத இயல்பும், சத்திய வழிபாட்டின் உணர்ச்சியுமேதான் அவைகளுக்குக் காரணம். சிற்சில காலங்களில் அளவு மீறி வாயினின்று வசைமொழி களைப் பலர் முன்னிலையில் கொட்டியவர் அவர் என்பதை உலகம் அறியும். சிநேகிதர்களும் வேண்டியவர்களும் அவரை அடிக்கடி அதைப்பற்றி எச்சரித்தது உண்டு. ஆனால் தம் ஒளிவுமறைவு அற்ற சுபாவத்தைப் பொதுக் கூட்டங்களிலும் பலர் முன்னிலையிலும் அவரால் ஓரளவுதான் அடக்க முடிந்தது. பிறவிக்குணங்களை ஒழிக்க யாரால்தான் முடியும்? பரம சிநேகிதரான கோகலேயிடமே ஒரு சமயம் தம் அவசரத்தை வார்த்தை யில் காட்டிவிட்டுப் பிற்பாடு தாம் செய்த பாவத்தை நினைத்து உருகினார்:

"என் நீர்ரோகத்தின் தோஷந்தான் இந்த நான்கு வருஷங் களாக என் உடம்பையும் புத்தியையும் பலவீனப்படுத்துகிறது.

* கடிதம், 3-6-06.

சீக்கிரத்தில் எனக்குக் கோபம் உண்டாகிவிடுகிறது. சின்ன விஷயங்களைக் கூட என்னால் பொறுக்க முடியவில்லை. திடீரென ஆத்திரம் பொங்கி எழுவதற்குச் சற்றும் காரணம் இல்லைதான். எதிராக ஒருவர் வாதாடுவதை என்னால் சாந்தமாக ஏற்றுக் கொள்ளவும் இயலவில்லை. பேசிவிட்டுப் பிற்பாடு நம்மையே நொந்து கொள்வதில் என்ன பிரயோசனம்?"*

மன்னிப்புக் கேட்கும் தோரணை உயர்ந்த விதத்தில் இருக்கிறது; மன்னிப்பை யாசித்த இடமும் சரியான யோக்கியதையைப் பெற்றது. சிலருக்குத் தங்களிடம் கெட்ட குணங்கள் இருப்பதே தெரியாது. தெரிந்தாலும் பிறரிடம் அதை நினைத்து மன்னிப்பைக் கேட்கவும் மனம் வராது. நிமிர்ந்த தலைதான் மேலும் மேலும் தன்னை நிமிர்த்திக்கொள்ள வழிதேடும்.

மற்றொரு சுபாவமும் ஊராரிடம் அவர் காட்டி விடுவார். பிறர் செய்யும் பிசகை நன்றாக அலசிக்காட்டும் தைரியம் அவருக்கு உண்டு. சிலரைப் போல எங்கே ஜனங்களின் நல்ல எண்ணம் தம்பால் குறைந்து விடுமோ என்ற பயமே அவருக்கு இல்லை. கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்கும், அந்நாட்களில் பத்திரிகை உலகில் சிறந்தவராய் விளங்கியவரான ஜி. சுப்பிரமணிய ஐயருக்கும் பொது விஷயங்களில் மனம் வேறுபட்டது. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மிதவாதத்தை வெறுத்தவர் ஜி. சுப்பிரமணிய ஐயர். மேலும் 1908-ஆம் வருஷத்திய காங்கிரஸைச் சென்னையில் வைப்பதை எதிர்த்த பெரிய வர்களில் அவரும் ஒருவர். 1907-ஆம் ஆண்டிலும் கிருஷ்ணஸ்வாமி ஐயரால்தான் மஹாஜனசபை சென் னையில் காங்கிரஸைக் கூட்டுவதற்கு அநியாய வழியில் வற்புறுத்தியதாக வாச்சாவுக்குத் தம் சொந்த அபிப் பிராயத்தை விரோதமாக எழுதியவர் அவரே. அடுத்ததாக, கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய பகிரங்கக் கடிதம் பெருத்த தும்பையும் தூசியையும் கிளப்பவே, ஜி. சுப்பிரமணிய ஐயர்தாம் அதன் கோவையற்ற தன்மையைக் குறித்துக்

---

* கடிதம், ஜூன் மீ 1, வருஷம் தெரியவில்லை.

குற்றம் காட்டிப் பத்திரிகைகளில் எழுதியிருந்தார். ஆகையால் இருவரும் அடிக்கடி நேரில் சந்திப்பதில்லை. அவ்விதம் நேரில் பார்த்துக் கொண்டாலும் ஒருவரை ஒருவர் தாக்கிக்கொண்டுதான் வாதாடுவது வழக்கம்.

1908-ஆம் ஆண்டில் ஜி. சுப்பிரமணிய ஐயர் பத்திரிகையில் எழுதிய ஒரு கட்டுரை அரசாங்க விரோதமானது என்று கருதப்பட்டு, அதிகாரிகள் அவரைக் குற்றாலம் அருவி ஸ்நானத்திற்காகச் சென்ற இடத்தில் கைது செய்தார்கள். கைது செய்யப் பட்டவரைச் சென்ன பட்டணத்திலுள்ள சிறைச் சாலையில் சில நாட்கள் வைத்திருந்தார்கள் அதிகாரிகள். ஆனால் இந்த விவரத்தைப் பத்திரிகைகள் வெளிப்படுத்தி யதுதான் தாமதம், கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய மனம் அரசாங்க அதிகாரிகளின் பேரில் கடுங்கோபம் கொண்டது. அவராகவே ஸர். ஆர்தர் லாலி என்னும் சென்னைக் கவர்ன ரிடம் தமக்குள்ள செல்வாக்கை உபயோகப்படுத்த முயலு கையில், ஜி. சுப்பிரமணிய ஐயரின் சீடர்களில் ஒருவரும், பிற்காலத்தில் புகழ் அடைந்த 'ஹிந்து' ஆசிரியருமான ஏ. ரங்கஸ்வாமி ஐயங்கார் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் வந்து, 'சிறையிலிருந்து சுப்பிரமணிய ஐயரை மீட்க எதையாவது தாங்கள் செய்யவேண்டும்; ஏனெனில் அவருடைய தேக நிலைமை சரியாகவில்லை' என்று தெரிவித்தார். தாமாகவே இக்காரியத்தில் புக நினைத்த அவருக்கு ஒரு நல்ல கருவியாகியது அவருடைய தேக அசௌக்கியத்தின் செய்தி. ஆகையால் கவர்னரை நேரில் சந்தித்து, 'தேக ஸ்திதி சரியாக இல்லாத சமயத்தில், சுப்பிரமணிய ஐயரைச் சிறை செய்வது எவ்வளவு அசட்டுத்தனம்' என்று எடுத்துக் காட்டினார். மேலும் ஸர் ஆர்தர் லாலி சென்னைக்குக் கவர்னராக வந்து இரண்டு வருஷங்கள்கூட ஆகவில்லையே, இம் மாதிரி ஒரு பெரியாரைச் சிறை செய்வதால் கவர்னரைப் பற்றி அல்லவா மிகுந்த அபவாதம் ஏற்படலாம் என்றும் சொன்னார். நல்ல காலம், கவர்னரும் கிருஷ்ண ஸ்வாமி ஐயர் சொல்லுக்கு இணங்கி ஜி. சுப்பிரமணிய

ஐயரை வெளியேவிட அநுமதி கொடுத்தார். சென்னைப் பிரதம மாஜிஸ்டிரேட் முன்னிலையில் அரசாங்கத்தின் கக்ஷியில் பிராதுக்காக நின்ற நூஜெண்டு கிராண்டு சில நிபந்தனைகளின் பேரில் தாவாவை வாபீஸ் செய்து கொண்டார்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் சமயமறிந்து செய்த உதவி பலருக்குத் தெரியாது! காலம் சென்ற ஸி. ஒய். சிந்தாமணி அந்நாட்களில் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடமும், ஜி. சுப்பிரமணிய ஐயரிடமும் நெருங்கிப் பழகியவர். அவர் பிற்பாடு நண்பரைப்பற்றி எழுதுங்கால் ஓரிடத்தில் குறித்திருக்கின்றார்:

"ஜி. சுப்பிரமணிய ஐயருக்குக் கஷ்டம் வந்ததும் யார் அவரைக் காப்பாற்றினார்கள்? யார் எதை வேண்டுமானாலும் சொல்லட்டும், நான் நன்கு அறிவேன் நடந்ததை. பயமின்றியும் உறுதியாகவும் நம்பிச் சொல்லுவேன். வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒருவரிடமிருந்து அடைந்த உதவியைப்போல், தம் விடுதலை சம்பந்தமாக வேறு யாரிடமிருந்தும் ஜி. சுப்பிரமணிய ஐயர் அடையவே இல்லை."*

ஒருகால் ஸர் ஸி. ஒய். சிந்தாமணி அவ்விதம் தவறாக நினைத்திருக்கலாம் என்று சொல்லும் கட்சிக்கு, இன்னும் ஓர் அத்தாட்சியைக் காண்பிப்பதும் நம் கடமை அல்லவா? வாச்சா பம்பாயிலிருந்து 1908-ஆம் வருஷம் ஸெப்டம்பர் மாதம் 10-ஆம் தேதி சென்னை நண்பருக்குக் கடிதம் எழுதியதில்,

"ஜி. சுப்பிரமணிய ஐயரை அரசாங்க அதிகாரிகள் கைது செய்து நடவடிக்கையும் தயாரித்த விஷயத்தில், நீங்கள் எடுத்துக் கொண்ட சிரமம் வீண் போகாததைப் பற்றி நான் சந்தோஷிக்கின்றேன். நீங்கள் செய்திருக்கும் உபகாரம் மிகுந்த தேசாபிமானத்தினால் ஏற்பட்ட உணர்ச்சியின் வெளியீடே. சரியானபடி உங்கள் மாகாணத்தில் உள்ளவர்கள் அதைப் பாராட்டக் கடமைப் பட்டுள்ளார்கள்......எதை மறந்தாலும் பொது ஜனத்திற்காகச் சுப்பிரமணிய ஐயர் பாடுபட்டதை மறப்பது அசாத்தியம். சென்னை மாகாணத்தையே அரசியல் உலகில் மதிப்படையச் செய்தவர் அவர்தாம். அதுவும், 'ஹிந்து' பத்திரிகையின் ஆசிரியராக இருந்துகொண்டு அவர் காட்டிய

* 'லீடர்', ஜனவரி, 1912.

சக்தி மெச்சத் தக்கது. காங்கிரஸ் அங்கத்தினர்களிலும் ஒருவராக இருந்து வெகு காலமாய் அந்த ஸ்தாபனத்திற்கு உழைத்தவர். முதல் முதலில் நடந்த காங்கிரஸ் கூட்டத்திற்குப் பட்டணத்திலிருந்து சென்ற ஐந்து ஆறு பேர்களில் அவரும் ஒருவர் அல்லவா? ஜட்ஜ் மணி ஐயரைத் தவிர்த்து முதலில் சென்றவர்களில் இன்று உயிருடன் இருப்பவர் அவரேயன்றோ?.........ஆகையால் இச்சந்தர்ப்பத்தில் உங்களுடைய உத்தமமான செயல் நிச்சயம் சென்னை வாசிகளால் போற்றப்பட வேண்டியது. இந்திய நாட்டின் சிறந்த மக்களில் ஒருவராயும், சென்னை வாசிகளில் பெரியவராயும் இவ்வொரு காரியத்திலுலேயே நீங்கள் மேம்பட்டுவிட்டீர்கள்''*

என்று குறிப்பிட்டார். ஆனால் சென்னையில் அக்காலத்தில் எத்தனையோ அரசியல் பிரிவுகளும் சில்லறைத் துவேஷங்களும் குடிகொண்டிருந்ததால் எல்லோரும் இதை நம்பவில்லை. ஜி. சுப்பிரமணிய ஐயரும் தமக்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் செய்ததை அறிந்திருந்தும் உடனே வெளிக்காட்டிக்கொள்ளவில்லை. நண்பர் காலமான பிறகு தொழிற்சாலைச் சங்கத்தில் ஒரு சமயம் தாம் பிரசங்கம் செய்கையில் மட்டும் நன்றியுடன் நண்பரைக் குறித்து நன்கு பேசினார் என்று தெரியவருகிறது.

என் தந்தைக்கு இதிலெல்லாம் கவலையே கிடையாது. அவர் பின்பற்றிய தர்ம நெறியே தனி. தாம் செய்ய வேண்டியதைச் செய்துவிட்டுப் பிறர் தமக்கு ஆற்றும் உதவியையோ நன்றியையோ சிறிதும் எதிர்பாராதவர். அச்சமயங்களில் அவரை அணுகியவர்கள் அவருடைய ஆத்மா லயித்த இடம் இவ்வுலகத்தைக் கடந்து நின்ற பரம் பொருளின் தனிமையேதான் என்று உணருவார்கள்.

ஆனால் அவருடன் முழுதூரமும் செல்லப் பலருக்குக் கால்வலி எடுத்ததும் உண்மையே. அவருக்கு ஈசன் கொடுத்திருந்த வலிவும் வேகமும் அவரை நம் கண்கள் இமைமூடித் திறப்பதற்குள் எட்டாத தூரத்திலேயே கொண்டு போய்ச் சேர்த்தன. அதுவே அவர் செய்த தவறு; தன்னலத்தை நினையாமல், பிறரையும் தம்முடன் சேர்த்து இழுக்கையில், தம்முடன் சரிசமமாக வரமுடியா

---

* கடிதம், 10-9-08.

தவர்களை வழியிலேயே அவர் விடும்படி நேர்ந்தது ஒன்றே அவர் பேரிலுள்ள குற்றம். ஓரளவே எந்தத் தீரனும் மற்றவர்களைத் தன் வசப்படுத்த முடியும். சளைத்தவர்கள் கீழே விழவேண்டியதும் எதிர்பார்க்கக் கூடியது. இதே தர்மந்தான் பொதுஜன சேவையிலும் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் தெரிந்தது. சிலர் இதை அறிந்து அநுபவித்தார்கள். சிலர் அறியாமையால் விடாமல் அவரைத் தூற்றினார்கள். இரண்டு உணர்ச்சிக்கும் தம் மனத்தை இரையாக்கிக் கொள்ளவில்லை.

உறவினரும் ஊராரும் ஒருவகையில்தான் அவரிடம் அணுகினார்கள். நியாயம் என்றதும் அவர் எதிரில் யாரும் நிற்க முடிந்தது. ஏனென்றால் அவர் நியாயத்தைக் கண்டு தணிந்தவர். நியாயத்திற்காகத் தம்மை எதிர்ப்பி னும் அதைக்கண்டு சந்தோஷம் அடைபவர். நியாயத்தின் வெற்றி தம்முடைய வெற்றியைக் காட்டிலும் மேல் என்ற நம்பிக்கை ஒன்றே பிறர் எதிர்பாராதபடி சட்டென்று தம் மனத்தை மாற்றிக் கொண்டு பிறருக்கு வழிவிட அவரைத் தூண்டியது. இதன் இரகசியங்கள் புரியாத மாந்தர்கள் அவருடைய வெளித் தோற்றங்களான வேகத்தையும், தூக்கி எறியும் ஆற்றலையும், படபடப் பையும் கண்டு வெருண்டோடினார்கள்; வரட்டு வாதங் களினாலும் அவருடைய பெருமையைக் குறைத்தார்கள்.

## அத்தியாயம் 19

### சமய உணர்ச்சியும் தர்ம ரக்ஷணையும்

"அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல" —குறள்

இந்து மதத்தில் சிரத்தையும் ஊக்கமும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைவுபடும் காலம் இந்நாட்டில் ஏற்படத் தொடங்கியதற்கு எத்தனையோ பல காரணங்கள் இருந்தும், முக்கியமானது கிறிஸ்துவ மதப் பிரசாரகர்களின் மிதமிஞ்சிய ஆர்வம் என்றால் தவறில்லை. அதனுடன் மேல் நாட்டு நாகரிகம் நம்மவரின் மனப்பாங்கை முழுவதுமே மாற்றும் இயல்புடையது. மிகுந்த செல்வத்தின் உதவியினால் பற்பல விதமான சிற்றின்ப சுகங்களில் உழலும் மேற்குத் தேசங்களைக் கண்டு சதா மோகிப்பதால் நம்மிடமும் இக போக பதார்த்தங்களில் ஆசையும், சமய உணர்ச்சியில் பற்றற்ற தன்மையும் வளரத் தொடங்கி விட்டன.

இன்றைய நிலைமையை விட ஐம்பது வருஷங்களுக்கு முன் இருந்த மாறுதல்களின் வேகம் சற்றுக் குறைவுதான். அப்பொழுது ஆங்கிலம் கற்றவர்களின் நோக்கமெல்லாம் சொந்த நாட்டின் உயர்வில் மிகவும் உதாசீனத்தைக் காட்டியது என்றே சொல்லலாம். சுவாமி விவேகாநந்தரைப்போல் ஆங்கில பாஷையைத் திறமையுடன் கையாண்ட லோகோபகாரிகளே மேல்நாட்டு வெள்ளம் முற்றும் நம்மை அடித்துக்கொண்டு போகாதவிதம் அணையிட்டுக் காப்பாற்றினார்கள். நம்முடைய மதப்பற்றுக் குறையவே நம் நாட்டிலுள்ள கோவில்களும் மற்றத் தர்ம ஸ்தாபனங்களும் சீர்குலையத் தொடங்கின. நிர்வாகம் செய்தவர்கள் தர்ம காரியத்தைச் சரிவரக் கவனியாமல், பொருளையெல்லாம் தங்கள் வசமாக்க எங்கும் முயன்றார்கள். இம்மாதிரிச் செயல்கள் சிற்சில

இடங்களில் கோர்ட்டு நடவடிக்கைகளில் வந்து முடிந்தன. மேற்செலவும் தீராத சண்டையும் வளர்ந்தனவே யன்றிக் கடவுள் வழிபாடு செழிக்கவில்லை.

கோவில்களையும் மற்றத் தர்மசொத்துக்களையும் அரசாங்கம் ஒழுங்காகப் பரிபாலிக்க வேண்டிய ஏற்பாடு களை ஒரு சட்ட மூலம் 1863-ஆம் வருஷமே செய்திருந்த போதிலும், எத்தனையோ விதத்தில் சட்டத்தை எளிதில் மீறிச் செல்லும் முயற்சியிலும் பலர் ஈடுபட்டார்கள். வக்கீல் தொழில் செய்தமையால் தேவாலயங்களில் தேவஸ்தானங்களின் ஊழல்களைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் நன்கு அறிவார். நீதிபதி பதவியில் பல ஊர்களில் முனிசீபாக இருந்த அவருடைய தமையனாரும் தேவாலயங்களின் மேற்பார்வை வரவர க்ஷீணிப்பதையும், மற்றும், மடம், தர்மசத்திரங்கள் முதலியவைகள் தர்மம் செய்தவர்களின் நோக்கங்களைக்கூடப் புறக்கணிக்கும் வழியில் இறங்கியிருப்பதையும் பல தடவைகளில் கவனித்து, அவைகளுக்கு வேண்டிய விதங்களில் தம்முடைய தீர்ப்புக்களில் பாதுகாப்பையும் அளித்து வந்தார். ஆனால், இளைய சகோதரருக்கு முதலிலிருந்தே ஓர் எண்ணம் மனத்தினுள் போராடியது உண்டு. அதாவது, கோவில்களிலும் மற்றத் தர்ம ஸ்தாபனங்களான மடங்களிலும் உள்ள அதிக வருமானத்தை உயர்தரக் கல்வி விஷயங்களுக்கு ஏன் திருப்பக் கூடாது? ஆனால் இம்மாதிரி நோக்கங்களைக் கேட்டதுமே இந்து மதத்திற்கு ஆபத்து வந்துவிட்டது என்று எண்ணிக் கூக்குரலைச் சிற்சில ஆஸ்திக சிரோமணிகள் கிளப்புவார்கள். இது மத பேதத்தையும் சமயச் சண்டையையும் கிளப்பக்கூடிய காரியம் எனக் கருதி இம்மாதிரிச் சீர்திருத்தங்களில் அரசாங்கம் தலையிட்டுக் கொள்வதில்லை. ஆகையால் மேலதிகாரிகளின் கவனிப்புக் கொஞ்சமும் இல்லாததால், அநேக இடங்களில் தென் இந்தியாவில் பழைய ஆலயங்களில் பழுது பார்க்கக்கூட வகை இல்லாமல் பொருள் நெருக்கடி ஏற்பட்டுவிட்டது.

என் தந்தையும் அவருடைய தமையனாரும் அடிக்கடி இவைகளுக்கு என்ன பரிகாரம் செய்வதென்று யோசனை

செய்து பார்த்தார்கள். தங்களுக்குத் தலைவரான ஜட்ஜ் மணி ஐயரிடமே இவைகளைப்பற்றிக் கலந்து யோசித்தார்கள். "சரி, இதற்கு வழி செய்யவேண்டும்" என்று மனத்தினுள் தீர்மானம் செய்து கொண்டதும், அக்காலத்தில் செல்வாக்கில் மற்ற ஆதீனங்களுக்குத் குறைவில்லாத சிருங்கேரி மடத்திற்குத் தம் பொறுப்பில் சில விவரங்களைக் குறித்து விண்ணப்பம் செய்திருந்தார். முக்கியமாக இந்துமதக் கொள்கைகளை நாட்டில் பரவச் செய்ய வேண்டுமென்றும், வரவரக் குறைந்துவரும் சமயப் பற்றிற்கு ஏதாவது உபயோகமான காரியமொன்றைச் செய்து நாட்டில் மறுபடியும் இந்து தர்மங்களில் இருதயத்தைச் செலுத்த மார்க்கங்களைக் காட்டவேண்டு மென்றும் எழுதினார். ஆதீனத்தில் அக்காலத்தில் மிகவும் கியாதியுடன் விளங்கிய ஸ்ரீ நரஸிம்ஹபாரதி ஸ்வாமிகள் உடனே தயக்கமில்லாமல் சென்னையிலுள்ள பிரமுகரின் ஆர்வத்தைப் பாராட்டித் தங்கள் மடத்தின் ஒத்துழைப் பையும் குறித்து ஸ்ரீமுகம் ஒன்று அனுப்பினார். மடத்தின் காரியஸ்தர் தெரிவித்ததாவது :

"தாங்களும் தங்கள் தமையனாரான ஸ்ரீ சுவாமிநாத ஐயரும் காட்டும் சமய உணர்ச்சியும் இந்து மதப் பற்றும் போற்றத்தக்கவை என ஸ்ரீ ஜகத்குரு மகிழ்கிறார். மேலும் சிக்மகளூர் ஸ்ரீ சுப்பிரமணிய ஐயர் சொல்லிய விஷயத்தில் நீங்கள் வெளிப்படுத்திய சிரத்தையைப் போற்றி அவசியம் இங்கு நடைபெறும் இது சம்பந்தமான சபையின் ஆரம்ப விழாவுக்கு உங்களையும் வரும்படி கூறுகிறார். இச்சபைக்காக ஜட்ஜ் மணி ஐயருக்கும் எங்களிடமிருந்து தகவல் சென்றிருக்கிறது. நீங்களும் ஜட்ஜை நேரில் கண்டு ஆலோசித்துச் செய்ய வேண்டியவைகளைச் செய்து இதனைப் பூர்த்திபெறச் செய்ய வேண்டும்."*

மணி ஐயர் அவர்களும் தாமதமில்லாமல்,

"இதனுடன் சிருங்கேரி மடத்தின் யோசனை விவரங்களையும் அனுப்புகிறேன். நீங்களும் நம்மில் வேறு சிலரும் கூடி. இதைப் பற்றிப் பேசித் தீர்மானிக்க ஒரு சிறு கூட்டத்தை மயிலாப்பூர் இளப்பில் ஏற்பாடு செய்யுங்கள்"†

---

* சிருங்கேரிக் கடிதம், 16-1-03.

† கடிதம், 31-1-03.

என்று தம் சிஷ்யரிடம் தெரிவித்தார். சிஷ்யர்தாம், ஆறப் பொறுக்காத சுபாவமுடையவராயிற்றே! அன்றே அவரிட மிருந்து ஆஸ்திக சிரத்தையுடன் கூடிய சில முக்கிய நண்பர் களுக்குக் கடிதங்கள் சென்றன. மணி ஐயர், ஏ. சீதாராம ஐயர், பி. ஆர். சுந்தரம் ஐயர், ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயர், எம். ஆர். ராமகிருஷ்ண ஐயர், டி. ஆர். ராம சந்திர ஐயர், சிவஸ்வாமி ஐயர் இவர்களே அன்று தகவல் பெற்றுக் கூடியவர்கள்.

"மணி ஐயரவர்களின் கோரிக்கையின் பேரில் இன்று நான்கு மணிக்கு மயிலாப்பூர் கிளப்பில் நீங்கள் கூடவேண்டும் என்று தெரிவிக்கிறேன். நாட்டில் இந்துமத தர்மத்தையும் ஒழுக்க நெறியையும் போதிக்கத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்ய ஒரு சபையைத் தயாரிக்கவே கூடுகிறது இந்தச் சிறு கூட்டம்"* என்பதே தகவல் கொடுத்த கடிதத்தின் சாராம்சம். பிறகு அக்கூட்டம் "இந்து மத சபை" என்று ஒன்றை ஆரம்பித்த செய்தியும் தெரிகிறது.

அக்காலத்தில் வடமொழியிலும் இந்து தர்மக் கொள்கைகளிலும் ஊறிய ஒருவர் சென்னை ராஜதானிக் கலாசாலை உபாத்தியாயர்கள் கோஷ்டியில் இருந்தார். அவர்தாம் மளூர் ரங்காசாரியார். டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள், ரங்காசாரியாரின் அருமையை மிகவும் கொண்டாடியவர்களில் ஒருவர். கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அவரைப் போலவே ரங்காசாரியாரின் அறிவொழுக்கங்களில் பிரமை பிடித்தவர். மேலும் ரங்காசாரியாரின் வாக்கு வன்மையிலும் மதிமயங் கியவர். பிரசங்கப் பித்தரும் கவர்னருமாயிருந்த ஸர் ஆர்தர் லாலியிடம் ஒரு சமயம், "சென்னையில் உயர்தர மாய்ப் பேசக் கூடியவர்களில் ஒருவரான மளூர் ரங்கா சாரியாரை நீங்கள் அறியாதது ஒரு பெருங் குறைதான் உங்களுக்கு" என்றாராம் கிருஷ்ணஸ்வாமி ஐயர். கவர்னர், "எனக்கு அவரை அறிமுகப் படுத்துங்கள்" என்றார். அவ்விதமே கவர்னர் மாளிகையில் நடந்த ஒரு விருந்தில் அறிமுகம் செய்து வைத்ததல்லாமல், அவர் விஜயம் செய்து

---

* 31-1-03.

உட்கார்ந்திருந்த ஒரு பெருங் கூட்டத்தில், ரங்காசாரியாரின் அரிய சொற்பொழிவை அவர் கேட்கும்படியான ஏற்பாட்டையும் உடனே செய்ததாகத் தெரிகிறது.

அவ்வித உயர்தரச் சிநேகிதரை இந்துமத சபையில் சேர்க்காமல் இருக்க அவருக்கு இருப்புக் கொள்ளுமா? புதிய சபையைப்பற்றி அவருக்குத் தெரிவிக்கவே, அவர்,

> "நீங்கள் மணி ஐயரையே இச்சபைக்குத் தலைமை வகிக்கக் கேட்கப் போவதாக ஸ்ரீ நடேசன் சொல்லுகிறார். செய்து விடுங்கள் இதை. சீக்கிரத்தில் மற்ற நிர்வாக சபை அங்கத்தினர்கள் பெயர்களையும் வெளிப்படுத்துவோம். வேலையும் சரியாகச் செய்தாகவேண்டும்"*

என்று எழுதினார்; கடிதத்தில் காணப்படும் மன ஊக்கம் காரியத்திலும் வெளிப்பட்டதென அறிகின்றோம். சென்னை விக்டோரியா ஹாலில் நடைபெற்ற இச்சபைக் கூட்டத்திற்குத் தலைவர் ஸ்தானத்தில் பிரசங்கத்தை அழகுறச் செய்தவர் ரங்காசாரியாரே.

சிறிது காலத்திற்கெல்லாம் "தர்ம ரக்ஷண சபை" என்று ஒன்றைப் பலப்படுத்தி ஏற்படுத்தினார்கள், மணி ஐயரும் அவருடைய நண்பர்களும். அது சில வருஷங்களுக்கெல்லாம் பூர்ண ஆதரவு இல்லாமல் அழிவடைந்தது. ஆனால், கிருஷ்ணஸ்வாமி ஐயர் இருக்கும் வரையில் பல தொண்டுகள் ஆற்றியது என்றே சொல்லவேண்டும்.

'தர்ம ரக்ஷண சபை' முக்கியமாக ஆலயங்களிலுள்ள பூஜைக் கட்டளைகளைப் பற்றியும், சத்திரங்கள், மடங்கள் இவைகளின் மேற்பார்வையின் பொருட்டும் பாதுகாப்புக்காக உண்டாகியது. அதில் முக்கியமாகச் செய்வதாக உத்தேசித்தவை, பல நற்காரியங்களைப் பொதுஜனங்கள் மேற் கொள்ளுவதும், அங்கங்கே நிதிகளைச் சேமித்துக் கட்டுப்பாடுகளுடன் புதிய முறையில் தர்மங்களுக்காகப் பாதுகாப்புக்களைச் செய்து காட்ட வேண்டும் என்பதுமே. தமிழ்ப் பிரசங்கம் ஒன்றை இது சம்பந்தமாக மதுரையில் தம் தமையனார் அக்கிராசனம் வகித்தபோது கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு

* கடிதம், 23-1-04.

பொதுக்கூட்டத்தில் செய்ததாகத் தெரிகிறது. அவரை அநுசரித்து அவருடைய நண்பரான பி. ஆர். சுந்தரம் ஐயரும் பேசினார். கிருஷ்ணஸ்வாமி ஐயரின் வேகம் அவரை அணுகியவரையும் இழுத்துச் சென்றது. தர்ம ரக்ஷண சபை ஐந்து ஆறு வருஷங்களுக்கு மேலேயே நன்கு உழைத்தது. அதன் தலைவர்களில் முக்கியமாக இருந்தவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்றும் பழைய விவரங்களின் அச்சுப் பதிப்புகள் வெளியிடுகின்றன.

முக்கியமாக ஒரு காரியத்தை அவர் கோவில்களில் அமலுக்குக் கொண்டு வரப் பிரயத்தனம் செய்து பார்த்தார். பூஜைக் காலங்களில் எங்கும் கோவில்களில் இரைச்சலும் கலவரமும் இருப்பதை அவர் வெறுத்தவர். ஜனங்கள் மனத்தைச் சற்றும் கடவுள்பால் அமைதியாகச் செலுத்த முடியாமல் பல தடைகள் வழிபாடு செய்யுங் காலங்களில் ஏற்படுகின்றன. அவைகளை விலக்கிச் சிறிது நாழிகையேனும் கடவுளைப் பற்றிய ஸ்தோத்திரங்களில் மனம் ஈடுபடுவது என்பது உயர்ந்த நோக்கமே. நம் கோவில்களில் வேத கோஷங்களும் தேவார பாராயணங் களும் இவைகளுக்காகவே முன்காலத்தில் ஏற்பட்டவை. ஒருவரும் பூஜைக் காலங்களில் மந்திரங்களில் கவனத்தைச் செலுத்துவதில்லை. ஆகையால் உயர்ந்த கருத்துக்களை ஊட்டும் உபநிஷத்துக்களிலிருந்து உயர்ந்த வாக்கியங் களைப் பொறுக்கிச் சிறிய புஸ்தகமாக வெளியிட்டிருந்த 'கடவுள் துதி'* என்னும் புஸ்தகத்திலிருந்து தோத்திரங் களைக் கோவில்கள்தோறும் பூஜா காலங்களில் சிராவிய மாய்க் கோஷ்டியாகச் சேர்ந்து ஏன் சொல்லக்கூடாது என்று ஓர் எண்ணம் அவரிடம் பிறந்தது. உடனே தம் கையெழுத்திட்ட கடிதம் ஒன்றை அச்சிட்டு ஊரிலுள்ள தேவஸ்தானங்களுக்கெல்லாம் அனுப்பினார். பின்வருமாறு அக்கடிதம் முறையிட்டது:

"ஐயா, ஆலயங்களில் பூஜா காலங்களில் சொல்லக் கூடிய தோத்திரங்கள் கொண்ட, 'கடவுள் துதி' என்ற புஸ்த கத்தின் பிரதியை உங்களுக்கு இதனுடன் அனுப்புகிறேன்.

---

* 'Aryan Prayer Book'

உங்கள் தேவஸ்தான நிர்வாகஸ்தர்கள் இதைப்பற்றிக் கலந்து யோசிக்கட்டும். தர்ம கர்த்தாக்களும் இதைக் கவனித்து விட்டுத் தங்கள் அபிப்பிராயங்களை என்னிடம் தெரிவிக்க. நம் கோவில்களில் நடத்தப்படும் வழிபாடுகள் இன்னும் கவர்ச்சியாகவும் சப்தக் குறைவாகவும் இருப்பது நலம். கோவில்களில் வாத்தியங்கள் இன்னிசையைக் கிளப்பாமல் மனத்தின் அமைதியையே கெடுக்கின்றன. பலவித மதங்களின் போராட்டத்தின் நடுவில் இருக்கின்றனர் நம் நாட்டுச் சிறுவர்கள். கோவிலுக்குச் சென்று கடவுள் வணக்கத்தில் மனத்தை ஈடு படுத்தவும் பூஜை நடத்தும் கிரமங்களை முதலில் அமைதியுடன் செய்யவும் உண்மையான ஈசுவர பக்தியுள்ளவர்கள் பாடுபட வேண்டும்.''*

இக் கடிதம் ஒன்று பல இடங்களுக்குச் சென்றது. ஆயினும் அவருடைய பிரயாசை எம்மட்டும் வெற்றி பெற்றது என்பதில் நமக்குச் சந்தேகமில்லை. இன்றும் சிற்சில இடங்களைத் தவிர, பல பெரிய தேவாலயங் களில் பூஜை நடக்கும் காலங்களில் ஒருவித அமைதி யையும் நாம் காணமுடியாது. எல்லாம் புராதன மான காரியங்களேதான். டமாரங்களிலிருந்தும், தாரை தம்பட்ட வாத்தியங்களிலிருந்தும், இன்னும் எக்காளம் முதலிய பல வளைவுகள் கொண்ட நீண்ட குழாய்களி லிருந்தும் கிளம்பும் சப்தமேதான் எங்கும் கேட்கும். 'ஹரா ஹரா' என்று கன்னத்தில் போட்டுக்கொண்டு தீப ஹாரதிகள் நடக்கும் வேளைகளில் ஜனங்கள் கூக்குரலிடு கிறார்கள். ஆனால் அவைகளிலும் ஒருவித உணர்ச்சி இருக்கத்தான் செய்கிறது. கோவில்களில் பூஜை செய்யும் விதங்களையோ, மற்ற மாறுதல்களையோ ஏற்றுக்கொண்டு செய்வதென்பது பலர் சேர்ந்து அமலுக்குக் கொண்டு வந்தாலொழிய, வேறு எவ்விதமான ஏற்பாட்டினாலும் நடை பெறுவது கஷ்டம். மேலே குறித்த சீர்திருத்த முயற்சி பலியாததற்கு அதுவே காரணம்.

ஆயினும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கோயிலுக்குச் செல்வதிலும், மற்றப்படி அங்கே உள்ள ஸ்தல புராணங் களைக் கேட்டறிவதிலும், ஆலயங்களை நிர்வகிப்பவர்களின்

---

* அச்சிட்ட கடிதம், 21-8-1903.

சிரத்தையைப் பற்றி வினவுவதிலும் சலிப்படைந்ததே இல்லை. அவருக்குக் கடவுள் ஆயுட் காலத்தை நீடித்து வைத்திருந்தால், தம் விருப்பங்களில் சிலவற்றையாவது பூர்த்தி செய்துகொண்டிருப்பார்.

இவைகளைத் தவிர, நம் நாட்டு மடங்களில் அவருக்குச் சிரத்தை இவ்வளவு அவ்வளவு என்பதில்லை. மத சம்பந்தமான சாஸ்திரப் பயிற்சியில் ஊக்கமுள்ளவர்களைச் சும்மாவிடாமல் எதையாவது செய்வதற்கும் தூண்டுவார். கும்பகோணத்தில் காமகோடி மடத்தின் ஆதரவைப் பெற்ற அத்வைதமதப் பிரசார சபையொன்று வெகு காலமாக நடைபெற்று வருகிறது. அதற்குச் சிற்சில காலங்களில் பொதுமக்கள் ஆதரவு அதிகமாயும், சிற்சில காலங்களில் குறைவாயும் ஏற்படுவது வழக்கம். இப்பொழுது கொஞ்ச காலமாக ஒரு சீராக நடைபெற்று வருகிறது. ஆனால், 1907-1908-ஆம் வருஷங்களில் அதன் வரலாறு மிகவும் வருந்தத்தக்க விதம் ஊழலாயிருந்தது. எப்பொழுதும் ஊரிலுள்ள பிரமுகர்கள் சேர்ந்து ஆஸ்திக புத்தியுடன் அதை நடத்துவது வழக்கம். கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு சமயம் கும்பகோணத்திற்குச் சென்றபொழுது, அக்காலங்களில் புகழுடன் விளங்கிய பிரம்மஸ்ரீ கணபதி சாஸ்திரிகள் முதலியவர்கள் அவரைப் பண்டிதர்களுக்குச் சில வார்த்தைகள் சொல்லுமாறு கேட்கவே, அவர் அச்சந்தர்ப்பத்தை நழுவ விடாமல், அத்வைத சபை போன்ற சாஸ்திரப் பயிற்சி செய்யும் இடங்களில் நடத்தப்பட வேண்டிய மதப்பிரசாரங்களும், சமய உணர்ச்சியை நிலைநாட்டும் ஊழியங்களும் இன்னவை என்று வெகு விமரிசையாகப் பேசினர்.

"அத்வைத சபையின் காரியங்களை நீங்கள் புகழ்ந்து கூறியதும், பண்டிதர்களுக்கு உள்ளத்தில் ஊடுருவிப் பாயும் விதம் கூறிய உங்கள் மொழிகளும் கேட்டவர்களின் உள்ளத்தில் எந்நாளும் இருக்கும்"*

என்றார் புரொபஸர் கே. சுந்தரராம ஐயர். உபாத்தியாயர்களில் இந்திய நாட்டிற்கே அணிகலம் போன்றவர்

---

* கடிதம், 6-9-08.

சுந்தரராம ஐயர். மனத்தில் பட்டதை மறைக்காதவர். ஒழுக்கத்திலும் போதனையிலும் சிறந்த ஆசாரியர். அவர் இன்னும் கடிதத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயரை என்ன வெல்லாம் சொல்லிப் பாராட்டினரென்று பார்ப்போம் :

"உங்களைப் போலவே மற்றச் சில துறைகளில் மேம்பட்ட சிலர் உலகில் இருக்கலாம். ஆயினும், என் இருதயத்தின் அடியிலிருந்து சொல்வதாயின், ஒன்றுதான் என்றல் சொல்ல முடியும். எல்லாப் பொருத்தங்களுடன் கூடிய ஒருவரைத் தெய்வத் தன்மை பெற்றவராகக் கருத வேண்டுமாயின் அவ் விதம் இருக்கிறவர் தாங்களே. காலம், இடம், ஏவல் இவை களுக்குத் தகுந்த விதங்களில் வேண்டுவதை நினைத்துப் பாடு படக்கூடிய மனம் தங்களுடையது. நிரந்தரமாயும் உபயோக மாயும் இருக்கக் கூடியவைகளில் பற்றுள்ள இருதயம் தங்களுடை யதுதான். சமீபத்திலும் தூரத்திலும் நாடியவர்களுக்கு வேண்டி யதைத் தரும் தாராளக் கை தங்களதுதான்......அத்வைத சபைக் காரிய நிர்வாகத்தின் பொருட்டும் சில திட்டங்களை வரைந்து வைத்திருக்கிறேன். தங்களிடம் காட்டியதற்குப் பிறகு மேல் நடக்கவேண்டிய சீர்திருத்தங்களைச் செய்யவேண்டும் என்று நினைக்கிறேன்."*

நேருக்கு நேராகக் கடிதத்தில் இவ்வளவு தம்மை அதிகம் புகழ்ந்ததை நண்பர் ஆமோதிக்கவில்லை. அவ்வார்த்தைகளை அங்கீகரிப்பது அவருடைய சான்றாண் மைக்கு முற்றும் விரோதங்கூட. ஆகையால் அவர், "நீங்கள் எவ்வளவு படித்த அறிவாளி! என்னைக் கடவுள் தன்மை பெற்றவனாக எண்ணியதுமல்லாமல், வாய் கூசாமல் அதைத் தாங்கள் சொல்வதை என்னால் ஏற்க முடியவில்லையே! மன்னியுங்கள், மறைவில்லாமல் நான் சொல்லும் இம்மொழியை" என்று சொல்லி விட்டார். சுந்தரராம ஐயரின் இருதயம் உணர்ச்சி கொண்டது. மனத்தில் தோன்றிய எண்ணங்களை வாய்விட்டுச் சொல்வது அவருடைய பழக்கம். கிருஷ்ண ஸ்வாமி ஐயருடைய சுபாவமும் அத்தகையதுதான். ஆனால் கட்டில்லாத வேகமான சுபாவத்திலும் கட்டுப் பாடுகள் சில அவரிடம் உண்டு என்றே கூறவேண்டும். தம்மைப் பற்றிய மட்டில் பெருமை அடித்துக்கொள்வதும்

* கடிதம், 6-9-08.

இல்லை; பிறர் தம்மைப் போற்றுவதைக்கண்டு நின்று அளவளாவும் குணமும் அவரிடம் குறைவுதான்:

"நீங்கள் கடிதத்தில் கூறுவதை எதிர் பார்க்கவேண்டியது என்று எனக்குத் தெரியும். இனி அவைகளை மறுபடியும் நான் எழுதுவதில்லை என்று என்னால் உறுதி சொல்லமுடியும்"*

என்றார். "ஆம்; அதிலும் சில சமாசாரங்களை, முக்கியமாக இம்மாதிரி வார்த்தைகளை, ஒருதடவைகூடச் சொல்லக் கூடாதுதான்; இதை நான் அறிவேன்" என்று கன்னத்திலும் போட்டுக்கொள்கிறார். அவருடைய உள்ளத்தின் மாசற்ற தன்மை வெளியாவதற்கு இதுவும் ஒரு சந்தர்ப்ப மன்றோ!

அத்வைத சபையின் நிர்வாக சபையினின்றும், சில காரணங்களால் கே. சுந்தரராம ஐயர் விலகவும், நண்பர் அவரை மறுபடியும் அதைக் கவனிக்கத் தூண்டினார். அவர் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் காட்டிய கௌரவத்தினால் மறுப்டியும் அதில் சேர்ந்து வெகுகாலம் நற்காரியத்தை நடத்தி வந்தார். தம் ஆயுட்காலம் முடியுமட்டும் அதைக் கவனித்து வந்தார் என்றே கூறவேண்டும்.

காமகோடி பீடாதிபதிகள் 1909-ஆம் ஆண்டில் சிறு வயசுள்ளவராக இருந்ததால் ஆதீனத்தின் லௌகிக சம்பந்தமான காரியங்களை மேற்பார்வையிட வேறு சிலரை நியமித்திருந்தார்கள். அவர்கள் மடத்துச் சொத்துக்களை நன்கு கவனித்துப் பரிபாலிக்காததால் ஊரிலுள்ள முக்கியமான பெரியவர்களுக்குக் கவலை அதிகம் ஏற்பட்டது. அவர்கள் அரசாங்க அதிகாரிகளின் ஆதரவில் மடத்துச் சொத்துக்களைக் கொண்டு வரவும், 'மைன'ரான பீடாதிபதிகளுக்கு ஆதரவைக் கொடுக்கவும் சட்டரீதியாய் எதையாவது செய்து பார்க்கலாம் என்று எண்ணி அரசாங்கத்திற்கு மனுப் போட்டார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரிடமும் இதைப் பற்றித் தெரிவித்தார்கள். அவர் கும்பகோணம் ஆசாரிய சுவாமிகளைப் பாடசாலையில் பயிற்சி செய்யும் காலத்தில் ஒரு தடவை தரிசித்தது உண்டு. 'இளமை மாறாதவராயிற்றே, அவர்! வயசு வந்து காரியங்களைக் கவனிக்கும்

* கடிதம், 8-9-09.

பொழுது, மடத்துச் சொத்துக்கள் அதுவரையிலும் சரியாகப் பார்வையிடாத தோஷத்தால் விரயமாய்ப் போய் விட்டால் என்ன செய்வது' என்று உணர்ந்து கவர்னரிடம் தம் செல்வாக்கை உபயோகித்தார். கவர்னருடைய காரிய தரிசியான மிஸ்டர் காம்பெலுக்கு ஒரு கடிதம் உடனே பறந்தது :

"கும்பகோணம் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் இளமைப் பருவத்தினால் அவருடைய காரியங்களை நிர்வகிக்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. இதைக் கவர்னர் அவர்கள் கவனிக்கவேண்டும் என்பது என் விண்ணப்பம். அவர் ஒரு பிராம்மண சந்நியாசி. அவர் தலைமை வகிக்கும் மடத்திற்கு ஏராளமான சொத்துச் சுதந்தரங்கள் இருக்கின்றன. இன்னும் பிரிட்டிஷ் அரசாங்கத்தினின்றும் மற்றச் சிற்றரசர்களிட மிருந்தும் அவருடைய பீடத்திற்கு வருஷாந்தர வரவுகள் உண்டு. பெரும் கூட்டத்திற்கு அவர்தாம் சமயாசாரியார். ஒவ்வொரு பீடாதிபதியும் தம் வாரிசை நியமித்து விட்டுத்தான் செல்லுவது வழக்கம். கல்யாணமாகாதவராய் அவர் இருப்பார். வயசிலும் சட்டரீதியான கணக்குக்கு வந்திராதவராயும் இருப்பார். நியமித்தவர் உடனே இறந்தால், வயசு ஆகாவிட்டாலும் நியமிக்கப்பட்டவர் பட்டத்துக்கு வரவேண்டியது அவசியம். இப்பொழுது பீடத்தை அலங்கரிப்பவர் இம்மாதிரியே வயசாகாத காலத்தில் நியமிக்கப்பட்டு மடத்தின் தலைமைக்கும் சிறியவராயிருக்கும் பொழுதே இப்பொழுது வந்துவிட்டார். சரியான ஏற்பாட்டின் கீழ் மடத்துச் சொத்துக்கள் பரி பாலிக்கப்படவில்லை. சுய காரியத்தில் கெட்டிக்காரரான ஒரு காரியஸ்தர் எல்லாவற்றையும் பார்வையிட்டுக்கொண்டு தம் இஷ்டம்போல் நடத்தி வருகிறார். அதை உடனே நிறுத்த வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. 1902-ஆம் ஆண்டு அமலுக்கு வந்த சட்டத்தின் கீழ், பகுதி 2-ஆவதின் அடியில் மடத்துச் சொத்துக்களைப் பரிபாலிக்க அதிகாரம் அரசாங்கத்திற்கு உண்டு. இதற்கு இடையூறு ஏதாவது உண்டானால், தஞ்சாவூர்க் கலெக்டருக்கு அதைப்போலவே கார்டியன் சட்டத்தின் கீழ் அதிகாரம் உண்டு. அதையாவது உபயோகித்துப் பார்க்கலாம். பெரும்பாலோர்களுக்கு எவ்விதத்திலும் ஒழுங்காகவும் சீராகவும் மடத்துச் சொத்துக்கள் பரிபாலிக்கவேண்டியதில் கவலை இருக்கிறது. வயசாகாத பீடாதிபதியின் படிப்புக்கும் மற்றக் காரியங்களுக்கும் வேண்டிய பாதுகாப்பும் அவசியம். ஏற்கெனவே ஒரு பொதுஜன மனு அரசாங்கத்திற்கு இது சம்பந்தமாய்ச் சென்றிருப்பதாகத் தெரிகிறது. அவசியம் கவர்னருடைய கவனம்

இவ்விஷயத்தில் கொஞ்சமும் தடைப்படாமல் செல்லவேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்"*

என்று ஒன்றையும் விடாமல் மடத்தின் வரலாற்றை மனத்தில் பதிய வைக்கும் அளவில் அதிகாரிகளுக்குக் கடிதம் சென்றது. பிறகு நடந்த விவரங்கள் மடத்து வரலாறுகளில் உள்ளவை. மைனர்களின் சம்ரக்ஷணைக்கான சட்டத்தின் பார்வையில் சுவாமிகள் இருபத்தொரு வயசாகும் வரையில் இருந்தார் எனத் தெரிகின்றது.

பொதுவாகப் பள்ளிகளிலும், கலாசாலைகளிலும் மதப்பற்றையும் சமய உணர்ச்சியையும் சிறுவர்கள் நழுவ விடாமல் இருப்பதற்கென்று எத்தனையோ விதங்களில் யோசனைகளைக் கூறிப் பாடுபட்டவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். அவர் எந்தப் பள்ளிக்கூடத்தில் பரிசுகள் வழங்கும் கொண்டாட்டத்திற்குத் தலைமை வகித்தாலும் ஒழுக்கத்திற்கும் மதப்பற்றுக்கும் பரிசு உண்டா என்று விசாரிப்பது வழக்கம். அம்மாதிரிப் பரிசை அதிகாரிகள் வைக்காவிட்டால் தாங்களாக அதை வைக்கும்படி அதிகாரிகளிடம் விஞ்ஞாபனம் செய்து கொள்வார். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியின் பொருட்டுப் பொருளுதவிக்காக ஓர் அறிக்கையை விடும்பொழுதுகூடச் சமய உணர்ச்சிக்கென சில ஏற்பாடுகளைத் திட்டம் செய்யும்படி அவர்களைக் கேட்டுக்கொண்டார். எத்தனையோ மதபேதங்கள் கொண்ட நாட்டில் எவ்விதம் ஒரு கணக்காக மதாசார போதனைகளைச் செய்ய முடியும் என்று சிலர் சந்தேகித்தார்கள். எல்லாச் சமயங்களும் ஒப்புக்கொள்ளக் கூடிய சில கொள்கைகளையும் அடிப்படையான உண்மைகளையுமாவது புகட்டலாம் என்பது அவருடைய நோக்கம். அன்றியும் பச்சையப்பன் கல்லூரியில் இந்துமதக் கொள்கைகளைப் பரவச் செய்தல் மிகவும் இன்றியமையாதது என்பது அவர் துணிபு. பல தருணங்களில் வாய்விட்டுப் பிரசங்கங்களில் இவ்விஷயத்தைச் சொல்லியும் இருக்கிறார்.

சிறு பையன்களுக்கும் பெண்களுக்கும் உபயோகப் படக்கூடிய இரு பாகங்கள் கொண்ட புராணக் கதைக்

* கடிதம் 7-5-09.

கோவை ஒன்றை, ஸ்ரீ பாபு பகவன் தாஸ் என்னும் காசிப் பிரமுகர் ஒருவரும், அன்னிபெஸண்டும் எழுதிப் பிரசுரித்திருந்தார்கள். "தாய் நாட்டுக் குழந்தைகள்" எனப் புஸ்தகத்திற்குப் பெயரிட்டு, அதன் முதல் பாகத்தை "நம் நாட்டின் புத்திர சிகாமணிகள்" என்றும், இரண்டாவதை, "நம் நாட்டு ஸ்திரீரத்னங்கள்" என்றும் தலைப்பிட்டு இருபாகங்களாகப் பிரித்திருந்தார்கள். முதல் பாகத்தைப் பாபு பகவன் தாஸும், இரண்டாவதை பெஸண்டம்மையும் ஆங்கிலத்தில் எழுதினார்கள். அழகும் அலங்காரமும் கொண்ட சொற்களில் இந்திய நாட்டில் பிறந்தவர்களின் பெருமைக்குச் சற்றும் குறையாத உணர்ச்சியுடன் பெஸண்டு அம்மையார் எழுதியிருந் தார். கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவைகளில் அநேகம் பிரதிகளை வாங்கித் தம்முடைய கொடையாகப் பல பள்ளிகளுக்கும் புஸ்தகசாலைகளுக்கும் வழங்கினார்.

நம் நாடு ஆதி சமயத்தையும் தொன்று தொட்டு வந்த பண்பாட்டையும் கை நழுவ விடுவதில் அவருக்குக் கொஞ்சமேனும் விருப்பமில்லை. அவர் மனம் எத்தனையோ புதிய புதிய நோக்கங்களில் சென்றது என்பது என்னவோ உண்மை. நாட்டில் கைத்தொழில் அபிவிருத்தியும், விஞ்ஞான அறிவும் மிகுதிப்பட வேண்டுமென்று கருதினார். எனினும் இந்து தர்மங்களில் தோயாத இருதயம் எதைச் செய்தாலும் பிரயோஜனமில்லையே! அது நாட்டிற்கு உவந்ததாகவும், நிலைக்கக் கூடியதாகவும் ஆகாது என்பது அவருடைய ஆழ்ந்த அபிப்பிராயம். இன்றுகூடக் காந்தியடிகளும் மற்றுமுள்ள பெரியவர்களும் சமய வழிபாட்டை எக்காரியத்தைத் தொடங்கும் பொழுதும் விடுவதில்லை. தூய்மைக்கு ஆதாரமாயிருக்கும் சமய அறிவை, யாவராயினும் வித்தையைப் பயிலும் நாட்களிலிருந்தே தொடங்க வேண்டும். அவ்விதம் ஏற்பட்ட கல்வியே உள்ளத்தில் பூரணமாய்ச் செழிக்கும். இதில் சந்தேகமில்லை. வேறு யாருக்குச் சந்தேகம் இருப்பினும் என் தந்தைக்கு இருந்ததாகத் தெரியவில்லை.

## அத்தியாயம் 20

### சென்னைச் சட்டசபை

> "ஆர்த்தசபை நூற்றொருவர்
> ஆயிரத்தொன் றாம்புலவர்
> வார்த்தை பதினா யிரத்தொருவர்". —ஔவை.

புத்திக்கூர்மையும் நல்ல பேச்சுத் திறமையும் உடைய ஒருவர் இருந்தால் அவரைப் பதினாயிரத்தில் ஒருவராகவே தான் கருத வேண்டியிருக்கிறது. பெரிய கூட்டங்களில் பயமில்லாமல் பேசவல்லவரையே ஜனங்கள் தங்களுக்குப் பிரதிநிதியாக ஆலோசனைச் சபையிலும் மற்றும் பேசும் இடங்களிலும் தேர்ந்தெடுக்க ஆசைப்படுவார்கள். ஆனால் இக்காலத்தில் ஜனநாயகச் சின்னங்களைப் பெற்ற அரசாங்கங்களில், அநேகவிதக் கீழ்த்தரமான காரியங்களைச் செய்து கௌரவத்திற்கென்று மட்டும் சட்ட சபைகளில் உள்ள இடங்களைக் கல்வி யறிவில்லாத வர்களும், பொதுஜன சேவையைச் செய்தறியாதவர்களும் போட்டி யிட்டுப் பற்றிக்கொள்ளுகிறார்கள்.

ஒரு காலத்தில் சென்னைச் சட்டசபையில் 12 பேருக்கு மேல் உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்களுக்கு இடம் இல்லாமல் இருந்தது. அதாவது, பொது ஜனத் தேர்தலில் வெற்றி பெற்று வரக்கூடியவர்களில் 12 பேர்களே சட்ட சபையில் இருக்க முடியும். சபையில் எதையாவது குறித்து 'ஓட்டு'க்கள் எடுக்கும்பொழுது, சந்தேகமின்றி அரசாங்க உத்தியோகங்களிலிருந்த அங்கத்தினர்களின் எண்ணிக்கை அதிகமாக இருப்பதுதான் வழக்கம். அதனால், அரசாங்கம் கொண்டுவந்த தீர்மானங்கள் வெற்றிகரமாகவே நிறைவேறின. அம்மாதிரிச் சட்டசபை 'மார்லி மிண்டோ' சீர்திருத்தங்கள் வருவதற்கு முன் இருந்தது. அக்காலத்தில் சர்வகலாசாலைப் பட்டதாரிகள்

தேர்ந்தெடுக்கக் கூடிய ஒருவரைச் சட்டசபைக்கு அனுப்புவது வழக்கம்.

1907-ஆம் வருஷம் அக்டோபர் மாசம் வரையில் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் சர்வகலாசாலையிலிருந்து சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதியாக இருந்து வந்தார். அவருக்குச் சென்னை அட்வகேட் ஜனரல் வேலை கிடைத்தது. அவ்வருஷம் நீதிஸ்தலத்திற்குச் சங்கரன் நாயரை ஜட்ஜாக நியமிக்கவே, அவர் பார்த்த அட்வகேட் ஜனரல் வேலைக்கு சிவஸ்வாமி ஐயரைப் பொறுக்கி இருந்தார்கள் அரசாங்க அதிகாரிகள். அவருக்கு இருந்த சட்ட ஞானத்திற்கும் தொழிலில் உள்ள மதிப்பிற்கும் ஏற்றதே அப்பதவியை அவர் அலங்கரிப்பது என்று எல்லோரும் கருதினார்கள். மற்றவர்களைவிட கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அவ் வேலையை இந்தியர்கள் பெறுவதில் மிகத் திருப்தி. அவருடைய மனம் என்னவெல்லாமோ நினைக்கத் தொடங்கிவிடும். ஸர் வி. பாஷ்யம் ஐயங்கார் சிறிது காலம் அட்வகேட் ஜெனரலாக இருந்தாரல்லவா ? இனியும் அதற்கு வருகிறவர்கள் அவரைப்போல் தகுதியுள்ளவர்களாகவும், புதுச் சட்டங்களை அரசாங்கம் தயாரிக்கும் காலங்களில் தங்கள் நுண்ணிய அறிவையும் தேசீய உணர்ச்சியையும் நாட்டின் முன்னேற்றத்தின் பொருட்டு உபயோகிக்கக் கூடியவர்களாகவும் இருப்பது எவ்வளவோ மேன்மையை அளிக்குமன்றோ?

தோன்றியவைகளைத்தான் அவரால் வாய்விட்டுச் சொல்லாமல் இருப்பது சாத்தியமில்லையே ! அன்றெல்லாம் சிவஸ்வாமி ஐயருக்கு அவ்வேலை வந்ததைப்பற்றி நண்பர்களுடன் அளவளாவி, மேலும் அப்பதவியைப் பற்றிய தம் உயர்ந்த அபிப்பிராயங்களையும் சொல்லி விடுவார். ஆம்; சாயங்காலம் சாய்வு நாற்காலியின் நீண்ட கைகளின்மேல் தம் கால்களை நீட்டிக்கொண்டு படுத்திருப்பவர், ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளைத் தம் முன்னே காணவே, சட்டென்று, கால்களை நாற்காலிகளினின்றும் எடுத்துக் கீழே பூமியில் வைத்துக்கொண்டு நிமிர்ந்து

உட்காருவார். "வாருங்கள் சாஸ்திரிகளே" என்பார். குரலில் தொனிக்கும் உத்ஸாகத்தையும் இருதய பூர்வ மான வரவேற்பையும் கேட்ட காதுகள் வார்த்தைகளில் தொனிக்கும் பிறர்பால் நம்பிக்கையையும் கௌரவத் தையும் நன்கு அறியுமல்லவா? மேலும் வேகமாய்ச் சொல்வார்: "அட்வகேட் ஜனரல் என்றால் என்ன சலுகை, என்ன செல்வாக்கு, தெரியுமா உங்களுக்கு! ஜட்ஜுக்கு மேலானது அப்பதவி என்றால், வக்கீல் தொழிலுக்கு எவ்வளவு நன்மை செய்யலாம்! மேலும் சட்டங்களை எவ்வளவு சரியாகவும் திருத்தமாகவும் அமைக்கலாம்! அடடா அந்த வேலையின் மகிமை உங்களுக்கெல்லாம் தெரியாது!"

சொல்லும்பொழுதே அவர் முகத்தில் தாண்டவமாடும் குதூகலத்தையும், எண்ணிய எண்ணங்களை அப்படியே எட்டிப் பிடித்து விடுபவர்போல் இருகைகளையும் அவர் உயர விட்டெறிவதையும், மறுபடி, பிடித்துவிட்டதைத் தம் வசமாக்குவது போல் வலக்கையினால் சாய்வு நாற்காலியின் மேல் குத்துவதையும் வாய் பேசாமல் கவனித்தவர்கள் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய யோக்கிய தைக்கும் மற்றவர்களுடையதற்கும் எவ்வளவு வித்தியாசம் உண்டு என்பதை எண்ணிக்கொண்டிருப்பார்கள் என்பதில் சந்தேகம் வேறு உண்டா?

அரசாங்க வேலையை ஒப்புக்கொண்ட காரணத்தினால் சட்ட சபையில் தம்மிடத்தைச் சிவஸ்வாமி ஐயர் விட நேர்ந்தது. சட்ட சபையில் அவருடைய இடத் திற்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் நிற்கவேண்டுமென்று பல நண்பர்கள் வற்புறுத்தினார்கள். அவருக்காக வேலை செய்து தேர்தலில் வெற்றி பெற வழி செய்வதாக வாக்குக் கொடுத்தார்கள்.

சங்கரன் நாயரே என் தந்தையைச் சட்ட சபைக்கு நிற்கும்படித் தூண்டினார்.* சிவஸ்வாமி ஐயரும்,

* சங்கரன் நாயர் கடிதம், 9-10-07.

"நான் சர்வகலாசாலைக்குப் பிரதிநிதியாக இருந்த இடத்தை விட நேர்ந்ததால் நீங்கள் அதற்கு நின்று தேர்தலுக்குத் தயாராவீர்கள் என்று நம்புகிறேன். சீக்கிரமே அதற்கு வேண்டிய வாறு சர்வகலாசாலை ஆலோசனைச் சபையிலிருக்கும் உங்கள் நண்பர்களிடம் தெரிவியுங்கள்"*

என்று எழுதியிருந்தார். ஊரிலும் பல நண்பர்கள் தங்கள் விருப்பத்தை அதே மாதிரித் தெரிவித்தார்கள். ஒரு நண்பர்,

"நீங்கள் மட்டும் நிற்பதென்று தீர்மானித்தீர்களானால் மற்றக் காரியங்களைச் சிநேகிதர்கள் செய்வார்கள். உங்களுக்கு வேண்டியவர்களில் நானும் ஒருவன் என்பதை மறக்க வேண்டாம்"†

என்று மனப்பூர்வமாய்த் தம் இஷ்டத்தைத் தெரிவித்தார். ஆனால் கிருஷ்ணஸ்வாமி ஐயர் நிற்கவேண்டுமென்று நினைப்பதற்குள் ராஜதானிக் கலாசாலைத் தலைவரான ஜெ. எச். ஸ்டோன் என்பவர் அந்த இடத்திற்குத் தாம் நிற்கப் போவதாக அறிக்கை ஒன்றை வெளி யிட்டார். வாஸ்தவத்தில் நம் நாட்டு மக்களுக்கென்ற ஒரு விதக் கட்டுப்பாடும் பொதுஜனக் காரியங்களில் இல்லாத காலம் அது. சட்டசபை அங்கத்தினர்களில் ஏற்கெனவே வி. சி. தேசிகாச்சாரியாரும், பி. ராஜரத்தின முதலியாரும், இன்னும் ஒன்றிரண்டு பேர்களுமே நம்மவர்களாக இருந் தார்கள். அம்மாதிரிச் சொற்ப எண்ணிக்கையாய் உள்ள வர்களின் இனத்தில் காலியான இடத்திற்கு வெள்ளைக் காரர் ஒருவர் நிற்பதை ஒருவரும் ஒப்பவில்லை. பத்திரிகை களும் அதைப்பற்றிப் புகார் செய்தன. தினசரிகளில், 'ஹிந்து' முக்கியமாய் இதைப் பற்றி நன்றாக எழுதியது :

"சென்னை ராஜதானிக் கலாசாலைத் தலைவரான மிஸ்டர் ஜே. எச். ஸ்டோன் தாமும் சட்ட சபைத் தேர்தலுக்கு நிற்பதை அறிவித்திருப்பதாக நாங்கள் அறிகிறோம். வாஸ்தவத்தில் இந்தியக் கல்வித் துறையில் பெயர் பெற்றவர் மிஸ்டர் ஸ்டோன். அவருக்கு வெள்ளைக்காரர்களிடமும் நம்மவர் களிடமும் மிகுந்த செல்வாக்கு உண்டு. தேர்ந்தெடுக்கப்பட்ட

* கடிதம், 9-10-07.

† வி. சி சேஷாச்சாரியார் கடிதம், 10-10-07.

ஒருவர் சட்ட சபையில் அரசாட்சி வர்க்கத்துடன் சேர்ந்து கொள்ளத்தக்கவிதம் இருப்பதில் யாருக்கு லாபம்? மேலும் இப்பொழுது இருக்கும் விதிகளின்கீழ் இம்மாதிரி உத்தியோகஸ்தரைத் தேர்தலில் எடுப்பதிலிருந்து உத்தியோக நோக்கங்கள் கொண்டவர்களின் எண்ணிக்கை பூர்த்தியாகும்பொருட்டு இன்னுமோர் உத்தியோகம் இல்லாதவரை அரசாங்கம் நியமிக்கும்படி ஏற்படும். ஆகையால் தேர்தலில் அரசாங்க உத்தியோகத்தில் இருப்பவர்களைப் பொறுக்குவதால் ஜனங்களும் தங்கள் உரிமைகளை வீணாக்கியதாகும். தேர்தலுக்குத் தங்கள் வாக்குரிமையைக் கொடுக்குங் காலத்தில் இவைகளை மனத்தில் நன்கு அலசிப் பார்த்தே சர்வகலாசாலைப் பட்டதாரிகள் தீர்மானிக்க வேண்டும் என்று கோருகிறோம். சர்வகலாசாலை ஆலோசனைச் சபைகளில் செய்திருக்கும் அபாரமான வேலைகளினால் பொது ஜனங்களுடைய பாராட்டையும் தம்முடன் ஒத்துழைத்தவர்களுடைய நன்மதிப்பையும் ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர் மிகவும் பெற்றிருக்கிறார். அவரிடமே சர்வகலாசாலைப் பிரதிநிதிக்கு உரிய தகுந்த சகல உயர் குணங்களும் காணப்படுகின்றன. வெள்ளைக்காரர்களும் நம்மவர்களும் சேர்ந்துகொண்டு அவரையே தேர்ந்தெடுப்பார்கள் என்று நிச்சயம் விரும்புகிறோம்''*

என்பது தலையங்கம்.

கேட்கவேண்டுமா பிற்பாடு வெற்றியைப்பற்றி? எல்லாம் வெகு சீக்கிரத்தில் அவருடைய ஓட்டுக்களாகவே விழுந்தன. எல்லோருடைய சம்மதத்துடனும் அவருக்குத் தேர்தலில் சட்டசபை அங்கத்தினராக ஆகும் பாக்கியமும் கிட்டியது. சர்வகலாசாலையில் ஆலோசனைச் சபையில் அவருடைய அருமையான சொற்பொழிவுகளும் காரியங்களும் பலருடைய மனத்தை அவர்பால் திருப்பியிருந்தன. மேலும் அக்காலங்களில் சட்டசபையின் அக்கிராசனம் கவர்னருக்கே சொந்தமானது. அக்காரணத்தினால் அரசாங்கத்தில் முக்கிய அதிகாரியின் கண்பார்வையில் அவர் அன்றிலிருந்து அடிக்கடி தென்படத் தொடங்கினார்.

"சென்னை வாசிகள் ஸர் ஆர்தர் லாலியின் தேன் மொழிகளைக் கேட்டு ஏமாறவேண்டாம். எனக்கு அவர்பேரில் தீராத அருவருப்பு உண்டாகிவிட்டது. தென் ஆப்பிரிகாவில் டிரான்ஸ்வாலிலுள்ள நாட்டு ஜனங்களைப்பற்றி அவர் அரசாங்கத்திற்கு

---

* 'ஹிந்து', அக்டோபர் 25-ஆம் தேதி, 1907.

எழுதிய விவரத்தைக் கண்டதுமுதல் அவரைச் சரியானவராக நினைக்க என் மனம் துணிவதில்லை''*

என்று வாச்சா ஏற்கனவே என் தந்தைக்குக் கடிதம் மூலம் கவர்னரைப்பற்றி எச்சரித்து எழுதியிருந்தார். தாமும் பேசும் திறமையுடையவரானதால் நீர்வீழ்ச்சி போன்ற சொற்றொடர்களில் கவர்னருக்கு மோகம் ஏற்பட்டதில் ஒருவித ஆச்சரியமுமில்லை. மேலும், எதைப் பற்றிப்பேசினாலும் விஷயத்தை நன்கு பரிசீலனை செய்தும், பலருக்குத் தோன்றாத சிற்சில புதிய அபிப்பிராயங்களைச் சொந்தத்தில் ஆலோசித்தும் சொல்வது கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய இயல்பானதால், அதைக்கண்டு கவர்னரும் பிரமித்துவிட்டார்.

சட்டசபையின் பொறுப்பைத் தாங்கும் பலரில் அவரும் ஒருவர் என்றாலும், தம் வரையில் முயற்சியை விடாமல் அங்கே தயாரிக்கப்படும் தீர்மானங்களைக் கூர்மையுடனும், அவைகளுக்கு வேண்டிய விவரங்களுடனும் பார்வையிடத் தொடங்கினார். 1908-ஆம் வருஷம் சட்டசபைப் புஸ்தகத்தில் முதலில் அமலுக்கு வந்த மசோதா, சென்னை மாகாணத்திலுள்ள சாகுபடி நிலங்களில், நிலத்தின் சுவான்தாரர்களுக்கும் அவைகளைச் சாகுபடி செய்யும் குடிகளுக்கும் [ரயத்துகளுக்கும்] உள்ள உரிமைகளைப்பற்றியும், கடமைகளைப் பற்றியும் தீர்மானித்தது. இதுகாறும் எத்தனையோ விதங்களில் குடிகள் [ரயத்துகள்] சிரமப்பட்டு வந்தார்கள். நிலத்தில் பாடுபடும் குடியானவர்கள் தங்கள் முழுச் சக்தியையும் கொண்டு நிலத்தை மேன்மேலும் விருத்திக்குக் கொண்டுவருவார்கள். ஆனால் நிலச்சுவான்தார்கள் ஒருவிதச் சௌகரியத்தையும் அவர்களுக்குச் செய்யாமல் தங்களுக்கு வரவேண்டிய தொகையைமட்டும் அவர்களிடமிருந்து அபகரித்துக்கொள்வார்கள். இன்னும் இம்மாதிரியான பலவித அநியாயங்கள் நடந்து வந்தன. ஜட்ஜ் மணி ஐயரைப் போன்ற மேதாவிகள் அவ்வப்பொழுது தங்கள் தீர்ப்புக்களின் மூலம் குடிகளுக்குள்ள

* வாச்சாவின் கடிதம், 9-4-06.

சிரமங்களைக் குறைத்து வந்தார்கள். ஆயினும், நீதி ஸ்தலத் தீர்ப்புக்களினால் எம்மட்டும் அறவே அவைகளை ஒழிக்கமுடியும்? ஆகையினால் ஒரு சட்டம் தயாரிப்பதே நியாயம் என்று அரசாங்கமும் யோசித்தது. அவ்விதம் ஒரு சட்டத்தைத் தயாரிக்கும்படி, வரி வசூல் செய்யும் இலாகாவை மேற்பார்வையிடும் கனம் போர்பஸை அதிகாரவர்க்கம் கேட்டுக்கொண்டது. சட்டத்தை நன்கு பரிசோதிக்க ஒரு சிறு 'குழு'வையும் அதற்காக ஏற்பாடு செய்திருந்தார்கள். அதில் கிருஷ்ணஸ்வாமி ஐயரையும் ஒருவராகச் சேர்த்திருந்தார்கள். தம் தொழில் அநுபவத்தாலும் சட்டஞானத்தின் உதவியாலும் தமக்குத் தோன்றிய கருத்துக்களை அரசாங்க அதிகாரிகளுக்குத் தெரிவித்தார். குழுவினர் தீர்மானித்ததற்குப் பின்புதான் சட்டசபையில் சட்டத்தை நன்கு பரிசோதிக்க முடிந்தது.

சென்னைக் கவர்னர் சபையில் அக்கிராசனம் வகிப்பதற்கு அரசாங்க வர்க்கத்தினர் ஒரு புறமும், மற்றொரு பக்கத்தில் தேர்தலில் வெற்றிபெற்று வந்த அங்கத்தினர்களும் நியமன அங்கத்தினர்களும் உட்கார்ந்திருந்தார்கள். ஆந்திரரான பி. நரஸிம்ம சர்மா காரு, நவாபு முஹமது ரஜாகான், ஸர் வி. சி. தேசிகாசாரியார், கிருஷ்ணன் நாயர், குருஸ்வாமி ஐயர் முதலியவர்கள் அச்சபையில் அமர்ந்திருந்தார்கள். நிலச் சுவான்தார்களுக்குப் பிரதிநிதியாக இருந்த குருப்பம் ராஜா, அவர்களுடைய உரிமைகளுக்குக் கேடு வராமல் பாதுகாக்க அங்கே வீற்றிருந்தார்.

இதுவரையில் சட்டசபையில் பேசிப் பழக்கம் பெறவிட்டாலும், சட்ட சபைக்கு என்று ஏற்பட்ட தனிப்பழக்கங்களில் கைதேர்ந்த ஒருவர் வாதாடும் விதமே கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் பிரசங்கத்தைத் தொடங்கினார்.

சட்டத்தைத் தயாரித்தவருக்கு முதலில் நன்றியைத் தெரிவித்துவிட்டு, சட்டத்தின் பெயரைக்கூட, சட்டத்தைத் தயாரித்தவருடைய நாமதேயத்தினாலேயே வழங்குவது உசிதம் என்று மேல் நாட்டு முறையை அநுசரித்துச் சொன்னார். பிறகு, சட்டம் தயாரித்தவரோடு

ஒவ்வொரு வித அபிப்பிராயத்திலும் தம்மால் ஒன்றுபட முடியாதது பற்றி வருந்தினர் :

"இந்த மசோதாவின் ஆரம்பத்திலிருந்து ஒவ்வொரு சமயமும் அதைக் கவனிக்க அவகாசம் ஏற்படும் பொழுதெல்லாம் எனக்குள்ளே போராடிக்கொண் டிருந்தேன். இன்று சபையில் நிற்கும் பொழுதுதான் 'சரி, இனி இதை ஆமோதித்து விடுவது' என்ற தீர்மானத்திற்கு வந்திருக்கிறேன்"

என்று ஆரம்பித்தார். இந்தச் சட்டத்தை விஷயாலோசனைக் கமிட்டியிடம் அனுப்புவதுகூட உசிதம் என்று தாம் ஆரம்பத்தில் சபையில் அபிப்பிராயப்பட்டதன் காரணம், ஒருகால் சட்டமாகப் பரிணமித்து அமலுக்கு வந்ததும் அதிலுள்ள சில நிபந்தனைகள் உத்தேசித்த நலத்தை எல்லாம் செய்யாமல், காரியத்தைக் கெடுத்து விடுமோ என்று பயமடைந்ததுதான் என்று தம்முடைய சந்தேக மனப்பாங்கை வெளிப்படுத்திக் கொண்டார்.

"வாஸ்தவத்தில் அவசரமாகக் குழுவில் ஒன்றையும் செய்து விடவில்லை. ஒவ்வொருவரும் அந்த மசோதாவைத் தீர ஆராய்ந்து பார்க்கும் வகையில்தான் யாவும் சரிவர நடந்தேறின. கடைசித் தருணத்தில் கொண்டு வந்த சிற்சில மாறுதல்களை அரசாங்கத்தார் அங்கீகரிக்க முடியாதிருந்திருக்கலாம். ஆயினும் அபிப்பிராயங்கள் மசோதாவை முழுவதும் மாற்றும் குணம் உள்ளவைகளாக இல்லாத காரணத்தால் அவைகளை அச்சபை அங்கீகரிக்காததில் ஒன்றும் கெட்டு விடவில்லை."

இவ்விதம் இரு சாராருடைய ஆக்ஷேப சமாதானங்களையும் தாமே ஒருவாறு எடுத்துரைத்த பின்னர், மசோதாவின் குணதோஷங்களைப் பற்றித் தம் அபிப்பிராயத்தை வெளியிடலானர்:

"தங்களிடம் எத்துணையோ பேதங்களிருந்தாலும், நாட்டில் மிகவும் முக்கியமான சந்தர்ப்பம் ஏற்பட்டதை உணர்வதுதான், முதல் முதலில் இம்மாதிரி ஒரு மசோதாவைத் தயாரிப்பதற்குக் காரணம்; நில உரிமையாளர்களும் குடிகளும் [ரயத்துகளும்] தாங்களே ஒப்புக் கொள்ளவேண்டியதுங்கூட; தங்களிடம் எவ்வளவுவித பேதங்களிருப்பினும், நாட்டில் மிகவும் நெருக்கடியான சந்தர்ப்பம் ஏற்பட்டிருப்பது பற்றிய வரையில் வித்தியாசமில்லாமல் அதனை உணர்வதுதான் உசிதம். நில உரிமையாளர்களின்பால் சொல்லக்கூடியது ஒன்று உண்டு. அதாவது இது வரையில் இருந்த பழக்கம் நிலப் பட்டாவைச் சரியான விவரங்

களுடன் குத்தகைக்காரனிடமிருந்து சொந்தக்காரர்கள் பெரு விட்டால் நில அதிகாரியின் பாடு சற்றுத் திண்டாட்டமா யிருந்தது. ஏதாவது ஒரு சிறு தவறுதல் பட்டாவில் காணப்பட் டாலும் குத்தகைத் தொகையை மீட்க எடுக்கும் நடவடிக்கையில் நிலச் சுவான்தாருடைய தாவா செல்லாமல் போய்விடும் என்ற பயம் அதிகரித்தது. இது வாஸ்தவத்தில் பெரிய சிரமம். இதனைத் தவிர்க்க ஸர் வி. பாஷ்யம் ஐயங்கார் ஏற்கனவே ஒரு சிறு மசோதாவைச் சட்ட சபையில், சபை அங்கத்தினராக இருந்த காலத்தில் கொண்டு வந்தார். சட்டசபை அதை அக்காலத்தில் அங்கீகரிக்கவில்லை. ஆனால் அப்போது நிறைவேறாத அந்தக் காரியமே நியாயத்தில் நிலச் சொந்தக் காரனுக்குக் குத்தகை வசூல் செய்யும் காரியத்தில் பட்டாவிலுள்ள தவறுதல் பாதிக்காம லிருக்க ஒரு மசோதாவைத் தயாரிக்க வேண்டுமென்பதை எடுத்துக் காட்டியது. இன்னும் ஒரு சிரமமும் உண்டு. நிலச் சொந்தக் காரர்களுக்குக் குத்தகை கொடுபடாத விஷயத்தில் நிலத்தின் பேரில் யாதொரு பந்தமும் பாத்தியதையும் இல்லாமல் இருந்தது. அரசாங்கத்தினின்றும் நிலத்தைப் பெற்றவனாக நிலத்தின் சொந்தக்காரனைக் கருதும் பழக்கம் ஏற்பட்டபின்னரும் அரசாங்கத்திற்குக் குத்தகை சம்பந்தமாக நிலத்தின் பேரில் இருக்கும் பந்தக உரிமை சொந்தக்காரர்களுக்கு மட்டும் கிடையா தென்பது விசித்திரமாய்த்தான் இருக்கிறது. இம்மாதிரிப் பலவிதமான சிரமங்களை நில உரிமையாளர்கள் அடைவதைக் கணக்கிடலாம்.

"சாகுபடி செய்பவனுடைய குறைகளைக் கவனிக்குங்கால் குத்தகைப் பட்டாவினால் அவனுக்கு உண்டாயிருந்த பலவிதத் தடங்கல்கள் விவரிக்க முடியாமல் இருந்தன. இவ்விருவர்களின் நிலைமையையும் அறிந்து ஒருவருக்கொருவர் திருப்தியாக நடக்கும் விதம் அவர்களுடைய உரிமை கடமைகளையும் சீராக வைப்பது நியாயம்.மற்றக் காரணங்களுக்குள் புகுந்து எதனால் சட்டமூலம் அவ்விருவர்களின் குறைகளைத் தீர்ப்பது உசிதம் என்றும் கவனிப்பது நம்முடைய கடமை."*

பிறகு நிலத்தின் பாத்தியதைகளைக் குறித்து இது காறும் செய்து வந்த பற்பல அரசாங்கக் காரியங்களைப் பற்றிய வரலாற்றைக் கோவையாக வெளிப்படுத்தியது அவர் பிரசங்கம்.

சட்டத்தின் பல பகுதிகளையும் பாகங்களையும் பற்றித் தம் அபிப்பிராயங்களை எடுத்துக்காட்டினார்.

---

* சட்டசபை ரிபோர்ட்டு, 1908.

சண்டைகள் ஏற்படின் அவைகளைத் தீர்க்கச் சிவில் கோர்ட்டுக்கு அதிகாரம் கொடுத்திருப்பது அடிக்கடி சிவில் கோர்ட்டை இருகட்சியும் அடையவே வழிசெய்கிறது. ஆகையால், அம்மாதிரிக் கோர்ட்டின் தீர்ப்பைச் சதா நாடவே சட்டத்தில் வழிகள் செய்வது என்றைக்கும் பணச் செலவையும் மற்றத் தொந்தரவுகளையுமே விருத்தி செய்யும் என்றும் காட்டினார். இன்னும் எத்தனையோ விதங்களில் மசோதாவின் குணதோஷங்களைச் சபையில் நன்கு அலசிப் பார்த்துத் தம் அபிப்பிராயத்தைத் தெளிவாக வெளியிட்டார். கடைசியாக இரண்டு மணி நேரம் பேசிய பிறகு, பின் வருமாறு கூறித் தம் பிரசங்கத்தை முடித்துக் கொண்டார்:

"இச்சட்டம் சரியாகவும் ஒழுங்காகவும் நடைபெறுவதை அரசாங்க அதிகாரிகளே நன்கு கவனிக்க வேண்டிவரும். இதில் காணப்படும் குற்றம் குறைகளை எவ்வளவு சீக்கிரமாகத் தீர்க்க முடியுமோ அவ்வளவு துரிதமாகத் தீர்க்க வேண்டும். மேலும் இம்மாதிரியான சட்டம் முதல் தடவை இப்பொழுதுதான் கொண்டுவரப் பட்டிருக்கிறது. ஒரு வார்த்தை மட்டில் நிலச் சொந்தக்காரர்களுக்குச் சொல்லவேண்டுமென்பது என் ஆசை. அவர்களை இங்கு நான் சபையில் பார்க்காததனாலும் இதைச் சொல்லுகிறேன்: அவர்கள் இந்தச் சட்டத்தை அநுசரித்து நடந்து பார்ப்பதுதான் அழகு. அவர்களுடைய சொந்த நன்மையைவிட, தேசத்தின் முன்னேற்றமே பெரிது என்னும் எண்ணத்தை அவர்கள் மனத்தில் கொண்டால் அதைவிட அவர்கள் செய்யக்கூடிய நலமொன்றும் இராது. ஆகையால் வாஸ்தவத்தில் இதைத் தோல்வியாக நினைத்தால், இத்தோல்வியை ஒப்புக்கொண்டு நில உரிமையாளர்கள் சட்டத்தை அநுசரிக்கத் தங்களால் முடிந்த அளவில் பாடுபடவேண்டும் என்றுதான் நான் அவர்களை வேண்டுகிறேன்."

நிலத்தில் பாடுபடும் குடியானவர்களுக்கு நன்மையைச் செய்யவே இந்தச் சட்டம் ஏற்பட்டது. ஓரளவில் நிலத்துச் சொந்தக்காரர்களின் உரிமைகளைக் கட்டுப் படுத்தியும் விட்டது. ஆனாலும் சொந்தக்காரர்களின் எண்ணிக்கையைவிடக் குடியானவர்களின் தொகையே நாட்டில் அதிகம் என்பதை நாம் மறக்க முடியாது. அதில் உள்ள பலவிதக் குறைகளைத் தீர்க்கவே அவ்வப்

பொழுது புதிய மாறுதல்களையும் இது சம்பந்தமாக இதே சட்டத்தில் பின் வந்த சட்டசபைகள் புகுத்தி இருக்கின்றன. சட்டத்தைச் சபையில் முதல் முதலில் பரிசோதித்தவருடைய புத்திவன்மை எவ்விதம் இருந்தது என்பதற்கு அவர் தீர்க்க திருஷ்டியுடன் சொல்லிய சில விவரங்கள் இன்னும் அவரை மதிக்க வைக்கும் விதத்தில் காணப்படுகின்றன. ஆனால், 'ஹிந்து' தன் தலையங்கத்தில் அவர் பிரசங்கத்தை முழுவதும் ஒப்புக்கொள்ளாமல் எழுதியது.

இச்சட்டத்தைப் பற்றிய பேச்சுக்கள் பதினெட்டு நாட்கள் நடந்தனவென்று தெரிகிறது. சபைக்கு வந்தவர்களின் முன்னணியில் நின்றது கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பிரசங்கம். பேசும்பொழுது நாலு பக்கங்களிலும் தம் வாய் வெடிகளை விட்டெறிந்தார். அவருடைய பாணங்கள் யாரைத் தாக்கி நசுக்கவில்லை? அரசாங்க வர்க்கத்திற்குச் சூடு கொடுத்தார். ஜமீன்தார்களின் ஈவு இரக்கமற்ற சுபாவத்தை மனம் கரையச் சித்திரித்தார். நிலவரி வசூல் இலாகாவின் பொறுப்பற்ற செயல்களைப் பலர் அறியப் பரிகசித்தார். எல்லாவற்றையும் விடச் சபை அங்கத்தினர்களில் பலர் எவ்விதம் தங்கள் பொறுப்பைச் செயலில் காட்டுவதென்பதையே உணராமல் சவங்களாக உட்கார்ந்துகொண் டிருப்பதைப் பொறுக்கமாட்டாமல் இகழ்ந்தார். எங்கும் அவரிடம் மிகுந்த பயம் குடிகொண்டது.

"கிருஷ்ணஸ்வாமி ஐயர் சென்னை மாகாண நில சம்பந்தமான சட்டத்தின் தர்க்கத்தில் கலந்துகொண்டதில் பெரும் புகழைச் சம்பாதித்துக் கொண்டுவிட்டார். இப்பதினெட்டு நாட்கள் போரில் (மஹாபாரதச் சண்டையை ஞாபகப்படுத்துகிறது) எவ்வளவோ வகையில் உயர்தரப் பிரசங்கங்களைச் சளைப்பின்றிச் செய்து வந்திருக்கிறார். எல்லாப் பக்கங்களிலும் வாய்க் குண்டுகளையும் வெடிகளையும் வீசி இருக்கிறார். அரசாங்கம், ஜமீன்தார்கள், சபை அங்கத்தினர்கள், வரி வசூல் இலாகா அதிகாரிகள் எல்லோரும் பக்ஷபாதமில்லாமல் அவருடைய அஸ்திரப் பிரயோகத்தைப் பெற்றுக்கொண்டு தவித்தனர். அவருடைய முதல் வாதம் யாதெனில், சட்டசபையில் அரசாங்க

நிர்வாக அங்கத்தினர்களுக்கு என்ற தனி உரிமைகள் கிடைப்ப தில்லை; நியாயத்தில் மற்ற உத்தியோகப் பற்றுள்ள வர்க்கத்தினர் களுக்கும் தேர்தலில் வந்தவர்களுக்கும் சமமாகவேதான் அவ் விடத்தில் உரிமைகள் இருக்கவேண்டும் என்றும், மேலும் இச் சட்டம் சம்பந்தமாக அரசாங்க அதிகாரிகள், தங்களுக்கும் இந்தியக் காரியதரிசிக்கும் நடந்துகொண்டிருந்த கடிதப் போக்கு வரவுகளைச் சபை அங்கத்தினர்களுக்குப் பகிரங்கமாய்க் காட்டாமல் வைத்திருப்பது மிகவும் தவருகும் என்றும் கூறினர். இவ்வார்த்தைகளைக் கேட்ட மாத்திரத்தில் கவர்னர் நிர்வாக சபையிலுள்ள இரண்டு அங்கத்தினர்களுக்கும் கடுங்கோபம் மூண்டது. ஆனல் அவர்கள் பதில் பேசவில்லை. நான் சொல்வது போல் இவ்வளவு சுமுகமாய்ப் பேசினரா கிருஷ்ணஸ்வாமி ஐயர்? இல்லை; தமக்கு எதிரேயுள்ள மேஜையில் கையால் ஒரு குத்துக் குத்தி, எதிர்க் கட்சியை வலுச்சண்டைக்கு இழுத்துவிட்டார். நீங்களே கற்பனை செய்து கொள்ளலாம் அவருடைய வேகத்தை. 'சபை அக்கிராஸனர் ஒருவரைத் தவிர, சபையிலுள்ள மற்றவர் களுக்கு என்னைவிட ஒரு விதத்திலும் அதிகமான உரிமையோ அதிகாரமோ இவ்விடத்தில் இல்லை' என்று கூவினர். கவர்னருக்கு அவருடைய யோக்கியதையில் அளவுகடந்த மதிப்பு ஏற்பட்டு விட்டது. எவரைக் கண்டாலும் கவர்னர், பின்வருமாறு சொல் கிருர்: 'மற்றவர்களுக்கு எவ்வளவோ மேலே கிருஷ்ணஸ்வாமி ஐயர் நிற்கிருர்.' கவர்னர் அவரைத் தனியே காண அநுமதித்தார். கண்டபொழுது தம் வரையில் ஒளிவு மறைவின்றி கவர்னர் பேசா விட்டாலும், கிருஷ்ணஸ்வாமி ஐயரை அவர் இஷ்டம்போல் பேசும்படி விட்டுக் கேட்டுக்கொண்டு இருந்துவிட்டார்."*

இவை ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளின் சொற்கள். அன் ருடம் கோகலே பெரியாருக்கு சென்னையிலிருந்து எழுதிய செய்திகளில் ஒன்று இது. அநேகமாகச் சாஸ்திரியாரின் அக்காலத்துக் கடிதங்களை ஆராயும்பொழுது இரண்டொரு வரிகளாவது நண்பரைப்பற்றிப் பெருமையுடன் இருக்கும். சிற்சில சமயங்களில் கடிதம் முழுவதுமே கிருஷ்ணஸ்வாமி ஐயரைப்பற்றித்தான் எழுதப்பெற்றிருக்கும் என்ருலும் பொய்யாகாது.

சட்டசபை அங்கத்தினருடைய மனம் எவ்விதம் பொதுக் காரியங்களில் - அதிலும் அரசாங்க அதிகாரம் செலுத்தும் துறைகளில் - சென்றது என்பது 'டிஸென்ட்

* கடிதம், 14-2-1908.

ரஸலேஸேஷன் கமிஷன்' முன் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கொடுத்த வாக்கு மூலங்களிலிருந்து வெளியாகின்றது. ஸர் வில்லியம் மேயர், ரமேச சந்திர தத்தர் போன்றவர்கள் கலந்த கமிஷன் ஒன்று இந்தியாவைச் சுற்றிப் பார்த்தது. பலருடைய அபிப்பிராயங்களையும் அலசி விசாரணையும் செய்து முடிவுகள் செய்தது. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அவருடைய நண்பர் சுந்தரம் ஐயரும் ராஜ மகேந்திரத்திற்குத் தொழில் சம்பந்தமாகப் போயிருக்கையில் அங்கே அக்கமிஷனால் விசாரிக்கப் பட்டார்கள். கிராமந்தோறும் பஞ்சாயத்துக்களையும், தாலுக்கா சபைகளையும் மறுபடியும் உயிர்ப்பிக்கவேண்டும் என்றும், வரிவசூல் இலாகா போர்டு அநேக விதங்களில் அவைகளுக்குத் தடையாக இருந்ததையும் எடுத்துக் காட்டினார் கிருஷ்ணஸ்வாமி ஐயர்.*

அக்காலத்தில் அரசாங்கம் வரவு செலவு வருஷாந்தரத் திட்டத்தை தீர்மானிக்கும் விஷயத்தில் சட்டசபை அங்கத்தினர்களைக் கொஞ்சமும் கலப்பதே இல்லை. அரசாங்க நிர்வாகச் சட்ட ரீதியாக, அங்கத்தினர்களுக்கு வரவு செலவுகளைப் பற்றித் தங்கள் அபிப்பிராயங்களை வற்புறுத்த உரிமையும் இல்லை. இன்றும் அதே கதியில்தான் நாம் இருந்து வருகிறோம். ஆளப்படும் ஒரு தேசத்து மக்களுடன் கலந்து யோசியாமலே வரியைச்சுமத்தும் அரசாங்கம் இந்தியாவில் தவிர வேறு எங்கும் இக்காலத்தில் கிடையாது. முந்நூறு நானூறு கோடி இந்திய மக்கள் இருந்தும் ஆங்கில ஆட்சியிடமிருந்து இதுவரையிலும் இவ்வுரிமையைப் பெறவில்லை. எத்தனையோ விதங்களில் முப்பது வருஷங்களுக்குமுன் இருந்ததைவிட நம்மவர்களுக்கு இன்று அரசாட்சி செலுத்தும் துறையில் மேல்பதவிகளைக் கொடுத்திருந்தாலும், கஜானாவைப் பற்றின மட்டில் இன்னும் நம் கைக்குள் திறவுகோலை வைத்துக்கொள்ள வழியற்றுக் கிடக்கின்றோம். ஓரளவு வரவு செலவுகளைப்

---

* 'ஹிந்து', 6-12-07.

பற்றிய விவரங்களை உணரும்படிச் சட்டசபைகளில் உள்ள வர்களுக்கு அநுமதி அளிப்பதையே பெரிய வரமாக நாம் கருதி வருகிறோம்.

சென்னை மாகாண ஆட்சியிலும் சட்டசபை அங்கத் தினர்களுக்கு இவ்விதமான குறை இருந்தே வருகிறது. ஏதோ பெயருக்கு என்று சொல்லவேண்டிய முறையில் சட்டசபையில் உள்ளவர்களுக்கு வரவு செலவுத் திட்டங்களைக் குறித்து வாக்குவாதம் செய்ய மட்டும் இடம் தந்திருக்கிறார்கள். 1908-ஆம் வருஷம் ஜனவரியிலேயே வரவு செலவுத் திட்டத்தைப் பற்றிய ஒரு சிறு கூட்டத் தைக் கூட்டக் கவர்னர் ஏற்பாடு செய்தார்.*

அதில் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சட்ட சபை அங்கத் தினர் என்ற உரிமையில் தமக்குத் தெரிந்த விவரங்களை வைத்துக்கொண்டு சில யோசனைகளைச் சொன்னார். பிறகு சட்டசபையில் வரவு செலவுத் திட்டத்தை அரசாங்கத்தார் தயாரித்துக் கொண்டுவந்த பொழுது அநேக வித அரிய விஷயங்களை அவர் ஆராய்ந்து எடுத்துரைத் திருப்பதைச் சட்ட சபை நடவடிக்கைகளைப் பதிப்பித் திருக்கும் புஸ்தகம் வெளியிடுகிறது.

பின் வருமாறு வரவு செலவுத் திட்டங்களைக் குறித்து அவர் பேசினார்:

"சென்னை அரசாங்கம் வரவு செலவுத் திட்டங்களைச் செய் வதில் இதுவரையிலும் எந்தச் சிறந்த புது வழிகளிலும் சென்ற தாகத் தெரியவில்லை; ஜனங்களின் வேண்டுகோளுக்கு இணங்கி எதையும் மாற்றிச் செய்ததாகவும் தெரியவில்லை. தானாகவும் சொந்தப் பொறுப்பில் முன்னிலும் திறமையாகவும் எதையும் நடத்திக் காட்டியது இல்லை. கவர்னர் பேசியதையும், கனம் ஸ்டோக்ஸ் சொன்னதையும் விட நான் பல தலைப்பின் கீழுள்ள வரவு செலவுத் திட்டங்களைப்பற்றி அதிகம் சொல்லி விட முடியாது. முதல் தடவை இவ்வருஷம் வரவு செலவுத் திட்டத்தைத் தீர்மானிக்க அழைத்த குழுவிலும் நான் ஓர் அங்கத் தினனாக இருந்த காரணத்தால் என்னால் அதிகம் ஒருதரம் பேசிய தையே மறுபடியும் இப்பொழுது சொல்ல முடியாது......அக் கூட்டத்திற்குத் தலைமை வகித்த மிஸ்டர் ஸ்டோக்ஸ், கூடியிருந்த

* Budget-Conference, 10-3-08.

அங்கத்தினர்கள் சொல்லிய சிற்சில யோசனைகளையும் எடுத்துக் கொண்டு, அவைகளை அரசாங்க அதிகாரிகள் கவனிப்பார்கள் என்று வாக்குக் கொடுத்தார். அதன் பிறகு இருந்த குறைவான அவகாசத்தில் அரசாங்கத்தால் அம்மாதிரிச் செய்ய முடியவில்லை போலும். நானும் இன்று அங்கே சொன்னவைகளையே மறுபடியும் ஒரு முறை சொல்லப் போவதில்லை. ஏனென்றால் அங்கிருந்தவர்களில் பலர் இங்கும் இருப்பதால் அவர்களுக்கு இவ்விஷயங்களைக் கேட்கச் சலிப்பே உண்டாகும். மேலும் நான் சொன்னவைகள் அரசாங்க அதிகாரிகள் தாங்களே கவனிக்க வேண்டியவை என்பதை மட்டும் லக்ஷ்யமாய் வைத்துச் சொன்னவைகள்."

(1) இவ்விதம் பிரசங்கத்தை ஆரம்பித்தவர் சிற்சில முக்கியப் பிரச்னைகளைக் குறித்துத் தம் அபிப்பிராயங்களை வெளியிட்டார். தாம் சர்வகலாசாலைத் தேர்தல் மூலம் வந்த சட்டசபை அங்கத்தினர் என்பதை மறவாமல் சர்வ கலாசாலை உபாத்தியாயர்களுக்கும் உபந்நியாஸகர்களுக்கும் அரசாங்கம் பொருளுதவி செய்வதற்குச் சர்வகலாசாலைச் சட்டத்தின் மூன்றும் பகுதியின்கீழ் இனி முடியும் என்று ஞாபகப்படுத்தினார். இந்திய அரசாங்கம் சென்னைச் சர்வ கலாசாலையைப் பொறுத்த மட்டில் ஐந்து லக்ஷ ரூபாய்களை, நாலு அல்லது ஐந்து வருஷச் செலவுகளுக்குப் போதுமான விதம் தருவதாக ஒப்புக்கொண்டிருந்தது. இந்தப் பணத்தை எவ்விதம் செலவழிப்பது என்பதைத் தீர்மானிக்க வேண்டி வந்துவிட்டது. மிஸ்டர் ஸ்டோக்ஸ் அந்தப் பணம் ஏற்கனவே அரசாங்கத்தால் நடத்தப்படும் கலாசாலைகளில் சரியானபடி 'லாபரேட்டரி'களை வைக்க உதவியாக இருக்கும் என்று தீர்மானித்திருந்தார். அது நல்ல காரியந்தான். சர்வகலாசாலை ஆலோசனைச் சபையினால் நியமிக்கப்பட்ட 'கமிட்டி' ஒன்று இவ் விஷயத்தைப் பரிசோதித்து இதற்காக வேண்டப்படுவது ரூபாய் 60,000 என்று அறிவித்திருக்கிறது. இத் தொகை முழுச் செலவிற்கும் போதாது. ஆனால் சொந்தத்தில் ஒரு சிறு தொகையையும் சேர்த்துக் கொண்டு புதிய திட்டத்தைத் தயாரித்து அரசாங்கத்தின் அநுமதிக்காக ஏற்கனவே சர்வகலாசாலை அனுப்பி இருந்தது. அவ்விதம்

அனுப்பிய மனுவை அங்கீகரித்தால் உபாத்தியாயர்களுக்கும் உபந்நியாஸகர்களுக்கும் கொடுக்க வேண்டிய சம்பளம் முதலிய செலவுகளுக்கு இத்தொகை போதுமானதாகும். எதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் அரசாங்கம் இந்தச் சர்வகலாசாலை அனுப்பியிருக்கும் திட்டத்திற்கு வழி ஏதாவது செய்யத்தான் வேண்டும் என்றார்.

(2) அடுத்தபடி, நீதி இலாகா சம்பந்தமாகச் சில யோசனைகளைச் சொன்னார். நீதிஸ்தலத்தில் ஏழாவது ஜட்ஜை நியமித்த பின்னரும் குவிந்துபோன வழக்குகளைத் தீர்க்க வழி ஏற்படவில்லை. ஐந்து வருஷத்து விவரங்களே நீதிஸ்தலத்தின் யோக்கியதையை விவரிக்கப் போதுமானவை. இரண்டு வருஷங்களுக்குக் குறையாமல் பழைய வழக்குகள் சேர்ந்து கிடக்கின்றன. இன்னும் இரண்டு ஜட்ஜுகளையாவது நியமிப்பதுதான் ஒருவிதத்தில் பழைய வழக்குகளைத் தீர்க்க வழி செய்ததாகும் என்று அழுத்தமாகச் சொன்னார். வேண்டுமானால் அவைகள் தற்காலத்திற்குச் செய்த ஏற்பாடாக இருக்கட்டும். ஆனால் அதைச் செய்தேதான் தீரவேண்டும். மேலும் சென்னை ஹைகோர்ட்டு, உயர்ந்த நீதிஸ்தலம் என்ற முறையில் நாட்டில் உள்ள கீழ்க் கோர்ட்டுகளைச் சுற்றிப் பார்வையிட்டுக் கீழ் நீதிஸ்தலங்களில் நடத்தப்படும் காரியங்கள் சரியான முறையில் இருக்கின்றனவா என்பதைக் கவனிப்பதும் முக்கியம். சட்ட ரீதியாக மேல் நீதிஸ்தல ஜட்ஜ் ஒருவர் அங்கங்கே சென்று நீதியைச் சொந்தத்தில் செலுத்த வழி தேடலாம். அதாவது சென்ற இடங்களில் நீதிஸ்தல வேலைகளைத் தாமே சரியாகச் செய்து வரலாம். இன்னும் சொந்த உரிமையில் ஹைகோர்ட்டு சிற்சில சந்தர்ப்பங்களிலும், கீழிருந்து வழக்குகளின் கட்டுக்களைத் தங்கள் பார்வைக்குக் கொண்டு வரும்படி உத்தரவு செய்து விசாரணை செய்யவும் அதிகாரம் பெறலாம். இவைகளெல்லாம் சட்டப் புஸ்தகங்களில் எழுதி வைக்கப்பட்டிருக்கின்றனவே தவிர ஒரு நாளும் அமலுக்குக் கொண்டு வரப் படுவதில்லை.

(3) இன்னும் உயர்தரக் கோர்ட்டில் சரியான யோக்கியதை உள்ளவர்களையே வேலையில் நியமிக்க வேண்டும். இதனால் தற்காலத்தில் நீதிபதி வேலைகளில் இருப்பவர்களின்மேல் யாதொரு குற்றமும் சாற்றுவதாக நினைக்கக் கூடாது. சீமையிலிருந்து ஒரு பாரிஸ்டரை இந்தியக் காரியதரிசி பொறுக்கும் பொழுது அவர் நல்ல சட்ட ஞானம் படைத்தவரா, இந்திய நாட்டு நீதி தருமங்களில் மனத்தைச் சரியாகச் செலுத்தக் கூடியவரா, என்றெல்லாம் கவனித்தேதான் தேர்ந்தெடுக்கவேண்டும். பழைய காலம் அல்ல இது. எத்தனையோ இந்தியத் தீர்ப்புக்கள் நாடெங்கும் குவிந்துவிட்டன. ஜட்ஜாக வருகிறவர் நல்ல புத்திவன்மையும் புதிய விஷயங்களை அறிவதில் உத்ஸாகமும் கொண்டவராக இருத்தல் அவசியம்.

(4) நீதிஸ்தலம் சம்பந்தப் பட்டமட்டில் மற்றொரு விஷயத்தையும் கவனிக்க வேண்டும். 'சிவிலி'யன்களுக்குக் கொடுக்கப்படவேண்டிய அதிகாரத்தைப் பற்றியது அது. நீதி இலாகாவையும் அரசாங்க நிர்வாக இலாகாவையும் தனித்தனியே பிரித்தாலொழிய அவர்களுக்கு நீதிஸ்தலத்திற்கு என்ற தனி அநுபவம் ஏற்படாது. சட்ட ஞானமும் வரவரக் கடினமாகிவிட்டது. ஆயுட்கால முழுவதும் ஒருவர் அதில் பாடுபட்டால்தான் ஓரளவு நியாயத் தீர்ப்பில் சிரத்தையைக் காட்டமுடியும்.

(5) அடுத்தது, ஹைகோர்ட்டு காரியங்களில் வரவரக் குறைந்துவரும் யோக்கியதையைப் பற்றியது. பல குமாஸ்தாக்களின் சம்பளங்களைக் குறைத்ததே அதன் முக்கிய காரணம். ஏதோ சிக்கனத் திட்டத்தின் பேரில் ஒரு காலத்தில் சம்பளக் குறைவு செய்ததை அப்படியே இன்னும் வைத்திருப்பது வேலைகளுக்கு நல்ல யோக்கியதை உடைய குமாஸ்தாக்கள் வரமுடியாமல் செய்துவிட்டது. தஸ்தாவேஜுகளைக் கோர்ட்டில் அவ்வப்பொழுது மொழிபெயர்க்கும் ஊழியங்கள் ஆகவேண்டி யிருக்கின்றன. அவைகளுக்கு ஏற்றபடி ஏற்பாடுகளைச் செய்யாமல், குறைந்த சம்பளத்தில் ஆட்களை வைப்பதால்,

எவ்வளவோ விதத்தில் நியாயம் சீக்கிரம் வழங்கு வதற்குத் தடையாகின்றது. இரண்டு லக்ஷ ரூபாய் பெறுமானமுள்ள நிதி ஒன்று இது சம்பந்தமாக ஹைகோர்ட்டில் சேர்க்கப்பட்டிருப்பது எல்லோருக்கும் தெரிந்ததே. அந்த நிதியை உபயோகிக்காமல் வீணுக ஏன் பெருக்கிக்கொண்டிருக்கவேண்டும்? அதை உபயோகித்து, குமாஸ்தாக்களுக்கு உயர்ந்த சம்பளம் கொடுக்கக் கூடாதா?

(6) இந்திய மத்திய சர்க்கார் கொடுக்க உத்தேசித் திருந்த முப்பது லக்ஷ ரூபாயில் சென்னை மாகாண வீதத் திற்கு மூன்றரை லக்ஷங்களை மட்டும் தந்திருப்பதன் நியாயத்தை அறியவேண்டும். இத்தொகை நம்முடைய சுகாதார வாழ்க்கையின்பொருட்டு இந்திய மத்திய சர்க்கார் கொடுக்க ஒப்புக்கொண்ட தொகை. சென்னைக்கு இவ்வளவு குறைவான தொகை அளிக்கப்பட்டதற்குக் காரணம், ஒருகால் சென்னை, சுகாதார முறையில் ஏற்கனவே தேர்ச்சி பெற்றுவிட்டதென்ற நினைப்பின் அறிகுறியாக இருக்கலாமோ! சுகாதாரப் பிரசாரம் இங்கு அவசியமென்றும், அவ்விதம் செய்ய எத்தனையோ வழிகள் உள்ளன என்றும் பிறபாடு காட்டி, அவைகளையும் பற்றிப் பேசினுர் தம் பிரசங்கத்தில்.

(7) அடுத்தது 'அப்காரி' இலாகா வரி வசூலைப் பற்றியது. இந்த இலாகாவில் வரவரப் பணம் வசூலாவது அதிகமாய்க்கொண்டுதான் இருக்கிறது. இந்த வருஷம் இருநூற்று முப்பத்துநாலு லக்ஷங்கள் வசூல் ஆகியிருக் கின்றன. எல்லாம் சாராயக் கடைகளின் எண்ணிக்கை அதிகமாவதனுல்தான் விருத்தியாகிறது என்பது நிச்சயம். நூறு கஜத்திற்கு ஒரு கடையைப் பார்க்கலாம், நம்முடைய பட்டணத்துத் தெருக்களில். இவைகளைக் குறைப்பது தான் அரசாங்க அதிகாரிகள் செய்யவேண்டிய முக்கியக் கடமை என்பதையும் வற்புறுத்தினுர்.

(8) கடைசி விஷயம், இந்நாட்டுத் தொழிற்சாலைகள் சம்பந்தமான பிரச்னை. க்ஷீணிக்கும் பழைய தொழில்களை வளரச் செய்யவும், புதியனவாகச் சிலவற்றை ஆரம்பிக்க

வும் அரசாங்கம் தனசகாயம் செய்வது முக்கியம். எதற்கும் பலவிதப் பரீக்ஷைகள் இத்துறையில் செய்ய வேண்டியிருக்கிறது. சிலவிதத் தோல்விகளையும் நாம் அடைய நேரிடும். முதலில் இங்கு ஆரம்பிக்கவேண்டிய ஒரு கலாசாலை, தொழில் அபிவிருத்திக்கு உரிய சாஸ்திர ஞானத்தைப் போதிக்கவே தொடங்கவேண்டும். இங்கே கற்றவர்கள், ஜப்பான், அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய அயல்நாடுகளுக்குப் போய் அயல் நாட்டுக் கல்வியையும் அது சம்பந்தமாகப் பெற்றுவரச் சௌகரியங்களையும் அரசாங்கம் செய்ய வேண்டும்.

இம்மாதிரிப் பிரசங்கத்தில் அடுத்தடுத்து விஷயங்களை ஊன்றிப் பார்த்து, குறைகளை மட்டும் எடுத்து விவரிக்காமல் மேலே செய்யவேண்டிய யோசனைகளை எடுத்துப் பேசியது பலருக்கு மிகவும் திருப்தியை அளித்தது. ஏற்கனவே அவ்வருஷம் வரவு செலவுக்கான ஒரு கூட்டத்தை அரசாங்கம் ஏற்பாடு செய்திருந்ததால் ஒருவாறு விவரங்களை நன்கு உணரவும் பரிசோதிக்கவும் சட்ட சபை கூடுவதற்குமுன் அங்கத்தினர்களில் சிலருக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது என்பது அறியத் தக்கது.

அக்காலத்தில் 'இந்தியன் பேட்ரியட்' என்ற தினசரியின் ஆசிரியரான கருணாகர மேனன் என்பவர் மிகுந்த புத்திசாலி. பல துறைகளில் அநுபவம் பெற்றவர். அவர் இச் சட்டசபைப் பிரசங்கத்தை வாசித்து அநுபவித்ததை கடிதமொன்றில் நன்கு வெளியிட்டார்:

"பிரமாதமானது தங்கள் பிரசங்கம்; உண்மையில் இது தான் வரவு செலவுத் திட்டத்தைப் பற்றிய குறிப்பான பிரசங்கம் என்றாலும் மிகை ஆகாது. எவ்வளவு வேகம், எவ்வளவு தடங்கல் இல்லாத சொற்பொழிவு! கருத்துக்களும் பாஷையும் எவ்வளவு நயமாக வந்தன! ஆட்சி வர்க்கத்தையும் நன்கு குத்திக் காட்டும் வார்த்தைகள் எத்தனை! மேலும் அவமரியாதை ஒருவரிடமும் காட்டப்படவில்லை. நம்முடைய சட்டசபைகளில் எவ்வளவோ கீழ்த்தரமான பிரசங்கங்களையே இதுகாறும் கேட்டிருக்கிறோம். இனி, சட்டசபையில் புகழ்பெற ஆசை உள்ளவர்கள் தங்களுடைய வழியைப் பின்பற்றி, தங்கள் அளவிற்கு

ஞானத்தைப் பெறப் பாடுபடவேண்டும். ஆனால், அதற்கு உயர்ந்த கல்வியும் தெளிவான சிந்தனை சக்தியும் வேண்டுமல்லவா ?''*

இந்தப் பத்திரிகையின் மதிப்புரை அநேகமாய்ப் பிரசங்கத்தை நேரில் கேட்டவர்களுடைய எண்ணத்தைப் பிரதிபலித்ததென்றே நாம் கொள்ளவேண்டும். ஏனென்றால், சட்டசபையிலேயே இருந்த மற்றொருவர்,

''உங்கள் பிரசங்கம் பிரமாதந்தான்''

என்று புகழ்ந்தார். இன்னும் ஒருவர்,

''உங்களுடைய மிகவும் உயர்ந்த சொற்பொழிவைப் பற்றி என் பெருமையைத் தெரிவிக்கின்றேன். உங்கள் பயமற்ற தன்மையையும், சுயமதிப்பை இழக்காத தோரணையையும் கண்டு பிரமிக்கின்றேன்''†

என்று எழுதினார். மிஸ்டர் போர்பஸ் என்பவர் சட்டசபையில் புதிய அங்கத்தினருடைய குணங்களை மெச்சி, ''உங்களுடன் ஏற்பட்ட புதுப் பழக்கத்தை மிகவும் பாராட்டத் தொடங்கிவிட்டேன். நாம் இருவரும் சேர்ந்து ஒத்துழைத்து வரும் காரியங்களை ஒருநாளும் மறவேன்'' என்று உறுதி கூறினார்.

சட்டசபையில் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய பயமற்ற சொற்களையும், நடைமுறைக்கு ஒட்டிய மிதமான கொள்கைகளையும், ஆங்கிலத்தில் தடங்கல் இல்லாமல் பேசும் திறமையையும் கண்டு பிரமித்தவர்களுள் கவர்னர் ஸர் ஆர்தர் லாலியும் ஒருவர். எப்படியாவது அரசாங்கத்தில் அவரைச் சேர்த்துவிட வேண்டுமென்று அவர் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். எத்தனையோ விஷயங்களில் அவருடைய அபிப்பிராயங்களைத் தனிமையில் கலந்து பார்த்தும் வந்தார். பலருக்குச் சட்டசபையின் புதிய அங்கத்தினருக்கு அதிகாரிகளிடம் இருந்த செல்வாக்குப் புலப்படலாயிற்று.

பேசுவதற்காகக் கூட்டங்களுக்குச் செல்லும்பொழுது கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கவனித்தவர்கள் மறக்க முடியாதபடியுள்ள அவருடைய தோற்றத்தையும் சிறிய

---

* கடிதம், 7-5-09.

† ஜி. பி. ராஜரத்தின முதலியாரின் கடிதம், 5-4-09.

அங்க சேஷ்டைகளையும் குறித்துள்ளார்கள் : வாய் வெறுமனே எதை எதையோ சொல்ல முயன்று கொண்டிருக்குமாம். பதங்கள் வெளி வராவிட்டாலும் உள்ளே புரளும் எண்ணங்களை எதிரிலுள்ளவர்கள் கவனிக்காமல் இருக்க முடியாது. மேலும் கை ஆள்காட்டிவிரல் திடீரென்று ஆகாயத்தில் கோலம் இடத் தொடங்கும். உள்ளே புரண்ட வேகத்தையே அவை பிறருக்கு வெளியாக்கின. பேசுகையில் வேகம் அதிகமிருப்பினும், கோவையில் குறைபாடோ அல்லது உச்சாரணத்தில் தெளிவின்மையோ அவரிடம் காணப்படா. கரைபுரண்டோடும் வெள்ளமாயினும், கலக்கம் சற்றுமில்லாத தெளிந்த நீராகவேதான் அவருடைய பிரசங்கத்தைக் குறிப்பிடுவார்கள்.

அதற்கு முந்திய வருஷம் [அதாவது 1908, ஜனவரி, 1] வருஷப் பிறப்பன்று கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தங்கப் பதக்கம் ஒன்றை அவருடைய பொதுஜனத் தொண்டைப் பாராட்டி வழங்கக் கவர்னர் ஏற்பாடு செய்துவிட்டார். அதன் அறிக்கையைப் பத்திரிகைகளில்தான் முதல் முதலில் கண்டார் அவர். பதக்கம் 'கேஸரி-ஹிண்டு முதல்தரத் தங்கப் பதக்கம்' எனப் பெயர்கொண்டது; உதார சீலர்களுக்கு அரசாங்கத்தின் மதிப்பை வெளியிடும் விருது இது ஒன்றே, இந்தியர்களுக்குப் பிரிட்டிஷ் ஆட்சியில் உள்ளது. பத்திரிகையில் இதை வாசித்ததும் கவர்னருடைய காரியதரிசியான மிஸ்டர் காம்பெலுக்கு ஒரு கடிதம் சென்றது. அச்சமயம் வழக்குச் சம்பந்தமாகக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் வால்டயரில் இருந்ததால் அங்கிருந்து கடிதம் எழுதியிருந்தார்.

"நேற்றுப் பத்திரிகையில் வெளிவந்திருந்த சமாசாரத்தைப் படித்து ஆச்சரியமடைந்தேன். எனக்கு முதல்தரமான 'கேஸரி ஹிண்டு' பதக்கம் அளிக்கப் போவதாக அதில் கண்டிருந்தது. கவர்னர் என்னிடத்தில் வைத்திருக்கும் உயர்ந்த அபிமானத்திற்குச் சின்னமான இப்பதக்கத்தைப் பெறுவதில் என் நன்றியைச் சரியாக எடுத்துரைக்க என்னால் இயலவில்லை. பொது ஜனங்களுக்கு நான் செய்திருக்கும் சிறு கைங்கரியங்களுக்கு இது ஓர் அரசாங்க அங்கீகாரமெனத் தெரிகிறது. ஆனால் எந்தத்

தர்ம காரியத்தையும் விளம்பரப் படுத்துவது என்பது என்னல் ஒப்புக்கொள்ள முடியாது; அது என் வாழ்க்கை விரதத்திற்கு விரோதமுங் கூட. இது நான் யாசியாமல் எனக்கு வந்தபோதிலும், பலர் அறிய இதைப் பெறுவது என்பதை என் மனத்திலும் நினைக்கவும் முடியவில்லை. மேலும் பொதுஜன ஊழியமும், இம்மாதிரிப் பிருதுகளை வழங்குவதால் நல்ல லக்ஷ்யம் பெற வழி அற்றுவிடும். நல்ல காரியத்தை அதற்காகவே செய்வதை விட்டுப் பிறருடைய நன்மதிப்பின் பொருட்டுச் செய்வதாகும். எப்படியாவது என்னை இந்த இக்கட்டிலிருந்து விடுவித்துக் கொள்ள முயல்வதை நீங்கள் தவருக நினையாமல் இருக்கவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன். ஏதோ விநயம் போல் வேஷம் போடுவதாக நினையாமல் இருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்."*

இவ்விதம் கடிதம் கூறியது. ஆனல் கவர்னர் ஒப்பவில்லை இவ் வேண்டுகோளை. மறுபடியும் கவர்னரின் காரியதரிசி முடிவாக மார்ச்சு மாதம் தகவல் அனுப்பினர்:

"தங்களுக்குப் பதக்கத்தைப் பலர் முன்னிலையில் வழங்க ஒரு தினம் சௌகரியமாய் இருக்கவேண்டுமென்பதை விசாரித்தறியக் கவர்னர் எனக்குக் கட்டளை இட்டிருக்கிறர். மார்ச்சு 24-ஆம் தேதி சௌகரியமாக இருக்குமா? தொழிலுக்காகத் தாங்கள் வெளியூருக்குப் போயிருக்கும் தருணத்தில் இவ்விழாவை வைத்து உங்களை அங்கிருந்து இங்கு வரும்படி தொந்தரவு செய்வதாகவும் உத்தேசம் இல்லை"

என்று மிஸ்டர் காம்பெல் எழுதி, ஒரு நாளையும் பிற்பாடு நிச்சயித்துவிட்டார்.

"மெயில்" அதைப்பற்றித் தலையங்கம் ஒன்றை எழுதியது:

"கனம் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரின் பல அரிய செயல்களையும், இன்னும் கல்வித் துறையிலும், தொழில் அபிவிருத்தித் துறையிலும் அவர் செய்திருக்கும் பொருள் சகாயத்தையும் நினைத்துத் தான், இப்பதக்கம் அவருக்கு வழங்கப்படுகிறது. அவர் பெரிய வக்கீல் என்ற முறையில் அவருடைய தொழில் திறமைக்காக அல்ல இதை அளிக்கிறர்கள்."

ஸர் ஆர்தர் லாலியும் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் அளவுகடந்த நம்பிக்கையை வைக்கத் தொடங்கி இருந்

* கடிதம், 2-1-08.

தார். அவருடைய தோற்றம் முதலியவைகளிலும் பேச்சு வன்மையிலும் மனத்தைப் பறிகொடுத்தவராதலால், ஒரு சமயம் அவர் தமையனார் சுவாமிநாத ஐயரைக் கண்ட பிற்பாடு அண்ணன் தம்பி இருவர்களின் குரல் ஒற்றுமையைக் கூட வேடிக்கையாகப் பேச்சில் குறித்தாராம். சாதாரணமாய்க் கண்ணை மூடிக்கொண்டால் கிருஷ்ணஸ்வாமியின் அதே கம்பீர நாதமும் சொற்களின் வேகமும் அவர் அண்ணாவிடம் வெளிப்படுவதைக் கேட்டுக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் தானே எதிரில் பேசுகிறார் என்று மனம் பிரமிக்கும் என்பாராம்.

நாட்டில் செல்வாக்கு ஏற்பட்டவுடன் பலருக்கு அகம் பாவம் உண்டாவதோடு பிறரிடம் அவமதிப்பும் உண்டாவதைக் காண்கின்றோம். நேற்று வக்கீலாக இருந்த ஒருவருக்கு இன்று நீதிபதி பதவி கிடைத்துவிட்டால் அவருடைய நடையிலும் பேசும் தோரணையிலும் எவ்வளவோ வித்தியாசங்களைப் பார்க்கிறோம். ஆனால் கவர்னருடைய மதிப்பும், புகழும் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் சுபாவத்தை மாற்றவில்லை. என்றைக்கும் போலவே அவர் மேன்மேலும் உயர்ந்த காரியங்களைச் செய்வதிலேயே குறியாக இருந்தார். பிடரியில் எமன் கையை வைத்திருப்பதை அறிந்தவர்போல் மறு இரண்டு மூன்று வருஷங்களில் பத்து வருஷத்துக் காரியங்களைச் செய்ய முயன்றார். செயலில் வாழ்க்கை விரதங்களைக் காட்டக் கூடியவர்களுக்கே ஒழுங்கான யோசனையும் பொறுப்பும் ஏற்படக் கூடும். அதனாலேயே தீவிர வாதத்தை அதிகமாக எதிலும் அவர்கள் கடைப்பிடிப்பதில்லை.

# அத்தியாயம் 21

## சந்நியாசத்தில் பற்று

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்" —குறள்.

பலவித மனிதர்களையும் விசித்திர ஆடைகளையும் பார்த்தவர்கள்கூட, காவியுடையைக் கண்டவுடன் புதியதோர் உணர்ச்சியைப் பெறுகிறார்கள். காஷாயம் என்பது வைராக்கியத்தின் அடையாளமாக ஆனதே அவ்வித உணர்ச்சிக்கு முக்கிய காரணம். இந்திய தேசத்தின் தனிச்சிறப்புடைய பண்பாட்டில் கொஞ்சங் கூடப் பரிசயம் இல்லாத பிறநாட்டினர்கள்கூட, காஷாயத்தைத் தரிக்கும் ஒருவரைப் பார்த்தால் அவரைக் கவனியாமல் இருப்பதில்லை. நாம் சந்நியாசிகளுக்கு இங்கே அளிக்கும் தனிக் கௌரவத்தை அவர்கள் கொடுக்காவிட்டாலும், சாமானிய ஜனங்களைப் புறக் கணிப்பதுபோல் அவர்களைக் கவனியாமல் இருப்பதில்லை. காரணத்தை அறிவது எளிதுதான்; மற்றத் தேசங்கள் சுகபோகங்களையே நாகரிகத்தின் உச்சியாகக் கருதிக் கொண்டிருக்கும் இக்காலத்திற்கு அநேக ஆண்டுகளுக்கு முன்பே, இந்திய மக்களில் உயர்ந்தோர் சுகபோகங்களுக்கு உடலை இரையாக்காமல் தம்மைப் பாதுகாப்பதை வாழ்க்கையின் மேலான தருமமாகக் கருதினார்கள். அரசர் களும் தனவந்தர்களும் சந்நியாச நிலையை வாழ்க்கையின் முக்கிய நோக்கமாக நினைத்தனர்; பக்குவமான மனப் பாங்கைப் பெற்று, வைராக்கியத்தின் அறிகுறியான காஷாயத்தைப் பூண்டு, கையில் கபாலம் ஏந்தித் தெரு வழியே சென்று கிடைத்ததை உண்டனர்; கடவுள் வணக்கத்திலும் பல சமூக ஊழியங்களிலும் தம் பெரும்பொழுதைக் கழித்து வந்தனர். இதற்குரிய பல வரலாறுகளை நாம் கேள்வி யுற்றிருக்கிறோம்.

ஆனால் மேல்நாட்டு நாகரிகத்தில் மோகம்கொண்ட சிலருக்குச் சந்நியாசிகள் என்றதுமே, கேவலம் 'போலிப் பண்டாரங்கள்' என்ற எண்ணம் உண்டாவதை நாம் பார்க்கிறோம். எல்லா வகுப்புக்களிலும், வாழ்க்கைத் துறைகளிலும் போலி மனிதர்கள் இருக்கிறார்கள்; அவ்வாறே, சந்நியாச ஆசிரமத்திலும் ஒரே விதமான உயர்ந்த நோக்கத்தையும் செயலையும் மேற்கொள்ளாதவர்கள் இருப்பது இயல்புதான். அந்த ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு, காஷாயம் பூணும் மனிதர்கள் யாவருமே வேஷதாரிகள் என்று தீர்மானிப்பது புத்தியீனம் என்பதில் சந்தேகமில்லை அல்லவா!

எட்டு வயசிலேயே சந்நியாச ஆசிரமத்தை மேற்கொண்ட சங்கரபகவத் பாதரைப்போன்ற மஹான்களைப் பெற்ற பூமி இந்நாடுதான். அந்தப் பெரிய பரம்பரையில் வந்தவர்கள் பலர். இன்னும் சதாசிவப் பிரம்மேந்திரரைப் போன்ற சித்திகள் பெற்ற பல துறவிகளைப் பெற்றதும் இப்புண்ணிய தேசமே. சமீப காலத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரையும், அவருடைய சிஷ்ய கோடிகளையும் கண்டு நம் நாட்டின் தனிச்சிறப்பில் மோகம்கொண்ட பலர், மேல்நாட்டிலும் ஏற்பட்டுவிட்டார்கள். முக்கியமாக புதிய செல்வம் படைத்துக் கொழுத்த அமெரிக்காமுதலிய நாடுகளுக்குச் சென்று இந்திய சமூகத்தின் பண்பாட்டையும், சமய ஆசாரங்களின் உயர்வையும் ஓர் இந்திய சந்நியாசி தெரிவித்துக் கௌரவமும் அடைந்தார் என்பதை நாம் ஒருகாலும் மறக்கமுடியாது.

ஆம்! சுவாமி விவேகானந்தரையும், அவர் உள்ளத்தில் பிரகாசித்த தெய்வத் தன்மையின் மகிமையையும் முதல் முதலில் உணர்ந்த பெருமை சென்னை வாசிகளுக்கேதான் உரியது. சுவாமிகளை அவர் பிறந்த வங்காள தேசம் போற்றாமலிருந்த நிலையில் மணி ஐயர் அவர்களே முன்னின்று, தாமே வேண்டிய உதவியைச் செய்து அமெரிக்காவிற்கு அவரை அனுப்பத் தலைப்பட்டார். பிறகு சிகாகோ நகரத்தில் கூடிய ஸர்வ சமய மகாநாட்டில் 'உலகமே இதுவரையும் கண்டிராவிதம் ஹிந்து தர்மத்தைப் போதிக்கும் பெரியார்'

என்னும் புகழைச் சுவாமி விவேகானந்தர் பெற்ற வரலாற்றை இந்தியர்களான நாம் நன்கு அறிவோம். அன்று – அதாவது சுவாமிகள் சந்நியாசக் கோலத்தில் முதலில் வந்தபொழுது, அவருடைய விழிகளில் ஜ்வலித்த தவப்பொறியையும், அவர் நாவில் விளையாடிய அறிவின் திருவையும் முதலில் உணர்ந்தவர்களை நாம் மறக்கவே முடியாது.

மேல் நாடுகளில் அநேக நாட்கள் தங்கி, ஹிந்து தர்மத்தையும் சமய வழிபாடு முதலியவைகளையும் பிற நாட்டார் உள்ளங்களில், தம் வாக்கின் வன்மையினால் நன்கு பதியவைத்து, 1896-ஆம் வருஷம் சொந்த ஊர் திரும்பிய சுவாமிகளுக்கு முன்னதாக வரவேற்பு உபசாரங்களைச் செய்தது, சென்னை மாகாணமே. சுவாமிகள் கொழும்பு மார்க்கமாக இந்திய நாட்டை அடைந்தார்கள். தாம் வருவதற்கு முன்பே சில அரிய நண்பர்களுக்கு, சந்நியாசி களுக்கு உரிய ஓர் இல்லத்தைச் சென்னையில் ஸ்தாபிக்க வேண்டுமென்று தமக்குள்ள விருப்பத்தைத் தெரிவித் திருந்தார். அந்தச் செய்தியை 1896-ஆம் வருஷம் டிசம்பர் 16–ஆம் தேதி கூடிய சென்னைப் பிரமுகர்களின் முன்பு, புகழ்பெற்றவரும் மயிலாப்பூர் வாசியுமான டாக்டர் எம். சி. நஞ்சுண்ட ராவ் அவர்கள் தெரிவித்தார். அவ்விதமான ஏற்பாடுகளில் மிகவும் உத்ஸாகத்துடன் சேர்ந்து உழைத்தவர்களில் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் ஒருவர். வைராக்கியம் என்னும் அளவிடமுடியாத பொக்கி ஷத்தை மனத்தினால் அவர் சதா போற்றியவர். 1897–ஆம் வருஷம் பிப்ரவரி 7-ஆம் தேதி சுவாமிகள் சென்னையில் வந்திறங்கியதும், அவரை நேரில் உபசரிக்க முன்னால் மணி ஐயரும், அவருடைய நிழல் வழி நின்ற இளங்கன்றுகளில் ஒருவராகக் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் விளங்கினார்கள். சென்னபட்டணம் பட்டபாடு அன்று அல்லோலகல்லோ லந்தான். எங்கும் ஜனங்களின் பெருமை அவர்கள் முகங் களில் காணப்பட்டது. சுவாமிகள் அன்று செய்த சொற் பொழிவில் மதி மயங்கியவர்களுக்குக் கணக்கே இல்லை. சுவாமிகளின் வெண்கலம்போன்ற குரலும், மொழிகளின்

வீழ்ச்சியும் கேட்போர் மனத்தைக் கொள்ளைகொண்டு விட்டன. அதிகக் காலதாமதமின்றிப் பின்வருமாறு பிரசங்கத்தை முடித்துக்கொண்டு சுவாமிகள் அந்தப் பெருங்கூட்டத்தைக் கலைத்துவிட்டார்:

"உங்கள் உத்ஸாகத்தைப் பார்த்து நான் மிகவும் சந்தோஷம் அடைகிறேன். நாம் எப்போதும் விரும்புவது உத்ஸாகமே. ஆனால் இன்றோடு அதை நிறுத்திக் கொள்ளாமல், மேன்மேலும் வளர்க்க வேண்டும்; ஒருகாலும் அதைக் குன்றவிடக் கூடாது. அந்தக் கனலின் ஜ்வாலையைத் தணிக்கக்கூடாதுதான்! பாரத பூமியில் நாம் அனைவரும் அரிய தொண்டுகளைச் செய்யவேண்டும். நீங்கள் எப்போதும் நற்காரியங்களில் எனக்கு உதவி செய்யவேண்டும். இனி அதிகக் காலதாமதம் செய்து உங்களுக்குச் சிரமத்தைக் கொடுக்க எனக்கு இஷ்டமில்லை. ஆகையால் இப்பொழுது உங்களுடைய உத்ஸாகத்திற்கும், எனக்குச் செய்த கௌரவத்திற்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். பிறகு, நிதானமாக இருக்கும் சமயங்களில் ஒருவரோடொருவர் பேசியும் கலந்தும் நாம் செய்யவேண்டியதை யோசிக்க இயலும். இப்பொழுது என் வந்தனத்தை அங்கீகரிப்பீர்களாக!"
என்று ஆங்கிலத்தில் பேசி முடித்தார்.

அவரை, சமுத்திரக்கரையில் 'ஐஸ்ஹௌஸ்' என்னும் மாளிகையில்தான் தங்கச் செய்தார்கள். நேரில் அவரிடம் பேசும் பாக்கியம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும் கிட்டியது. சுவாமிகளின் பேச்சும், அருள் நிரம்பிய முதுமொழிகளும் அவருடைய உள்ளத்தை ஆட்கொண்டன என்பதில் என்ன சந்தேகம்! சுவாமிகள் சென்னையில் தங்கிய ஏழு நாட்களிலும் பல இடங்களில் பிரசங்கங்கள் செய்தார்கள். ஒன்றையும் விடாமல் கேட்டுப் பெருமையும் உத்ஸாகமும் கொண்ட அவர், நண்பர் பலருடன் எப்பொழுதும் சுவாமிகளையே நினைந்து நினைந்து சம்பாஷணை செய்வார். சுவாமிகளையும் அவருடன் வந்தவர்களையும் விசாரிப்பதிலும், அவர்களுக்குப் பல தொண்டுகள் செய்யத் தம்மைவிடச் சிறுவர்களானவர்களை ஏவுவதிலும் அவர் கவனம் செலுத்தினதாகத் தெரிகிறது.

சென்னையில் ராமகிருஷ்ண மடம் ஒன்று நிறுவ வேண்டும் என்னும் கருத்துடைய, சுவாமி விவேகானந்தர், ராமகிருஷ்ணானந்தர் என்னும் பெயருடன்

விளங்கியவரும், பரமஹம்ஸருடைய சிஷ்யர்களில் முக்கிய மானவருவான ஒரு பெரியாரைத் தாம் கல்கத்தா சென்றதும் சென்னைக்கு அனுப்பியிருந்தார். அவர் 'ஐஸ் ஹௌஸி'ல் ஏழு எட்டு வருஷங்கள் வாசம் செய்து, தம்மை அணுகும் இளைஞருக்கும் முதியவருக்கும் பல அரிய ஹிந்து தர்ம ரகஸ்யங்களைப் புகட்டியும், ஈசுவர பஜனைகளைச் செய்தும் பெரும் மதப்பற்றை உண்டாக்கிக் கொண்டிருந்தார். ஆனால் விவேகானந்தர் மறுபடியும் பட்டணம் வந்து தாம் மேற்கொண்ட காரியத்தை நிலைக்கும்படிச் செய்வதற்கு முன்பே காலமானார். அவர் சாயுஜ்யம் அடைந்தபின் நடந்த ஒரு பொது ஜனக் கூட்டத்தில்,

"சுவாமிகளின் உள்ளத்துக்கு மிகவும் உவப்பான காரியம், சந்நியாசிகளுக்கு இருப்பிடமான ஒரு மடத்தை எழுப்புவது. அப்படிச் செய்தால்தான் அவருடைய அரிய ஞாபகத்தை நாம் போற்றியவர்கள் ஆவோம்"*

என்னும் கருத்தைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு தீர்மானத்தின் மூலம் அங்கே கூடிய ஜனங்களுக்குத் தெரிவித்தார். சுவாமிகளின் பெருமையையும் வைராக்கிய சீலத்தையும் உணர்ச்சி ததும்பும் வார்த்தைகளில் அன்று அவர் எடுத்துச் சொன்னார். அவைகளில் பின்னுள்ள சில வாக்கியங்கள் சந்நியாசத்தில் அவருக்குள்ள கௌரவ புத்தியை எடுத்துக் காட்டுகின்றன.

"காஷாயமே ஹிந்துக்களின் வைராக்கியத்திற்கு உவந்த சின்னமாகும். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளைத் துறக்கும் மார்க்கமும் அதுவேதான். சுவாமிகள் சந்நியாச ஆசிரமத்தை இளமையிலேயே பெற்றார்கள். விவேகானந்தர் அமெரிக்காவுக்குச் செல்லுவதற்கு முன், பட்டணம் வந்த பொழுது, அவரை அறிவார் ஒருவரும் இங்கில்லை. ஆனால் தம்மைச் சூழ்ந்த சிறுவர்களுக்கெல்லாம் அவர் சொல்லரிய உபதேசங்களைச் செய்து உதவினார். அப்பொழுது நம் மணி ஐயர் அவர்களே சிலருடன் சுவாமிகளின் அருமையை உணர்ந்தார்கள். தனிப்பட்ட பிரதிபையையும், ஆத்ம சக்தியையும், ஞானத்தின் தெளிவையும் அவரிடம் கண்டு சிகாகோ நகரில் நடைபெற்ற

* பிரசங்கம், 25 ஜூலை 1902 'ஹிந்து'

உலக சமய மகாநாட்டுக்கு அவர்கள் அவரை அனுப்பினார்கள். சுவாமிகள் பெரும் மதாசாரியர் மட்டுமல்லர். அமெரிக்காவி லிருந்து இங்குள்ள சில நண்பர்களுக்கு எழுதிய கடிதங்களில், தம் கனிவையும், தொண்டுசெய்யும் ஆற்றலையும், சிறுவர்களை உத்ஸாகப்படுத்தும் எண்ணத்தையும் அவர் தெளிவாகக் காட்டியிருக்கிறார். ஒரு நாள் என் நண்பர் ஸ்ரீ அழகியசிங்கப் பெருமாள் இக்கடிதங்களை ஜனங்கள் எல்லோரும் வாசித்து அநுபவிக்க வழி தேடிவிடுவார் என்பது என் வேண்டுகோள்.

"பெரிய சந்நியாசி ஒருவர் இப்பொழுது காலமாய்விட்டார். அவரை என்றும் நன்றாக நினைப்பு மூட்டும் ஞாபகச் சின்னத்தை எழுப்ப நாம் வழி தேடவேண்டும். நான் கொண்டுவரும் தீர்மானத்திற்குத் தனசகாயம் வேண்டியதும் அவசியம். இம் மாதிரி விஷயங்களுக்குச் சரியான பொருள் உதவி கிடைக்காமல் எடுத்த காரியம் நசித்துப்போவது சிலருக்கு ஞாபகத்தில் வரலாம். இங்கிருக்கும் ஸௌகரியங்களே இக்காரியத்திற்குப் போது மானவை. இளம் பிராயத்துடன் மனச் சோர்வில்லாமல் உழைக்கக் கூடியவர்களே நமக்கு முக்கியமாக வேண்டும். அவ்வித மான இளைஞர்கள் கிடைத்தால் இக்காரியம் கைகூடுவதில் எனக்குச் சந்தேகமே இல்லை. இந்தத் தேசத்தில், பிச்சை எடுக்கும் ஏழைப் பிராம்மணர்களும், ஆசார ஒழுக்கமுள்ள விதவை ஸ்திரீகளுங்கூட வீடு வீடாய்ப் பொருள் யாசித்துத் தங்கள் மனத்தில் போற்றிவந்த சிறு தரும காரியத்திற்கும் உதவி பெறுகின்றதை நாம் தினம் பார்க்கவில்லையா ? ஒரு கோவில் விக்கிரகத்திற்கு நகை செய்வதன்பொருட்டு லக்ஷக்கணக்கான தனத்தைத் தேடும் ஊழியர்களையும் நாம் பார்க்க வில்லையா ? எக்காரணத்தினால் அவர்கள் எடுத்துக்கொண்ட காரியத்தைச் செய்து முடிக்கின்றார்கள் ? ஜனங்கள் அவர்களுடைய உண்மை யான எண்ணத்திலும் காரிய லக்ஷ்யத்திலும் நம்பிக்கையை வைப்பதே அதற்குக் காரணம். சேர்த்த பணமெல்லாம் கெட்ட காரியத்தில் செலவிடார்கள் என்று எண்ணுவதுதான் அவர்கள் நம்பிக்கைக்கு ஆதாரம். இன்று சுவாமி விவேகானந்தரின் ஞாபகார்த்தமாகச் செய்யவேண்டிய காரியத்தில் தளராத ஊக்கத்தைப் பெற்றவர்களும் உயர்ந்த லக்ஷ்யத்தை உடையவர் களும் கலந்து கொண்டால் எடுத்த காரியம் கைகூடுவதில் என்ன ஆச்சரியம் ?"

பிறகு அவ்வருஷமே ஸெப்டெம்பர் 17-ஆம் தேதியில், கிருஷ்ணஸ்வாமி ஐயரும், ஜி. வேங்கடரங்கராவும், ஜி. ஏ. நடேசனும் சேர்ந்து பொருள் உதவி வேண்டுமென்று ஜனங்களுக்கு ஒரு விண்ணப்பம் விடுத்தார்கள். அதில்

மறுபடியும் சுவாமி விவேகானந்தரின் அரிய செயல்களையும் உயர்ந்த அம்சங்களையும் குறித்துவிட்டுக் கடைசியில்,

"பல தர்ம சிந்தனைகளுடன் கூடிய இத்தேசத்திலா எங்கள் காரியத்திற்கு உதவி வராமலிருக்கும்?..................மற்ற மதங்களின் பிரசாரகர்கள் நம் நாட்டின் சீர்குலைந்த நிலைமையை அறிந்து, நம் சமய உணர்ச்சியின் குறைவையும் தெரிந்துகொண்டு பஞ்சமும் பண ஆசையும் நாட்டில் பரவியிருப்பதையும் உணர்ந்து இதுதான் தங்களுக்குத் தக்க சமயமென்றுகூட எண்ணித் தங்கள் மதத்திற்கு ஆட்களைச் சேர்க்கத் துணிந்திருக்கிறார்களே! இப்போதல்லவா நாம் விழித்தெழுந்து வேலை செய்வதற்குச் சரியான தருணம்? நாளை உண்ண உணவு எங்கிருந்து கிடைக்குமோ என்று அறியாதவர்களும், மதப்பிரசாரத்தில் ஊக்கத்துடன் வேலை செய்பவர்களுமான சந்நியாசிகளைச் சேர்த்து ஓரிடத்தில் நிலையாக இருப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டாமா நாம்? அன்பின் முக்கிய நோக்கத்தையே கடைப்பிடித்து, வேதாந்தக் கொள்கைகளை விளக்க நாம் நல்ல ஸ்தாபனத்தை உண்டாக்கவேண்டாமா? வேதாந்த விசாரங்கள் செய்யத் தகுந்த காலங்களில் பண்டிதர்களையும் சாஸ்திரப் பயிற்சி உள்ளவர்களையும் அழைத்துச் சர்ச்சை செய்யும் கூட்டங்களைக் கூட்ட வேண்டாமா? இந்த மடத்தின் பார்வையிலேயே, உண்ண உணவற்றவர்களுக்கும், அநாதைகளுக்கும் உதவி புரியவேண்டிய சாதனங்கள் பலவற்றை ஏற்படுத்தவும் கூடும். பூஜ்யரான ராமகிருஷ்ணானந்த சுவாமிகளைப் போன்ற சில பெரியார்கள் ஏற்கனவே நம் நடுவில் இவ்விஷயத்தில் வேலை செய்து வருகிறார்கள். ஆகையால் இச்சந்தர்ப்பத்தை விட்டுவிட்டோமானால் நம்மையே தூஷிப்பார்கள் நம் ஸந்ததிகள். நம் தேச மக்கள் எப்போதும் இக்காரியத்தின் முழுப் பிரயோஜனத்தையும் உயர்வையும் உணர்ந்து தகுந்த உபகாரம்செய்ய முன் வருவார்கள் என்று உறுதியாக நினைக்கின்றோம். பெரிய ரிஷிகளுடைய அநுக்கிரகமும் ஸர்வேசுவரனுடைய திருவருளும் உபகாரம் செய்பவர்களுக்குக் கிட்டுவனவாக!"

என்று அதில் வாக்கியங்கள் முடிவடைந்திருந்தன. விண்ணப்பங்களை வாயால் பிறருக்குச் சொல்லிவிட்டுக் காரியத்தில் எதையும் நடத்தாத சில தனிகர்களைப் போன்றவர் அல்லர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். ஆகையால், தாம் உடனே ரூபாய் 500 கொடுப்பதாகக் கையெழுத்து இட்டார். உடனே அக்காரியத்தில் அநுதாபம் காட்டிய மற்றவர்களும் தங்கள் தங்கள் சட்டைப் பைகளில்



ஜி. ஏ. நடேசன்

சுவாமி பாபா பிரேமானந்த பாரதிகள் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்

கி. சந்திரசேகரன்

(ஆசிரியர்)

(1910)

கையை இட்டார்களா என்ருல், அதுதான் இல்லே! ஆகையால் பணம் சேருவதற்குக் கொஞ்சம் காலதாமதம் ஆகிவிட்டது. தம்முடன் ஓடி ஆட உதவிக்காக விண்ணப் பத்தில் கையொப்பமிட்ட மற்ற இரண்டு நண்பர்கள், தம்மைவிட அவகாசம் பெற்றிருந்தும், சீக்கிரம் வேலே செய்யவில்லே என்று இரண்டொரு தடவைகளில் அவர் களேக் கடிந்து கொண்டும் இருக்கிருர் என்று தெரிகிறது.

*1905*-ஆம் வருஷம் ஒரு சமயம் காலஞ்சென்ற ராவ்சாகிப் ராமஸ்வாமி ஐயங்கார் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் ஏழை வித்தியார்த்திகளுக்காக ஒரு ஸ்தாபனம் நிறுவவேண்டுமென்று தமக்குத் தோன்றுவதாகவும் அதற்கு அவருடைய உதவி வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். உடனே அவருக்குக் கடுமையாகப் பதில் கிடைத்தது. "அநேக காரியங்களில் நீ தலேயிட்டுக் கொண் டிருக்கிருய். சுவாமி விவேகானந்தருடைய ஞாபகார்த்த மாகச் செய்ய எண்ணிய காரியம் இன்னும் முடிந்தபா டில்லே. மேலும் வேறு சில காரியங்களும் உனக்கு இருக் கின்றன. இரண்டு நாளுக்குமேல் உயிர்வாழாத பல காரியங்கள் இத்தேசத்தில் உண்டாவதையும் நான் அறிவேன். வீணுகப் பொதுமக்கள் பணத்தைச் செல விடக்கூடாது. நான் இக்காரியத்தில் உனக்கு உதவி செய்யமாட்டேன்."

ஸ்ரீ ராமு அவரிடம் பரம விசுவாஸம் கொண்டவர். அவரும் அவருடைய சகோதரர் ராமாஞ்சுவும் (ராவ்பகதூர் ராமானுஜாசாரியர்) சதா "கிட்டண்ணு" என்றே என் தந்தையாரை அழைத்து நெருங்கிப் பழகியவர்கள். மேலும் அவ்விருவர்களுமே வீடு வீடாய்ச் சென்று விவேகானந்தருடைய ஞாபகார்த்தக் காரியத்திற்கு வேண்டிய பொருளேப் பிற்பாடு அவருடைய தூண்டுதலின் பேரிலும், தங்களுடைய சுய உழைப்பினுலும் சேமித் தார்கள். மேலே சொன்ன கடுமையான மொழிகள் மித மிஞ்சிய பழக்கத்தினுலும் காரியத்தைச் செய்து முடிக்கும் ஆற்றலினுலும் எழுந்தவை என்று ராமுவே தம்முடைய 'நினேவுகள்' என்னும் கட்டுரைகளில் சொல்லியிருக்கிருர்.

மறுவருஷத்திலிருந்தே ராமு தொடங்கிய ஏழை மாணவர் இல்லத்திற்காகத் தம்மாலான உதவியை – முதலில் தர மாட்டேன் என்று சொன்னவர் செய்து உதவினர்.

பணம் சேருவதற்கு ஐந்து வருஷங்களுக்கு மேலாயிற்று. 1907–ஆம் வருஷம் ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தை மயிலாப்பூரில் பிராடிஸ் ரோடில் ஒரு சிறிய விடுதியாகக் கட்டுவதற்குப் போதுமான தனத்தை வைத்துக்கொண்டு கட்டி முடித்தார்கள். பரம ஹம்ஸருடைய முக்கிய சீடர்களாகிய சுவாமி ராமகிருஷ்ணனந்தரும், சுவாமி பிரம்மானந்தரும் மயிலாப்பூரில் மடத்தை 1907–ஆம் வருஷம் ஆரம்பித்து வைத்தார்கள். அதனுடைய முழுச் சரித்திரமும் வளர்ச்சியும் நாம் அறிந்தவைகளே.

கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குச் சந்நியாச ஆசிரமத்தில் இருந்த பற்றுதல் இரத்தத்திலே ஊறியதென்றுதான் நாம் கொள்ளவேண்டும்.

1907-ஆம் வருஷம் நவம்பர் மாதம் 3-ஆம் தேதி பட்டணத்துக்கு மற்றொரு சந்நியாசி வந்து சேர்ந்தார். அவரும் மேல் நாடுகளுக்குச் சென்று அமெரிக்காவில் பல சீடர்களைப் பெற்றிருந்தார். சென்னையில் இவர்களுக்கெல்லாம் இடம்கொடுத்து வேண்டியபடி உதவி செய்யும் பண்பாடு என் தகப்பனருக்கே அதிகம் இருந்திருக்க வேண்டும். கொழும்பு வழியாக, **பாபா பிரேமானந்த பாரதி சுவாமிகள்** என்னும் பெரியார் அமெரிக்காவிலிருந்து சென்னை வந்துசேர்ந்தார். வீட்டில் அவருக்கு உபசாரம் நடந்தது. கிருஷ்ணஸ்வாமி ஐயரைப்பற்றி சுவாமிகள் அதற்கு முன்பு அவ்வளவாக அறிந்தவரல்லர். வந்தவரை அவர் உபசரித்துவிட்டு, அவருக்கு ஸ்நானம் முதலியவைகளுக்குத் தக்க வசதி செய்விக்க ஆரம்பித்தார்.

சுவாமிகள் பூஜை முதலியவைகள் செய்வது உண்டு. ஏதோ கிருஷ்ண ஸ்தோத்திரங்கள் சிலவற்றை வாயால் சொல்லிக்கொண்டே, கோபீ சந்தனத்தால் உடம்பெல்லாம் முத்திரைகள் தரித்துக் கொள்வார். இவைகளைக் கண்ட கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குக் கொஞ்சம் கொஞ்சமாக

அவரிடம் மதிப்புக் குறையத் தொடங்கியது. சுவாமிகள் ஆகாரம் செய்தபிறகு வாசலில் வந்து உட்கார்ந்தார். வீட்டு எஜமானர் அவரைப் பார்த்து, "சுவாமிஜீ, உங்களை ஒரு கேள்வி கேட்கவேண்டும்" என்ருர்.

அவர், "என்ன வேண்டும், கேளுங்கள்" என்ருர்.

"உங்களைப் பார்த்தால் போலிச் சந்நியாசியாகத் தோன்றுகிறது" என்ருர்.

அவ்வளவுதான்! பாபா பிரேமானந்தர் ஒன்றுமே தோன்ருமல் பிரமித்துவிட்டார். சற்று நிதானித்துக் கொண்டு, "எதைக்கொண்டு உங்களுக்கு இந்தக் கருத்து உண்டாயிற்று?" என்று மறுபடியும் வினவவே, "ஒன்று மில்லை; உங்கள் பூஜை முதலியவைகளைப் பார்த்தால் உயர்ந்த நிஷ்டை முதலிய சாதனங்களைப் பெற்றவராகக் காணவில்லையே! அதனுல்தான் கேட்டேன். மன்னிக்க வேண்டும்" என்ருராம் பதிலுக்கு. "அதுவா? வாஸ்தவம். என் குருநாதரின் ஞாபகார்த்தமாகவேதான் இப்பூஜையை இன்னும் வைத்துக்கொண் டிருக்கிறேன். மற்றப்படி நிஷ்டைகள் முதலியவை எனக்கு அதிகம் உண்டு. என்னுடன் பழகிய பிறகு அறிவீர்கள்" என்ருராம்.

இந்தச் சமாசாரத்தை, பாபா பிரேமானந்தர், தம் நண்பர் காலமான மறுவருஷம் சென்னையில் எங்களுடன் வசித்தபொழுது நேரில் சொன்னுர். சொல்லும்பொழுது, "அவருடைய உள்ளம் எவ்வளவு சுத்தமானது! என்னை அக்கேள்வியைக் கேட்கத் துணிந்த மனத்தின் தூய்மை தான் எவ்வளவு மேலானது!" என்றெல்லாம் புகழ்ந்து பாராட்டினுர்.

பாபா பிரேமானந்தர் உயர்குலத்தைச் சேர்ந்தவர். கல்கத்தாவிலுள்ள பிரமுகர் ஒருவரின் வம்சத்தில் உதித்தவர். பதின்மூன்று வயசிலிருந்தே பல ஆங்கிலக் கட்டுரைகள் எழுதிப் பத்திரிகையில் பிரசுரித்தவர். இருபத்திரண்டாம் வயசில் பஞ்சாபில் உள்ள பிரபல பத்திரிகையான 'டிரிபியூன்' என்பதன் ஆசிரியராகவும் இருந்தார். ஆனுல் கொஞ்ச காலமானதும் உலக

வாழ்க்கையாகிய வலையினின்று தப்பும் மார்க்கத்தைத் தேடிவிட்டார். சந்நியாசியாகக் கொஞ்சகாலம் பல சமய நூல்களையும் கற்ருர். ஆனாலும் மனத்தில் நிதானத்தையும் சாந்தியையும் அடையவில்லை. கூடிய சீக்கிரத்தில் குருவின் உபதேசம் பெற்று ஸகுணோபாஸனை செய்யத் தொடங்கினர்.

அவர் மனம் கவர்ந்த மூர்த்தி ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் பால வடிவந்தான். பிருந்தாவனம் முதலிய க்ஷேத்திரங்களுக்குக் கால்நடையாகச் சென்று பரம் பொருளின் சாந்நித்தியத்தைத் தேடினர். பிறகு கனவில் கிடைத்த ஒரு கட்டளையின்படி அவர் மேல் நாடுகளுக்குப் பிரயாணமானர். நியூ யார்க்கில் பல வருஷங்கள் இருந்தார். பிறகு ஸான் பிரான்ஸிஸ் கோவிலுள்ள லாஸ் ஆன் ஜிலஸ் என்னும் நகரில் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவுக்குக் கோயில் ஒன்று கட்டுவதில் ஈடுபட்டிருந்தார். அவர் செய்த பிரசங்கங்களும், எழுதிய கட்டுரைகளுமே பல உயர்தரமான சீடர்கள் அவரிடம் வந்து சேரக் காரணமாயின. ஐயாயிரத்துக்குக் குறைவில்லாமல் சிஷ்ய கோடிகள் அவருக்கு அக்காலத்தில் அமைந்தார்கள். ஹிந்து மதக் கருத்தைப் பிரசாரம் செய்யவேண்டி 'இந்திய விளக்கு' என்ற ஆங்கில மாதப் பத்திரிகை ஒன்றை அவர் நடத்திவந்தார். சொந்த நாட்டுக்குச் சென்று தம் காரியத்திற்கும் ஹிந்துமதப் பிரசாரத்திற்கும் வேண்டிய பொருளையும், சகாயத்தையும் தேடவேண்டுமென்று கருதியே இங்கு வந்து சேர்ந்தார்.

1907-ஆம் வருஷம் நவம்பர் மாசம் மூன்ரும் தேதி சென்னபட்டணத்திற்குப் பன்னிரண்டு சிஷ்யர்களுடன் அவர் வந்தார். அவர் வருவதற்கு முன்னமேயே அவரைப் பற்றிய குறிப்புக்கள் சீமைப் பத்திரிகைகளிலிருந்து 'ஹிந்து' பத்திரிகையில் எடுத்து வெளியிடப்பட்டிருந்தன. முக்கியமாக அவருடைய தோற்றம், செயல்கள் முதலியவைகளை விவரிக்கும் குறிப்புக்கள் பல வெளி வந்தன.

"ஆஜாநுபாகுவாய்க் கண்ணைப் பறிக்கும் முகப்பொலிவுடன், உயர்ந்து நிமிர்ந்து கம்பீரமாயுள்ள மேனியும், கறுத்த விழிகளும் உடையவர்"

என்றும்,

"அவர் மதம் அன்பு என்பதுதான்"

என்றும்,

"டால்ஸ்டாய் என்னும் பேராசிரியர், தம் பத்திரிகையில் எழுதிய 'வெள்ளையர்களால் ஆபத்து' என்ற கட்டுரையை, தாம் ருஷிய பாஷையில் மொழிபெயர்க்க அனுமதி கேட்டார்"

என்றும் பல சமாசாரங்கள் வெளி வந்தன. இவை யாவும் 1907-ஆம் வருஷம் அக்டோபர் 12-ஆம் தேதி 'ஹிந்து' பத்திரிகையில் குறிக்கப்பட்டிருந்தன. ஆனால், இவை தெரிந்த பின்பும், நேரில் அவரைக் கண்டபோது கிருஷ்ணஸ்வாமி ஐயர் மேலே சொன்னவாறு ஒளிவு மறைவின்றி அவரிடமே தம் சந்தேகத்தைக் கேட்டதிலிருந்து, அவருடைய பயமற்ற தன்மை எத்தகையது என்று இன்றும் ஆச்சரியப்படும்படி இருக்கிறது.

இன்றுபோல் என் கண்முன்னே பாபா பிரேமானந்தருடைய உருவமும், களைசொட்டும் சிரிப்பும் தோற்றுகின்றன. அவர் பள பள வென்று தங்க மயமான காந்தியைப் பெற்ற திருமேனியுடையவர். தலையிலிருந்து கால்வரையில் நெடுஞ் சட்டை அணிந்து கழுத்தில் துளசிமணி மாலைகளைத் தரித்த கோலத்தோடு அவர் வெளியே புறப்பட்டுச் செல்வார். எங்கள் வீட்டில் முதல் தடவை வந்தபொழுது, ஆண் பெண்கள் அடங்கிய சிஷ்யக் கூட்டத்துடன் கிருஷ்ண பஜனை செய்தார். சில நாமாவளிகளைக் கம்பீரமாகப் பாடுவார்:

"சியாம சுந்தர மதன மோகன
பிருந்தாவன சந்த்ர ஜய
ராதே கோவிந்த ஜய"

என்ற பல்லவி அவர் இனிய குரலோடு முதலில் அழகாக எழும்பும். அதைப் பின்பற்றி அமெரிக்கப் பெண்களும் ஆண்களும் மெல்லிய குரலில் பாடுவார்கள். ராதையையும் கிருஷ்ணனையும் சேர்த்துப் பாடும் பல அழகிய நாமாவளிகளையும், ஜயதேவருடைய அஷ்டபதிகளில் சிலவற்றையும் அவர் திரும்பத் திரும்பப் பாடுவார்; நர்த்தனம் செய்வார்; ஆடிப் பாடி மெய்ம்மறந்து போவார்.

ஒரு சமயம் பல ஜனங்கள் எங்கள் வீட்டில் கூடியிருந்து பாபா பாரதியின் பஜனையில் ஈடுபட்டார்கள். கிருஷ்ண ஸ்வாமி ஐயரும் பரவசமாகி விடுவார். சுவாமிகளின் நா மீட்டும் மீட்டும் கிருஷ்ணனைக் கூவி அழைக்கும்போது அவருடைய புன்சிரிப்பு, சுழன்று வரும் கண்கள் யாவும் அவருள்ளம் அடைந்திருந்த ஆனந்தத்தை மெய்யாக்கின.

நண்பருக்குச் சுவாமிகளிடத்தில் வரவரப் பிரேமை அதிகரித்தது. சில சந்தேகப் பிராணிகளான நண்பர்களுக்கு சுவாமிகளிடம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இருந்த அதிக நேசம் பிடிக்கவில்லை. அதனால் அவருக்குக் கவலை இருந்த தாகவும் தெரியவில்லை. "ஊரில் இப்படித்தான் எதை யாவது சொல்லிக் கொள்வார்கள்" என்று மனத்தின லேயே அவைகளைத் தள்ளிவிடுவார். சுவாமிகளைச் சந்தேகித்து ஸி. ஐ. டி. (போலீஸ் வேவுகாரர்கள்) வீட்டை அடிக்கடி சந்தேகத்துடன் கவனித்துக்கொண்டு போனார்கள். ஏனென்றால், அக்காலங்களில் வங்காளிகளில் பலர் தேசத்தொண்டில் ஈடுபட்டுச் சந்நியாசி உடையில் மாறுவேடம் பூண்டு, அரசாங்க அதிகாரிகளுக்குத் தீங்குகள் செய்வதாக ஒருவிதச் சந்தேகம் அதிகாரிகளுக்கு இருந்தது. இவற்றையெல்லாம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பொருட்படுத்தவில்லை. அவர் சுவாமிகளிடம் வைத்த அன்பும், கௌரவமும் பிறரால் அறியமுடியாதபடி இருந்தன. சுவாமிகள் எழுதிய சில கடிதங்களே அவருடைய அபிமானம் எவ்வளவு ஆழ்ந்தது என்பதை நமக்கு விளக்கும்.

"கல்கத்தா
17–ஜனவரி 1910.

என் அன்புள்ள கிருஷ்ணஸ்வாமிக்கு,

...............மறு முறை சென்னையைப் பார்க்க நேரிடும்போல் இருக்கிறது. இரண்டோர் இடங்களைப் பார்த்துவிட்டு உன் வீட்டுக் கதவைப் பிக்ஷைக்காகத் தட்டுவேன். நீங்கள் எல்லோரும் பிப்ரவரி மாதம் சென்னைக்கு வர நல்ல மாதம் என்றீர்கள். ஆகையால் நான் அப்பொழுது வரலாம் என்று உத்தேசம்......... நான் அமெரிக்காவுக்கு, கொழும்பு வழியாகவேதான் மறுபடியும் செல்லுகிறேன். ஆகையால் கடைசியில் சென்னபட்டணம்

வரலாம் என்று உத்தேசம். சென்னையும் சென்னைவாசிகளும் என் இருதயத்தைக் கொள்ளைகொண்டு விட்டார்கள். சென்னையில் தான் உண்மையான ஹிந்துக்கள் வசிக்கிறார்கள். இப்பெரிய தேசத்தில் அங்கேதான் நான் ஹிந்துக்களைப் பார்க்கிறேன். நல்ல ஆசாரசீலர்களையும், கிருஹஸ்தாசிரமத்தில் மேன்மையோடு வாழ்பவர்களையும் அவ்விடத்தில்தான் நான் காண்கிறேன்......... உன்னைப் பார்க்கவே என் மனம் ஆசைப்படுகிறது. உன் களங்கமற்ற உண்மையான பார்வையை என் கண்கள் நாடுகின்றன. உன் இருதயத்திலிருந்து வரும் வார்த்தைகளைக் கேட்கவேண்டுமென்று என் நெஞ்சு கெஞ்சுகிறது.

பாபா''

மற்றொரு கடிதம் வருமாறு:—

''24-ஜனவரி 1910

என் அன்பார்ந்த நண்பருக்கு,

............சென்ற தடவை நான் அமெரிக்காவிலிருந்து பட்டணம் வந்து கல்கத்தாவுக்குச் செல்லும்பொழுது நீ சொன்னது ஞாபகம் இருக்கலாம்: 'சுவாமிஜீ, என்னிடமிருந்து பொருள் வேண்டுமானால் கேளுங்கள். என்னிடம் யதேஷ்டமாக இருக்கிறது' என்று. நீ சொன்ன சொல்லைச் செயலிலும் காட்டுவாய் என்று அறிந்தும், உன்னைப்போல இந்தியாவிலேயே ஒருவரும் அந்தரங்க சுத்தராய் இல்லையென்று தெரிந்திருந்தும், நான் உன்னைப் பணம் கேட்கவில்லை.........நீ செய்த சிறு பிரசங்கத்தில் சொன்னபடி, இந்தியர்களிடமிருந்து பணம் கிடைக்காவிட்டாலும் பாதகம் இல்லை; கிருஷ்ணனுடைய கோவில் அமெரிக்காவில் தோன்றிவிடும் என்பதில் சந்தேகமில்லை......''

முன் தீர்மானித்தபடியே சென்னைக்கு 1910-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் சுவாமிகள் விஜயம் செய்தார். சென்னை நண்பருடனும் வசித்துவந்தார். அவருக்கு வேண்டிய பொருளுதவி செய்து, அவர் காரியத்தில் உத்ஸாகத்தை ஊட்ட ஒரு கூட்டம் மார்ச்சு 14-ஆம் தேதி விக்டோரியா பப்ளிக் ஹாலில் கூட்டினார்கள் அதற்குத் தலைமை வகித்தவர் சிவஸ்வாமி ஐயர் அவர்கள். அவர் செய்த பிரசங்கத்தின் சாராம்சம் பின்வருமாறு:

''.........கேவலம் புகழை மாத்திரம் நாடி இக்காரியத்தைச் சுவாமிகள் செய்கிறார் என்று எண்ணுவதற்கில்லை. சொந்த வீட்டு வாசலில் தலை விரித்தாடும் நாஸ்திகர்களுக்கு நல்ல வழி காட்ட இயலாத கிறிஸ்துவப் பாதிரிமார்கள் அந்நிய தேசத்திலுள்ளவர்களைச் சீர்திருத்தம் செய்யக் கிளம்பி விடுகிறார்களே! இம்

மனப்பாங்கைவிட உயர்ந்தது, நம் சுவாமிகள் அமெரிக்காவில் செய்யும் தொண்டு. சுவாமி விவேகானந்தர் அடைந்த பயனை யும்விட அதிகமாய்ப் பாபா பிரேமானந்த பாரதி சுவாமிகள் அடைவார் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. அவருக்கு இதற்குள் ஐயாயிரத்துக்குக் குறைவில்லாத சிஷ்ய கணங்கள் இருக்கின்ற சமாசாரத்தை அறிய எனக்கு மிகுந்த ஆச்சரியமே மேலிடுகிறது......''*

அதன் பிறகு கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஸ்ரீ ஜி. ஏ. நடேசன் வாசித்த அன்பளிப்புப் பத்திரத்தைத் தாமும் ஆமோதித்துப் பேசினார். சுவாமிகளுக்கு அமெரிக்காவில் செய்ததைவிட இன்னும் உயர்ந்த காரியம் இத்தேசத்தில் தான் இருக்கின்றது என்றும், ஆகையால் அவருக்குச் சர்வ சௌகரியங்களும் ஏற்படவேண்டும் என்றும் பிரார்த் தித்துவிட்டு, நூறு அல்ல - ஆயிரக்கணக்கில் சந்நியாசிகள் இத்தேசத்தில் உண்டாகிப் பிறநாடுகள் சென்று, பாபா பாரதி செய்கின்ற காரியங்களைப்போல் பல செய்யு மாறு சர்வேசுவரனையும் வணக்கமாகத் தொழுதுவிட்டுப் பிரசங்கத்தை முடித்தார். சந்நியாச ஆசிரமத்தில் அவருக்கு உள்ள ஆசையை எல்லோரும் அப்போது அறிந்தார்கள்.

1911–ஆம் வருஷம் வந்த ஒரு கடிதத்தில் பின் வருமாறு சுவாமிகள் குறிக்கின்றார்:

''பாரிஸ்
18-ஸெப். 1911.

......................இதுவரையிலும் ரூபாய் 2000 சென்னை யிலிருந்து வந்தது; அது உன் தம்பி சந்திரசேகரன் அனுப்பிய கடைசித் தொகையுடன் கூடியது......ஒரு கால், உன் ஆதித்தியம் நிறைந்த வீட்டின் வாசலுக்கு மறுபடியும் நான் வருவேன். வந்து கிருஷ்ணன் கோவிலுக்காகப் பணமும் கேட்பேன்.''

என் தந்தையார் கவர்னர் நிர்வாக சபையின் அங்கத் தினராக நியமிக்கப் பட்டபொழுது, சுவாமிகளுக்கு ஒரு கடிதம் எழுதித் தம்மை ஆசீர்வதிக்க வேண்டுமென்று வணக்கத்துடன் கேட்டதற்கு, எழுதிய பதிலில் பின் வருமாறு சில வார்த்தைகள் இருக்கின்றன:

---

* 'ஹிந்து'.

"நீ எனக்குக் கொடுத்த தனம் போதும் இப்பொழுது. வேண்டியதற்கு மேலேயே நீ கொடுத்திருக்கிருய்......உன் உத்ஸாகத்தினுல் என் காரியம் கைகூடுமென்றுகூட எனக்குத் தோன்றுகிறது. இப்பொழுது இந்தியாவில் உள்ளவர்களில் உன்னை மிகவும் தனிப்பட்ட ஆத்மாக்களில் ஒருவனுக நினைக்கிறேன். நீ அன்று விடை அளிக்கும் பிரசங்கத்தில் சொன்ன படியே, 'கிருஷ்ணன் கோயில் நிச்சயம் சீக்கிரம் எழும்பிவிடும்' என்றுதான் எண்ணுகிறேன்..........."*

அவ்விருவர்களுக்கும் ஏற்பட்ட நட்பு நாளுக்கு நாள் வளர்ந்தது என்றே சொல்லவேண்டும். மேலும் சந்நியாசத்தின் உயர்வில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இருந்த மோகம் பிரேமாநந்த பாரதி சுவாமிகளை நண்பராக அடைந்ததில் வலிவு பெற்றது.

* கடிதம், 17-4-1911.

## அத்தியாயம் 22

### சமயமறிந்த உதவி

''காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.'' —குறள்.

சிறிய விஷயங்கள் ஆயினும் அவைகளிலும் தேசாபி மானம் ஒருவரிடம் தெரிந்தால், தன்னலத்தை அகற்றி நாட்டின் நன்மையையே முதன்மையாகக் கொண் டவர் என்று அவரைச் சொல்லி விடலாம். கிருஷ்ண ஸ்வாமி ஐயருடைய சுய நலமற்ற தேசத் தொண்டை எடுத்துரைக்க எத்தனையோ அரிய வரலாறுகள் உள்ளன. எல்லாவற்றையும் சொல்லுவது அவசியமும் அன்று. அவருடைய மனத்தின் சத்தியத்தையும், பிறருக்காக வெளி வேஷமாகப் பூணாத தேசாபிமானத்தையும், இன்னும் சமயம் அறிந்து செய்த உதவியையும் விவரிக்கும் இரண்டொரு விஷயங்களை மட்டும் எடுத்துக் காட்டினால், அரிய ஸம்ஸ்காரம் உள்ளவர்களும் மனோதர்மம் படைத் தவர்களும் சந்தேகமின்றி அவைகளைப் போற்றுவார்கள்.

1903-ல் வருஷப் பிறப்பன்று மயிலாப்பூரில் 'கிளப்' ஒன்றைக் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய இடைவிடாத தூண்டுதலின் பேரில் சிலர் சேர்ந்து ஆரம்பித்தார்கள். ஏற்கனவே 1901-ஆம் வருஷம் மயிலைக் கபாலீச்வர தேவஸ்தானத்தினிடமிருந்து லஸ் ரோட்டில் தம் பங்களாவுக்கு எதிரில் உள்ள காலி நிலத்தை 99-வருஷக் குத்தகைச் சீட்டு எழுதிக் கொடுத்து, கிருஷ்ணஸ்வாமி ஐயர் தமக்கென்று வாங்கி இருந்தார். ஆனால் அதில் கட்டடம் கட்ட ஆரம்பிப்பதற்குள், மயிலை வாசிகளில் பலருக்குச் சாயங்கால வேளைகளில் சிறிது நேரம் பந்தடிப்பது போன்ற விநோதங்களில் மனத்தைச் செலுத்துவதற்கு வசதியான இடம் தேவை என்பதை அறிந்தார். அதற்கு உடனே தம் நிலத்தைக் கொடுக்க

இணங்கினுர்; அதே விதக் குத்தகைச் சீட்டின் பேரில் உரிமை கொண்டாடிய ஏ. சீதாராம ஐயர் என்பவரையும் அணுகிப் பொதுஜனங்கள் சிலருக்கு வசதியை ஏற்படுத்தும் காரியத்திற்காக அவர் பங்கையும் அதற்காகக் கொடுக்கும்படிச் செய்துவிட்டார்.

ஆனல் பலருக்கு மயிலை 'கிளப்' ஒன்றை ஆரம்பிப்பதில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு எதனுல் ஆர்வம் அதிகம் ஏற்பட்டது என்பதே தெரியாது. 1902–ஆம் வருஷத்து இடையில் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சுந்தரமையரும் சென்னைக் காஸ்மாபாலிடன் கிளப்பில் சேருவதற்கு ஆசைப்பட்டார்கள். ஆனல் அவர்கள் இருவரும் வெகு காலமாய் அங்குள்ள சிலருடைய அருவருப்புக்குப் பாத்திரமாயிருந்தார்கள். தங்களைப்பற்றிய நம்பிக்கை மிகுதியால், தோன்றியவாறு அதில் அங்கத்தினர்களான சில பிரமுகர்களைப்பற்றி இவ்விருவர்களும் தயை தாட்சிண்யமின்றிக் குறை கூறியது உண்டு. கட்சிகட்டும் சில பேர்வழிகள் நல்ல தருணம் வாய்த்ததென அறிந்து, உயர்தர மனிதர்களுக்கே உரிய இடமான புகழ்பெற்ற கிளப்பில் இவ்விருவர்களுக்கும் இடம் இல்லாமல் செய்து விட, தங்களுக்குச் சுலபமாயுள்ள வழியைத் தேடினுர்கள். அதாவது அங்கத்தினர் ஆவதற்கு நடத்தப்படும் தேர்தலில் இவர்களுக்கு விரோதமாக வேலை செய்து, எதிரிடையாக 'வேண்டாம்' என்னும் 'வோட்டு'க்களைப் பலரைக்கொண்டு போடச் செய்தார்கள். வேண்டாம் என்றவோட்டுக்களின் எண்ணிக்கையே அதிகமாக இருந்ததால் இவ்விருவர்களும் நிராகரிக்கப்பட்டார்கள்.

'கிடக்கின்றுர்கள்; நாம் மயிலாப்பூரில் ஒரு வசதியான கிளப்பை ஆரம்பிக்கலாம்' என்றுர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். என்றுமே மேலே செய்ய வேண்டியதில் அதிகம் வேண்டாத யோசனை அவருக்குக் கிடையாது என்பது தெரிந்ததுதானே? ஆகையால், தம்மிடமுள்ள நிலத்தைக் கொடுத்து உடனே ஒரு ஸ்தாபனத்தை ஆரம்பித்தார். இன்றும் மயிலைவாசிகள் மறக்க முடியாதவைகளில் இது ஒன்று.

மற்றொரு செய்தி இதைப்போலவே ரஸமானது. நம் நாட்டுக்கே பெரிய தவப் புதல்வராக விளங்கிய தாதாபாய் நௌரோஜியைப் பற்றி அறியாத இந்திய மக்கள் இரார்கள். நமது அரசியல் இயக்கமும் காங்கிரஸ் ஸ்தாபனமும் தலை எடுக்கும் காலங்களிலேயே அவருக்கு வயசு நிறைந்திருந்தது. 1825-ஆம் வருஷம் பிறந்தவர் அவர். எத்தனையோ விதங்களில் நம் நாடு ஆங்கில ஸாம்ராஜ்யத்தின் கீழ் முழுவதும் வருவதற்கு முன்னும் பின்னும், அவருடைய வாழ்நாட்கள் கடந்தன. தம் சுய சக்தியால் சீமையிலுள்ள ஜனங்களின் பிரதி நிதிகள் கூடி நாட்டை ஆண்டுவரும் சபையில், அவருக்கு ஓர் இடம் கிடைத்த பெருமை சாமான்ய மன்று. குறைந்தது ஐம்பது வருஷங்களுக்குமேல் இந்திய மக்களின் காரியங்களில் தம் முழுப் புத்தி பலத்தையும் உழைப்பையும் பிரயோகித்தவர். குறைந்தது மூன்று தடவைகளிலாவது காங்கிரஸ் பொதுக் கூட்டங்களுக்குத் தலைமையும் வகித்து அவ்வப்பொழுது நாட்டில் காணப் பட்ட குறைகளை உணர்ந்து, அவைகளுக்குத் தம்மால் செய்யக் கூடிய சிகித்ஸைகளைச் சரிவரச் செய்தும் பாடு பட்டவர். "இந்திய மக்களின் வறுமையும், பிரிட்டிஷ் அதிகாரிகளின் அநீதி முறையும்" என்ற தலைப்புடன் ஒரு புஸ்தகத்தை அவர் ஆங்கிலத்தில் எழுதிச் சீமையில் வெளி யிட்டார். அதன் விலையைச் சற்று அதிகமாகவேதான் போடும்படி ஆகிவிட்டது அவருக்கு. நம்முடைய நாண யத்தில் ரூபாய் 6–8-0 வீதம் பிரதிகளை விற்கும்படியாகி விட்டது.

இருபத்தைந்து வருஷங்களுக்குக் குறைவில்லாமல் சீமையில் தாதாபாய் நௌரோஜி எத்தனையோ பொதுக் கூட்டங்களில் இந்திய சமூகத்தின் சிரமங்களைக் குறித்துப் பேசி அரசாங்கவர்க்கத்தின் அநுதாபத்தையும் நியாயமான ஆட்சியையும் விரும்பி மன்றாடியதன் பயனைப் புஸ்தக ரூபமாக வெளியிட்டார் என்றே கூறவேண்டும். வெள்ளைக் காரர்கள், தங்கள் ஆட்சியில் இந்திய நாடு வறுமை அடைந் ததை ஒப்புவார்களா? மாட்டேன் என்றார்கள். மேலும்

அவர்கள் தாதாபாய் போன்ற சிறந்த உழைப்பாளிகளின் உண்மை வேகத்தையும் உணரவில்லை. ஆகையால் மனம் வெந்து கிழவரும் தம்முடைய பல கட்டுரைகள், பிரசங்கங்கள், உபந்நியாசங்கள், இன்னும் அரசாங்க அறிக்கைகளில் முக்கியமானவைகள்-எல்லாவற்றையும் திரட்டி 700 பக்கங்களுக்குக் குறையாத, பருமனை ஓர் ஆங்கிலப் புஸ்தகத்தை வெளியிட்டார். புஸ்தகத்தில் உயர்ந்த அம்சங்கள் எவ்வளவு இருப்பினும், அதிலுள்ள பிரசங்கங்கள் முதலியவைகள் அநேக ஆண்டுகள் இடை இடையே கழிந்த காரணத்தினாலும், வந்த சமாசாரங்களே திரும்பத் திரும்ப வந்ததனாலும், சிற்சில இடங்களில் முன்னுக்குப் பின் கோவையாகச் சேராத விஷயங்களினாலும் ஒருவாறு குறையுடையதாகவே அமைந்தது.

தாதாபாய் 1000 புஸ்தகங்களைத் தம் சிநேகிதரான வாச்சாவிடம் அனுப்பியிருந்தார். அதுவே அவர் செய்த தவறு. ஏனென்றால் இந்தியர்களின் வறுமையைப் பற்றி எழுதிவிட்டு, இவ்வளவு விலை கொடுத்து வாங்கக்கூடிய ஆங்கிலக் கல்விமான்கள் இந்தியாவில் இருக்கமாட்டார்கள் என்பதை உணராதது தோஷமே. ஆயினும், நாட்டில் எத்தனையோ லக்ஷப் பிரபுக்கள் இல்லையா? அதிலும் பம்பாயில் பணக்காரர்களுக்குக் கேட்க வேண்டுமா? ஒருவர் மனம் வைத்திருந்தால், என்ன வேண்டுமானாலும் செய்து சீமையில் புஸ்தகத்தை வெளியிட்டவரின் செலவுப் பொறுப்பைக் குறைக்க முடிந்திருக்கும். ஆனால் அவ்விதம் ஒருவரும் பம்பாயில் செய்யக் கிளம்பவில்லை. பாவம், தம் ஆத்ம நண்பரான வாச்சாவிடம் அடிக்கடி அப் புஸ்தகத்தின் அச்சுச் செலவுக் கணக்கைத் தம்மால் கொடுத்துத் தீர்க்க முடியாமல், தமக்கு ஏற்பட்டிருக்கும் பண நெருக்கடியைத் தாதாபாய் எழுதிக்கொண்டிருந்தார். வாச்சா, இளைஞரும், புஸ்தக வியாபாரத்தில் சிறு வயசிலேயே அதிக ஊக்கத்தைக் காட்டியவருமான ஜி. ஏ. நடேசனிடம் இவைகளைப்பற்றிப் பேசியதில், அவர் அதற்கு ஏதாவது வழி பிறக்கும்படிச் செய்வதாக ஒப்புக்கொண்டார்.

நடேசன் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் அதைப்பற்றிப் பேசினர். அவரும்;''ஒரு விலை வைத்து அவைகளை எல்லாம் வாங்க நீ ஏன் என்னிடம் பணம் கேட்கவில்லை? நான் வேண்டுமானல் எல்லாப் பிரதிகளையும் வாங்கிக்கொள் கிறேன். பிற்பாடு நீ அவைகளை விற்பனைக்கான கமிஷனை எடுத்துக்கொண்டு விற்று முதல் செய்'' என்று ஒரு விதமாக அதில் தம் ஆத்திரத்தைக் காட்டவும், நடேசனும் வாச்சாவுக்கு எழுதிப் புஸ்தகங்களைத் தம்மிடம் அனுப்பும் படிக் கேட்டுக்கொண்டார்.

வாச்சா கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் இவ்விஷயங்களைச் சந்தேகமற எழுதியிருக் கிறார் :

''இன்று காலை வரையிலும் நீங்கள்தாம் தாதாபாயின் புஸ்த கத்தின் ஆயிரம் பிரதிகளை வாங்கியவர் என்று எனக்குத் தெரியாது. அது சம்பந்தமாக நம் நண்பர் நடேசனுக்குக் கொஞ்ச காலமாக எழுதிக்கொண் டிருந்தேன். உங்களிட மிருந்து இந்தக் கடிதமும், ரூபாய் ஆயிரத்தைந்நூறு கொண்ட செக்கும் வந்த பின்பே நீங்கள் வாங்கிக் கொண்ட விவரம் எனக்குத் தெரிந்தது. தாதாபாயின் சிரமத்தில் உதவி செய்ய முன் வந்தது உங்களிடம் உள்ள தயாள குணத்தையும் உண்மையான தேச பக்தியையும் நன்கு எடுத்துரைக்கின்றது...... பாவம்! தாதாபாய் இது சம்பந்தமாக அதிகச் செலவு செய்து விட்டார். அச்சிட்ட செலவிற்கு மேல் கொஞ்சமும் அவருக்குப் பணம் வரும் என்பதற்கில்லை. இச் சந்தர்ப்பத்தில் நான் ஒன்று கேட்கப் போகிறேன். அவருக்கு இருக்கும் நஷ்டத்தை யோசிக் கையில் கிழவருக்கு ஆயிரத்தைந்நூறு புஸ்தகங்களை விற்று எப்படியாவது நூறு பவுன்களாவது ரொக்கமாகக் கையில் சேர வழி தேடவேண்டும் என்பது என் கோரிக்கை. நீங்கள் வாங்கிய புஸ்தகங்களைச் சென்னைக்கு இங்கிருந்து அனுப்புவதானல் ரெயில் சத்தத்திற்காக ரூபாய் 125 ஆகலாம். நீங்களே இன்னும் சற்று உங்கள் தாராள மனத்தை உபயோகித்து இதையும் ஏன் கொடுக்கக் கூடாது? சொல்ல வேண்டியதுதான் தாமதம், அதற்குள் நீங்கள் வழக்கம்போல் உங்கள் தாராள புத்தியைக் காட்டுவீர்கள் என்றும் எனக்குத் தெரியும். உங்களைப் பற்றிய மட்டில் — வேறு எங்கும் காணப்படாத அரிய தாராள குணந் தான் உங்களுடையதாயிற்றே! நீங்கள் தொழிலபிவிருத்தியில் மேலே கிளம்பிக் கொண்டிருக்கிறீர்களே ; மேலும் தேச மக்களும்

உங்களை அறிந்து கௌரவிக்கத் தயாராக இருக்கிறார்கள். இந்தியாவிலேயே வேறு ஒருவரும் இச்சமயத்தில் எங்களுக்கு உதவி செய்ய முன் வரவில்லை. ஆகையால் இக்காரியம், உங்களுடைய பண்பாட்டையும் தேசத் தொண்டையும் நன்கு வெளிப்படுத்துகின்றது. இதைவிட என்னால் அதிகம் எழுதுவது சிரமம்.''*

நண்பர் நடேசனும் ஏற்கனவே வியாபார முறையில் சந்தேகமில்லாமல் விஷயங்களைக் கடிதாசியின் பேரில் குறித்துக் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு எழுதியிருந்தார்:

''தாதாபாய் நௌரோஜியின் புஸ்தகத்தில் 1000 பிரதிகளை வாங்கியதையும், பிரதி ஒன்றுக்கு ஒன்றரை ரூபாய் வீதம் விலை தீர்த்துக் கொண்டதையும் நாங்கள் தங்களுக்குத் தெரிவிக்கின்றோம். வாச்சா அவர்கள் ஒன்பது பெட்டிகள் நிறையப் புஸ்தகங்களை எங்களிடம் அனுப்பிவிட்டார். விலையை முழுவதும் உடனே கொடுத்துப் புஸ்தகங்களை வாங்கிவிட்டதால் நீங்களே புஸ்தகங்களை என்ன விலைக்கு நாங்கள் விற்கலாம் என்பதையும் விதித்துவிடலாம்.''†

அதே கடிதம், அதன் பிற்பகுதியில் புஸ்தகங்களை எப்படி விற்பது நலம், அவைகளை விற்கும் வரையில் வைத்துச் சம்ரக்ஷிப்பது யாருடைய பொறுப்பு - என்றெல்லாம் குறித்திருப்பது வியாபாரி ஒருவர் தொழில் முறையில் ஏற்றுக் கொண்டு செய்வதைக் காட்டுகின்றன. மேலும் அக்கடிதத்திலேயே நடேசன் எழுதினார் :

''வாச்சா அவர்கள் உங்களுடைய ரூபாய் ஆயிரத்தைந்நூறையும் மாதம் கொஞ்சம் கொஞ்சமாக வாங்கவும் சம்மதிப்பார். அல்லது, ஒரே தடவையில் 1500-க்குச் செக்கொன்றை முடிந்தால் கொடுத்துவிடுங்கள்.''

நடேசன் இதைச் சொன்னதும், காத்திருக்காமல் ரூ. 1500–க்குச் செக்கை எழுதிக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் வாச்சாவுக்கு அனுப்பி விட்டார் என்பதை ஊகிக்க வேண்டிய சிரமமில்லை. மற்றப்படி ரெயில் பார்சல் முதலிய செலவையும் ஒப்புக்கொண்டார் கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்றும் தெரிகிறது.

---

* கடிதம், 19-6-05.

† கடிதம், 8-6-05.

மற்றொரு சம்பவம்: சென்னைப் பிரம்ம ஞான ஸமாஜத்தைச் சார்ந்த மிஸ்டர் லெட்பீட்டர், "அடையாற்றுப் பேச்சுக்கள்" என்ற ஒரு புஸ்தகத்தை எழுதி அதன் முதல் பாகத்தை வெளியிட்டு, இரண்டாவது பாகத்தைக் கொண்டு வருவதற்குப் போதுமான பணம் கையில் இல்லாமல் தவித்தார். அதை அறிந்ததும், இவ்விதமே ஒரு நூறு புஸ்தகங்களை வாங்கி, 300 ரூபாய் கொடுத்ததை அன்னிபெஸண்டு அம்மையாருக்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் தாமே எழுதிய கடிதம்* ஒன்று தெரிவிக்கின்றது. சிறிய தொகைதான் என்றாலும், அவைகளைக் கொடுத்த விதத்தில் காணப்பட்ட மனத்தின் உயர்ந்த நோக்கம் நம்மை அதிசயிக்கச் செய்கின்றது. பலர் பணம் கொடுப்பார்கள்; ஆனாலும் எவ்வளவு தடவைகள் பணத்திற்காக அவர்களை நாடவேண்டும்? பிற்பாடு கொடுத்தாலும் தீராப் பொறியாய்த்தான் கொடுப்பார்கள். கொடுப்பதில் சற்றும் உதாரத் தன்மை இல்லாமல்தான் இருக்கும். அதுதான் கொடையில் காணும் தாரதம்யம்.

உதவியை நல்ல விஷயங்களில் செய்வது என்னும் கருத்து அவரிடம் எப்பொழுதும் சமயமறிந்தே உண்டாகும். ஒரு சமயம் சென்னை இந்திய உத்தியோகஸ்தர்கள் சங்கம் ஓர் இளைஞரான படிப்பாளியைச் சீமையில் மேல்படிப்புக்கு அனுப்ப உத்தேசித்தது. ஆனாலும் இளைஞருக்குக் கடல் யாத்திரைக்கென்று பண உதவியை உடனே செய்ய முன்வருகிறவர்கள் ஒருவரும் ஏற்படவில்லை. கிருஷ்ணஸ்வாமி ஐயர் அந்த உதவியைச் செய்ய ஒப்புக்கொண்டார். இந்திய உத்தியோகஸ்தர்கள் சங்கத்தின் காரியதரிசி பின் வருமாறு அவருக்குச் சங்கத்தின் நன்றியைத் தெரிவித்தார்:

"நீங்கள் ரூபாய் 1000 கொடுக்க ஒப்புக்கொண்டதற்கு எங்கள் வந்தனம். இந்திய உத்தியோகஸ்தர்கள் சங்கம் பொறுக்கி எடுத்திருக்கும் இளைஞர், ஸ்ரீ சி. வி. சந்திரசேகரன் என்பவர். அவரைச் சீமையில் ஐ. சி. எஸ். பரீக்ஷைக்கு உட்காரும்படி அனுப்புகிறோம். பிற்பாடு அந்த இளைஞருடைய

---

* கடிதம், 13-12-10.

இன்ஷூரன்ஸ் தொகையிலிருந்து உங்கள் கடனைத் திரும்பக் கொடுத்துத் தீர்ப்பதாக எங்கள் உத்தேசம்."*

சி. வி. சந்திரசேகரன் என்பவர் சமீபத்தில் திருவனந்தபுரத்தில் சர்வகலாசாலை அத்தியக்ஷர் பதவியில் இருந்து நீங்கியவர்.

மற்றொரு வரலாறு இவைகளை யெல்லாம் விட மிகவும் ரஸமானது. அது காங்கிரஸ் இயக்கத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் மும்முரமாக வேலை செய்த நாட்களில் நிகழ்ந்தது. சீமைக்குச் சிற்சில இந்தியர்களை ஒவ்வொரு மாகாணத்தி லிருந்தும் பொறுக்கி எடுத்துப் பிறகு ஒரு கோஷ்டியாக அவர்களைச் சேர்த்து அனுப்பி, சீமை அதிகாரிகளிடம் முறையிடச் செய்யவேண்டும் என்பது காங்கிரஸில் உள்ள ஒரு கட்சியாருடைய முக்கியக் கருத்து. கோகலே பெரியார் சீமையில் தம்முடைய தனிப் பொறுப்பிலும், காங்கிரஸ் ஆதீனத்திலும் வேறெவரும் செய்தற்கரிய உபகாரங்களை நம் நாட்டிற்குச் செய்து வந்தார் என்பதை அறிவோமல்லவா? சென்னையிலிருந்து கிருஷ்ணஸ்வாமி ஐயரைச் சீமைக்குச் செல்லும்படிச் சிலர் கூறினார்கள். ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் வாச்சாவுக்கு எழுதிய கடிதமொன்றில் குறிப்பாக அவருடைய பெயரையே குறித்தார். அவருக்குத் தர்ம சங்கடமாகி விட்டது. தாம் போகாவிட்டாலும், தமக்குப் பதிலாகப் போகின்றவர்களுக்குத் தம்மால் இயன்ற பொருளுதவியை அளிக்க அவர் முற்பட்டார். அதன் வரலாறு பின்வருமாறு: முதலில் காங்கிரஸ் நிர்வாக சபையில் இவ் விஷயத்தைப்பற்றி ஒரு தீர்மானத்தைப் பிரேரேபித்ததும், அக்காலத்தில் பிரபலரான டாக்டர் டி. எம். நாயர் பழிச்சண்டைக்கு எழுந்துவிட்டார். காங்கிரஸ் கமிட்டி கூட்டம் கூட்டிய முறையையே முதலில் அவர் ஆக்ஷேபித்தார். பணத்தொகையைச் சீமைக்குச் செல்லுகிறவருக்குக் கொடுக்கும் விஷயத்தின்பொருட்டு இவ்வளவு விரைவான தகவலின் பேரில் கூட்டம் கூட்டுவது தவறென்று சொன்னார். மேலும், சென்னை சம்பந்தப்பட்ட அள

---

* கடிதம், 9-8-10.

வில், சீமைக்கு அனுப்பும் காரியத்தில் பொருளுதவி செய்யும் பொறுப்பொன்றையும் அதனால் ஏற்றுக் கொள்ள முடியாது என்றும், காங்கிரஸ் நிதியிலிருந்து அச்செலவைச் செய்ய ஒருவருக்கும் அநுமதி கிடையா தென்றும் பேசினார். பேசிய பொழுது குத்தலாக அவர்,

"......இதற்காகத் தனியாகப் பொது ஜனங்களிடம் பணம் வாங்கி ஒரு தொகையைத் திரட்டுவதென்று முன்பே தீர்மானித் தாகிவிட்டது. அப்படிப் பொதுஜனங்களின் உதவி கிடைக்கா விட்டால் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய சொந்தப் பொறுப்பு அது என்றும் அவரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது"*

என்றார். கிருஷ்ணஸ்வாமி ஐயரைப் பலருக்கு நடுவில் தூற்ற வேண்டுமென அவருக்குத் தோன்றியதால், அதனுடன் நிறுத்திக் கொள்ளாமல்,

"கிருஷ்ணஸ்வாமி ஐயர் ரூபாய் பதினாயிரமானாலும் தாமே கொடுப்பதாகச் சொல்லித் தமக்கு வேண்டிய அளவில் விளம்பரத்தை அடைந்தாரல்லவா? இச்செயலால் எவ்வளவுக் கெவ்வளவு சென்னைப் பொதுஜனங்கள் பிறர் மதிப்பில் கீழிறங்கி னார்களோ, அவ்வளவுக்கவ்வளவு கிருஷ்ணஸ்வாமி ஐயர் பம்பாயில் சென்ற வருஷம் கூடிய காங்கிரஸ் அங்கத்தினர்களின் மத்தியில் தனிக்கௌரவமும் பெற்றார் அல்லவா? இந்தக் கமிட்டியைப் பொறுத்த வரையில் இச்செலவை ஏற்க மறுப்பதுதான் உசிதம்"

என்று கோபமாகப் பேசினார். அதன் பிறகு தாம் சொன்ன வாக்கை மறுக்காமல் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சீமைக்குச் செல்ல, காங்கிரஸ் அங்கத்தினர்களில் பொறுக்கி எடுக்கப் பட்ட எம். கிருஷ்ணன் நாயருக்குத் தமது பங்காக ரூபாய் 2000-த்தைக் கொடையாகக் கொடுக்கச் சம்மதித் துக் கடிதமூலம் தகவல் அனுப்பினார். கிருஷ்ணன் நாயரும்,

"நானும் மற்ற இந்த மாகாணத்துப் பொதுமக்களும், உங்க ளுடைய உதாரசீலத்திற்குக் கடமைப்பட்டுள்ளோம். உங்கள் கடிதத்தில் கண்டுள்ள ரூபாய் 2000-த்திற்கும் என் நன்றியை இதோ அளிக்கின்றேன்......ஆனால் உங்கள் சொந்தப் பொறுப்பில் ரூபாய் 2000த்தையும் கொடுக்கச் செய்வது நியாயமன்று...... ஸர் பிரோஸ்ஷா மேத்தா சொல்லுவதுபோல், நாம் ஒவ்வொரு வரும் ஓர் அளவில்தான் தியாகம் செய்ய முன் வரவேண்டும்.

* 'ஹிந்து', 22-4-1905.

பொதுஜன சேவைக்கு என்று நம்மிடமுள்ள யாவற்றையும் விடுவது சரியன்று......''*

என்று எழுதினர்.

இதற்குள் ஊரில் சிலர் மஹாஜன சபையில் பேசிய பொழுது கிருஷ்ணஸ்வாமி ஐயர் முழுப் பொறுப்பையும் தாமே வகிக்கின்றதாகச் சொல்லிவிட்டு, கடைசியில் சீமைச் செலவுத் தொகையில் ஒரு பங்கையே மேற்போட்டுக் கொள்ளத் தயாராவது வருந்தத் தக்கது என்று வம்பைக் கிளப்பினர்கள். அதைக் கண்டு சளைப்பாரா அவர்? "சரி" என்று முழுத் தொகையையும் கொடுத்துதவும் பொறுப்பு தம்முடையதாகவே கருதி, பகிரங்கமாயும் தெரிவித்தார் தம் விருப்பத்தை. அதை அறிந்த எம். கிருஷ்ணன் நாயர் தம் ஆச்சரியத்தைக் காட்டும் மொழிகளில் மறுபடியும்,

"இப்பொழுதுள்ள சந்தர்ப்பத்தில் நான் சொல்வதற்கு ஒன்றும் இல்லை! சீமைக்குப் போகும் செலவு சம்பந்தமான யாவற்றையும் உங்கள் பொறுப்பாக்கிக் கொண்ட உயர்ந்த குணத்தை என்ன என்று விவரிப்பது!"†

என்று எழுதினர். மேலே குறித்த கிருஷ்ணன் நாயர் என்பவர் அநேக ஆண்டுகளுக்குப் பின் சென்னைக் கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினராக இருந்தவர். அக்காலங்களில் சென்னைச் சட்டசபையிலும் அவர் ஓர் அங்கத்தினராக இருந்தார். கிருஷ்ணஸ்வாமி ஐயரின் உயர்ந்த குணத்தை மிகவும் அநுபவித்தவர்களில் அவரும் ஒருவர். பிற்பாடு நடந்தது யாதெனில், சீமைக்கு அனுப்ப உத்தேசித்திருந்த கோஷ்டியைக் காங்கிரஸ் ஸ்தாபனம் அனுப்பவில்லை. அதற்குக் காரணம் சீமையில் நமக்காக உழைத்தவர்கள் வேறு விதமாக அபிப்பிராயப்பட்டது தான். ஆனல், பணம் எவ்வளவானலும் கொடுக்க முன் வருவதில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சற்றும் குறையாத மனப்பாங்கைக் காட்டியவரென்பதையே இவ்வரலாறு தெளிவுறக் காட்டுகின்றது.

அவருடைய தேசாபிமானம், தம் கையிலிருந்து பணம் செலவாவதைக் கண்டு தற்பெருமையடைந்தோ அல்லது

* கடிதம், 8-5-05.

† கடிதம், 10-6-05.

தம் பெயர் வெளியாக வேண்டுமென்னும் கருத்தைக் கொண்டோ வளரவில்லை. இமயமலையின்மேல் வளர்ந்து செழிக்கும் தேவதாரு விருக்ஷங்களுக்கு, எட்ட முடியாத உயர்வையும் வளத்தையும் யார் கொடுத்தார்கள்? அவ்விதமேதான் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மனத்தின் தாராளம் மேன்மேலும் ஓங்கி வளர்ந்தது.

நம் நாட்டுத் தர்மங்களிலும் சம்பிரதாயங்களிலும் வித்தியாப்பியாச முறைகளிலும் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு இருந்த உண்மை ஆர்வம் எவ்விதத்தில் வெளியே தென்பட்டது என்பதைப் பார்க்குங்கால், எதிலும் அவர் தனிப்பட்ட வர்க்கத்தைச் சேர்ந்தவரென்பது நன்கு விளங்கும். பள்ளியில் மாணுக்கர்களுக்குக் கல்விப்பயிற்சி கொடுக்கும் காலந்தொட்டு அவர்களுடைய மனம் ஒழுக்கத்திலும் நல்ல நடத்தையிலுமே செல்லவேண்டுமென்பதற்குத் தக்க விதம் கல்வி கற்பிக்க வேண்டும் என்பார். மேலும் ஹிந்து மத ஆசாரத்தில் அவர்களை ஊறவைக்கவேண்டுமென்பார். அவருடைய எண்ணம் பூர்த்தியாகும் விதமே காசி க்ஷேத்திரத்தில் சிலர் சேர்ந்து "மத்திய ஹிந்து கலாசாலை' என்றொரு வித்தியா ஸ்தாபனத்தைப் பயன்படச் செய்து வந்தார்கள். அவர்களில் மிகவும் உழைத்தவர், சென்னைப் பிரம்மஞான சமாஜத்தின் தலைவியாக வெகுநாட்கள் சோபித்த அன்னிபெஸண்டு அம்மையாரே. அவருக்கு இதிலெல்லாம் மிகுந்த ஆர்வம் உண்டு; ஆவேசம் என்ருலும் தவறில்லை. 'ஹிந்து சர்வகலாசாலை'யைப் பண்டித மதன மோகன மாளவியாஜி உருவாக்குவதற்கு முன்னமேயே, ஹிந்து தர்மங்களில் சற்றும் வெறுப்பு ஏற்படாவண்ணம் இந்திய இளைஞர்கள் மனத்தைப் பாதுகாக்கப் பாடுபட்டவர் அன்னிபெஸண்டு அம்மையார்தாம். அழகான பிரசங்கம் செய்வதிலும், மனோதைரியத்திலும், பெரிய காரியத்தை எடுத்துக்கொண்டு நிர்வகிக்கும் ஆற்றலிலும் அவருக்கு ஈடானவர்களே இல்லை எனலாம். அவ்வளவு பெரியவர் அம்மையார்.

"முதல் முதலில் நம்முடைய சிறுவர்களுக்குச் சமய உணர்ச்சியுடன் கல்வியைக் கற்பிக்கவேண்டும். நாட்டில் ஏற்பட்

டிருக்கும் எந்த வித்தியா ஸ்தாபனத்துடனும் நாங்கள் போட்டி இட்டு அதைக் குறைக்க முன்வரப்போவதில்லை. மற்ற இடங்களின் கல்வி முறையில் காணப்படும் குறையையே இங்கே தீர்க்க வழி தேடி வருகிறோம்''

என்று சங்கநாதம்போல் அம்மையாரின் குரல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் 1899-ஆம் வருஷம் ஜனவரி மூன்றும் தேதி ஒலித்தது.

''கல்வி முறையில் சமய உணர்ச்சிக்கு இடம் எதற்காக வேண்டும் என்றால், வாழ்க்கையில் வயிறு வளர்ப்பவர்களையும், உத்தியோக வேட்டையாடுகிறவர்களையும், புத்திவன்மை பெற்றுத் தங்கள் நலத்திற்கே பாடுபடுகிறவர்களையும் மட்டும் கலாசாலைகள் உருவாக்கினால் போதாது. சமயப் பற்றுக்கொண்டு, தேசத்தின் முன்னேற்றத்திற்காகத் தங்கள் பொருளையும் தங்களையுமே தியாகம் செய்யக் கூடியவர்களைச் சிருஷ்டிப்பதிலேயே பாடுபடவேண்டும்''

என்று அம்மையாரின் வெண்கலமணி நாதம் போன்ற சொற்றொடரைக் கேட்ட கிருஷ்ணஸ்வாமி ஐயரின் காதுகள் தம்மையே மறந்தன. மறுவருஷம் ஸர் எஸ்.ராமஸ்வாமி முதலியார் தலைமையில் கூடிய ஒரு பொதுக் கூட்டத்தில், அவரும், நண்பரான பி. ஆர். சுந்தரம் ஐயர், டி. மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை முதலியவர்களும் ரூபாய் ஆயிரத்தை ஒவ்வொருவரும் காசி வித்தியாலயத்திற்கு நன்கொடையாகக் கொடுத்தார்கள். ஜட்ஜ் மணி ஐயர் ரூபாய் 5000-த்தை மத்திய ஹிந்து கலாசாலைக்கென்று எடுத்து வைத்தார். இன்னும் பற்பல பிரபுக்கள் தங்களால் இயன்ற உதவியைச் செய்தார்கள். சமயத்தில் கிடைத்த இவ்வுதவி பெஸண்டம்மையாருக்கு ஏற்பட்டிருந்த மிக்க சிரம தசையைத் தாண்ட வழி செய்தது.

எத்தனையோ உயர்தர நோக்கங்கள் கொண்டிருந்தும், அன்னிபெஸண்ட் அம்மையாரால் வேண்டிய தொகை முழுவதையும் திரட்ட முடியவில்லை. இதனிடையில் அம்மையார் அகில இந்திய சர்வகலாசாலை ஒன்றைக் காசியிலேயே எழுப்புவதைப் பலவிதமான பொருத்தங்கள் கொண்ட கல்வித் திட்டமாக நினைக்க ஆரம்பித்தார்.

ஆனால் அந்த எண்ணங்களை முற்றும் வற்ற அடிக்க எங்கிருந்தோ முளைத்தார், அகத்திய மாமுனிவர்போல மதன மோகன மாளவியாஜி. அவருக்கு 'அகில இந்திய சர்வகலாசாலையை வைப்பதால் ஹிந்து தர்மங்களுக் கென்ற ஒருவிதப் பிரத்தியேக நோக்கத்தையும் அவ் விடத்தில் கடைப்பிடிக்க முடியாமல் போய்விடும்; ஆகையால் ஹிந்துக்களுக்கு என்று தனியாகச் சர்வ கலாசாலை ஒன்றை ஸ்தாபிப்பதுதான் உத்தமம்' என்று தோன்றவே, அதற்கு உவந்த பக்க பலங்களுடன் தாமே உழைக்கத் தொடங்கினார். முதலில் காசி காங்கிரஸுக் காகக் கூடியவர்களில் சில நண்பர்களை மட்டும் காசிப் பட்டணத்து மண்டபத்தில் 1905-ஆம் வருஷம் டிசம்பர் 31-ஆம் தேதியில் சேர்த்தார். அக் கூட்டத்தில் மாளவியாஜி தாம் வெகு நாட்களாகப் போற்றி வந்த கருத்துக்களை எடுத்து நண்பர்களுக்கு விளக்கினார். அவையாவன: 'நம்முடைய கலைகளும் சாஸ்திரங்களும் க்ஷீணித்து வருகின்றன. வேதாந்தமும், சமயமும், ஆயுர் வேதமும், வானசாஸ்திரமும், கணிதமும் உயிர் பெற நாம் வழி தேடவேண்டும். அவற்றைப் போலவே தொழில் அபிவிருத்தி முறைகளும், யந்திர சக்தி ஞானமும் நாட்டின் வருங்கால வளர்ச்சிக்காகக் கற்பிக்கப்பட வேண்டும்.' பெரிய 'கமிட்டி' ஒன்றை ஏற்படுத்தி, அதில் தம் நண்பரான கிருஷ்ணஸ்வாமி ஐயரையும் ஓர் அங்கத்தினராக்கினார். மாளவியாஜி அந்தக் கமிட்டிக்குக் காரியதரிசியாகத் தம்மைப் பொறுக்கும்படிச் செய்து கொண்டார்.

ஆனால் முதலிலிருந்தே மாளவியாஜியின் காரியம் மிகவும் சிரமமாயிற்று. 'அக்காரியத்திற்குப் பொருளுதவி இவ்வளவு அவ்வளவு வேண்டும் என்பதே தீர்மானிக்க முடியாதது; அதற்கு மட்டும் உழைப்பது என்று ஒருவர் தனியாக வாழ்நாட்களைக் கழிக்க முன் வரவேண்டும்; விரதமாகவும் அந்தக் காரியத்தைச் செய்யவேண்டும்' என் றெல்லாம் சென்னை நண்பர் சொல்லத் தொடங்கினார், மாளவியாஜியிடம். ஆறு மாத காலம் அதைப்பற்றிப்

பிற்பாடு ஒன்றும் பேச்சே இல்லை. ஆனால் 1906-ஆம் வருஷம் ஜூலையில் தம்முடைய லக்ஷ்யங்களை வைத்து 'ஹிந்து சர்வ கலாசாலை' ஸ்தாபனத்தை எவ்விதம் எழுப்பமுடியும் என்ற விவரத்தை நாட்டிற்கு மாளவியாஜி ஓர் அறிக்கை மூலம் தெரிவித்தார். எல்லாவற்றையும் சொல்லிவிட்டு ஒரு கோடி ரூபாயேனும் முதலிலிருந்தே அதற்கு வேண்டும் என்றும் குறித்திருந்தார். அதில் பன்னிரண்டு லக்ஷங்களை ஐந்து தனிகர்கள் கொடுக்க ஒப்புக்கொண்ட விவரமும் கண்டிருந்தது. மேலும் அரசாங்கத்தின் உதவியையும் நாடியது அந்த அறிக்கை.*

கிருஷ்ணஸ்வாமி ஐயர் சிநேகிதரைச் சும்மா விட மாட்டேன் என்றார். மாளவியாஜியினுடைய உள்ளத்தில் அக்காரியத்தின் பொறுப்புச் சாமானியமல்ல என்பதை அடிக்கடி பதிய வைத்தார். அதற்காக மாளவியாஜி தாம் நடத்திய வக்கீல் தொழிலை விடவேண்டி வரும் என்றும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவருக்கு எச்சரித்தார். ஆனால் மாளவியாஜி இதை எல்லாம் கண்டு மருண்டு விடுவாரா?

"ஆகா, அதற்கென்ன? தொழிலை விட்டுவிடுகிறேன்" என்று மெள்ளத் தம் தீர்மானத்தை நண்பரிடம் வெளியிட்டார்.

"இன்னும் ஹிந்து சர்வகலாசாலை சம்பந்தமாக நான் எடுத்துக்கொண்ட காரியத்தைத் தொடங்காதது வாஸ்தவம். என் தொழில் சம்பந்தமான அலுவல்களையும் வரவரக் குறைத்துக் கொண்டுதான் வருகிறேன்......எங்கள் மாகாணத்துக் கவர்னரும் இந்தத் திட்டத்திற்குத் தம் ஆசிகளைக் கொடுத்திருக்கிறார். நம் காரியம் கை கூடுவதற்கும் அவருடைய அநுதாப மொழிகள் அவசியம் வேண்டியனவே............நாங்கள் சென்னைக்குத்தான் முதல்முதலில் பணத்திற்காக வரப் போகிறோம். மைசூர் மகாராஜாவிடமும் திருவாங்கூர் அதிபதியினிடமும் எங்கள் காரியத்திற்கு உதவிசெய்ய விண்ணப்பம் செய்துகொள்ளப்போகிறோம்... நீங்கள் எங்கள் காரியக் கமிட்டியில் சென்னை அங்கத்தினராக இருப்பதற்கு ஒப்புக் கொள்ளுவீர்கள் என்று நம்புகிறேன்"†

என்று எழுதினார். கடிதம் பெற்றவரும் சும்மா இராமல், "உங்கள் ஆகாயக் கோட்டைகள் என் சிறிய புத்திக்கு

* 'ஹிந்து,' 27-7-06.
† கடிதம், 21-5-06.

எட்டக்கூடியவையாகத் தோன்றவில்லை" என்று மறைக்காமல் சொல்லிவிட்டார். பாவம், மாளவியாஜி மறுபடியும் ஜூலை மாதம் 25-ஆம் தேதி எழுதிய கடிதத்தில், தம்மால் தொழில் சம்பந்தத்தைச் சட்டென்று விட முடியாததைக் குறித்து வருந்திவிட்டு, எப்படியாவது வரும் விடுமுறையிலாவது இரண்டரை மாதங்களுக்குக் குறையாமல் இவ் விஷயத்தில் தம் சிரத்தையைக் குன்றுமல் வைப்பதாகவும் வாக்குறுதி கொடுத்தார்.

"நீங்கள் நினைப்பதுபோல் முழு அவகாசத்தையும் கொடுக்காமல் இக்காரியங்களில் வெற்றி பெறுவது முடியாதுதான். இனி என் குடும்பக் காரியங்களிலிருந்தும் விடுபடவே ஈசனைப் பிரார்த்திக்கின்றேன். கடவுளும் எனக்கு விடுதலை வரம் தருவார் என்று பூரணமாய் நம்புகிறேன்"*

என்ருர்.

சிநேகிதர்களுக்குள் சில அபிப்பிராய பேதங்கள் உண்டாயின. அன்னி பெஸண்டு அம்மையாரின் காரிய நிர்வாக சக்தியில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அதிகப் பிரமை உண்டு. அதனுல் அம்மையாரையும் சேர்த்துக்கொண்டு தான் எதையும் மாளவியாஜி செய்யவேண்டும் என்று அவர் கருதினுர். மேலும் மாளவியாஜியினுல் நேர்த்தியாகக் காரியங்களைச் செய்வதென்பதே முடியாதென்பது நண்பருடைய அந்தரங்கக் கருத்துப்போலும். அதை வாய் விட்டுச் சொல்லிவிட்டார். மாளவியாஜி அதை நினைத்து வருத்தப்பட்டதுமல்லாமல், கடிதம் ஒன்றில் இரண்டு வருஷங்களுக்குப் பின் தம் வருத்தத்தைத் தெரிவித்தார்; அசைக்க முடியாத தீர்மானத்தையும் அக்கடிதம் கூறியது. 1911-ஆம் வருஷம் ஜூலையில் ஒருவாறு பேதங்கள் குறைவுபட்டு மாளவியாஜியும் மறுமுறை தம் ஏற்பாட்டின் சாராம்சத்தை அறிக்கை மூலம் வெளியிட்டார். அதில் அன்னிபெஸண்டம்மையின் பார்வையிலிருந்த 'மத்ய ஹிந்து கலாசாலை'யை, தாம் எழுப்பப்போகும் ஹிந்து சர்வ கலாசாலையினுடன் சேர்த்துக்கொள்வதற்கும் ஏற்பாடுகள் நடப்பதை வெளியிட்டு, இனி, புதிய ஹிந்து சர்வ கலாசாலை ஏற்பாட்டிற்கு இடையூறுகள் இருக்கமாட்டா

---

* கடிதம், 25-7-06.

என்பதையும் குறித்தார். மிஸஸ் அன்னிபெஸண்டு செய்திருக்கும் அரிய ஊழியங்களைப் புதிய திட்டத்தின் அறிக்கையில் சரியான அளவில் குறிக்கவில்லை என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் மாளவியாஜியினிடம் புகார் செய்தார். அவர் என்ன செய்வதென்று தோன்றாமல் உணர்ச்சி ததும்பும் மொழிகளில் பின்வருமாறு எழுதினார் :

''கிருஷ்ணஸ்வாமி, உம்மிடமிருந்து வந்த ஜூலை 26-ஆம் தேதிக் கடிதத்தைப் பெற்றேன். அன்னி பெஸண்டு அம்மையாருடன் சேர்ந்தே ஒத்துழைப்பது 'ஹிந்து சர்வகலாசாலை'க்கு என்றுதான் தீர்மானமாக முடிவு செய்துகொண்டு விட்டேனே. சர்வகலாசாலையின் பார்வையிலுள்ள கலாசாலைகளில் 'மத்ய ஹிந்து கலாசாலை'யும் இனி ஒன்று என்று அறியுங்கள். ஆனால் நீங்கள் சொல்லுவதை என்னால் ஒப்ப முடியவில்லை. 'ஒரு பெரிய காரியத்தைச் செய்து பார்க்கவேண்டிய உற்சாகமும், குன்றா வலிவும், ஒத்துழைப்பும் நம் ஜனங்களிடம் இல்லை' என்பதில் உங்களுடன் என்னால் ஒன்று சேரமுடியாது. உங்கள் மனத்தினுள்ளும் 'மிஸஸ் பெஸண்டின் தீவிர ஒத்துழைப்பு ஏற்படா விட்டால், இந்தச் சர்வகலாசாலைக் காரியம் வீணாகி விடும்' என்று நினைத்ததில் எனக்கு மிகவும் வருத்தமே. நீங்கள் இவ்வாறு நினைப்பதற்காகவேதான் அவருடன் சேருவதில் எனக்கு அபிப்பிராயங்கூட முதலில் இல்லை. ஏனென்றால், உங்களைப் போன்ற அறிவாளிகளுக்கும் இம்மாதிரிப் படுவதுதான் எனக்குக் கவலையைத் தந்தது. ஒன்று மட்டில் என் வரையிலும் நிச்சயம்: மிஸஸ் பெஸண்டின் ஒத்துழைப்பு இல்லாவிடினும் இந்த ஹிந்து சர்வ கலாசாலை எழும்பி விடும். ஆனால் ஒன்றை மட்டும் ஒப்புக் கொள்கிறேன்: யாராவது நமக்கு உதவி அளிப்பவராயின் அவர்களிடமிருந்து அதை வாங்கிக் கொள்ளமாட்டேன் என்று மறுப்பது சுத்த முட்டாள்தனம். ஹிந்துக்களின் பூரண சந்துஷ்டிக்கும் உவந்ததாய் இப்பல்கலைக்கழகம் ஏற்படுமாயின் மிஸஸ் பெஸண்டுடன் சேர்வதனால் ஒன்றும் தவறு ஏற்பட்டு விடாது. இதை நீங்கள் ஒப்புக்கொள்வதில்தான் எனக்கு மிகவும் பலம் தோன்றுகிறது.''*

மாளவியாஜி மேலும் வேண்டிக்கொண்டார்:

''இது சம்பந்தமாய் மனத்தாங்கல் சற்றும் வராமல் பார்த்துக் கொள்ளுங்கள். நிச்சயம் ஹிந்து சர்வகலாசாலை சீக்கிரத்தில் எழும்பி விடும். வேண்டிய அளவில் அதற்கு உங்கள் உதவியைக் கொடுங்கள். 'புதிய புதிய காரியங்கள்தாம்

* கடிதம், 4-8-11.

நமக்குச் சதா!' என்று சலிப்புடன் கிளம்பும் உங்கள் வார்த்தையை விட்டு ஒழியுங்கள் என் விஷயத்தில்.''

இவை மன்ருடும் மொழிகள்தாம். சென்னை நண்பரின் மனத்தில் வாஸ்தவத்தில் கோபமே கிடையாது. அவர் ''பண்டிட்ஜீ, நீங்கள் மட்டும் இந்தச் சர்வகலாசாலையை எழுப்பி விடுங்கள். உங்கள் நோக்கங்களுக்குத் தகுந்த ரூபாய் பதினுயிரம் வேண்டுமானுலும் நான் தருவேன்'' என்ருர். ''நிச்சயந்தானு?'' என்ருர் வடநாட்டு வயோதிகர். ''நிச்சயம்; இதில் எனக்குச் சந்தேகம் இல்லை'' என்று நண்பர் வாக்குறுதி கொடுத்தார்.

எல்லாம் புராணமாகிவிட்டது; அன்று முதல் மாளவியாஜி ஊர் ஊராய்ச் சென்று பெரிய பெரிய அரசர்கள், ஜமீந்தார்கள், தனிகர்கள் ஒவ்வொருவரையும் விடாமல் ஒரு கோடிக்குப் பதில் இரண்டாகச் சம்பாதித்த செய்தி இந்நாட்டுச் சரித்திரத்தில் பதிப்பிக்க வேண்டிய உயர்தர விஷயம். சென்னைச் சிநேகிதர் கொடுக்க ஒப்புக்கொண்ட தனத்தை, அவர் இறந்த பிற்பாடு குடும்பத்திற்குத் தலைவரான காரணத்தால், 1916-ஆம் வருஷம் என் தமையனுர் கொடுத்தார். ''தந்தை வாக்கைப் பரிபாலித்த சத்புத்திரன் அல்லவா நீ?'' என்று மாளவியாஜியும் அவரை மனமார ஆசீர்வதித்துச் சென்ருர்.

பிற்பாடு ஒரு சமயம், 1925-ஆம் வருஷம், நாங்கள் காசியில் ஹிந்து சர்வ கலாசாலையைச் சென்று பார்க்கையில் மாளவியாஜி பழைய காலத்தை மறக்காமல், ''என் ஆருயிர் நண்பர் கிருஷ்ணஸ்வாமி இருந்து இவ்வளவையும் பார்க்கவில்லையே!'' என்று உணர்ச்சியினுல் நடுங்கிய குரலுடன் எங்களிடம் வருந்தினுர்.

எங்கே பார்த்தாலும், யாரைப் பார்க்கினும், சொன்னதை நிறைவேற்றுங் குணமே உயர்ந்தது என உலகம் ஒப்புக் கொள்ளும். தேச சேவையிலும் தனம் தருவதிலும் தனிப் பிரகிருதியாகவே கிருஷ்ணஸ்வாமி ஐயர் விளங்கினுர். வாஸ்தவத்தில் அவருடைய மனம் சொந்தச் செலவு செய்வதில் அவ்வளவு தாராளமாக இருந்ததில்லைதான். பிறருக்கு ஈவதில் – அதிலும் வித்தைக்

காகவும், உயர்ந்த காரியத்திற்காகவும் பாடுபடுகிறவர்களிடம் விரைந்து சென்றது. உண்மையில் பணம் செய்யக்கூடியதும் அதுவேதான்; நல்ல காரியங்கள் தடைப்படாமல் நடப்பதற்கு வேண்டிய முக்கிய சாதனங்களில் பணமும் ஒன்றல்லவா?

## அத்தியாயம் 23

### தாய்நாடும் தமிழ்ப்பண்பும்

> "பெற்ற தாயும் பிறந்தபொன் னாடும்
> நற்றவ வானிலும் நனிசிறந் தனவே!" —பாரதியார்.

இன்றல்லவா பாரதியாரின் பெயரும் பெருமையும், தமிழ்நாடெங்கும் பல காரணங்களால் அதிகமாகப் பரவி இருக்கின்றன? நாற்பது வருஷங்களுக்குமுன் பாரதியாரையும் அவருடைய உணர்ச்சிப் பெருக்கின் அம்சங்களான பாட்டுக்களையும் உலகிற்கு அர்ப்பணம் செய்ய வழிதேடிய ஒரு மஹானைப் பற்றி அறிவதில், நமக்கெல்லோருக்கும் அவா இருக்கத்தான் செய்யும். இன்று தமிழ் அபிமானம் சில இடங்களில் மிகுந்த வெறியாகவும் மாறியிருப்பதைக் காண்கின்றோம். ஆனால் பாஷை வேற்றுமைகளுக்காகச் சச்சரவை இம்மாதிரி மிகைப்படுத்தாத காலத்தில், ஒருவர் பாரதியாரின் பாட்டைக் கேட்டு அநுபவித்து அவருக்குச் சகாயம் செய்ய முன்வந்தார் என்றால், பாரதியார் பாட்டின் உண்மையான உயர்வை மாத்திரமன்றி உதவி செய்தவரின் நிர்மலமான தேசபக்தியையும் அது விளக்குகின்றது.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் சூரத் காங்கிரஸ் பிரிவின் போது திட மிதவாதிகளில் ஒருவராக விளங்கினார் என்பது அறிந்த விஷயம். திலகர் கோஷ்டியைச் சேர்ந்தவர்களில் காலஞ் சென்ற ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரும் ஒருவர் என்பதைத் தமிழ்நாடு நன்கு உணர்ந்திருக்கும். மறு வருஷம் நாடெங்கும் பல பல கட்சிகள் தோன்றி அரசியல் காரியங்களில் சச்சரவுகளை எதிர்பாராத விதம் பெரிது படுத்திவிட்டன. பாரதியார் 'இந்தியா' என்னும் தமிழ் வாரப் பத்திரிகை நடத்தியதனால், தம் அபிப்பிராயங்களை மறைக்காமல் காரசாரமாக எழுதத் துணிந்தார். அவருடைய சீர்திருத்தும் திருஷ்டியில் மித

வாதிகளின் காரியங்களும் விழுந்தன. நாட்டிற்கும் மக்களுக்கும் மிதவாதிகள் விரோதிகள் என்பது பாரதியாருடைய நம்பிக்கை. அவரைப் போன்றவர்கள் அநேகர் அக்காலத்தில் இருந்தார்கள்.

அவ்விதக் கிளர்ச்சிகள் நாடெங்கும் மலிந்துகிடந்த காலம் 1907—ஆம் வருஷம். இந்திய சுயராஜ்யப் போரின் சரித்திரத்திலும் பெரிதும் சீர்குலைந்த காலம் அது. அந்நாளில் கட்சி விரோதங்களினால் பலர் ஒருவரை ஒருவர் பழிக்காமல் இருப்பது அரிதாயிற்று. நல்ல தேச பக்தியைப் பெற்றவர்களுங்கூடத் தனித்தனி மார்க்கங்களைப் பின்பற்றும் ஆர்வத்தில் மற்றவர்களைத் தூஷித்தும் ஏசியும் பேசுவதில் தங்களையே மறந்தார்கள். என் தகப்பனார் பாரதியாரின் அரசியல் சம்பந்தமான கட்டுரைகளைப் படித்துச் சிற்சில சமயங்களில் மனவமைதியையும் இழந்து அவரைப்பற்றித் தவறான அபிப்பிராயங் கொண்டிருந்தார் என்றால், அக்காலத்தின் கோலத்தைப்பற்றி என்ன என்று சொல்வது?

ஆனால் பாரதியாரும் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் நேரில் ஒருவரை ஒருவர் அதற்குமுன் கண்டு அறிமுகமானவர்களே அல்ல. அதன் காரணத்தைத் தெரிந்துகொள்வது கஷ்டமன்று. வக்கீல் தொழிலில் மிக்க செல்வாக்கை அடைந்து, பொதுநலக் காரியங்களில் ஊக்கத்தை மிதமிஞ்சிக் காட்டியவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். பாரதியார் அப்பொழுதுதான் வித்திலிருந்து வெளிக்கிளம்பின தேசத்தொண்டின் சிறு நாற்றாக விளங்கினார். மேலும், கவிதைக் காதலியுடன் தனிமை இன்பத்தில் மூழ்கியும் இருந்தார். அவர் தனிகர்களின் சகவாசத்தைத் தாமாக நாடும் இயல்பு இல்லாதவர். ஆதலால் அவ்விருவரும் ஒருவரை ஒருவர் அறிந்துகொள்ளாதது வியப்பிற்குரிய விஷயமன்று. அப்படியிருந்தும், தெய்வம் சும்மா இராமல் அவ்விருவரையும் தேசபக்தியின் மேன்மையினாலும் தமிழ்ப் பண்பின் ஆட்சியினாலும் ஒருங்கே சேர்த்தது விந்தையல்லவா? ஆம்! தனிகர்களை நாடித் தம்மைக் குறைத்துக் கொள்ளாதவரும், தேசியப்

போராட்டத்தில் சென்னைத் தலைவரின் கொள்கைக்கு வேறுபாடான மனப்பான்மை கொண்டவருமாகிய பாரதியார், அவரிடமே தமக்கு வேண்டிய பொருளையும் புகழையும் முதலில் பெற்றார் என்றால், அவருக்கு மாத்திரமன்றி, கொடுத்தவருக்கும் அது பெருமையை அளிக்கின்றது. கலை கவிதை முதலியவைகள் செழிப்பது, கேவலம் தாய்ப் பாஷையிடம் உள்ள அபிமானத்தினால் மட்டுமன்று; மனத் தூய்மையுடன் சீர்தூக்கிப் பார்க்கும் ரஸிகத்தன்மையினாலேயுங்கூட என்பதைப் புலப்படுத்துகின்ற திருஷ்டாந்தமாகவே இதை நாம் கொள்ள வேண்டும்.

பாரதியார் தம் பாட்டுக்களைத் தேச பக்தியின் பெருக்கினால் எழுதி எழுதிப் பார்த்து விட்டு முக்கியமான சில நண்பர்களிடையே மாத்திரம் தாமே அவைகளைப் பாடிச் சந்தோஷப்படுத்தி வந்தார். இதைத் தவிர வேறு விதத்தில் வெளிக்காட்ட இயலாதிருந்ததால், அம்மாதிரித் தம் பாட்டுக்களை வெளிப்படுத்தப் பாரதியாருக்கு ஆசை பிறந்தது. பணத்திற்கு எங்கே போவது? ஒருநாள் தம் சிநேகிதரான ஜி. ஏ. நடேசனிடம் பலபடியாகத் தம் சிரமத்தைச் சொல்லிக் கொண்டாராம். அவர், வறண்ட நெஞ்சிற்கு நீரோடை இருக்கும் இடத்தைச் சுட்டிக் காட்டும் சுபாவம் படைத்தவர். ஆகையால் அவர், "உங்களுக்கு இருக்கும் ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ள வழி இருக்கிறது. பணத்தை இம்மாதிரி விஷயங்களுக்குக் கொடுக்கக் கூடியவர், ஸ்ரீ வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரே. வேண்டுமானால் உங்களை நான் அவரிடம் இன்றே அழைத்துச் செல்லுகிறேன்" என்றார்.

அதற்குப் பாரதியார் சட்டென்று, "வேண்டாம், வேண்டாம். கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் யார் போவது? அவர்தாம் சதா என்னைப்பற்றிக் கோபத்துடன் பேசுகிறாராமே! எனக்கு அவரிடம் செல்ல இஷ்டமில்லை" என்று மறுத்துவிட்டார்.

ஆனால் ஸ்ரீமான் நடேசன் சளைப்பவரா? அவர் மீண்டும், "உங்களுக்கு அவரைத் தெரியாது. இப்படித்தான்

கோபிப்பார் முதலில்; ஆனால் அவருடைய இருதயம் இளகியது; நல்ல காரியங்களைக் கண்டால் பசும்புல்லைக் காணும் பசுவின் மனத்தை ஒத்தது. உங்கள் பாட்டை அநுபவித்தாரானால் தகுந்த உபகாரம் செய்யாமல் இருக்கமாட்டார்'' என்று திரும்பத் திரும்ப வற்புறுத்தினார். பாரதியாரும், ''சரி, வருகிறேன்; ஆனால் ஒரு நிபந்தனையின் பேரில்தான். நீங்கள் என்னை மாத்திரம் இன்னாரென்று அவருக்குத் தெரியப்படுத்தவேண்டாம். இது முக்கியம்'' என்று கேட்டுக்கொண்டார். நடேசனும் ஒப்புக்கொண்டு நண்பரைப் பார்க்கப் பாரதியாருடன் புறப்பட்டார்.

சாயங்கால வேளை; வக்கீல் அவர்கள் கோர்ட்டு அலுவல்கள் கழிந்து வீட்டிற்கு வந்ததும், பங்களாவின் முன்னால் உள்ள திறந்த வெளியில் போடப்பட்டிருந்த சாய்வு நாற்காலி ஒன்றில் சாய்ந்துகொண்டு சிநேகிதர்களுடன் சல்லாபம் செய்யும் சமயம். அன்று சற்று இருட்டியும் விட்டது. நடேசன், நண்பர் என்ற முறையில் எப்பொழுது வேண்டுமானாலும் அவரைப் பார்க்க வருவார். வரும்பொழுதெல்லாம் ஏதாவது தர்பார் நடத்தும் கோலமாகவே காட்சி அளிப்பார் நண்பரும். யாராவது ஒருவர் பாடியும் அல்லது பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசியும் தர்க்கம் செய்துகொண்டும் இருப்பது வழக்கம். அழைத்து வந்தவரை, ''இவர் யார்?'' என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் கேட்கவே நடேசன், ''இவர் ஒரு தமிழ்க் கவிஞர்; சில பாட்டுக்களை இயற்றியிருக்கிறார். உங்களுக்குத்தான் தமிழ்ப் பைத்தியமாயிற்றே! நிச்சயம் கேட்பீர்கள் என்று தைரியம் சொல்லி இவரை என்னுடன் அழைத்து வந்தேன்'' என்றார் சிரித்துக் கொண்டே.

அவர் கேட்கத் தயாராக இருக்கும் பாவனையில் தோன்றுவதை அறிந்து நடேசன் சுப்பிரமணிய பாரதியாரைப் பாடச் சொன்னார். பாரதியார் பாட ஆரம்பித்தார். முதலில், 'வந்தேமாதரம்' என்ற பாட்டை நாத நாமக்கிரியையில் தாயுமானவருடைய 'ஆனந்தக் களிப்பு'

மெட்டில் பாடினார். அவர் குரல் கணீரென்று இருந்தது; உள்ளத்தின் உணர்ச்சி, பாட்டிலும் கலந்து பெருகியது.

"ஆயிரம் உண்டிங்கு ஜாதி—இதில்
அன்னியர் வந்து புகலென்ன நீதி?—ஓர்
தாயின் வயிற்றிற் பிறந்தோர்—தம்முட்
சண்டைசெய் தாலும் சகோதர ரன்றோ?"

என்ற அடிகளை அவர் பாடும்பொழுது கிருஷ்ணஸ்வாமி ஐயர் சாய்ந்திருந்தவர் எழுந்து உட்கார்ந்துவிட்டார். பாரதியாரின் தேசாபிமானத்தைக் கண்டு பிரமித்து விட்டார். அடுத்தபடியாகக் காம்போஜி ராகத்தில், 'தாய் நாட்டு வணக்க'மும், கடைசியில் பூபாளத்தில், 'எங்கள் நாடு' என்னும் பாட்டும் பாடிப் பாரதியார் முடித்தார். மனம் எங்கெல்லாமோ சென்று விட்டது, ரஸித்த நண்பருக்கு. தாய் நாட்டின் பெருமையிலும் தமிழ்ப் பண்பின் கௌரவத்திலும் ஈடுபட்டது அவரது உள்ளம். மறு நிமிஷமே அவர், "இவ்வளவு அழகான பாட்டுக்களை ஏன் நீர் ஊறப்போட்டு வைத்துக்கொண் டிருக்கிறீர்? நாடெங்கும் பள்ளிகளிலும், பெண்களுக்குச் சங்கீதம் சொல்லி வைக்கும் தனிகர்களிடையிலும், இவைகளைப் பரவச் செய்ய வேண்டாமா? ஏன் சும்மா இருக்கிறீர்?' என்றார்.

காத்திருந்த நடேசனும், "அதற்காகவே இங்கே உங்களைக் காண வந்திருக்கிறார் இவர். இவருக்கு மிகவும் சிரமதசை; ஆகையால் நீங்கள் உதவி செய்தால் சௌகரியமாய் இருக்கும், குறித்த காரியங்களுக்கெல்லாம்" என்று சொன்னார்.

"அதற்கென்ன தடை? இதோ உங்களுக்கு நூறு ரூபாயையும், இந்த மூன்று பாட்டுக்களை அச்சிட்டு இனமாகக் கொடுப்பதற்கு என்ன செலவு ஆகுமோ அதையும் தரும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ளத் தயார். உங்கள் பெயர் என்ன?" என்றார்.

பாரதியாருக்கு அப்பொழுதுதான் மிக்க கவலை ஏற்பட்டது. நடேசனை அவர் பார்த்தார். அவரும் சிரிப்புடன், "இவர்தாம் தாங்கள் அடிக்கடி 'இந்தியா' பத்திரி

கையில் வாசிக்கும் கட்டுரைகளின் ஆசிரியர் பாரதியார். நேரில் உங்களிடம் பரிசயம் செய்து கொள்ளச் சங்கோசப் பட்டதனுல் நான் அழைத்து வந்தேன்'' என்ருர். உடனே அச்சீமானும், ''தாங்கள்தாம் சுப்பிரமணிய பாரதியாரா? என்ன உயர்ந்த தேசாபிமானம் தங்களிடம் தெரிகிறது! இது தெரியாமல் தங்களை வெறும் வெறிபிடித்து அலையும் தீவிரவாதிகளில் ஒருவராக அல்லவா இதுகாறும் நினைத் திருந்தேன்? இன்றே என் எண்ணம் தவறு என்று ஏற பட்டது; ஸந்தோஷம்'' என்று கம்பீரமாயும் பூரண அன் புடனும் பாரதியாரைப் புகழ்ந்தார்.

எதிர்பாராத இடத்திலும், எதிர்பாராத விதத்திலும் ஒருவருக்குப் புகழும் பொருளும் கிடைத்தால் சந்தோஷத் திற்குக் குறைவு ஏது? பாரதியார் அன்று கிருஷ்ணஸ்வாமி ஐயரின் உண்மை இருதயத்தையும் களங்கமற்ற ரஸிகத் தன்மையையும் அறிந்துகொண்டார். அன்று அவர் பாடிய பாட்டுக்களைப் பதினையாயிரம் பிரதிகளுக்குமேல் அழகிய காகிதத்தில் அச்சிட்டு நாடெங்கும் பள்ளிக்கூடங்களுக்கும் பொதுஸ்தாபனங்களுக்கும் அனுப்பினுர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். பாரதியாரை - எதிர்க்கட்சியில் இருப்பவரை - தீவிர மிதவாதியான ஒருவர் கௌரவித்தாரென்ருல் அது அவருடைய பெயருக்கும் புத்தி விசேஷத்திற்கும் அன்றும் இன்றும் அளவிலாப் பெருமையைத் தருவதன்ருே!

உயிர் நீத்த பிறகு எத்தனையோ பேர் பாரதியாரின் புஸ்தகங்களை அச்சிட்டும், அவர் தினத்தைக் கொண்டாடு வதிலே ஈடுபட்டும் உழைக்கின்றதைப் பார்க்கின்ருேம். மற்றவர்கள் செய்வதையே நம்பி வாழும் மாந்தர்களே நம்மில் பலர். ஆனுல், ஒருவருக்கும் பாரதியாரைப் பற்றி அதிகம் தெரியாத நாளில், அவருக்குப் புகழும் பெருமையும் வராத காலத்தில், அவருடைய அரிய கவிதையின் அரு ளுக்கும் தேசசேவையின் ஊக்கத்திற்கும் மரியாதையை முற்றும் காட்டி அதன் பயனைத் தாம் மாத்திரம் அநுபவி யாமல் பிறருடனும் பங்கிட்டுக்கொள்ளும் மனப்பான்மை எவ்வளவு உயர்ந்தது என்பதை எடுத்துச் சொல்லவும் வேண்டுமா? அதுவே உண்மையான உள்ளத்தின்

பண்பாடு; அறிஞர்கள் தேடும் தூய்மையின் வளர்ச்சியும் அதுவே.

மற்றும் பாரதியாருடைய 'செந்தமிழ் நாடென்னும் போதினிலே' என்ற பாட்டு உருவாகிய வரலாறும் அறிய வேண்டியதே. அப்பாட்டிற்கும் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும் ஒரு தொடர்பு உண்டு. நம்முடைய பாரத நாட்டின் பழம் பெருமையை எளிய நடையில் அமைத்து ஆண்களும் பெண்களும் பாடும் வண்ணம் சில பாட்டுக்கள் இயற்றப்பட வேண்டுமென்று கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தோன்றியது. தம் கருத்தைப் பலரிடமும் பல இடங்களிலும் உரைத்து வந்தார்.

ஐயருடைய பழக்கத்தைப் பெற்ற பிறகு பாரதியாரும் ஒரு தடவை இவ்வபிப்பிராயத்தைத் தெரிந்து கொண்டு எந்த வகையில் இந்த விருப்பத்தைப் பூர்த்தி செய்வதென்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். திடீரென்று அவருடைய ஞாபகத்தில் சில மாதங்களுக்கு முன் ஒரு நாள், சென்னை ராஜதானிக் கலாசாலையில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் தலைமை வகித்தபோது பேசிய பேச்சின் சில வாக்கியங்கள் எழவே அவைகளையே பாட்டு வடிவத்தில் உருவாக்கிவிட்டார். ஜி. ஏ. வைத்திய ராமன் என்பவர் 'தமிழின் பெருமை' என்ற உபந்யாஸத்தைக் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தலைமையின் கீழ் அன்று பேசினர். முடிவில் அக்கிராஸனர் சொற் பொழிவில் சொன்ன வார்த்தைகளே பளிச்சென்று பாரதியார் காதில் ஒலிக்கத் தொடங்கின. மாதங்கள் சில கடந்த பின்பும் ஆர்வம் நிறைந்த அச் சொற்கள் மனத்தில் திரும்பவும் பரவத் தொடங்கின. ஆம், அன்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் சொன்ன வார்த்தைகள், அவருக்குத் தாய் நாட்டின்பால் இருந்த பற்றின் பெருமிதத்தையும் உணர்ச்சி வேகத்தையும் வெளியாக்கின.

*"தமிழில் எத்தனை நூல்கள் இருக்கின்றன! திருவள்ளுவர் திருக்குறள் செய்த பாஷை இது; கம்பன் இராமாயணம் இயற்றியது இந்தப் பாஷையிலே; நாயன்மார் தேவாரம் பாடிய*

பாஷை; மாணிக்கவாசகர் திருவாசகம் அருளிய பாஷை; ஆழ்வார்கள் திவ்வியப் பிரபந்தம் பெற்றதும் இப்பாஷையேதான்''*

என்றெல்லாம் தொடர்ச்சியாக அன்று அவர் பேசினார். அந்தப் பிரசங்கத்தைக் கேட்டவர்களில் பாரதியாரும் ஒருவர். உள்ளக் கிளர்ச்சி பெற்ற மஹான் ஆனதால், அவ்வார்த்தைகளே பிற்பாடு அரிய உணர்ச்சி ஊட்டும் சிறந்த அடிகளாக இன்னிசையுடன் இதயத்தில் குமிழியிட்டன.

அந்தப் பாட்டைக் கேட்டு அதில் தம்முடைய கருத்து அமைந்திருப்பதை அறிந்து கிருஷ்ணஸ்வாமி ஐயர் பெரு மகிழ்ச்சி அடைந்தார்.

என்றுமே தேவார திருவாசகங்களைத் தெரிந்தவர் பாடக் கேட்கும் ஆவல் அவரிடம் அதிகம். மணிக்கணக்கில் இசையுடன் பாடப்படும் செய்யுட்களைக் கேட்டு உருகுவார். ஒரு சமயம், காலஞ்சென்ற ஈழநாட்டுச் சிறப்பாளர் ஸர் பி. ராமநாதன் பாடிய அப்பர் சுவாமிகளின், 'தேடிக் கண்டு கொண்டேன், திருமாலுடன் நான்முகனும், தேடித் தேடொண்ணுத் தேவனை என்னுள்ளே, தேடிக் கண்டு கொண்டேன், என்ற அடிகளைக் கேட்டுச் செவிப்புலனையும் கடந்து உள்ளேயுள்ள அறிவின் புலனுக்கு விருந்தாக அதை மதித்து விம்மிதம் அடைந்தார். தம் குமாரிகளையும் அப்பாட்டை நண்பர் ராமநாதன் பாடும் இசைப் பிரகாரம் பாடக் கற்றும் வைத்தார். எல்லாம் அவருக்குள்ள தமிழபிமானம் செய்த காரியந்தான்.

---

* டாக்டர் உ. வே. சாமிநாத ஐயருடைய 'நினைவுமஞ்சரி' பக்கம், 144-146.

## அத்தியாயம் 24

### புதிய மாறுதல்களில் ஆசை

"மாற்றி வையம் புதுமை யுறச்செய்து
மனிதர் தம்மை அமரர்க ளாக்கவே
ஆற்றல் கொண்ட பராசக்தி" —பாரதியார்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரை அறிந்தவர்கள், அவருடைய மனம் எவ்வளவு புராதனமான வழியில் சென்றாலும், நாளுக்கும் நேரத்திற்கும் தகுந்த மாறுதல்களை வெறுக்கவில்லை என்று உறுதியாகக் கூறுவார்கள். ஏனென்றால், அவர் பேசிய மொழிகளின் உட்கருத்தும், அவருடைய செயல்களின் நுண்ணிய நோக்கமும் சில சமயங்களில் புதிய லக்ஷ்யங்களையும் தழுவின. புராதன தர்மங்களில் சீர் பிறழாதவர்தாம்; ஆயினும், இந்திய சமூகம் ஒன்றுபடத் தடையாக இருக்கும் சிற்சில அரக்கர்களை ஒழிக்க வேண்டும் என்பதும் அவருடைய மனப்பூர்வமான கொள்கைகளில் ஒன்று.

முதலில், எத்தனையோ பாஷைகளின் வேறுபாடுகளும் தனிச்சிறப்புக்களும் தொன்றுதொட்டு இங்கிருப்பினும், நாடு நலம்பெற ஒரே பாஷையையும் ஒரே லிபியையும் இந்தியா முழுவதும் ஏன் அங்கீகரிக்கலாகாது என்ற எண்ணம் அவரிடம் தோன்றியது. எவ்வளவு பெரிய நாடு நம்முடையது? ஆனால், ஐக்கிய உணர்ச்சி ஏற்படாததை நினைக்குங்கால் நம்மையும்விடத் துரதிருஷ்டம் பிடித்தவர்கள் உண்டா உலகில்? இந்த வேதனை அவரை வாட்டவும், மெதுவாக அவருடைய எண்ணங்களில் மாறுதல்கள் சில ஏற்படலாயின. இன்னும் பத்து வருஷங்கள் உயிருடன் இருந்திருப்பாரேயாகில் நாம் சந்தேகமறச் சொல்லக்கூடிய விதம் அவரிடம் மாறுதல்கள் சில துறைகளில் காணப்பட்டதைக் கொண்டு அவர் நினைத்ததைத் தீர்மானிக்க இயலும். ஆனால் இப்பொழுது

நம்மால் அவருடைய நோக்கங்கள் காட்டிய திசையை மட்டுந்தான் குறிக்கக்கூடும்.

அவருடைய ஸம்ஸ்காரம் வாஸ்தவத்தில் பழமையின் கருத்தை எதிலும் உதாசீனப் படுத்தியதில்லை. கர்ம விபாகத்தின் கொடுமைதான் தீண்டாமையைச் சேர்ந்தவர் களின் துர்க்கதிக்கு ஆதாரம் என்று அவர் உணர்ந்தார். "தான் செய்த வினைகளின் பயனுகவே தீண்டாமையை ஒருவன் ஜன்மாந்தரத்தில் அடைகிருன்" என்ற கொள் கையை மட்டுமே வாய் கூசாமல் சொல்லிவிட்டு, "தீண்டா தவர்களின் சிரமங்களை அதிகப்படுத்த உயர்தர ஜாதியார் களுக்கு அதிகாரம் கொடுத்தவர் யார்?" என்றும் அவர் கேட்டார். தேச முன்னேற்றம் மனக்கண்முன் தோன்ற வும், தீண்டாமையை வளர்க்கின்ற சமூகத்தின் புத்தியீனத் தைக் கண்டு அவர் கூக்குரலிட்டார்.*

இம்மாதிரியான இழிந்த செயல்களெல்லாம் பழமையாக இருக்க முடியாது என்பது அவருடைய துணிபு. இவைகளெல்லாம் சமீபத்தில்தான் தோன்றி நாட்டில் தலைவிரித்தாடத் தொடங்கி இருக்கவேண்டும் என்றும் அவருக்குத் தோன்றியது. பாவத்தின் விளை வினுல் தாழ்மையான வகுப்பினர்களாகப் பிறந்தவர்கள் மற்றவர்களை நெருங்கியதால் மேல் ஜாதியார்களை நற்கதி பெருமல் அடித்துவிடுவார்கள் என்பதெல்லாம் அர்த்த மற்ற பயங்களாகவேதான் இருக்கவேண்டும். இனிச் செய்ய வேண்டியவைகளுக்கு எவ்விதச் சந்தேகங்களும் வேண்டியதில்லை. நாட்டில் புதிய உரிமைகளை அரசியல் துறைகளில் பலரும் விரும்பத் தொடங்கி விட்டார்கள். உரிமையில் பங்கு யாவருக்கும் உள்ளது என்ற எண்ணம் நிலைக்க வேண்டுமாயின், வித்தியாசமில்லாமல் ஜன சமூகத் தைத் தங்களுடன் சேர்த்தே இழுத்துச் செல்ல வேண்டி யது பண்பட்ட உள்ளங்களின் கடமை. தீண்டாதவர் களிடம் தீய நடவடிக்கைகள் காணப்பட்டால் அவைகளை அவர்கள் விட்டுவிடப் பிரசாரம் செய்யவேண்டும். ஆகை

---

* மெயில், பிரசங்கம், 10-12-1910.

யால் அவர் வாயிலாக அரசியல் வாதிகளுக்கு உவந்த தோர் உபதேசமாகப்பட்டது யாதெனில், "தீண்டாதவர் களின் கதியை உயர்த்த என்ன வேண்டுமாஞலும் செய் யுங்கள்"* என்பதே.

இன்று மகாத்மாவின் விடாமுயற்சி, வீண் போகாமல் ஹரிஜனங்களுடைய சிரமங்களைக் குறைத்து வருகிறது. பலர் மஹாத்மாவின் தூண்டுதலால் தாங்களும் தீண் டாமை இயக்கத்திற்காக உழைக்கிருர்கள். கிருஷ்ண ஸ்வாமி ஐயரும் அந்நாட்களில் தம் மனத்திற்குத் தோன்றிய சில சீர்திருத்தங்களைக் குறித்திருந்தார். குடி, அசுத்தம், கடவுளற்ற வாழ்க்கை இவைகளினின்றும் தீண்டாதவர்களை மேலே கிளப்பவேண்டுமல்லவா ! இந்த நோக்கங்களை முன்பே, சுவாமி விவேகாநந்தர் தம் மனத்தில் வளர்த்தமையால், அரிய உபதேசங்களைச் செய்து விட்டுச் சென்ருர். "உயர்ந்த ஜாதியைச் சார்ந்தவர்கள் உண்மையான உயர்வை அடைவது கீழ் ஜாதியார்களை அவர்களுடைய இழிவு தரும் காரியங்களினின்றும் மேலே கிளப்புவதனுல்தான். இதைச் செய்வதுதான் இன்று நமக்கு க்ஷேமத்தை அளிக்க வல்லது" என்ருர் சுவாமிகள். 'இதில் அபிப்பிராய பேதங்கள் இருக்கவே முடியாது' என்ருர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். சந்தேகங்களே கிடை யாது அவரிடமும், யோசனை செய்து ஒரு முடிவிற்கு வந்த பிறகு.

சமூகத்தை வாட்டும் இரண்டாவது அரக்கனுகச் சொல்லத் தகுந்தது மதுபானம் என்னும் கெட்ட பழக்கமேயாம். இதனை அவர் வெறுத்ததுமல்லாமல், குடியை ஒழிக்கும் காரியத்தில் அரசாங்கம் செய்ய வேண்டிய சில திட்டங்களையும் எடுத்துக் காட்டினுர். சென்னையில் சமீபத்தில் காங்கிரஸ் அதிகாரத்தின்கீழ்க் கொண்டுவந்த சட்டம் உருவாவதற்கு எத்தனையோ வருஷங்களுக்கு முன் அவர் இம்மாதிரிச் சீர்திருத்தங்களைக் கட்டாயப்படுத்த அரசாங்கம் செய்யவேண்டியதைச்

---

* மெயில், தீண்டாதார் சங்கத்தில் பிரசங்கம், 10-12-1910.

சந்தேகமின்றிச் சொல்லி இருந்தார். 'ந ஸுராம் பிபேத்' என்ற சாஸ்திர வாக்கியம் பஞ்சமா பாதகங்களில் ஒன்றான குடியை ஒழிக்கக் கட்டளையிட்டது. குடியை ஐந்து பாதகங்களில் ஒன்றாக நினைத்ததன் காரணமே நாட்டில் குடிப்பழக்கம் ஒரு சமயம் எவ்வளவு அதிகமாக ஏற்பட்டிருந்தது என்பதைக் காட்டுகிறதல்லவா? சாராயத்தில் கலப்பில்லாத சீமைச்சரக்கு வரத் தொடங்கிய பின்பே நம் நாட்டில் அப்பழக்கம் விருத்தியாகத் தொடங்கியது. இவைகளுக்கெல்லாம் அரசாங்கம் ஒரு வழி பிறப்பிக்கத்தான் வேண்டும். இப்பொழுது இந்திய அரசாங்கம் 14 வயசிற்குக் கீழ்க் குடிப்பவர்களை மட்டும் சட்டப்படி தண்டிக்கின்றது. ஏன் மற்றக் காரியங்களுக்கு வைத்திருக்கும் 21 வயசு எல்லையை இக்காரியத்திற்கும் சட்டத்தில் விதிக்கக்கூடாது? குடியை முழுவதுமே தவிர்க்கக் கட்டுப்பாடான சட்டம் ஒன்று செய்தால் என்ன? அதன்கீழ், சில விலக்கு விதிகளை வைப்பது தவறில்லை. முதலில் சிற்சில பிரதேசங்களிலாவது குடியை ஒழிக்க, பரீக்ஷை செய்து பார்க்கலாமே என்பது அவருடைய எண்ணம். கட்டாயப்படுத்தும் அரசாங்கச் சட்டத்தை அவர் மிகவும் வேண்டினார் என்பதன்று. அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் சீர்திருத்தங்கள் நன்மையைப் பயக்கும் வழிகளில் இருக்கவேண்டியதை மட்டுமே விரும்பினார்.

ஆனால் கட்டாயமான சட்டமாகச் சீர்திருத்தம் ஏற்படாவிட்டால் அது சமூகத்திற்கு நன்மையைப் பயக்கும் திட்டமாகாது என்பதையும் கவனிக்கவேண்டியதே. அவரைப்போல் மற்றவர்களும் சீர்திருத்தத்தை சட்டரீதியாக விரும்பாதது, வேறு ஒரு காரியத்தில் உபயோகமில்லாமல் முடிந்ததை ஞாபகப்படுத்திக் கொள்வோம்.

அவரும் மற்ற நிபுணர்களான புரபஸர் ரங்காச்சாரி முதலியவர்களும் சேர்ந்து சமூகச் சீர்திருத்தத்திற்காக வேலை செய்தார்கள் என்பது முன்னமேயே அறிந்த விஷயம். பிராமணக் குடும்பங்களில் சீக்கிரமாகவே

பெண் குழந்தைகளுக்குக் கல்யாணம் செய்விப்பது தேக ஆரோக்கியத்திற்குக் கெடுதலையே விளைவிப்பதால் அதைத் தடுக்க வேண்டுமென அவர்கள் எண்ணினார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயர் இவ்விஷயத்தில் மிகவும் சிரத்தையுடன் தம் நண்பர் வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளை 'பிரௌடா விவாஹம்' என்ற தலைப்புள்ள ஒரு சிறு கட்டுரைத் தொகுதியை, சாஸ்திர மேற்கோள்களுடன் தயாரிக்கச் சொல்லி, அதைப் பல பிரதிகள் அச்சிட்டு நாடெங்கும் அனுப்பிச் சீர்திருத்தம் செய்ய முனைந்தார். அக்காரியம் பலிக்கவில்லை. சீர்திருத்தத்தில் முனைந்த பிரமுகர்களான பி. ஆர். சுந்தரம் ஐயர், ரங்காச்சாரியார் முதலியவர்களே பிற்பாடு தங்கள் பெண்களை வயசு வருவதற்கு முன்னமேயே கல்யாணம் செய்து கொடுத்து விட்டார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரும் உயிருடனே இருந்திருந்தால் அவர்களைப் பின் தொடர்ந்தே தம் கடைசிப் புதல்விக்குச் சீக்கிரத்தில் விவாகம் செய்திருப்பாரோ என்றுதான் சில சிநேகிதர்கள் சந்தேகித்தார்கள். இடையே ஏற்பட்ட பழக்கங்களும், ஆசாரங்களும் நம்முடைய சாஸ்திரத்தைப் புறக்கணித்தவைகளில் 'பிரௌடா விவாகமும்' ஒன்று. முப்பது ஆண்டுகளுக்கு அப்புறம் இப்பொழுது சாரதா மசோதா சட்டமாக அமலுக்கு வந்தபின் பெண்களின் கல்யாணங்கள் 14–வயசிற்கு முன்னால் நடவாததைக் கண்டு துளியும் ஆசார விருத்தமாக நினையாத மனப்பான்மையைப் பெறத் தொடங்கி விட்டோம். கட்டாயமான சீர்திருத்தமே பயன்தரும் மார்க்கத்தைச் செய்யவல்லது. இல்லாவிடில் அது சீர்திருத்தமாக ஆவது சந்தேகம். பிரயோஜனத்தை மனத்தினால் வேண்டுவதால் மட்டும் நடத்தையில் நலத்தைக் காண முடியாது.

பெண்களின் மேல்படிப்பு முதலிய முன்னேற்றம் ஏற்படும் வழிகளில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அபிப்பிராய பேதம் இல்லை. பெண்கள் உயர்ந்த நோக்கங்களுடன் கலாசாலைக் கல்விப் பயிற்சி பெற்றுப் பிறகு கல்வி இலாகாக்களில் வேலை செய்வதிலும் அவருக்கு விருப்பம் உண்டு. 1907–ஆம் ஆண்டில் மைசூர்ச் சர்வகலாசாலைப்

படிப்பைப் பெற்று பி. ஏ. பட்டத்தை முதலில் வாங்கிய இரு வைஷ்ணவப் பெண்மணிகளுக்குச் சென்னையில் வரவேற்பு முதலிய உபசாரங்களைச் செய்வதற்கு முதல் முதலில் அவர்தாம் பலரை உத்ஸாகப்படுத்தினார். ஸ்ரீமதி ருக்மிணி அம்மாள், ஸ்ரீமதி ஸ்ரீரங்கம்மாள் என்ற இருவர் மைசூரிலிருந்து பி. ஏ. பட்டம்பெற்று, சென்னைக்கு வந்தபொழுது தம் வீட்டிலேயும் அவர்களை உபசரிக்க ஏற்பாடு செய்திருந்தார். பிறகு அவர்கள் கலாசாலைகளில் உபாத்தியாயினி பதவிகளில் அமர்ந்ததையும் கண்டு அவருக்குப் பரம திருப்தி ஏற்பட்டது.

கீழ் ஜாதியார்களின் கல்வி உரிமைகளுக்கு வசதிகளைச் செய்யாத கலாசாலைகளும் அந்நாட்களில் உண்டு. அம்மாதிரி கள்ளிக்கோட்டையில் டி. ஜி. எம். கலாசாலை என்று ஒரு கல்வி ஸ்தாபனம் சென்னைப் பல்கலைக் கழகத்தின் கீழ்ச் சேர்க்கப்படாமல் இருந்து வந்தது. அதன்கீழ்ச் சேர்க்கப்படுவதன் முதல் பயன், தீயர்கள் என்ற மலையாளத்துத் தீண்டாதவர்கள் மேல் படிப்புக்கு வசதிகளைப் பெறுவதற்கு வழி ஏற்படும். சென்னைச் சர்வகலாசாலை ஆலோசனைச் சபைகளில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அங்கத்தினராக இருக்கையில் இது சம்பந்தமாக அடிக்கடி தீர்மானங்களைக் கொண்டுவந்து அக்கலாசாலையைச் சர்வ கலாசாலையுடன் சேர்க்க முயன்றதால் பிற்பாடு தீண்டாதார்களை மேல் படிப்பிலிருந்து விலக்க வழி இல்லாமல் ஆகிவிட்டது. தீயர்கள் சேர்ந்துகொண்டு, தங்கள் நலத்திற்குப் பாடுபட்டவர்பால், தங்கள் நன்றியை அளிக்கப் பின்வருமாறு தீர்மானித்தார்கள்.

"நம் கனம் வி. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய நீடித்த வாழ்க்கைக்கும் குறைவில்லாத தேகசௌக்கியத்திற்கும் ஸ்ரீ நல்லீசுவரன் கோவிலில் லக்ஷ தீபங்களை ஏற்றியும், கடவுளை வழிபட்டும் பிரார்த்திப்போமாக! சென்னைச் சர்வகலாசாலைச் சபையில் சதா தர்க்கம் செய்து கள்ளிக்கோட்டைத் தீயர்கள்பால் உழைத்து, நன்மைகளைப்பயக்கும் மேல் படிப்பிற்கு வழி செய்த மஹானை வாழ்த்துவோமாக! இக்கோயில் முன்பாகக் கருங்கல்லில் ஒரு தீபஸ்தம்பத்தை அவர் நினைவுக்கு அறிகுறியாக நாட்டுவோம்."*

* 'ஹிந்து', 26-10-1909.

கூட்டத்திற்கு அன்று தலைமை வகித்தவர் சி. எம். ராரிச்சன் மூப்பன் என்பவர்.

நிலைத்த தீப ஸ்தம்பத்தைக் கல்லிலும் சுண்ணும்பிலும் எழுப்புவதைவிட ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் எளப்ப எண்ணியவர் அவர். அதிகக் காலம் ஜீவித்திருந் தால், மற்ற ஊர்களிலும் தீண்டாதார்களின் சிரமங்களை ஒவ்வொன்ருய்க் கவனித்துத் தீர்க்க வழி செய்திருப் பாரோ என்றுதான் எண்ண இடமிருக்கிறது. அவருடைய காரியத்திற்கு அந்த நாளில் சுற்றுணர்ச்சியும் சூழ்நிலையும் செய்த சௌகரியத்தைவிடப் பத்து வருஷங்கள் சென்ற பின் எவ்வளவோ அதிகம் முடிந்திருக்கும். ஆனல் அசௌ கரியங்கள் அதிகமிருக்கும் காலத்தில் ஒருவர் தடைகளைக் கவனியாமல் பிறர்பால் உழைத்ததுதான் அழியாத ஜய ஸ்தம்பத்தை நாட்டியதாக ஆகின்றது.

அடுத்த விஷயம்: கிருஷ்ணஸ்வாமி ஐயர் எடுத்துக் கொண்ட 'ஏக லிபி'ப் பிரச்னை. நம் தேசத்தில் ஒற்றுமை ஏற்படுவதற்கு நாம் பேசும் பாஷையும் எழுதும் லிபியும் ஒன்ருக இருப்பது ஒரு பெரிய சௌகரியமாகும். ஆனல் கிட்டத்தட்ட 147 பாஷைகளுள்ள இத் தேசத்திலா அது சாத்தியம்? இக் கேள்வி வெகு நாட்க ளாகத்தான் கேட்கப்பட்டு வருகிறது. இக்காலத்தில் காந்திஜியும் ராஜாஜியும் இதனைப் பரிசோதித்து முடிவுக்கு வந்த விவரம் நாம் எல்லோரும் அறிவோம். ஹிந்தியை நாட்டில் எல்லோரும் கற்பது உசிதம். பள்ளி களில் இளம் பிள்ளைகளுக்கு 'ஹிந்தி' புகட்டுவதைக் கட்டுப்பாடாக வைத்தால் ஒருவாறு தேசம் முழுவதும் ஹிந்தி பேசும் பழக்கம் விருத்தி அடையும். தமிழ் நாட்டில் பலர் ஹிந்திப் பிரசாரத்தையும் கட்டுப்பாடான ஹிந்திப் படிப்பையும் எதிர்த்ததை நம்முடைய நாட்களிலேயே பார்த்திருக்கிறோம். முப்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பே, இச்சீர் திருத்தங்களைச் செய்ய முடியாத தைக் குறித்துத் தோல்வியாக நாம் எண்ண இடமில்லை. ஓரளவு இம்மாதிரி விஷயங்களைச் சீர்தூக்கிப் பார்த்த பிரமுகர்களின் தீர்க்க திருஷ்டியைக் கொண்டாடவே தான் நாம் முன் வரவேண்டும்.

சென்னையில் இத்தேசத்து மக்கள் கல்வி சம்பந்தமாய் ஒரு சபையை 1900-ஆம் வருஷத் தொடக்கத்தில் ஆரம்பித்த வரலாற்றை முன்னமேயே மற்ரெரு சந்தர்ப்பத்தில் அறிந்துள்ளோம். அச்சபைக்குக் காரியதரிசியாக இருந்த பி. எஸ். சிவஸ்வாமி ஐயரிடம் ஹிந்தி பாஷையைப் பயில்வதுபற்றி முதல் முதலில் அவர் நண்பர் ஞாபகப்படுத்தி, அதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்யத் தூண்டினர். அவரும் அதைப்பற்றிச் சற்றும் ஆட்சேபிக்காமல்,

“நீங்கள் அனுப்பிய கடிதம் கிடைத்தது. பள்ளிக்கூடங்களில் ஹிந்துஸ்தானியைப் பேசுமளவிலாவது கற்றுக் கொடுக்கச் சொல்லும் விஷயத்தில் எனக்கும் உங்களுடன் ஒற்றுமைதான். ஏனெனில் வடக்கே இருந்து 1903-ஆம் வருஷம் திரும்பியதுமே ஹிந்துஸ்தானி ஞானம் எவ்வளவு அவசியம் என்பதை உணர்ந்தவன்தான் நானும். சில நண்பர்களிடமும் இதைப்பற்றிச் சொன்னேன். ஆனல் அரசாங்கக் கல்வி இலாகாவின் ஆதரவில்லாமல் நாம் செய்யும் முயற்சியினுல் மட்டும் பள்ளிக்கூட அதிகாரிகள் ஹிந்துஸ்தானியைப் புகட்ட ஒப்புக்கொள்ளுவார்களா? சந்தேகந்தான். எதற்கும் நான் நம்முடைய கல்வி சம்பந்தமான ‘நேட்டிவ் கௌன்சிலை’ இக்காரியத்தைக் குறித்துக் கூட்ட ஏற்பாடு செய்கிறேன்”*

என்று உறுதி கூறினர். கூட்டங்கூடித் தீர்மானித்தார்களே அன்றி நம் நாட்டின் சுதந்திரத்திற்குத் தடைகள் எப்பொழுதும் கிளம்புவதுபோல், ஒற்றுமையை அளிக்கும் அந்த முயற்சிக்கும் தடைகள் பலமானதில் ஆச்சரியமில்லை அல்லவா?

கிருஷ்ணஸ்வாமி ஐயர் பிற்பாடு சென்னை நீதிஸ்தலத்தில் வேலை பார்த்த நாட்களில் கிறிஸ்துமஸ் விடுமுறையில் அலாகாபாத் நகரத்திற்கு ஏக லிபி மஹாநாட்டின் தலைவராகச் சென்ருர். மஹாநாட்டின் காரியங்களைக் கவனித்த ஸ்ரீ சாரதா சரண மித்ரர் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் நண்பர். கல்கத்தா ஹைகோர்ட்டின் மாஜி நீதிஸ்தலத் தலைவர்; செம்மையாகப் படித்தவர். எவ்விதமாவது ஒரே லிபி, நாடெங்கும் உபயோகப் படுத்தப்பட்டால் அதைவிடச் சௌகரியம் நமக்கு வேறு இல்லை

* கடிதம், 14-1-1906.

என்பது அவர் கருத்து. அவருடன் சென்னை ஜட்ஜும் ஒத்துழைக்கச் சித்தமாயிருப்பதை அறிந்தவரானமையால் கிருஷ்ணஸ்வாமி ஐயரைத் தலைமை வகிக்கும்படி அவர் கேட்டுக்கொண்டார்.

அலாகாபாத் காங்கிரஸ் பந்தலில் பெருத்த கூட்டம் ஒன்று கூடியது. தம் கையில் ஒரு சிறு துண்டுக் காகிதக் குறிப்புக்கூட வைத்துக்கொள்ளாமல் பெரிய பிரச்னையைக் குறித்துக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சரமாரியாய்ப் பொழிந்தார். அரை மணிக்குமேல் பேச்சு நடைபெற்றது. அதன் முழு விஷயமும் "இந்தியன் ரெவ்யூவில்"* மறு வருஷம் அச்சிடப்பட்டு வந்தது. அதன் சாராம்சம் மட்டும் நமக்குத் தெரிவது அவசியம்.

"பேசுவதற்குப் பொதுவான ஒரு பாஷையும் ஒரு லிபியும் நம் தேசம் ஒன்றுபடுவதற்கு இன்றியமையாத சாதனங்களாகும். இருபது லிபிகளுக்கு மேலும், நூற்று நாற்பத்தேழு பாஷைகளுக்குக் குறைவில்லாமலும் இப்பொழுது இந்தியாவிலிருப்பதிலிருந்து ஒரு பொது லிபியும் பாஷையும் சாத்தியமா என்றுதான் வியக்கவேண்டி வரும். ஆயினும் சிலர் இவ்விஷயங்களைச் சீர் தூக்கிப் பார்த்ததனால் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இன்று கனவாக இருப்பது, நாளை நனவாகவும் ஆகலாம் என்றுதான் அவர்கள் நினைக்கிறார்கள்: நாம் ஒன்றுபடுவதில் கடவுள் உள்ளம் இளகியிருந்தால், நிச்சயம் நம் வேண்டுகோள் கைகூடும். கடவுளின் அகராதியில்தான் 'முடியாது' என்ற வார்த்தை கிடையாதே! பல பாஷைகளைப் பேசுகிறவர்கள் தங்கள் பாஷையைக் கற்கும்பொழுதே மற்றோர் இந்திய பாஷையைக் கற்பது கஷ்டம் இல்லை அல்லவா? அதே மாதிரி மற்ற எழுத்துக்களை எழுதிப் பழக்கம் செய்கையில் இந்தியா முழுவதும் உணரக்கூடிய ஒரு லிபியையும் சேர்த்தே தெரிந்து கொள்வதிலும் சிரமம் இருக்காது.

பொதுவான லிபியை நினைக்கும்பொழுது எவ்வளவோ லிபிகள் நம்முன் வருகின்றன. முதலில் அராபி லிபி இருக்கிறது. முஸ்லிம்கள் எல்லோராலும் அது தழுவப் படாவிட்டாலும் பெரும்பாலோர் அதைப் பழக்கத்தில் வைத்திருக்கிறார்கள். முஸ்லிம்கள் தொகை அறுநூறு லக்ஷம். அடுத்தபடி ரோமன் லிபி இருக்கிறது. மூன்றாவது தேவநாகரி லிபி இருக்கிறது. பொது லிபியாக ஆவதற்கு ஒரு லிபிக்கு எவ்விதமான சௌகரியங்கள்

* இந்தியன் ரெவியூ, ஜனவரி, 1911, பக்கம், 41.

இருக்கவேண்டும் என்று பார்ப்போம். முதலில் லிபியை எழுதவும் பேசவும் அச்சிடவும் சுலபமாய் இருக்கவேண்டும். இரண்டாவது, அந்தப் பொது லிபியில் பல பாஷைகளுக்கு வேண்டிய எல்லா எழுத்துக்களும் இருக்கவேண்டும். வேண்டாத அதிக எழுத்துக்கள் இல்லாமல், முக்கியமாக வேண்டிய எழுத்துக்கள் இருப்பது அநுகூலம்.

அரபி லிபியை எடுத்துக்கொண்டு பார்க்கையில், அதில் வேண்டிய எல்லா எழுத்துக்களும் இல்லை; அதிகப்படியான எழுத்துக்களும் அதில் சில இருக்கின்றன. ஒரே சப்தத்தைப் பெற்ற அநேக எழுத்துக்களும் இருக்கின்றன; தனிப்பட்ட சப்தங்களுக்கெனத் தனிப்பட்ட எழுத்துக்களும் சில அதில் இல்லை. வேறு லிபியை ஏற்றுக் கொள்வது மூஸ்லீம்களுக்கும் சௌகரியமாய் இருக்கும்.

ரோமன் லிபியைப் பொறுத்தவரையில் சில சௌகரியங்கள் நமக்கு உண்டு. பல மேல் நாட்டுத் தேசங்களின் பாஷைகள் அதில் வரையப்பட்டிருப்பதுதான் அதற்கு முக்கியக் காரணம். விஞ்ஞான வளர்ச்சிக்கு மேல்நாட்டுப் பாஷைகளைத் தெரிந்து கொள்வதும் தற்கால முன்னேற்றத்துக்கு அவசியமானதால் ரோமன் லிபியை நினைக்குங்கால் அது அவசியமோ என்றுதான் எண்ண இடம் இருக்கின்றது. வேறு தேசத்து லிபி என்ற காரணமே ஒருகால் நமக்கு அதை ஏற்றுக்கொள்ள இஷ்டமில்லாமல் செய்யலாம். ஆயினும் இந்தியா தற்காலத்தை ஒட்டிச் சீர்பெற முயலுவதால், மேல்நாட்டு லிபியைப் பெறுவதில் தவறில்லை.

ஆனால் அந்த லிபியை ஏற்றுக்கொள்ளத் தகுந்த காலம் இது இல்லை. ஏனெனில் அதில் நமக்கு வேண்டிய எல்லா எழுத்துக்களும் இல்லை. ஒரே சப்தத்தைக் கொடுக்கும் எழுத்துக்களும் நிறைய இருக்கின்றன. ஆங்கில எழுத்துக்களில் காணப்படும் தெளிவற்ற அம்சமும் கவனிக்கவேண்டியதுதான். சிலர் அதில் எல்லா எழுத்துக்களுக்கும் வழி செய்யலாம் என்கிறார்கள். ஆனால் ஒரே சப்தத்தைக் கொடுக்கும் உபயோகத்தில் உள்ள அநேக எழுத்துக்களுக்கு வழி செய்வது எப்படி? தனித் தனிச் சப்தங்களுக்கென எழுத்துக்களைக் கண்டுபிடித்தவர்கள் நம்மவர்களே. தேவநாகரி லிபியில் 'F' என்ற எழுத்துக்கும் 'Z'க்கும் தனி எழுத்துக்கள் இல்லை. அதேமாதிரித் தமிழில் உள்ள 'ழ' என்ற எழுத்துக்கு ஒப்பாக ஓர் எழுத்தும் தேவநாகரி லிபியில் இல்லை. இம்மூன்றெழுத்துக்களைத் தவிர வேறு சப்தங்களுக்கான எழுத்துக்கள் அதில் இருக்கின்றன. இம்மூன்றையும் ஏற்படுத்த ஒரு சிறந்த அறிவாளிகளின் குழுவு கூடித் தீர்மா

னித்து விட்டால் அதையும் பலர் ஒப்பும்படிச் செய்து விடலாம். தென்னிந்தியாவில் தமிழர்களைத் தவிர மற்றப் பாஷையைப் பேசுகிறவர்கள் தேவநாகரியை நிராகரிக்க மாட்டார்கள்.

ஜப்பானிலும் ஜர்மனியிலும் இன்று தங்கள் லிபிகளை விட்டுவிட்டு ரோமன் லிபியைத் தழுவியதை அறிந்த நாம் பலவித மான தனித்தனி லிபிகளைத் துறந்துவிட்டு ஒற்றுமையின் பொருட்டு ஒரு பொது லிபியைக் கையாளுவது உசிதம். ஜப்பானையும் ஜர்மனியையும் விட நாம் தேசாபிமானம் பெற்றவர்கள் என்று மார் தட்டிக்கொள்ளவும் வழியில்லை. ஆகையால் அரசாங் கத்தைக் கேட்பதற்குமுன், நமக்குள்ளேயே ஒரு லிபியை ஏற்றுக் கொள்ள ஒன்றுகூடித் தீர்மானிப்பதுதான் அவசியம்.''

இன்னும் எத்தனை நாழிகை அவர் அன்று பேசி இருந் தாலும் கூட்டத்தில் இருந்தவர்கள் சலிப்படைந்திருக்க மாட்டார்கள். அவர்கள் ஒரே உத்ஸாகத்தில் இருந் தார்கள். பேச்சில் விஷயமும், அறிவும், நுண்ணிய ஞான மும் பலருடைய புத்தியை வசீகரித்ததில் ஆச்சரியமில்லை. ஏக லிபியைப் பற்றிய பிரசங்கத்தை முழுவதும் வாசித் தவர்களுக்கு அவர் மனம் நாட்டின் ஐக்கியத்தை எவ்விதம் ஆர்வத்துடன் நாடியது என்பது நன்கு புலப்படும்.

ஏக லிபி மகாநாடு முடிவடைந்த பிறகும், அது சம்பந்தமாக அவர் தம் பிரசங்கத்தில் குறித்த சில புது எழுத்துக்களைக் கண்டு பிடிப்பவர்களுக்குப் பரிசுகளைத் தருவதாக வாக்கு அளித்தார். இதற்குள் சென்னை ராஜ தானிக் கலாசாலையில் ஆங்கில உபாத்தியாயராக இருந்த மார்க் ஹண்டர் என்பவர் ஏக லிபியைப்பற்றிச் சில ஆக்ஷேபங்களைச் செய்தார். பத்திரிகைகளில் அவைகளைக் கண்டதும் அவைகளுக்குத் தகுந்த பதிலையும் காலதாமத மின்றிப் பத்திரிகைகளில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் வெளி யிட்டார்.

''உங்கள் பதில் இனிமேல் பேச்சுக்கு இடம் வைக்காத விதம் இருக்கிறது''*

என்று 'லீடர்' பத்திரிகையில் அதை வாசித்தநுபவித்துச் சாரதா சரண மித்ரர் நண்பருக்குத் தெரிவித்தார்.

---

* கடிதம், 5-2-1911.

இன்னும் பல துறைகளிலும் நாட்டின்பாலும் தேச ஒற்றுமையைச் சார்ந்த அரிய தொண்டுகளை அவர் செய்தார். புதியதென்றவுடனே பிழையாக இருக்கு மென்று நினைக்கும் பாமரர்களின் மனப்பாங்கே அவரிடம் கிடையாது. அவருடைய சீர்திருத்த மனப்பான்மையின் முழுவலிவும் பயனும் பலிப்பதற்கு வேண்டிய அளவில் நீண்ட நாட்கள் அவர் உயிருடன் இல்லாத துரதிருஷ்டமே அவர் விரும்பிய மாறுதல்களின் சின்னங்கள் நிலைக்காததற்குக் காரணம் என அறிய வேண்டி இருக்கிறது.

# அத்தியாயம் 25

## சென்னைக் காங்கிரஸ் (1908)

"துஞ்சு மட்டுமிப் பாரத நாட்டிற்கே
தொண்டி ழைக்கத் துணிந்தவர்" —பாரதியார்.

மார்லி பிரபு இந்தியா சம்பந்தமாக இந்தியா காரியாலயத்துடன் எவ்வளவோ மன்றாடிக்கொண்டிருந்தார். கோகலே ஒருபுறம் தம்பால் அவரைக் கட்டி இழுத்தார். இந்தியா காரியாலயமோ ஒரு வழியிலும் அநுதாபம் காட்ட ஒத்துக்கொள்ளாமல் தடை செய்தது. மார்லியின் பாடு சிரமமாகிவிட்டது. 1908-ஆம் வருஷம் செப்டெம்பரிலேயே வரப்போகும் சட்டச் சீர்திருத்தங்களைப்பற்றித் திடமான நம்பிக்கை கோகலேக்கு உண்டாகிஇருந்தது. தள்ளிப் போட்ட காரியம் ஒருவாறு மார்லியின் தனி முயற்சியில் இம்மட்டும் உருவெடுத்துக்கொண்டு கிளம்புகிறதே என்றுதான் கோகலே மனமார மார்லியை வாழ்த்தினார்.

"நான் உங்களுக்கு இக்கடிதம் எழுதியதன் அவசியம், வரும் அரசியல் சீர்திருத்தங்கள் புஷ்டியாகவே இருப்பது நிச்சயம் என்று தெரிவிக்கத்தான். சென்னைக் காங்கிரஸ் நடைபெறுவதற்கு முன்னமேயே அவை வெளியாகும். உங்களுக்குத் தெரிந்த காரணமேதான் என்னை இதற்குமேல் எழுதாமல் நிறுத்திக் கொள்ளச் செய்கிறது. ஒன்றுமட்டும் நீங்கள் அறியலாம். அதாவது நாம் மார்லி பிரபுவிடம் வைத்த நம்பிக்கை ஊர்ஜிதமாயிற்று. வரும் டிசம்பர் மாதத்தில் எல்லாம் நன்றாகத் தெரியும்"*

என்று பொருள் பொதிந்த வார்த்தைகளைக் கோகலே நண்பருக்கு எழுதினார்.

கோகலேக்கு இன்னும் எவ்வளவு விதங்களில் நாட்டில் நன்மைகளைச் சம்பாதிப்பது என்றுதான் ஆத்திரம். வரும் காங்கிரஸில் சட்ட முறையினின்றும்

---

* கோகலே கடிதம், 25-9-08.

பிசகாத கட்சியின் பலம் வலுக்கவேண்டும். அப்பொழுது தான் சீமையிலுள்ள அதிகாரிகளும் அடுத்தபடி நன்மைகளைச் செய்ய முன்வருவார்கள் என்று அவர் எண்ணினார்.

“சென்னையில் கூடுபவர்கள் சரியான வழியில் அரசியல் விஷயங்களைப் பரிசீலனை செய்யத் தகுந்தவர்களாகவும், சட்ட முறை தவறாதவர்களாகவும் இருக்கவேண்டும்”*

என்று நண்பருக்கு அவர் வற்புறுத்தி எழுதினார். மேதாவையே காங்கிரஸுக்கு அக்கிராஸனம் வகிக்கச் செய்ய வேண்டுமென்றார். மேதா மிதவாதக் கட்சியில் பெரிய நிபுணர். ஆனால் அவருக்கு இதிலெல்லாம் உதாசீனம் அதிகம். அவரை எப்படியாவது வருவித்து அக்கிராஸனம் வகித்து, மார்லிக்கு நன்றி பூர்வமாய் அரிய பிரசங்கத்தையும் செய்யச் சொல்லவேண்டு மென்பது கோகலேயின் வேண்டுகோள்.

நண்பர், கோகலேக்கு விரோதமாக எதிலும் நடந்தவரா? மேலும் அவருக்கும் காரியங்களைச் சரிவரச் செய்வதில் குதூகலம் இவ்வளவு அவ்வளவு என்பதல்ல. கோகலேயின் உழைப்பை நினைத்து உண்மையாக மனம் பூரித்தவரல்லவா? ஆகையால் புதிய காங்கிரஸ் விதிகளுக்குக் கையொப்பமிட்டுப் பொறுக்கிய பலரைச் சேர்க்க வழி தேடிவிட்டார். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளை மூன்று மாதங்கள் காங்கிரஸுக்கு அங்கத்தினர்களைச் சேர்க்கும் தொழிலில் தமக்குச் சகாயமாக அனுப்பும்படி கோகலேயிடம் ஏற்கனவே வேண்டியிருந்தார். உடனே அவரும் சரியென்று இந்திய ஊழியர் சங்கத்தின் வேலையினின்றும் அவரை விடுவித்து, சென்னைக்குக் காங்கிரஸ் வேலைக்காக அனுப்பினார். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளை ஆந்திர தேசம், சேலம் முதலிய இடங்களைச் சுற்றி, சரியான அங்கத்தினர்களைச் சேர்ப்பதற்கு அனுப்பி விட்டார் தலைவர். ஸி. ஒய். சிந்தாமணியை, அவருடைய தலைவர் மதோல்கரைக் கேட்டு அநுமதி வாங்கி, தெற்கே உள்ள ஜில்லாக்களுக்கும் மலையாள நாட்டிற்கும்

---

* கடிதம், 25-9-08.

அனுப்பினர். மூன்றுமாதம் மிதவாதப் பிரசாரம் மும்முரமாக நடை பெற்றது.

ஆனால் முக்கியமாக அறிவாளிகளிட மிருந்தே தடைகள் ஏற்பட்டன. சென்னை வக்கீல்களில் முக்கியமானவர்களும் அரசியல் துறையில் பெரியவர் களும் இதனை எதிர்க்கத் தலைப்பட்டார்கள். பழைய வரவேற்புக் கமிட்டித் தலைவரான கனம் நவாப் சையத் முகம்மது சாகிப் பகதூருக்குப் பின்வருமாறு ஓர் எதிர்ப்பு அறிக்கை சென்றது :

"அடுத்த காங்கிரஸைச் சென்னையில் வைப்பதைப் பற்றிக் கீழ்க் கையொப்பமிட்ட நாங்கள் ஆக்ஷேபிக்கின்றோம். ஒரே அவசரத்தில் மாகாணக் கமிட்டி தீர்மானித்தது தவறு என்பது எங்கள் அபிப்பிராயம். தேசம் இவ்வளவு ஆபத்தில் இருக்கும் பொழுது ஒன்றையும் பொருட்படுத்தாமல் மாகாணக் கமிட்டி காங்கிரஸை இங்கு வரவழைப்பது நிச்சயம் தேச நன்மையின் பொருட்டல்லவென்றுதான் தெரிகிறது. சென்னை நகரத்தைத் தவிர மாகாணத்திலுள்ள மற்றப் பாகங்களின் அபிப்பிராயத்தைக் கவனிக்காமலேயே எல்லா ஏற்பாடுகளும் நடப்பதாகத் தெரி கிறது. எல்லாத் தலைவர்களிடமும் பிரத்தியேகமான யோசனை கேட்ட பிறகே இதைச் செய்திருக்கவேண்டும். தற்சமயத்தி லுள்ள அரசியல் கோளாறுதான் இம்முறையை நாடச் செய்திருக்கவேண்டும். காங்கிரஸ் நடப்பதாக வைத்துக்கொண் டாலும், முன் காங்கிரஸ்களைப்போல விஷயங்களைச் சரியாக விசாரிக்கவும் யோசித்துத் தீர்மானிக்கவும் போதுமான புத்தி சாலிகளும் பொது ஜனமும் இக்காங்கிரஸில் இருக்கமாட்டார்கள். எல்லாக் காரணங்களையும் உத்தேசித்து ஏற்பாடுகளையும் மேற்கொண்டு நடத்தாமல் நிறுத்திக் கொள்ளும்படி மாகாணக் காங்கிரஸ் கமிட்டியை நாங்கள் வணக்கத்துடன் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு, சேலம் விஜயராகவாச்சாரியார், டி. ரங்காச்சாரியார், டி. ஆர். ராமசந்திர ஐயர் முதலியவர்கள்"*

என்று அதில் கண்டிருந்தது.

கடலூருக்குத் தொழில்முறையில் சென்ற கிருஷ்ண ஸ்வாமி ஐயர் காங்கிரஸ் சம்பந்தமாகவும் ஒரு சொற் பொழிவை அவ்விடத்தில் செய்தார். அதில் மிதவாதக்

---

* மெயில் பத்திரிகை, 29-9-08.

கட்சியின் பேரிலுள்ள பலவிதமான குற்றம் குறை களுக்குப் பதிலும் சரியாகச் சொல்லியிருந்தார். அதற்கு முன் ஒரு தடவை கடலூரில், அடுத்த காங்கிரஸைப்பற்றிப் பிரசாரம் செய்தபொழுது, கோகலேயின் ஒப்பற்ற தேச சேவையைக்குறித்துப் புகழ்ந்திருந்தார். கோயம்புத்தூரி லும் சிந்தாமணியுடன் சென்று, காங்கிரஸ் சம்பந்தமான பிரசங்கம் ஒன்றைச் செய்திருந்தார்.

பம்பாய் நகரத்துப் பிரபல பத்திரிகாசிரியரான கே. நடராஜன் என்பவரின் கடிதமொன்றில்,

"நீங்கள் கோயம்புத்தூரில் ஆற்றிய அரிய சொற்பொழிவை வாசித்தேன். சென்னையிலும் வர வர ஆக்ஷேபம் குறைவதைக் கேட்க திருப்தி அளிக்கின்றது. அநேக விதங்களில் நடக்கப் போகும் சென்னைக் காங்கிரஸே முக்கியமாகிவிடும்போல் இருக் கிறது"*

என்ற உத்ஸாகமூட்டும் சொற்கள் காணப்பட்டன.

ஆனால் கடலூரில் நவம்பர் 4–ஆம்தேதி செய்த பிர சங்கம் பலருடைய சந்தேகங்களை நீக்கி, வேண்டிய அங்கத் தினர்களைச் சுலபமாய்ச் சேர்க்கவைத்தது. எதிர்ப்புக்குக் கையொப்பமிட்ட ஒரு பிரபல வக்கீல் தாம் போட்ட கையெழுத்தை மீட்டுக் கொண்டார்; பத்திரிகை யிலும் தம் காரணங்களை எழுதினர். இப்படியாகப் பலர் கிளப்பிய விரோதங்களும் எதிர்ப்புக்களும் இடம் தெரியாமல் மறையத் தொடங்கின. ஆக்ஷேபித்தவர்களில் காங்கிரஸ் பிரமுகரான அனந்தாசாருலுவும் தம் எதிர்ப் பைக் குறைத்துக்கொண்டார். மிஸ்டர் ஹியூம் சீமையில் இருந்து மாஜி ஜட்ஜ் மணி ஐயருக்குக் கடிதமொன்றெழுதி, காங்கிரஸுக்கு எவ்விதமான எதிர்ப்பும் இந்தியச் சட்டச் சீர்திருத்தங்கள் வரும் சமயத்தில் ஏற்படுவது சுத்தத் தவறு என்று எடுத்துக் காட்டியிருந்தார். நேரிலும் எதிர்ப்பை விலக்க, சேலம் விஜயராகவாச்சாரியாருக்கு ஹியூம் கடிதம்† எழுதியிருந்தார். வெட்டர்பர்னும், ஹியூமும், சேர்ந்து காங்கிரஸை எப்படியாவது நடத்தக்கோரும்

* கடிதம், 6-10-08.

† மெயில், 7-10-08.

கடிதம் ஒன்றை, வரவேற்புக் கமிட்டித் தலைவருக்கு அனுப்பி, அதைப் பத்திரிகைகளிலும் பிரசுரப்படுத்தச் சொல்லி யிருந்தார்கள்.

"சென்னையில் காங்கிரஸ் கமிட்டி வெகு சீராகக் காரியங்களைச் செய்து, தடங்கல்களையும் விலக்கிக் கொண்டு போவதைக் கேட்டுப் பரமானந்தம் எனக்கு உண்டாகிறது"*

என்று கோகலே சீமையிலிருந்தே நண்பரைத் தட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

டிசம்பர் பத்தாந்தேதி மார்லி பிரபு வெளியிட இருந்த சட்டச் சீர்திருத்த அறிக்கையை எல்லோரும் எதிர் பார்த்திருந்தார்கள். ஆனால் தேசத்தில் தீவிரவாதிகளின் கிளர்ச்சிகள் சட்டச் சீர்திருத்தங்களுக்கு ஏதோ தடை செய்துவந்ததாகக் கோகலே நினைக்கவாரம்பித்தார். மார்லியின் அறிக்கை வெளிவருவதற்குள் ஏதாவது புதிய கிளர்ச்சி ஒன்று நாட்டில் ஏற்பட்டுவிட்டால் அது தாமதமாகி விடுமே என்ற பயமேதான் அதற்குக் காரணம்.

அவ்வருஷம் காங்கிரஸ் பொதுக்கூட்டத்தின் தலைவர் யார் என்ற கேள்வி ஒரு பக்கம் கவலையை உண் டாக்கியது. டாக்டர் ராஷ்பிகாரி கோஷ் ஒருகால் முந்திய வருஷம் தடைப்பட்ட தம் பிரசங்கத்தை மறுமுறை வாசிக்க மறுக்கலாம் என்ற எண்ணம் சிலருக்கு இருந்தது. ஆனால் அவரைக் கேட்காமல் வேறு பெயர்களைப் பிரேரேபித்தால் அவருக்குத் தம்மை அவமதித்ததாகத் தோன்றி விடக்கூடும் என்ற கவலையும் சேர்ந்தது. அதனால் இன்னது செய்வதென்று தெரியவில்லை தலைவர் களுக்கு. வங்காளத்தில் எதற்கும் மிதமிஞ்சியே கூப்பாடு போடுவதுதான் வழக்கம். எதையாவது சிறு காரணத்தை நினைத்துக்கொண்டு கிளர்ச்சி செய்ய ஆரம்பிப்பார்களே அவர்கள்! ஏற்கனவே பாபு சுரேந்திரநாத் பானர்ஜியும்† பாபு பூபேந்திரநாத் வஸுவும்‡ சென்னைத் தலைவருக்குத் தம் கைப்படக் கடிதங்கள் எழுதியிருந்தார்கள். அதாவது:

* கடிதம், 13-11-08.

† பானர்ஜியின் கடிதம், 3-11-08.

‡ வஸுவின் கடிதம், 29-11-08.

அவசியம் வங்காளிகள் முக்கியமாக ஆசைப்படும் நான்கு தீர்மானங்களும் காங்கிரஸின் முன் வைக்கப்படும் என்று தெரிந்தால்தான், அங்கிருந்து அங்கத்தினர்கள் பலர் உத்ஸாகமாய் வருவார்கள் என்று தெரிவித்திருந்தார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் அபிப்பிராயந்தான் தெரிந்த தாயிற்றே! மறுபடியும், மறுபடியும் அவர்கள் அதையே எழுதுவதும், அவரும் அவைகளுக்குப் பொறுப்பைத் தம்மால் ஏற்றுக் கொள்ள முடியாதென்று எழுதுவது மாகக் கடிதப் போக்கு வரவு நடந்தது. வங்காளத்திலிருந்து பாபு சுரேந்திரநாத் பானர்ஜி, தாம் அக்காங்கிரஸுக்கு அநேகமாக வரப்போவதில்லை என்றே கடைசி வரையில் தம் கடிதங்களில் தெரிவித்து வந்தார். பிறகு வந்தது மாத்திரமல்ல, மார்லியின் அறிக்கையில் தெரிவிக்கப்பட்ட சட்டச் சீர்திருத்தங்களை அங்கீகரிப்பதில் இந்தியர்களின் சந்தோஷத்தைத் தெரிவிக்கும் தீர்மானத்தை ஆமோதித்துப் பெரியதொரு பிரசங்கம் செய்தார்.

காங்கிரஸ் கூடுவதற்குத் தகுந்த பெரிய கூடாரத் துணிகளைக் கவர்னர் ஸர் ஆர்தர் லாலியிடமே கேட்டு, இரவலாக வாங்கினார் கிருஷ்ணஸ்வாமி ஐயர். கவர்னர் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் மிகவும் நேசம் கொண்டவர் என்பதுதான் தெரிந்ததாயிற்றே! ஆகையால் கேட்டதுமே அவர் காங்கிரஸ் கூடுவதற்கு வசதியான கூடாரத் துணிகளையும், மற்ற உதவிப் பொருள்களையும் கொடுக்கத் தம் சிப்பந்திகளுக்கு உத்தரவு இட்டார்.

ஆனால் வீட்டில், தமையனார் க்ஷயரோகத்தினால் பீடிக்கப்பட்டு, படுத்த படுக்கையாய்க் கிடந்த சமயம் அது. சந்நியாச ஆசிரமம் பெற்று டிசம்பர் 21-ஆம் தேதி அவர் இறந்ததால், சமாதி செய்விக்கப் பெரிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டியிருந்தது. பல காரியங்களில் புத்தி பிரவேசமில்லாதவர்களுக்கு இம் மாதிரியான சமயங்களில் இருக்கிற புத்தியும் கலங்கி விடும். கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மனம் எல்லாக் காரியங் களிலும் எச்சந்தர்ப்பத்திலும் பயமின்றிச் செல்லும் பழக்கம் பெற்றதன்றோ? மேலும் பல காரியங்களில் அதி

வேகமாய்ப் பாயும் ஆற்றலும் உண்டு அவர் மேதைக்கு. காங்கிரஸ் தொல்லைகள் என்றால் என்ன சாமானியமா? அதிலும் அநேகவித எதிர்ப்புக்களின் இடையே வேலையைச் செய்தாகவேண்டிய பொறுப்பு அற்பக் காரியமா?

வீட்டில் பண்டித மதனமோஹன மாளவியாஜி ஒரு மாத காலமாய் விருந்தினராயிருந்தார். அவர் தூய்மையான குணம் படைத்தவர்; உயர்ந்த நட்பிற்கு மிகவும் பாத்திரமானவர். நண்பரின் குடும்பத்தில் குறையாத அளவில் அன்பை வளர்த்தவர். காங்கிரஸுக்காகச் சீக்கிரமே அவர் சென்னைக்கு வந்துவிட்டார். கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவரைத் தம் கிருகத்தில் இருக்கும்படி வற்புறுத்தியதால் அவர் சிறிதுகாலம் நண்பருடன் நெருங்கிப் பழக நேர்ந்தது.

கடைசியில் காங்கிரஸ் கூட்டத்திற்கு டாக்டர் ராஷ்பிகாரி கோஷையே தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். அவரும், சூரத்தில் வாசித்துப் பூர்த்தியாகாத தம் அக்கிராஸனப் பிரசங்கத்தைச் சென்னையில் செய்து முடித்தார்.

ஒரு சிறு வேடிக்கையான சம்பவம் இதனிடையே நடந்தது. விஷயாலோசனைக் குழுவில் கிருஷ்ணஸ்வாமி ஐயர் மார்லி பிரபுவுக்கு நன்றி அளிக்கும் கடமையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று மேதாவைக் கேட்டார். பலரும் கிருஷ்ணஸ்வாமி ஐயரை அநுசரித்து அவரை வேண்டினார்கள். அவ் வேண்டுகோளை மேதா மறுத்து விட்டார். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குத் தாங்காத கோபம் வந்துவிட்டது. வழக்கத்தைவிட அதிகப் படபடப்புடன் அவர்,

"மேதாவுக்கு வாழ்க்கை முழுவதும் பிறரை ஏவியே வழக்கம். ஒரு தடவையாவது பிறர் இடும் இவ்வுத்தரவை அவர் ஏற்றுக் கொள்ளுவாரா, மறுக்கப்போகிறாரா?"*

என்றார். மேதா அதைக் காதுகொடுத்துக் கேட்கவில்லை; கேட்டிருந்தால் மேதாவாக அவர் இருப்பாரா?

---

* சிந்தாமணி நினைவுகள், லீடர், ஜனவரி, 1912.

காங்கிரஸில் பொதுக் கூட்டத்தின்போது நினைத்த விதம் ஒருவிதக் கிளர்ச்சியும் ஏற்படவில்லை. எல்லாம் கடுபிடியில் நடந்தேறின. ஒருவரும் மூச்சுவிடக் கூட முடியாதபடி ஏற்பாடுகளைச் செய்திருந்தார் தலைவர். வேடிக்கை பார்க்க வந்தவர்கள் அதிகம் பணம் கொடுத்தே டிக்கெட் வாங்கவேண்டி வந்ததால் 'காலி'க்கூட்டமே பந்தலில் இல்லை. 'ஒரு தனி மனிதனுடைய காங்கிரஸ்' என்ற அபவாதம் கூட ஊரில் ஒருபக்கம் கிளம்பியது. ஹிந்து பத்திரிகை அக்காலங்களில் தயை தாட்சிண்யமில்லாமல் சென்னைத் தலைவரின் நாட்டாண்மையைப்பற்றிக் குற்றம் குறைகளை அழுத்தமாக எடுத்துக் காட்டியது. தலைவர் இவைகளைக் கவனித்தவரா? அவர்தாம் 'ஹிந்து'வைக்கூடத் தம் வீட்டிற்குள் நுழையவேண்டாமென்று சிறிது காலமாக அதன் சந்தாவை நிறுத்தியவராயிற்றே! உண்மையில் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு ஒன்றையும் கண்டு சங்கோசமே இல்லை. தாம் செய்வது சரி என்று தோன்றிய பிறகு, வேண்டாத விசாரங்களில் மனம் இரங்குவது ஒருவருடைய காரிய நிர்வாக சக்திக்குக் கெடுதலையே செய்யும் அல்லவா?

மிதவாதிகள் நிறையக் கூடி இருந்த இடத்தில் வேறு எதை எதிர்பார்க்கக்கூடும்? எல்லோரும் மார்லி செய்ய உத்தேசித்திருந்த நன்மையைப்பற்றி முழு விவரங்களையும் அறிவதற்கு முன்னமேயே, பாராட்டிப் பிரசங்கங்கள் செய்தார்கள். கோகலே மறுபடியும் பெரியதொரு சொற்பொழிவில் இந்திய நாடு சட்ட முறையான இயக்கத்தினால் பற்பல நன்மைகளை அடையலாம் என்பதை ஞாபகப் படுத்தினார். தீவிர வாதிகளின் செயல்களைக் கண்டனமும் செய்தார். அந்தக் காங்கிரஸ் சுறுசுறுப்பாய் மூன்று நாட்களில் முடிவடைந்தது.

கடைசிநாள் வந்தனோபசாரம் கூறும் கடமை கிருஷ்ணஸ்வாமி ஐயருடையதாயிற்று. பலர் என்ன பேசுவாரோ அவர் என்று எண்ணமிட்டுக்கொண் டிருக்கையில், சீமையில் மார்லியை ஆங்கிலேயர்களில் சிலர் எதிர்க்கும் செய்தியை மனத்தில் வைத்துக்கொண்டு,

பிரசங்கத்தைச் செய்து முடித்தார். காங்கிரஸ் அக்கிராஸனரும் அவர் சொன்னவைகளையே அநுசரித்து,

''நம்முடைய பகைவர்கள் -நம்முடைய என்று சொன்னேன்! - வெள்ளைக்காரருக்கே சத்துருக்கள் என்று நான் சொல்லியிருக்க வேண்டும். ஆம்! இந்திய சுய ஆட்சியை மனமார வெறுக்கும் சில நிபுணர்கள் மார்லி பிரபுவின் அரசியல் சீர்திருத்த ஏற்பாட்டைக் கலக்கப் பார்க்கிறார்கள். ஆகையால் இந்த நாட்டிலும், சீமையிலும் நாம் விரும்புவது ஆட்சி வர்க்கத்திலிருந்து வெளிக் கிளம்பியவர்கள் செய்யும் இச் சூழ்ச்சிகளைத் தடுக்கச் சரியான முறையில் வேலைசெய்வதுதான். புலியும் தன் குணத்தை ஒருகால் மாற்றிக் கொள்ளலாம்; ஆனால் அரசாட்சி ருசி கண்டவனுக்குக் குணமாறுதலே உண்டாவதில்லை. சீமையின் சுயேச்சையான அரசியல் வாழ்க்கையிலும் அவனுடைய மனம் அதிகம் கட்டுப் பட்டேதான் கிடக்கிறது. ஆட்சிப்பற்று உடையவன் எப்பொழுதும் அப்படியேதான் இருப்பான்''
என்றார்.

அவர்கள் கொடுத்த எச்சரிக்கை உண்மையாயிற்று; இங்கிலாந்தில் எதிர்க்கட்சியின் பலத்தினால் மார்லி கொடுக்க வந்த வரனும் பெருத்த அளவில் குறைந்தது.

காங்கிரஸ் ஏற்பாடுகளைப்பற்றி வாச்சா பிரமாதமாகப் புகழ்ந்தார். காரியதரிசிகளின் ஒத்துழைப்பும், மற்ற ஏற்பாடுகளும், ஊழியர்களின் வேகமும், சமயோசித புத்தியும், எல்லாமே உயர்ந்த ரகத்தைச் சேர்ந்திருந்தன என்றார். இருபது வருஷங்களாக வாச்சாவுக்குக் காங்கிரஸ் அநுபவம். அதனால் அவர் சொல்லுக்கு மதிப்பு உண்டு.

''யந்திரம் வேலை செய்வதுபோல் அல்லவா எல்லாம் நடந்தன?'' என்றார் அவர்.

காங்கிரஸ் காரியத்தைப் பொறுப்புடன் நிர்வகித்தவருக்கு இதைவிடச் சிறந்த அத்தாட்சி வேறு என்ன வேண்டும்?

காங்கிரஸ் கூட்டம் முடிந்த மறுவாரம் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஜுரத்துடன் படுத்துவிட்டார். அலைச்சலும் கவலையும் சேர்ந்தாற்போல் ஒருவருக்கு ஒரு மாதத்திற்கு மேல் ஏற்பட்டால் சரீரம் தாங்க வேண்டாமா? அவருடைய சகோதரர் இறந்த துக்கமும் அவரை

மிகவும் பாதித்தது. தம் கீழ் வேலை செய்தவர்களின் சுறு சுறுப்பும், மரியாதையும் வந்தவர்களின் இருதயங்களைக் கவர்ந்தன என்பதை அவர் நினைத்துப் பூரித்தார். வாச்சாவுக்கு அம்மாதிரி இளைஞர்கள் இருந்தால் போதும்; பொதுக்காரியங்களின் பொறுப்பை அவர்கள் தலையில் கட்டிவிடலாம் என்று பட்டது. தலை இல்லாமல் வால் எங்காவது ஆடுவதுண்டா? - தலைவரின் தளரா ஊக்கமும் காரிய நிர்வாகமுமே அவருடன் வேலை செய்த சிறுவர் களுக்கு உத்ஸாகம் அளித்தன. வழக்கத்துக்கு விரோத மாக, மார்ச்சு மாதத்திற்குள், அதாவது காங்கிரஸ் நடை பெற்றதற்குப் பிறகு மூன்று மாதங்களுக்கு இடையே, காங்கிரஸ் நடவடிக்கைகளின் பூர்ண விவரமும் அச்சிடப் பட்டு அங்கத்தினர்களின் கைக்குச் சேர்ந்தது. இதுவரை யிலும் காங்கிரஸ் சரித்திரத்தில் இவ்வளவு துரிதமாயும் பொறுப்புடனும், வரவேற்புக் கமிட்டி காரியங்களைச் செய்ததாகத் தெரியவில்லை. வாச்சா அகில இந்தியக் காங்கிரஸ் காரியதரிசியாகப் பல வருஷங்கள் தேர்ந் தெடுக்கப்பட்டவராயினும், அவரே ஆச்சரியத்தில், வாயைப் பிளந்துவிட்டார் என்றால், சென்னைக் காங்கிரஸ் கமிட்டி வேலைகளின் ஒழுங்கு எவ்வளவு உயர்வுடன் இருந்திருக்கவேண்டும் என்பதை ஊகித்துக்கொள்ளலாம்.

"இம்மாதிரியே இனி நடைபெறும் காங்கிரஸ் விவரங்களும் சீக்கிரமாக அச்சிட்டுக் கைக்குச் சேரவேண்டும் என்றுதான் விரும்புகிறேன். முன்னமேயே சொன்னபடி, இவைகளை யெல்லாம் எதிர் பார்த்துத்தான் இருந்தேன். ஏனென்றால் முழுக் காரியங்களையும் சீராக ஒத்துழைப்புடன் சென்னையில் நடத்துவதை நேரில் கண்ணால் பார்த்துவிட்டேன் அல்லவா? உங்கள் கமிட்டியின் நிர்வாக சாமர்த்தியம் எல்லோரையும் பிரமிக்கச் செய்து விட்டது. வாஸ்தவத்தில் உங்கள் மேல் பார்வையிலேயேதான் இப்பெரிய கைங்கரியம் நடத்தப்பட்டு, வேலை பம்பரம்போல் சுறுசுறுப்பாய் நடந்தது"*

என்றார் வாச்சா.

காங்கிரஸ் அறிக்கை முன் யோசனையின் பேரில் விஷயங்களை நன்கு விளக்கும் முன்னுரையுடன் பதிப்

* கடிதம், 26—3—09.

பிக்கப்பட்டது. முந்திய வருஷம் சிதறுண்ட காங்கிரஸ் கூட்டத்தின் வரலாற்றையும் முன்னுரையில் எழுதியிருந் தார்கள். கொடுத்திருந்த விவரம் ஆக்ஷேபிக்க முடியாதபடி உண்மையான ரீதியில் வெளிவந்திருந்ததால், பிற் காலத்தில் அரசியல் சரித்திர ஆராய்ச்சிக்காரர்களுக்கும் உபயோகமாகும் முறையில் அமைந்திருந்தது.

வந்தனோபசாரப் பிரசங்கத்தில் சிற்சில அபசகுனங் களைக் குறித்துக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பேசியதை இப்பொழுது கவனிப்போம். முகம்மதியர்களுடைய தனி இயக்கத்தை அதிகாரிகள் ஆதரிக்கத் தொடங்கிய தந்திரம் காங்கிரஸ் தலைவர்களுக்குத் தெரியத் தொடங் கியது. வங்காளத்தில் முகம்மதியர்களின் எண்ணிக்கை ஜனத்தொகையில் அதிகமென்பது தெரிந்த விஷயம். ஹிந்துக்களுக்கும் முகம்மதியர்களுக்கும் மதப்பற்றினால் ஏற்படும் சண்டைகளை வைத்துக்கொண்டு, ஒருவரை ஒருவர் விரோதம் பாராட்ட வைப்பதால் ஒருநாளும் அவர்கள் சேராமலிருப்பதற்கு வழி உண்டாகும் என்பதை அரசாங்கத்தார் ஒரு ராஜ தந்திரமாகவே கையாண்டார்கள். முதலிலிருந்தே இந்தியாவில் உள்ள வெள்ளைக்காரர்கள் முஸ்லீம் கட்சியில் அநுதாபத்தைக் காட்டி வந்தார்கள். வங்காளத்திலோ என்றைக்கும் ஹிந்து முஸ்லிம் கிளர்ச்சிகளுக்கு எல்லையே இல்லை. 1906-ஆம் வருஷம் கல்கத்தாவில் ஹிந்துக்களில் சிலரும் முகம்மதியரில் சிலரும் சேர்ந்து, ஸநாதனதர்மத்தைச் சேர்ந்த பல ஹிந்துக்களைச் சமபந்தி போஜனத்திற்கு அழைத்ததிலிருந்து பெரிய புகார் கிளம்பி, அவ் விடத்தில் ஹிந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் சச்சரவுகள் உண்டாயிருந்தன. வங்காளத்தின் 'நவயுவர்கள்' செய்த தைரியச் செயல்கள் அதிகாரிகளுக்கு ஹிந்துக்களிடம் சதா சந்தேகத்தைக் கிளப்பிக் கொண்டிருந்தன. ராஜப் பிரதிநிதியான மிண்டோ பிரபுவும் முகம்மதியர்களின் உரிமைகளை அதிகமாகக் கவனிக்கத் தொடங்கிவிட்டார். உண்மையில் அவர்களிடம் அதிகாரிகள் பக்ஷபாதமா யிருந்தார்களோ என்னவோ, ஹிந்துக்களின் மனத்தில்

அரசாங்கத்தாரின் நடத்தை தீராத குறையாகவே ஆகிவிட்டது.

போதாக்குறைக்கு, இந்தியாவில் ஆட்சி செலுத்தி ஊருக்குத் திரும்பிய ஆங்கிலேயர்கள் சீமையில் சதா இந்தியாவின் முன்னேற்றத்திற்குச் செய்யும் காரியத்தில் கோலிட்டுக்கொண்டிருந்தார்கள். மார்லி பிரபுவின் காதில், கர்ஸன் பிரபுவும், மற்றும் சில ஆட்சி வர்க்கத்துப் பக்ஷபாதிகளும் இடைவிடாமல் அரசியல் சீர்திருத்தங்களை அள்ளிவிடக்கூடாதென்று ஓதிக்கொண்டிருந்தார்கள். செய்ய விருந்த ஒன்றிரண்டு சீர்திருத்தத் திட்டங்களைக் கூட அள்ளி விடுவதாக அவர்கள் நினைத்தார்கள் போலும்.

மார்லியும் மனிதன்தானே? ஏற்கனவே அதிக ஜாக்கிரதையுடன் இந்தியப் பிரச்னையைத் தீர்க்க அவர் முனைந்து வந்தார். இன்னும் முஸ்லீம் கட்சியின் வேண்டுகோள்களைக் காதில் வாங்கவே அவருடைய மனம் மாறத் தொடங்கியது. அரசியல் சீர்திருத்தங்களையும், விதிகளையும் இந்திய அரசாங்கத்தாருடன் கலந்தேதான் இனித் தீர்மானிப்பதென்று தெரிவித்து விட்டார். தெய்வம் வரம் கொடுத்தாலும் பூசாரி கொடுக்கவில்லை என்றபடி, அரசாங்கவர்க்கத்தைச் சேர்ந்த மாஜி உத்தியோகஸ்தர்கள் மார்லி கொடுக்கவிருந்த வரங்களையும் குறைக்க வழி செய்துவிட்டார்கள். சட்டசபைகளில் இனி உத்தியோகம் இல்லாதவர்களின் எண்ணிக்கை முன்னிலும் அதிகம் இருப்பினும், நியமிக்கப்பட்டவர்களின் தொகையும் உத்தியோகத்திலுள்ளவர்களின் தொகையும் சேர்ந்து விட்டால், தேர்தலில் வந்தவர்களின் எண்ணிக்கையால் மட்டும் அரசாங்கத்துக்கு எதிராக எதையும் செய்ய முடியாது. அரசாங்கத்தாரால் நியமிக்கப்படும் அங்கத்தினர்கள் நிச்சயம் அவர்களைத் திருப்தி செய்வதில்தான் கவலையாய் இருப்பார்கள். மேலும் முகம்மதியர்களுக்குத் தனியாகத் தேர்தல் பிரிவினைகளைச் செய்ய உத்தேசித்திருந்தார்கள்.

இவைகளிலெல்லாம் சென்னைத் தலைவருக்கு அதிருப்தி அதிகம். முஸ்லீம்களின் தேர்தல் பிரிவினையில் அவருக்குச்

சிறிதும் இஷ்டமில்லை. காலப்போக்கின் குணமும், சுற்றுணர்ச்சியின் வேகமுமே அவரை ஹிந்து முஸ்லீம் பிரச்னையைத் தீர்க்க ஒரு வழியையும் நாடாமல், அவ் விஷயத்தில் மிகுந்த பயத்தை மட்டும் வெளியிடச் செய்தன. முஸ்லீம்களுக்குத் தேர்தல் விஷயத்தில் தனி உரிமைகளைக் கொடுப்பதில் ஹிந்துத் தலைவர்களுக்கு விருப்பமில்லை. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அதையே சொன்னார். அதனால் ஐக்கிய உணர்ச்சி கெட்டுப் போகு மென்பதே அவர் நினைப்பு. ஆகையால் வாச்சாவுக்குச் சவுக்கடியாக ஒரு கடிதம் எழுதினார்:

"நடந்த காங்கிரஸில், வரும் அரசியல் சீர்திருத்தங்களைப் பற்றி விஸ்தரித்தே பேசவில்லை; பிற்பாடாவது அங்கங்கே கூட்டங்களைக் கூட்டி, ஜனங்கள் அரசியல் விஷயங்களில் சிரத்தையை மேன்மேலும் மேற்கொள்வது நம் க்ஷேமத்திற்கு இன்றியமையாதது என்பதைக் காட்ட வேண்டாமா? ஒன்றுமே மிதவாதிகள் செய்வதில்லை. ஏன் தூங்குகிறார்கள் இப்படி? 'பம்பாய்ச் சிங்கம்' ஏன் படுத்து உறங்குகிறது?"*

'பம்பாய்ச் சிங்கம்' என்று அவர் குறிப்பிட்டவர் மேதாதாம். வாச்சாவினால் பொறுக்க முடியவில்லை தம்மேல் சுமத்திய இப் பழியை. அவர் விடுவாரா, சும்மா தம்மைத் தாக்கியவரை? உடனே 25 பக்கங்களுக்குமேல் கடிதத்தில்† நீட்டி நீட்டி, கை எழுத்தைப் புரிய முடியாதபடி வரைந்து ஆவேசத்துடன் ஒரு பிரசங்கம் செய்துவிட்டார். கடிதம் பெற்றவரிடம் கடிதத்தை வாசிக்கப் பொறுமை லவலேசமும் இருக்கமுடியாது என்பதை வாசகர்கள் ஊகித்திருக்கலாம். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் தம் கடிதம் ஒன்றில் இதைக் குறித்து வேடிக்கையாகக் கோகலேக்கு எழுதினார்:

" 'முஸ்லீம் கட்சிக்கு அதிகாரிகள் காட்டும் பக்ஷபாதத்தை ஹிந்துக்கள் அதிகம் விரோதிக்கவில்லை' என்று நீங்கள் மார்லியிடம் சொன்னதற்குக் காரணமில்லை என்று கிருஷ்ண ஸ்வாமி ஐயர் எண்ணுகிறார். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி இவ்விஷயத்தை விசாரிக்கவேண்டுமென்று வாச்சா

---

* கடிதம், 10-2-09.

† கடிதம், 15-2-09.

வுக்கு வற்புறுத்தி அவர் எழுதியதற்கு, வாச்சாவிடமிருந்து 25 பக்கங்கள் கொண்ட பெரியதோர் உபந்யாஸத்தைப் பெற்றிருக்கிருர்.''*

கோகலேயும் என் தந்தையைச் சற்றுப் பொறுமையாக இருக்கும்படி வேண்டிக்கொண்டார்:

''வாச்சா எனக்கு எழுதுகையில் 'இனியும் முகம்மதியர்களுக்கு அரசாங்கத்தார் தணிந்து போவார்கள், அதை எதிர்க்கக் காங்கிரஸ் அகில இந்தியக் கமிட்டி கூடித் தீர்மானிக்கவேண்டு'மென்று நீங்கள் எழுதியிருந்ததாகச் சொல்லுகிருர். நீங்கள் நினைப்பது சரியல்லவென்று நான் எண்ணவில்லை. ஏனென்ருல் கவலைக்கிடமாகத்தான் சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. மிஸ்டர் ஹாப்ஹௌஸ் சமீபத்தில் பேசியதைப் பார்த்தால் முஸ்லீம் பிரச்னை திருப்தியாகத் தீருமென்று தோன்றவில்லை. ஆனல் என் நிதானமான அபிப்பிராயம், சிறிதுகாலம் நாம் வாயை மூடிக்கொண்டுதான் கிடக்கவேண்டும். முஸ்லீம்களும் அரசாங்கத்தாரும் தங்களுக்குள் வேண்டியதைத் தீர்த்துக்கொள்ளட்டும் என்று நாம் விடுவதே உசிதம்''†

என்ருர். அநுபவசாலிகளின் வார்த்தைகள் இவ்விதமேதான் இருக்கும். கிருஷ்ணஸ்வாமி ஐயர் கோகலேயின் வார்த்தையைக் கௌரவிப்பவர். ஆகையால் பொறுமையை எவ்வளவுதூரம் கடைப்பிடிக்க முடியுமோ அவ்வளவுதூரம் பேசாமல் இருந்தார். மறுமாதம், ஒரு கடிதத்தில் மிதவாதக்கட்சியின் கொள்கைகளை நன்ருக இந்தியாவில் பிரசாரம் செய்ய வேண்டும் என்று அவர் கோகலேயைக் கேட்டுக்கொண்டார். சரியான தலைவர்கள் சரியான முறையில் ஜனங்களுடன் சமமாகப் பேசி அவர்களுடைய சந்தேகங்களைத் தீர்த்து வைக்க வேண்டுமென்பது அவர் கருத்து. கட்சி முறையில் நடத்தப்படும் ஜனநாயக அரசாங்கம் பெற்ற நாடுகளில், வாஸ்தவத்தில் இரண்டு மூன்று கட்சிகள் இருந்துகொண்டு தங்கள் கொள்கைகளைப் பிரசாரம் செய்துதான் ஜனங்களிடையே பக்க பலத்தைப் பெறுகிருர்கள். இன்று அரசியல் காரியங்களில் பிரசாரத்தின் உபயோகம்

* கடிதம், 2-3-09.

† கோகலேயின் கடிதம், 18—5—09.

நமக்கு நன்கு புலப்படவில்லையா? அதிலும் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், காலஞ்சென்ற ஸத்தியமூர்த்தி முதலிய தலைவர்கள் செய்த சுற்றுப் பிரயாணத்தையும் பிரசாரங்களையும் அறிந்த பிறகு, அரசியல் காரியங்களில் கட்சி முறையை நாம் தொழுதோமானால் பிரசாரங்களை இடைவிடாமல் செய்வதுதான் எடுத்த காரியம் கைகூடச் செய்யும் என்பது நன்கு விளங்கும்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரே காங்கிரஸில் அங்கத்தினராக இருந்த நாட்களில் மிதவாதக் கொள்கைகளைப் பிரசாரம் செய்ய ஆரம்பித்தார். சென்னைக் காங்கிரஸுக்குப் பலம் ஏற்பட்டதற்கு அவரும் அவருடைய சகாக்களும் செய்த பிரசாரமே முக்கிய காரணம். பலத்த எதிர்ப்பையும் கரைய வைத்தவை, பிரசாரத்தின் வேகமும், சக்தியுமே தான். ஆகையால் உண்மையாகத் தாம் நம்பியதை அவர் கோகலேக்குச் சொல்லுவதில் என்ன பிசகு?

''நீங்களும், மற்றத் தலைவர்களும் வெளிக்கிளம்பி, பொது ஜனங்களைக் கண்டு பேசி, சமயத்தைக் கைவிடாமல் உபயோகப் படுத்தி, நம்முடைய அபிப்பிராயங்களையும் அவர்களுக்கு நன்கு தெரியப்படுத்துவது இப்பொழுது அவசியம். அரசாங்கத் தாரிடம் அடிக்கடி முறையிடுவதைவிட, ஜனங்களின் நடுவில் விஷயங்களை அலசிப்பேசி, அவர்களுடன் நம் உறவை விடாமல் காட்டிக்கொள்வது அரசாங்கத்தாருடன் நமக்குள்ள பழக்கத் தையும் சரியான முறையில் உபயோகிக்க இடம் தருமல்லவா? சென்ற வருஷம் நீங்கள் அலாகாபாத்திலிருந்து லாஹூர் வரையும் சென்று செய்த அரிய பிரசங்கங்கள், நாடு முழுவதிலும் பரவிப் பலருக்கு அரசியலில் அடையக்கூடிய வித்தியாப்பியாச மாகவே இருந்தது. இதைத்தான் சீமையில் பெரிய மந்திரிகள் முக்கிய முறையாகத் தங்கள் கட்சியை வலுக்க வைக்கவோ எதிர்க்கட்சியைத் தொலைக்கவோ அநுசரிக்கிறார்கள். நீங்கள், மேதா, பண்டித மதன மோஹன மாளவியாஜி, பாபு சுரேந்திரநாத பானர்ஜி, பூபேந்திரநாத வஸு முதலியவர்கள் இந்திய நாடு முழுவதும் சுற்றிச் சரியான பிரசாரம் செய்வது எவ்வளவு அவசியமென்பதை யோசனை செய்து பாருங்கள்''*

என்று வேண்டினார்.

---

* கடிதம், 17—6—09.

மார்லி மிண்டோ அரசியல் சீர்திருத்தங்கள் முதலில் அகில இந்திய அரசாங்க நிர்வாக சபையில் ராஜப்பிரதிநிதியின் உதவிக்கு ஓர் இந்தியரை நியமிக்க இடம் தந்திருந்தது. அவ்விதம் ஏற்பட்ட இடத்திற்கு ஸத்தியேந்திரப் பிரஸன்ன ஸின்ஹா என்னும் கனவானை அரசாங்கத்தார் நியமித்தார்கள். பெரிய நியாயஸ்தலவாதி அவர்; பணக்காரர்; சீமைப்பழக்கம் அதிகமுள்ளவர். புதிய சீர்திருத்தத்தின்கீழ் முதல் முதல் வேலை பார்ப்பவர்களால் இந்தியர்களுக்குக் கௌரவம் ஏற்படவேண்டும் என்னும் எண்ணம் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு உண்டு.

"உங்களுக்கு வைஸ்ராய் காரிய நிர்வாகசபையின் புதிய அங்கத்தினரை நன்றாகத் தெரியுமல்லவா? எங்களுக்கெல்லாம் அவருடைய உத்தியோக முறையில் குறை கூற முடியாத விதம் அவர் செய்யும் காரியங்கள் இருக்க வேண்டுமென்று ஆசை....அவசியம் இந்திய அரசியல் சட்டப் புஸ்தகத்தில் அவர் தம் பெயரை அழியாத விதத்தில் எழுதிவைக்கும்படிச் செய்யவேண்டும்....அவரிடம் நேரில் இதைப்பற்றிப் பேசுவது உங்களுக்குச் சங்கோசமாயிருக்கலாம். ஆனால் ஒளிவு மறைவில்லாமல் நீங்களும் அவரும் கலந்து பேசிக்கொள்வது பிற்பாடு அவருக்குத்தான் மிகவும் உபகாரமாயிருக்கும்."*

கோகலே பதிலுக்கு நண்பரிடம் தமக்குள்ள மதிப்பை வெளியிட்ட விதத்தைப் பார்ப்போம்:

"எனக்கு ஸின்ஹாவை வெகு நன்றாய்த் தெரியும். நான் கல்கத்தாவில் அவரை மறுபடியும் சந்திக்கும்பொழுது, அவசியம் நீங்கள் எழுதியதைப்பற்றிச் சொல்லுகிறேன். நிச்சயம் அதை அவர் வித்தியாசமாக எண்ணவும் மாட்டார்; உங்களையும் தாமாகவே ஏதாவது யோசனை கேட்கவேண்டும்பொழுது கேட்பார்......தற்கால அரசியல் நிலைமையைக் குறித்துப் பிரசங்கம் ஒன்று நடத்தப் போகிறேன். அதைத் தொடர்ந்து இன்னும் பல பிரசங்கங்களையும் செய்யப் போகிறேன்."†

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் திருப்திக்கு அளவேயில்லை. தாமும் பொதுஜனங்களைக் கண்டு அதிகம் பேசிப் பழக வேண்டும் என்று மிகவும் ஆசைப்பட்டார். அரசாங்கத்

* கடிதம், 17—6—09.

† கடிதம், 22—6—09.

தாருக்கு அடிக்கடி முறை இடுவதைவிட ஜனங்களை ஒன்றுபடுத்திச் சுயராஜ்யப் போரை நடத்தவேண்டு மென்ற ஞானம் அவரிடம் சிறிது உதயமாகி இருந்தது. மிதவாதிகள் இந்த மாறுதலை அவரிடம் எதிர்பார்த் திரார்கள். ஆனால் அவருடைய ஆசைகள் நிறைவேற வழியில்லை. அவ்வருஷம் அக்டோபர் மாதம் அவருக்கு ஹைகோர்ட்டு நீதிபதிப் பதவி கிடைத்தது. அதை அவர் ஆக்ஷேபிக்காமல் ஒப்புக்கொண்டார். அன்றுமுதல் அவருடைய காங்கிரஸ் தொடர்பு முடிவடைந்தது.



வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்
(நீதிபதி உடையில்)
(1910)

## அத்தியாயம் 26

## நீதிபதிப் பதவி

"செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை அறங்கூர் அவையம்" —மாங்குடி மருதனார்.

பொதுஜனக் காரியங்கள் பல அவர் தலைமையின் கீழ் நன்கு பலித்த சமயம், 1909-ஆம் வருஷமே என்றாலும் தவறில்லை. காங்கிரஸ் ஸ்தாபனத்தை அசைக்க முயன்ற தீவிர வாதங்கள் தலைவிரித்தாடியும், சென்னையில் முந்திய டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற பெருங்கூட்டம் சற்றும் அமளியில்லாமல் மிதவாதக் கொள்கைகளின் ஜயத்தோடு முடிவுபெற்றது. இவ்விஷயம் மிகுந்த செல்வாக்கையும் புகழையும் அவருக்கு அளித்தது. சென்னை மாகாண மட்டிலுமில்லாமல், இந்தியாவிலேயே எல்லாப் பாகங்களிலிருந்தும் அறிவாளிகள் அவரை மிகவும் போற்றத் தொடங்கினார்கள். அகில இந்திய அரசியல் சரித்திரத்திலும் அவருடைய பெயர் மறக்காதவண்ணம் பதியப் பட்டது. சென்னை மாகாணச் சட்டசபையிலும் தேர்தலில் வந்த அங்கத்தினராக இருந்துகொண்டு, ஒரு வருஷத்துக்கு மேல் மாகாணக் காரியங்களில் நன்றாகத் தலையிட்டுக் கொண்டது வீண் போகவில்லை. அரசாங்க இலாகா கோஷ்டியும், கவர்னர் காரிய சபையில் உள்ள அதிகாரிகளும் அவருடைய நுண்ணறிவையும் சமயமறிந்து எடுக்கும் ஆக்ஷேபங்களின் சாமர்த்தியத்தையும் மதியாமல் இல்லை.

கவர்னர் காரிய சபைக்கு ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வோர் இந்தியரை நியமிக்க வேண்டிய பொறுப்பை இந்திய அரசாங்கத்தாருடைய சிபார்சின் பேரில் இந்தியக் காரியதரிசி ஏற்றுக்கொள்வார் என்று அறிவிக்கப்பட்டது. கவர்னர் சென்னையில் யாரை

அம்மாதிரி நியமனம் செய்யச் சிபார்சு செய்வார் என்பதே எங்கும் பேச்சாக இருந்தது. சரியான மனிதனை அந்த ஸ்தானத்தில் அதிகாரிகள் அமைக்க வேண்டுமே என்ற கவலை கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அதிகம் உண்டு. ஏனென்றால் மிகவும் சிரமப்பட்டுக் கிடைத்த ஒரு வரனை நன்கு உபயோகப்படுத்தத் தவறினால் பிறகு யாரிடம் முறையிட முடியும்? அதற்காக முன்னமேயே ஸர் வில்லியம் வெட்டர் பர்னுக்கு எழுதிய கடிதமொன்றில் பின் வருமாறு தெரிவித்திருந்தார் :

"சென்னைக் கவர்னர் சபைக்கு யாரை நியமிக்கப் போகிறார்கள் என்னும் விஷயத்தில் இங்கு ஒரே பேச்சாக இருக்கிறது. சரியான பகுத்தறிவுடனும், ஒழுக்கமான அபிப்பிராயத்துடனுங் கூடிய இந்திய உத்தியோகஸ்தர் ஒருவருமே இங்கு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை..... ஜஸ்டிஸ் சி. சங்கரன் நாயர் சில விதங்களில் இப்பதவிக்குத் தகுதியானவரே....அவரைப்பற்றி உங்களுக்குத்தான் தெரியுமே. அவரும் சீமைக்கு இந்த மெயில் கப்பலில்தான் பிரயாணமாகிறார்...."*

சென்னையில் வக்கீல் தொழிலிலும், இன்னும் பல காரியங்களிலும் சங்கரன் நாயருக்கும் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும் வேற்றுமைகள் பல உண்டு. மயிலாப்பூர் - எழும்பூர்க் கட்சிகள் என்று பிரிவுபட்டு, இருசாரார்கள் தொழில் துறையிலுங்கூட ஒருவரை ஒருவர் பழி சுமத்தும் பழக்கம் அக்காலத்தில் ஏற்பட்டிருந்தது. எத்தனையோ சமயங்களில் அஜாக்கிரதையாகவே சங்கரன் நாயரைப்பற்றிக் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் வாய்விட்டுப் புகார் செய்திருந்தார். பலர் அவ்விருவரையும் தீராத விரோதிகளாகச் செய்து, தங்களால் முடிந்த அளவிலும் அவர்களையும் பிரித்து வந்தார்கள். ஆனால் கிருஷ்ண ஸ்வாமி ஐயரின் அந்தரங்கத்தில் நியாயம் ஒருகாலும் ஆட்சி செலுத்துவதைக் குறைத்ததில்லை. அவரும் தாம் பிறருக்குச் செய்த உபகாரங்களை 'நான் செய்தேன்' என்று பறை சாற்றியதில்லை. ஸர் வில்லியம் வெட்டர் பர்ன் மார்லியிடம் மிகவும் சிநேகிதராகப் பழகி வந்தவர் என்பதை உணர்ந்தே கிருஷ்ணஸ்வாமி ஐயர் மேற்படிக்

* கடிதம், 23—3—09.

கடிதம் வரைந்தார். மார்லியிடம் வெட்டர்பர்ன் ஒரு வார்த்தை சொல்லி யிருந்தால் உடனே நிச்சயம் சங்கரன் நாயருக்குத்தான் சென்னையில் அவ்வருஷம் கவர்னர் சபை அங்கத்தினராக நியமனம் ஆகியிருக்கும்.

வேறு எத்தனையோ காரணங்கள் இம்மாதிரி விஷயங் களில் புகுந்து தடை செய்வதை நாம் அறியவேண்டும். அந்தரங்கத்தில் நடந்தவைகளை வெளியே இருப்பவர் களால் எவ்விதம் அறிய முடியும்? கிருஷ்ணஸ்வாமி ஐயர் பிற்பாடு கவர்னர் நிர்வாக சபையில் அங்கத்தினராக ஆன பொழுது, சங்கரன் நாயரின் பெயரையே அதற்குக் குறிப்பிட்டும், கிருஷ்ணஸ்வாமி ஐயர் உத்தியோகத்தை நாடிப் பல சூழ்ச்சிகள் செய்ததால்தான் சங்கரன் நாயருக்கு அந்த உத்தியோகம் கிடைக்கவில்லை என்றும் கிருஷ்ண ஸ்வாமி ஐயரின் விரோதிகளில் சிலர் வம்பைக் கிளப்பி னார்கள்.

ஆனால் மார்லி மிண்டோ புதிய திட்டங்களின் கீழ் ஏற்படவேண்டிய விதத்தில், கொஞ்ச காலம் வரையில் சென்னையில் கவர்னர் நிர்வாக சபையாவது, சட்டசபை யாவது புதிய அங்கத்தினர்களைப் பெறவில்லை. ஸர் ஆர்தர் லாலி தம்மிடம் வேலை பார்த்த ஸிவிலியன் களின் அபிப்பிராயத்தையே பொருட்படுத்தியதுதான் சட்டென்று ஒரு சீர்திருத்தமும் சென்னையில் நடைபெறாத தற்குக் காரணம். அரசியல் சீர்திருத்த மசோதாவே, 1909-ஆம் வருஷத்து நடுவில்தான் சீமையிலும் மாட்சிமை தங்கிய அரசரின் அநுக்கிரகத்தைப் பெற்றது.

இதற்குள் சென்னை நீதிஸ்தலத்திலும் எட்டாவது நியாயாதிபதியை நியமனம் செய்ய வேண்டிய நிலைமை ஏற்பட்டிருந்தது. ஜட்ஜ் மணி ஐயர் 1907-ஆம் வருஷம் அக்டோபரில் தம் ஸ்தானத்தை விட்டு அகலவே, அவருடைய இடத்தில் சி. சங்கரன் நாயரை ஜட்ஜாக நியமித்தார்கள். அதன் பிறகு, சீமைச் சட்டப் பரீக்ஷையில் தேறியவர்களில் ஒருவருக்கு நீதிபதிப் பதவி யைக் கொடுக்க எண்ணி மிஸ்டர் அப்துர் ரஹீம் என்னும் பாரிஸ்டரை நியமித்தார்கள் அதிகாரிகள்.

இரண்டு இந்தியர்களுக்கு அதனால் நீதிபதிப் பதவிகள் கிடைத்தன. எட்டாவது ஸ்தானத்திற்கும் அரசாங் கத்தில் ஸிவிலியன் வகுப்பைச் சேர்ந்தவரையோ அல்லது பாரிஸ்டரான ஒருவரையோதான் நியமிக்கவேண்டு மென்ற கட்டுப்பாடு எதுவும் விதிக்கப்படவில்லை. மேலும், சென்னையில் தகுந்தவர்கள் மேலே சொன்ன இரு சாரார்களிலும் இல்லை. வக்கீல்களின் வர்க்கத்தி லிருந்தே ஒருவரைத் தேடவேண்டும். வக்கீல்களிலும் வருமானம் சரியான விதம் இருக்கின்றவர்களைத்தானே முதலில் நீதிபதிப் பதவிக்குக் கவனிக்கத் தோன்றும்! கிருஷ்ணஸ்வாமி ஐயரையும் அவருடைய நண்பரான பி. ஆர். சுந்தரமையரையும் அன்றி வேறு சிறந்தவர்கள் அக்காலத்தில் வக்கீல் தொழிலின் முன்னணியில் இல்லை. வருமானம் ரூபாய், 5000க்குக் குறைவில்லாமல் வந்து கொண்டிருந்தவர்கள் வேறு ஒருவரும் காணப்படவில்லை என்றே கூறவேண்டும். ஆகையால் கிருஷ்ணஸ்வாமி ஐயரைப் பொறுத்தமட்டில், வருமானத்திலும் மற்றப்படி உயர்ந்த ஸ்தானத்திற்கு வேண்டிய குணங்களிலும், செல்வாக்கிலும், அவருக்கு இணை எவருமே அக்காலத்தில் இல்லை என்றுதான் ஒப்புக்கொள்ள வேண்டி இருந்தது.

மனோதைரியத்தில் அவர் வெள்ளைக்காரர்களுக்குப் பின் வாங்கியதே இல்லை. 1908-ஆம் வருஷம் தீவிரவாதிகளின் கிளர்ச்சியினால் எங்கும் கலவரங்களும், அரசாங்கத்துக்கு எதிர்ப்பும் ஏற்பட்டன. அரசாங்கத்தைக் குலைக்கச் சூழ்ச்சி செய்ததாகப் பலரை விசாரணைக்குட்படுத்தி அரசாங்கம் சிறையிட்டது. பல குற்றவாளிகளுக்குத் தண்டனை பலமாயிருந்தன. தண்டனையின் கடுமையை விருத்தி செய்து வந்த வெள்ளைக்காரர்களின் வகுப்பில் மிஸ்டர் பின்ஹே என்ற ஜில்லா ஜட்ஜ் ஒருவர் இருந்தார். அவர் எத்தனையோ கடுமையான தண்டனைகளை ராஜத் துரோகத்திற்காகப் பழிசாற்றப்பட்டவர்களின் பேரில் தயை இன்றிச் சுமத்திக்கொண்டு வந்தார். அவர் ஹைகோர்ட்டிலும் கொஞ்சகாலம்—அதாவது 1908-ஆம் வருஷம் ஜூலை முதல் டிசம்பர் வரையிலும் - ஜட்ஜாக

இருந்தார். இவ்வளவு பெரிய பதவிக்கு அவரை அரசாங்கம் தகுதியுள்ளவர் என அங்கீகரித்ததைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் எவ்வளவு வெறுத்தார் என்று சொல்லவும் வேண்டுமா? பின்ஹே தாற்காலிக ஹைகோர்ட்டு ஜட்ஜ் பதவியில் இருக்கும்பொழுதே, அவரைப்பற்றிப் புகாராக ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கடிதம் எழுதினர். அவருடைய சங்கோசமற்ற நெஞ்சைத் தான் என்ன என்று சொல்வது!

"இம்மாதிரி உத்தியோகஸ்தர்களை வருஷந்தோறும் அரசாங்கத்தார் இங்கு அனுப்பினுல் இன்னும் சீக்கிரத்தில் ஜனங்களின் எதிர்ப்பு அதிகமாகும் என்பதில் சந்தேகம் இல்லை......சீக்கிரத்திலேயே, மிஸ்டர் பின்ஹேயின் உயர்தர நீதிஸ்தல உத்தியோகத்தைக் காயப்படுத்த அவகாசமும் ஏற்படலாம்...இவர் ஜில்லா ஜட்ஜாக இருக்கையில் திருநெல்வேலியில் சில குற்றவாளிகளைத் தண்டித்த விவரம் மிக அநீதியானது. ஒருவனை ஆயுட்கால தீவாந்தர சிக்ஷைக்கும், அவனுடன் கூடிய மற்றவர்களைப் பத்து வருஷம் தீவாந்தரத்தில் இருக்கவும் தண்டனைகளைக் கொடுத்தார். முதல் குற்றவாளியின்மேல் சாட்டிய குற்றம் என்னவெனில் ஏதோ அரசாங்கத்தைக் கண்டித்த ஒரு கூட்டத்தைச் சேர்ப்பதற்கு உதவியாக அவன் இருந்தான் என்பதுதான். அவ்வளவு சிறிய குற்றத்திற்கு அக்கிரமமாக இவ்வளவு பெரிய தண்டனையைக் கொடுத்த நீதிபதி கொஞ்சங்கூட யோக்கியதை இல்லாதவன் என்று நன்கு புலப்படவில்லையா தங்களுக்கு? இப்பேர்ப்பட்டவனை ஹைகோர்ட்டு ஜட்ஜ் பதவியில் காயமாக அமர்த்த ஏற்பாடு செய்ய வேண்டி அரசாங்கத்தார் யோசனை செய்கிறுர்கள். தாங்களும், மற்றச் சீமையிலுள்ள இந்தியர்பால் அநுதாபத்துடன் நோக்கி வரும் பார்லிமெண்டு கமிட்டியும் இதற்கு ஏதாவது வழிசெய்து இந்தப் பெரிய ஆபத்து எங்களை அணுகாமல் இருப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும்......"*

என்று சந்தேகமற எழுதியிருந்தார். அவருடைய வேண்டுகோள் வீண்போகவில்லை. ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் மேற்படி புகாரை மார்லி பிரபுவினிடம் தெரிவித்திருக்க வேண்டுமென்றுதான் ஊகிக்க இடமிருக்கிறது. ஏனெனில் பின்ஹே பிற்பாடு ஹைகோர்ட்டு ஜட்ஜாக நியமிக்கப் படவில்லை.

---

* கடிதம், 10-8-08.

இக் கடிதத்தை எழுத எவ்வளவு துணிவு வேண்டும் ஒருவருக்கு! மேலும் பின்ஹே தாற்காலிக ஹைகோர்ட்டு ஜட்ஜாகப் பெரிய ஸ்தானத்தில் இருந்த சமயம் அது. சாமானிய வக்கீல்களாக மட்டும் இருந்தால் அவனைப்பற்றிப் புகார்செய்ய நிச்சயம் தொடை நடுங்கி யிருப்பார்கள். மிதமிஞ்சிய தீவிரவாதத்தை சென்னைத் தலைவர் எதிர்த்ததும் ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு நன்கு தெரியும். அதே சமயத்தில் வெள்ளைக்காரர்களின் ஆட்சி யில் நியாயஸ்தலத்தில் வேலை பார்த்த ஒருவர், சட்டத் தைப் புறக்கணித்து மிதமிஞ்சித் தண்டனை இடுவதை அவர் அறவே வெறுத்ததையும் அறிந்திருந்தார். எல்லாப் பக்குவ பரிசீலனைகளின் விசேஷமும் சேர்ந்து கொண்டு அவர் பெயரை மார்லி பிரபுவின் ஞாபகத்தில் பதிய வைத்துவிட்டன.

எட்டாவது ஜட்ஜ்பதவிக்கு யாரை நியமிப்பது என்றதும், கிருஷ்ணஸ்வாமி ஐயரின் நாமதேயத்தையே சென்னைக் கவர்னருக்கு மேலதிகாரிகள் குறித்திருந் தார்கள். ஸர் ஆர்தர் லாலிக்கு அவர்மீதே கண். எப்படி யாவது அவரை அரசாங்க உத்தியோகத்தில் வைக்க வேண்டும் என்று அவருக்கு ஆவல் அதிகம். 'போகிறது, நீதி ஸ்தலத்திலுள்ள உன்னத பதவியையாவது அவர் முதலில் பெறட்டுமே' என்பது அவருடைய எண்ணம் போலும்.

உத்தியோகம் கிடைக்கும் வரையில் சமாசாரங்கள் ரகஸியமாயிருக்க வேண்டும். ஆனால் கிருஷ்ணஸ்வாமி ஐயரால் எவ்வித ரகஸியத்தையும் தன்னலத்தை உத்தேசித்து மறைத்து வைத்துக்கொள்ள முடியாது. எதற்காக ஒருவனிடம் ரகஸியம்? ஒளிவு மறைவுக்குத் தகுந்த கெட்ட எண்ணத்தையோ, அக்கிரமச் செயலையோ செய்யாத ஒருவன், பிறரிடம் ஏன் வெளிப்படையாக எதையும் பேசலாகாது? அன்றியும் உத்தியோகத்தைச் சுயநலத்திற்காக நாடினால் அல்லவா கவலைக்கும், அச்சத்திற்கும் ஹேது இருக்கும்? அதுவாகத் தம்மிடம் வரும்பொழுது பிறரிடம் சொன்னால் பயமென்ன?

அப்படியே பிறருக்குத் தெரிந்ததால் நஷ்டம் வந்தாலும் பாதகமில்லை என்பதும் அவருடைய எண்ணம்.

ஆகையால் தம்மிடம் கவர்னர் அப்பேச்சை எடுத்த துமே, சிறிது காலத்திற்குள், தம் உயிர் நண்பரான கோக லேக்கு அதைத் தெரியப்படுத்தி விட்டார். கோகலேக்கு முதலில் அதில் மிகவும் அதிருப்திதான். 'கிருஷ்ண ஸ்வாமி ஐயரைப் போன்ற சிறந்த ஒரு தலைவரை காங்கிரஸ் ஸ்தாபனம் இழக்கவேண்டி வரும்' என்பதை அவரால் எண்ண இயலவில்லை. ஆனால் இதனிடையில் ஆரோக்கியப் பரீக்ஷை செய்ததில், கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய நீர் ரோகத்தைக் காரணமாக வைத்துக் கொண்டு தேகஸ்திதி திருப்தியாக இல்லை என்றார்கள் வைத்தியர்கள். அதையும் நண்பர் கோகலேக்குத் தெரிவித்து விட்டார். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் அக்காலத்தில் எழுதிய ஒரு கடிதத்தில் இதைப்பற்றிக் குறிக்கின்றார்:

"உங்களுக்கு உத்தியோகம் கொடுக்கவும் வேண்டும்; நீங்கள் அதை மறுக்கவும் வேண்டும் என்பதுதான் எங்கள் ஆசை. போகிறது, அடுத்தபடியாகத் திருப்திகரமாகவே எல்லாம் முடிந்தன. நீங்கள் சொல்வதுபோல் முடிவு என்னவோ நன்றாகத்தான் இருக்கிறது; ஆனால் வியாதி இருப்பதன் செய்தி மனத்திற்குச் சற்றுக் கலவரத்தையே உண்டுபண்ணுகிறது. ஒருகால் வியாதியின் சின்னம் இருப்பதே இத் தீர்மானத்திற்குப் போதும் என்றிருக்கலாம் அல்லவா? வியாதியினால் தொந்தரவு அவ்வளவு அதிகமாக இல்லாவிட்டால் பாதகமில்லை என்பது வைத்தியர்களின் உத்தேசம் போலும்."*

மேலும் கோகலே நினைத்ததையும் எழுதிவிட்டார் அதே கடிதத்தில்; "கோகலேக்குப் பொது ஜன வாழ்க்கையின் நல்லகாலந்தான் இனி. நஷ்டமேற்படாதென்று இதனால் மன நிம்மதியும் உண்டாயிற்று..."

இவையெல்லாம் 1909-ஆம் வருஷம் ஆகஸ்டுமாதத்து நிகழ்ச்சிகள். செப்டம்பரில் என் தாய் உயிர் நீத்தாள். எங்கள் குடும்பத்தில் எல்லோரும் மிகச் சிறுவர்கள். "யாரை இனிக் குழந்தைகளைக் கவனிக்கச் சொல்வது? பெரியவர்களே இல்லையே!" என்று தந்தையார்

* கடிதம், 6-8-09.

மனத்தினுள் ஏக்கம் கொண்டிருந்த சமயம் அது. மறுபடியும் ஜட்ஜ் பதவியை ஒப்புக்கொள்ளும்படி கவர்னர் அவருக்கு எழுதிக்கேட்டார்; மார்லி பிரபுவின் பலத்தினல் நீர்ரோகத்தைப் பெரிய தடையாக நினைப்பதைத் தூரத் தள்ளிவிட்டார்கள் சீமை அதிகாரிகள். எவ்விதத்தில் இனித் தம் தொழில் முறையை நடத்தலாமென்று எண்ணமிட்டுக் கொண்டிருக்கையிலே—அதாவது அடிக்கடி வெளி ஊர்களுக்குச் செல்வது இனி உசிதமில்லை என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டிருக்கையில்—மணி ஐயர், 'அதிகாரிகளாகப் பார்த்துக்கொடுத்த பதவியை ஒப்புக்கொள்வதுதான் அழகு' என்றும், வீட்டிலும் குழந்தைகளின் ரக்ஷணைப் பொறுப்பு இனி அவர் தலையில் தான் அதிகம் விழும் என்றும், தமக்கும் மனைவி மறித்த பிறகே ஜட்ஜ் பதவி வந்தது என்றும் உதாரணங்களைக் காட்டி, அதை ஒப்புக்கொள்வது சௌகரியத்தின் பொருட்டுத்தான் என்று சொன்னர். கிருஷ்ணஸ்வாமி ஐயர் நீதிபதிப் பதவியை ஒப்புக்கொண்டுவிட்டார். கோகலேயும் பிறகு இந்தத் தீர்மானத்தை ஆக்ஷேபிக்கவில்லை :

> "உங்கள் உடம்பு நிலைமையைப்பற்றியும், புதிய வேலை உங்களுக்குப் பிடித்திருக்கிறதா என்பதையும் எனக்கு எழுதுங்கள். என்னைவிட அதிகமாக வேறு எவரும், நீங்கள் பொது ஜன வாழ்க்கையை விட்டுப் பிரிந்து போவதனல் ஏற்படும் நஷ்டத்தை உணரமாட்டார்கள். ஆனல் நான் நினைத்தபடியே உங்களுடைய குடும்ப நிலைமை முதலியவைகளைப் பார்க்கும் பொழுது ஜட்ஜ்பதவியை ஒப்புக்கொண்டதே உசிதம் என்று படுகிறது. மொத்தத்தில் நீங்கள் எங்களைப்போல் பல தொல்லைகளுக்கு ஆளாகாமல் இருப்பதுபற்றியும் எனக்குச் சந்தோஷமே. ஏனென்ருல், பொதுஜன வாழ்க்கைத் துறையில் இனிமேல் சிரமங்களே அதிகம் ஏற்படும்"*

என்று நண்பர் நீதிபதிப் பதவியைப் பெற்றதைக் குறித்து ஐந்து மாதங்கள் கழித்துக் கடிதமொன்றில் ஆமோதித்தார். தம்மைப்போல் மற்றவர்களும் பொதுஜன சேவையின் சிரமங்களைப் பெறுவதில் கொஞ்சங்கூட இடம் கொடாத மனத்தைப் பெற்றவர் கோகலே.

* கடிதம், 7-3-1910.

'உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் சந்தர்ப்பத்தில் இதை விட வேறுவிதமாக நடப்பதும் சரியல்ல' என்றுதான் ஒத்துப் பாடினார் வாச்சா. மேலும்,

"நீங்கள் வருந்தியபடி உங்கள் குடும்பத்தின் நிலைமை ஒரு புறமிருக்கட்டும். 1889-ஆம் வருஷம் வரையில் ஸ்ரீ டிலாங் என்பவர் பம்பாய் காங்கிரஸ் தலைவர்களில் சிறந்தவராயிருந்தார். அவர் உங்களைப்போல் வெளி ஊர்களுக்குச் சென்று வக்கீல் தொழிலில் அவ்வளவாகச் சம்பாதித்தவரும் அல்ல. இருந்தும், அவருக்கு உயர்தர நீதிபதிப் பதவி கிடைப்பதை அவர் நண்பர்கள் ஒப்புக்கொள்ளும்படியே உபதேசித்தார்கள்... வேறு சில உதாரணங்களும் இருக்கின்றன. ஜஸ்டிஸ் சந்தாவர்க்கர் எங்கள் ஊரிலும், ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயர் உங்கள் ஊரிலும் நடந்துகொண்டதும் இவ்விதமேதான். இப்பொழுது ஸின்ஹாவும் அரசாங்க வேலையை ஒப்புக்கொண் டிருக்கிறார். எல்லோருமே காங்கிரஸ் வாதிகள். ஆனாலும் உத்தியோகங்களைப் பெறுவதிலும் மிகுந்த உயர்ந்த நோக்கங்களையே நிச்சயம் போற்றியவர்கள்..."*

என்று நண்பருக்குச் சமாதானம் வேறு எழுதினார்.

வாஸ்தவத்தில் அக்காலங்களில், பொறுக்கிய சில இந்தியர்களுக்கே உயர்ந்த உத்தியோகங்கள் கிடைத்தன. அவர்களும் அவற்றை ஏற்றுக் கொள்ளாவிட்டால், "இந்தியர்களுக்குப் பொறுப்புடன் உத்தியோகங்களைச் சரியாகச் செய்யக்கூடத் தெரியவில்லை" என்ற அபவாதமே எங்கும் ஆளும் இனத்தாரிடையே கிளம்பியிருக்கலாம். மேலும், பிற்பாடு வந்தவர்களுக்கும் சரியான மரபைக் கற்பிக்க ஒருகால் வழியே ஏற்படாமலும் போயிருக்கலாம். எல்லாம் நாட்டின் நலத்தை உத்தேசித்தே ஏற்பட் டவைதாம் என்று கொள்ளவேண்டும். தற்காலத்திய அரசியல் வாதிகளில் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தவர்கள் பெரும்பாலோர், உத்தியோகங்களை ஒப்புக்கொள்வதை ஒருகாலும் – எக்காரணம் கொண்டும் - ஆமோதிக்கமாட் டார்கள். அப்பொழுதே, சிறந்த காங்கிரஸ் இளைஞர் களில் ஒருவரான சி. ஒய். சிந்தாமணி,

"நீங்கள் பொதுக் காரியங்களை விட்டு நீங்குவது நிச்சயம் காங்கிரஸ் கட்சிக்குப் பெரிய பலஹீனத்தை உண்டுபண்ணும்.

---

* கடிதம், 3-10-09.

என்னால் இக் கவலையை ஒருகாலும் மனத்தை விட்டுத் தள்ள முடியாது''*

என்று சொல்லி வருத்தப்பட்டார். தலைவரிடமிருந்த பிரேமையினால் கடைசியில் அவர் செய்ததை ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும் சிறுவரால்? ஆனால் தலைவர் மறுவருஷம் இறந்த பிறகு தாம் எழுதிய கட்டுரை ஒன்றில் பின்வருமாறு அவரை மதிப்பிட்டார்:

> "சென்னையின் பொதுஜன வாழ்க்கைக்கு இன்றியமையாத வராகத் தம்மைச் செய்துகொண்ட பின்னும் - இந்தியா முழு வதிலுமே காங்கிரஸ் தலைவர்களில் முக்கியமானவராக ஆன பிற்பாடும் - இம்மாதிரி ஜட்ஜ் பதவியைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒப்புக்கொண்டது எங்களுக்கு மிகவும் மனவருத்தத்தை உண் டாக்கியது என்பது வாஸ்தவம்''†

என்று மறுபடியும் அச்சம்பவத்தை மனத்தைவிட்டு நீக் காமல் வாசகர்களிடம் நியாயம்பட எழுதினார்.

பண்டித மதனமோஹன மாளவியாஜியிடமிருந்து, அவருடைய சம்மதத்தை வேண்டி எழுதிய கடிதத்திற்குப் பதில் ஒன்றும் வராததால், நண்பருடைய மனம் சற்றுக் கலவரமடைந்தது. அதனால் இங்கிருந்து தந்தி ஒன்றை பண்டிட்ஜிக்குக் கொடுத்தார். "உங்கள் மௌனம் கவலை தருகிறது; வேலை ஒப்புக்கொண்டது எதனால் என்பதைச் சீக்கிரம் விளக்குகிறேன்'' என்று சொல்லி அங்கீகாரத்தை வேண்டினார்.

இக்காரியத்தில் நண்பர்களின் ஆமோதனத்தை அவ ருடைய மனம் நாடியது என்பது இதிலிருந்து விளங்க வில்லையா? அரசாங்க உத்தியோகத்தைப் பெற்றது என்னவோ விளக்கமுடியாத செயல்தான். ஆயினும் எதில் பிறரைக் கேட்காமல் தாமாகவே தீர்மானித்துத் திடமா யிருக்கவேண்டும், எதில் பிறரைக் கலப்பது என்பதைச் சீர்தூக்கிப் பார்த்து நடந்துகொண்டவர் அவர். வரும் பாக்கியத்தை நிறுத்த எவராலும் முடியாது.

---

* கடிதம், 7-10-09.

† லீடர், 1912 ஜனவரி, 'கிருஷ்ணஸ்வாமி ஐயர் நினைவுகள்.'

எதற்காக ஜட்ஜ் பதவியில் ஒன்றரை வருஷங்கள்கூட வேலை பார்த்துத் தீராத ஒருவரை, மறுபடியும் கவர்னர் நிர்வாக சபைப் புதிய பதவிக்கு நியமனம் செய்யவேண்டும்? அவ்விதம் அவரை 1911-ஆம் வருஷம் கவர்னர் நிய மித்ததை அறிந்தவர்கள், அவருக்கு வரவேண்டிய கௌரவங்கள் தாமாகவே வரத்தான் செய்யுமென்று நினைத்து, வேண்டாத விசாரங்களைச் செய்ய மறுத்தார்கள். மேலும், யாருமே அவர் சீக்கிரம் உலகை விட்டு நீங்கப் போகிறார் என்று எதிர் பார்க்கவில்லை. தெய்வம் ஒன்றுதான் பொருள், புகழ், செல்வாக்கு இம் மூன்றையும் அவருக்குத் தத்தம் செய்துவிட்டு, உயிரை மட்டும் சீக்கிரம் வாங்கிக்கொண்டது. ஆகையால் அவர் அன்று ஜட்ஜ் பதவியைப் பெற்றது தவறு என்றாவது, ஏன் அதில் அதிக நாள் அவர் தங்கவில்லை என்றாவது கிளப்பும் பிரச்னைகள் வீண் பொழுதுபோக்குக்கானவை என்றே அறிவாளிகளுக்குத் தோன்றும். ஓரளவுக்குமேல் இம்மாதிரியான கேள்விகளைக் கேட்க இன்றுள்ளவர்கள் தகுந்த அதிகாரிகளல்ல. சிறுவராயினும், சிந்தாமணி யிடம் அக்காரணமே அழகாகப் பரிணமித்து, அவர் எழுதிய கடிதமொன்றில் பின்வருமாறு வெளி வந்தது :

"உங்களுக்கு இப்புதிய ஸ்தானமே இன்னும் பல உயர்ந்த பதவிகளுக்கும் வழியாக ஆகலாம் என்ற நம்பிக்கையேதான் என்னை ஒருவாறு ஆறுதல் பெறச் செய்கிறது. நீங்கள் சீக்கிரம், சர்வகலாசாலை உப அத்யக்ஷகராகவோ, அல்லது கவர்னரின் நிர்வாக சபை அங்கத்தினராகவோ ஆவதற்கு இடமிருப்பதையே நான் குறிக்கின்றேன்."*

அவர் ஜோஸ்யம் எவ்வளவு குறியானது! சிறு பிராயத்திலும் பழுத்த அநுபவம் பெற்றவருடைய வார்த்தைகளே அவை. சென்னைக் கவர்னர் நிர்வாக சபைக்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரை அங்கத்தினராக நியமனம் செய்யச் சீக்கிரமே ஏற்பாடு செய்யப்பட்டதை உலகம் அறியும்பொழுது, இதைச் சிந்தாமணி முன்ன தாகவே சொல்லிய திறமை பிரமிப்பையே உண்டாக்கு கிறது.

---

* கடிதம், 7-10-09.

நீதிபதிப் பதவியைத் தாம் ஏற்பது நண்பர்களுக்குப் பிடிக்காததைக் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய அந்தரங்கம் மறைக்க முயலவில்லை. அம்மாதிரிக் காலங்களில் சிலர் தங்கள் வாயை இறுக மூடிக்கொண்டு பிறரைத் தங்கள் சமீபம் அணுகவொட்டாமல் அடித்து விடுவார்கள். அவரோவெனில், வேண்டியவர்களும் வேண்டாதவர்களும் தம்மை நெருங்கித் தங்களுக்குத் தோன்றியவாறு ஆக்ஷேபித்ததை மதிக்காமலோ அல்லது தப்பித்துக்கொள்ளவோ வழி செய்துகொள்ளவில்லை. 'எனக்கு வரும் கடிதங்களில் நூற்றுக்கு முப்பதாவது நான் இப்பதவியை ஏற்றுக்கொண்டதை அங்கீகாரம் செய்யாதவைகளாகவே வருகின்றன' என்று தம்மை அணுகிய பந்துமித்திரர்களிடம் தாமாகவே ஒளிவு மறைவில்லாமல் விட்டுச் சொல்லுவார்.

'ஹிந்து' பத்திரிகை நியாயத்தை எடுத்துச் சொல்லப் பின்னடையவில்லை. அதன் தலை அங்கம் பின்வருமாறு புதிய நீதிபதியைக் குறித்து எழுதியது :

"ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு உத்தியோகமான செய்தியை எல்லோரும் கேட்டுச் சந்தோஷிப்பார்கள். ஏனென்றால் புத்தியிலும், சக்தியிலும், வாழ்க்கைச் சிறப்பிலும் வேறு எவரும் அவருக்குச் சமீபம் வரமுடியாது"

என்று தொடங்கிப் பிறகு முடிக்கும்பொழுது,

"ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர் இப் பதவியை விட்டு நீங்கும் பொழுது, சீமையில் பேர்போன நீதிபதியான ஸர் ஜார்ஜ் ஜெஸ்ஸல் என்பவரைப்பற்றிச் சொன்னவைகள் அவ்வளவையுமே அவரைப்பற்றிச் சொல்லும்படி இருக்கும் என்பது எங்கள் மதிப்பு"*

என்றெல்லாம் எழுதியது. மற்றொரு ரகசியத்தையும் பகிரங்கப்படுத்தியது அத்தலையங்கம் :

"மார்லிபிரபு இந்தக் காரியத்தில் அரசாங்க உத்தியோக விதிகளின் கடுமையைச் சற்றுக் குறைத்துக் கொண்டதும் நியாயமே. இதற்காக அவசியம் இந்தியர்களின் நன்றி அவருக்கு உரியது."

---

* ஹிந்து, 4-10-09.

கிருஷ்ணஸ்வாமி ஐயரும் ஸர் வெட்டர்பர்னுக்கு எழுதினபொழுது,

"என்னுடைய ஆரோக்கியப் பரீக்ஷை உத்தியோகத்திற்குத் தடைகளைச் செய்ததை நீங்களும் அறிவீர்கள். ஆனால், மார்லி பிரபு அவைகளைத் தடைகளாகக் கொள்ள மறுத்து விட்டார்"*

என்று குறிப்பிட்டிருந்தார்.

நண்பர்களில் பலர் அவருக்கு உயர்ந்த பதவி வந்ததில் அதிகச் சந்தோஷமடைந்தார்கள். அவருடைய மனைவியும், தமையனாரும் இருந்து பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையே என்றுகூடச் சில உறவினர்களும் நெருங்கிய நண்பர்களும் வருந்தினார்கள். ஆனால் ஒரே ஒரு நண்பர்மட்டும் புதிய பதவியைக் குறித்து மனமார்ந்த சந்தோஷத்தைத் தெரிவிப்பதுடன் நிறுத்திக்கொள்ளாமல், நீதிபதி ஸ்தானத்தின் பொறுப்பையும் நன்கு மனத்தில் அவர் கொள்ளவேண்டுமென்ற எண்ணத்தால் பின் வருமாறு சொன்னார் :

"உங்கள் உத்தியோகத்தைப் பற்றிய செய்தியைக் கேட்டு என் உள்ளம் மிகவும் சந்தோஷமடைகிறது. ஒரு சிறந்த நியாய வாதியின் தொழிலுக்குத் தகுந்த முடிவு நீதிபதிப் பதவியே. சென்னைப் பொதுஜனங்களுக்கு ஏற்பட்ட நஷ்டம், நீதி ஸ்தலத்தின் க்ஷேமமாக ஆவதிலும் எல்லோருக்கும் திருப்தியே. ஏனென்றால் நீதிஸ்தலத்தில் சரியான உத்தியோகஸ்தர்கள் வரவேண்டிய அவசியம் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. பழைய காலத்து நண்பனனபடியால், நான் உங்களிடம் சற்று உரிமை பாராட்டிச் சொல்லுவது, பொறுமையும் வாய் அடக்கமும் சிறந்த அளவில் உங்களிடம் ஏற்பட்டால் நீதி பதியாய் இருப்பதில் வேறு விரும்பக்கூடிய புதிய அம்சங்கள் உங்களிடம் இராவென்றே நம்புவதற்கு இடமாகும். எதையும் சாதிக்கக் கூடிய மனப்பாங்கைப் பெற்றவரிடம் இவ்விருப்பம் கைகூடாது என்பதற்கில்லை. ஹைகோர்ட்டில் அதிகமாய்த் தீராமல் சேர்ந்திருக்கிற அப்பில்களைத் தீர்த்து வைக்க உங்களால்தான் முடியும். ஆனால்......ஒரே ஒரு வருத்தம் எனக்கு. உங்கள் மனைவியும், உங்கள் தமையனாரும் இருந்து இதைப் பார்க்க வில்லையே என்பதுதான்."†

---

* கடிதம், 1-10-09.

† கடிதம், 1-10-09.

இவ்வார்த்தைகள் சிவஸ்வாமி ஐயருடையவைகளே. நிதானமாய்ப் பார்க்கையில் உண்மையான நட்பின் மணம் வீசுகிறது இவர் மொழிகளில்.

எது எப்படி இருப்பினும் சிவஸ்வாமி ஐயர், நண்பருக்கு உபதேசித்த மொழிகள் சரியான பக்குவத்துடன், கொஞ்சங்கூட அவநம்பிக்கையைக் காட்டாத விதத்தில் அமைந்திருந்தன. சுபாவத்தில் அவர் யாரிடமும் நெருங்கிய பழக்கம் வைத்துக் கொள்ளாதவர்; ஆனால், பிறரை மதிப்பிட எண்ணும்பொழுது மட்டும் நடுநிலையில் நிற்பவர் என்பது, மேலே அவர் குறித்த மொழிகளிலேயே பதிந்து கிடக்கின்றன.

உறவினர்களில் வலங்கைமான் ராமஸ்வாமி, மனைவி இறந்ததைப்பற்றித் துக்கம் விசாரிக்க வந்தவர், கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு நீதிபதிப் பதவி வந்ததை எவ்வாறு வினவுவது என்பதை நினைத்து ஒன்றும் சொல்லாமல் எதிரில் நின்றார். ஆனால் அவருடைய மனம் நினைத்ததை ஜோஸ்யம் கற்றவரைப்போல் அறிந்தார் கிருஷ்ணஸ்வாமி ஐயர். "என் மனைவி இருந்து இதைப் பார்க்கவில்லையே என்று வருந்துகிறாயா? அவள் என்றுமே இவைகளிலெல்லாம் பற்றுள்ளவள் அல்லவே? ஒருகால் சாமண்ணா இருந்தால் சந்தோஷிப்பார் என்று நினைக்கிறாயோ? அதுவுமில்லை! அண்ணா இருந்தால் உடனே தம் பதவியை ராஜிநாமாச் செய்துவிடுவார். உனக்குத்தான் தெரியுமே அவருடைய ரோஷ சுபாவம்" என்றார்.

அண்ணாவைப்பற்றிக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவ்வாறு மதிப்பிட்டதில் தவறில்லை என்பதை அத்தான் ராமஸ்வாமி ஒப்புக்கொண்டே சொல்லி இருக்கிறார் பிற்காலங்களில். சுவாமிநாத ஐயர் ஒரு சமயம் ஸம்ஸ்கிருதத்தில் எம். ஏ. பரீக்ஷை கொடுக்கத் தம்மைத் தயார் செய்து கொள்ளவே, தம்பி அவ்வருஷம் பரீக்ஷகர்களில் ஒருவர் என்று தெரிந்து கொண்டார். உடனே, "சட், இவன் என்னைப் பரீக்ஷிப்பதா! முடியாது; நான் பரீக்ஷைக்கு உட்காரவில்லை" என்று சொல்லி, கட்டிய பணத்தையும் லக்ஷ்யம் செய்யாமல் எம். ஏ. பரீக்ஷைக்கு உட்காரவில்லையாம்.

மற்ருேர் உயிர் நண்பர் கூடவே தொழில் பழக்கத்தில் மட்டுமல்லாமல் எல்லாவிதக் காரியங்களிலும் கிருஷ்ண ஸ்வாமி ஐயருடன் உழைத்தவர். அவர் எவ்விதம் தெரிவித்தார் தம் சந்தோஷத்தை என்று கவனிப்போம்:

"உங்களுக்கு ஹைகோர்ட் ஜட்ஜ் பதவி வரப்போவதை இப்பொழுதுதான் அறிந்தேன். என் மனமார்ந்த சந்தோஷத்தைத் தெரிவிக்கின்றேன். நீங்கள் நீதிபதியாய் ஆவதில் நாட்டுக்குப் பெருத்த க்ஷேமமே உண்டாகும்."*

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் இல்லத்திற்கு எதிரில் உள்ள பங்களாவில் வசித்த பி. ஆர். சுந்தரமையருடையவையே மேலே சொன்ன வார்த்தைகள். அவ்விருவர்களும் இணை பிரியாதவர்கள் என்பதை உலகம் அறியும். ஆயினும் உணர்ச்சி சிறிதும் தெரியாதவிதம் அவரிடம் வார்த்தைகள் கிளம்பின. சிவஸ்வாமி ஐயருக்கு உணர்ச்சி அதிகம் இல்லை என்பதுதான் பலருடைய அபிப்பிராயம். ஆனால் சுந்தரமையர் கூற்றுக்கும், சிவஸ்வாமி ஐயருடைய சொற்களுக்கும் உள்ள வித்தியாசம் ஊன்றிப் பார்ப்பவர்களுக்கு நன்கு புலப்படாமல் இராது.

என் தந்தையின் உயர்ந்த கருத்துக்களையே சதா மனத்தில் போற்றிய சிஷ்யர் ஒருவர் அக்காலத்தில் 'முன்சிப்பாக இருந்தார். அவர் சொல்லியதைப் பார்த்தால், மரியாதையும், கௌரவமும் குரு சிஷ்ய பாவத்தை எவ்வளவு மேம்படுத்தக்கூடும் என்பது புலப்படுகிறது. காலஞ்சென்ற ராவ்பகதூர் சி. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்தாம் இங்கே குறிக்கப்படுபவர். வாழ்க்கையிலும், பொதுஜனக் காரியங்களிலும் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய கொள்கைகளையே சிரமேற்கொண்டவர். அவர் கடிதம் வருமாறு:

"தாங்கள் இதுவரையும் சென்னைப் பொதுஜனங்களின் முன்னணியில் பெற்றிருந்த கௌரவம் இதைவிடச் சிறந்தது; மற்ற எவராலும் அடையக்கூடாதது. ஆனால் தங்களுக்குக் குரு ஸ்தானத்திற்குப் பாத்திரமான காலஞ்சென்ற ஒருவரைப் பற்றித் தாங்களே சொன்னவை என் ஞாபகத்தில் இருக்கின்றன. 'இவ்வளவு சிறந்த வக்கில் நீதிபதி ஸ்தானத்தைக் கடைசியில்

* கடிதம், 1-10-09.

அடையாவிடில் மிகவும் வருந்தும்படி நேர்ந்திருக்கும்' என்றீர்கள். அதையேதான் இப்பொழுதும் சொல்லும்படி இருக்கிறது.''*

வணக்கத்துடனும், உரிமையுடனும் எழுதியவர்கள் பலர் இருந்தார்கள். ஸர் ராலப் பென்ஸென் என்ற ஸிவிலியன் ஜட்ஜூம், ஸர் ஜான் வாலிஸ் என்ற பாரிஸ்டர் ஜட்ஜூம் தங்களுடன் உட்காரப்போகும் புதிய ஜட்ஜின் குணாதிசயங்களை நன்கு நேரில் நீதிஸ்தலத்தில் கண்டறிந்தவர்கள். நீதிபதிப் பதவிக்கு நியமித்தவரை அவர்களும் வாழ்த்தினார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் அக்டோபர் 9-ஆம் தேதி ஆஸனத்தில் அமர்ந்ததுமே புதிய வேலையைப் பார்ப்பதில் தாம் ஜரூராக இருப்பதை வக்கீல்களுக்குக் காட்டிவிட்டார். அப்பீல்களின் ஜாப்தாவை எதிரே வைத்துக்கொண்டு நம்பர் வாரியாக அவைகளில் சட்டென்று தீர்மானிக்க வேண்டியவைகளைக் காலதாமதம் இல்லாமல் கவனிக்கத் தொடங்கினார். அவருக்கு முன்பு பதவியிலிருந்து நீங்கிய மூன்று பிரபல இந்திய நீதிபதிகளும் அநேகமாகத் தீர்ப்புக்களை வீட்டில் எழுதி வந்து கோர்ட்டில் வாசித்த வர்கள். அவைகளின் சட்ட ஞானம் திருத்தமாய் அமைந்ததுடன், நியாயத்தை எந்நாளும் நிலை நிறுத்தும் விதம் அவை ஏற்பட்டவை என்பதும் கவனிப்பவர் களுக்குத் தென்படும்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் நீதிபதிப் பதவிக்கு வந்த சமயம், வெகுநாட்களாய்த் தீராதிருந்த அப்பீல்கள் ஹைகோர்ட்டில் அதிகம் குவிந்திருந்தன. சீக்கிரம் நியாயம் பெறுவது பலகாலம் காத்திருந்து அடையும் உயர்தரத் தீர்ப்பைவிடச் சிறந்தது என்ற கொள்கை, கட்சி ஆடுகிறவர்களுக்கு அநுபவ சித்தம். தம்முடைய முதல் பொறுப்பாக அப்பீல்களை உடனுக்குடனே கேட்பது என்பதையே கிருஷ்ணஸ்வாமி ஐயர் விரதமாகக் கொண் டார். அதற்காக அவருடைய தீர்ப்புக்களில் சட்டஞானம் குறைவு என்பதிற்கில்லை. அவர் ஜட்ஜாக இருந்த காலம்

* கடிதம், 3-10-09.

15 மாதங்களே; அப்பதினைந்து மாதங்களுக்குள் உயர்தர மான தீர்ப்புக்கள் 120க்குக் குறையாமல் செய்திருப்பார்* என்று வழக்குகளின் புள்ளி விவரங்களை எடுத்துப் பார்த்த ஒரு சட்ட சம்பந்தமான பத்திரிகை குறித்து இருந்தது.

வேலையை ஒப்புக்கொண்ட உடனேயே மற்றப் பெரிய மாகாணங்களான பம்பாயிலும் கல்கத்தாவிலும் தீர்ப்புக்களை உடனுக்குடனேயே சொல்லும் பழக்கம் ஏற்பட்டுள்ளதா அல்லது தனிமையில் எழுதிப் பிற்பாடு வாசிப்பதுதான் அங்குள்ள உயர்தர நீதிபதிகளின் சிறந்த பழக்கமா என்னும் சந்தேகத்தையும், தம் நண்பர்களான ஜஸ்டிஸ் சந்தாவர்க்கரிடமும், ஜஸ்டிஸ் லால் மோஹன தாஸினிடமும் வினவித் தெரிந்துகொண்டார். ஜஸ்டிஸ் சந்தாவர்க்கர், "பழங் காலத்துப் பழக்கம், தீர்ப்பை நிதானமாக வீட்டில் எழுதி வாசிப்பது. கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்பை ஆமோதித்து எழுதும்பொழுது சாதாரணமாய் அவ்வப்பொழுது கோர்ட்டிலேயே சொல்லுவதுதான் இங்கே பழக்கம். அவைகளைக் குமாஸ்தாக்கள் சுருக் கெழுத்தில் எடுத்துக் கொள்வார்கள். ஏதாவது சிரம மான சட்ட விமரிசனம் முதலியவைகள் செய்ய நேர்ந்தால் பிற்பாடு தீர்ப்பை எழுதி வாசிக்கும் பழக்கமும் இருக்கவே இருக்கிறது"† என்றெழுதினர்.

ஜஸ்டிஸ் லால் மோஹன்தாஸ் கல்கத்தா ஜட்ஜ். அவரும் அவ்விதமேதான் எழுதினர்.‡ கிருஷ்ணஸ்வாமி ஐயர் கோர்ட்டிலேயே சொல்லிய தீர்ப்புக்கள் பல உள்ளன. தாமதமில்லாமலும், நியாயமாயும் அவை ஏற்பட்டதில் கட்சிக்காரர்களுக்கும், வக்கீல்களுக்கும் திருப்திதான். ஸர் டி. முத்துஸாமி ஐயரையும், மணி ஐயரையும் ஒப்பிடும்பொழுது, அவர் எழுதிய தீர்ப்புக்கள் அவர்களுடைய தீர்ப்புக்களைப்போல் பலகாலம் தாங்கக்

---

* மதராஸ் வீக்லி நோட்ஸ், 1912.

† சந்தாவர்க்கர் கடிதம், 4-12-09.

‡ கடிதம், 16-12-09.

கூடியவிதம் இருந்தனவென்று சொல்வதற்கில்லை. ஆனாலும் எத்தனையோ ஜட்ஜுகளைச் சென்னை நீதிஸ்தலம் பிற்பாடும் பெற்று வந்திருக்கிறது. அவர்களை யெல்லாம் நினைக்கும்பொழுது எவ்விதத்திலும் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய சட்டஞானமோ, தீர்ப்பு நியாயமோ குறை கூறும்படி இருந்ததில்லை; இன்று வாசிக்கும் பொழுது, தலைமுறை தத்துவமாய் வந்த அபிப்பிராயங் களுக்குச் சற்றும் விரோதம் இல்லாமலேயே அவை விளங்குகின்றன.

> "உங்கள் தீர்ப்புக்களை மிகுந்த ஆவலுடனும் கவனத்துட னுமே நான் படித்து வருகிறேன்; அவைகள் மிகவும் சிலாக் கியமா யிருக்கின்றன"*

என்று அவருக்கு ஒரு சமயம் மற்றொரு மாகாணத்து நீதிபதி எழுதினார்.

நீதிபதிப் பதவியிலிருக்கும்பொழுது, தம்முடன் அமர்ந்திருந்த நீதிபதிகளிடமிருந்து மிகுந்த கௌரவத் தையே அவர் பெற்றிருந்தார். ஸர் ரால்ப் பேன்ஸன் ஸிவிலியன் கோஷ்டியில் மிகுந்த அநுபவசாலி; ஆனால் அருமைபிடித்தவன் என்றுதான் வக்கீல்கள் அவரைச் சொல்லுவார்கள். வாதிக்கும்பொழுது, கோர்ட்டில் வக்கீல்களை மட்டம்தட்டும் குணம் படைத்தவர். அத்தகையவர் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் காட்டிய மரியாதை அதிகமேதான். ஒரு சமயம்மூன்று ஜட்ஜுகள் உட்கார்ந்து விசாரித்த கேஸில் தாம் தனியாக எழுதிய தீர்ப்பைத் தம்முடன் ஆசனத்தில் அமர்ந்திருந்த கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்கு அனுப்பி, அவருடைய திருத்தங்களை அதில் வேண்டியபடிச் செய்வதற்கு அநுமதிகொடுக்கும் மனப்பாங்கு அவரிடம் ஏற்பட்டது;† அப்பழக்கம் அவ ரிடம் அதிகம் இருந்தது என்றும் தெரிகிறது.

ஜஸ்டிஸ் அப்தர் ரஹீம் என்னும் முகம்மதியர், ஐய ருடன் நெருங்கிச் சிநேகித முறையை நாடினார். அடிக்கடி

---

* லால்மோஹன் தாஸ் கடிதம், 9-9-10.

† பேன்ஸன் கடிதம், 14-11-10.

ஒழிவு நேரங்களில் அவர்கள் இருவரும் சேர்ந்து பேசிப் பழகுவது இயல்பாகிவிட்டது. அப்தர் ரஹீமுக்கு நண்பருடைய நுண்ணறிவிலும், சொந்த அபிப்பிராயத்திலும் மிகுந்த கௌரவம் ஏற்படத் தொடங்கியது.

சென்னையில் கண்ணாடி செய்யும் தொழிற்சாலை ஒன்றைக் கிருஷ்ணஸ்வாமி ஐயரும், அப்தர் ரஹீமும் ஒரு சமயம் சேர்ந்து பார்க்கச் சென்றார்கள். கண்ணாடி செய்யும் அதிசயங்களை அங்கே கவனித்தபொழுது, கிருஷ்ணஸ்வாமி ஐயர் என்ன என்னவோ கேள்விகளைத் தொழிலாளிகளிடம் கேட்டு விஷயங்களைத் தெரிந்து கொண்டே சென்றார். அப்தர் ரஹீம், "இவர் என்ன, சர்வத்தையும் அறிந்தவரா?" என்று பிரமித்துப் போனார். தம் வியப்பை வாய்விட்டுச் சொல்லியும் விட்டார்.

"நீங்கள் அறியாத விஷயமே உலகில் இராதா என்ன ?"

நண்பர் அதைக் கேட்டுச் சிரித்துவிட்டு வீடு திரும்பினார். கண்ணாடித் தொழிற் சாலைக்குப் போகுமுன் காலையில், 'என்ஸைக்ளோபீடியா பிரிட்டானியா' என்ற சர்வ சமாசாரத் தொகுதியை எடுத்து அதில் கண்ணாடியைப்பற்றிய செய்திகளை நன்கு படித்துவிட்டுச் சென்றவர் அவர். எவ்விடத்திலும் அசட்டுப் பட்டம் தமக்கு ஏற்படக் கூடாது என்பது அவர் வாழ்க்கையில் ஒரு பெரிய லக்ஷ்யம். அதற்கு வேண்டிய சுறுசுறுப்பும், சமயோசித ஞாபகமும் எல்லோருக்குமே உண்டாகுமா? அப்படி இருந்தால், வாழ்க்கைச் சிறப்பிற்கு அதுவும் ஓர் அறிகுறி தானே !

நீதிபதிப் பதவியில் சட்டத் தீர்ப்புக்களோடு மட்டும் நின்றவர்களே மற்ற எல்லா ஜட்ஜுகளும். அதற்கு விலக்கானவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். வெகு காலமாய் மனத்தில் ஊறிய எண்ணங்களை அவருக்கு எப்படியாவது செய்து பார்க்க வேண்டுமென்ற அவா உண்டாயிற்று. வருஷந்தோறும் வக்கீல் தொழிலில் உயர்ந்தோங்கிய ஒருவரைக் கொண்டு, தொழில் முறையில் ஒழுங்காகச் செய்யவேண்டிய காரியங்களை இளம் வாலிபர்

களுக்குப் புகட்டுவதற்கு ஹைகோர்ட்டில் தகுந்த ஏற்பாடு களைச் செய்யச் சொன்னவர் அவரே. தொழிலில் சில தர்மங்களைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியத்தைத் தம் மிடம் அணுகும் சிறியவர்களிடம் என்றுமே உணர்த்தி யவர் அவர். இவ்வித முயற்சிகளில் நீதிஸ்தலம் எடுத்துக் கொள்ள வேண்டிய சிரத்தையைத் தாம் நீதிபதியாக இருக்கையில் காட்டிய பெருமை அவருக்கே உரியது.

1910-ஆவது வருஷம் டிசம்பர் மாதமே, ஸர் ஆர்தர் லாலி, அவரைக் கவர்னர் நிர்வாக சபையில் ஓர் அங்கத் தினராக இருக்கும்படி கேட்கத் தொடங்கிவிட்டார். நேரிலும், கடித மூலமும் தம் விருப்பத்திற்கு அவரை இணங்குமாறு வேண்டினர். அவரும் அதற்கு இணங்கவே, 1911-ஆம் வருஷம் ஜனவரியில் 16-ஆம் தேதியுடன் ஜட்ஜ் பதவியை விட்டு நீங்கும்படி நேர்ந்தது.

"நீதிபதிப் பதவியில் நான் இருக்கையில் என்னைப் பற்றிய உங்கள் அபிப்பிராயம் என்ன ?" என்று அவரைப் பேட்டிகாண வந்த சிறு கூட்டத்தில் இருந்தவர்களை அவர் சாவகாசமாய்க் கேட்டார். அவரிடமே வக்கீல் தொழிலைச் சிறிது காலம் பயின்றவராகிய என். சந்திரசேகர ஐயர் (இப்பொழுது ஹைகோர்ட்டு ஜட்ஜாக இருப்பவர்), "இப்பொழுதுதான் அவரவர்களுக்குத் தக்க இடங்களில் அவரவர்கள் அமர்ந்திருக்கிறார்கள்" என்றார். அவர் சொன்னதன் கருத்து, கிருஷ்ணஸ்வாமி ஐயர் கவர்னர் சபை அங்கத்தினர் பதவியை அலங்கரிப்பதும், நீதிபதிப் பதவியில் அவர் இடத்தில் அவருடைய நண்பர் பி. ஆர். சுந்தரம் ஐயர் அமர்வதும் அவரவர்களுக்கு உரிய ஸ்தானங்கள்தாம் என்பதே. ஆனால், இந்த வார்த்தைகளை விகற்பமாக எண்ணத்தலைப்பட்டவர்களும் அக்கூட்டத்தில் உண்டு. அதாவது கிருஷ்ணஸ்வாமி ஐயர் நீதிபதிப் பதவியில் இருக்கையில் தம் எதிரே வாதாடும் வக்கீல்களை வாயடி அடித்துவிட்டார் என்ற புகாரையே நாசுக்காகவும் மறைமுகமாகவும் இவர் உரைத்ததாகச் சிலர் கொண்டார்கள்.

உடனே அக்கூட்டத்தில் நிச்சப்தம் குடிகொண்டது. பெரியவர்களெல்லோரும் வெறுமே இருக்கும்பொழுது இளைஞர் ஒருவர் மட்டும் திடீரென்று இவ்விதம் உரைத்தால் யார்தாம் அதைச் சரியென்று நினைப்பார்கள்? சந்திரசேகர ஐயரின் மாமனார் காலஞ் சென்ற (மெயில் ஆபீஸ்) ஸ்ரீ முனிஸ்வாமி ஐயர். அவர் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு நெருங்கிய நண்பர். மாப்பிள்ளையின் துடுக்கினால் அவருடைய மனம் மிகவும் தவித்துவிட்டது. எல்லோரும் சிறுவர் செய்ததைப் பெரும் பிழையாக நினைக்கும்பொழுது, கிருஷ்ணஸ்வாமி ஐயர், "அப்படி நினைத்திருந்தால், சொல்லுவதில் பிசகென்ன? அவன் ஒன்றும் தவறு செய்யவில்லையே! தைரியசாலி. இம் மட்டும் பயமின்றி என்னிடம் நேரில் சொன்னதை நான் மெச்சுகிறேன்" என்றார்.

சிறுவரான ஒருவரின் அறியாத வார்த்தைதானா, அல்லது முதிர்ந்தவர்களும் அப்படித்தான் நினைத்தார்களா என்ற கேள்விக்குப் பதில் சொல்வதும் சற்றுச் சிரமந்தான். அவர்முன்பு கோர்ட்டில் பேசுவது ஒருவிதத்தில் மிகவும் சிரமந்தான். வீண் தாமதம் அவரிடம் செய்யலாகாது. கேட்ட கேள்விக்குப் பதில் பளிச்சென்று நியாயவாதிகளிடமிருந்து வரவேண்டும். எத்தனையோ தர்மசங்கடங்களில் ஒரு வக்கீல் அகப்பட்டுத் தவிக்கும்பொழுது, ஜட்ஜும் இடை விடாமல் அவரை வெருட்டினால், ஜட்ஜைப்பற்றி வேறு விதமாக நினைக்க இடம் ஏது? ஒரு சமயம் அவர் கச்சேரியில், அப்பீல்செய்த கட்சியின் பக்கம் நின்ற ஒரு வக்கீல் தம் வாதத்தைத் தொடங்கினார். அவ் வக்கீல் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடமே சிறிதுகாலம் ஆபிசில் வேலை செய்தவர். அவர் பேசுகையில் எதிர்க் கட்சி வக்கீல் குறுக்கிட்டு, "என் நண்பர் சொல்வதில் தெளிவின்மை கொஞ்சம் காண்கின்றது" என்றார். உடனே ஜட்ஜும் அதிவேகமாய், "கொஞ்சமாய்ப் போவானேன்?" என்று இரைந்து விட்டார். பாவம், வாதாட ஆரம்பித்தவரின் மனநிலை எவ்விதம் இருந்திருக்கும் என்பதை நாம் எடுத்துக் கூற வேண்டியதில்லை.

தம் பிழையை மனத்தில் அறியக்கூடியவர் என்ற காரணத்தினுல் அவர் கையில் அகப்பட்டுச் சிரமப் பட்டவர்களும், அவரிடம் கோபம் கொள்ளாமல், அவருடைய அரிய ஆத்ம குணங்களைமட்டும் போற்றத் தொடங்கினுர்கள். ஆனுல், நன்ருக வாதாடியவர்களைக் குறிப்பாக அறிவதிலும், அவர்களைத் தட்டிக் கொடுப்ப திலும் அவருக்கு ஈடு கிடையாது. வக்கீலாக இருந்த பொழுது அவரால் முன்னணிக்கு வந்தவர்கள் பலர். நீதிபதியாக அவர் இருந்தபோதும் சந்தேகமின்றி மேலிருந்தபடியே அவர் அளித்த 'சபாஷ்' வெகுமதியை உச்சி குளிரும்படிப் பெற்றவர்களும் பலர்.

"அவருடைய வழியில் வேண்டிய அளவு பழக்கமில் லாததால், பல சிறுவர்களுக்கும், மற்றும் சில பெரியவர்களுக்குங் கூட, தங்கள் கட்சிவாதங்களைப் பொறுமையாய் அவர் கவனிக்க வில்லை என்ற குறை உண்டு; சொல்ல வேண்டியவைகளைச் சொல்லமுடியாமல் அவர் செய்துவிட்டார் என்பார்கள் சிலர். ஆனுல் அவருடைய தீர்ப்புக்களில் சந்தேகமின்றி நியாயம் நிலைத்திருந்தது. நிலையில்லாத நியாயத்தைவிட வேறு கெடுதல் நீதிஸ்தலத்தினுல் ஏற்பட முடியாதல்லவா?"

என்று சென்னைச் சட்டப் பத்திரிகையொன்று* அவரைப் பற்றிக் குறித்தது மிகவும் உண்மையே.

---

* மதராஸ் லா ஜர்னல், 22-ஆம் வால்யூம், பக்கம் 48.

## அத்தியாயம் 27

### காந்தியைக் கொண்டாடுதல்

''எடுமினே அறப் போரினை என்றான்
எங்கோ மேதகம் ஏந்திய காந்தி.'' —பாரதியார்

வாழ்க்கையையே பெரியதொரு வேள்வியாக நினைத்துவந்த இத்தேசத்து மக்களின் பண்பாட்டிற்கு, தியாகச் செயலில் தனிப்பட்ட கௌரவம் இருப்பது இயல்புதான். ஆனால் சமூக வாழ்க்கையிலும், தேசத்தின் முன்னேற்றத்தின் பொருட்டு நடத்தும் இயக்கங்களிலும் தியாகத்தை அடிப்படையான தருமமாகக் கொள்ளும் மனப்பான்மையை, இதுகாறும் நாம் அறிந்த புராணக் கதைகளிலுங் கூடக் கேட்டதில்லை. எத்தனையோ அரசர்களும் தைரியசாலிகளும் உயிரைக்கூடத் திருண மாகக் கருதிப் போரில் இறந்ததில்லையா? இப்பொழுதும் இறக்கவில்லையா? அதற்கும் இதற்கும் ஒரே ஒரு வித்தியாசந்தான். ஆக்கிரஹத்துடன் போர் புரிவது எங்கே! சத்தியத்தின் பொருட்டு ஸர்வ இந்திரியங்களையும் அடக்கி அநியாயத்தை மட்டும் எதிர்ப்பது என்பது எங்கே! ஆம், இவ்விதச் 'சத்தியாக்கிரஹம்' என்னும் புதிய தவத்தைச் செய்து காட்டியவர் காந்தி அடிகளே என்பதை உலகம் அறியும். உலகெலாம் சண்டையும் அநீதியும் தலைவிரித்தாடும் இக்காலத்தில், ஒருவர் சத்தியத்தின் ஆட்சியில் கட்டுண்டு ஒவ்வொரு செய்கையிலும் ஆத்மப் பரீக்ஷையின் பின்பே தீவிரமாகப் பொதுமக்களின் நலத்திற்குப் பாடுபடுகிறார் என்பதுதான் நாம் அறிந்த ஆச்சரியங்களிலெல்லாம் பெரிய ஆச்சரியம்.

மஹாத்மா காந்தியை இந்திய தேசிய இயக்கம் முற்றும் தனக்கெனவே ஆக்கிக்கொள்ளாத காலத்தில், அதாவது தென் ஆப்பிரிகாவில் உள்ள இந்தியர்களுக்காக

அவர் மிகவும் பாடுபட்ட நாட்களில், இங்கே அவருடைய புகழ் இவ்வளவு பரவவில்லை. சிலருக்கே அவருடைய கடுந்தவம் நன்கு தெரிந்திருந்தது. கோகலே காந்தியுடன் நெருங்கிய பழக்கம் உடையவர். ஒரு சமயம் ஆப்பிரிகாவை விட்டு இந்தியாவில் ஒரு மாதகாலம் கோகலேயுடன் காந்தி அடிகள் இருந்தது உண்டு. ஆனால், தம்முடைய 'சத்திய சோதனை'யில், முதல் முதலில் தென் ஆப்பிரிகா இந்தியர்களின் சார்பாகத் தாம் கொண்டுவந்த தீர்மானத்தைக் கண்டு பெரிய காங்கிரஸ்காரர்களான மேதா, வாச்சா முதலிய பிரமுகர்கள் எவ்வளவு அலக்ஷியமாகவும், அதன் உண்மையை அறிந்து இணங்காமலும் இருந்தார்கள் என்று காந்தி அடிகளே தெரிவித்திருக்கிறார். காரணம்: அக்காலங்களில் பிற நாட்டில் நடக்கும் செய்திகள் நம் நாட்டில் சீக்கிரம் பரவாததும், தேசீயப் போரில் ஈடுபட்டவர்கள் முழு அவகாசத்தையும் அரசியல் காரியங்களில் செலுத்தாததுமேயாம். ஆனால், சிற்சிலர் மாத்திரம் கோகலேயைப்போல் அரசியல் சம்பந்தமான காரியங்கள் எல்லாவற்றிலுமே புத்தியைச் செலவிட்டு, முழுச் சிரத்தையுடன் நம் நாட்டினரின் கஷ்டங்களை அகற்றப் பாடு பட்டார்கள்.

காந்தியடிகள் தென் ஆப்பிரிகாவில் செய்துவந்த அருந்தொண்டில் கோகலே ஈடுபட்டமையால் நண்பருடைய மனத்தையும் அது கவர்ந்தது. 1909-ஆம் வருஷம் செப்டம்பர் மாதம் வெளிவந்த, ஜே. ஜே. டோக் என்பவர் எழுதிய 'மோஹன்தாஸ் கரம்சந்து காந்தி' என்ற ஆங்கிலப் புஸ்தகத்தைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பல தடவைகள் தாமே படித்தார்; பல நண்பர்களையும் படிக்கும்படிச் செய்தார். அன்றியும் அப்புஸ்தகத்தின் அநேக பிரதிகளைத் தாம் வாங்கி இனாமாகப் பல நண்பர்களுக்கும் பல புஸ்தகசாலைகளுக்கும் விநியோகம் செய்தார்.

தென் ஆப்பிரிகாவில் இந்தியர் படும் பாட்டை விவரிக்கும் பல கட்டுரைகளையும் குறிப்புக்களையும் 'இந்தியன் ரெவ்யூ'வில் படித்துத் தெரிந்துகொண்டவராயினும், நேருக்கு நேர் அறிந்த விதமே, அவை தோன்றாத

திலும் ஆச்சரியமில்லை. மிஸ்டர் எச். எஸ். எல். போலக் என்பவரை அறிந்த பிறகே காந்தியின் தீரச் செயல்களும் தியாகமும் நேரில் காண்பவைபோல் அவருடைய உள்ளத்தில் உணர்ச்சியோடு பட்டன.

போலக் தென் ஆப்பிரிகாவில் காந்தி அடிகளுடன் சேர்ந்து, இந்திய சமூகத்தின் கஷ்டங்களை நீக்குவதன் பொருட்டு அநேக நல்ல காரியங்களைச் செய்தவர். 'சத்திய சோதனை'யில் அவருடைய பெயர் அநேக இடங்களில் கொட்டை எழுத்துக்களில் காண்பதை, பலர் படித்திருக்கலாம். போலக் இப்பொழுதும் இங்கிலாந்தில் உயிருடன் இருக்கிறார். முதலில் சென்னையில் அவருக்குப் பழக்கமானவர் ஜி. ஏ, நடேசன் அவர்களே. அநேக விதங்களில் பிற நாட்டில் நம் மக்கள் குடி ஏறியதால் விளையும் கஷ்டங்களை விவரிக்கும் பல கட்டுரைகளை மிகுந்த ஆர்வத்துடன் தம் பத்திரிகையில் வெளியிட்டவர் நடேசன். அக்காரணங்கொண்டு போலக் அவரை அணுகினார். நடேசனும், யாராவது நல்ல காரியங்களுக்காக பொருளோ மற்ற உதவியோ வேண்டிவந்தால், நண்பரிடம் அவர்களைக் கொண்டுவந்து சேர்ப்பது எல்லோரும் அறிந்த விஷயம். ஆகையால் அவ்விதமே போலக்கையும் அவருக்குப் பழக்கம் செய்வித்தார். எப்படி முதலில் கிருஷ்ணஸ்வாமி ஐயருடன் சம்பாஷிக்க நேரிட்டது என்பதைப் போலக் நேரில் பின் வருமாறு வருணிக்கின்றார்:*

"அவர் இடுப்பில் வேஷ்டி அணிந்து, மேலே பூணூல் தரித்துக்கொண்டு தம் படிப்பறையில் என்னை வரவேற்றார். அவர்மேல் வேறொன்றும் காணவில்லை. அவருடைய முகத்தில் காம்பீர்யமும் மேன்மையும் துலங்கின. ஆனால் நான் வெள்ளைக்காரனான காரணத்தினால், சட்டையில்லாத கோலத்தில் என்னை அவர் எதிர்கொண்டு அழைத்ததை மரியாதைக் குறைவாக நான் நினைக்க நேரிடலாமென்று எண்ணினார் போலும். ஏனெனில் அவர் பின் வருமாறு என்னைக் கண்டதும்

* கடிதம், 22-4-1933.

சொன்னார்: 'மிஸ்டர் போலக், உம்மிடம் அனாவசியமாக நான் மன்னிப்புக் கேட்கப் போவதில்லை. ஏனென்றால் சக்கரவர்த்தியே எங்களைப் பேட்டிகாண வருவாராயினும் இவ்விதந்தான் இடுப்பில்மட்டும் வேஷ்டியுடன் அவரை வரவேற்பது எங்களுக்கு அழகு.' உடனே அவரிடம் பலகாலம் பழகிய பரிசயம் எனக்கு ஏற்பட்டது போலத் தோற்றியது. அன்று முதல் அவருடைய உறுதியான சொந்த அபிப்பிராயத்திலும் நடத்தையிலும் எனக்கு மதிப்பு ஏறிவிட்டது."

இவ்விதமாக அவரைக் கண்டவர், நாளுக்கு நாள் அவருடன் பழகிச் சிலகாலம் பட்டணத்திலும் வாசம் செய்தார். சிறு பிராயமானதாலும் உண்மையில் புத்தி வன்மை வாய்ந்தவரானதாலும் போலக் எல்லோரையும் சீக்கிரத்தில் வசீகரித்தார்.

அடிக்கடி காந்தியின் அசாதாரணமான தைரியத்தைப் பற்றி நண்பரிடம் அவர் கதை கதையாகச் சொல்லுவார். காந்தி மகாத்மாவின் சரித்திரத்தின் சுவாரஸ்யம் யாரைத் தான் பிரமிக்கச் செய்யாது! காந்தியை நேரில் தரிசிக்காமற் போனாலும், இக்காலத்தில் இருப்பது போன்ற உலகக் கியாதி அவருக்கு அப்பொழுது இல்லாமல் இருப்பினும், அங்கிலையிலேயே கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவரிடம் எல்லையற்ற கௌரவத்தையும் நன்மதிப்பையும் வைக்கத் தொடங்கிவிட்டார்.

*1909*-ஆம் வருஷம் அவருக்கு எழுதிய கடிதமொன்றில் போலக் குறித்ததாவது:

"உங்களுக்கு அன்று சாயந்தரம் பினிக்ஸில் நடக்கும் எங்கள் கல்வி முறையைப்பற்றிச் சொன்னது ஞாபகமிருக்கலாம். இந்தியாவிலுள்ள பொதுஜனத் தலைவர்களை நான் பேட்டி கண்டு அவசியம் அவர்களுடைய உபகாரத்தைப் பெறவேண்டுமென்பது காந்தியின் விருப்பம். இந்திய மாணவர்களுக்கும் பெண்களுக்கும் தென் ஆப்பிரிகாவில் வாசிப்பிற்காகப் பண உதவியைத் தாய் நாட்டிலும் நாடவேண்டும் என்பது அவருடைய வேண்டுகோள்... உங்களைப் பார்த்த அன்றே இந்த விஷயத்தைப்பற்றி முழுவதும் பேசிவிட எனக்கு ஆசைதான். ஆயினும் ஏற்கனவே டிரான்ஸ்வால் இந்தியர்களின் நிதிக்கு நீங்கள் தாராளமான பண உதவியை

அளித்திருக்கிறீர்கள்......மேலும் அன்று நீங்கள் ஹிந்து முஸ்லீம் பிரச்னையைப்பற்றிச் சொன்னது என் மனத்தில் பதிந்துவிட்டது. காந்திக்கும் இப் பிரச்னை ஒரு விதமாகச் சரிவர முடிவதில்தான் ஆசை. ஆகையால் என் வேண்டுகோளுக்கு உங்களால் இணங்க முடிந்தால், ஒரு முஸ்லீம் பையனுக்கு நீங்கள் தரும் படிப்புச் செலவுத் தொகையைக் கொடுக்கும்படி செய்கிறோம். வாஸ்தவத்தில் உங்களுடைய மனப்பூர்வமான நல்ல அபிப் பிராயத்தின் கொடையாக முஸ்லீம்கள் அதை நினைக்கலாம். காந்தியும் அதைப்பற்றிச் சந்தோஷிப்பார்''*

என்றார்.

1910–ஆம் வருஷம் ஏப்பிரல் மாதம் 28–ஆம் தேதி, தென் ஆப்பிரிகா இந்தியர்கள் சம்பந்தமாக நடைபெற்ற சொற்பொழிவு ஒன்றில் என் தகப்பனார் கலந்துகொண் டார். திருவல்லிக்கேணியில் 'கெல்லட்' ஹாலில் கூடியது அச்சபை. போலக் 'காந்தி : டிரான்ஸ்வால் இந்தியச் சமூகத்தின் தலைவர்' என்னும் தலைப்போடு பெரிய தொரு பிரசங்கம் செய்தார். கிருஷ்ணஸ்வாமி ஐயர் அன்று அக்கிராஸனம் வகித்தார். போலக் பேசி முடித்ததும் அவர் பின்வருமாறு ஆவேசத்துடன் பேசினார் :

''உலகில் ஒவ்வொரு மதமும் ஆத்ம ஸமர்ப்பணத்தைப் பிற ருக்கு மாத்திரமல்லாமல், செய்கின்றவர்களுக்கும் மேன்மையைத் தரும் சாதனமாகக் கருதுகின்றது ; இதைச் செய்வதில் ஒன்றோ டொன்று எல்லா மதங்களும் போட்டியிடுகின்றன என்றாலும் தவறில்லை. இம்மாதிரியான தியாகத்தையும் தன்னல மறுப்பையும் முக்கிய நோக்கமாகக் கருதாத மதம் ஒன்றேனும் இந்நாட்டில் இருக்கிறதோ என்பது சந்தேகந்தான். ஹிந்துக்களின் சமய உணர்ச்சியோவெனில், சற்றும் மற்றச் சமயங்களுக்குப் பின் வாங்காமல், தியாகத்தையே எல்லாவற்றையும் விட முதன்மை யாக உபதேசிக்கின்றது. நான் இப்பொழுது பார்ப்பதுபோல ஹிந்து தர்மத்தை வேறு யாராவது பார்த்திருக்கலாமோ என்னவோ எனக்குத் தெரியாது. என் கருத்தில் இந்தியநாடே ஒரு யக்ஞபூமி. வேதங்களில் கர்மகாண்டத்தில் நாம் வேள்விகளைப்பற்றி அறிந்து இருக்கிறோம். புராணங்களின் ஒவ்வோர் ஏட்டிலுமே யாகங்களைப்பற்றி வாசித்திருக்கிறோம். யாகமென்பது ஈசுவராதிகளுக்கு நம்முடைய சர்வ சம்பத்துக் களையும் கொடுப்பதிலிருந்து வந்தது. தேவர்கள் சக்தி வாய்ந்த

* கடிதம், 19-10-1909.

வர்களாகவோ, கனிவுடன் கூடியவர்களாகவோ, மற்றும் பயங்கரமானவர்களாகவோ இருப்பதால் அவர்களைத் திருப்திப்படுத்தும் முயற்சியில்தான் யக்ஞங்கள் தலையெடுத்தன. இந்த வேள்விக் கருத்து வேதங்களில் எங்கும் காணப்படும். ஆனால் இவைகள் பாஹியமான ஸம்பத்துக்களையே விடுவனவாகும். முக்கியமாக, ஆடு மாடு குதிரைகளே பண்டை ஆரியர்களின் தனமாக முதல் முதலில் ஏற்பட்டவை. இவையே எங்கும் மனிதனுடைய சொத்து. ஆகையால் இவைகளைக் கொடுப்பதால் தேவர்கள் பிரீதி அடைவார்கள் என்று கருதினார்கள். அம்மாதிரி, சொத்தைக் கொடுப்பதிலிருந்தே தங்களையும் பெண்டு பிள்ளைகளையும் கொடுப்பதில் வரவர ஆர்வம் பிறந்தது. அவைகளுங்கூட, நன்கு பரிசோதித்தால், பாஹிய அம்சங்களேயாகும். புராணங்களில் அரசர்களும் பிராமணர்களும் தங்களுக்குக் கிட்டிய பந்து மித்திரர்களைப் பலி கொடுத்த கதைகளை வாசிக்கின்றோம். இம்மாதிரி வெளி விஷயங்களைத் தியாகம் செய்வதினின்றும் உள்ளேயே விளையும் பற்றுதல்களை விடுவது என்னும் பழக்கம் உயர்ந்ததாகக் கருதப்பட்டது. காமக் குரோதங்களை விட வேண்டுமென்று நமக்குள் ஒரு மரபு ஏற்பட்டுள்ளது. அவ்விதம் விடுவதால் உலகிற்கும், மனித சமூகத்திற்குமே பெரியதோர் உபகாரம் செய்ய இயலும். தேவர்களைப் பிரீதி செய்து மனித வர்க்கத்திற்கு நன்மையைத் தேடும் யக்ஞாதிகளில் உள்ள ஆர்வம் நாளடைவில் சமூகவாழ்க்கையின்பொருட்டுச் செய்யும் காரியங்களிலும் பரிணமிக்கத்தொடங்கியது. நம் இனத்திற்குச் செய்யும் தொண்டே வரவரச் சரியான உயர்வைப் பெற்றது. மனிதனை மேன்மைப்படுத்தும் மார்க்கமாக மாத்திரம் கருதப்படாமல் அது மனிதகுலத்தையே கடைத்தேற வைக்கும் கருவியாகவும் ஆகிவிட்டது.

"நம் தேசத்துப் பழைய புஸ்தகங்களில் ஒரு பாகத்தில் பின்வருமாறு விஷயத்தைப் பார்க்கலாம்: வேள்விச் சடங்குகளினால் அருவருப்பை உண்டாக்கும் சில செயல்களில் நம்பிக்கை குன்றியதும், சில முனிவர்கள், பாஹிய கர்மாக்களால் நடத்தப்படும் வேள்வியின் பலனை, மனத்தின் யோக நிலையினாலேயே பெறலாமென்று எடுத்துக் காட்டினார்கள். பிருஹதாரண்யகோபநிஷத்தின் முதற் பகுதியில் ஒருவரலாறு இருக்கிறது. அசுவமேத யாகத்தில் பலியிடப்படும் பிராணியை வைத்து இவ்விசுவ முழுவதையும் குதிரையாகச் சொல்லும் ஒரு வருணனை காணப்படுகிறது. இவ்வுலகப்பற்றைத் தியாகம் செய்வதால் மனிதன் ஆத்ம ஸாக்ஷாத்காரம் அடையும் வழியில் செல்வது வெளி வஸ்துக்களை யாகத்தில் பலியிடும் செயலைவிடச் சிறந்ததெனக் கருதப்பட்டிருக்கிறது. பகவத்கீதையில் ஒரு சுலோகம்

யக்ஞம் என்னும் கருத்தை விவரிக்கின்றது: 'பிரம்மமே யக்ஞம் செய்பவன்; பிரம்மமே அக்கினியில் இடும் ஹவிஸ்; யக்ஞத்தின் நோக்கமும் பிரம்மமே. எந்தத் தவத்தினுல் பிரம்மத்தை அடைய வழிதேடுகிருனே அதுவும் அப் பிரம்மமே அல்லவா?'*

"ஆகையால் ஜீவாத்மா பரமாத்மாவுடன் கலந்து ஒன்றுபட்டிருப்பதை அறியும்பொழுது, தனிப்பட்ட யக்ஞகர்த்தாவும், யக்ஞமும், யக்ஞ பலத்தைப் பெறுபவனும் இல்லை யென்பதைக் குறிக்கும் கருத்தே அச்சுலோகத்தில் தெளிவுபடுகிறது.

காந்தியின் தியாகச் செயலை எந்தவிதமான யக்ஞமாகச் சொல்வது என்று கேட்க வேண்டிவரும்; கீழ்ப்பட்டதா, மேல்தரமானதா அது? இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவேண்டிய அவசியமில்லை; ஒருகால், யக்ஞம் செய்வதில் இன்னும் மேலான ஒரு படி இருக்கிறதென்ற காரணத்திஞல்மட்டும் சிலர் காந்தியின் தியாகத்தை அவ்வளவாகப் புகழாமல் இருக்கலாம். இம்மாதிரியான சாஸ்திர ஆராய்ச்சிப் பண்டிதர்களைக் கண்டு கொஞ்சங் கூடப் பயப்படுகிறவன் அல்ல நான். இதைவிட மேலான ஒரு பதவி யக்ஞ கர்மாவினுல் கிடைப்பதால், காந்தி செய்யும் தியாகத்தை முழுவதும் புகழ முடியாது என்பது அவர்களுடைய நோக்கமாகவும் இருக்கலாம்......கனம் கோகலே அவர்கள் காந்தியின் தேசிய உணர்ச்சியைத் தெய்வத்தன்மை வாய்ந்ததாகவே சொல்லுகிருர்; அது, சாமானிய மனிதர்கள் செய்யக்கூடியதல்ல வென்றுதான் காட்டுகிருர். காந்தி சரித்திர ஆசிரியராகிய டோக் என்பவர் காந்தியுடன் பேசிப் பழகுவதே பெரிய உலக அநுபவமும் வித்தியாப்பியாசமும் ஆகும் என்று கூறுகிருர்.

"மிஸ்டர் போலக் காந்தியின் வரலாற்றையும், அவருடைய மனே தைரியத்தையும், ஆத்ம ஸம்ஸ்காரத்தையும் அதிசயிக்கக் கூடிய மொழிகளில் விவரமாக எடுத்துச் சொன்னுர். அவ்வளவு விரிவாக என்னுல் எடுத்துச் சொல்ல முடியாது. ஒன்றை மாத்திரம் ஒருவரும் மறக்கலாகாது: காந்தி தூரதேசத்தில் தனியாக யாவராலும் செய்ய முடியாத விதத்தில் ஒரு போரில் ஈடுபட்டிருக்கிருர். அவமானமும் பரிகாசமும் அவர் தலையில் வந்து குவிந்தபோதிலும் தளராத தைரியத்துடனும், தமக்கு மட்டுமே சொந்தமான பிறர்பால் வளரும் கனிவுடனும் பெருத்த வேலையில் ஈடுபட்டிருக்கிருர். அவருடைய சத்தியம் மற்ருெரு வரிடமும் காண இயலாதது. ஆகையாலேதான் காந்தி தென் ஆப்பிரிகா இந்தியர்கள் மத்தியில் எவராலும் அடையமுடியாத கௌரவம் பெற்றிருக்கிருர். அவரைப் புகழ்வது மிகை என்று

* பகவத்கீதை: அத்தியாயம் 4, சுலோகம் 24.

இந்தத் தேசத்தவர்கள் ஒருவரும் சொல்லமாட்டார்கள். காந்தியைப் பெரிய தேசபக்தர் என்றுமட்டும் நினைப்பதற்கில்லை; காசு பணம் இல்லாமல் பொதுஜன ஸேவையில் மன்றுடுகிறவர் என்பதோடு நிறுத்துவதற்கும் இல்லை. தாம் எடுத்துக்கொண்ட காரியத்திற்காக விடாமுயற்சியுடன் உழைப்பவரென்றுமட்டும் சொன்னாலும் போதாது. சமய வழிபாட்டின் தீவிர உணர்ச்சியுடன் உழைக்கும் உயர்ந்த மதாசாரியராகவே அவரைக் கருத வேண்டும். இந்தியாவில் அவரைப் போன்றவர்கள் கிடைப்பது துர்லபம். காந்தி இன்று பெரும் போர் புரிகிறார்; அவர் இதில் வெற்றி அடைவது நிச்சயம். ஆனால் விரோதங்களும் கஷ்டங்களும் அவர்முன் எழும்பி நிற்கின்றன. அவர் கடைசியில் வெற்றி பெற்றாலும் பெருவிட்டாலும், ஒன்று நிச்சயம்: இத்தேசத்தில் இனி வரும் பல தலைமுறைகளுக்கு எங்நாளும் கண்டறியாத சிறந்த ஒரு பெயரை அவர் அளிக்கப் போகிறார்.''

இன்று அல்லவா காந்தி அடிகளின் பெரும் புகழும் மஹாத்மாவான தன்மையும் நம்மை ஆட்கொள்ளுகின்றன ? அன்று, அதாவது காந்திஜீயின் புகழ் உலகெங்கும் எல்லா விதத்திலும் அறியப்படாத காலத்தில், ஒருவர் அவரைப் பெரிய சமயாசாரியராகக் கருதி, அவரது தியாகத்தின் பெருமையில் ஈடுபட்டது பேசியவருடைய உள்ளத்திற்கு மாத்திரமன்றி, அவர் கூறியதை அன்று கேட்டவர்களுக்கும் புனித உணர்ச்சியை அளித்திருக்கவேண்டும் என்பதில் சந்தேகம் இல்லை.

ஒருவருக்குத் தியாக உணர்ச்சி சொந்தத்தில் சிறிதளவாவது இல்லாவிட்டால் மற்றொருவருடைய அபாரமான தியாகத்தில் ஈடுபடுவது அசாத்தியம். இன்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் மட்டும் உயிருடன் இருந்தால் மஹாத்மா காந்தியின் அடிச் சுவடுகளைப் பின்பற்ற மாட்டார் என்று சொல்லுகிறவர்கள் தீரர்களாகவேதான் இருக்கவேண்டும்.

## அத்தியாயம் 28

### சொந்தக் குடும்பம்

"செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்"

—அதிவீர ராம பாண்டியர்.

தந்தையார், என் தாய் உயிருடன் இருக்கும் அளவும், அதிகம் குடும்பக் கவலைகளில் கவனத்தைச் செலுத்தியவர் அல்ல. அதற்காக வீட்டுச் செலவுகளையும் மற்றுமுள்ள காரியங்களையும் கவனியாதவர் என்பதற்கில்லை. அவருடைய திருஷ்டி அஷ்டாவதானம் செய்யும் ஆற்றல் பெற்றது. தாம் வேலை செய்யும் அறையில் உட்கார்ந்திருக்கையிலேயே வீட்டினுள் நடக்கும் யாவற்றையும் அறிந்துகொள்ள அவரால் முடியும். ஆபீஸில் வேலை செய்கையிலேயே அவர் கண், உள்ளே போவார் வருவாரைக்கூடக் கவனித்துவிடும். யாராவது உறவினர் தம்மைப் பார்க்க வந்தால், வந்தவர்கள் நெருங்கியவர்களானாலும் தூரத்தவர்களானாலும் உடனே எழுந்திருந்து வாசலில் வருவார். வருவது மல்லாமல், வந்தவரை அவரவர்களுக்கு உவந்த கேள்விகளையும் யோகக்ஷேம விசாரணைகளையும் மறக்காமல் வினவுவார். வயசானவராகவோ அல்லது தம் தந்தையாருக்குப் பந்துவாகவோ இருந்துவிட்டால் கேட்க வேண்டியதில்லை அதிக மரியாதைகளுக்கு. கைகொடுத்துக் கூட வந்தவரை வண்டியை விட்டுக் கீழே இறக்கி விடுவார்.

தொழில் செய்யுங் காலத்தை நினைத்துப் பார்க்கையில், எத்தனையோ கட்சிக்காரர்கள் சூழ்ந்த ஆபீசு அவருடையது என்பதை முதலில் அறியவேண்டும். அவர் கீழ் வேலை பார்த்த உழைப்பாளிகளும் பலர் உண்டு. ஆனால் என்றைக்கும் தம்மை அணுகியவர்கள் பெற வேண்டிய தொகைகளையோ, மற்றப்படிக் கொடுபட வேண்டியவைகளையோ, தம் ஞாபகத்தில் மறக்காமல் அவர் வைத்திருப்பார். பிற்காலங்களில் வரவு செலவு எவ்வளவு என்று எளிதில் அளவிடமுடியாத பொழுதுங்

கூட, சில நிர்ணயங்கள் அவரிடம் உண்டு. உழைப்பிற்குக் கைம்மாறு பெருதவர்களே அவரைச் சுற்றி இருந்தது இல்லை.

பெரிய பங்களாவில் வாசம் செய்ய ஆரம்பித்த பின்னர் வண்டிக் குதிரைகளோடும் வேலையாட்களுடனும் அதிகமாகச் சௌகரியங்கள் ஏற்பட்டன. பொருள் மிகுதியின் அறிகுறிகளே எங்கும் தெரிந்தன. ஆனால் என் தாய் தன் கை விரல்களால் கூடப் பணத்தைத் தொட்ட தில்லை என்பார்கள். அவள் இறக்கும் வரையில் எவ்வித அற்ப ஆசையையும் வாய்விட்டுச் சொல்லியதில்லை.

எட்டு மாதங்களுக்கு மேல், நோய்வாய்ப் பட்டுப் படுத்த படுக்கையாகக் கிடந்தாள். அவளுடைய வியாதி இன்னதென்று தீர்மானிப்பதற்கு எத்தனையோ வைத்தி யர்கள் வந்தார்கள். அவளுக்குப் பார்க்காத வைத்தியம் இல்லை. ஆங்கில மருந்துகளையும், ஆயுர்வேத மூலிகை களையும், யூனனி ஷர்பத்துக்களையும் வேண்டியமட்டும் கொடுத்துப் பார்த்தார்கள். சதா என் தந்தைக்கும் அவருடைய உத்தம சிநேகிதரான ஏ. கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்கும் என் தாய்க்குச் செய்யும் வைத்திய விஷயத்தில் தர்க்கங்கள் கிளம்பிவிடும். ஏ. கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்கு வியாதிகளின் அநுபவமும் வைத்தியர் களின் பழக்கமும் கொஞ்சமல்ல. மேலும் அவரால் தம்முடைய சொந்த யோசனைகளையும் விடமுடியாது. புத்திமானுகையால் அவர், தம்முடைய தீர்மானங்களை வற்புறுத்தக் கிளம்பி விடுவார். நண்பர் மட்டும் அவருக்குச் சளைத்தவரா? வைத்திய விஷயத்தில் இரண்டு பேர் களும் அடிக்கடி சண்டையிட்டுக் கொள்வார்கள்.

என் தாய்க்குச் சிகிச்சை செய்யப்படும் மார்க்கம் ஏற்றதாகத் தோன்றவில்லை, ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு. "நீ ஒரு வழியும் போகமுடியாமல் அடித்து விடுவாயே!" என்று நண்பர் ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கடிந்து கொண்டார் ஒரு நாள். பாவம், ரோஷம் அவருக்குப் பொத்துக்கொண்டு விட்டது. கோபத்தினுல் அவருடைய காதுகள் மேலும் கீழுமாய் ஏறி இறங்கலாயின.

அழுத்தமாய்ப் பூமியில் பாயும் நடையில், அவர் மெதுவாக நண்பரின் பங்களாவை விட்டுத் தம் இல்லம் திரும்பினர். ஆனல் பாதி வழி செல்லுகையில், கிருஷ்ணஸ்வாமி ஐயர் அனுப்பிய மற்ருெரு நண்பர் அவரிடம் விரைந்து சென்று, "என்ன, கோபங்கொண்டுவிட்டீர்களா? கிருஷ்ணஸ்வாமி ஐயர், தாம் பேசியதை நினைந்து வருந்துகிருர்" என்ருராம். அவ்வளவுதான்; ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய கண்களில் நீர் ஆருகப் பெருகிவிட்டது. நடையும் நண்பருடைய வீட்டை நோக்கித் திரும்பியது. 'ஸ்ரீராமச் சரணம்!' என்று அவருடைய நா அழுத்தமாக உச்சரித்தது அச்சமயத்தில்.

எந்தப் புதிய மருந்தை என் தாய்க்கு வைத்தியர்கள் கொடுத்தாலும் தந்தையார் தம் வாயில்விட்டுப் பார்த்த பின்னரே அவளுக்குக்கொடுக்கும்படிச் செய்வார். அதைக் கண்டு ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரும், "என்ன, கிருஷ்ணஸ்வாமி, எதை வேண்டுமானுலும் வாயில் விட்டுக் கொள்ளுகிருயே! உடம்பில் அது என்ன செய்யுமோ?" என்பார். என் தந்தையின் அந்தரங்கத்தில் உண்டான தவிப்புக்களே அவரை இவ்விதம் எல்லாம் செய்யத் தூண்டின. வெளியில் உள்ளவர்கள் அவரைப்பற்றிப் பேசியது என்னவெனில், அதிக வைத்தியம் செய்து பெண்டாட்டியின் வியாதியை விருத்தி செய்துவிட்டார் என்பதே. உள்ளே கொந்தளித்த உண்மைக் கவலைகளை உலகம் அறியுமா?

1909-ஆம் ஆண்டில் ஸெப்டம்பர் 28-ஆம் தேதி என் தாய் தேகவியோகமானுள். வீட்டிலுள்ள எல்லோரும் குழந்தைகளானமையால் என் தந்தை தம் துயரத்தைக் கரைபுரண்டு ஓடாமல் பாதுகாத்தார். மறுநாட்காலையில் தம் இரண்டு மைத்துனர்களுக்கும் மைத்துனி பிள்ளைக்கும் பேருக்குச் சிறிது பணத் தொகையைக் கொடுத்தார். தங்கள் சகோதரியின் ஞாபகார்த்தமாக அளிக்கப்பட்ட சிறு தொகைகளை அவர்களும் நன்றியுடன் பெற்றுக் கொண்டார்கள். என்றைக்குமே கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் கடமைகளைச்

செய்யத் தவறியவர் அல்லர்; செய்ய வேண்டிய சமயத்தையும் கைவிட்டவர் அல்லர்.

மனைவியின் மரணமும் ஜட்ஜ் ஸ்தானமும் அவருக்கு அடுத்தடுத்து வந்தன என்று அறிவோமல்லவா? வாழ்க்கையின் விநோதங்களில் இதுவும் ஒன்று. சௌகரியங்களும் சிரமங்களும் சில காலங்களில் ஒரே சமயத்தில் ஏற்படுவதை நாம் பார்த்து, அதில் ஈசுவர சம்மதந்தான் என்ன என்று வியப்படைகிறோம். துக்கம் விசாரிக்க வந்தவர்களுக்குச் சந்தோஷச் செய்தியைப்பற்றிப் பேசவும் சந்தர்ப்பம் ஏற்பட்டுவிட்டது. எதிலும் விவேகத்தை வளர்த்தவரானமையால், அவருடைய சித்தம் சற்றும் பதவி உயர்விலும் மனைவி பிரிந்த துக்கத்திலும் ஆழ்ந்துவிடவில்லை. ஆனால், புதிய வேலை காரணமாகப் பிற்பாடு குடும்ப வாழ்க்கை அதிகமாகப் பயன்படத் தொடங்கியது.

குழந்தைகளுடன் பொறுமையாய்ச் சல்லாபம் செய்யவும், அவர்களுடைய மனவளர்ச்சியைக் குறித்துச் சிரத்தை எடுத்துக் கொள்ளவும் அவருக்கு அவகாசம் கிடைத்தது. அவ்வருஷம் வெயில் நாட்களில் கோடைக் கானல் மலை வாழ்க்கை ஒரு மாதத்திலேயே முடிவடைந்தாலும், வீட்டிலுள்ளவர்களுக்குப் பூரண திருப்தியையே அது தந்தது. மலையில் தங்கியிருந்த பொழுது, விடியற் காலையில் எல்லோருக்கும் முன் எழுந்திருந்த அவர், தூங்கும் சிறுவர்களை ஒவ்வொருவராகக் கதை சொல்லி எழுப்புவார். கால் சோம்பேறி, அரைச் சோம்பேறி, முக்கால் சோம்பேறி, முழுச் சோம்பேறிகளின் வரலாறுகளை எடுத்துக் கூறுவார். அதன் உட்கருத்து படுக்கையில் உள்ளவர்கள் எழுந்திருக்க வேண்டுமென்பது. எழுந்திருக்கப் பிடிக்காத தூக்கத்தைக் கலக்கவே அவ்வித ருசியான கதை என்று சிறுவர்களுக்குத் தெரியும். அதோடு நிற்பாரா? அடுப்பில் தோசை வார்த்துக்கொண்டிருப்பதைப் பற்றித் தம் சொந்த ஸாஹித்தியமோ அல்லது சிறு பிராயத்துக் கேள்வி ஞானமோ, பாட்டு ஒன்றைப் பாடுவார்:

"தோசை திங்க லாசையாச்சுதோ—பெண்ணே!
தோசை திங்க லாசையாச்சுதோ."

அந்தப் பல்லவியைப் பாடிக்கொண்டே பற்களால் உதட்டைக் கடித்துக்கொண்டு, சிறுவர்களின் கன்னங்களைக் கிள்ளி முதுகிலும் தட்டுவார். அவர் குழந்தைகளைக் கொஞ்சிய விதமே தனி. அதை அநுபவித்தவர்களுக்கு அவ்விதக் கொஞ்சல் அவ்வளவு சுகமாயிருந்ததில்லை.

மலையில் மிகவும் குளிராயிருந்தமையால் இரவில் தூக்கம் அதிகமாகவே வரும். அவர் மட்டும் வெகு நேரம் வரையிலும் வான சாஸ்திரக் கிரந்தங்களைப் பார்வையிடுவார். அவ்வருஷம் தோன்றிய 'ஹாலிஸ்' வால் நக்ஷத்திரத்தைப் பற்றிச் சொந்த ஆராய்ச்சிகளை நக்ஷத்திர சாலையைச் சார்ந்தவரான ஸ்ரீ நாகராஜ ஐயருடன் அளவளாவியும், பெரிய தூரதிருஷ்டிக் கருவியினால் நக்ஷத்திரத்தைப் பார்த்தும் சந்தோஷிப்பார். நக்ஷத்திர சாலை இளைஞருடன் அவருக்கு ஏற்பட்ட தொடர்பு, மிகவும் உத்ஸாகத்தை எப்பொழுதும் அவருக்கு அளித்தது. நாகராஜ ஐயர் மை இருட்டிலும் நக்ஷத்திரப் பங்களா போகும் வழியிலுள்ள மலைகளைக் கடந்து பயமின்றித் தம்மைக் காண வருவதை மிகவும் பாராட்டுவார்.

தந்தையாரின் தினசரிப் பழக்கம், காலையில் எழுந்ததும் விடுவிடு என்று நடந்து உலாவச் செல்வதுதான். அவருடன் சதா யாராவது பேசிக்கொண்டுகூட நடப்பார்கள். அவருடன் சேர்ந்து சரியாக நடப்பது சற்றுச் சிரமந்தான். கால்கள் வெகு துரிதமாய்ப் பாயும். தம்முடன் சேர்ந்து வருவதற்குத் திகைத்தவர்களை அதட்டித் தம்முடன் சரியாக நடக்கத் தூண்டி விடுவார். நல்ல மழைக்காலம் வரவே, ஒரு சமயம் மேற்குத் திசையிலிருந்து புயற்காற்று அடிக்கத் தொடங்கியது. காற்றின் வேகத்தை எதிர்த்துக்கொண்டு நடப்பதே கஷ்டம்; அதிலும் எதிர்க்காற்றில் மலை ஏற்றங்களில் விரைந்து செல்லுவது மிகவும் சிரமம் அன்றோ? சற்றும் தயக்கமின்றி மலைமேல் காற்றையும் எதிர்த்துக்கொண்டு அவர் நடப்பதைப் பார்த்த எங்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால், அவர் மட்டும் மலையின்மேல் ஏறிவிட்டு அங்கிருந்து, "வாருங்கள், பயப்

பட்டால் அப்படித்தான் கால்கள் தடுமாறும்" என்று உரைத்ததை ஒருவராலும் மறக்கவே முடியாது. வாழ்க்கையிலும் தைரியமுள்ளவர்கள் காட்டும் வழி அதுவேதான். பயந்தவர்களுடைய கால்கள் தடைகளைக்கண்டு தடுமாறுவதுதான் இயல்பாயிற்றே!

வெகுநேரம் வந்தவர்களுடன் பேசுவதால் குளிப்பது முதலிய காரியங்கள் அவருக்கு நேரம் கழித்தேதான் இருக்கும். சவுக்கத்தினால் முதுகை நன்றாகக்கூடத் துடைத்துக் கொள்ள மாட்டார். வேஷ்டியைப் பஞ்சகச்சமாகத் தரிப்பதிலும் வேகமேதான். சாப்பிட உட்காருகையில், அவருடைய முதுகில் துடைக்கப்படாமல் ஜலத்துளிகள் அப்படியே முத்துக்கள்போல் சிதறி இருப்பதை யாவரும் பார்த்திருப்பார்கள்.

இரண்டு வேளைகளிலும் சந்தியாவந்தனம் கணக்காய்ச் செய்வார். மத்தியான்னக் கிரியைகளை அவசரமாகவேதான் செய்து முடிப்பதற்கு நேரிடும். சாப்பிடும்பொழுதுதான் வீட்டிலுள்ளவர்களைக் கவனிக்க அவகாசம் கிடைக்கும். யாரையாவது, ஒரு மாப்பிள்ளையையோ அல்லது மற்ற உறவினரையோ, அவர் அவசரமாய்ச் சில கேள்விகள் கேட்பார். மற்றவர்களுக்குப் பயமாய் இருக்கும். தங்கள் முறை வந்ததும் என்ன செய்வதென்ற திகில்தான். ஏனென்றால் கேள்விகளுக்குப் பதில் சரியாக வராவிட்டால் எதையாவது பலர் முன்னிலையில் அழுத்தம் திருத்தமாகச் சொல்லிவிடுவார். அதனால் இளைஞர்களுக்கு மனம் தவித்துவிடும். எப்பொழுது அவர் இலையைவிட்டு எழுந்திருப்பார் என்றுதான் எல்லோரும் காத்திருப்பார்கள். அவர் நிதானமாகச் சாப்பிட்டவரே அல்ல. ஞாபகமாக ஒவ்வொரு சமயம் கடித்து விழுங்கப் பிரயாசைப்படினும், காரிய அவசரத்தில் எல்லா நிபந்தனைகளையும் மறந்துவிடுவார். அவர் எழுந்து சென்றவுடன் மற்றவர்களின் பேச்சு, சிரிப்பு முதலிய கொண்டாட்டங்கள் தொடங்கும். சுயேச்சையாக அவரவர்கள் இருப்பதும் அவர் போன பின்பேதான்.

வீட்டிலுள்ளவர்களுக்கு அவ்வளவு பயம் இருந்தது யாருடைய பிசகென்று கேள்வி பிறக்கும் அல்லவா? அவரே அதைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். "என்னை எல்லோரும் கண்டு பயப்படுகிறார்கள். நான் அதட்டு வதாகவே அவர்கள் சொல்லுகிறார்கள். எனக்கு மெதுவாய்க் காரியத்தைச் செய்வதைக் காணச் சகிப்ப தில்லை. 'அதைக் கொண்டு வா' என்று நான் சொல்லும் பொழுது, என் தொனியில் உள்ள வேகமே வேலை செய்பவரைத் தாக்கி அவரை இன்னும் துரிதமாய்ச் சொன்னதைச் செய்யவைக்கும் என்று என் மனத்தில் ஏதோ ஒன்று தோன்றி விடுகிறது. அதுவேதான் காரணம் நான் பிறரை ஏவும்பொழுது அதட்டுகிற மாதிரிப் பிற ருக்குத் தோன்றுவதற்கு" என்பார். இவையெல்லாம் நிதானம் ஏற்பட்ட பின்னரே அல்லவா? அவர் எதிரில் இருக்கையில், யாவரையும் ஒரேயடியாய்த் தாக்கி வாரிப் போடத்தான் செய்வார். அவருடைய அபிப்பிராயங்கள் எவ்விதம் இருப்பினும், அவரை நன்கு உணர்ந்தவர்கள் மிகச் சிலரே. அவரை எதிர்த்து வாதாடியவர்களே மற்றெல்லோரையும் விட அதிகமாக அவருடைய சிறந்த அம்சங்களை அறிந்தவராவர்.

குதிரைவண்டியில் கோர்ட்டுக்குச் செல்லுங் காலங் களில் அவருக்கென்று வேகமாய்ப் பறக்கும் குதிரை யொன்று வீட்டில் இருந்தது. அதில்தான் அவசரச் சமயங்களில் செல்லுவார். அதன் வேகத்தை அவரால் எவ்விதம் சகிக்க முடிந்தது என்று யோசித்தாலே அவ ருக்கிருந்த வேகத்தைக் கண்டு ஆச்சரியம் ஏற்படாது. குதிரைகளை அடக்கி ஓட்டுவதிலும் அவருக்குத் திறமை உண்டு. ஒரு நாள் இரட்டைக் குதிரைகள் பூட்டிய வண்டியில் அவர் ஏறிச் செல்லுகையில் வாசலைத் தாண்டியதும் குதிரைகள் ஒன்றோடு ஒன்று முரணாக முறைத்து ஏர்க்காலை விட்டுக் கிளம்பிவிட்டன. அவைகள் வண்டியை எங்கேனும் இழுத்துப்போய் மோதிவிடுமோ என்ற பயத்தால், வண்டியை விட்டு எஜமானர் இறங்கிவிட் டால் நல்லது என்று குதிரைக்காரனுக்குத் தோன்றியது.

வெளியே நின்று பார்த்திருந்தவர்களுக்கும் அவ்விதமே கவலை அதிகரித்தது. ஆனால் வண்டியில் வீற்றிருந்தவர் போட்ட சத்தம் குதிரைகளுக்கும் ஏதோ இடி இடித்தது போல் தோன்றி இருக்கவேண்டும். சாட்டையின் உபயோகத்தையும் விடப் பலமாக அவர் வாய்மொழி இருந்ததனால், குதிரைகளும் அடங்கின. அவருடைய மனவலியின் எல்லை எங்குள்ளது என்பதை எவருமே அறியார்கள். தம்மைப் போலப் பிறரும் இருக்கவேண்டுமென்று எதிர்பார்த்த காரணமே அடிக்கடி பொறுமையை மட்டும் இழந்துவிடுவார்.

அவர் பெண் சாவித்திரிக்கு ரணசிகித்ஸை செய்வதற்கு மயக்க மருந்தை டாக்டர்கள் ஒரு சமயம் கொடுக்க முயன்றார்கள். அவளுக்கு வயசு 13 தான் அப்பொழுது. சிறுமியாதலால் அதிகமாகப் பயந்து விட்டாள். எதிரே நின்றவர், "நீ என்ன இறந்து விடுவாயோ? அப்படிப் போனால்தான் என்ன மோசம்? ஏன் இவ்வளவு பயம்?" என்றதை அவள் என்றுமே மறந்ததில்லை. தம் பெண் என்ற பாசங்கூட அவர் வாய் கூசாமல் சொல்வதை நிறுத்த முடியவில்லை.

இம்மாதிரி எத்தனையோ வசீகரமற்ற குணங்கள் அவரிடம் இருந்தன என்பார்கள். எனினும் அவர்பால் காந்தம்போல் இழுக்கும் குணங்களும் சில இருந்தன. காளிதாஸர் திலீபனை வர்ணிக்கும் பொழுது, "அரசனிடம் பயத்தைக் கிளப்பத்தக்கனவாயும் மனத்தை வசீகரிப்பனவாயும் உள்ள குணங்கள் இரண்டும் சேர்ந்தே இருந்தன; கடலில் திமிங்கிலம் முதலிய பிராணிகளும், ரத்னம், முத்து, முதலிய விலை உயர்ந்த பொருள்களும் இருப்பன போலவே போலும்" என்று வருணித்தார். அவ்விதமே பீம காந்தமான குணங்கள் அவரிடமும் நிறைந்திருந்தன. அவருடைய ஆவேசத்தின் பெருக்கைக் கண்டு பயந்தவர்கள் கொந்தளித்த அலைகளைக் கண்டு மிரண்டு பின் வாங்கியவர்கள். ஆனால் அவருடைய கலக்கமில்லாத மன எழுச்சியைக் கண்டவர்களுக்கு, பூரண சந்திரனின் கிரணங்களால் பொங்கும் ஜலராசியின்

ஞாபகமே மனத்தில் உண்டாகும். சிற்சில காலங்களில் கோபமாகத் தோன்றிய கருத்தே, கவனித்ததும் உயர்ந்த விவேகமாக அவரிடம் மாறியிருப்பதை அறிவாளிகள் அறிந்தார்கள்.

உத்தியோகத்தில் அவர் இருந்தகாலம், வீட்டிலுள்ள வர்களுக்கு அவருடைய பூரணப் பழக்கமும் அநுக்கிரஹமும் கிடைக்க அவகாசம் அளித்தது. சிறுவர் சிறுமிகளின் பழக்க வழக்கங்களிலும் மிகவும் கவனமாய் அவர் இருப்பார். அவர்களில் யாராவது வெளியே சென்று, வீடு திரும்ப நாழிகையானுல்கூட மனக் கவலைப் பட்டு விடுவார். ஒரு நாள் சாயந்தரம் எங்களில் சிலரும், அத்தான் ராமசுவாமி ஐயரும் புதியதாக வாங்கி யிருந்த மோட்டார் காரில் ஏறி வெளியே சென்றிருந்தோம். காரை ஒரு மலைஅடிவாரத்தில் நிறுத்திவிட்டுக் கால் நடையாக அங்குள்ள மலைஉச்சியொன்றிற்கு ஏறிச் சென்றோம். என் தமையனும், எங்கள் உறவினரும் தனியே ஒரு பக்கம் செல்ல, மற்றவர்கள் மற்றொரு பக்கம் சென்றார்கள். பிறகு திரும்பி வந்து காரில் ஏறுகையில் இருட்டிவிட்டது. வேறுபக்கம் சென்ற இருவரையும் காணவில்லை. என் சகோதரி பாலசுந்தரி பயந்து விட்டாள். இருட்டில் இருப்பது அவளுக்கு அச்சமாயிருந்தது. ஆகையால் அடிக்கடி காரின் எச்சரிக்கை செய்யும் குழாயினின்றும் தொனியைக் கிளப்பிப் பார்த்து விட்டு மற்றவர்களை அழைத்துக்கொண்டு வீடு திரும்பினாள்.

இதற்குள் கவலையினால் தந்தை வாசலில் நடை இட்டுக் கொண்டிருந்தார். விவரங்களைத் தெரிந்து கொண்டு, வராதவர்களைத் தேட விளக்குடன் ஆட்களை அனுப்பினார். ஆனால் வழியிலேயே அவ்விருவர்களையும் சந்தித்ததால், அவர்களை வண்டியில் ஏற்றிக்கொண்டு ஆட்கள் வீடு திரும்பினார்கள். உறவினர் ராமசுவாமியிடம் என் தந்தை மிகவும் கோபம் கொண்டார். "ஏண்டா ராமசுவாமி, குழந்தைகள் கூட வருகிறார்களே என்று உனக்குத் தோன்றவில்லையா?" என்றார். பதிலுக்கு அவர், "வேண்டுமென்றுதான் நாங்களிருவரும் சும்மா

பதில் சொல்லாமல் வந்தோம். நாங்கள் வருவதற்குள், அவர்கள் அவசரப்பட்டு வீட்டுக்கு வந்துவிட்டால் யார் ஜவாப் சொல்வது?" என்று சிரித்துக்கொண்டே சொல்லி விட்டார். உடனே, "நீ பெரியவனல்லவா? உனக்குச் சிறியவர்களுடன் என்ன போட்டி?" என்று அவர் அதிகம் கோபித்துவிட்டார். சற்று நேரத்திற்கெல்லாம் மாம்பழம் ஒன்றை நறுக்கித் தாம் சாப்பிடுகையில், "இந்தா" என்று இரண்டு துண்டங்களை உறவினரிடம் நீட்டவும், மிகுந்த ஹாஸ்யச்சுவை கொண்ட அவரும், "இது என்ன, வைததற்கு மாற்று மருந்தா?" என்றார். அவ்வளவுதான் 'கொல்' என்று எல்லோரும் நகைக்கையில், என் தந்தை தாமும் சேர்ந்துகொண்டு சிரித்துவிட்டார். கோபத்தை ஒருவித வேஷமாகவே அவர் பூண்டார் என்பது அவரிடம் நெருங்கிய சிலரின் எண்ணம். அவருடைய உண்மையான சுபாவம் இளகிய மனந்தான்.

எவ்வளவோ பேச்சும் வாக்கு வாதங்களும் தினந்தோறும் சாயங்கால வேளைகளில் எங்கள் கிருஹத்தில் நடந்துகொண்டிருக்கும். நாள் தவறினாலும், சாயங்காலம் நண்பர்களுடன் சிறிது காலமாவது வாசலில் பேசுவது தவறாது. வெளியில் சொற்பொழிவாற்றிய தினங்களில்கூட மறுபடியும் சிறிது நேரம் வீட்டு வாசலில் உட்கார்ந்து பேசிய பின்னரே உணவு கொள்ளச் செல்லுவார். பங்களாவின் முன்னால் உள்ள மணற்பரப்பில் சாய்வு நாற்காலியில் அவர் சாய்ந்துகொண்டிருப்பதும், நெருங்கிய மித்திரர்கள் அவரைச் சூழ்ந்துகொண்டு உட்கார்ந்திருப்பதுமே வழக்கமான காட்சி. பிரமாதமான வாய் வெடிகளின் ஓசையும், இருதயத்தில் மறைவில்லாததை உணர்த்தும் பெருஞ் சப்தமும் சிரிப்புமே அண்டை அசலில் உள்ளவர்களுக்குக் கேட்கும்.

வீடு இடிந்துவிடும்போல் உரக்கப் பேசுவார், சில வேளைகளில். ஆனால் மனத்தில் ஒருவரிடமும் பகை இராது. சாப்பாட்டுக்கு மட்டும் தினம் இரவில் தாமதமாகிவிடும். இம்மாதிரித் தாமதமாக உண்ணும் உணவு அவருடைய உடம்பிற்கு ஏற்றதல்ல என்பது என் மூத்த



பாலசுந்தரி சுப்பலக்ஷ்மி வி. கிருஷ்ணஸ்வாமி பாலசுப்பிரமணியன் சாவித்திரி
சந்திரசேகரன் ஐயர் ஸரஸ்வதி
(ஆசிரியர்) (1911)

சகோதரி பாலசுந்தரியின் எண்ணம். சிறுவர்கள் மட்டும் சாப்பிட்டுவிட்டு உறங்கப் போய்விடுவார்கள். மூத்தவள் ஒருத்தியே அவருக்காகக் காத்திருப்பாள். அவரும் இரவு எவ்வளவு நாழிகை ஆயினும், குளித்து விட்டுத்தான் போஜனம் செய்வார். உணவு கொள்ளுமுன் தவருமல் மூத்த பெண்ணை உடன் அழைத்துச் செல்வார். அதிக நாழிகையினுல் தம்மீது அவள் கோபம் கொண்டிருப் பதையும் உணர்ந்து மிருதுவாக, "பாலம், பாலம்" என்று பெயரைச் சொல்லி அவர் அவளைத் தட்டி அழைப்பதை இப்பொழுதும் செவிகள் கேட்பது போலிருக்கிறது. அவர் குரலில் தொனித்ததும் மன்னிப்பு விண்ணப்பந்தானே?

மூத்த பெண்ணிடம் அவருக்கு மேன்மேலும் மரி யாதை அதிகமாகிக் கொண்டே வந்தது. வயசு இருபது ஆகாதவள், தாயில்லாத ஓர் இளம் குடும்பத்தை எவ்வளவு மேன்மையாகப் பாதுகாத்து வருகிருள் என்பதே அவ ருடைய எல்லையற்ற மதிப்பிற்குக் காரணம். உண்மையில் அவர் இறந்த பிறகும், பத்து வருஷங்களுக்குக் குறை வில்லாமல், குடும்பத்தை அவள் சம்ரக்ஷித்ததை அவர் பார்க்கவில்லையே என்றுதான் பலருக்கும் வருத்தம். தாய் தகப்பன் அற்றவர்களுக்குக் கடவுள் கைகொடுத்து உதவுவார் என்றபடி அவளுடைய வடிவத்தில் கடவுளே தாயாகச் சகோதர சகோதரிகளுக்கு ஏற்பட்டார் என்ருலும் அது மிகையாகாது.

பெரிய கருத்துக்களையும், அரிய நண்பர்களையும் தம் ஆயுட்காலத்தில் பெற்றவருக்கு, எட்டும் இரண்டும் அறி யாத சிறியவர்களைக் கவனிக்க முடிந்ததும் அவர்களுக்கு ஓர் அதிருஷ்டந்தான். எவ்வளவுதான் தகப்பனுர் என்ற ஞாபகம் இருப்பினும் சிறுவர்களில் ஒவ்வொருவரும் அவரிடம் அடக்க ஒடுக்கமாகத்தான் பழகி வருவார். ஏதோ ஒன்று அவர்கள் உள்ளங்களில் சொல்லியது: "அவர் உங்கள் அப்பாதான்; ஆயினும், நீங்கள் போற்றுவதைவிட அவரை உலகமே அதிகமாகப் போற்றுகின்றது" என்று.

## அத்தியாயம் 29

### நட்பின் பாசம்

''பொன்னும் துகிரும் முத்தும் மன்னிய
மாமலை பயந்த காமரு மணியும்
இடைபடச் சேய ஆயினும் தொடைபுணர்ந்து
அருவிலை நன்கலம் அமைக்கும் காலை
ஒருவழித் தோன்றியாங்கு என்றும் சான்றோர்
சான்றோர் பாலர் ஆப''

—புறநானூறு.

இந்திய ஊழியர் சங்கத்தை வளர்ப்பதிலும், அதில் பல அங்கத்தினர்களைச் சேர்ப்பதிலும், இன்னும் சென்னையிலேயே அதற்கு ஒரு கிளை இல்லம் தயாரிப்பதிலும் கோகலே 1910-ஆம் வருஷம் முழுவதும் கவனம் செலுத்தினர். என் தந்தை அச்சங்கத்தின் முன்னேற்றத்தைத் தாமும் பூரணமாக விரும்பினர். அது சம்பந்தமாகச் செய்ய வேண்டியவை அனைத்தையும் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளிடமிருந்தும், கோகலேயிடமிருந்தும் அறிந்து தம்மாலான உபகாரத்தைச் செய்ய முன்வந்தார். அவர் நீதிபதியாக இருந்தால் அச்சங்கத்தின் அபிவிருத்தியில் ஊக்கத்தைக் காட்டுவது அரசாங்கத்திற்கு விரோதம் எனக் கருதப்படாது. மேலும், கோகலே வேறு அடிக்கடி, "இந்திய மக்கள் வருங்காலத்தில் நன்மை பெறவேண்டுமானல், இங்கிலாந்துடன் ஒத்துழைத்தேதான் அதை அடைய முடியும்; அதுவே நியாயமுமாகும்" என்று நண்பரின் மனத்தில் பதிய வைத்துக்கொண் டிருந்தார். முக்கியமாகச் சாஸ்திரிகளே சென்னைக் கிளைச் சங்கத்தில் சிரத்தை எடுத்துக்கொள்வது சரி என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் அபிப்பிராயப்பட்டதால், அவரையே கோகலே அங்கு அனுப்புவதாக ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினர்.

''இந்திய அரசியல் இயக்கத் துறையில் இறங்கும்படி உங்கள் முதல் கோஷ்டி அங்கத்தினர்களை ஏவியதில் எனக்குப் பரம

திருப்தி. சென்னை ஸ்தாபனத்தை நிர்வகிக்க, ஸ்ரீமான் சாஸ்திரிகளைத் தவிர வேறு ஒருவரும் தகுதிவாய்ந்தவர் அல்லர். இங்கு எதிலும் கவர்ன்மெண்டாருக்குச் சந்தேகமே; இதில் ஏதாவது அதிகாரவர்க்கத்திற்கு விரோதமான சூழ்ச்சி இருக்கலாமென்று கூடச் சந்தேகம் ஏற்படலாம். சென்னையில் உள்ள ஊழியர் சங்கம் அவர்கள் சந்தேகத்திற்கு உள்ளாகலாம். ஆனால், நீங்கள் விதித்திருக்கும் முறைகளும், நிபந்தனைகளும் மிகவும் பொருத்தமாயும் சந்தேகமே சிறிதுகூட ஏற்படாவண்ணமும் இருப்பதால், ஒருகால் அதிகாரிகளின் விசாரணைகளுக்கு இடமின்றி இருக்குமோ என்று எண்ணவேண்டி இருக்கிறது. என்னால் செய்வதற்கு முடிந்தது மிகவும் சொற்பம். ஆனால் என்னிடமிருந்து ஏதாவது ஆலோசனை அங்கத்தினர்களுக்கு அவசியம் வேண்டியிருந்தால், அதைக் கொடுத்து உதவ நான் தயார்''*

என்று எழுதிவிட்டுத் தம்மிடம் கோகலே ஒப்படைத்த இந்திய ஊழியர் சங்கத்தின் சென்னை ஸ்தாபன அங்கத்தினர்களை ஏற்றுக்கொள்வதில் தமக்குள்ள சிரத்தையைப் பலவகைகளில் காட்டினார். தம்முடைய நண்பர்களான பி. ஆர். சுந்தரமையர் முதலியவர்களிடமிருந்து பொருள் உதவி கிடைக்க வழி செய்தார். இந்திய ஊழியர் சங்கக் காரியதரிசிக்குத் தம்முடைய வாக்குறுதியைப் பூர்த்தி செய்யக்கூடிய விதமாகவும் மற்றக் காரியங்களைக் கவனித்து வந்தார்.

இதனிடையில் கோகலேயின் தேகசௌக்கியம் நாளுக்குநாள் குறைந்து வருவதைச் சாஸ்திரிகள் எழுதிய கடிதங்களிலிருந்தும், நேரில் பலதடவைகளில் சாஸ்திரிகள் சொல்லியவைகளிலிருந்தும் அறிந்து, தீராக் கவலை அடைந்தார். எத்தனையோ சமயங்களில் தாமும் கோகலேக்கு எழுதியதில், "வேலைகளையெல்லாம் ஒழித்துவிட்டுக் காச்மீரம்போன்ற குளிர்ந்த பிரதேசத்தில் மூன்று மாதகாலமாவது சுகமாக உங்களால் கழிக்க இயலாதா?" என்று வினவுவார். அதனால் ஒரு பிரயோஜனமும் இல்லை. "உபநிஷத்துக்களில் சொல்லப்படும் சும்மாவிருக்கும் நிலையை உங்கள் மனம் ஒரு பொழுதும் நாடவில்லையா?" என்றார் ஒரு தடவை. மற்றொருதடவை,

---

* கடிதம், 8-10-10.

"இடம் மாற்றுவது எல்லா மருந்துகளையும்விட நல்ல மருந்து. அதனால் உங்கள் நீர்ரோகம் குணமடையும்; உடம்பும் பழையபடி ஆரோக்கியமடையும்"*

என்று உபதேசித்தார். தம்மைப் பற்றியும் அதே குறை இருப்பதால், தாம் சொல்வதில் நண்பருக்கு நம்பிக்கை ஏற்படாமல் இருக்கலாம் என்ற எண்ணம் வரவும்,

"ஒருகால் நான் பிறருக்கு உபதேசிக்கும் மொழிகளை நானே செய்கையில் ஏன் கொண்டு வரவில்லை என்று கேட்கலாம் நீங்கள். அதனால் நான் கொடுக்கும் உபதேசம் மட்டமாகிவிடுமா? கிருஷ்ணஸ்வாமிகளுக்கு என்ன குறைவு இந்நாட்டில்? ஆனால், கோகலே போன்றவர் ஒருவர் மட்டுமேதான் இருப்பது சாத்தியம்!"†

என்று கடைசியாக அன்பு கரைபுரண்டோடும் மொழிகளை உணர்ச்சிப்பெருக்கினால் கொட்டிவிடுவார். பலருக்கு என் தந்தையாரும் கோகலேயும் ஒருவரோடொருவர் பழகியவிதமே தெரியாது. அவர்களிடையே வளர்ந்த நட்பு, உறுதியும் இனிய மணமும் பெற்றதாய் இருந்தமையால் தான் மன அமைதி இல்லாமல் தள்ளாடிய காலங்களில் ஒருவருக்கொருவர் ஊன்றுகோலாகப் பரிணமித்தது.

கோகலேயும் அவ்வரிய நண்பரின் அன்பு மிகுதியை உணராமற்போகவில்லை. ஆனால் என்ன செய்வது? பொதுக் காரியங்களில் ஒருவர் மாட்டிக் கொண்டால் சொந்த அலுவலைவிட மேலாகவே அக்காரியத்தைச் செய்ய வேண்டும் அல்லவா? உயர்ந்த கொள்கைகளை வாழ்க்கையில் கடைப்பிடித்தவர் கோகலே. பதவிக்கும் கௌரவத்துக்குமாகப் பொதுஜன வேலையைச் செய்தவரல்லர். ஆனால் மனச்சாந்தி மட்டும் வேண்டுமென்று அடிக்கடி உள்ளம் ஏங்கி நின்றார். அதனால்தான்,

"ஆம், எல்லா வேலைகளையும் விட்டு எங்கேயாவது என்னால் ஓட முடிந்தால் தேவலை. மனச்சாந்தி வேண்டும் வேண்டும் என்று என் இருதயம் சதா விரும்புவதை நீங்கள் நன்கு அறிவீர்கள். அதற்குக் காலம் வரவில்லையே! என்ன செய்வது?"‡

* கடிதம், 8-10-1910.

† அதே கடிதம், 8-10-1910.

‡ கடிதம், 10-10-1910.

என்பார் அவரும் ஒரு சமயம். குழந்தையைப் போன்ற தூய்மை வாய்ந்த இருதயத்தை இவ்வார்த்தைகளின் மூலம் காண்கிறோம். நண்பருடைய மொழிகளில் அவருக்கு நன்மதிப்பு அதிகம். ஆனால் அவர் விரும்பியபடி செய்ய முடியாததற்குக் காரணம் பொதுஜன சேவைதான்.

பாரதநாடு பழம்பெரும் நாடு. அதிலுள்ள நாற்பது கோடி ஜனங்களின் கஷ்டங்களோ எடுத்துரைக்க இயலாத விதம் இருக்கின்றன. ஒருவர் அல்லது இருவரே தங்கள் முழுமனத்துடனும் தேசத்திற்காகப் பாடுபடு கிறார்கள். அவர்களே தேசத்துக்கும் மக்களுக்கும் பெருமை தேடித் தருகிறார்கள். கோகலேயும், அவரைத் தம் குருவாக என்றும் மதிக்கும் மஹாத்மாவும் பாரத நாட்டு மக்கள் அனைவரையும் தங்கள் எஜமானர்களாகக் கொண்டவர்கள். அவர்களுக்கு ஓய்வு வேண்டுமானால் பொதுஜனமாகிய தெய்வமே வழி காட்டவேண்டும். அது வழிகாட்டாத நிலையில் கோகலே எவ்வாறு ஓய்வை யும் அமைதியையும் பெறமுடியும்?

கோகலே தம் உடம்பை, காந்தி அடிகளைப்போல் வசப்படுத்தியவர் அல்ல. 'சத்திய சோதனை'யில் காந்தி அடிகள், கோகலே தம் மேஜையை விட்டு அகன்று சற்று வெளியில் உலாவக்கூடச் செல்லாமல் சதா காகிதங்களைப் பரப்பிக்கொண்டு அவைகளையே வாசித்தும் சிந்தித்தும் உழன்றதை வருத்தத்துடனே தெரிவித்திருக் கின்றார். முப்பது வருஷங்களுக்குமுன் நீர் ரோகத்தினால் பீடிக்கப்பட்டவர்கள் எல்லோருமே, தேக நிலைமையைப் பாதுகாக்க அறியாதவர்கள் என்று சொல்லலாம். கோக லேயும் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் நீர்ரோகம் அதிகரிக்க அதிகரிக்க விடாமல் மூளை வேலை செய்தவர்கள். ஓய்வையும், அமைதியையும் அவ்விருவரும் பெற ஒருகாலும் வழி செய்துகொள்ளவில்லை.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஒரு வருஷமும் மூன்று மாதங்களுமே நீதிபதி ஸ்தானத்தை அலங்கரித்தார். அணையப்போகும் தீபத்தின் ஜோதி சுடர்விட ஆரம்பித்தது. புதிய இந்தியச் சீர்திருத்தத் திட்டங்களின்படி சென்னைக்

கவர்னர் நிர்வாக சபையின் அங்கத்தினர் பதவியில் அவரை நியமிப்பதென்ற பேச்சுக் கிளம்பியது. நீதிபதியாக இருந்த ஒருவருக்கு, அந்த உத்தியோகத்தில் கிடைக்கும் சம்பளத்தைவிட ஓர் ஆயிரம் ரூபாய் அதிகமாகவே கிடைக்கக்கூடிய மேல்பதவியைக் கொடுப்பது, இனி நீதிபதி ஸ்தானத்தை மேல் உத்தியோகங்களுக்குச் சாதனமாக உபயோகித்துக் கொள்ளச் செய்து விடும் என்று சில நீதி நிபுணர்கள் கவலைப்பட்டார்கள். கோகலேயின் அங்கீகாரத்தை மட்டுமே கிருஷ்ணஸ்வாமி ஐயர் நாடினார். மற்றப்படி அவருக்குச் சஞ்சல புத்தியே இல்லை. கோகலே, "உங்களைப் போன்றவர்கள் கவர்னர் காரியசபை அங்கத்தினரா யிருப்பதனால் ஜனங்களுக்குப் பலவித நன்மைகளைச் செய்யமுடியும்" என்று அதை ஒப்புக்கொள்ளும்படி ஆமோதித்து எழுதியிருந்தார். கோகலேயின் மனச்சாட்சியிலும் தம் அந்தரங்கத்தில் உள்ளது போன்ற தூய்மை இருந்ததை நண்பர் மிகவும் உணர்ந்தார். அதனால் அவர் வார்த்தையையே பெரிதாக மதித்துக் கவர்னரின் நிர்வாக சபை அங்கத்தினராக ஆவதில் ஒருவிதமான சந்தேகமும் கொள்ளவில்லை.

இவ்விஷயத்தில் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய தன்னலத்தைக் கருதும் இயல்பு வெளியாவதாகச் சிலருக்குத் தோன்றும். வேண்டும்பொழுது கோகலேயின் உபதேசத்தைப் பெற்று, வேண்டாதபொழுது அதை நாடாமல் இருந்தால், கெட்டிக்காரத்தனம் அவரிடம் இருந்ததாகவே நினைப்பார்கள். ஆம், நீதிபதிப் பதவியைக் கோகலே வேண்டாமென்று நினைத்தபொழுது அவர் செவி சாய்க்காமல் இருந்தாரென்றே பலருக்கு ஆராயப் புகும் பொழுது தோன்றும்!

வெகுகாலம் கழித்து இவ்விஷயங்களை உள்ளவாறே உணருவது சிரமம். ஆனால் ஒன்று மட்டும் இச்சந்தர்ப்பத்தில் நாம் சொல்ல இயலும். நீதிபதிப் பதவியைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் பெற்றபொழுது, குரு ஸ்தானத்திற்கு உரியவர்களான மணி ஐயர் போன்றவர்கள் அப்பதவியை ஏற்றுக்கொள்ளும்படி தூண்டவே, அதனை

ஒப்புக்கொண்டு விட்டார். ஆனல் பிற்பாடு கோகலே யின் சம்மதம் பெருமையால் அவர் மனம் தவித்ததும் உண்மையே.

அக்காரணத்தாலேயே கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினர் பதவியைத் தமக்கு அளித்தவுடன் கோகலேயிடம் முதலில் தெரிவித்து அவருடைய சம்மதத்தின்படியே நடப்பது, இல்லாவிட்டால் முடியா தென்றே சொல்வது என்று அவர் தீர்மானித்திருந்தார்.

1911–ஆம் வருஷம் ஜனவரி மாதம் புதிய உத்தி யோகம் அவருக்குக் கிடைத்தது; உதகமண்டலத்திற்குக் கோடைக்காலத்தின் பொருட்டு, அரசாங்கத்தார் செல்லும் பழக்கத்தில் தாமும் ஏப்பிரல் மாதம் செல்ல வேண்டி வரும் என்பதை அறிந்திருந்தார். எத்தனையோ புதிய பழக்கங்களும் வேலைகளும் ஏற்படலாமல்லவா? ஆனாலும் அவருக்குச் சதா கோகலேயின் ஞாபகந்தான்: 'ஏன் என்னுடன் சீதளமான மலைவாசத்தைக் கொஞ்ச காலம் கோகலே அநுபவித்துவிட்டுச் செல்லக்கூடாது?' என்ற எண்ணம் ஏற்பட்டதுதான் தாமதம்; உடனே,

"நான் உதகமண்டலத்துக்கு அடுத்த மாதம் செல்லப் போகிறேன். ஆறுமாதகாலமாவது அங்கேயே இருக்கும்படி நேரிடும். அந்த அதி ரமணீயமான இடத்திற்கு நீங்கள் சென்றதே இல்லை என்று நினைக்கிறேன். கோடைக்காலத்தில் நீங்கள் ஓய்வு எடுத்துக்கொள்வதுதான் உசிதம். உங்களுக்கும், உங்களுடன் வரும் நண்பர்களுக்கும் நான் என் விடுதியில் இடம்தரத் தயார். உங்கள் வீட்டில் இருப்பது போலவே எல்லா விதச் சௌகரியங்களையும் செய்துவைப்பதில் நான் கவனம் செலுத்துவேன். எல்லாவற்றையும்விட, உங்களுடன்கூட இருப் பதே எனக்கு மிகுந்த ஆனந்தத்தை அநுபவிக்கவும், பல அரிய விஷயங்களைக் கற்கவும் அவகாசம் கொடுக்கும். ஆகட்டும் என்று சொல்லமாட்டீர்களா?"*

என்று அவர் கோகலேயை வேண்டினார்.

பலருக்கு என் தந்தையைக் கண்டாலே நடுக்கம். சிலருக்கு அவரிடம் சிம்ம சொப்பனங்கூட. அதிலும் அவருடைய அதட்டும் வார்த்தைகளை மட்டும் கேட்ட

* கடிதம், 7—3—1911.

பேர்களுக்கு அவரைப் பின்னால் தூஷிப்பது ஒன்றே இயல்பாயிற்று. உண்மை என்னவோ வேறு விதமாயிருந்தது. அவருடைய மனநிலை, மலை உச்சியின்மேல் வீசும் காற்றின் அதிசயமான விறுவிறுப்பைக் கொண்டது. மலை உச்சியை எட்ட முடியாதவர்கள், அங்குள்ள காற்றின் சுகத்தையும் உணரமாட்டார்கள் அல்லவா? ஆனால் மலைவாசம் செய்தவர்களுக்கு இவை எல்லாம் அரிய அநுபவசித்தமாக இருக்கும். அவர்களே மலைவாசத்தைப் புகழ்வார்கள். நெருங்கிப் பழகியவர்கள் கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கொண்டாடியது, அவ்விதமே இருந்தது. அவர்களுக்கு அவர்பேரில் கோபமே கிடையாது. என்றுமே அவர் ஞாபகம் அவர்களைப் புத்துயிர் பெறச் செய்யும்.

கோகலே எழுதிய பதிலைச் சற்றுக் கவனிப்போம்:

"வரும் கோடைக்காலத்தில் என்னால், உதகமண்டலத்தில் வந்து தங்குவது அசாத்தியம் என்பதைச் சாஸ்திரிகள் உங்களிடம் நேரில் சொல்லியிருப்பார். உங்கள் கடிதம் என்னை உணர்ச்சியில் கொண்டுவிட்டது. என்னால் வரமுடிந்தால் அதைவிட ஆனந்தம் வேறு எனக்கு உண்டா? இரண்டு தடைகள் குறுக்கே நிற்கின்றன: முதலாவது, அடுத்த நவம்பரில் மெட்றிக் பரிக்ஷைக்குப்போகும் என் மூத்த பெண்ணின் வாசிப்புக்கு உதவி செய்வதாக இந்த இரண்டு மாதங்களை ஒதுக்கி வைத்திருக்கிறேன். இரண்டாவது காரணம், என்னால் விலக்கமுடியாதது தான். புதிய இடம் அல்லவா உதகமண்டலம்? பல புதிய ஆட்களையும் அங்கே காணும்படி ஏற்படும். அவைகளில் எல்லாம் எனக்கு மனம் இப்பொழுது செல்லாது. நீங்களோ, கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினர்களில் ஒருவர்; உங்களுடன் இருந்தால் முக்கிய இடங்களுக்கு என்னையும் உங்களுடன் அழைப்பார்கள். பதிலுக்கு அவர்களை நான் பேட்டிகாண வேண்டிவரும். எனக்குப் புதிய அதிகாரிகளைக் காணும் வழக்கம் போதும்! 'அப்பாடா' என்று எங்காகிலும் தனிமையில் இடையூறில்லாமல் இருப்பதே மேல். அடுத்த வருஷம், எல்லாம் சௌகரியப்பட்டால், உங்களுடன் பல நாட்கள் உதக மண்டலத்திலேயே இருப்பேன்."*

ஆனால் மறுவருஷம் எதிர்பார்த்த அவருடைய இன்பமெல்லாம் வெறும் மனப்பாலாகி விட்டது. 'எல்லாம் சௌகரியப்பட்டால்' என்று கோகலே எழுதிய

---

* கடிதம், 8-5-11.

வார்த்தைகள் உண்மையிலேயே வரும் ஆபத்தைச் சூசனை செய்யும் மொழிகளாகி விட்டன. பெரியவர்கள் வாயினால் தவறிச் சொல்லிவிட்டாலும், அதுவும் நடக்கப்போகும் சம்பவத்தின் அறிகுறி என்பது ஓர் அதிசய அநுபவம் அல்லவா ?

உதகமண்டலத்துக்கு ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் பங்க ளூரிலிருந்து வந்து சேர்ந்தார். பங்களூரில் ஒரு பொதுக் கூட்டத்தில் அவர் பேசுவதற்குச் சென்றதும், அங்கே 'பேசக்கூடாது' என்ற ஓர் உத்தரவை மைசூர் சம்ஸ்தானம் அவருக்கு இட்டது. கூட்டத்தில் பேசுவதற்குமுன்பே அவர் தடுக்கப்பட்டார். அதைப்பற்றி அறிந்தவுடன் கோகலேக்குக் கோபமும் வருத்தமும் ஒருங்கே உண்டாயின. கௌரவம் படைத்த ராஜ சம்ஸ்தானமான மைசூர், எதற்காக இவ்விதம் பிரிட்டிஷ் அதிகாரிகளின் வழக்கத்தைக் கையாளவேண்டும்? மைசூர் திவானை ஆனந்தராவ் அவர்களை எழுதிக் கேட்டதற்குச் சரியான பதில் கிடைக்காததாலும், மற்றப்படி மன்னிப்பை வேண்டும் எவ்விதமான தகவலும் அதிகாரிகளிடமிருந்து சீக்கிரம் வராததாலும், இந்திய ஊழியர் சங்கத்திற்குப் பெரிய அபக்கியாதி வந்ததாகவே கோகலே நினைத்து விட்டார்.

இதற்குள் இந்தச் செய்தி கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கும் எட்டியது. உடனே அவரிடமிருந்து தபால் பறந்தது. தம்மால் செய்யத் தகுந்த உதவி அனைத்தையும் அக் காரியத்தில் செய்தார். மைசூர் மஹாராஜாவின் அந்தரங்கக் காரியதரிசி கிருஷ்ணஸ்வாமி ஐயரை நேரில் பார்த்து, வேண்டுமென்று சம்ஸ்தானம் கூட்டத்திற்குத் தடை செய்யவில்லை யென்றும், கோகலேயிடம் அதைச் சொல்லும்படியும் அவரைக் கேட்டுக்கொண்டார். மஹாராஜாவும் அதனால் மிகவும் வருத்தமடைந்ததாக அவர் தெரிவித்தார். கவர்னர் சபை இந்திய அங்கத் தினரை மஹாராஜா அச்சமயம் நேரிலும் வீட்டில் வந்து பார்த்தார். பரம ஸாத்விகரான கிருஷ்ண ராஜேந்திர

உடையார் உள்ளமும் புறமும் ஒன்ருய் என் தந்தையுடன் சிறிதுநேரம் ஸல்லாபம் செய்தார்.

சென்னை அரசாங்க முக்கியக் காரியதரிசியான காம்பெல், கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தூண்டுதலின்பேரில், இருசாரார்களுக்கும் அதிக மனவருத்தமில்லாமல் சமரஸத்தைச் செய்து வைத்தார். மைசூரில் பிரிட்டிஷ் ரெஸிடெண்டாக இருந்தவர் செய்த தொந்தரவுதான் சிக்கல் ஏற்பட்டதற்கு முக்கிய காரணம் என்று பின்னுல் தெரிய வந்தது.

சென்னைக்கு அவ்வருஷம் கோடைக்காலத்தில் கோகலே விஜயம் செய்தார். கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஊரில் இல்லாதபொழுது சென்னைக்கு அவர் வந்தது இதுதான் முதல் தடவை. திருவல்லிக்கேணியில் சைடோஜி தெருவிலுள்ள ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளின் வீட்டில்தான் ஒரு வாரம் தங்கினுர். பட்டணத்தில் பெரிய சொற்பொழிவுகள் இரண்டு செய்தார். எங்கும் கலாசாலை மாணுக்கர்களின் ஆவேசமும், அவரை நேரில் தரிசிக்க வேண்டுமென்ற அவாவுமே தென்பட்டன. பலருக்குக் கட்டடங்களில் ஜனத்தொகை அதிகமாகி இடம் கிடைக்காமல் போனதனுல் கோபமும் வருத்தமும் உண்டாயினவாம். 'கலாசாலை மாணுக்கர்களும், அரசியல் இயக்கமும்' என்பதைப் பற்றிக் கோகலே முதல் நாள் அழகாகப் பேசினுர். அவருடைய இரண்டாவது பிரசங்கமும் பெரியதொரு கூட்டத்தின் முன்னேதான் நிகழ்ந்தது.

"உங்கள் இருவருடைய அபிப்பிராயங்களிலும் இருக்கும் ஒற்றுமைதான் என்ன! கிருஷ்ணஸ்வாமி ஐயர் உங்கள் முதல் பேச்சைப்பற்றி மிகவும் புகழ்கின்ருர். பெரிய மேதாவிகளின் சொற்பொழிவுகளின் முன்னணியில் சேர்க்கப்படவேண்டியது அது என்கிருர். இரண்டாவதை அவர் அடுத்தபடியாகவேதான் வைப்பாராம்; ஏனென்ருல் பிரகிருதத்திற்கு உகந்த வகையில் அது இல்லை என்கிருர்"*

என்று சாஸ்திரிகள் கோகலேக்கு எழுதிய கடிதத்தில் அவர் செய்த உபந்நியாஸங்களைப் பற்றி என் தந்தையாரின் உண்மையான விமர்சனங்களைத் தெரிவித்தார்.

* கடிதம், 3-7-1911.

மாதங்கள் பல கடந்தன. கவர்னராயிருந்த ஆர்தர் லாலி பதவியிலிருந்து நீங்கும் காலமும் கிட்டியது. அவருடைய இடத்தில் சென்னையை ஆள்வதற்கு கார்மைகேல் பிரபு நியமனம் செய்யப்பட்டார். அவரைப் பற்றி ஏற்கனவே கேள்விப்பட்ட நல்ல செய்திகள், அவர் சென்னைக்கு வரவும் மேலும் ஊர்ஜிதமாயின. ஏனென்றால், அவர் கோகலேயின் சொற்பொழிவுகளைத் தாமே அச்சில் வாசிக்கப் போவதாகவும், தமக்குக் கோகலேயை நேரில் அறிமுகப்படுத்தி வைக்கும்படியும் கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கேட்டு விட்டார். கோகலேயை உண்மையில் மதித்த வெள்ளைக்காரரைப்பற்றிக் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு உயர்ந்த எண்ணம் ஏற்பட்டது தவறுதலா? கோகலேயைச் சரியான விதத்தில் அறியப் பாடுபட்ட கவர்னர், தம் நிர்வாக சபை இந்திய அங்கத்தினரையும் சிறிதுகாலப் பழக்கத்திற்குள் நன்கு தெரிந்துகொண்டார்.

கோகலேக்கும் அவர் நண்பருக்கும் ஏற்பட்டிருந்த ஒற்றுமை யுணர்ச்சியை நாம் அறிவதற்குச் சாஸ்திரிகளின் கடிதங்களே சான்றாகும். நண்பர் என்ற காரணம் மட்டுமா அல்லது உலகிலேயே சிறந்தவர்களில் ஒருவர் என்ற எண்ணமும் கலந்ததுதானா, கோகலே பெரியாருக்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரைப்பற்றி அவ்வித உணர்ச்சிப் பெருக்கு வெளிப்பட்டது என்பதை அறிவதும் சிரமமன்று. கோகலேயின் பரிசுத்த இருதயமும் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் களங்கமற்ற மனச்சாட்சியும் வேறு விதமான உறவை விரும்புவது சாத்தியமா?

நட்பின் நறுமணம் வாழ்க்கையின் இன்பத்தைப் பெரிதுபடுத்தும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் வாழ்க்கையையும் தாண்டி அப்பால் நிற்கும் பெரிய தத்துவத்திற்கு வழி காட்டுவது, நட்பையும் உலகின்பால் செய்யும் ஊழியத்தில் தோயவைப்பது ஒன்றுதான். பொதுஜன சேவையில், அவ்வித நட்பின் எல்லையைக் கண்டு பிடித்த இருவர்களை ஒருங்கே சேர்ந்து காணவும், அறியவும் முடிந்தவர்களே பாக்கியசாலிகள்.

## அத்தியாயம் 30

### இலக்கிய ருசியும் கலை அபிமானமும்

"ஆராய்ந்து அமைவுடைய கற்பவே
பாலுண் குருகின் தெளிந்து" —நாலடியார்.

இலக்கியம் என்பது அச்சிட்ட புஸ்தகங்களில்தான் இருப்பதென்பது சிலருடைய நினைப்பு. சிலருக்கு இலக்கிய ருசி என்று ஒன்று உண்டு என்பதே தெரியாது. இவ்விரு வகையினருக்கும் இடையே ஒரு சிலர் மட்டும் வாழ்க்கைத் துறையிலும் ஏடுகளிலும்-இரண்டிலுமே பெரிய அநுபவம் ஏற்படுவதாக நினைக்கும் மனப்பாங்கைப் பெற்றிருக் கிறார்கள். அவர்களுக்குப் புஸ்தகத்தில் அச்சிடப்பட்ட காரணத்தினால் மட்டுமே இலக்கிய உணர்ச்சி, கருத்தில் தோன்றுவதில்லை. எத்தனையோ உயர்ந்த பண்பாட்டை அளிக்கும் சம்பவங்களும், மனித இயல்புகளும் உலகில் தோன்றி அச்சில் ஏறாமலே இருப்பதை உணரும் பொழுதுதான், புஸ்தகங்கள் நமக்குத் தரும் நுகர்ச்சியைப் போலவே நம்மைச் சுற்றி உள்ளவைகளும் நமக்குத் தரும் என்று விளங்கும். நம்மைச் சுற்றியும் கூர்ந்து கவனித்தால் பலவிதமான கருத்துக்கள் நம் உள்ளத்தில் செழிக்க இடம் உண்டு என்பதை அறிய முடியும்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரை நினைக்குங்கால் அவருடைய இலக்கியப் பற்று, பொறுக்கிய சில புஸ்தகங்களை மட்டுமே கவனிக்க அவரைத் தூண்டியது என்று சொல்லலாம். அவரும் அவர் சகோதரரும் சிறு பிராயத்திலேயே குலா சாரத்தைப் பின்பற்றி, வால்மீகி ராமாயணத்தைப் பாரா யணம் செய்வார்கள். மூத்தவரின் இருதயம் இளகியது; அயோத்தியா காண்டத்தைப் பாராயணம் செய்யும்போது, அவர் இருகண்களினின்றும் கண்ணீரைத் தாரை தாரை யாகப் பெருக விட்டுக்கொண்டு மேலே வாசிக்க முடியாமல் திண்டாடுவாராம். அவருடைய இளைய சகோதரர் அநுஷ்டுப்பு விருத்தங்களை வெகு கம்பீரமாய்

வாசிப்பதைக் கேட்டவர்களுக்கு வடமொழியின்பால் தனிப் பிரேமை ஏற்படுவது சகஜம். சிறிய வயசில் ராமாயண பாராயணத்தைச் செய்த பழக்கம் அவர்களுக்கு வீண் போகவில்லை. நம் தேசம், நம் பண்பாடு என்னும் கருத்து என்றைக்கும் அவர்களுக்கு உண்டு. அதற்காகப் பிறநாட்டினரின் இலக்கிய நிதிகளை அநுபவிக்காதவர்கள் அல்ல. சிவஸ்வாமி ஐயரும் என் தந்தையும் பள்ளிக்கூடத்தில் ஆங்கிலப் பயிற்சி செய்யும் காலத்திலேயே "வெள்ளை புனைந்தாள்"* என்னும் ஆங்கில நாவலை வாசித்துவிட்டு, அதை எழுதியவரின் திறமையைக் கொண்டாடிப் பேசினதாக ஸர் சிவஸ்வாமி ஐயர் ஒரு தடவை சொல்லி இருக்கிறார்.

மில்டனின் உயர்ந்த செய்யுட்களை என் தந்தை மிகவும் போற்றுவார். சில வரிகள் அவர் மனத்தைவிட்டு அகன்றதே இல்லை. ஒரு சமயம் வீட்டில் ராமாயணக் காலக்ஷேபம் ஒன்று நடக்கையில், சுலோகங்களுக்குப் பண்டிதர் அர்த்தம் சொல்வதை நிறுத்தி, அவரும் அவருடைய தமையனாரும், 'மேலே வாசியுங்கள் சுலோகங்களை' என்றார்கள். அவர்களுக்கு அர்த்தம் சொல்வதுகூட வால்மீகியின் அழகைக் குறைப்பதாகத் தோன்றியது. அங்கு உட்கார்ந்திருந்த அண்ணா மாப்பிள்ளை ஒருவர் எழுந்து வெளியே சென்று விட்டார். 'இவர்களுக்கு மட்டும் புரிந்தால் போதுமோ! மற்றவர்களுக்குத் தெரிய வேண்டாமா?' என்றார் அவர் மனக் குறையாக. அதைக் கேட்டுக்கொண்டே வந்த கிருஷ்ணஸ்வாமி ஐயர், "சரி, உனக்கு மில்டனுடைய 'பாரடைஸ் லாஸ்ட்' பி. ஏ. வகுப்புக்குப் பாடமல்லவா? எங்கே சொல்லு அர்த்தம்" என்று முப்பது வரிகளை ஞாபகத்திலிருந்தும் வேகமாய்த் தவறில்லாமல் சொன்னார். மாப்பிள்ளைக்கு எதிர்பாராத உபசாரம் இவ்விதம் வரும் என்று தெரியாது.

சிறு வயசிலேயே இலக்கியப்பற்று இருந்தால்தான் வயசாகியும் உணர்ச்சிதரும் காவியங்களை நுகரமுடியும். அயோத்தியா காண்டத்தில் ராமன் காட்டுக்குப் போகும் தறுவாயில் தசரதர் தவித்த நிலையையும்,

* 'The woman in white' by Wilkie Collins.

தேவாரங்களிலும் திருவாசகங்களிலும் அவருக்குப் பற்று அதிகம் உண்டு. ஒரு முறை ஒரு பெரிய ஸம்ஸ்கிருத பண்டிதரோடு அவர் பேசிக்கொண்டிருந்தார்; "பக்தி ரஸம் தேவாரத்தில் இருப்பதுபோல் வேறு எதிலும் இல்லை" என்று அவர் சொன்னார். ஸம்ஸ்கிருத பண்டிதர், "ஸம்ஸ்கிருதத்தில் ஆயிரக் கணக்கான சுலோகங்கள் மகான்களால் இயற்றப் பெற்றிருக்கின்றன. அவற்றின் அர்த்த புஷ்டியும் பெருமையும் அநந்தம்" என்று சொன்னார். கிருஷ்ணஸ்வாமி ஐயர், "நானும் அவைகளைப் படித்திருக்கிறேன். உயர்ந்த அர்த்தம் அவைகளில் இருப்பது வாஸ்தவந்தான்; ஆனால் பாடின மாத்திரத்தில் மனத்தைக் கௌவிக்கொண்டு உருக்குவதில் தேவார திருவாசகங்களுக்குச் சமமாக எதுவும் இல்லை. ஒன்று இரண்டு இருக்கலாம். இந்த உருக்கம் அவைகளில் இல்லை" என்று அழுத்தமாகக் கூறினார்.*

தம்முடைய தமையனாருடன் இவ்விஷயத்தைக் குறித்து ஒரு சமயம் வாதாடியபோது தம் அபிப்பிராயத்தை நிலைநாட்டியதையும் நாம் அறியும்பொழுது, இலக்கிய ருசியைப் பெருக்குவதில் அளவுக்குமேல் பாஷாபிமானம் இருப்பது தவறு என்பதும், அதிலும் பகுத்தறிவையும் நியாயமான மதிப்பையும் வைத்திருப்பது விசேஷமான அறிவின் ஆற்றலையே வெளிக்காட்டுகின்றது என்பதும் நன்கு தெரிகின்றன.

உணர்ச்சியின் திவலைகூட இல்லாத மனிதர்களுக்கு உணர்ச்சியைப் பற்றிப் பேச உரிமையே இல்லை. ஆனால் உலகில் ஒருவரையும் இவ்வித அபசாரங்களுக்காகத் தண்டிக்க வகை இல்லாத தோஷமே, இஷ்டம்போல் இலக்கிய சுகங்களைப் பற்றிப் பலரும் வாதாடுகிறார்கள். இலக்கிய விஷயத்தில் மரபு ஒன்று அவசியம் ஏற்பட வேண்டும். சமீப காலத்து இந்திய இலக்கிய வளர்ச்சி மேல் நாட்டு வாசனையைச் சற்று அளவுக்குமேல் கொண்டுள்ளதென நிர்ணயிக்க இடமிருக்கிறது. புதிய நாடக பாத்திரங்களைச் சிருஷ்டிப்பதிலேயும், சிருஷ்டித்த

* 'நினைவுமஞ்சரி', பக்கம், 143.

பாத்திரங்களில் சுபாவ விசேஷங்களை அமைப்பதிலுமே இலக்கியப் பெருமை வளர்கின்றது என்பர் சிலர். பிரசித்த கதா நாயகர்களை வைத்துச் சந்தர்ப்பங்களை மட்டும் வேண்டிய இடங்களில் மாற்றுவதில் நம் நாட்டுக் கவிமணிகள் அநேகமாகத் தங்கள் சொந்தக் கற்பனைகளை உபயோகித்திருக்கிறார்கள். என் தந்தையின் இருதயமும் ரஸாநுபவத்தில் திளைத்தமையால் புதிய பாத்திரங்களைச் சிருஷ்டி செய்வதை வெறுக்காவிடினும், பழைய பாத்தி ரங்களை வைத்து இயற்றப்பட்ட கதையையும் நாடகத் தையும் கண்டு சலிப்பை அடையவில்லை.

தம்மிடம் மிகவும் விசுவாசம் கொண்டவரும், வட மொழி வல்லுநருமான பண்டித லக்ஷ்மண சூரி என்னும் அறிஞரைப் பீஷ்ம சரிதத்தையும், சில உயர்ந்த மஹா பாரதக் கதா பாத்திரங்களைப்பற்றியும் எளிய வசன நடையில் எழுதும்படி அவர் கேட்டுக் கொண்டார். பீஷ்மருடைய சரித்திரம் மேலோர் உள்ளத்தை ஆட் கொள்ளத் தக்கது. பீஷ்மரைப்பற்றிப் பிரசங்கம் செய்யும் போது ரானடே ஹாலில் ஒரு சமயம் உணர்ச்சியுடன் கிருஷ்ணஸ்வாமி ஐயர் சொன்ன சொற்களே, பலருக்கு அவருடைய சிந்தனைகள் பேராண்மையைச் சுற்றின என்பதைப் புலப்படுத்தினவாம். தம் புதல்வி சாவித் திரிக்குத் தமிழில் எழுதச் சற்றுச் சக்தி பிறந்ததும், பீஷ்ம சரித்திரத்தினின்றும் ஒரு பகுதியை வடமொழி யிலிருந்து மொழிபெயர்த்துப் பார்க்கும்படி தந்தையார் அவளைத் தூண்டினார். அவளுக்கு வயசு 14 ஆகவில்லை அப்போது. ஆனாலும் அறிவின் விசேஷத்தினால் தந்தை சொன்னதைத் தட்டாமல் செய்து பார்த்தாள். சிறு வயசில் எழுதிய கட்டுரையின் குணம் எவ்விதமாயினும், அதைப் பார்த்து அவருடைய மனத்தில் உவகை பொங்கியது. எல்லாப் புராண பாத்திரங்களையும்விடப் பீஷ்மரிடம் அவருடைய உள்ளம் சதா ஈடுபட்டதை அறிந்த அவருடைய நண்பரான ஸ்வாமி ப்ரேமானந்த பாரதியாரும், "கிருஷ்ணஸ்வாமி, நீ ஒருகால் ஜன்மாந் தரத்தில் பீஷ்மனாய்ப் பிறந்திருக்கவேண்டும்; வேறெவ

ரிடமும் காணாத மோகம் அந்தக் கதா பாத்திரத்தில்தான் உனக்குக் காண்கின்றது!" என்று சொல்லிப் பொருமி யதை எங்கள் வீட்டிலுள்ள எல்லோரும் அறிவார்கள்.

அவ்வருஷம் 'டில்லி தர்பார்' கொண்டாட்டத்திற்குப் பலத்த ஏற்பாடுகள் ஒவ்வொரு மாகாணத்திலும் நடை பெற்றன. சென்னையிலும் டிசம்பர் மாதம் 12-ஆம் தேதி சாயங்காலம் கவர்னர் மாளிகையின் பெரிய ஹாலில் பலர் கூடி அரசரின் முடி சூட்டு விழாவைக் கொண்டாட ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. மன்னருக்கு முடி சூட்டும் விவரங்களையும் வாழ்த்துக்களையும் வடமொழியில் இயற்றிய பண்டித லக்ஷ்மண சூரிக்கு அரசாங்கம் சம்மான மாகப் பண முடிப்பைக் கொடுக்க உத்தேசித்ததும் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் தூண்டுதலாலேதான். பிற்பாடு "ஜார்ஜ் தேவ சதகம்" என்ற வடமொழிக் காவியத்தைப் பண்டித லக்ஷ்மண சூரி இயற்றியதையும், கிருஷ்ண ஸ்வாமி ஐயர் மிகவும் அதைக் கொண்டாடினதையும் அப்பண்டிதர் தாம் சாகும் அளவும் நினைத்திருந்தார். கிருஷ்ணஸ்வாமி ஐயர் வடமொழியில் உயர்ந்த ஞானம் படைத்திருந்தவராயினும், பண்டிதர் அப்புஸ்தகத்திற்கு முன்னுரையை எழுதும்படி அவரைக் கேட்டதும், "உங்களுக்குச் சிவஸ்வாமி ஐயரின் சம்ஸ்கிருத பாண்டித்தியம் தெரியாதுபோலும்! எனக்கு இருப்பதைக் காட்டிலும் அவருக்கே அதிகம் உண்டு. அவரிடம் நன் மதிப்பைப் பெறுவது எழுத்தாளரான உமக்கு உண்மை யான கௌரவம் பெற்றதாகும்" என்றார். அப்பண்டிதரும் பிற்பாடு சிவஸ்வாமி ஐயரிடம் நன்மதிப்பைப் பெற்றுப் பிரசுரத்திலும் அதைப் பதிப்பித்துக் கொண்டார்.

வடமொழிப் புலவரும் வரகவியுமான ராதா மங்கலம் நாராயண சாஸ்திரிகளிடமும் கிருஷ்ண ஸ்வாமி ஐயருக்குப் பூரண அன்பு உண்டு. ரசிக்கத்தகுந்த இசையுடன் பல உயர்ந்த சுலோகங்களைச் சாஸ்திரிகள் சதா கவனம் செய்வார். கனவானும் அவைகளைக் கேட்டு அநுபவிப்பார். "சாஸ்திரிகளே, மலைகளைப் பார்க்கையில் உங்களிடம் கவிதைப் பண்புகள் எழுவில்லையா? காளி

தாஸனுயிருந்தால் கிரிப்பிரதேசங்களைப் பார்த்தால் சும்மா இருப்பானு? நூறு சுலோகங்களை இயற்கை வர்ணனை களில் கொட்டி விடுவானே!'' என்பார். அவ்வளவுதான்! சாஸ்திரிகளுக்குத் தலைகால் தெரியாது. 'யாத்ராப் பிரசங்கம்' என்ற பல சுலோகங்களை உடனே நீலகிரி மலை களின் அழகைக் குறித்து வரைந்து விடுவார். இம் மாதிரியே தம்மிடம் வந்த பண்டித சிரேஷ்டர்களை எதையாவது எழுதத் தூண்டிய வண்ணம் இருப்பார் என் தந்தையார்.

இசையின் உள் மர்மங்களை நன்கு உணராவிட்டாலும் அவருக்குச் சங்கீதத்தில் வெறுப்பு இல்லை. லக்ஷண ஞானம் இல்லாவிட்டாலும் தியாகராஜ கிருதிகளில் தனிப் பட்ட கௌரவம் அவருக்கு இருந்தது. 'சாந்தமு லேக சௌக்யமு லேது' என்ற பாட்டின் பல்லவியைக் கேட்டுக் கேட்டு மனம் கசிவார். அவர் மனம் விரும்பிய பற்றற்ற தனி நிலையையே அப்பாட்டு அவருக்கு உணர்த்தியதோ என்றுதான் வெகுகாலம் கழித்து அவருடைய இருதயப் பண்பை நினைக்கையில் நமக்குத் தோன்றுகிறது. இசையுடன் கூடிய தமிழ்ப் பாட்டுக்கள் எழுப்பும் பக்தி பரவசத்தையே அவர் செவிகள் தேடின. நந்தன் சரித்திரக் கீர்த்தனங்களை எவர் பாடினும் கேட்டு, அவைகளின் குன்றாத ஸாஹித்திய மகிமையை வாய்கொண்ட மட்டில் புகழ்ந்து விடுவார். காலஞ் சென்ற கோடீச்வர ஐயர் முதலிய இசை அபிமானிகள் அவரிடம் தங்கள் 'சரக்கு' அவ்வளவையும் கொட்டிவிடுவார்கள். இசை விருந்து ஒரே ஸாஹித்திய பரீக்ஷையாக ஆகிவிடும். பலத்த வாக்கு வாதங்களும், கட்சிப்பிரதி கட்சிகளும் உண்டாகி விடும். இசைக்கலை பிரதானமாயுள்ள கீர்த்தனங்களின் அருமையைப்பற்றி அவர் நினையாதவரோ என்று சந்தேகிக்கவே தோன்றும். ஆனுல் அவைகளுக்கு வேண்டிய பொறுமையும் கேள்வி ஞானமும் அவருக்குச் சற்றும் இல்லை. அதனுல் சில சமயங்களில் பாடுகிறவன் சங்கதிகளைப் போடுகையில், ''எதற்காகப் பாடியதையே திரும்பத் திரும்பப் பாடவேண்டும்?'' என்பார். தலையை

அசைத்தும், கைகளை ஆகாயத்தில் துழாவியும், மற்றும் அங்க சேஷ்டைகளைச் செய்யும் வித்துவான்களின் பாட்டை அவர் பொறுமையுடன் கவனித்தவரே அல்ல. ஓரிடத்தில் சிறு பையன் ஒருவன் சங்கீதக் கச்சேரி செய்கையில், தானே தலையாட்டிக் கொண்டு ஸ்வரம் பாட ஆரம்பித்தான். வந்து விட்டது கோபம் இவருக்கு. "ஏண்டா, சிறு பிராயத்திலேயே இவ்வளவு அமர்க்களம் செய்கிறாயே! வயசானால் என்ன பாடுபடுத்துவாயோ ?" என்று கேட்டு விட்டார்.

சங்கீதப் பயிற்சி மிக்கவர்கள் இம்மொழிகளைச் சங்கீத அநுபவம் இல்லாததால் ஏற்பட்ட குறை என்றேதான் நினைப்பார்கள். மகா வைத்தியநாத ஐயரிடம் ஒருவிதக் கோணல்களையும் தாம் கண்டதில்லை என்று கிருஷ்ண ஸ்வாமி ஐயர் சொல்லித் தம் கக்ஷியை வலுக்க வைப்பார். ஆனால் எல்லோரும் மகாவைத்தியநாத ஐயராக ஆகாத வரையிலும் அவர்களிடம் சங்கீதம் கேட்பதில்லை என்ற விரதத்தை நாம் பூணுவது முடியாதல்லவா ?

இசையின் வசிகர சக்தியை என் தந்தையார் பெரிதும் உணர்ந்தவராதலால், கோயில்களில் தீபஹாரதி செய்யும் காலங்களில் சங்கீத உணர்ச்சியுடன் தோத்திரங்களைப் பாடுவதென்பதை அவர் வற்புறுத்தினார். இடையனிடமும், ஓடம் ஓட்டுபவனிடமும், நெல்லுக் குத்துகிறவளிடமும், பல்லக்குச் சுமக்கின்றவனிடமும் சங்கீதத்தின் அம்சங்களை நம் நாட்டில் மட்டும் காணும் பெருமையை ஒரு பிரசங்கத்தில்* அவர் ஆர்வத்துடன் வெளியிட்டார். இவைகளை அறியும்பொழுது சங்கீத சுகத்தை அவர் விரும்பவில்லை என்று சொல்ல முடியாது. அதற்காகச் சங்கீதப் பயிற்சியை உணர்ந்தவரும் அல்லர். சங்கீதக் கச்சேரிகளுக்குச் சென்றதும் மிகக் குறைவே. எந்த விதமான ஓழிவு நேரத்திற்கும் அவருடைய வேகமான வாழ்நாட்களில் இடம் எங்கே ?

கலைகள் என்றதும், தமிழ் நாடகம் புத்துயிர் பெறுவதில் அவருக்கு ஏற்பட்ட ஆர்வம் நம் மனக்கண்முன்

* 'ஹிந்து', சாதாரண சபையில் பிரசங்கம், 9-11-11.

தெளிவாய் வருகிறது. சென்னைச் சுகுண விலாச சபையார் இன்றுகூட நினைக்கும் விதம் அவர்களுடைய ஊழியங்களைப் போற்றியவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். ஆறு வருஷங்களுக்குக் குறையாமல் சுகுணவிலாச சபையின் அக்கிராசனராக இருந்தது மட்டும் அல்ல; ராவ் சாஹிப் சம்பந்த முதலியாரின் அரிய நாடக மேடைச் சீர்திருத்தங் களில் தம் மனத்தையும் வாஸ்தவத்தில் ஒத்துழைக்கச் செலுத்தியவர். முதல் முதலில் சுகுண விலாச சபை யாரை அவர் தெரிந்துகொண்ட சந்தர்ப்பம் மிகவும் ரஸமானது. 1904–ஆம் ஆண்டில் மஹாதேவ ரானடேயின் ஞாபகார்த்தக் கட்டடத்தின்பொருட்டு அதன் காரிய தரிசியாக இருந்த ஏ. எஸ். பாலசுப்பிரமணிய ஐயர் சுகுண விலாஸ சபையாரை அணுகி, நாடகம் ஒன்றை மேடையில் தயாரித்து உதவும்படிக் கேட்டுக் கொண்டார். அக்காலங்களில் தமிழ் நாடகம் இயற்றுவதில் முழு மனத்துடன் ஈடுபட்டிருந்த பம்மல் சம்பந்த முதலியாரும் "சரி" என்று ஒப்புக்கொண்டு 'ஆஸ் யூ லைக் இட்' அல்லது 'விரும்பியவிதமே' என்ற ஷேக்ஸ்பியரின் அரிய நாடகத் தைத் தமிழில் மொழிபெயர்த்து நடிக்கும்விதம் ஏற்பாடு செய்திருந்தார். அந்த நாடகத்தில், காட்டின் நடுவில் அனேகமாகக் காட்சிகளை வைத்திருப்பதால், அழகிய அடர்ந்த மரங்கள் கொண்ட வெளிப் பிரதேசத்தில் அதைப் போடுவது என்று தீர்மானித்து, மயிலாப்பூர் 'கிளப்' தோட்டத்தில் வசதியான இடம் ஒன்றைத் தயாரித்தார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயர், நடத்தப்போகும் நாடகம் ஷேக்ஸ்பியர் மகா கவியின் நாடகத்தின் தமிழமைப்பு என்று அறிந்த உடனேயே சினங்கொண்டு, "ஷேக்ஸ்பியரையாவது, தமிழில் அமைப்பதாவது! ஷேக்ஸ்பியரைக் கொலை செய்யப் போகின்றீர்களா?" என்று கேட்டார். அதற்குப் பாலசுப்பிரமணிய ஐயர், "நீங்கள் நேராகப் பார்த்தபிறகு தீர்மானியுங்களேன்" என்று புன்சிரிப்புடன் கூறினாராம். "சரி, நான் வருகிறேன்; ஆனால் சிறிது நாழிகைதான் இருப்பேன்" என்று கிருஷ்ணஸ்வாமி ஐயர் கூறிவிட்டார். பிறகு

நடந்தது என்னவெனில், பம்மல் சம்பந்த முதலியார் கதா நாயகனின் வேஷத்தில் நடித்ததையும், அவருடைய சினேகிதரான காலஞ்சென்ற ரங்கவடிவேலு முதலியார் கதாநாயகியாக நடித்ததையும் அவர் மிகவும் அநுபவித்து விட்டு, இரவு ஒன்றரை மணிக்கு நாடகம் முடிந்தவுடன், தாமாகவே வேஷம் தரிக்கும் இடத்திற்கு வந்து நடிகர்களை எல்லாம் பாராட்டிப் பேசினர். புகழ்ந்ததுமல்லாமல், “மழை வரும் போலிருக்கிறது. இப்பொழுது நீங்கள் எப்படிப் பட்டணம் போவது? எல்லோரும் என் வீட்டிற்கு வாருங்கள்” என்று எல்லோரையும் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். எல்லோருக்கும் பால் முதலியவை கொடுத்து, படுக்கை வசதிகளை ஏற்படுத்தி, மறுநாள் காலையில், வண்டி இல்லாதவர்களுக்கெல்லாம் வண்டி வைத்து மரியாதையாக அனுப்பினர்.* சுகுணவிலாச சபையில் சீக்கிரம் அங்கத்தினராகவும் தாமாகவே சேர்ந்து கொண்டார். தமக்குத் தெரிந்தவர்களை எல்லாம் சபையின் அங்கத்தினராகும்படியும் தூண்டினர். பிற்பாடு சபையின் தலைமைப் பதவியையும் அங்கீகரித்து, இறக்குமளவும் அதன் சிறந்த ஊழியங்களிலே கலந்து கொண்டார்.

“சீமையில் பிறந்திருந்தால் இவருக்குப் பெரிய பட்டங்களை அரசாங்கம் வழங்கி யிருக்கும்” என்று சம்பந்த முதலியாரின் நடிப்புத் திறமையை, அதிலும் அமலாதித்தியனாக (ஹாம்லெட்) அவர் வேஷம் தரித்து நடித்ததைப் பிரமாதப்படுத்திப் பேசுவார்.

கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினராயிருந்த காலத்தில் அவர் தூண்டுதலின் பேரில் சபையார் உதக மண்டலத்தில் சில நாடகங்களைப் போட்டார்கள். நாடகத்தின் வசூலைப் பிற்பாடு கவனிக்கையில் சற்றுப் பண நஷ்டம் என்று தெரியவும், கிருஷ்ணஸ்வாமி ஐயர் சம்பந்த முதலியாரைத் தனிமையில் கேட்டு நஷ்டத்தை உணர்ந்து, மறுநாள் காலையே நஷ்டப்பட்ட தொகைக்காக ஒரு செக்கையும், கடிதம் ஒன்றையும்

---

* ஸ்ரீ சம்பந்த முதலியாரின் குறிப்புக்கள்.

அனுப்பினார். சம்பந்த முதலியார் அச்சம்பவத்தை நினைத்துச் சொல்லுகையில், "இந்த ரூபாய் ஐம்பது அவருக்குப் பெரிதல்ல. ஆயினும் அதை அனுப்பிய அவருடைய வேகமும், அதை ஒப்புக்கொள்ளும்படிச் சபையாரைக் கேட்டுக்கொண்ட வினயமும் மிகவும் பெரியனவாகும். அச்சமயத்தில் தெய்வப் புலவர் திருவள்ளுவர், 'பயன்தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின், நன்மை கடலிற் பெரிது' என்றருளிய குறள் என் ஞாபகத்திற்கு வந்தது. இப்பொழுதும் என் ஞாபகத்தில் இருக்கிறது" என்று அழகாகக் குறித்திருக் கிறார்.

இலக்கியமும் கலைகளும் மனித வாழ்க்கைக்கு இன்பம் தரும் கருவிகளென்பதை உணர்ந்த இருதயமே அவை களைச் சரியானபடிக் கொண்டாடும். ஆனால் நம் நாட்டுப் பிரத்தியேக அம்சமான சமய உணர்ச்சியைச் சிகரமாகக் கொண்ட நாடகமும், நாட்டியமும், சங்கீதமும், சிற்பமும் நமக்குப் பலவகையிலும் உயர்வைக் கொடுக்கின்றன. கலைகளைப் பயிலப் போதுமான ஓய்வு நேரமும் மற்ற அலுவல்களற்ற வாழ்க்கையும் வாய்க்காத குறையே அவைகளில் மேன்மேலும் பயிற்சியைச் செய்துகொள்ளக் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு வழி ஏற்படவில்லை. ஆனால் குறுகிய ஜீவிய காலத்திற்குள் எவ்வளவோ பண்பாட்டின் சின்னங்களைப் பெற்றவராகவே அவர் தோன்றினாரென் பதை மறக்க முடியாது. சுகுண விலாச சபையின் முக்கியத் தூண்களில் ஒருவரான ஸ்ரீ வி. வி. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் அவருடைய ஞாபகார்த்தமாக ஆங்கிலக் கவிகள் சில பிற்காலத்தில் எழுதினார். கருத்துடைய அச்செய்யுட் களில் ஒன்றின் சாராம்சம் பின்வருமாறு:

"அவருடைய பதற்றமான தோற்றத்தின் கீழ் மறைந்திருந்த அருமையான குணத்தை அறியாதவரும் உண்டோ? அவரை எல்லோரும் நெருங்கி மட்டும் பழகியிருந்தால், இன்னும் எவ் வளவோ பிரேமைக்குப் பாத்திரமாய் அவர் தோன்றி இருப்பார்!"

பிறர் அவரிடம் காட்டிய பிரேமை போதவே போதாது என்பது ஸ்ரீநிவாஸ ஐயங்காரின் கருத்துப் போலும். அவருக்கு அம்மகானின்பால் அவ்வளவு பக்தி!

பலாப் பழத்தின் மேல்தோல் முட்களோடு சொர சொரப்பாய்த்தான் இருக்கிறது ; ஆனால் உள்ளே தேனினும் இனிதாய்ச் சுவைக்கும் தங்க மயமான சுளைகளைக் காண்கிறோம். கிருஷ்ணஸ்வாமி ஐயரின் இருதயத்தின் கனிவையும், வெளித் தோற்றத்தில் தெரிந்த பொறுமை இன்மையையும் நினைத்து மேற்கூறியவாறு சொன்ன, உவமை ரசிகர்களை அவர் நிறையப் பெற்றிருந்தார். பதற்ற சுபாவம் படைத்தவர்களின் உள்ளங்கள் யாவும் வெளியே பார்ப்பதற்குச் சற்று நாகரீகக் குறைவாகவே தோன்றும். ஆனால், புன்சிரிப்பின் பின் மறைத்து வைத்திருக்கும் ஆலகால விஷத்தை உட்கொண்டு தவிக்கும் மாந்தர்கள் பார்த்ததும் வசீகரிக்காவிட்டாலும் பாதகமில்லை, உண்மைச் சுபாவமே சிறந்ததெனக் கொள்வார்கள்.

# அத்தியாயம் 31

## நிர்வாக சபை அங்கத்தினர்

## I

சென்னைக் கவர்னரின் நிர்வாக சபைக்கு அங்கத்தினராக ஓர் இந்தியரைப் பொறுக்கி எடுக்கும் பொறுப்பு, கவர்னருக்குக் கவலையை உண்டு பண்ணியது என்பதை ஏற்கனவே அறிவோம். ஸர் ஆர்தர் லாலி சென்னைக் கவர்னராக வருவதற்குமுன், தென்னுப்பிரிகாவில் டிரான்ஸ்வால் மாகாணத்துக் கவர்னராக இருந்தவர். அங்கு அவருக்கு நல்ல பெயர் இல்லையென்பதைப் பலர் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் தெரிவித்திருந்தார்கள். அவர் பேச்சு வன்மை உள்ளவர்; ஆனுல் ஆட்சி செய்யும் வழியில் நேர்மையான நடவடிக்கையுள்ளவரல்ல என்பதுதான் அவரைப்பற்றிய புகார். அந்த வதந்திகளை நம்பும்படியே செய்தது, புதிய சீர்திருத்தங்களின் கீழ் அவருடைய முதற் காரியமும்.

ஓர் இந்தியரைக் கவர்னர் நிர்வாகசபைக்கு அங்கத்தினராகப் பொறுக்கும் விஷயத்தில் அவர் செய்த ஏற்பாடு யாவராலும் ஒத்துக்கொள்ள முடியாதபடி இருந்தது. ஒருகால், இந்தியர்களுக்கே மாகாண ஆட்சியில் பங்கு எடுத்துக்கொள்ள யோக்கியதை இல்லை என்று இந்தியச் சீர்திருத்தங்களை எதிர்த்த சீமைச் சீமான்களுக்கு எடுத்துக்காட்டும்வகையில்தான் அவர் மனம்பாய்ந்ததோ என்றுகூடச் சிலர் எண்ணலானுர்கள். ஏனென்ருல் முதல் முதலில், 1910-ஆம் வருஷம் நியமித்த நிர்வாக அங்கத்தினர், காலஞ்சென்ற பொப்பிலி மஹாராஜாவான ரங்க ராவ் காரு என்பவர். அவரைப் பொறுக்கியதால்தான் சிலருக்கு ஸர் ஆர்தர் லாலியின் பேரில் சந்தேகம். கிருஷ்ண ஸ்வாமி ஐயரும் ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு எழுதிய கடிதமொன்றில், சென்னைக் கவர்னர் செய்யும் தவறுகளை விவரித்து எழுதி உடனே அவரும் அவருடைய சகாக்

களும் சீமையில் இவ்விஷயத்தைக் குறித்து ஏதாவது செய்யவேண்டுமென்று எழுதியிருந்தார். ஆகையால் மேலிருந்த, அதிகாரிகள் சென்னைக் கவர்னருக்கு எழுதிய தாக்கீதுகளில் பொப்பிலி மஹாராஜாவைப் பொறுக்கி யதை அறிவாளிகளான இந்தியப் பிரமுகர்கள் ஒப்புக் கொள்ளாததை அவருக்கு அறிவித்துவிட்டார்கள். பாவம் அவர்தாம் என்ன செய்வார்! கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் அவர் கௌரவம் வைத்திருந்தவராயிற்றே! ஜட்ஜாக நியமிக்கப் படாமலிருந்தால், நிச்சயம் கிருஷ்ண ஸ்வாமி ஐயரையே கவர்னர் சபைக்கு நியமிக்க ஏற்பாடுகள் செய்திருப்பார். கல்விப் பயிற்சி இல்லாத ஒரு ஜமீன் தாரை இந்த வேலைக்குச் சரியானவர் என்று கவர்னர், நினைத்ததன் காரணம் வாஸ்தவத்தில் ஒருவருக்கும் விளங்க வில்லை.

"படிப்பும் பொதுஜன வாழ்க்கை அநுபவமும் இல்லாத ஒருவரை நியமித்ததுதான் பிசகாகக் கருதப்பட்டது"*

என்று 'ஹிந்து' ஞாபகப்படுத்தியது.

"எக்காரணங் கொண்டும் பிறருக்குத் தணிந்து போகாத மனப்பாங்கை வளர்க்கவேண்டிய ஒரு நீதிபதிக்கு, மேல் பதவி ஒன்றைக் காண்பிப்பது நாளடைவில் மிகுந்த ஹானியை விளைவிக்கும்"†

என்றும் முன்பே எழுதியிருந்தது.

பிரிட்டிஷ் அரசாங்கத்தார், தங்கள் நாட்டில் பத்திரி கைக்குக் கொடுத்திருக்கும் உரிமைகளை இத்தேசத்தில் இவ்வளவு காலமாகியும் அங்கீகரிப்பது கிடையாது. அதிலும் இன்றைவிட இன்னும் முப்பது வருஷங்களுக்கு முன், பத்திரிகையின் வார்த்தையை எவ்விதம் அவர்கள் கவனித்திருக்கமுடியும்? கவர்னர், மேல் அதிகாரிகள் சீமையிலிருந்து தமக்குக் கொடுத்த சாட்டை அடி யைத்தான் உணர்ந்தார். பொப்பிலி மஹாராஜா தாமாகவே ராஜீநாமா கொடுக்கத் தயாராக இருந்ததால் அவர் இடத்தில் உடனே கிருஷ்ணஸ்வாமி ஐயரை நியமிக்க,

* 'ஹிந்து' தலையங்கம், 16-1-1911.
† 'ஹிந்து', 28-8-1910.

கவர்னருக்கு மிகவும் ஆவலாயிருந்தது. உத்தியோக வேட்டையில் சதா பற்றுள்ளவர்களும் சிலர் அக்காலத்தில் இல்லாமலில்லை. ஓய்ந்திருந்த பேச்சு, மறுபடியும் தலை எடுக்கவே, பல பெயர்கள் எல்லோருடைய வாயிலும் அடிபட்டன. முக்கியமாக, ஜஸ்டிஸ் சங்கரன் நாயரின் பெயரைக் குறித்து நியாயங்களை எடுத்துச் சொல்லத் தொடங்கினார்கள் சிலர். கிருஷ்ணஸ்வாமி ஐயரைப்பற்றிச் சில இடங்களில் மன அருவருப்பு ஏற்பட்டிருந்ததும் உண்மை. 'அவர் தீர்மானக்காரரர். அரசாங்க வர்க்கத்தில் சேர்ந்துவிட்டால், தம் வழியில் அரசாங்கத்தையும் கட்டி இழுத்துக்கொண்டு போவார்; எதிர்த்தவர்களைக் கண்டு பயப்படமாட்டார்' என்றெல்லாம் அவருடைய விரோதிகள் கவலைப்பட்டார்கள்.

ஆனால் இவைகளைப் பொருட்படுத்தாமல், கவர்னர் அவரைக் கூப்பிட்டுக் கேட்டதும், தாம் விடப்போகும் நீதிபதி ஸ்தானத்தில் சுந்தரம் ஐயரைத் தவிர வேறு யாரையாவது கவர்னர் நியமித்துவிடுவாரோ என்ற கவலை அவருடைய அந்தரங்கத்தில் சிரமப்படுத்தியது. ஆகையால் மிகவும் ரகசியமாகக் கவர்னருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் பின்வருமாறு குறித்திருந்தார். கடிதத்தின் பிரதியில் தேதி விவரம் இல்லை. ஆனால் நகலிலுள்ள கையெழுத்து மட்டும் அவருடையது. பின்வருமாறு வரிகள் அழுத்தமாக எழுதப்பட்டிருக்கின்றன:

"நேற்று ஸ்ரீ பி. ஆர். சுந்தரமையர் என்னிடம் சீக்கிரத்தில் நீதிபதிப் பதவியை நான் துறக்கப்போகிறேனுவென்று வினவவும், எனக்குப் பதில் சொல்லாமலிருப்பது மிக்க சிரமமாகிவிட்டது. தாங்கள் அவரைத் தனிமையில் கண்டபோது, நீதிஸ்தலத்தில் சீக்கிரம் காலியாகும் இடத்தில் நிரந்தரமாக உத்தியோகம் பெற அவருக்கு விருப்பந்தானு என்று கேட்டதாகவும் அவர் என்னிடம் சொன்னார். நியாயத்தில் அவருக்கு அதிலிருந்து சில அநுமானங்கள் மனத்தில் ஏற்பட்டன. என்னிடமும் தம் சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ளக் கேட்டார். பலகாலம் பழகிய ஒரு நண்பரிடம் உண்மையை மறைப்பது முறையாக எனக்குத் தோன்றவில்லை. டிசம்பர் மாசத்தில் நமக்குள் பேசியதவ்வளவையும் சொல்லாவிட்டாலும், அதன் சாராம்சத்தை அவரிடம் சொன்னேன். அவ்விதம் சொல்லாவிட்டால் நான் நேர்மை

தவறியவனுவேன். என் சுபாவத்திலும் அதற்கு இடம் இல்லை. தாங்கள் என்னிடம் வைத்த நம்பிக்கைக்கு விரோதமாக நான் ஏதாவது செய்திருந்தால் என்னை மன்னிக்கவேண்டும்.''

கவர்னர் முதலில் என்ன நினைத்தாரோ நமக்குத் தெரியாது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் நண்பரின் யோக்கியதையை அவரிடம் அறிவித்தார். மேலும் அரசாங்க நிர்வாகத்தில் சீக்கிரத்தில் பொறுப்பு எடுத்துக்கொள்ளும் ஒருவருடைய மனப்பாங்கு, பெரிய உத்தியோக நியமனங்களிலும் சரியாகச் செல்லவேண்டும் அல்லவா? பி. ஆர். சுந்தரமையருடைய மனம் வெகுநாட்களாய் நீதிபதிப் பதவியை, தம் தொழிலபிவிருத்தியின் முக்கிய லக்ஷ்யமாகவே கருதிவந்ததையும் நண்பர் நன்கு அறிவார். சுந்தரமையருடைய விரிவான சட்டஞானமும், நியாயவாதத்தில் அவருக்குள்ள தளரா ஊக்கமும் நீதிபதிப் பதவிக்கு அவரை மிகவும் தகுதியுள்ளவராக்கின.

சென்னையில் பத்திரிகைகளும் பல நண்பர்களும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கவர்னர் நிர்வாக சபைக்கு அங்கத்தினராக ஆனதில் திருப்தி அடைந்தார்கள். ஆனால் 'ஹிந்து' மட்டும் அதை ஒப்புக்கொள்ளவேயில்லை. மேலும், அந்த உத்தியோகத்திற்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரை நியமித்த செய்தி ஊர்ஜிதமான பின்னரும் அதற்குத் தகுதியானவர் சி. சங்கரன் நாயர் ஒருவரே என்றும், அது விடாமல் வாதம் செய்தது :

"முதலில் ஒரு மஹாராஜாவைப் பொறுக்கியதே சரியல்ல. அதைத் தொடர்ந்து நீதிபதிப்பதவியிலுள்ள ஒருவரை இந்த ஸ்தானத்திற்குப் பொறுக்குவது அவ்வளவு தவறுதலாகக் கருதப்படாவிட்டாலும், இந்திய நீதிபதிகளில் இந்த ஸ்தானத்திற்கு ஏற்ற குணங்கள் பெற்றவரான ஸர் சி. சங்கரன் நாயரை எடுத்திருந்தால் குறை கூற நேர்ந்திராது. நியாயமாய் அவருக்கு உள்ள தகுதியை அரசாங்கத்தார் கவனியாததைப் பெருத்த ஏமாற்றமாகவே ஜனங்கள் கொள்வார்கள்."*

கிருஷ்ணஸ்வாமி ஐயரைப் பொறுக்கியதுடன் நிறுத்திக்கொள்ளாமல், அவர் நீங்கிய இடத்திற்கு அவருடைய ஆப்த நண்பரையே நியமித்ததையும் சிலர் ஒப்பவில்லை. மேலும் வெகு சுருக்கமான காலத்திலேயே கவர்னர்

* 'ஹிந்து', 16-1-1911.

இதைச் செய்ததால், உத்தியோக வேட்டையில் முனைந்தவர்களுக்கு ஏற்பட்ட மனச்சோர்வு சாமானியமல்ல. அவர்கள் தங்களுக்கு வேண்டிய அவகாசம் கிடைக்கவில்லை என்று வருந்தினார்கள். அவ்விரு புதிய உத்தியோகஸ்தர்களின் யோக்கியதாம்சங்களைக் குறித்துக் குறை கூற முடியாவிட்டாலும், ஒருவருக்கும் தெரியாமல் இவை நடந்ததைப்பற்றித்தான், 'ஹிந்து'ப் பத்திரிகையில் ஒருவர் வருந்தி எழுதினார்:

"பொப்பிலி ராஜாவின் ராஜிநாமாவும், இவ்விரு பெரிய உத்தியோக நியமனங்களும், எல்லாமே அதிசீக்கிரத்தில் நடந்தேறியிருப்பதுதான் நம்மைத் தூக்கி வாரிப் போடுகிறது. இந்த உத்தியோகங்களின் பொருட்டுச் சிபாரிசும், நியமனமும் ஒரு வாரத்துக்குள் முடிவடைந்த காரியங்களாகவே தெரிகின்றன....."*

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் புதிய உத்தியோகத்தைக் கேட்டதும் அவருடன் நிர்வாக சபையில் அங்கத்தினராக உழைக்கப்போகும் ஸர் மர்ரே ஹாமிக் என்பவர்,

"நாம் இருவரும் சென்னைச் சட்டசபையில் சேர்ந்து வேலை செய்திருக்கிறோம். மறுபடியும் தங்களுடன் கூடச் சேர்ந்து நிர்வாக சபையில் வேலை செய்ய நேர்ந்ததை நான் உத்ஸாகத்துடனே எதிர்பார்க்கிறேன்"†

என்று எழுதினார். ஹைகோர்ட்டு முதல் நீதிபதியான ஸர் அர்னால்ட் வைட், முந்திய தினமே நண்பருக்குத் தம் சந்தோஷத்தை வெளியிட்டிருந்தார்:

"கவர்னர் நேற்று இரவு என்னிடம் தனிமையில், உங்களுக்குப் புதிய உத்தியோகமாகப் போவதைப்பற்றிச் சொன்னார். என் மனமார்ந்த சந்தோஷத்தைத் தெரிவிக்கின்றேன். ஏற்கனவே நீங்கள் பெருமை அடையும்படியான பல காரியங்களைச் செய்திருக்கிறீர்கள்."‡

ஜஸ்டிஸ் அப்துர் ரஹீம்,

"அரசாங்கத்தார் செய்த காரியம் என்னவோ உயர்ந்தது. ஆனால் நீதிஸ்தலத்திற்கு இனி மிகுந்த நஷ்டமேதான்"$

---

* 'ஹிந்து', 16-1-11.
† கடிதம், 16-1-1911.
‡ கடிதம், 15-1-11.
$ கடிதம், 17-1-11.

என்று ஏக்கம் கலந்த சந்தோஷத்தை வெளியிட்டார்.

பல நண்பர்களும், அபிமானிகளும் பெருமை கொண்டது சாமானிய முறையில் அன்று. உறவினர்களில் சம்பந்தியான ராமஸ்வாமி ஐயர் திருவிடைமருதூரிலிருந்து இலக்கியச் சுவையுடன் எழுதியது யாதெனில்: "பெருவிருக்ஷத்தைச் சுற்றிய கொடிகள் போல் உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் உயர்வினால் சுற்றத்தாரின் மனங்களும் செழிக்கின்றன"* என்றார்.

அங்கங்கே விருந்துகளையும், வெகு விமரிசையான வரவேற்புக் கொண்டாட்டங்களையும் ஏற்பாடு செய்து, தங்கள் பூரண சம்மதத்தை அரசாங்கத்தாருக்கும் பொது மக்களுக்கும் பலர் தெரிவித்தார்கள். சதா பத்திரிகைகளில் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய பிரசங்கங்களையும் காரியங்களையும் பரிசீலனை செய்து, அவைகளில் காணப்பட்ட குற்றங்களை எடுத்துச் சொல்லும் ஆற்றலையே தொழிலாகக் கொண்டிருந்த திவான் பகதூர் பி. கேசவ பிள்ளை, தம் வாசஸ்தலமான குத்தியிலிருந்து என்ன வெல்லாமோ புகழ்ந்து எழுதினார் என்றால், விரோதிகளினிடையிலும் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குள்ள மதிப்பையே, அது காட்டுகிறது.

> "நாட்டு மக்களுக்கு நிர்வாக அரங்கத்தில் ஓர் இடத்தைக் கொடுத்ததாகக் கருதும்படிச் செய்யக்கூடியது வாஸ்தவத்தில் உங்களை நியமித்தது ஒன்றேதான். இந்தியா முழுவதும் சுற்றிப் பார்த்தாலும் உங்களை நியமித்தது ஒன்றுதான் சிறந்ததாகக் கருதப்படும். அரசாங்க ஆட்சிமுறையிலும் ஓரளவு நன்மையை உண்டாக்க, உங்கள் தூய்மையான வாழ்க்கையும், தெய்வபக்தியும், உணர்ச்சி ததும்பும் இருதயமும், அசாதாரணமான மேதையுமே, சிறந்த கருவிகளாகலாம்"†

ஸர் சி. சங்கரன் நாயருடைய நண்பர்களுக்குச் சற்று ஏமாற்றமும் மனவருத்தமும் உண்டாயின என்பது அவர்கள் எழுதிய கடிதங்களிலிருந்து புலப்படுகிறது.

> "இவ்வளவு சீக்கிரம் இந்த உத்தியோகங்களுக்கு ஆட்களைப் பொறுக்கிவிடுவார்கள் என்று ஒருவருக்கும் தெரியாது"‡

* கடிதம், 19-1-11.

† கேசவ பிள்ளையின் கடிதம், 16-1-11.

‡ நண்பர் ஒருவரின் கடிதம், 16-1-11.

என்ற வார்த்தைகள் தெள்ளத்தெளிய அவர்கள் தவிப்பை விளக்கின. அக்காலங்களில் சங்கரன் நாயர் கட்சியில் இருந்த சட்டஞானப் பிரமுகரான டி. ரங்காசாரியாரும் தாம் எழுதியதில்,

"நீதிபதிப் பதவியிலிருந்து கவர்னர் சபைக்கு ஒருவரை எடுப்பது சரியல்லவென்ற வாதம் வலுக்கையில், அதைக் கவனியாது இவ்வளவு சீக்கிரம் இதற்கு உங்களை நியமனம் செய்வார்கள் என்று எதிர்பார்க்கவே முடியவில்லை"*

என்றார். டி. ரங்காச்சாரியாருக்கு என் தந்தை எழுதிய பதிலைக் கவனிக்கும்பொழுது எழுதியவரின் வினயத்தையே அது நம்மிடம் உணர்த்துகிறது :

"பலருடன் பழகுவதிலும், முதிர்ந்த அநுபவத்திலும், உயர்ந்த பகுத்தறிவிலும் என்னைவிட வாஸ்தவத்தில் ஸர் சி. சங்கரன் நாயரே இப்பதவிக்குக் கௌரவம் அளிக்கவல்லவர்..."†

என்று எழுதினார். இவ்வபிப்பிராயத்தை ஏற்கனவே ஸர் வில்லியம் வெட்டர்பார்னுக்கு இரண்டு வருஷங்களுக்கு முன் அவர் எழுதி யிருந்தார் என்பதை நாமும் அறிவோமல்லவா? வேண்டுமென்று திருப்தி அளிக்கவோ, அல்லது வினயம் மாதிரி வேஷம் போடவோ இக்கருத்தை அவர் மேற்கொள்ளவில்லை என்பது திண்ணம். இவ்விஷயத்தை அவருடைய நெருங்கிய நண்பர்கள் முற்றும் உணர்வார்கள். அவருடைய நா சில சமயங்களில் காரசாரமாகப் பலருடைய குற்றங் குறைகளை எடுத்துக் காட்டியதால் வெறுப்புற்ற சிலர் அவருடைய பெருந்தன்மையை உணரவில்லை. சங்கரன் நாயர் மட்டும் கௌரவமாகவே அவருக்கு எழுதிய கடிதத்தில் பதில் சொன்னார் :

"ஸர் ஆர்தர் லாலி மாத்திரம் பொப்பிலி மஹாராஜாவைத் தேர்ந்தெடுக்கும்போதே முதவில் அதைச் செய்யாமல், உங்களை நியமித்திருந்தால், புதிய அரசியல் திட்டங்களைக் கெடுக்க முயன்ற புகாருக்கு அவரிடம் இடம் ஏற்பட்டிராது."‡

* கடிதம், 16-1-11.

† கிருஷ்ணஸ்வாமி ஐயர் கடிதம், 16-1-11.

‡ கடிதம், 17-1-11.

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மனம் புதிய உத்தி யோகத்தை அடைந்தமையால் அளவுக்குமேல் திருப்தி பெறவில்லை. புதிய உத்தியோகம் அவருக்கு வாய்த்த விவரம், எல்லோரையும் பிரமிக்கச் செய்தது. அக் காலத்தில் நிர்வாகசபை அங்கத்தினரின் ஹோதாவே தனிப்பட்டதாய் விளங்கியது. அங்கத்தினர்கள் ஊரை விட்டு வெளியேறும்பொழுதும் திரும்பும்பொழுதும் 15 வெடி குண்டுகள் வீதம் மரியாதைகள் செய்யப்படும். குறித்த காலங்களில் அவர்கள் அணிந்த அங்கிகளில் கண்ணைக் கவரும் ஜரிகை முதலிய பகட்டான வேலைப்பாடு களும் இருந்தன. எல்லாம் உயர்ந்த தோரணையில் விளங்கியதால் சாமானிய ஜனங்களுக்கு மலைப்பாகத் தோன்றியதில் என்ன ஆச்சரியம் ?

"நீங்கள் ஒன்றரை வருஷங்களுக்கு முன் விரும்பியவைகள்"*

என்று ஸர் வில்லியம் வெட்டர்பர்னுக்கு எழுத ஆரம் பித்த கிருஷ்ணஸ்வாமி ஐயர்,

"இன்று நடைபெறுகின்றன"

என்று முடித்தார். மேலும்,

"நீங்களும் என்னுடன் பேசும்பொழுது, கவர்னர் சபைக்கு இனி, சமூகத் தலைவர்களிலிலேதான் பொறுப்பாளியான ஒரு வரைப் பொறுக்குவார்கள் என்று சொன்னது எனக்கு ஞாபகமிருக்கிறது. என்னை இதற்குத் தகுதியாக நினைத்து நியமித்திருப்பது என்மேல் இங்கே கவர்னராயிருப்பவரின் மிகுந்த நன்மதிப்பினாலேதான். ஸ்ரீ சங்கரன் நாயரை நியமித்திருந்தால் பத்திரிகைகளில் வித்தியாசமான யாதோர் அபிப்பிராயமும் வெளிவந்திராது....."†

பத்திரிகைகள் என்று பன்மையாக எழுதியதும் கேவலம் மரியாதைக்காகவேதான். ஏனெனில் ஒரே ஒரு பிரபல பத்திரிகைமட்டும் குறை கூறியது. கவர்னர் சபை அங்கத்தினரான பிற்பாடும் அவர் செய்த ஒவ்வொரு காரியத்திலும் குற்றம் கண்டுபிடிக்கவும் அது தலைப்பட்டது. 'சென்னை மெயில்' ஒரு தலை அங்கத்தில் பிரமாதமாக

* என் தந்தையின் கடிதம், 19-1-11.

† அதே கடிதம்,19-1-11.

அவரைத் துதி செய்திருந்தது. மேலும், நீதிபதிப் பதவி யிலிருந்த ஒருவரைத் தேர்ந்து எடுத்ததில், கவர்னர் சபைக்குக் கெடுதல் இல்லை; மிகுந்த சௌகரியமேதான் ஏற்படும் என்றும் அது வாதித்தது. சிவஸ்வாமி ஐயரும் தம் நண்பரைச் சந்தோஷம் விசாரிக்கும்பொழுது,

"நிச்சயம் கவர்னர் சபைக்கு நல்ல சட்டஞானம் பெற்ற ஒருவரைச் சேர்ப்பது மற்ற அங்கத்தினர்களுக்குப் பெரிய உபகாரமாகவே இருக்கும்"*

என்று அதை ஆமோதித்தார்.

நீதிஸ்தலத்திலிருந்து கவர்னர் ஆலோசனை சபைக்குப் பெரும்புகழோடு வந்தவர் கிருஷ்ணஸ்வாமி ஐயர். அவருக்கிருந்த பெயரும், வக்கீல் தொழில் சம்பாத்தியமும் வெறும் கட்டுக்கதைகளல்ல. அவர் அவ்வேலையை ஒப்புக் கொண்டது அதிக வருமானத்தின் பொருட்டன்று. நீதிபதியானதனுல் அவருக்கு வருமானம் குறைவுதான். நிர்வாக சபை அங்கத்தினராக ஆனதிலும் அவருடைய சம்பாத்தியம் வக்கீல் தொழிலில் வந்ததைவிடக் குறைவு என்றேபயமின்றிச் சொல்லலாம். சென்னையிலும், சென்னை ராஜதானியைச் சேர்ந்த மற்ற ஊர்களிலும் இந்த விவரம் எல்லோருக்கும் தெரியும். ஆகையால் வேண்டுமென்று அவதூறு பரப்புவதற்காகவே, சிலர் ஸர் ஆர்தர் லாலியைத் தம் வலையில் போட்டுக்கொண்டு உத்தியோகத்தைச் சம்பாதித்தார் கிருஷ்ணஸ்வாமி ஐயர், என்று கூறியதை எல்லோருமே நம்புவார்களா? போதாததற்கு அவ்வருஷம் மார்ச்சு மாதம் கவர்னருக்கு அவர் ஓர் உயர்தரச் சிற்றுண்டி விருந்தைக் கொடுக்கவும், பல விரோதிகள் பலவாறு பேசலானுர்கள். பஹிரங்கமான சுபாவமும், உதார சீலமும் கொண்ட ஒருவரைப்பற்றியே சிற்சிலர் இவ்வாறு கெட்ட வதந்திகளைக் கிளப்பினுர்கள் என்றுல், சாமான்ய மனிதர்களின் விஷயத்தில் அவர்களுடைய கற்பனுசக்தி எவ்விதம் இருக்கும் என்று கூறவேண்டியதில்லை.

---

* கடிதம், 16-1-11.

ஆனால் இதிலெல்லாம் அவருக்குக் கவலையே இல்லை. பிறருடைய வாய்ச்சொல்லுக்குப் பயந்து தம் மரியாதைகளைக் குறைப்பவரும் அல்ல. அக்காலங்களில் கவர்னர் முதலிய அரசாங்க அதிகாரிகளுக்கு விருந்துகள் கொடுப்பது, முக்கியமாக நம்மவர்களையும் வெள்ளைக்காரர்களையும் நெருங்கும்படிச் செய்வதற்கு இன்றியமையாத சாதனங்களில் ஒன்றாக எண்ணப்பட்டது. அவர் இவைகளிலெல்லாம் அதிகம் யோசனை செய்யாததற்கு மற்றொரு காரணம் பணச் செலவிலும் அவருடைய தாராள மனப்பாங்கே.

கவர்னருக்கு அவரளித்த சிறு விருந்து, பட்டணத்திலேயே அதுவரையிலும் கண்டிராத விதம் அதிகப் படாடோபத்துடன் நடந்தது. எத்தனையோ மித்திரர்களும், வேண்டியவர்களும் அன்று 'ஆச்ரமம்' பங்களாவின் மரங்களடர்ந்த தோட்டத்தில் கூடினார்கள். தமக்கு மனையாள் இல்லாத காரணத்தினால் வீட்டில் கவர்னர் மனைவியை உபசரிப்பது சரியா இல்லையா என்ற சந்தேகம் முதலில் அவர் உள்ளத்தில் கிளம்பியது. ஆனால் அவ்வெண்ணம் நீடித்திருக்கவில்லை. ஏனெனில், புதல்விகளில் முக்கியமாகச் சுப்பலக்ஷ்மி அவருடன் சுறுசுறுப்பாகக் காரியங்களைக் கவனித்ததால், அவளைக் கொண்டே கவர்னர் மனைவிக்கு உபசாரங்களைச் செய்யச் சொல்ல முடிந்தது அவருக்கு.

வேலையை ஒப்புக்கொண்ட அடுத்த மாதம் சென்னைச் சட்டசபையில் நடந்த சில காரியங்களைப்பற்றி 'ஹிந்து' பத்திரிகை தன் அபிப்பிராயங்களை வெளியிட்டது. சட்டசபையில் பர்ஹாம்பூர் பிரதிநிதியான கனம் ராகவராவ், தாலுக்கா சபை அங்கத்தினர்களுக்கு, தங்களுள் அக்கிராஸனரைத் தேர்ந்து எடுக்கும் உரிமையை வேண்டி ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். அவர் உத்தியோகப் பற்றற்றவர்களின் தேர்தலில் வந்த அங்கத்தினர். முடிவில் தீர்மானம் சில திருத்தங்களுடன் வெற்றி பெற்றது. எனினும் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கவர்னர் சபை அங்கத்தினராயிருந்த முறையில் சில முக்கிய ஆக்ஷேபங்களைச்

சொன்னார். இன்னும் நாட்டிலுள்ள அரசியல் ஸ்தாபனங்களில் தகுந்த காரியப்பயிற்சியும், பொது வாழ்க்கைப் பழக்கமும் ஏற்படவில்லை என்ற எண்ணமே தீர்மானத்தை இருந்தபடியே ஒப்புக்கொள்ளப்படாமல் சில திருத்தங்களுடன் அங்கீகரிக்கச் செய்தது. அதாவது இரண்டொரு குறித்த ஜில்லாக்களில் வேண்டுமானால் பிரேரேபித்தவர் வேண்டுகோளில் கண்டவிதம் தாலுக்கா சபை அங்கத்தினர்களுக்கு உரிமையைத் தரலாம் என்று முடிவு ஆகியது.

தம் வரையில் கிருஷ்ணஸ்வாமி ஐயர், அந்த விஷயத்தைக் குறித்து மிகுந்த அநுதாபத்துடனேதான் இருந்தார்.* அரசாங்கவர்க்கத்தில் சேர்ந்திருப்பதனாலும் கொஞ்சங்கூட வித்தியாசமாக அவ்விஷயத்தைக் கருதவில்லை. ஆனால் அநுதாபத்தைக் காட்டுவது மட்டும் போதுமா? நடைமுறையில் செய்ய முடிந்தவையா என்று விஷயங்களை சீர்தூக்கிப் பார்க்க வேண்டாமா? தாலுக்கா போர்டின் அக்கிராஸனர் பதவிக்குத் தேர்ந்தெடுக்கும்படியான யோக்கியதையை நம் ஜனங்கள் பெற்றிருக்கின்றார்களா என்று முதலில் கவனிக்கவேண்டும். ஜில்லாதோறும் ஒவ்வொரு தாலுக்காவிலும் இதைப் பரீக்ஷைசெய்து பார்க்காவிட்டாலும், ஜில்லாவுக்கு ஒரு தாலுக்கா விகிதமாவது பரீக்ஷை செய்து பார்க்கலாமென்றுதான் கொண்டுவரப்பட்ட தீர்மானம் சொல்லியது. தீர்மானத்தைப் பிரேரேபித்தவருடைய மொழிகள் அநேகமாக தாலுக்கா நிதிகள் சம்பந்தமான நிர்வாகத்தைப் பற்றியவைகளாகவே இருந்தன. ஏற்கனவே இம்மாதிரிக் கீழ்ஸ்தாபனங்களில் அக்கிராஸனரைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பை ஜனங்களுக்குக் கொடுக்க அதிகாரிகள் மறுத்திருந்தார்கள். தற்காலம் அமலில் இருந்த சட்டமும் இதற்கு உதவி செய்தது. கவனித்துப் பார்க்கும்பொழுது, தாலுக்கா போர்டுகளில் அக்கிராஸனராயிருப்பவருக்கு வேலைகள் மிகவும் அதிகம். அவைகளைச் செய்பவர், பொறுப்பாளியாகவும், பொதுக் காரியங்களைச் செய்வதில் நேர்மை

---

* சட்டசபைப் பிரசங்கம், 22-2-11.

யான நடத்தையை மேற்கொண்டவராகவும் இருப்பது அவசியம். 200 மைல்களுக்குக் குறைவில்லாமல் ரஸ் தாக்கள் போடுவதுபோன்ற பொறுப்புக்கள் அக்கிராஸனர் வசம் இருந்தன. கிராமங்கள் தோறும் உள்ள கடை கண்ணிகளையும், குளம் கிணறுகளையும் சரிவரப் பார்வை யிடவேண்டிய வேலை அவருடையதுதான். வீட்டு வரிகளை வசூலிக்கவும், தாலுக்கா நிதியைப் பரிபாலனம் செய்யவும் வேண்டும். பலவிதமான ஜாதிமதப் பிரிவினை கொண்ட ஜனசமுதாயத்தில் அங்கங்கே ஒருவருக் கொருவர், பேதமேற்படுவதால் உண்டாகும் சிரமங்களைத் தீர்க்கவேண்டும். பல கட்சிப் பிரிவுகளின் நடுவில் பக்ஷபாதம் இல்லாமலும் நடந்துகொள்ள வேண்டிவரும். இவ்வளவு சிரமமான பொறுப்பை ஏற்க, பொதுஜன சேவையில் ஈடுபட்ட கனம் கோகலேயைப்போன்ற உயர்ந்த மனிதர்களின் லக்ஷயங்களைப் போஷிக்கின்றவரால் சாத்தியமே ஒழிய மற்றவர்களால் இல்லை. அத்தகையவர் களே நாட்டில் இருப்பதாகத் தெரியவில்லையே! அவசியம் அரசாங்கத்தார் வேண்டுமானால் இதில் சிலமாறுதல்களைப் புகுத்தி ஒரு மாதிரித் தீர்மானத்தின் லக்ஷயத்தையும் பயன் பெறச் செய்யலாம் என்றார்,* நிர்வாகசபை இந்திய அங்கத் தினர்.

அவருடைய மனம் முக்கியமாக எக்காரியத்தையும் ஒழுங்காகச் செய்ய வேண்டுமென்றே கருதியது. வெளிப் படையாகவும், அதிகம் சுற்றிச் சொல்லாமலும் தெரி வித்தார் தம் அபிப்பிராயங்களை. 'ஹிந்து' அவகாசம் கிடைத்ததை விடாமல் தலை அங்கமொன்றை எழுதியது.† இந்தியப் பிரதிநிதியான ஒருவர் இம்மாதிரித் தீர்மா னத்தை எதிர்ப்பது சுத்தப் பிசகென்றும், நிர்வாக சபை அங்கத்தினரான இந்தியர் ஒருவர் ஜனங்களுக்கும் ஆட்சிவர்க்கத்திற்கும் நடுவில் ஒருவருக்கொருவர் நல்ல அபிப்பிராயங்களைக் கொடுத்துவாங்க வழி தேட வேண்டுமே தவிர இம்மாதிரி விடாமல் தேர்தலில் வந்த

* சட்ட சபையில் பிரசங்கம், 22-2-11.

† 'ஹிந்து' தலையங்கம், 22-2-11.

ஒரு சட்டசபை அங்கத்தினரை எதிர்ப்பது தவறு என்றும் கண்டித்தது.

இரண்டு நாட்கள்கூட ஆகவில்லை; அதற்குள் மறுபடியும் அவரைப் பற்றிய ஒரு தலை அங்கம் ஹிந்துவில் வெளிவந்தது.* கனம் ராகவராவ் கொண்டுவந்த மற்றொரு தீர்மானத்தையும் அவர் எதிர்த்தார். அரசாங்க உத்தியோகங்களில் நூறு ரூபாய் சம்பளத்திற்கு மேற்பட்டவைகளில் சிலவற்றிற்காவது போட்டிப் பரீக்ஷையில் தேறி வருகிறவர்களை எடுப்பது உசிதம் என்று அப்பிரேரேபணை வேண்டியது. அதையும் நிர்வாக சபை இந்திய அங்கத்தினர், ஏற்கனவே அது சம்பந்தமாய் உள்ள இந்திய மத்திய அரசாங்கத்தின் தீர்மானத்தால் இவ்விஷயத்தில் மாகாண அரசாங்கம் ஒன்றும் மாற்றிச் செய்வதற்கில்லை என்று வாதித்துப் பலருடைய அளவிட முடியாத கோபத்திற்கு ஆளானார்.

கவர்னர் காரிய நிர்வாக சபையில் அங்கத்தினராக இருக்கும் ஒருவர், அச்சபை ஏற்கனவே தீர்மானித்ததற்கு விரோதமாகப் பேசவோ, நடந்து கொள்ளவோ முடியாது. கவர்னர் ஆலோசனை சபையில் வேண்டுமானால் ஒவ்வொன்றையும் விவாதிக்கலாம். சட்டசபையில் நிற்கையில் அதிகாரிகளின் ஒத்துழைப்பின் சின்னமாக நிர்வாக சபையின் அபிப்பிராயத்தையே ஆமோதிப்பது அரசியல் பழக்கம்; முறையும் அதுவே. ஆகையால் அரசியல் சட்ட நிபுணர்கள், நிர்வாக சபை அங்கத்தினருக்கு இதில் தனிப் பொறுப்பு இருப்பதாக ஒப்புக்கொள்ள மாட்டார்கள். பத்திரிகையில் வெளிவந்த தீவிர கண்டனம் இவைகளைப் பொருட் படுத்தவில்லை.

இதனுடன் அவருக்குப் பத்திரிகை எதிர்ப்புக் குறையவில்லை. மேலும் மேலும் எதிர்ப்பு வளரத் தொடங்கியது. கொஞ்சங்கூடத் தந்திரங்களை அறியாதவர் அவர். பயமில்லாமல் பேசியும், காரியங்களை வெற்றிபெற நடத்தியும் வேலை பார்த்தவர். எவ்வளவு வரையும் பொது ஜனங்களின் பரிசிலனையைப் பெறுகிறோமோ, அவ்வளவு வரையும் காரியத்தில் உண்மையான ஊக்கத்தைத் தம்மால்

* 'ஹிந்து', 24-2-11.

காட்டமுடியும் என்ற நம்பிக்கையும் அவருக்குக் கூடவே வளர்ந்தது.

மறுமாதம் உதக மண்டலத்துக்குப் பிரயாணமானூர் அவர். அவருடன் அக்காலங்களில் நெருங்கிப் பழகிய வெள்ளைக்காரர்களில் சென்னைப் பாதிரிகளின் தலைவரும், அவர் மனைவி மிஸஸ் வைட்ஹெட்டும் முக்கியமானவர்கள். பாதிரி பெருந்தன்மை வாய்ந்தவர். நண்பருடன் மத சம்பந்தமான பல கட்சிவாதங்களைச் செய்து, கிருஷ்ண ஸ்வாமி ஐயரின் மதப்பற்றைக் கண்டு பிரமித்தவர். மிஸஸ் வைட்ஹெட்டோவெனில் அவருடைய புத்தி நுட்பத் திலும், பளிச்சுப் பளிச்சென்று சம்பாஷிக்கும் சாமர்த்தி யத்திலும் ஈடுபட்டவள். மேலும் அவ்விருவர்களும் எங்கள் குடும்பத்தில் பேரன்பைக் காட்டியவர்கள். இக் காரணங்களால் குடும்பத்தினரின் நடவடிக்கைகளையும், அதிகாரியானவரின் பழக்க வழக்கங்களையும் சிறிது சிறிது தங்கள் உபதேசங்களால் மாற்றவும் அவர்கள் தலைப் பட்டார்கள். அதாவது அடிக்கடி, சிற்றுண்டி விருந்துகளை எங்கள் வீட்டில் தயாரிப்பதை அவர்கள், அதிலும் முக்கிய மாக மிஸஸ் வைட்ஹெட் விரும்பினவள். வெள்ளைக்காரர் களுடன் தந்தையாரைப் பழக்கம் செய்விப்பதிலும் அவள் முனைந்துவிடுவாள். அவருடைய உத்தியோகம் புதிதானது. அவருக்கு வெள்ளைக்காரர்களிடம் நாசுக்காகப் பேசவும் நடந்துகொள்ளவும் தெரியவில்லை. அவர் அதைப் பொருட்படுத்தாவிட்டாலும், மிஸஸ் வைட்ஹெட் அதற் காகக் கவலைப்படுவாள். "ஏன், நீங்கள் வெள்ளைக்காரர் களுடன் கலப்பதில் சற்று நாசுக்காய்ப் பழகலாகாது?" என்று அவள் கேட்பாள். இம்மாதிரி ஒரு சர்ச்சையில் பின்வருமாறு அவர் அவளுக்கு எழுதினூர்:

"இந்தியர்களில் பெரும்பாலோருக்கு வெள்ளைக்காரர்களின் பழக்க வழக்கங்கள் தெரியா. இந்தியாவிலுள்ள வெள்ளைக் காரர்கள் வேண்டுமென்று தங்கள்பால் கௌரவம் கொண்டாடித் தனித்து நிற்பதுதான் அதற்கு முக்கிய காரணம். சில தவறுதல் களும் இதனால் ஏற்படலாம். வேண்டுமென்று அவமரியாதையினால் வித்தியாசமாய் இந்தியர்கள் நடப்பதாகவும் ஒருவரும் நினைக்கக் கூடாது. எங்கள் பழக்கங்களை அறிந்துகொள்ளாமல் செய்ததால்

ஏற்படும் வெள்ளைக்காரர்களின் தவறுகளைப் பொறுப்பதில் எங்களுக்கு நிகர் ஒருவரும் இல்லை.''

இவ்விதம் விஷயத்தை உடைத்து நடு முற்றத்தில் போட்டுவிடுவார். பாவம், அவள் என்ன செய்வாள்! அவள் இருந்த நிலையில் வாயை மூடிக்கொள்ள வேண்டியதுதான். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் கோகலேக்கு எழுதும்பொழுது வேடிக்கையாக இவைகளைப்பற்றி எல்லாம் குறிப்பார்:

''ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயரும் மிஸஸ் வைட் ஹெட்டும் சிநேகிதர்களாக இருப்பதும் ஒரு விந்தையே. உதகமண்டலத்தில் இன்னுங்கூட அவர்களுக்கு அதிகம் ஒருவரோடொருவர் சேர்ந்து பழக அவகாசம் ஏற்படலாம். மிஸஸ் வைட் ஹெட்டின் உபதேசமும் சிறிது பலிக்க ஆரம்பித்துவிட்டது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் வெளியில் செல்லும்போது கொஞ்சம் கொஞ்சமாக வேஷ்டி கட்டும் பழக்கத்தை விட்டு விட்டார். படுக்கும்பொழுதுகூட தொளதொளப்பான சராயை (பைஜாமாஸ்) த்தான் அணிகிறார். வெள்ளைக்காரர்களுடன் தேத் தண்ணீர் அருந்தும் பழக்கமும் பெற்றிருக்கிறார். மிஸஸ் வைட்ஹெட்டும் எப்படியாவது தன் வீட்டில் சமைத்த மாமிசமில்லாத சாப்பாட்டை அவரைச் சாப்பிடும்படிச் செய்ய வேண்டுமென்று தவிக்கிறாள். சில வாரங்களுக்கு முன்புதான் அவருடைய கடைசிப் பெண்ணுக்குக் கல்யாணம் செய்ய வேண்டுமென்று கவலைப்பட்டவர், பெரியவளானாலும் பாதமில்லை, பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்கிறார் இப்பொழுது...''*

டாக்டர் வைட்ஹெட்டும் அவர் மனைவியும் நெருங்கிப் பழகியதில், நண்பருடைய வீட்டிற்கு அவ்விருவர்களும் வராத நாளே இல்லை என்று சொல்லலாம். ஆனால்,

''அவளால் என்னசெய்தும் அவரைத் தங்களுடன் சாப்பிடச் செய்ய முடியவில்லை. அவர் என்னவோ மாதிரி உடைகளை அணிகின்றாரே...காலக் கணக்கு என்பதே அவருக்கு இல்லை. வேலைக்காரர்களிடம் வெளிப்படையாகக் கடிந்து பேசுகிறார்; பெண்ணையும் பன்னிரண்டு வயசுக்குள் கல்யாணம் செய்து கொடுத்து விடுவார் போலிருக்கிறதே!...அவர் நன்றிக்கு அதிகப் பாத்திரமாகவே அவள் அவருக்கு உபகாரம் செய்கிறாளாம்! ஆனால் அவருடைய பெரிய தலைப்பாகையின் கீழ் உச்சிச் சிகையை மறைக்க மாட்டேனென்கிறார்! ஏன் அவருடைய

---

* கடிதம், 26-4-11.

உள் சராய் மேல் அங்கியையும் தாண்டி வெளியே இப்படி எட்டிப் பார்க்கவேண்டும்?"*

மிஸஸ் வைட்ஹெட்டின் சீர்திருத்தம் எவ்வளவு மட்டில், நிர்வாகசபை இந்திய அங்கத்தினரிடம் பலித்த தென்பதைக் காட்டுகின்றது மேற்படிக் கடிதம்.

"இப்பேர்ப்பட்ட பெரிய அபசாரங்களைப் பற்றியும் தவிர்க்க இயலாத பழக்கங்களைப்பற்றியும் எவ்வளவு எடுத்துச் சொல்லியும், சில சமயம் திடீரென்று மேல்நாட்டு நாகரிகத்தையே கிருஷ்ணஸ்வாமி ஐயர் தாக்குகின்றாராம்"†

என்று ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் பரிகாஸம் கலந்த சொற்களோடு கடிதத்தை முடித்தார்.

## II

அக்காலங்களில் வெள்ளைக்கார உத்தியோகஸ்தர்களும் இந்திய உத்தியோகஸ்தர்களும் சேர்ந்து பழகுவதில் பல சிரமங்கள் இடையிட்டன. மேல் அதிகாரிகளான வெள்ளைக்காரர்களிடம் நம் கீழ் உத்தியோகஸ்தர்கள் நடந்து கொள்ளும் முறையில் எத்தனையோ தொந்தரவுகள் உண்டாயின. நம்முடைய ஆசார வித்தியாசங்களை உணராமல், அவர்களும் நம்மவர்களைத் தங்கள் வழியில் கட்டாயப்படுத்தத் தொடங்கினார்கள். ஜட்ஜ் பதவியில் தாம் இருக்கும்பொழுதே இவைகளைப்பற்றிக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கவர்னருடன் கலந்து பேசி சில ஏற்பாடுகளைச் செய்ய முயன்றார்.

இது சம்பந்தமாக ஓர் அறிக்கை அரசாங்க ஆபீசுகளில் விடுத்தல் உசிதமென்று அவர் ஸர் ஆர்தர் லாலியிடம் அறிவித்திருந்தார். அவரும் எத்தனையோ விதங்களில் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் கௌரவம் காட்டி, அவர் சொல்லும் ஒவ்வோர் அபிப்பிராயத்தையும் தம்மால் இயன்ற மட்டும் கவனித்துவந்தார். அதற்கு அத்தாட்சி போல் இதோ ஒருகடிதம் கவர்னருடைய அந்தரங்கக்

* சாஸ்திரிகளின் கடிதம், 28-5-11.

† ஷை கடிதம், 28-5-1911.



மிஸஸ் வைட்ஹெட்



பிஷப் வைட்ஹெட்டும், வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரும்
(1911)

காரியதரிசியான ஏ. ஓய். ஜி. காம்பெல் என்பவரிடமிருந்து :

"வெள்ளைக்கார உத்தியோகஸ்தர்கள் தங்கள் கீழ் வேலை செய்யும் இந்தியர்களிடம் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமென்பதைப் பற்றி ஆபீஸ் அறிக்கை ஒன்றை அரசாங்கத்தார் தயாரிக்கப் போகிறார்கள். இதனுடன் அனுப்பியிருக்கும் குறிப்பைப் பார்வையிட்டு, தங்களுக்கு அவசியமாகத்தோன்றிய திருத்தங்களைச் செய்து அனுப்பினால், அவைகளைப் பரம சந்தோஷமாய்த் தாம் ஏற்றுக் கொள்வதாகக் கவர்னர் தெரிவிக்கச் சொன்னார். இதைத் தாங்கள் முற்றும் நமக்குள் நடந்தவைகளாகவேதான் கருதவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்."*

இதைப் பற்றியே மிஸஸ் வைட்ஹெட்டும் தன்னுடைய அபிப்பிராயங்களை எழுதி நண்பருக்கு அனுப்பியிருந்தாள். அவளுக்குப் பதில் எழுதும்பொழுது,

"எவ்வளவுதான் சில விதிகளை நம் நடத்தையில் கவனித்து அனுசரிக்க முயன்றாலும் ஒருவருக்கொருவர் பழகுவதிலும், நம்மிரு தேசத்தவர்களின் மனப்பாங்கிலும் பிரமாதமான மாறுதல் ஏற்படும் என்று நம்புவதற்கில்லை. அந்தரங்கத்தில் சிநேகிதபாவத்தை நாம் வேண்டினால் மட்டுமே மாறுதலைப் பெற முடியும். இவ்வுணர்ச்சியை விரும்புவோர்களே யாவரும்; மற்ற விதத்தில் குறைகள் இருப்பினும் ஒருவருக்கொருவர் மரியாதை சரியாக இருந்தால் அதுவே போதும்"

என்று விஷயத்தின் தத்துவத்தை மறைக்காமல் எடுத்துக் காட்டினார். மேற்கூறிய அறிக்கை உத்தியோகஸ்தர்களுக்கு அனுப்பப்பட்டதா அல்லது அதனால் ஏதேனும் பயன் ஏற்பட்டதா என்பதை அறியமுடியவில்லை. பழைய தஸ்தாவேஜுகளைப் பார்வையிட இன்றுள்ள அதிகாரிகள் அநுமதியளிப்பது எளிதில் எதிர்பார்க்கக் கூடியதல்ல என்பதால் அம்முயற்சியை விடவேண்டியதே.

இன்று காந்தி அடிகளும் மற்றும் பல தேச பக்தர்களும், இங்கிலாந்து நம்மிடம் உண்மையான சோதர பாவத்தைக் காட்டாத காரணத்தைக் கொண்டு, சுய ராஜ்யப் போர் நமக்கு வெற்றிகரமாய் முடிந்தாலும் இத்தேசத்தவர்களிடம் வெள்ளைக்காரர்கள் வேற்றுமை

* கடிதம், 19-10-10.

யற்ற மனத்துடன் ஒருகாலும் பழகமாட்டார்கள் என்றுதான் எண்ணுகிறார்கள்.

ஆங்கிலேயருக்குரிய மரியாதைகள் சம்பந்தமான தொந்தரவு, உத்தியோகம் பார்க்க ஆரம்பித்தவுடனேயே ஏற்பட்டது. கிருஷ்ணஸ்வாமி ஐயர் கவர்னருக்கு அடுத்த உத்தியோகஸ்தராயிருந்தும், தமக்குக் கீழ் வேலை பார்த்த கவர்ன்மெண்ட் பிரதமக் காரியதரிசியிடம் சின்ன மரியாதைகளைக் காட்டத் தவறினார். வேண்டுமென்று அவர் அவமரியாதை செய்ததாகக் கொள்ள இடமில்லாதிருப்பினும், தலைமைக் காரியதரிசியான மிஸ்டர் ஹாரோல்ட் ஸ்டுவர்ட்டு என்பவர், நிர்வாக சபை அங்கத்தினர் எழுதிவைக்கும் குறிப்புக்களில் தொனித்த சில்லறை மரியாதைக் குறைவுகளைப் பொருட்படுத்தத் தொடங்கினார். அங்கத்தினருக்குத் தம்மிடம் வரும் அரசாங்க சம்பந்தமான குறிப்புக்கள் எவர் கைபட்டுள்ளன என்று கூடத் தெரியாது. சாமானிய குமாஸ்தாவான ஒருவரே சமாசாரங்களை விளக்கி எழுதி வைப்பார் என்பது அவர் எண்ணம். குறிப்பில் கண்ட விஷயத்தில் மட்டும் மனத்தைச் செலுத்தியவருக்கு, "இதைக் கவனி", "எனக்கு இதைப்பற்றி முழுவதும் தெரிவி" என்பது போலெல்லாம் காகிதங்களின்மேல் தம் விருப்பங்களையும், தம் அபிப்பிராயங்களையும் குறிப்பது மரியாதைக் குறைவாகக் கருதப்படும் என்று புரியவில்லை. ஒரு சமயம், இவைகளைப்போன்ற அவமரியாதைகளைப் பொறுக்க முடியாமல் தலைமைக் காரியதரிசி, பின்வருமாறு, தனிமையில் நிர்வாக சபை இந்திய அங்கத்தினருக்கு ஒரு தகவல் அனுப்பினார்:

"கொஞ்சங்கூட மரியாதை இல்லாத தங்களுடைய குறிப்புக்களைப் பற்றித் தெரிவிக்கத் தலைப்பட்டுள்ளேன்...ஏற்கனவே பல தடவைகளில் தாங்கள் 'தயவுசெய்து' என்பதுபோன்ற மொழிகளை உபயோகிக்காமல் எழுதிவைப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தேன். தங்களுக்கு யாரிடம் தங்கள் குறிப்புக்கள் முதலில் செல்லுகின்றன வென்பது தெரியாது போலும்; தலைமைக் காரிய தரிசிக்காவது, அல்லது மற்ற இலாகா முக்கியக் காரியதரிசிகளுக்காவது அவை செல்லுகின்றன. இனி, தங்கள் கவனத்தை இம்

மாதிரி விஷயங்களில் திருப்பவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.''*

மன்னிக்கமுடியாத குற்றந்தான். அதற்குப் பதில் பின்வருமாறு :

''சட்டென்று விஷயத்தைச் சொல்லுவதை விட்டுச் சுற்றிச் சொல்லும் சம்பிரதாயம் ஒரே காரியாலயத்தில் உள்ளவர்களிடையே அவசியமானது என்பதை இதுவரையில் நான் அறியாதது பிசகுதான். மேலும், இம்மாதிரித் தகவல்களை பிரதிதினமும் எழுதி வைப்பது குமாஸ்தாக்கள்தாம்; அவர்களிடம் இரண்டு வார்த்தைகளில் மட்டும் தெரிவிப்பது அநாவசியமான தாமதத்திற்கு இடமாகாது. இங்கெல்லாம் கையாளப்படுவது வேறு வழக்கம் என்று இருந்தால், உடனே அதை அநுசரிக்க நான் தயார். இதுவரையும் செய்திராத ஒரு புதிய உத்தியோகத்தில் என்னைப்போன்ற ஓர் இந்தியரை வைத்திருப்பது எல்லோருக்குந்தான் சிரமம். இருப்பினும் என்கீழ் வேலை பார்க்கும் உத்தியோகஸ்தர்களுக்கு மனம் கோணும்படி எதையும் நான் செய்ய இஷ்டப்படவில்லை.''†

ஹாரோல்ட் ஸ்டுவர்ட்டு சற்றுப் பொல்லாதவர். 'என் கீழ் வேலை பார்க்கும்' என்று எழுதியதில் உள்ள கர்ப்பமான அர்த்தம் அவருக்குப் புரியாமல் இல்லை. அடிக்கடி அவ்விருவர்களுக்குள் சிக்கல்கள் ஏற்பட்டன. கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினர்கள் என்ற முறையில் எல்லோரையும் ஒன்றுகப் பாவிக்காமல், சில முக்கிய சமாசாரங்களை, இந்திய அங்கத்தினரிடம் உடனே தெரிவிக்காமல், வெள்ளைக்காரர்களுக்கு முதலில் தெரிவித்த பின்னரே அனுப்பிவந்தார் ஸ்டுவர்ட்டு. அதனால் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு ஏற்பட்ட கோபத்தை அளவிட முடியாது. ஒரு சமயம் காலதாமதமான காரணத்தைக் குறித்துக் கடுமையாக ஸ்டுவர்ட்டைக் கேள்விகள் கேட்க நேர்ந்தது. பிரதம காரியதரிசியும் கிருஷ்ணஸ்வாமி ஐயரின் மன்னிப்பை யாசிக்கும்படியாகிவிட்டது.‡

உதகமண்டலத்தில் இருந்த சமயம், கவர்னருடனும் தம்முடன் வேலைபார்த்த மற்ற இரு சபை அங்கத்தினர்

* ஹாரோல்ட் ஸ்டுவர்ட்டு கடிதம், 22-4-11.

† கடிதம், 23-4-11.

‡ ஆபீஸ் குறிப்பு 22-8-11.

களுடனும் நெருங்கிய பழக்கம் அவருக்கு ஏற்பட்டது. கவர்னருக்கும் அவரிடம் மதிப்பு வளர்ந்துகொண்டே வந்தது. வேலைக்கு வந்ததுமே அவருடைய ஊக்கத்தைக் கண்டு, மிஸ்டர் அட்கின்ஸன் என்ற அநுபவசாலியாகிய ஸிவிலியன் அங்கத்தினர் பிரமித்துவிட்டார். ஏனென்றால் அவ்வருஷம் சென்னை அரசாங்கம் தயாரித்த முதல் மசோதாவைப் பரிசைஷ செய்துவிட்டு, கிருஷ்ணஸ்வாமி ஐயர் அதில் கண்ட பிசகுகளை அட்கின்ஸனுக்கு உடனே அறிவித்தார். அவரும்,

"நீங்கள் என்னைக் கலவரப்படுத்திவிட்டீர்கள். அவ்வளவு பெரிய தவறு ஏற்பட்டிருக்கிறதா அதில்?......எதற்கும் உங்களுடன் பேசவேண்டும் உடனே"*

என்று எழுதி, கலந்து பேசுவதற்குரிய காலத்தையும் குறித்துவிட்டார். இச்சம்பவம் வேலை ஒப்புக்கொண்ட மூன்று வாரங்களுக்குள் நடந்தது. தயாரிக்கப்பட்ட மசோதாவில் முன்னுக்குப் பின் சரியாக அமையாத சில விவரங்களைக் காண்பித்து, சட்ட ஞானிகள் ஆட்சேபணை செய்யாதிருக்கும் விதம் சிற்சில மாறுதல்களையும் செய்ய, கிருஷ்ணஸ்வாமி ஐயர் உதவியாக இருந்தார். அவருடைய ஊக்கமும், நுண்ணறிவும் அட்கின்ஸனை அவரிடம் அன்று முதல் எல்லையற்ற மதிப்பை வைக்கச் செய்தன. கவர்னரும் அவர் வசம் கொடுத்திருந்த முனிசிபல்—லோகல் இலாகா சம்பந்தமான அதிகாரங்களுடன் நிறுத்திக் கொள்ளாமல், இன்னும் அதிகமான அதிகாரங்களை அவரிடம் கொடுக்க உத்தரவிட்டார். உப்பு, அப்காரி, கஸ்டம்ஸ், பென்ஷன், ரெஜிஸ்ட்ரேஷன் சம்பந்தமான அதிகாரங்களும் கூடிய சீக்கிரமே அவரிடம் தரப்பட்டன. எல்லோருக்கும் அவருடைய தெளிவான அபிப்பிராயங்களில் மதிப்பு ஏறியது.

"ஒரு விதத்தில் இந்திய அங்கத்தினர் கவர்னர் சபையில் மாறுதலையே செய்திருக்கிறார். அதுதான் அவருடைய கால தாமதம். வேலை பார்க்கும் வகையில் அல்ல; அதில்தான் எல்லோரைக் காட்டிலும் அவர் மேலே போய்விட்டாரே! கவர்னர் ஆலோசனை சபைக்குக் குறித்த சமயத்தில் வராமல் தாமதப்

* கடிதம், 3-2-11.

படுத்துகிறார். புகாருக்கு இடம் கொடுத்ததை நினைந்தும் தாமே வருந்துகிறார்; வேண்டுமென்று தாமதம் செய்யாததால் இந்த 'இழவு சராய்மாட்டிக் கொள்ளும் மேல் நாட்டுப் புதிய பழக்கமே என்னைத் தொந்தரவு செய்கிறது' †என்று நொந்துகொள்ளுகிறார்.''*

ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் வேடிக்கையாய் நண்பரைப் பற்றிக் குறித்த விவரம் மேற்கூறியது.

ஜூன் மாதம் மூன்றாம் தேதி மாட்சிமை தங்கிய அரசருடைய பிறந்தநாள் கொண்டாட்டம் வந்தது. அவ்விழாவுக்குப் போகையில் அங்கத்தினருக்கென, பிரத்தியேக ஜரிகை உடைகளைக் கிருஷ்ணஸ்வாமி ஐயர் அணிந்துகொள்ளும்படி நேர்ந்தது. ஒரு பக்கம் கத்தி ஒன்று தொங்க, ஜிலுஜிலுவென்று புதிய உடுப்பின் பிரகாசம் கண்ணைப்பறிக்க, கவர்னர் ஏற்பாடு செய்திருந்த பிரார்த்தனைக்கு அவர் சென்றிருந்தார். வெள்ளைக்கார உத்தியோகஸ்தர்கள் அனைவரும் அவருடைய புதிய சட்டைகளைப்பற்றியும், அவருக்கு அவை சோபையைக் கொடுத்ததையும் வருணித்தார்கள்.

அவர்களில் சிலர் தனிமையில் பேசும்பொழுதுகூடக் கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய உயர்குணங்களைப்பற்றி அதிகம் சிலாகிப்பார்கள். அவருடைய சூக்ஷ்மமான புத்தி சிறிய விஷயங்களையும் கூர்ந்து கவனிக்கும் என்பதை விளக்க ஒரு சம்பவம் அறியத்தக்கது. தமக்குக் கிடைக்கும் புகழ் வசனங்களில் எங்கே தம்மைச் சேர்ந்தவர்கள் மயங்கி விடுவார்களோ என்று கூட அவருக்குப் பயம். ஒரு நாள் புதல்வி சுப்பலக்ஷ்மியிடம், "சுப்பலம், கவர்னர் மனைவி எதையாவது என்னைப்பற்றிப் புகழ்ந்து சொன்னால் உடனே நீயும் அதில் கலந்துகொள்ள யத்தனம் செய்யாதே" என்று எச்சரித்திருந்தார். 'பிராமண வாக்குப் பலித்தது' என்பதற்கு ஒப்ப, அடுத்த நாள் எங்கள் தந்தையைத் தவிர மற்ற எல்லோரும் உதகமண்டலத்தின் அழகிய தோட்டத்தில் உலாவி வருகையில், எங்கிருந்தோ ஒரு வழியாகக் கவர்னர் மனைவி

* கடிதம், 28-5-11.

செடிகளினின்றும் வெளி வரவே, நாங்கள் எழுந்து தயங்கி நின்றோம். அவள் நேராக எங்களையே அணுகிச் சகோதரிகளுடன் சம்பாஷிக்கலானாள். சற்று நேரத்திற்குள் தந்தையாரின் குணாதிசயங்களைக் குறித்துத் தம் கணவர் சொல்வதாகப் புகழத் தொடங்கினாள். முன் ஜாக்கிரதையாகச் சுப்பலக்ஷ்மியும் அதிகம் அவள் பேச்சில் சேர்ந்து கொண்டு உத்ஸாகத்தைக் காட்டாமல், மரியாதையாகவும், கௌரவமாகவும் நடந்து கொண்டாள். நுட்பமான மூளை எதில்தான் வேகமாய்ச் செல்லும் என்பதற்கில்லை போலும்.

மற்றொரு சமயம் மிஸஸ் வைட்ஹெட் வெள்ளைக்காரர்களின் நாசுக்கான வாய் மொழிகளைக் குறித்துப் பிரமாதப்படுத்தினாள். "அவர்களுக்குப் பத்துப் பேர்கள் நடுவில் அழகாகவும், மரியாதைக் குறைவின்றியும் பேசத் தெரியும்; இந்தியர்களுக்குப் பிடிக்காததைக் கண்டவுடன் நாசுக்கே லவலேசமும் இன்றி, 'இது எனக்குப் பிடிக்காது' என்பதுபோன்ற மொழிகளையே தான் சொல்ல வருகிறது. இவையெல்லாம் நல்ல பழக்கங்களல்ல" என்று காட்டிப் பரிகசித்தாள். கிருஷ்ணஸ்வாமி ஐயர், கட்சி செய்வதில் தீவிரமாக மனத்தைச் செலுத்திவிட்டார். அவர் சாதித்து, "உங்கள் பழக்கம் கேவலம் வெளி வேஷமாகவும் தோன்றும் சில சமயங்களில். எங்களுக்கு உண்மையில் வேண்டாமென்றுபட்டால் வேண்டாமென்றுதான் சொல்லுவோம். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவதுபோல் இனிப்பாக மட்டும் பேசிவிட்டு மனத்தினுள் வைக்கும் வேறு அபிப்பிராயம் சரி அல்ல."

எல்லாம் அதிசீக்கிரத்தில் வெட்டவெளிச்சமாயின. ஒருநாள் என் மூத்த சகோதரி திரட்டுப்பாலை ஒரு ஸ்பூனில் மிஸஸ் வைட்ஹெட்டுக்குக் கொடுக்கவும், அவள் அதை வாங்கி விழுங்கினாள். ஆனால் முகக்குறிகள் அவளுடைய அருவருப்பை எப்படியோ வெளிக் காட்டிவிட்டன. அதனுடன் சும்மா இல்லாமல் அவளும், "மிகவும் நன்றாயிருக்கிறது; எவ்விதம் இந்தப் பக்ஷணத்தைச் செய்கிறீர்கள்?"

என்று என் சகோதரியைக் கேட்கவும், என் தந்தை என் சகோதரியிடம் இன்னும் ஒரு ஸ்பூன் திரட்டுப்பாலை அவளுக்குக் கொடுக்க ஏவினார். கொடுத்ததை மறுத்து மிஸஸ் வைட்ஹெட், "போதும், இனி வேண்டாம்" என்றாள். அவர் மறுபடியும் நிதானமாக, "இல்லை, சாப்பிடுங்கள். நீங்கள் நன்றாயிருக்கிறதென்று சொன்னீர்களே" என்று வற்புறுத்தினார். பாவம், அவள் வேண்டா வெறுப்புடன் அதை வாங்கி விழுங்கவும், வயிற்றினுள் குமட்டல் கண்டு, 'தூ' என்று வெளியே அதைத் துப்பி விட்டாள்.

இது நடந்த மறுநாள், அவளைப் பார்த்து நண்பர், "இப்பொழுது தெரிகிறதா, யாருடைய பழக்கங்கள் நாகரிகமானவை என்று? பிடிக்காத வஸ்துவை நன்றாய் இருக்கிறது என்று சொன்னது கேவலம் எங்களைத் திருப்தி செய்வதன் பொருட்டன்றோ! பிடிக்காவிட்டால் உங்கள் பேரில் என்ன குற்றம்? எதற்காக அதை எங்களிடம் மறைக்கவேண்டும்? நீங்களாக ஏற்படுத்திக் கொண்ட நாசுக்கே இம்மாதிரியெல்லாம் சொல்லச் சொல்லுகிறது" என்று பரிகசித்தார். எவ்வளவோ இம்மாதிரி தர்க்கங்கள் அவ்விருவருக்கும் ஏற்படும். அவைகளைக் கண்டு ரோஷப்படாத சுபாவம் உடையவள் அவள்.

மற்றொரு சமயம் மிஸஸ் வைட்ஹெட் தமிழ்ப் பாஷையில் சிற்சில அர்த்தமற்ற சொற்களைப் பேச்சில் உபயோகிப்பதைப் பரிகசித்தாள். 'நாற்காலி, கீற்காலி; மேஜை, கீஜை' என்று 'கி' ஒன்றை ஒவ்வொரு சொல்லுடனும் சேர்க்கும் நம்முடைய அர்த்தமற்ற பழக்கத்தை அவள் குறிப்பாய்ச் சுட்டிக்காட்டினாள். எங்களில் பலருக்கு இது உண்மையில் விகாரமாய் விளங்கியது. ஆனால் தந்தையார் மட்டும் தம் புத்தியை அவ்விஷயத்தினுள் செலுத்தியதுமே சட்டென, "எங்கள் தமிழ்ப் பாஷையிலுள்ள சௌகரியத்தை இப்பழக்கம் காட்டுகிறது. ஏனெனில், உண்மையில் எங்களுக்கு நாற்காலியோ அல்லது மேஜையோ வேண்டி இருந்தால் அவைகளையே

குறிப்பிட்டு, பெயர் சொல்லிக் கொண்டுவர உத்தரவு இடுவோம். ஆனால் நாற்காலி மாதிரியும் மேஜை மாதிரியும் உபயோகப்படக்கூடிய வேறு சாமானையும் கொண்டு வருவது பாதகமில்லை என்றிருந்தால் உடனே ஒரு 'ஈ'யைப் போட்டுக்கொண்டு 'ஈற்காலி, ஈஜை' என்போம். அதனால் அதிக நாழிகைக்கு வழி இல்லை. நாங்கள் விரும்புவதை நன்றாக அறிவிக்கவும் முடிகிறதல்லவா?" என்றொரு போடுபோட்டார். அவருடைய சாமர்த்தியமா அல்லது தமிழபிமானமா இவ்விளக்கத்திற்குக் காரணம் என்பது தெரியவில்லை.

அவளும் நம்முடைய வழக்கங்களில் சிலவற்றைப் பரிஹாஸம் செய்வாள். முக்கியமாய் வெளியில் உலாவச் செல்லும்பொழுது ஆண்களும் பெண்களும் சேர்ந்து பக்கத்தில் நடக்காமல், ஆடவர் முந்தியும் ஸ்திரீகள் பிந்தியுமாய் நடப்பதைப் படமாய்க் கோடுகளில் வரைந்து காண்பித்து, விடவேண்டிய கெட்ட பழக்கம் அது என்பதை மனத்தில் பதிய வைத்தாள். அவளுடைய நெருங்கிய சகவாசம் பல விதங்களில் வெள்ளைக்காரர்களுக்கு என் தந்தையைச் சரியானபடி உணரவும், அவருக்கு அவர்களை அறியவும் சௌகரியமாக இருந்தது.

வாரத்திற்கு இருமுறையாவது இரண்டு மூன்று வெள்ளைக்காரர்களைக் கூப்பிட்டு, அவர்களுடன் தேத்தண்ணீர் அருந்திச் சம்பாஷிக்கக் கற்றுக்கொடுத்தவளும் அவள்தான். அவளுடைய உபதேசங்களே இவைகளை அவர் அதிகம் துவேஷிக்காததற்குக் காரணம் என்றுகூடக் கூறலாம். கவர்னர் சபை இந்திய அங்கத்தினராயிருப்பவருக்கு இதிலெல்லாம் பிரமை இல்லாவிட்டாலும், ஓரளவு அவற்றில் கவனம் செலுத்துவதுதான் உத்தியோக வாழ்க்கையின் முறை என்றுகூட அக்காலத்தில் கருதினார்கள். புதிய மாறுதல்களுக்கும் இடம் தரும் மனப்பாங்கை அவர் பெற்றவர் என்பதையே இதுவும் ஒருவிதத்தில் புலப்படுத்துகிறது. ஒன்றையும் கற்க முடியாது என்று அவர் நினைத்ததில்லை. தவறில்லாத





பைகாரா நதியில் குமாரிகளுடன் நீராடும் காட்சி
(1911)

எதையும் பற்றுதல் அதிகம் இன்றிச் செய்து பார்க்க அவரால் சாத்தியமுங்கூட.

உதகமண்டலத்தில் உத்தியோக ஹோதாவில் வாசம் செய்யும்பொழுது, ஒரு சம்பவம் அவருடைய பெயரை அதிக அபக்கியாதியில் கொண்டுவந்து விட்டது. பாலக்காடு உயர்தரக் கலாசாலை சம்பந்தமாக அரசாங்கம் காட்டிய அநுதாபமற்ற செய்கையின் பயன், அவரையும் முழுவெள்ளத்தில் இழுத்து ஆழ்த்தியது. பாலக்காட்டுக் கலாசாலை, முனிசிபல் சபையின் மேற்பார்வையில் நடந்து வந்தது. அதன் உப அத்தியக்ஷகரான ஏ. டி. ராமானுஜாச்சாரியார் என்பவருக்கும், பிரின்ஸிபாலாக இருந்த மிஸ்டர் டேவி என்பவருக்கும், சதா சச்சரவுகள் நடந்துவந்தன. அவ்வருஷம் விடுமுறைக்குமுன், பிரின்ஸி பால் தமக்குக்கீழ் வேலை செய்த ராமானுஜாச்சாரியாரைக் கூப்பிட்டனுப்பினர். அவர் நேரில் வந்தார். அவருடைய நடவடிக்கைகளில் மிகுந்த அதிருப்தி எல்லோருக்கும் ஏற்பட்டதால், இரண்டு தினங்களுக்குள் வேலையைத் தாமாக ராஜிநாமாச் செய்யாவிடில் அதிகாரிகள் அவரை வேலையைவிட்டு நீக்குவார்கள் என்று அவரிடம் அறி வித்தார். ராமானுஜாச்சாரியார் அப்படிச் செய்வதற்கு ஒப்புக்கொள்வாரா? ராஜிநாமாவைத் தாமாக அவர் செய்யாததால் முனிசிபல் சபை அக்கிராஸனர், வேலையை விட்டு நீங்குமாறு அவருக்கு உத்தரவு இட்டார்.

அதன்பிறகு மலையாளத்தில் பிரசுரமான 'ஸ்பெக் டேடர்' என்னும் பத்திரிகை ராமானுஜாச்சாரியாரை வேலையை விடும்படிச் சொன்ன தகவல்களையும், அவ ருக்கு உள்ள உயர்ந்த தகுதிகளையும் குறித்து ஆத்திரத் துடன் எழுதியது. அவருடைய உதவியின் பேரில் தான் அம்மாதிரிச் செய்திகள் பத்திரிகைகளில் வெளி வந்திருக்கவேண்டுமென்று பிரின்ஸிபால் கருதலானர். இம் மாதிரி அவர் செய்ததன்பயன், அவரைத் தாற்காலிகமாக வேலையை விட்டும் நீக்கிவிட்டார் பிரின்ஸிபால். முழுவதும் தீர்மானமாவதற்குள் பத்திரிகையில் விஷயங்களை அவர்

வெளிப்படுத்தியது தவறுதான். அவரை வேலையைவிட்டு அறவே நீக்க உத்தேசித்து, பிரின்ஸிபால் அச்செய்தியை முனிசிபல் சபைக்கு அனுப்பவும், ராமனுஜாச்சாரியாரும் மேல் அதிகாரியான முனிசிபல் சபைக்கு மனுப் போட்டார். முனிசிபல் சபை முறையாகவே கூடியது. அவர் கட்சியை எடுத்துப் பேச வக்கீல் ஒருவரும் ஆஜரானுர். அங்கத்தினர்களில் பெரும்பாலோர் ஒப்புக்கொண்டு, ராமானுஜாச்சாரியாரை வேலையைவிட்டு நீக்கும் உத்தரவு முற்றும் சட்டவிரோதமென்று தீர்மானித்தார்கள். தீர்மானம் செய்த தகவலை அனுப்புமுன், முனிசிபல் சபை அக்கிராஸனர் அதிகாரிகளிடம் நடந்தவைகளைத் தெரிவித்தார். அரசாங்கப் பிரதம காரியதரிசியிடமிருந்து அவசரச் செய்தி ஒன்று வந்தது. அதில் மறுபடியும் முனிசிபல் சபையைக் கூட்டி நடந்தவைகளைத் தீர விசாரணை செய்யச் சொல்லியிருந்தது. அதன் கூடவே அரசாங்க அறிக்கை ஒன்றும் பிறந்தது. அதில், 'ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் மேலதிகாரிகளிடம் விரோதமாக நடந்துகொண்ட குற்றத்திற்குத் தண்டிக்கப்படவேண்டியவர்' என்று கண்டிருந்தது. இரண்டாந்தரம் கூட்டிய சபையில் வேண்டிய நபர்கள் இல்லாமையால் கூட்டம் நடைபெறவில்லை. அதனுல் வேறு வகை இல்லாமல் ஜுன் மாதம் 14உ அரசாங்கம் பகிரங்கமாக ஓர் உத்தரவை இட்டது. அதில் ஸ்ரீ ராமானுஜாச்சாரியார் குற்றம் செய்தார் என்பதையும், விசாரணைசெய்யுமுன் பத்திரிகைகளில் விசாரிப்பவர்களின் மனத்தில் பட்சபாதம் உண்டாகும்படியாகச் சமாசாரங்களை வெளியிட்டது பெரிய தவறு என்பதையும், ராமாநுஜாச்சாரியாரைப் போன்ற உத்தியோகஸ்தர்கள் மறுபடியும் கலாசாலையில் சேர்க்கப்பட்டால் நிச்சயம் அங்குள்ள ஒழுக்கமுறைக்குக் கேடு விளைவிப்பார்கள் என்றும் கண்டிருந்தது. மேலும், குற்றஞ் செய்தவர் பக்கம் வாக்குகளைக் கொடுத்த அங்கத்தினர்களின் செயல், நிர்வாகப் பொறுப்பை வகிக்கத் தகுதியற்றவர்களாக அவர்களைச் செய்தது என்பது அரசாங்கத்தாரின் அபிப்பிராயம். 1884—ஆம் ஆண்டு

ஜில்லா முனிசிபாலிடி சட்டத்தின் 19-வது பகுதியின்கீழ்ச் செய்த குற்றமானதால், தீர்மானத்தில் கலந்துகொண்ட 8 அங்கத்தினர்களும் தங்கள் பிழையை ஒப்புக்கொண்டு, தங்கள் ஸ்தானங்களை ஏன் ராஜிநாமாச் செய்யக்கூடாது என்று கேட்டிருந்தார்கள் அதிகாரிகள்.

முனிசிபாலிடி சபை அங்கத்தினர்களை விரட்டிய உத்தரவு மிகுந்த கலவரத்தை நாட்டில் எங்கும் கிளப்பியது. ஜனநாயகச் சின்னம் சிறிது பெற்ற ஸ்தாபனத்தை இவ்வாறு அழிக்க முயன்ற அரசாங்கத்தின் அட்டூழியத்தைக் கண்டு தூற்றாதவரில்லை. சென்னையில் விக்டோரியா டௌன்ஹாலில் மஹாஜன சபையின் தூண்டுதலினால் பெரிய கூட்டமாகக் கூடி அதிகாரவர்க்கத்தின் காரியத்தைப் பலர் எதிர்த்துப் பேசினார்கள். என்றுமே அரசாங்கக் காரியங்களைக் குற்றம் கூறாத 'மெயில்' பத்திரிகையும் தன் தலை அங்கத்தில், "அரசாங்கத்தார் இரண்டாவது சபை கூடுவதற்குள் அவசரப்பட்டு உத்தரவு போட்டதே பிசகு; மேலும் எட்டு அங்கத்தினர்களை காரணங்கூடக் கேட்காமல் நீக்குவதும் சரியல்ல" என்று நியாயத்தை எழுதியது. ஜுலை மாதம் 19-ஆம் தேதியன்று கூடிய சென்னைப் பொதுக்கூட்டம் வாயில் வந்ததை யெல்லாம் சொல்லி அரசாங்கத்தை வைதது. இக்காரியம் அரசியலில் கீழ் ஸ்தாபனங்களுக்கு ஏற்பட்ட உரிமைகளை நிச்சயம் அழித்துவிடும் என்றெல்லாம் ஜனங்கள் கூக்குர லிட்டார்கள். அக்கூட்டத்தில் கலந்து கொண்டவர்களில், டாக்டர் டி. எம். நாயர், டி. ஆர். ராமசந்திர ஐயர் முதலியவர்கள் முக்கியமானவர்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரைக் கண்டு பொறாமை பிடித்தவர்களில் சிலர் இதுதான் பழி வாங்கத் தக்க சமயம் என்று அவர்மேல் தனியே புகார் செய்தார்கள். ஒரு நாள் கடற்கரையில் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளும், காலஞ்சென்ற டி. வி. சேஷகிரி ஐயரும் பேசிக்கொண்டு உலாவி வருகையில், சற்றும் சங்கோசமின்றி அறிவாளி ஒருவர், "பார்த்தீர்களா, கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய அயோக்கியத்தனத்தை? அவருடைய

அகிருத்தியம் எல்லாம் இப்பொழுது வெட்ட வெளிச்சமாய் விட்டது'' என்று அவர்கள் செவிகளில் விழ இரைந்து சொன்னார். ஆனால் வெளியிலுள்ளவர்களுக்கு எப்படி உள்ளே நடந்த விஷயம் தெரியும்? 'ஹிந்து' தன் தலை அங்கத்தில் நிர்வாக சபை இந்திய அங்கத்தினரின் சட்ட ஞானமெல்லாம் எங்கே ஓடிப் போயிற்று என்று காரமாய்க் கேட்டது. அரசாங்கத்தாருடைய அடாத செயலுக்கு விரோதமேற்பட்ட பின்பு பத்திரிகைகளால் சும்மா இருக்க முடியுமா? ஆனால் கிருஷ்ணஸ்வாமி ஐயர் கவர்னர் காரிய சபையில் உண்மையில் பாடு பட்டது, கொஞ்சநாட்களில் வெளிவராமற்போகவில்லை.

"கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம்மால் முடிந்த அளவில் மிகவும் நன்மையையே செய்தார். முனிசிபல் சபையை முழுவதும் ஒழித்து விடுவது என்று எண்ணிக் கலெக்டர் ஒருவரைத் தனி நிர்வாக அதிகாரியாக வைத்துவிடுவது என்று அரசாங்கத்தார் தீர்மானிக்க முயலவும், அதைத் தடுத்தவர் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர்தாம். அடுத்தபடியாக, முனிசிபல் சபையே கொஞ்சகாலம் வேண்டாமென்று நிறுத்தவும் பார்த்தார்கள் அதிகாரிகள். அதையும் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர்தாம் தடுத்தார். இன்னும் இம்மாதிரி ஏற்பட்ட வேறு பல சந்தர்ப்பத்திலும் அவர்தாம் கெடுதல்களைத் தடுத்து வந்தார். ஆனால் அவர் போன வழியே எல்லோரையும் கொண்டு போவதும் சாத்தியமில்லை அல்லவா? இப்பொழுது அரசாங்கத்தார் கடைசியாக இட்டிருக்கும் உத்தரவுக்கும் அவர் கையொப்பமிடாமல் இருக்கமுடியுமா? ஆனால் ஊரில் உள்ளவர்கள், வசைமொழிக்கு அவரைத்தான் முக்கிய லக்ஷ்யமாக வைத்திருக்கிறார்கள். விதியும் எங்கு அதிருஷ்டத்தை வாரிக்கொட்டுகின்றதோ அவ்விடத்திலேயே சில கஷ்டங்களையும் சேர்க்கின்றது.''*

இவை ஸ்ரீநிவாஸசாஸ்திரிகள் அக்காலத்தில் குறித்த சில விவரங்கள். கடைசியாக விடுத்த உத்தரவிலும் பாலக்காடு முனிசிபாலிடியின் தேர்தல் அங்கத்தினர்களின் எண்ணிக்கையைக் குறைக்கத் தீர்மானித்திருந்ததைக் கவர்னர் வெளியிட்டிருந்தார். அது ஒரு நீண்ட உத்தரவு. பல காரணங்களை எடுத்துச் சொல்லி அரசாங்கத்தின் முடிவைச் சரியெனக் காட்ட வழி

*ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளின் கடிதம், 12-7-11.

தேடியது. அரசியல் அநுபவமுள்ள எவரும் அந்த உத்தரவின் சாராம்சத்தை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். பாலக்காட்டுக் கலாசாலை சம்பந்தமான காரியம் முழுவதுமே ஒரே ஊழல் என்றாலும் மிகையாகாது.

மேலே குறித்த சம்பவங்கள் சிறுவர்களாயினும் எங்கள் மனத்தையும் வேதனைக்குள்ளாக்கின. ஒருநாள் என் சகோதரிகள் தந்தையினிடம் வருத்தத்துடன், "எதற்காக உங்களை இப்படித் தினம் பத்திரிகைகளில் தாக்கவேண்டும்? அப்படி அவை தூஷிக்க என்ன தப்பிதம் நீங்கள் செய்தீர்கள்?" என்று கேட்கவும், அவர் சிரித்துவிட்டு, "ஒன்றுமில்லை அசடுகளே! மணி ஐயரவர்களைப்பற்றி ஒருவர் கடற்கரை மணலில் நாளை நிந்திக்கப் போகிறார் என்று அறிந்தால் எல்லோருமேதான் அதைக் கேட்கக்கூடுவார்கள். அவரைப்பற்றிய அவதூறு என்ன இருக்குமோ என்றுதான் பலருக்குத் தோன்றும். அம்மாதிரித்தான் என்னைப் பற்றியும் எதையாவது, தூஷித்து எழுதினால் பலருக்கு வெறும் வம்பும் உத்ஸாகமும். அது கிடக்கட்டும்; என்னைப்பற்றிய புகழ் மட்டும் தினம் பத்திரிகையில் வந்தால் உங்களுக்குப் பிடிக்கிறதே! கொஞ்சம் இப்படியுந்தான் வரட்டுமே" என்றார். சிறியவர்களின் சாமானிய புத்திக்கு அவர் சொல்வதன் உள்ளர்த்தம் அப்பொழுது விளங்கவில்லை. வருத்தம் மட்டும் நீங்கவில்லை. எப்பொழுதும் அவரை அப்பழுக்கு இல்லாதவராகவே உலகம் கருதவேண்டுமென்று மக்களுக்கு ஆவல் அதிகம். அரசாங்கக் காரியமும், பொதுஜன அபிப்பிராயமும் சரியானபடி உருவாகாத காலங்கூட அது. ஆகையால் ஓரளவு புதியதாகவே எல்லாம் தோன்றியதில் ஆச்சரியமில்லை. அரசியல் வாதிகள் இன்று ஒரு விதம் சொல்லுவார்கள், நாளை மாற்றிக் கொள்ளுவார்கள் என்ற கருத்து, முதிர்ந்த அநுபவம் பெறாதவர்களுக்கு அப்பொழுது புரியுமா?

III

கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினர்களில் தாம் ஓர் இந்தியப் பிரதிநிதியான காரணத்தினாலும், பல ஊர்களி

லுள்ள முனிசிபாலிடிகளைத் தம் பார்வையில் வைத்திருந்த காரணத்தினுலும், அவசியம் சென்னை மாகாணத்திலுள்ள பல ஜில்லாக்களுக்குத் தாம் வருஷந்தோறும் சுற்றுப் பிரயாணம் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டதை ஐயர் உணர்ந்தார். ஜனங்களுக்கு நன்மை செய்வதானுல், அவர்களுடைய குறைகளை நேரில் விசாரிப்பது கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினரான ஒருவருடைய காரியம் என்றும் அவருக்குப் பட்டது. ஆகையால் ஏற்கனவே திட்டம் செய்து வைத்திருந்தபடி, உதகமண்டலத்திலிருந்து கிளம்பிய அவருடைய சுற்றுப்பிரயாணம் முன்னதாகவே பத்திரிகைகளில் தெரிவிக்கப்பட்டிருந்தது.

அக்டோபர் மாதம் 15–ஆம் தேதி தொடங்கி, முதலில் திருச்சிராப்பள்ளி வந்துசேர்ந்தார். அங்குள்ள முனிசிபாலிடியின் வியவகாரங்களையெல்லாம் நன்கு விசாரணை செய்துவிட்டு, அங்குள்ள முக்கிய உத்தியோகஸ்தர்கள் முனிசிபாலிடி சட்டப் பரீக்ஷையில் தேறுவதை ஒரு நிபந்தனையாக இனி ஏற்படுத்துவது நிர்வாகத் திறமைக்கு இன்றியமையாததாகும் என்றும் குறித்துவிட்டு, அங்குள்ள முனிசிபல் ஆஸ்பத்திரிக்குச் சென்று அதையும் பார்வையிட்டார். அன்று சாயங்காலம் திருச்சியிலுள்ள பிரமுகர்கள் பலர் கூடி வரவேற்பு ஒன்றைப் பலமாகத் தயாரித்து உபசாரங்களை எல்லாம் விமரிசையாகச் செய்தார்கள். அவர்கள் வாசித்த வரவேற்புப் பத்திரத்தை அங்கீகரித்து விட்டுப் பதில் உரைக்கும்பொழுது,

“தனியாக இலாகாக்களைக் கவர்னர் சபையின் ஒவ்வோர் அங்கத்தினரின் முழுப்பொறுப்பிலும் விட்டிருப்பதாகப் பலர் தப்பபிப்பிராயங் கொண்டுள்ளார்கள்; ஒவ்வோர் அங்கத்தினரும் தம் பிரத்தியேக உரிமையில் செய்ய வேண்டியவைகளைத் தயார் செய்வது என்னவோ உண்மை. ஆனுல் அவை முடிவடைவதின் முழுப்பொறுப்பு மற்ற அங்கத்தினர்களையும் சேர்ந்ததே. எனக்குத் தனிக் கௌரவம் வேண்டியதற்காக இதைச் சொல்லவுமில்லை: பொறுப்பை முழுவதும் ஏற்றுக்கொள்ள எனக்குப் பிடிக்காத காரணமும் அல்ல. தெரிந்துகொள்ளாமல் சிலர் எல்லா விஷயங்களிலும் இஷ்டம்போல் அரசாங்கக் காரிய நிர்வாகப் பொறுப்பை ஒருவருடைய தனிப் பொறுப்பாக நினைந்து

கண்டனம் செய்யத் துணிவது தவறு என்று மட்டும் எடுத்துக் காட்டினேன்''*

என்றார். மேலும்,

''முடிந்த அளவில் பல இடங்களுக்குச் சென்று, உத்தியோகப் பொறுப்பின் அவசியத்தினால், ஊன்றிப் பல ஸ்தாபனங்களின் காரியங்களைக் கவனிக்கவும், கிடைத்த அவகாசத்தை வேண்டிய அளவு உபயோகப்படுத்திக் கொள்ளவுமே என்னால் சாத்தியம்''†

என்று சொல்லி முடித்தார் பிரசங்கத்தை.

பிறகு கலெக்டரும் முனிசிபல் அக்கிராஸனரும் திருச்சி ஜலவசதிகளின் பொருட்டு ஏற்படுத்திய எந்திர நிலையத்திற்கு அவரை அழைத்துச் சென்றார்கள். அன்று மறுபடியும் ஒரு பெரிய சிற்றுண்டி விருந்தும், சங்கீதக் கச்சேரி முதலியவைகளும் அவர் வருகைக்காகத் திருச்சி கண்டோன்மெண்டில் பிரமுகர்களால் தயாரிக்கப் பட்டிருந்தன. இம்மாதிரி வரவேற்பு உபசாரங்களும், கொண்டாட்டங்களும், சிற்றுண்டிவிருந்துகளும், இன்று இன்னும் அதிகமாக அரசாங்க அதிகாரிகளுக்கும் மந்திரி வர்க்கங்களுக்கும், எங்கும் நடப்பதைப் பார்த்த நமக்கு இவைகளில் வியப்பில்லைதான். ஆனால் அக்காலத்தில் ஓரளவு இவை கேவலம் சம்பிரதாயக் கட்டுப்பாடாக ஆகாத காரணமேதான், ஆங்காங்கே ஜனங்கள் தாமாக விருந்துகளையும் மற்ற வரவேற்புக் கொண்டாட்டங்களையும் அவருக்குத் தயாரித்ததைப் பத்திரிகையில் வாசித்தவர்களுக்கு வியப்பையே விளைவித்தன.

மறுநாள் கல்லணை சென்று, தலைமை இன்ஜினீயருடன் காவேரி நீர்ப்பாய்ச்சல் சம்பந்தமான விவரங்களை யெல்லாம் நேரில் ஒழுங்காக அறிந்துகொண்டார். ஏற்கனவே முக்கிய இன்ஜினீயரிடம் காவேரி நீர்ப்பாசன விவரங்களைக் குறித்துப் பல விஷயங்களையும் கடிதம் மூலம் கேட்டறிந்திருந்தார்.

---

* 'மெயில்', பிரசங்கம், 15—10—1911.

† அதே பிரசங்கம், 15-10-11.

போகும் வழியில் தஞ்சாவூர் ரெயில்வேஸ்டேஷனில் தங்கும்படி நேர்ந்தது. பலர் அவரைப் பார்க்க ஆவலுடன் அவ்விடத்தில் கூடியிருந்தார்கள். பெரிய பதவியைச் சார்ந்த இவருடைய எளிய சுபாவம் அங்கு நடந்த ஒரு சம்பவத்தினுல் பலருக்குப் புலனுகியது. மேதாஸ்ரீ ராதாமங்கலம் நாராயண சாஸ்திரிகள் திருவையாறு மஹாராஜா கலாசாலேயில் அப்பொழுது வியாகரண பண்டிதராக இருந்தார். பண்டிதர் உலகஞானம் அதிகம் பெற்றவரல்ல. கனவானுன ஒருவரின் நெருங்கிய பழக்கம் ஏற்பட ஏற்படக் குடிவெறியில் ஆடுபவனைப்போல் சதா சுலோகங்களேப் பாடியும், யார் இருப்பினும் சமயம் முதலியவைகளே அறிந்துகொள்ளாமல் தாராளமாக அவருடன் சல்லாபம் செய்யவும் தொடங்கிவிடுவார். மற்றவர்களுக்கு அவருடைய நடத்தையில் அருவருப்பு ஏற்பட்டதை, கிருஷ்ணஸ்வாமி ஐயர் மதிப்பதில்லே. அவர்தாம் உதகமண்டலத்தில் இரவு தூங்கும்பொழுது குளிரினுல் சாஸ்திரிகளின் உடம்பு நடுங்குவதைக்கண்டு, தம்மேல் உள்ள உயர்ந்த போர்வையை எடுத்து அவர்மேல் போர்த்திய வள்ளலாயிற்றே! என் தந்தையிடம் அவ்வளவு அன்பைப் பெற்றவர் பண்டிதர்.

கிருஷ்ணஸ்வாமி ஐயர் தஞ்சை ரெயில்வே ஸ்டேஷனில் சாய்வு நாற்காலி யொன்றில் சாய்ந்திருக்கவும், அதன் கைகளின்மேல் தம் கால்களே நீட்டி வைத்துக் கொண்டு தெரிந்த சுலோகங்களே ராகத்துடன் பாடத் தொடங்கினுர் பண்டிதர். கொஞ்சமும் மரியாதையற்ற அவருடைய செயலில் பலருக்குத் தாங்காத கோபம் பொங்கியது. ஆனுல் யாரும் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் நெருங்கி, பண்டிதர் குற்றத்தைச் செய்ததாக நிரூபிக்க முடியாது. "எவ்வளவு தைரியம் இந்தச் சாஸ்திரிகளுக்கு?" என்றுமட்டுமே அக்கம் பக்கங்களிலுள்ளவர்கள் முணு முணுத்தார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்குப் பண்டிதரின் அசட்டுச் செய்கை தெரியாததல்ல. அவரிடம் வேண்டிய வர்கள் தைரியங்கொண்டு பண்டிதரின் அளவு மீறிய பரிசயத்தையும் மரியாதைக் குறைவையும் நிந்திக்கும்

பொழுது, மிகவும் நிதானமாக அவர், "ஒன்றும் தெரியாத வர்தாம். ஆனால் தம் பிழையை அறிந்து என்னிடமுள்ள சலுகையில் இப்படி அவர் செய்வதாக நான் எண்ண வில்லை" என்றார். பிறரைத் தூக்கி எறியும் வேகம் உள்ளவர், சர்வ சாந்தமாகச் சிலவற்றை மன்னித்ததைக் கண்டவர்கள் இன்ன சொல்லுவதென்று தெரியாமலும் விழிப்பார்கள்.

மற்றொரு சம்பவமும் அவ்விடத்தில் நடந்ததாகச் சொல்லுவார்கள். தஞ்சாவூர்க் கலெக்டர், தஞ்சாவூருக்கு நிர்வாக சபை அங்கத்தினரின் வருகையை அறிந்திருந்தும், அவரைப் பேட்டி காண வரவில்லை. கலெக்டர் ஒரு வெள்ளைக்காரரல்லவா ? இந்திய அங்கத்தினருக்குரிய மரியாதையைக் காட்டாவிட்டாலும் பாதகம் இல்லை என்று எண்ணினாரோ என்னவோ தெரியாது. உடனே சென்னை அரசாங்கப் பிரதமக் காரியதரிசிக்கு அம்மாதிரிக் கலெக்டர் வராததைக் குறித்து விசாரிக்கும்படி உத்தரவு செய்தார் நிர்வாக சபை அங்கத்தினர். சின்ன விஷயந்தான் என்றாலும் பலத்த விசாரணையில் அது முடிந்ததாகச் சொல்லுவார்கள்.

அடுத்தபடியாகக் கும்பகோணத்திற்கு அவர் விஜயம் செய்தார். அந்தப் பட்டணம், அவருக்குப் பழைய ஞாபகங் களில் என்றும் மறக்க முடியாதது. அங்கேதான் பெயர் போன டி. கோபாலராவ் போன்ற அறிவாளிகளிடம் இளமையில் கல்விப்பயிற்சி பெற்றிருந்தார். பெரிய வர வேற்பை முனிசிபல் அக்கிராஸனர் அவருக்கு அளித்தார். தம் மாமன் கிருகமான திருவிடைமருதூருக்கும் மத்தி யான்னம் சென்று திரும்பிவந்திருந்தார். மஹாமகக் குளத் தைத் தூருவெடுத்துச் செப்பனிட வேண்டிய சிற்சில திட்டங்களைப்பற்றி விசாரித்துவிட்டு, மறுநாள் சென் னைக்குத் திரும்பினார்.

சுற்றுப்பிரயாணம் மின்னல் பிரயாணமாயிருந்தது. அவருடைய அசாதாரண வேகமும், அடுத்து அடுத்துக் காரியங்களை நிர்வகிக்கும் சக்தியும் பலருக்கு அக்காலங் களில் நன்கு வெளிப்பட்டன. அடுத்த மாதம் மதுரை,

ராமநாதபுரம், ராமேசுவரம் முதலிய இடங்களுக்கு உத்தியோக முறையில் பிரயாணம் செய்ய வேண்டியிருந்தது. மூத்தசகோதரியையும், என்னையும், மாப்பிள்ளை ஆர். நாராயணஸ்வாமி ஐயரையும் தம்முடன் அழைத்துச் சென்றார். மதுரையில் அவருடைய புகழ் அக்காலத்தில் மண்டிக் கிடந்தது. நண்பர்களும் அவரிடம் கௌரவம் வைத்தவர்களுமே அவ்வூரில் அதிகம். நவம்பர் 12–ஆம் தேதி மதுரை ஸ்டேஷனில் ரெயில் வண்டி வந்து நிற்கவும் கூட்டம் எள்ளுப்போட்டால் எள்ளு விழாதபடி இருந்தது. வண்டியிலிருந்து இறங்குவதற்குள் ஜரிகை மாலைகளும், ரோஜா, மல்லிகை மாலைகளும் அவர் கழுத்தில் விழ ஆரம்பித்தன. மித்திரர்களின் சிரித்த முகங்களே புஷ்பங்களைக் காட்டிலும் மலர்ந்து எங்கும் காணப்பட்டன. மேள வாத்தியத்துக்கும், மற்ற விருதுகளுக்கும் குறைவில்லை. ஊர்வலமும், நடை பாவாடையும், வாய்த்தன; வழியெல்லாம் ஆரதிகளும், கோலாட்டங் கும்மிகளும் எதிர் கொண்டன. வண்டியிலுள்ள மற்றவர்கள் வண்டியை விட்டே கீழ் இறங்க முடியவில்லை. ஆகையால் அவ் வண்டியை மட்டும் கழற்றிப் பக்கத்திலுள்ள வேறு இருப்புப் பாதையில் விட்டு விட்டு ரெயில் ஊதிக் கொண்டே சென்றது.

ஏற்பாடு செய்யப்பட்ட இடத்திற்கு (ராமநாத ராஜாவின் பங்களாவுக்கு)ச் செல்லப் பகல் ஒருமணிக்கு மேலாகிவிட்டது. வண்டியில் அவர் போகையில், மதுரையின் தெருக்களிலுள்ள ஜனங்கள், "கவர்னர், கவர்னர்!" என்று அவரை வரவேற்று உரக்கக் கத்துவார்கள்.

மதுரையில் பலவித அலுவல்கள் அவருக்கு. மதுரை முனிசிபாலிடி, வரவேற்புப் பத்திரம் ஒன்றை வாசித்தது. முக்கியமான இரண்டு வசதிகளைப் பத்திரத்தில் அவர்கள் கேட்டிருந்தார்கள்; பட்டணச் சாக்கடைகளின் அமைப்பைப்பற்றியும் ஜல வசதிகளின் ஏற்பாட்டைப் பற்றியுமே விண்ணப்பஞ் செய்தார்கள். இரண்டிற்கும் ஒரே சமயத்தில் அவரிடமிருந்து பதில் வந்தது. முதல் விஷயத்

திற்கு 21 லக்ஷம் ரூபாயும் இரண்டாவதற்கு 3 லக்ஷம் ரூபாயும் திட்டம் போட்டதன்பேரில், பாதித் தொகையை அரசாங்கத்தார் ஏற்றுக்கொள்ளத் தயார் என்று தெரிவித்தார். மற்றப் பாதியை முனிசிபாலிடி கடனாகவோ வேறு விதத்திலோதான் ஏற்பாடு செய்யும்படி நேரிடும் என்றும் சொன்னார். அடுத்தது 'விக்டோரியா எட்வர்ட் ஹாலு'க்கு அஸ்திவாரக்கல்லை நாட்டும் விழாவுக்குச் செல்ல வேண்டியிருந்தது. அதைச் சிறப்புடன் நாட்டிவிட்டு, இரவு மீனாட்சி அம்மன் கோவிலில் அம்பிகையின் கர்ப்பக்கிருகத்தின் சமீபம் நின்று ஏகாந்த சேவையையும் செய்துகொண்டார். நவம்பர் 13-ஆவது தினம் மண்டபம் சென்று, பாம்பன் வாராவதி கட்டுவதற்காக ஆரம்பித் திருந்த ஏற்பாடுகளையெல்லாம் சுற்றிப் பார்வையிட்டு விட்டு, சேது ஸ்நானம் செய்து முடித்துக்கொண்டு இரண்டே நாட்களில் சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

அவ் வருஷம் சர்வகலாசாலை மாணாக்கர்களுக்கு உபதேச மொழிகளைச் செய்ய அவகாசம் அவருக்குக் கிடைத்தது. அந்தக் கௌரவம் எல்லோருக்கும் சாமானியமாகக் கிட்டுமென்று பழைய காலங்களில் நினைப்ப தில்லை. பொறுக்கிய அறிவாளிகளுக்கே அந்த உரிமை கிடைக்கும். கவர்னர்களுக்கும், முக்கியமான சில இந்திய உத்தியோகஸ்தர்களுக்குமேதான் அந்தக் கௌரவம் பொருந்தும் என்பது அக்காலத்து நினைப்பு. ராஜா ஸர் டி. மாதவராவ், ஸர் டி. முத்துஸ்வாமி ஐயர், ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயர், ஸர் வி. பாஷ்யமையங்கார் முதலியவர்களே இந்தியர்களில் அதற்குமுன் அவ்விடத்தில் பிரசங்கத்தைச் செய்திருந்தார்கள்.

கிருஷ்ணஸ்வாமி ஐயரின் வாழ்க்கையின் சாராம்சம் என்னவென்று யாராவது கேட்டால், அவருடைய சர்வகலாசாலைப் பிரசங்கத்தில் அடங்கியவைகள்தாம் என்று சொல்லிவிடலாம். உயர்ந்த தேசபக்தியையும், புராதன சம்பிரதாயங்களில் ஆர்வத்தையும், மேல்நாட்டுப் பழக்கத்தினாலும் விஞ்ஞானப் பயிற்சியினாலும் நமக்கு விருத்தியாக வேண்டிய புதிய ஞானங்களையும், சரித்திர ஆராய்ச்சி

முதலியவைகளையும், இன்னும் படிப்பாளிகள் செய்ய வேண்டிய கடமைகளையும்பற்றி உணர்ச்சியுடனும், தெளிவுடனும் அச்சிட்ட பிரசங்கம் உணர்த்தியது. அத்தகைய உயர்ந்த பிரசங்கத்தைக் கேட்டு ஆனந்திக்க, கவர்னரான ஸர் ஆர்தர் லாலி இல்லாவிட்டாலும், அவருக்குப் பிறகு வந்த கார்மைகேல் பிரபு சற்றும் அவருக்குக் குறைவில்லாமல் பேசுபவரின் கம்பீரமான குரலையும், வாக்கின் வன்மையையும் கேட்டுச் சந்தோஷித்தார். மழைக்காலமானதால் எங்கும் சளசள வென்று மழை பெய்வதன் சப்தம் கேட்டுக்கொண்டிருக்கையில், சர்வகலாசாலை ஹாலில் கூடிய 2000 ஜனங்களும் கடைசி வரையில் கேட்கும்படி அவருடைய குரல் எழுந்தது. மேலும், முந்திய தினமே தம் குரல் கடைசி வரையில் கேட்கின்றதா என்பதை அறிய, அவ்விடம் சென்று ஒத்திகையொன்றையும் தாமாகவே நடத்திப் பார்த்திருந்தாரல்லவா? கேட்டவர்களுக்கும் பூர்ண திருப்தியை அளித்தது அவர் பிரசங்கம்.

"நானும் முப்பத்திரண்டு வருஷங்களுக்கு முன்னமே இந்தப் பெரிய இடத்தில் முதல் தடவை உட்கார்ந்தது உண்டு...யாராவது அப்பொழுது என்னிடம் வந்து 'நீயும் ஒருநாள் இதே மேடையில் நின்றுகொண்டு இன்னும் பெரியதான சபை ஒன்றுக்கு இவை போன்ற விஷயங்களைக் குறித்துப் பேசநேரிடும்' என்று சொல்லியிருந்தால், அதை நம்பி இருக்கவே மாட்டேன். என் மனோராஜ்யங்கள் ஒருகாலும் இன்று காண்பதை எட்டியிருக்க மாட்டா"* என்று வினயமாக ஆரம்பித்தார். கேட்டவர்கள் அவருடைய நிமிர்ந்த முகத்தின் அழகையும், வார்த்தைகளின் உணர்ச்சியையும் பருக ஆரம்பித்தார்கள். ஆரம்பித்த சொற்களின் கவர்ச்சிதான் பிரசங்கத்தை முழுவதும் கவனத்துடன் கேட்கவைத்தது. எல்லோரும் பேசுகின்றவரின் முகத்தையே கவனித்தார்கள். கவர்னர் கார்மைகேல் பிரபு அண்ணாந்து அவரையே பார்க்கத் தொடங்கி விட்டார்.

பரிக்ஷைகளில் தேறின பிற்பாடு வாழ்க்கைத் துறையில் திண்டாடும் வாலிபர்களின் சிரமத்தைப்பற்றிச்

* பிரசங்கம், 23-11-11.

சிற்சில உபயோகமான மொழிகளைச் சொல்லிவிட்டுப் பின்னும் பேசலானார்:

"உங்கள் வாழ்க்கையின் முடிவில் 'கேவலம் பணம் சம்பாதிக்கப் பாடுபட்டவன், மற்றப்படி ஒன்றுமே தெரியாதவன்' என்ற அவதூற்றைப் பெறாமலும், கொக்குக்கு ஒன்றே மதி என்று ஒரு காரியத்தைமட்டும் சதாசெய்து பாடுபடுவதில் கழிக்காமலும் இருப்பதுதான் உயர்ந்த நோக்கமாகும். சிலர், பாவம், பிழைக்கும் வழியைத் தவிர இரண்டாவதான ஓர் ஆசையையும் வாழ்நாளில் ஏற்படுத்திக்கொள்ளாத காரணத்தினால் கடைசிக் காலத்தில் வாடுகிறார்களே! அம்மாதிரியும் உங்கள் கதி ஆகாமல் உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். சில உயர்ந்த இந்தியர்களைப் பற்றி எனக்குத் தெரியும். வேறு வழியில்லாமலும், எவ்வளவோ உபயோகமான பொதுக் காரியங்களில் ஈடுபட வகையில்லாமலும் பிழைக்கும் தொழிலில் சிக்கி இறக்கும் வரை அவர்கள் இருந்ததையும் நான் அறிவேன்."

ஆம், 'ஸர் வி. பாஷ்யமையங்காரின் மேதை மற்றத் துறைகளிலும் உலகிற்குப் பயன்பட்டிருந்தால் எவ்வளவு நம்மை உயர்த்தி இருக்கக்கூடும்! ஆனால் ஏனோ அவரிடம் சட்டஞானத்தைத் தவிர வேறு ஒன்றும் பிரவேசிக்காமல் அவரைத் திண்டாட வைத்தது!' என்ற எண்ணம் அடிக்கடி அவரிடம் ஏற்படுவது உண்டு. அப் பெரியாரையே பெயரைக் குறிக்காமல் சிறுவர்களுக்கு ஞாபகப்படுத்திவிட்டார்.

அவருக்கு நம் நாட்டின் பண்டைச் சிறப்பு உடனே ஞாபகத்தில் வந்துவிட்டது.

"'அர்த்தகரீச வித்யா' என்பது வாஸ்தவத்தில் கல்வியின் ஒரு லக்ஷ்யந்தான். ஆனால் உபநிஷத்துக்கள் சொல்வது இதைவிட எவ்வளவோ மேம்பட்ட நோக்கமே -"

'யதேவ வித்யயா கரோதி ததேவ வீர்யவத்தரம் பவதி' என்ற மேற்கோளும் ஞாபகத்தில் வந்தது.

"இன்று ஏற்பட்டிருக்கும் வாழ்க்கையின் குறுகிய நோக்கங்களினால், வறுமை வரினும் உயர்ந்த ஞானமார்க்கத்தையே பின் பற்றிய பழைய காலத்துக் கருத்தை நாம் குறைக்க முடியாது. அரசர்களின் கிரீடங்களும் மண்ணில் பதிந்தனவே ஒரு காலத்தில், வாழ்க்கைத் தத்துவத்தைக் கண்டு பிடிக்க!"

என்று நம் நாட்டின் புராணங்களில் தோன்றிய அரசர்

களான ஜனகாதிகளை நினைத்து வாய்விட்டுப் புகழ்ந்தார். வாழ்க்கையின் நோக்கத்தை விவரிக்குங்கால்,

"ஆம்; சமயாசாரமே ஞான விளக்கிற்கு எண்ணெயாகிறது. பாரத பூமியில் அந்தணர்களும் சந்நியாசிகளும் பரம்பொருளைத் தேடியும், உண்மையைக் காணவும் ஒரு காலத்தில் மலைச் சிகரங்களையும் காடுகளையும் கூட்டங் கூட்டமாக அடைந்தார்க ளல்லவா? மேல் நாடுகளில் அரசர்கள் வெகுகாலம் வரைக்கும் இம்மாதிரி தத்துவ விசாரணை செய்கின்றவர்களைத் தனியே விலக்கி வைத்திருந்தார்கள். ஆனால் இங்கு, ரிஷிகளையும், உலகத்தைத் துறந்த ஞானிகளையும், கவிகளையும் அரசர்கள் தம் எதிரே தத்துவ விசாரணைகள் செய்யும்படிச் செய்து, அதனால் மிகுந்த பெருமையை அடைந்தார்கள்"

என்றார். ரவீந்திரநாத் டாகுர் இம்மாதிரியான கருத்துக்களையே வைத்துப் புஸ்தகம் புஸ்தகமாக எழுதித் தள்ளியிருக்கிறார். நம் தேசத்தைப்பற்றிப் பெருமை கொள்ளவும் இதைவிட நியாயமான காரணம் வேறு கிடையாதன்றோ? ஞானத்தைப் பெறவே பல இடங்கள் இத்தேசத்தில் புனித ஸ்தலங்களாக ஆயின.

"வாராணஸி க்ஷேத்திரம் உலகிலேயே மஹா புனிதமானது; மேல்நாட்டில் வளம்பெற்ற கலைகளுக்கும் கல்விக்கும் இருப்பிடமும் கிரேக்கர்களின் உயிர் நிலையுமான ஆதென்ஸ் நகரை விடப் புராதனமானது. வெகுகாலம் அரசு செலுத்திப் பாரெங்கும் புகழ் வீசிய ரோமாபுரியையும்விட மேம்பட்டது. சரித்திரத்தில் வழங்கப்படும் நகரங்களிலேயே விசித்திரமான பாரிஸ் பட்டணத்தின் பல்கலைக் கழகங்களையும் சாமானியமாகச் செய்த பெருமை காசிக்குத்தான். உலகில் எல்லாவிடங்களிலிருந்தும் வரும் வர்த்தகத்தின் சீரையும் சிறப்பையும் அடைந்த லண்டனைவிடவும் கியாதி பெற்றது. எவ்வளவு காலமாய் இந்த வாராணஸி இந்தியர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டிருக்கிறது! அதில் வசித்த பெரிய ஞானிகளின் பரம்பரையைத்தான் நினைத்துப் பலர் அதை நாடுகிறார்களா? அல்லது அவ்விடத்தில் உயிர்நீத்தால் சுவர்க்கம் ஏக வழி ஏற்படுமென்றுதான் அங்கே பலர் செல்லுகிறார்களா? இன்னதென்று நம்மால் சொல்ல முடியாது!"

காசியைப்பற்றி உயர்த்திச் சொல்லும் இவ்வாக்கியம் ஆங்கிலச் சுவைகொண்ட இலக்கியமாகவேதான் தோன்று

கிறது. வெகுநாட்கள் கழித்து ஸர் எஸ். ராதாகிருஷ்ணன் என்னும் உலகப் பெரியார்,

"எவ்வளவு தரம் அந்த வாக்கியங்களை நான் மறுபடியும் மறுபடியும் சொல்லிப் பார்த்திருக்கிறேன் ! என் மனத்தை விட்டு ஒருநாளும் அவை அகலா"

என்று உண்மையான மதிப்புடன் அவைகளை நினைத்துச் சொன்னார்.

நம்முடைய நாட்டில் உதித்த பெரியவர்களையெல்லாம் ஒருதரம் உபந்நியாசகர் நினைத்துக்கொண்டார். தற்காலத்தையும் மனத்தினால் ஒருமுறை யோசனைசெய்து பார்த்தார். மேல்நாட்டு நாகரிகத்தின் தாக்குதலினால் நாம் பெற்றிருக்கும் மாறுதல்களை முழுவதும் இழிவாக அவர் கருதவில்லை. எத்தனையோ விஞ்ஞான சாஸ்திர முதிர்ச்சிக்கும், விரிவான அறிவுக்கும் மேல்நாட்டின்பால் நாம் நன்றி காட்டத்தான் வேண்டும்.

"ஆம், கல்வித் துறையில் பெரிய காரியம் செய்யப்பட்டிருப்பது உண்மை. ஆனால் அதைவிட இன்னும் பெரியவைகள் பாக்கி நிற்கின்றன"

என்று எச்சரிக்கை செய்தார். சர்வகலாசாலையில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்களையும் சுருக்கமாய்க் குறித்தார். நன்மைகள் நிச்சயம் நாளடைவில் வருமென்று உறுதி கூறினார். ஆனால் விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சி செய்வதற்கு இங்குள்ள வசதிகளின் குறைவைக் காட்டி வருந்தினார். மேல்நாடுகளில் வித்தியா நிலயங்களுக்கும், அறிவாளிகளின் சௌகரியத்தின் பொருட்டும் வண்மையாளர் கொடையாக அளிக்கும் நிதிகளை எடுத்துச் சொன்னார்.

"நானும் இவ்வழியில் வருஷம் ரூபாய் 250-0-0 ஆவது வட்டி வரக்கூடிய தொகை ஒன்றை வைக்கச் சர்வகலாசாலை அதிகாரிகளிடம் அநுமதி பெற்றிருக்கிறேன். மிகவும் போற்றக் கூடியவரும், உயர் கல்வியின்பால் செய்த தொண்டுகளுக்காகச் சர்வகலாசாலையினிடமிருந்து முதல் முதலில் டாக்டர் பட்டம் பெற்ற பெரியாருமான ஸ்ரீ மணி ஐயர் அவர்களின்பேரில் அந்த நிதியை நான் ஏற்படுத்தி யிருக்கிறேன்"

என்றார். மறுநாள் மணி ஐயர் அதை அறிந்து,

"எனக்கும் எதிர்பாராத விதத்தில் அழிவின்மையை அளித்துவிட்டீர்கள். வெகுகாலம் இந்தப் பிரசங்கத்தை ஒருவரும் மறக்கமாட்டார்கள்; அதுவரையிலும் என் பெயரும் பலருடைய திருஷ்டியைக் கவரும். என் அதிருஷ்டந்தான் என்ன! ஜன்மாந்தர புண்ய கர்மாவின் பலந்தானே இது!"*

என்று பெருமிதம் அடைந்தார். மணி ஐயருடைய வாக்கியங்களில் சொட்டும் உண்மையான வினயந்தான் என்ன! அவருடைய பெயர் வெகுகாலம் இருப்பது அவர் செய்த நற்காரியங்களினாலேதான் என்று உலகம் முழுவதும் அறியும். ஆனால் எதற்கும் தங்கள் மார்பைத் தட்டும் சிற்றறிவினருக்கு இந்த மொழிகளின் ஆழ்ந்த கருத்து உயர்ந்த ஞானத்தை ஊட்டுவதற்கு வழியாகும். சிறிய காரியத்தைச் செய்துவிட்டுப் பிரமாதப்படுத்திச் சொல்லிக் கொண்டு திரியும் சாமானிய மனிதர்களுக்கும், பெரிய காரியங்களைச் செய்த பின்னரும் தம்மைப்பற்றிச் சாமானியமாகவே கருதிய உத்தமருக்கும் இதுவேதான் வித்தியாசம்.

பிறகு கிருஷ்ணஸ்வாமி ஐயர் தம் பிரசங்கத்தில், நாட்டில் எங்கும் எழுந்திருந்த தவிப்பையும் மனக் குறையையும் பற்றிச் சொல்லிவிட்டு, பின்வருமாறு பெருமிதத்துடன் பேசினார்:

"நம்முடைய தேசம் பெரியவர்கள் இங்கு இல்லையே என்று ஒருநாளும் வருந்தவேண்டியதில்லை......சரித்திரத்தைப் புரட்டிப் பார்த்தால் உலகிலுள்ள எந்தத் தேசத்தினருக்கும் நாம் குறைந்தவர்களல்ல என்பது விளங்கும். ஆம், இப்பெரிய வம்சபரம்பரை முடிவு அடையவில்லை. வருங்காலத்தின் வித்துக்கள் பாரதத் தாயின் கர்ப்பத்தில் கிடக்கின்றன. ஒருகாலத்தில் வளம்பட ஓடிய ஜீவநதி இன்று கோடையின் கொடுமையினால் வற்றிச் சிறிதாய் இருக்கலாம்; ஆனால் பெரிய ஆத்மாக்களைக் கொண்டுவரக்கூடிய வெள்ளம் ஒருநாள் பெருகி வராமல் இருக்காது. அதற்கு வேண்டிய அறிகுறிகளும் இங்கு இல்லாமலில்லை."

என்ன தெளிவான திருஷ்டி அவருடையது! இன்று நாம் கண்டு பிரமிக்கும் மஹாத்மா காந்தியும், மஹா கவி ரவீந்திரரும், இன்னும் மற்றத் துறைகளில் சிறந்து

* டாக்டர் எஸ். சுப்பிரமணிய ஐயரின் கடிதம், 24-11-11.

விளங்கும் உலகமறிந்த இந்தியர்கள் யாவருமே அப் பெரியாரின் சொல்லை நிரூபிக்கின்றார்கள்.

முடிவில் சிறுவர்களைப் பார்த்துச் சொன்ன வார்த்தைகள் வருமாறு :

"ஞான விளக்கின் உதவியைக் கொண்டேதான் நீங்கள் உழைக்க வேண்டும்; மேலே கல்வியை வளர்க்கவும் வேண்டும். 'யத்நேஹாஸ்தி நகுத்ரசித்' என்ற உண்மையை நிரூபித்த மஹாபாரதம் தைரியமாய்ச் சொல்லியுள்ளது யாதெனில்: 'சுருதி, ஸ்மிருதிகளும், நம் பரிசீலன சக்தியைத் தாங்க முடியா விட்டால், ஒருகாலும் அவை கௌரவம் அடையமாட்டா'...... அசோகவர்த்தனர் என்ற சக்கரவர்த்தி சொன்னமாதிரி நீங்களும் 'எதை நாம் புத்தியினால் சரி என்று அறிகிறோமோ, அதையே செய்து காட்டுவோம்!' என்ற விரதத்தை மேற்கொள்ள வேண்டும்....எங்கே சென்றாலும், எதைச் செய்தாலும், சுருதியில் சொல்லியபடி எல்லாச் சந்தர்ப்பங்களிலும் மூன்று தரம் இச் சொற்களைச் சொல்ல மறக்காதீர்கள் : ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி:"

பிரசங்கம் மழை பொழிந்து நிற்பதுபோல் ஓய்ந்தது. ஆனால், கரகோஷம் உடனே கூட்டத்தில் கிளம்ப வில்லை. எல்லோரும் மந்திர சக்தியினால் கட்டுண்டவர்கள் போல் இடங்களில் உட்கார்ந்திருந்தார்கள். இந்தியர்கள் எல்லோரும் ஒருங்கே ஞாபகத்தை எங்கேயோ செலுத்திவிட்டார்கள். பலருக்கு வெளிச்சம் தெரிய ஆரம்பித்தது. வெள்ளைக்காரர்களில் சிலருக்குப் பிரசங்கி யின் உணர்ச்சிவேகம் மட்டும் சிறிது புலனாகியது. கலா சாலையை விட்டு வாழ்க்கைத் துறைகளை நாடும் வாலிபர் களுக்குப் பேச்சில் ஒரே பிரமை தட்டியதுமல்லாமல், பேசியவர்பால் என்றும் இல்லாத உயர்ந்த கௌரவமும் ஏற்பட்டது. 'சாந்தி : சாந்தி : சாந்தி :' என்ற கடைசி வாக்கியங்களைச் சொல்லி முடித்து, தம் ஆசனத்திலும் அவர் உட்கார்ந்த பிறகே, கரகோஷம், சர்வகலாசாலை மண்டபத்தின் மேற்கூரையைப் பிய்க்கும்படி எட்டியது.

சர்வகலாசாலையின் மேல் மாடியில் அங்கத்தினர்கள் மறுபடியும் கூடிய பொழுது, கவர்னர் கார்மைகேல் பிரபு, "இவ்வளவு தேசபக்தி வாய்ந்தவரா தாங்கள்!" என்று அவரைப் பார்த்துச் சொல்லிக் கையையும் பிரேமையுடன்

பற்றினார். ''ஹிந்து'வும் மறுநாள் மற்றப் பத்திரிகைகளுடன் சேர்ந்து அப்பிரசங்கத்தைப் போற்றி எழுதியது.

மகான் மணி ஐயர் அன்பு ததும்பும் மொழிகளில்,

''என் தாழ்ந்த அபிப்பிராயத்தில், இந்த நாட்டிலேயே எங்கும் வாசித்தறியாத உயர்தரமான பிரசங்கம் இது. இந்திய நாட்டின் மக்களில் நீங்களே சிறந்தவர். பலகாலம் இதை நன்கு வாசிக்க வேண்டும் நம் ஜனங்கள். விஷயந்தான் உயர்ந்ததா என்றால், அது மட்டும் இல்லை; பாஷையின் அழகும் இலக்கியமாகவேதான் இதைச் செய்திருக்கிறது''*

என்று கூறினார்.

உண்மையான ஆசீர்வாதம் ஒரு நாளும் வீண் போகாது. அன்று தொடங்கி மூன்று தலைமுறைகளாக அந்தப் பிரசங்கத்தை வாசிக்காதவர்கள் இல்லை. வாசித்தவுடன் அவர்களுக்குப் புதியதோர் உணர்ச்சி உண்டாகித் தேகத்தின் களைப்பு நீங்கி மனசும் உத்ஸாகம் பெற்று எழுகின்றதை நாம் நேரில் காணலாம்.

பிரசங்கத்தைத் தாம் எழுதும்பொழுது தம்மைப் பற்றிய எண்ணம் கொஞ்சங்கூட இல்லாமல் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளிடமே முதலில் அதைக் காட்டி, ஆங்கில பாஷையின் மர்மங்களை நன்கு உணர்ந்த அவருடைய திருஷ்டிபட்டால், தமக்கு இன்னும் கவலையின்றி அதை அச்சிடத் தைரியமுண்டாகும் என்று தந்தையார் கருதினார். சற்றும் தயங்காமல் சாஸ்திரிகளும் தம் அபிப்பிராயங்களையும், திருத்தங்களையும் தாராளமாக வெளியிட்டார். எழுதும் பழக்கத்திலுள்ளவர்கள் என்றும் கையாள வேண்டிய முறையும், கற்றவர் என்ற நம்பிக்கையுள்ள மற்றொருவரிடம் காட்டி அங்கீகாரம் பெற்ற பின்னரே, எழுதியதை வெளியிட வேண்டும் போலும்.

---

* கடிதம், 24-11-11.

## அத்தியாயம் 32

### டில்லி தர்பாரும் அந்திய தசையும்

நட்டோரை உயர்புகூறினன்
வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத்தான் இரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடையவைய்த் தோங்குபுகழ் தோற்றினன்-ஆங்குச்
செய்ப வெல்லாஞ் செய்தனன். — புறநானூறு.

ஆங்கில அரசாங்கம் இந்தியாவை ஆளும் விதமே தனி. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த மற்றத் தேசங்களை நடத்தும் விதத்தில் கொஞ்சங்கூடச் சம்பந்த மில்லாமலேதான் இன்று வரைக்கும் இந்தியாவை இங்கிலாந்து நடத்தி வருகிறது. பெரிய மானக் கேடாகவேதான் நம்முடைய தேசத்தின் வரலாற்றை நாம் சொல்ல முடியும். இனியும் எத்தனை காலம் இப்படி இருக்க வேண்டுமோ தெரியவில்லை!

ஆங்கில அரசியல் சாஸ்திர பண்டிதர்கள் புதிய புதிய விதமாக இந்தியாவின் நிலைமை தனி ரகத்தைச் சேர்ந்ததென எடுத்துக் காட்டுவார்கள். இங்கிலாந்து தேசத்து அரசர், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை ஐக்கியப் படுத்தும் சின்னமாயினும், இந்தியாவைப் பொறுத்த மட்டில் இங்குள்ள நாற்பது கோடி மக்களின் கதிக் கெல்லாம் மூலஸ்தானம் அவரே என்றும் சொல்லத் துணிவார்கள். அரசனைத் தெய்வமாகக் கொண்ட புராதன தேசத்தின் மனப்பான்மையையும் தங்கள் சுயநலத் திற்கு நன்கு உபயோகப்படுத்திக் கொள்ள அவர்களுக்குத் தெரியாதா? சீமையில் கியாதி பெற்ற பீகன்ஸ் பீல்ட் பிரபு, விக்டோரியாவுக்குச் 'சக்கரவர்த்தினி' என்னும் கௌரவத்தை, இந்திய தேசத்தை அரசாட்சி செய்

வதன் உரிமையாக உலகிற்குத் தெரிவித்தபோது, இந்தியாவில் லிட்டன் பிரபு, அதற்குத் தகுதியான ஏற்பாடுகளுடனே அம்மாதிரி மரியாதையை இத்தேசத்தில் செய்து காட்டவேண்டுமென்று தீர்மானித்தார். பீகன்ஸ்பீல்ட் பிரபுவிற்கு இது சம்பந்தமாக எழுதிய கடிதமொன்றில் லிட்டன்,

"ஒருகால் நான் செய்யும் ஏற்பாடுகளை அனுவசியமான ஆரவாரம் என்று கருத நேரிடும்...ஆனால் அவ்வளவு நுட்பமாய் இவைகளைச் சீர்தூக்கிப் பார்க்கலாகாது. இம்மாதிரிக் காரியங்களே பெரிய சைனியங்களையும் அரசர்களையும் நம்பால் வசியப் படுத்தும்"

என்றெழுதினார். ஆனால் அவர் 1877–ஆம் வருஷம் ஜனவரி முதல்தேதி நடத்திய டில்லி தர்பார், பிற்பாடு 1903-ஆம் வருஷம் கர்ஸன் பிரபு நடத்திக்காட்டிய தர்பாரின் தோரணையின் அருகில்கூட வரமுடியாது என்றே சொல்லவேண்டும். இருந்தாலும் அக்காலத்தில் செய்யத் தகுந்த பலத்த ஏற்பாடுகளுடன் மறக்க முடியாத படியே அந்தக் கொண்டாட்டம் காணப்பட்டது. கர்ஸன் பிரபு, டில்லியில் லிட்டன் பிரபு முன்பு தேர்ந்தெடுத்த இடத்திலேதான், தம் தர்பாரையும் வைத்தார். பல சிற்றரசர்களும், தலைவர்களும் கூடிச் சக்கரவர்த்தியின் பிரதிநிதியைத் தங்கள் தங்கள் முறைப்படி விருதுகளுடன் அடிபணிந்தது, பார்த்தவர்களின் கண்ணைப் பறிக்கும் காட்சியாகவே தோன்றியதாம்.

1903-ஆம் வருஷம் தர்பார் வைத்த இடம் அதே இடமாயிருந்தாலும், விஸ்தீரணத்தில் இன்னும் பன்மடங்கு அதிகமாயிருந்தது; வேடிக்கை பார்க்க வந்தவர்களின் எண்ணிக்கையும் முந்தியைவிட அதிகம். டில்லியில் கர்ஸன் பிரபு ராஜப் பிரதிநிதியாகப் பவனி வந்த கோலம் மறக்கத் தகாதது. யானைகளின் மேல் அம்பாரிகள் வைத்து வந்த ஊர்வலமும், பட்டணப் பிரவேசமும் வெகுகாலம் ஞாபகத்தில் இருக்கும்படியே இருந்தனவாம். அவர் முன் செல்ல, பின்னே இந்தியச் சிற்றரசர்கள் விசித்திர விசித்திரமான ஆடை அணிகள் அணிந்து தங்கள் யானைகளில் ஏறி வரவும், கண்ணையும் கருத்தையும்

கவரும் காட்சியாக எல்லாம் பரிணமித்தன. 200 யானைகள் ஊர்வலத்தில் அன்று தென்பட்டனவாம். தர்பாரின் மற்ற விமரிசையைப் பற்றிக் கேட்கவேண்டியதேயில்லை. வெண்பட்டும் தங்கமும் கலந்து நெய்த பெரிய விதானத்தின் கீழ்ச் சிம்மாசனங்களை வைத்து, எதிரே வளைவாக 10,000 ஜனங்களுக்கு உட்கார இடங்களையும், வரிசை வரிசையாகத் தயாரித்திருந்தார்கள். இவைகளுக்கெல்லாம் ஏற்ற விதமேதான் கர்ஸன் பிரபுவும் படாடோபத்துடன் நடந்துகொண்டார். 1905-ஆம் வருஷம் ஜார்ஜ் மன்னரும், அவர் மனைவியும் இளவரசர் இளவரசிகளாக இந்தியாவைச் சுற்றிப் பார்க்க வந்தபொழுது, கர்ஸன் பிரபு தர்பார் செய்த இடத்தையும் நேரில் தரிசித்துவிட்டுச் சென்றார்கள்.

டில்லியின் புராதன மகிமையையும், நவநாகரிகச் சிறப்பையும் அறிந்தேதான் ஜார்ஜ் சக்கரவர்த்தியும் மேரி ராணியும் அவ்விடத்தில் தங்கள் தர்பாரை 1911-ஆம் வருஷத்தில் நடத்த விரும்பினார்கள். மேலும் டில்லியை இனி இந்திய ராஜப் பிரதிநிதிகள் இருக்கும் வாசஸ்தலமாக ஆக்குவது என்ற தீர்மானத்தையும் அரசாங்கத்தார் செய்ய உத்தேசித்திருந்தார்கள். அதுவரையும் கல்கத்தாவே தலை நகராகவும், முந்திய பல ராஜப் பிரதிநிதிகள் அரசாட்சி செய்து வந்த இடமாகவும் இருந்தது. 1911-ஆம் வருஷம் முதற்கொண்டுதான் டில்லி தலை நகராக அமைந்தது என்பது எல்லோரும் அறிந்ததே.

ஜார்ஜ் மன்னரின் டில்லி தர்பார் நடைபெறுவது டிசம்பர் 12-ஆம் தேதி என்று ஒரு வருஷத்துக்கு முந்தியே தீர்மானம் ஆகியிருந்தது. ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் கவர்னர்களும், கவர்னர் நிர்வாக சபை அங்கத்தினர்களும், நீதிபதிகளும், சட்டசபைக் காரிய நிர்வாகிகளும், அங்கத்தினர்களும் அம் மாபெரும் கொண்டாட்டத்திற்கு வரவழைக்கப்பட்டார்கள். கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அதற்கு விஜயம் செய்ய வேண்டியிருந்தது. அவருடைய பல சிநேகிதர்களும் உடன் சென்றார்கள். அவருடைய

பதவிக்குத் தகுந்த விதம் ரெயில் பிரயாணத்திற்குத் தனி வண்டிகளும் ஏற்பாடாயின. அவர் தம் நண்பரான திவான் பகதூர் ரகுநாதராயருக்குத் தம்முடன் வண்டியில் இடம் தரவேண்டும் என்று கேட்டு முக்கிய காரியதரிசிக்கு எழுதியிருந்தார். அப்போது மிஸ்டர் நாப் என்பவர் தர்பார் கொண்டாட்டத்திற்கு வரவழைக்கப்பட்டவர்களின் சௌகரியங்களைக் கவனிக்கவேண்டி ஏற்படுத்தப்பட்ட தனி உத்தியோகஸ்தராக இருந்தார். பிற்பாடு சென்னைக் கவர்னர் நிர்வாக சபையில் அங்கத்தினராகவும் ஆனவர் அவரே. இந்தியர்களிடம் மிகவும் அலக்ஷயம் காட்டியவர். கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு அதனால் சற்று அவருடன் மனஸ்தாபங்கள் ஏற்பட்டன. எதையும் கேட்டவுடன் மிஸ்டர் நாப் ஒப்புக்கொண்டு செய்யவில்லை. என் தந்தையின் குணந்தான் அலக்ஷயத்தை அதிகம் பொறுத்ததில்லையே! அதனால் உடனே அவருடைய வாய்க் கடுமைக்கு அவகாசம் கிடைத்து விட்டது. அப்பொழுது இந்தியாவின் பொறுப்பைச் சீமை மந்திரி சபையில் வகித்த குரூபிரபுவிடம் இந்திய ஸிவில் ஸர்விஸில் இருந்த வெள்ளைக்காரர்களின் மன்னிக்க முடியாத இறுமாப்பைப்பற்றி நேரில் சொல்லுவது என்றுகூட அவர் மனத்தினுள் அபிப்பிராயம் கொண்டு விட்டார். ஆனால் அவருக்கு ஏற்பட்ட உடம்பு அசௌகரியத்தினால் அக்காரியம் தடைப்பட்டு, இந்தியக் காரியதரிசியைப் பேட்டி காணவே முடியாமற் போய்விட்டது.

அவ்வருஷம் நவம்பர் கடைசி வாரத்தில் எத்தனையோ காரியங்கள் அவருக்கு ஏற்பட்டன. பல இடங்களில், பிரசங்கங்களை வேறு இடைவிடாமல் செய்ய ஒப்புக்கொண்டிருந்தார். நீர் ரோகத்தினால் உடம்பு பலக்குறைவாகி விட்டது. ஏற்கனவே உதக மண்டலத்தில் தேகஸ்திதியைச் சோதித்துக் கொண்டபோது, உடம்பில் நீர்ரோகத்தின் வேகம் அதிகம் இருப்பது கவலைக்கு இடம் தருகிறதென்று டாக்டர்கள் எச்சரிக்கை செய்திருந்தார்கள். மூத்த புதல்வி பாலசுந்தரி அவரைப் பற்றியும் அவருடைய தேக அசௌக்கியத்தைப் பற்றியும் நன்கு உணர்ந்தவள். எப்பொழுதும் அவருடன் அவளுக்கு

அதைப்பற்றி வாக்கு வாதந்தான். உடம்பைக் கவனித்துக் கொள்ளாமல் அவர் சதா இரைந்து பேசுவதாகவும், மனசை அடிக்கடி ஆயாஸப்படுத்திக் கொள்ளுவதாகவும் அவள் குறை கூறுவாள். ஆனால் அவர், தாம் எவ்வளவோ ஜாக்கிரதையாக உடம்பைப் பார்த்துக்கொள்வதாகவும், செய்துகொள்ள வேண்டியவைகளைப்பற்றித் தமக்கு நன்றாகத் தெரியும் என்றும் வாதம் செய்வார். ஆனால் அவள் சொல்வதில் உண்மை இருந்ததை அவர் உள்ளம் அறியாமல் என்ன செய்யமுடியும்! வேலையை விடுவதா? பத்துநாளைக்குச் செய்யவேண்டிய அரசியல் காரியத்தை அவர் ஒருநாளில் முடித்தாகவேண்டுமே!

வாரத்தில் இரண்டு நாட்களே அக்காலங்களில் கவர்னர் நிர்வாக சபை கூடுவது வழக்கம். மற்றப்படி இலாகாக் காரியதரிசிகளும், அவர்களின்கீழ் வேலை செய்த உத்தியோகஸ்தர்களும் எழுதிவைத்த குறிப்புக்களையும் மற்றக் காகிதங்களையும் வீட்டில் நிர்வாக சபை அங்கத்தினர்கள் பார்வையிடுவது வழக்கம். பெட்டி பெட்டியாய் ஆபீஸ் காகிதங்கள் வண்டியில் வந்து இறங்கும். அநேகமாக மூன்று அல்லது நான்கு மணிக்குள் அவற்றினுள்ளிருக்கும் சமாசாரங்கள் கவனிக்கப்பட்டு, பெட்டிகள் மூடப்பட்டு, மற்ற அங்கத்தினர்களுக்குச் செல்லத் தயாராகக் குவிந்து கிடக்கும். கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் வேலை பார்த்த ஆபீஸ் குமாஸ்தாக்கள்கூட வேலையின் துரிதத்தைக் கண்டு பிரமிப்பார்கள். ஏனென்றால் வெள்ளைக்காரர்களிடம் வேலை இவ்வளவு விரைவாக நடவாததை அவர்கள் வாய் வெறுமனே சொல்லாமல் இருப்பதில்லை. முக்கியக் காரியங்களைச் சீக்கிரம் முடிப்பதால் அவருக்கு மற்றக் காரியங்களையும், வியவகாரங்களையும் கவனிக்க அவகாசம் கிடைத்தது.

"வேலையைச் சீக்கிரம் செய்கிறவர்களுக்குத்தான் எதற்கும் அவகாசம் கிடைக்கும் என்பது மிகவும் உண்மை...கோகலேக்கு காலதாமதமில்லாமல் விஷயத்தைப் பார்வையிட்டு நீங்கள் அனுப்பிய பதிவில் பரம திருப்தி"*

---

* கடிதம், 4-3-11.

என்று ஒரு சமயம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் எழுதினார் என் தந்தைக்கு. தந்தை கவர்னர் சபை அங்கத்தினராகி அப்பொழுது இரண்டு மாதங்கள் ஆகியிருந்தன.

டிசம்பர் மூன்றும் தேதி சென்ன பட்டணம் விட்டு டில்லிக்குக் கிளம்ப வேண்டிய நாள் வந்தது. அவருடன் மாப்பிள்ளை நாராயணஸ்வாமி ஐயரை அழைத்துச்செல்வதென்று முதலில் ஏற்பாடாகியிருந்தது. ஆனால் அவர் அசௌக்கியமாகப் படுத்துவிட்டதால், தம்பி சந்திரசேகர ஐயரைத் தம்முடன் அவருக்குப் பதிலாக அழைத்துச் செல்லத் தீர்மானித்தார். புறப்படுகையில் சகுனம் சரியாக இல்லை. மாப்பிள்ளை மூன்று பேர்களுக்கு உடம்பு ஜுரமாயிருந்தது. குழந்தைகளில் இருவருக்குக் காய்ச்சல் கண்டிருந்தது. தந்தையின் மனம் சமாதானப்படவில்லை. பாலசுந்தரி வேறு டில்லி பிரயாணத்திற்குக் கொஞ்சங் கூட இசையவில்லை. வரும் விபத்தைச் சூசிப்பிக்கும் விதம் அவள் உள்ளம் ஒவ்வொன்றிலும் அபசகுனத்தையே அறிந்தது. வெள்ளியில் வார்க்கப்பட்ட லக்ஷ்மி பதுமை ஒன்று அழகிற்காகப் பங்களாவின் கல்யாண கூடத்தில் வைக்கப்பட்டு இருந்தது. அதை யாரோ களவாடி விட்டான். அதற்குத் துணையாக இருந்த ஸரஸ்வதி பதுமையைத் தொடாமல், லக்ஷ்மியைமட்டும் கொண்டுபோனதில், அவள் மனம் என்ன வெல்லாமோ நினைக்க ஆரம்பித்தது. மேலும் முந்திய மாதந்தான் சென்னைத் துறை முகத்தைப் பார்வையிடச் சென்ற என் தந்தையார், வீட்டுக்கு வந்ததுமே சற்று மயக்கமாக விழுந்தார். அன்றே பாலசுந்தரி இவ்வளவுதான் கவலைப் பட்டாள் என்பதற்கில்லை. ‘ஸ்நேஹ: கலு பாபசங்கீ’ - ‘அதிக ஆசையே சதா கெடுதலை நினைக்கும்’ என்ற காளிதாஸருடைய வாக்கின் உண்மை அநுபவத்தில் பலித்தது என்றே நினைக்கவேண்டும். தந்தை டில்லிக்குப் புறப்படும் தருணத்தில் வேதனையுடனே அவருக்குப் போய்வர அவள் விடை அளித்தாள்.

டில்லியில் டிசம்பர் மாதம் குளிர் அதிகம். எங்கும் பலகூடாரங்கள் அடிக்கப்பட்டு விசாலமான மைதானத்தில்



வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்
(நிர்வாக சபை அங்கத்தினர் உடையில்)
(1911)

இடங்கள் தயாராக இருந்தன. ஆனால் தந்தையின் உடம்பில் குளிர் அதிகம் உறைக்காதது அவருடைய ரத்தம் குன்றியிருந்த தென்பதையே காட்டியது போலும். கூடாரத்தில் அடிக்கடி அவருடைய நண்பர்களான ஜி. ஏ. நடேசன், ஸி. ஓய். சிந்தாமணி, டி. வி. சேஷகிரி ஐயர் முதலியவர்கள் அவருடன் சம்பாஷிக்க வருவார்கள். டிசம்பர் எட்டாந் தேதி பல மாகாணங்களிலிருந்து வந்த மந்திரிகளின் பொதுக் கூட்டம் ஒன்று அவ்விடத்தில் நடைபெற்றது. அதற்குக் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சென்றிருந்தார். மணி பதினொன்று அடித்துவிட்டது, அவர் வண்டியில் ஏறிச் செல்லுகையில்; சாப்பாட்டிற்குப் போகவேண்டிய வேளை அது. சாப்பிடாமல் செல்லு கிறாரே என்று பக்கத்திலுள்ளவர்கள் நினைத்தார்கள். சமீபத்தில் நின்றிருந்த சிந்தாமணியிடம் அப்பொழுது,

"தேச சேவையை எவ்விதம் குறைவின்றிச் செய்வதென்பதே என் முக்கிய வாழ்க்கைக் கருத்து"*

என்று அவர் சொன்னதாகத் தெரிகிறது. மறுநாளும் பல நண்பர்கள் அவருடைய கூடாரத்திற்கு வந்திருந்தார்கள். கனம் கோகலேயும், எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்காரும் வந்திருந்தார்கள். கோகலேயும் கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சம்பாஷிக்கத் தொடங்கி விட்டார்கள் என்றதுமே, சிறுவர்களாயிருந்த சிந்தாமணி, ஸ்ரீநிவாஸ ஐயங்கார், நடேசன் எல்லோருக்கும் குதூகலந்தான். போதாததற்குப் பண்டித் மதன மோஹன மாளவியாவும் கலந்து கொண்டார், அன்றைச் சம்பாஷணையில். நடுவில் பத்திரிகைகளின் உரிமையைப்பற்றிச் சிந்தாமணி ஏதோ சொன்னதற்காகக் கடிந்து என் தந்தையார் ஒரு சிறு பிரசங்கமே செய்து விட்டார். பாவம், சிறுவருக்குக் கோகலேயிடமும் அச்சமயம் முறையிட முடியவில்லை! கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அவரும் ஒரே மனத்துடன் இருப்பவர்களன்றோ? ஒவ்வொரு சமயத்தில் ஸ்ரீநிவாஸ ஐயங்காராவது சிந்தாமணியின் கக்ஷியில் சேருவார். ஆனால் நடேசன் சிறுவராயினும் வலுத்த கையையே நாடினார்.

---

* 'லீடர்', 1912, ஜனவரி.

தாம் ஒரு பத்திரிகாசிரியராக இருந்தும் சிந்தாமணியுடன் சேருவது ஆபத்துக்கிடமாகி விட்டதால், நடேசன் அவரைக் கைவிட்டு விட்டார் போலும்.*

இவைகள் நடந்த மறுநாள், அதாவது டிசம்பர் 9-ஆம் தேதி கிருஷ்ணஸ்வாமி ஐயரின் துடையில் ஒரு சிறு சிரங்கு உண்டாகி இருந்தது. காரணம் அவர் சராய் அணிந்து கொள்ளும்போது இடுப்புக்குக் கட்டிக் கொள்ளும் 'ஸாஷின்' முனை உள்பாகத்தில் விடப் பட்டதால், அவருடைய துடையில் பட்டுச் சதையைச் சற்று அரைத்திருந்தது. சதை சிறிது வழன்று அதனால் சீழ் கோத்துக்கொண்டது. கொஞ்சம் ஜுரமும் தெரிந்தது. அவரால் அன்று தர்பார் ஒத்திகைக்குப் போக முடிய வில்லை. இதனிடையில் கார்மைகேல் பிரபுவினிடம் குருபிரபுவைத் தாம் அவசியம் பார்த்துப் பேசவேண்டு மென்று கேட்டுக்கொண்டிருந்ததால், அவரும் அதற்கு ஏற்பாடு செய்வதாக வாக்களித்திருந்தார். ஆனால் எல்லாம் நினைத்தபடி நடைபெற முடியவில்லை.

''உங்கள் உடம்பு சரியாக இல்லை என்பதைக் கேட்டுக் கவலை அடைகிறேன். ரண சிகித்ஸை உங்கள் உடம்பிற்குத் தொந்தரவு கொடுக்காது என்றுதான் எனக்குப் படுகிறது. எல்லாம் சீக்கிரம் சரியாகிவிடும். ஆனால் டாக்டர் இந்த இடத்தை விட்டு உடனே புறப்பட வேண்டுமென்றால், யோசியாமல் கிளம்புவதுதான் உசிதம். நடுவில் விடை பெற்றுப் போவதற்கு வேண்டிய சம்பிர தாயச் சடங்கு ஏதாகிலும் உண்டானால், அவைகளை ஸர் ஹாரோல்ட் ஸ்டுவர்ட்டு உங்களுக்குத் தெரிவிப்பார். நானும் மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தி தம்பதிகளுக்கு உங்களுக்கு நேர்ந்த எதிர்பாராத அசௌகரியத்தைத் தெரிவிக்கின்றேன், நான் குரு பிரபுவிடமும் பேசினேன். உங்களைக் காண அவா வுடன்தான் அவர் இருக்கிறார். தம் அந்தரங்கக் காரியதரிசியிடமும் தம்மைப் பேட்டி காண ஒரு காலத்தைக் குறித்து உங்களுக்கு எழுதச் சொல்லி யிருக்கிறார். உங்கள் உடம்பு சௌகரியமில்லாத விஷயத்தை உடனே அவருக்குத் தெரியப்படுத்துகிறேன்''†

என்று கார்மைகேல் பிரபு தீராக்குறையாகவே அவர் இருந்த கூடாரத்திற்கு ஆள்வசம் கடிதம் அனுப்பினார்.

---

* 'லீடர்', 1912, சிந்தாமணியின் நினைவுகள்.

† கடிதம், 11-12-11.

அவர் கிருஷ்ணஸ்வாமி ஐயரிடம் இந்தியரென்ற வேற்றுமையற்ற உயர்ந்த சுபாவத்தைக் காட்டியவர். அதிக மேல்நாட்டு உபசாரங்களையும் எதிர்பார்த்தவரல்ல. உண்மையில் இந்தியாவுக்கு நன்மையைச் செய்ய எண்ணிய கவர்னராயிருந்த ஒருவர் எவ்விதம் நடக்க வேண்டுமோ அப்படியே நடந்து கொள்வார்.

டிசம்பர் 11-ஆம் தேதி காலையில் என் தந்தையைக் காணவந்த டி. வி. சேஷகிரி ஐயர் அப்படியே இடிந்து போய் விட்டார், அவரைப் பார்த்ததும்.

> "ஒருகாலும் நான் அங்கே கண்டதை மறக்க முடியாது. மன வலிவு படைத்தவராயினும், கிருஷ்ணஸ்வாமி ஐயர் அன்று என்னிடம் தமக்கு ஊருக்குத் திரும்புவதிலுள்ள வேகத்தைத் தெரிவித்தார். டாக்டர் நஞ்சுண்டராவ் வசத்திலும், தம் அருமைப் புதல்வி பாலசுந்தரியின் கவனிப்பிலும் தாம் உடனே இருக்க வேண்டிய நிலையை என்னிடம் உணர்த்தினர்"*

என்று பத்து வருஷங்கள் கழித்தும், அந்த ஞாபகத்தை விடாமல் சேஷகிரி ஐயர் குறித்தார்.

தந்தையாரின் உடம்பு வரவர அதிகம் நோய்வாய்ப் பட்டுவிட்டது. டிசம்பர் 13-ஆம் தேதி டில்லியைவிட்டுப் புறப்பட வேண்டியது என்று தீர்மானமாகியது. தர்பாரில் அரசர் நேரில் கொடுக்கவிருந்த சி. எஸ். ஐ. பட்டத்தைப் பெறும் அவகாசம் அவருக்குக் கிடைக்கவில்லை. எங்கும் அவர் உடம்பு அசௌக்கியத்தைப் பற்றியே பேச்சாக இருந்தது. வீட்டிலுள்ளவர்களுக்கு ஒன்றுமே தெரிய வேண்டாமென்று தம் சகோதரரிடமும் மற்ற நண்பர் களிடமும் தெரிவித்திருந்ததால், அவர் சென்னைக்கு வருகிறார் என்ற செய்திமட்டும் தெரிந்ததும் வீட்டில் உள்ளவர்களுக்கு மனக் கலக்கம் ஏற்பட்டது. மேலும் தர்பாரில் அவர் கலந்துகொள்ளவில்லை என்ற சமாசாரம் எப்படியோ மறுநாளே இங்குள்ளவர்களின் காதுகளுக்கு எட்டியது. அவ்வளவுதான் 'வந்துவிட்டது அனர்த்தம்' என்று என் மூத்த சகோதரி கவலைப்படத் தொடங்கினாள். ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் சரியானபடி சமாசாரம்

* 'ஹிந்து', 23-12-1922.

இல்லாததால் உடனே புறப்பட்டு டில்லிக்குப் போவது தான் சரி என்று அதிகக் கவலையினால் சொல்லிவிட்டார். ஒரே குழப்பமும், மனவாட்டமும் வீட்டில் எங்கும் தெரிந்தன. டாக்டர் நஞ்சுண்டராவ் தந்தி மூலம் தகவல் அறிந்து, ஏற்கனவே ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமல் ரெயிலில் கிளம்பியிருந்த விவரமும் தெரியவே, மேலும் அது கலக்கத்தை எழுப்பியது. மூத்த சகோதரியும், சகோதரரும், ஏ. கிருஷ்ணஸ்வாமி ஐயரும் அன்றே ரெயிலில் பயணமானார்கள். ஆனால் ராயச்சூர் ஜங்ஷனில் எதிரே வந்த ரெயிலில் அவர்கள் என் தந்தையைச் சந்தித்தார்கள். தந்தையாரின் உடம்பைப் பார்த்ததுமே என் சகோதரி மனச் சமாதானத்தை இழந்தாள். திடகாத்திரம் படைத்தவர், கிழித்த நாரைப்போல் படுக்கையில் கிடந்ததை அவளால் கண்டு சகிக்கமுடியுமா? அவருடைய சகோதரர் சந்திர சேகரரும் மூன்று நாட்களாக மன அமைதியில்லாததால் ஏக்கங்கொண்ட பார்வையுடன் தோற்றினார். ‘ஆம்! நான் செய்தது தவறு’ என்பதைப் போல் தம் புதல்வியைப் பார்த்த பார்வையில் வருத்தக் குறிப்புத் தெரிந்தது என் தந்தையிடம். எல்லோரும் ஒன்றும் தோன்றாமல் சென்னைக்குத் திரும்பி வந்தார்கள். அதற்குள் பட்டண முழுவதும் செய்தி பரவிவிட்டது. ரெயில் வண்டியை விட்டு ஊன்றுகோலைப் பிடித்து என் தந்தை இறங்கும் காட்சியைப் பார்க்கச் சகியாமல், அங்கே காத்திருந்த சி. பி. ராமஸ்வாமி ஐயர், தம் கையைக் கொடுத்து அவருக்கு உதவ முன் வந்தார். மன வலிவின் காரணந்தான் போலும்! நீட்டிய கையை மறுத்து விட்டு, வியாதிஸ்தர் சிரமத்துடனே நடந்துவந்து தம் காரில் ஏறிக்கொண்டார்.

சி. எஸ். ஐ. பட்டத்தைக் குறித்துச் சந்தோஷச் செய்திகள்கொண்ட கடிதங்களுக் கெல்லாம் பதிலை உடனுக்குடனே எழுதும்படி அவர் படுக்கையிலேயே ஏவினார். வாயால் பதிலைத் தகுந்தவிதம் சொல்லுவார். பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு, சொன்னவைகளை அவர் சகோதரர் குறித்துக் கொள்ளுவார்.

"உங்கள் விசாரணைக்கு வந்தனம். என் உடம்பு ரணஜுரம் கண்டு சரியாக இல்லை. குணமாகிவிடும் என்றுதான் என் நம்பிக்கை."

இம்மாதிரி எத்தனையோ பேர்களுக்கு எழுதச் சொன்னார். தம்முடன் கவர்னர் சபை அங்கத்தினராக இருந்த அட்கின்ஸனுக்குப் பதில் எழுதுகையில்,

"என்னுடைய மூன்று நாட்கள் ரெயில் பிரயாணம் மட்டும் சரியான வண்டியிலிருந்திருந்தால், உடம்பு ஆயாஸம் இவ்வளவு கண்டிராது. எனக்கு இன்னும் சௌகரியமாயிருந்திருக்கும்"

என்று தெரிவித்தார் தம் மனக் குறையை.

இவையெல்லாம் 16 அல்லது 17–ஆம் தேதிகளில் நடந்த சம்பவங்கள். இரண்டு நாட்களில் ஜுரம் சற்றுத் தணிந்தமாதிரித் தோன்றவும் குணமடைவதாக மனத்தில் ஆசையை வளர்க்கவாரம்பித்தார்கள் குடும்பத்தவர்கள். ஆனால் டாக்டர்களில் கிளாரென்ஸ் ஸ்மித் என்பவரும், மேஜர் இப்பர்ட் என்பவரும் ரணத்தைக் கீறுவதுதான் சரியான சிகித்ஸை என்றார்கள். உள்ளிருக்கும் சீழ் வெளி வந்தால்தான் சிரங்கின் வாய் திறந்து, சீக்கிரம் புண் குண மடையும் என்பது அவர்கள் அபிப்பிராயம். தினம் அவர்கள் அரசாங்க அதிகார முறையில் நோயாளியின் தேக ஸ்திதியைக்குறித்து அறிக்கைகளை வெளியிட்டார்கள்.

23-ஆம் தேதி ரண சிகித்ஸை செய்வது என்று தீர்மானமாகியது. ஆபரேஷன் செய்வதற்குமுன் பங்களா வின் பெரிய ஹாலின் நடுவில் கட்டிலொன்றில் அவரைப் படுக்க வைத்தார்கள். குழந்தைகள் எல்லோரையும் அவர் பார்க்கவேண்டு மென்றார். எல்லோரும் சுற்றி நின்று கொண்டு மௌனமாக இருந்தோம். ஒருவரும் மன வருத்தத்தை வெளிக் காட்டவில்லை. சிறுவர்களாயினும் கண் கலங்காமல்தான் நாங்கள் சுற்றி நின்றோம். தைரியத் தினால் அல்ல ; செய்வது என்ன என்ற விவரமே புத்திக்கு எட்டாதபடியால்தான் அவ்விதம் இருந்தது. அவர் மட்டும் எங்களையெல்லாம் ஒருதரம் பார்த்துவிட்டுப் பக்கத்தில் வரவழைத்த நண்பர்களிடம் அழுத்தமான குரலில் ஏதேதோ பேசினார்.

ஆபரேஷன் செய்வதற்கு டாக்டர்கள் வரவும் எல்லோரும் அவ்விடத்தை விட்டு நகர வேண்டி வந்தது. பாலசுந்தரியின் மனநிலை சிதறத் தொடங்கியது. அவருடைய முடிவு அவளுக்குத் தெரிய ஆரம்பித்துவிட்டது. எவ்வளவு தேற்றியும் கேளாமல் தரையின்மேல் குப்புறப் படுத்துக்கொண்டு சோகம் போட்டுவிட்டாள். அத்தான் ராமஸ்வாமி ஐயர் உறவினரிடம் பிராண சிநேகிதத்தை அநுபவித்தவர் அல்லவா ? உறவினருக்கு உடம்பு சரியாக இல்லாத செய்தியை அறிந்து அவரைப் பார்க்க ரெயிலில் புறப்பட்டு வந்தார். வரும்பொழுது, நோயாளி ஒருகால் பத்தியம் சாப்பிடும்படியான நிலைமையிலிருப்பார் என்று எண்ணி, சர்க்கரை நாரத்தையில் அவருக்கு மிகுந்த பிரியமானதால் அப்பழங்களை வாங்கி ஒரு துணியில் மூட்டையாகக் கட்டிக்கொண்டு ஜட்கா வண்டியில் வந்து இறங்கினார். பங்களாவின் வாயிலை அடைந்ததுமே நோயாளியின் விக்கலைக்கேட்டு அப்படியே கையில் இருந்த பழ மூட்டையை நழுவ விட்டுவிட்டார். கீழே விழவும், பழங்கள் சிதறி உருண்டு நாலுபக்கங்களிலும் சென்றன. உறவினர்கள், சிநேகிதர்கள், எல்லோரும் இவ்விதமே துயரம் தாங்கமாட்டாமல் புத்தி தடுமாறினார்கள். சந்திரசூடருடைய மனம் சதா பதறியது. எல்லாச் சம்பவங்களும் அவருக்கு நெருங்கிக் கொண்டிருக்கும் ஆபத்தை விவரித்தன.

டாக்டர் நஞ்சுண்டராவ் என்றதும் அக்காலத்தில் அவர் கையில் பிராணனைவிடத் தயாராயிருந்தவர்கள்தாம் மயிலாப்பூரில் பலர். அவரும் கையை விரித்து விட்டார். நோயாளிக்குப் பலக் குறைவால் 'கோமா' வரத் தொடங்கியது. வார்த்தைகளிலும் தெளிவு குறைய ஆரம்பித்தது. அவருடைய விக்கலும், மயக்கமும் பீதியை உண்டாக்கின. வயசில் பெரியவர்கள் ஆபத் சந்நியாசம் கொடுப்பதைப் பற்றி மெதுவாகப் பேசலானார்கள். பாலசுந்தரி அதைக்கேட்டுக் கீழே விழுந்தாள். மற்றச் சகோதரிகள் திடுக்கிட்டுப் போய் அழத் தொடங்கினார்கள். எங்கும் துயர மயமாயிருந்ததால் பயத்தில் என் குழந்தை

உள்ளமும் வேலை ஆட்களின் இருப்பிடத்தையே நாடியது. அவர்களும் கூட்டங்கூடிச் சதா எஜமானனைப் பற்றியே பேசுவார்கள். என் குழந்தைச் சிந்தனையிலும் வரப்போகும் ஆபத்து, சிறிது சிறிதாக விளங்கத் தொடங்கியது.

நோயாளியைப் பார்க்க வந்த ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் அவருடைய தேகஸ்திதியைக் கண்டு கதிகலங்கினார். அன்றுதான் மதுரையிலிருந்து வந்தவர், தம்மை அவர் ஊருக்கு வந்து விட்டாரா என்று விசாரித்ததாகக் கேள்விப் பட்டுத் துரிதமாய் 'ஆச்ரமம்' வந்தார். டிசம்பர் 22-ஆம் தேதியே காங்கிரஸ் காரியமாகச் சாஸ்திரிகள் கல்கத்தா வுக்குப் போவதாகத் தந்தையார் அறிந்திருந்ததால், அவ்வாறு சாஸ்திரிகள் ஊருக்கு வரும் செய்தியைக் கவனமாய்க் கவனித்திருந்தார். ஆனால் 22-ஆம் தேதி அவருடைய தேக நிலைமை இன்னும் கெடுதலாகி விட்டது. பார்க்க வருகிறவர்களின் பெயர்களை ஒரு காகிதத்தில் குறித்து அவரிடம் நீட்டியதில், சாஸ்திரிகளின் பெயரைப் பார்த்ததுமே 'சாஸ்திரிகள் வந்து விட்டாரா! வரச் சொல்லுங்கள் உள்ளே' என்றார் என் தந்தை. சாஸ்திரிகள் எதிர்பார்த்த நிலைமையைக் காட்டிலும் அவருடைய நிலைமை அதிகமாகவே க்ஷீணத்தைக் காட்டியது. தமக்கு மறுநாள் ரண சிகித்ஸை செய்ய ஏற்பாடு செய்திருப்பதைச் சாஸ்திரிகளிடம் சொல்லி விட்டு, அங்கே பக்கத்தில் இருந்தவர்களை நகர உத்தர விட்டு, பின்வருமாறு சாஸ்திரிகளிடம் அந்தரங்கம் பேசினார்:

"என் கடைசி உயிலையும் போன அக்டோபர் மாதமே எழுதி வைத்துவிட்டு, டில்லி போகுமுன் அதிலுள்ளவைகள் அவ்வள வையும் சரியான விதம் இருக்கின்றனவா என்று மறுமுறையும் பார்த்து விட்டேன். இப்பொழுது சிற்சில திருத்தங்களைச் செய்யலாமென்று எண்ணுகிறேன். ஆனால் இப்பொழுது எதை யாவது செய்தால் என் பெண்கள், பாவம், பயந்துவிடுவார்கள். என் உடம்பில் இன்னும் மூன்று நாட்களில் ஏதாவது குணம் தென்பட்டால் செய்துவிடுகிறேன் எண்ணியதை; அப்பொழுது ஒருவருக்கும் பயம் ஏற்படாது. இப்பொழுது உயிலை நீங்கள் வாசித்துப் பாருங்கள். பார்த்து எல்லாம் சரியாக இருக்கின்

றனவா என்றும் யோசித்துச் சொல்லுங்கள். ஆனால் இனி முடியாது......"*

சாஸ்திரிகள் அக்காலங்களில் தினசரி, கோகலேக்கு என் தந்தையின் உடல் நிலையைத் தெரிவித்து வந்தார். நடந்தவைகளை நடந்தபடியே சொல்வதால் சாஸ்திரிகளின் கடிதத்தின் மேல் பாகங்களையும் இங்கே குறித்தால்தான் வாசகர்களுக்கு முழுவிஷயங்களும் மனத்தில் நன்கு பதியும். நடந்ததை நடந்தபடியே எழுதுவதில் சாஸ்திரிகள் மிகவும் திறமை வாய்ந்தவர். ஒருகால் தாம் இறந்த பிறகு தம்முடைய ஜீவிய சரித்திரத்தை யாராவது எழுத நேரிடலாமோ என்று என் தந்தையின் உள்ளத்தில் ஏதோ ஒரு சிறு எண்ணம் தோன்றி இருக்கவேண்டும். இல்லாவிட்டால் பின் வருமாறு அவரிடம் அவர் சொன்னதற்கு வேறு கருத்து இருக்க முடியாது.

"என் ஜீவிய சரித்திரம்.....என்னைப்பற்றி ஒன்றும் எழுதாதீர்கள். சில கடிதங்களே என்னிடம் இருக்கின்றன. பெரும்பாலும் அவைகள் மற்றவர்கள் பார்க்கத் தகாதவைகள்தாம். ஆனால் எல்லாம் நம்பிக்கையைப் பொறுத்தது, பார்க்கின்றவர்களிடம். மணியிடமும், சந்திரசூடனிடமும் உள்ள கடிதங்களை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். காலம் வரும்பொழுது,—வந்தால்தான்.....

"என் வாழ்க்கையின் அடிப்படையான உண்மைகளைப் பிறருக்கு எடுத்துக் காட்டத் தோன்றினால் சொல்லுங்கள், பின் வருமாறு: ஒருவன் மேல் பதவிகளுக்கு செல்லவேண்டுமானால், அதிகாரிகளைப் புகழ்வது, துடை நடுங்குவது, மேலுள்ளவர்களைச் சதா தொழுவது, ஒருவருக்கொருவர் கோள் சொல்லி முடிந்து வைப்பதுபோன்ற ஈனமான தொழில்களைச் செய்ய வேண்டியதில்லை என்று காண்பியுங்கள்."

தம்மைப்பற்றி முடிந்தது. தாய் நாட்டைப் பற்றியும் சில வார்த்தைகள் :

"இன்னும் தேசத்தொண்டுகள் பல பாக்கி நிற்கின்றன, எனக்கு. அதற்குள் என்னை ஆண்டவன் அழைத்துச் செல்ல மாட்டான் என்று நினைக்கிறேன்....."

---

* கடிதம், 25-12-11.

என்ன வீண் ஆசை! 'உயிர் உடலை நீங்குமளவும் ஒரு வருக்கும் அது அநித்தியமில்லைதான்' என்பதை உணர்த்து கின்றன அவருடைய கடைசி வார்த்தைகள்.

"கல்கத்தாவுக்கு நீங்கள் போகவில்லையா? என் உடம்பைப் பற்றிய கவலையினுல் நீங்கள் போவதை நிறுத்தவேண்டாம். தேசந்தான் எல்லாவற்றையும்விட மேலாக உங்கள் முன் நிற்க வேண்டும்!"*

ஆம், ஒருவருடைய வாழ்வைவிடத் தேசமே மனத்தை என்றும் ஆட்கொள்ள வேண்டும். சரியான உபதேச மாகவேதான் சாஸ்திரிகளும் அவைகளை உட்கொண்டார்.

23-ஆம் தேதி அன்று சிரங்கைக் கீறி 'ஆபரேஷன்' செய்தார்கள். ஆனுல் சற்றுத் தேக ஸ்திதியில் தெரிந்த குணம் அதிசீக்கிரத்தில் மாறிவிட்டது. ஞாபகப் பிசகு ஏற்பட்டு நாடியும் தளர்ந்தது. உடம்பில் சில்விதத் துடிப்பு களும் காணப்பட்டன. விக்கல் வேறு விடாமல் தொந்தரவு கொடுத்தது.

வீட்டிலுள்ள எல்லோருக்கும் குழப்பம் அதிகரிக் கையில், சியாமளா என்ற ஆயுர்வேத வைத்தியரும், "இனிப் பிரயோஜனம் இல்லை" என்று சொன்னுர். 'ஆபத் சந்நியாசம்' கொடுப்பதைப்பற்றி எங்கும் பெரியவர்கள் கவலையுடன் பேசலானுர்கள் என்பதை அறிவோமல்லவா? புரோகிதர்களுக்குச் சொல்லியுமாகிவிட்டது.

ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் அச்சம்பவத்தை அப்படியே வார்த்தைகளில் அழியாதபடி வரைந்திருக்கிறுர்.

"எங்களில் சிலர் ஏற்பாடுகளைத் தடுத்து ஆங்கில வைத்தியர் சொல்வதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண் டோம். அவர் வருவதற்குள் சாயங்காலம் 6-15 மணிக்குச் சற்றுத் தெளிவடைந்தது நோயாளியினுடைய புத்தி. அவரிடம் தெளிவைக் கண்டு, உடனே சந்நியாசம் பெறுவதற்கான மந்திரங்களைக் காட்டத் தொடங்கினுர்கள் நெருங்கிய சிலர். முன்பே சந்நியாசத்தைப்பற்றி யாராவது பேசி இருக்கவேண்டும் அவரிடம். ஏனென்றுல் உடனே தம் மூக்குக் கண்ணுடியைக் கொண்டு வரச் சொல்லித் தம்மிடம் நீட்டிய காகிதத்தை வழக்கம்போல் அழுத்தமாகப் படிக்க ஆரம்பித்தார்: 'இந்த

* சாஸ்திரிகளின் கடிதம், 25-12-11.

மந்திரங்கள் எதற்காக?..........நான் இவைகளை ஜபிக்க வேண்டாமே' என்றெல்லாம் சொல்ல ஆரம்பித்துவிட்டார்."*

கோகலேக்குக் கடிதம் எழுதும் பொழுதுகூட, நண்பரின் வாழ்க்கை இன்னும் இரண்டே நாட்களில் முடியுமென்று சாஸ்திரிகள் நினைக்கவில்லை. ஆனால் காங்கிரஸுக்கும் சாஸ்திரிகள் செல்ல விரும்பவில்லை.

"அவர் நிலைமை இம்மாதிரி இருக்கும்பொழுது என்னால் காங்கிரஸுக்குப் போகமுடியாது; நீங்கள்கூட இங்கு வந்துவிட வேண்டுமென்றுதான் இதைப் பார்த்ததும் நினைப்பீர்கள்"

என்று சாஸ்திரிகள் எழுதி அக் கடிதத்தை முடித்தார்.

சாஸ்திரிகள் என் தந்தையின்பால் உயிருள்ளளவும் பக்தியுடனேதான் இருந்தார். இன்றும் அவர் ஞாபகத்தைப் பரிசுத்தமான தம் நினைவுகளில் ஒன்றாகக் கருதுகிறார். கோகலேயின் மனமும் அந்நாட்களில் பதறியதென அவருடைய கடிதங்களிலிருந்து அறிய முடிகிறது. காங்கிரஸ் 29-ஆம் தேதியன்று கல்கத்தாவில் தொடங்க ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. தேச சேவையில் ஈடுபட்டவர்களின் மனம், நண்பர் உறவினர் என்னும் பாசத்தைத் தள்ளி வைக்கவேண்டிய நிலைமையிலேயே இருப்பதுதான் தெரிந்ததாயிற்றே! ஆகையால் கோகலே தம் கவலையைக் கடிதங்கள் மூலம் அறிவித்து வந்தாரே ஒழிய, நேரில் வர அசக்தராகிவிட்டார்.

டிசம்பர் 27-ஆம் தேதி காலையிலிருந்து இரவுக்குள் நிலைமை பின்னும் கலவரத்தை உண்டு பண்ணியது. அன்றிரவு ஒரு மணிக்கு அப்பால் சுவாஸம் வாங்கத் தொடங்கியது. காதில் மந்திரங்களை ஜபித்தார்கள். அவருடைய சுத்தாத்மாவுக்குப் பிறரிடமிருந்து மந்திரோபதேசம் வேண்டுமா? எல்லாம் சுற்றியுள்ளவர்களுடைய சிறு புத்திக் கெட்டிய செயல்களே. பொழுது விடியுமுன் ஆவி உடலை விட்டு நீங்கிவிட்டது.

துக்கம் தாங்கமுடியாமல் வாய்விட்டுக் கதறிய அறிவாளிகளும் அன்று சவத்தைச் சுற்றி நின்ற கூட்டத்தில் உண்டு. சென்னைக் கவர்னர் ஒருவித முன்

* சாஸ்திரிகளின் கடிதம், 25-12-11.

தகவலும் இன்றி வந்து நண்பருக்குத் தம் கடைசியான விடையளிப்பைத் தந்தார். "உங்கள் உடம்பு சற்றுத் தேவலை என்றவுடன், உங்களைத் தரிசிக்க எனக்கு அநுமதி தரவேண்டும்"* என்று ஏற்கனவே எழுதியதெல்லாம் அர்த்தமற்றவைகள் ஆயின. தலையைத் தொங்க விட்டு மௌனமாய்ச் சிறிது நேரம் நின்றவர், என் சிறிய தகப்பனுரைத் தனிமையில் அழைத்து ஆவி நீங்கிய உடலை ராஜவிருதுகளுடன் அடக்கம் செய்ய அரசாங்கத்தார் ஏற்றுக் கொள்வது கடமை என்று தெரிவித்தார். "எங்கள் ஆசாரம் அவைகளை ஒப்புக் கொள்ளாதே! என்ன செய்வது!" என்று சிறிய தந்தை சொல்லவும், அவர் மெதுவாகக் குனிந்த தலையை நிமிர்த்தாமலேயே நடந்து வண்டியில் ஏறிச்சென்றுர்.

மயானத்தில் கூடிய கூட்டமும், வழியில் பார்க்க வந்த ஜனங்களும் அதிகமே. வயோதிகரான மணி ஐயர், இடுகாட்டில் உயிர் நீங்கிய உடலைச் சிதையில் வைத்தவுடன், "ஐயோ, எனக்குத் தீயிட வேண்டிய மகன் போன்றவன் இறந்தும், நான் அவனுக்குக் கொள்ளி வைக்கும் கோலத்தைக் கண்ணுல் காணவேண்டுமா!" என்று வாய்விட்டு உருகினுராம். மற்ற நண்பர்கள் தலை குனிந்து விசனித்தார்கள். தகவல் கேட்டுச் சங்கரன் நாயர் ஓடோடியும் வந்து அங்கேதான் நண்பர் உடலைப் பார்த்தார்.

ஊரில் துக்கம் சூழ்ந்தது; வீட்டில் சூன்யம் குடி கொண்டது. டிசம்பர் 28-ஆம் தேதி வியாழக்கிழமை பூத உடல் தகனமானபிறகு, சென்னை அரசாங்க அறிக்கையொன்று பின்வருமாறு வெளியாகியது:

"கவர்னரும், அவருடைய சபையினரும் தங்களுடைய பெரும் துயரத்தையும், நாட்டின் நஷ்டத்தையும் நினைந்து, மிகவும் சீக்கிரமாக முடிந்த வாழ்க்கையில் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயர், அரசாங்க உத்தியோகத்தில் காட்டிய நுண்ணறிவையும் அசாதாரண சக்தியையும் பழுத்த ஞானத்தையும் மிகவும் போற்றுகிருர்கள்.

---

* கார்மைகேல் பிரபுவின் கடிதம், 23-12-11.

தங்கள் ஆருத துயரத்தை ஜனங்களுக்குத் தெரிவிக்க, கோட்டையின்மேல் பறக்கும் கொடியைப் பாதியில் தொங்க விடுவதான மரியாதையைச் செய்யப் போகிருர்கள். பதினைந்து குண்டுகள் இன்று முழுவதும் மெதுவாக நாழிகைக்கு ஒன்ருகப் போடப்படும். கடைசிக் குண்டு சூர்யாஸ்தமனத்தோடு முடிவடையும்.

பெரிய துக்கமானதனுல் எல்லா அரசாங்க அதிகாரிகளும், உத்தியோகஸ்தர்களும், ஊழியர்களும் ஜனவரி 3-ஆம் தேதி வரையும் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயருடைய ஞாபகத்தை வைத்துக் கறுப்பைச் சின்னமாக அணிய வேண்டும்.''*

சூரியன் அஸ்தமித்தது வாஸ்தவம். நேயர்களில் பலர் தங்களுக்கு உலகமே இனிக் கார் இருள் சூழ்ந்ததாகி விட்டது என்ருர்கள். சதா அவரிடம் சலுகையுடன் பழகிய எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்கார்,

"நாம் எல்லோரும் நேசித்த - இல்லை – ஆர்வத்துடன் பூஜித்த மனிதர் மறைந்துவிட்டார். இந்தியாவிலே எங்கே தேடினும் ஈடில்லாத ஒருவர் மாண்டுபோனுர்...அவருக்கு ஒரு சிலை எப்படியும் தயாரித்து நிறுவவேண்டும். தாமதம் வேண்டாம்; தாமதத்தைக் கண்டாலேயே அவருக்கு வாழ்க்கையில் வெறுப்பு. அவரைப் பற்றிய சமாசாரங்கள் சரியானபடி கடைசியில் வெளிவரா திருந்ததால், நாம் அவரை நேரில் பார்த்துப் பேச முடியாமல் போய் விட்டது. எல்லாம் ஒரே இருட்டாக இருக்கிறது. உலகமே ஒளியற்று விட்டதே!''†

என்று ஓலமிட்டார்.

என் தந்தையை அறிந்தவர்கள் அவரை மஹான் என்றே எண்ணினுர்கள். சிலர் தர்மப்பிரபு என்று பிற்காலங்களில் அவரை நினைத்து உணர்ச்சி பெறுவார்கள். தர்மம் செய்கிறவர்களில் அவரைவிட நிறையக் கொடுத்தவர்கள் இந்நாட்டினிலே இல்லையா? ஆயிரமாயிரமாக அவர் தந்தார் என்ருல், இன்று லக்ஷக்கணக்கில் பொருளை உயர்தர விநியோகங்களில் செலவிடக் கூடியவர்களும் தோன்றி விட்டார்கள். கவனித்தால், அவரைப்பற்றிய ஞாபகம் நம்மிடம் ஆர்வத்தைக் கிளப்புவதற்குக்

* கெஜட் அறிக்கை, 28-12-11.

† ஜி. ஏ. நடேசனுக்கு எழுதிய கடிதம், 30-12-11.

காரணம் தர்மம் செய்தது மட்டுமல்ல. கொடையிலும் வித்தியாசங்கள் இருக்கின்றனவல்லவா? பிறருக்குத் தோன்ருமல் இருக்கும் பொழுதே பிரசித்தியை நாடாத விதத்தில் அவர் தர்மங்களை நிறுவினர். அது ஒன்றே அவருக்கு அழியாப் புகழ்.

இன்றுகூடப் பலருக்கு முழுவிவரம் தெரியாத காரணத்தால், நாற்பத்தொன்பது வயசில் அவர் காலமானர் என்ற செய்தி நம்பக்கூடியதாகத் தோன்றுவதில்லை. விவரம் தெரியாத நினைப்பிலும் உள்ளடங்கிய கருத்து ஒன்று மறைந்து கிடக்கத்தான் செய்கிறது. ஏனென்ருல் அவர் செய்திருக்கும் பலவித அரிய தொண்டுகளை உணரும் பொழுது அவரை வயசில் சிறியவராக நினைக்கவே முடிவதில்லை.

அவருடைய நண்பரான கனம் கோகலேயும் அதே வயசில்தான் காலமானர். ஆயினும் பல ஆண்டுகள் வாழும் வாழ்க்கையின் பயனைப் பிறர்பால் தந்தருள அவ்விருவர்களுக்கும் முடிந்தது. ஒரே வயசில் உயிரை விட்டதிலும் ஒரேவித வியாதியினுல் சிதைந்து போனதிலுங்கூட நண்பர்கள் இருவரும் ஒருவரையொருவர் ஒத்திருந்தது ஒரு விநோதந்தான். இருவரிடமும் தெரிந்த வாழ்க்கையின் சிறப்பே பெரிய பொறுப்புகளையும் தங்கள் சக்திக்கும் இயல்பிற்கும் தகுந்த ரீதியில் மேற்கொள்ள வைத்தது. சில வித்தியாசங்களும் இருவரிடையே இல்லாமற் போகவில்லை. தொழில் சம்பாத்தியமும் புதிய அரசாங்கப் பதவிகளும் கிருஷ்ணஸ்வாமி ஐயருக்கு வாழ்க்கைச் சௌகரியங்களைத் தந்தன. கோகலேயினிடம் முதலிலிருந்தே தியாகமென்னும் சம்பத்து அபரிமிதமாய்ச் சேர்ந்திருந்தது. செல்வத்தை ஒருவர் வாரிச் சம்பாதித்து இரண்டு கைகளாலும் வழங்கினர். மற்ருருவர் சம்பாத்திய சக்தி இருப்பினும் திருமகளை அலக்ஷ்யமே செய்தார். ஒன்றில்மட்டும் ஒரே மனப்பாங்கை இருவரும் காட்டினர்கள். தாய்நாட்டுச் சேவை ஒன்றே வாழ்க்கையின் லக்ஷ்யம் என்பதை மெய்ப்பித்தனர்.

கலைமகளின் கடாக்ஷம் பூர்ணமாய்க் கலந்த பாக்கிய தேவதையின் ஆதரவில் வளர்ந்தார் கிருஷ்ண ஸ்வாமி ஐயர். பணமும் பதவிகளும் அவரைச் சீக்கிரமே வந்தடைந்தன. ஆனால் அவர் உள்ளம் நாடியவை மூன்றே: நட்பு, கொடை, வைராக்கியம். உழைப்பில் ஊக்கமும், ஒழுக்கத்தில் உத்ஸாகமும் அவரிடம் இரு புயங்கள்போல் பரிணமித்தன. வாழ்க்கையின் விசித்திர அநுபவங்களிடையேயும் பாக்கியங்களின் மத்தியிலும் 'அகத்திற் கண் கொண்டு' பார்த்து உணரவே அவருடைய மனம் சதா தவித்தது. "இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியவைகள் இருக்கின்றனவே!" என்ற ஞாபகம் கடைசி வரையிலும் அவர் உள்ளத்தே நிலவியது. செய்வது என்ன? விதி யாரை விட்டது! எதையும் அவருக்கு வழங்கிய பரமன் ஆயுளை மட்டும் தர மறுத்தான். எல்லாம் ஈசன் செயலன்றோ!

# பெயர் அகராதி